ஸ்ரீ

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி 10, 11 பத்துக்களும் திருக்குறுந்தாண்டகமும்— திருநெடுந்தாண்டகமும்

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் இயற்றிய

திவ்யார்த்ததீபிகை யுரையுடன் கூடியவை

ஸ்ரீஸ்வாமியின் அறுபத்தைந்தாவது

**திருநக்ஷத்ரபூர்த்தி நினைவுமலராக**

வெளியிடப்பட்டன.

— மூன்றும் பதிப்பு —

சென்னை, ரத்நம் ப்ரஸ் ப்ராஞ்சில் அச்சிடப்பட்டது

கிடைக்குமிடம் :

**க்ரந்தமாலா ஆபீஸ், காஞ்சீபுரம்**

விலை ரூ. 5—0—0

துன்முகி௵ வைகாசி விசாகம்

**1956**

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

## திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி

[ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

—: 0 :—

### பத்தாம்பத்து—முதல்திருமொழி, ஒரு நல்சுற்றம்.

உரையவதாரிகை:—இவ்விருள் தருமா ஞாலத்தைத் திருத்திப் பணிகொள்ள விரும்பிய ஸர்வேச்வரனால் மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்களுள் மாறன் பணித்த தமிழ்மறைக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வார் வழிபறிக்கப் போனவிடத்தே யாத்ருச்சிகமாக எம்பெருமானிடத்தில் மந்த்ரோபதேசம் பெற்றதனாலும் அவனது திவ்யமங்கள விக்ரஹத்தை ஸேவித்ததனாலும், அப்பெருமானது காலாழியைப் பற்களால் கழற்ற நேர்ந்தபோது பகவத்பாதாரவிந்தத்தில் வாய் வைத்ததனாலும் அஜ்ஞானவிருள் நீங்கித் தத்துவஞானச் சுடரெழுந்து எம்பெருமானைப் பரிபூர்ணமாக அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ஆநந்தாதிசயத்தை வெளியிடுமாறு, ஆசுகவி மதுரகவி சித்திரகவி விஸ்தாரகவி என்னும் நால்வகைக் கவிகளையும் பாடவல்ல பாண்டித்யமுடையவராய், தாம் உஜ்ஜீவந ஹேதுவாகப்பெற்ற திருவஷ்டாக்ஷர மஹா மந்திரத்தின் வைபவத்தை வாடினேன்வாடி யென்று தொடங்கி முதல் திருமொழியிலே பன்னியுரைத்து, அந்தத் திருமந்திரத்தின் அர்த்தத்தையும் கூடவே ஆராய்ச்சி செய்தருளித் திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லைநிலமான திவ்ய தேசங்களிலே சென்று எம்பெருமானை ஸேவிக்க வேணுமென்று மநோரதங்கொண்டு, திருமந்திரத்தை வெளியிட்டருளின எம்பெருமான் எழுந்தருளியிருக்குமிடமான ஸ்ரீபதரிகாச்ரமத்தைத் தேடி வடக்கே யெழுந்தருளினவளவில் 'திருப்பிரிதி' என்னும் திவ்யதேசம் நேர்பட, இரண்டாந்திருமொழியால் அதனை யநுபவித்து, அதன்பிறகு வதரியை வணங்கி, அதற்குப்பிறகு ஸ்ரீ பதரிகாச்ரமத்திலே ஸந்நிதிகொண் டெழுந்தருளியிருக்கிற ஸ்ரீமந்நாராயண மூர்த்தியைக் கைதொழுது, பிறகு சாளக்கிராமம் நைமிசாரணியம் சிங்கவேள்குன்றம் திருவேங்கடம் என்னும் திருப்பதிகளை யாத்திரையடைவே மங்களாசாஸநஞ் செய்து அவ்வளவோடு வடநாட்டுத் திருப்பதிகளின் அநுபவத்தைத் தலைக்கட்டி,

அதன் பிறகு இரண்டாம்பத்தின் இரண்டாந்திருமொழி முதலாகத் தொண்டை நாட்டுத் திருப்பதிகள் சிலவற்றை யநுபவிக்கத் தொடங்கி, திருவெவ்வுள் திருவல்லிக்கேணி திருநீர்மலை திருக்கடன்மல்லை திருவிடவெந்தை திருவட்டபுயகரம் திருப்பரமேச்சுரவிண்ணகரம் ஆகிய இத்திருப்பதிகளை யநுபவித்து, அதன்பிறகு, திருக்கோவலூர் திருவயிந்திரபுரம் என்னும் நடுநாட்டுத் திருப்பதிகளிரண்டையும் இரண்டு திருமொழிகளாலநுபவித்து. அதன்மேல் மூன்றாம்பத்தின் இரண்டாந்திருமொழி முதலாகச் சோழநாட்டுத் திருப்பதிகளை யநுபவிக்கத் தொடங்கித் தில்லைத் திருச்சித்திரகூடம், காழிச்சீராமவிண்ணகரம், திருவாலி திருநகரி. திருநாங்கூர்ப்பதினொரு திருப்பதிகள், திருவிந்தளூர். திருவெள்ளியங்குடி, புள்ளம்பூதங்குடி, கூடலூர். திருவெள்ளறை. திருவரங்கம், திருப்பேர்நகர் (அப்பக்குடத்தான் ஸந்நிதி), நந்திபுரவிண்ணகரம் (நாதன் கோவில்), திருவிண்ணகர், திருநறையூர், திருச்சேறை, தேரழுந்தூர், சிறுபுலியூர், திருக்கண்ணமங்கை, திருக்கண்ணபுரம், திருக்கண்ணங்குடி, திருநாகை ஆகிய இத்திருப்பதிகளை யநுபவித்து ஒன்ப

தாம் பத்தினை இரண்டாந்திருமொழியோடே சோழநாட்டுத்திருப்பதிகளின் அநுப வத்தைத் தலைக்கட்டி,

அதற்குப்பிறகு பாண்டிநாட்டுத் திருப்பதிகளை யநுபவிக்க விரும்பித் திருப் புல்லாணியையும் திருக்குறுங்குடியையும் அநுபவித்தவளவிலே மலைநாட்டுத் திருப் பதிகளில் ஒன்றான திருவல்லவாழிலே திருவுள்ளஞ் சென்றுபுக அதனை யநுப வித்து மீண்டும் பாண்டிநாட்டிலே புகுந்து திருமாலிருஞ்சோலையையும் திருக்கோட்டி யூரையும் அநுபவித்து இவ்வளவோடே பாண்டிநாட்டுத் திருப்பதிகளின் அநுபவத் தைத் தலைக்கட்டி ஒன்பதாம் பத்தையும் முடித்தாராய் நின்றார் கீழ்.

ஏற்கனவே இவ்விருள்தரு மா ஞாலத்தில் இவ்வாழ்வார்க்கு இருப்பு அஸஹ்யமாகித் திருநாடு செல்ல விரைவு உண்டான வளவில் எம்பெருமான் இவர்க்கு இவ்விபூதியிலே சில திருப்பதிகளைக் காட்டி இவருடைய ஆசையை மறைத் திட, இவரும் திவ்ய தேசாநுபவத்தாலே களித்துப் போதுபோக்கி நின்றார். இனி, பழைய ஆசையே இவர்க்குத்தலையெடுத்ததாயிற்று; அதாவது, இக்கொடு வுலகத்தி லொன்றும் நலமுங்கமில்லைகார் நாடாகிய பரமபதத்திற்குச் செல்லவேணு மென் னும் விருப்பம் கிளர்ந்தது. 'எம்பெருமான் இனி நம்முடைய அபிமதத்தைத் தலைக் கட்டியல்லது நில்லான்' என்கிற நிச்சயமுந் தோன்றிற்று. பயணம் புறப்படுவ தாகவே பாரித்துக்கொண்டார். பிறந்தகத்தில் நின்றும் புக்ககம் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வஸித்தவிடத்திலே தன்னோடு மிகவும் முகம்பழகி யிருந்த பரம ப்ரேமாஸ்பதமான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணிந்து 'நங்காய்! நான் போய்வருகிறேன்; மாதே! நான் போய்வருகிறேன்' என்று சொல்லிவரச் சில துறைகள் ஏறியிறங்குமாபோலே. இவ்வாழ்வாரும் தம் புக்கக மாகிய பரமபதத்தின் பயணத்திற்குப் பூர்வாங்கமாகத் தமது மிக்க ஈடுபாட்டிற் கிடமான சில திருப்பதிகளிலே சொல்லிக்கொள்வதாக நுழைந்து புறப்படுகிறார் இத்திருமொழியில்.

மற்றைத் திருமொழிகளெல்லாவற்றிற் காட்டிலும் இத்திருமொழி பரம விலக்ஷணமாயிருக்கும்; ஒவ்வொரு பாசுரத்திலும் இரண்டிரண்டு திருப்பதிகளாக (நிகமனப் பாசுரந்தவிர்த்த) ஒன்பது பாசுரங்களிலே பதினெண் திருப்பதிகளை அநுபவிக்குமழகு மற்றைத் திருமொழியொன்றுக்குமில்லை கிடீர். ... *

ஒருநல்சுற்றம் எனக்குயிர்ஒண்பொருள் * வருநல்தொல்கதி ஆகியமைந்தனை*
நெருநல்கண்டது நீர்மலை* இன்றுபோய்க் கருநெல்சூழ் கண்ணமங்கையுட் காண்டுமே.

| | | | |
|---|---|---|---|
| ஒரு நல் சுற்றம் | அத்விதீய விலக்ஷண பந்துவாய் | கண்டது | ஸேவித்தது |
| | | நீர்மலை | திருநீர்மலையிலே; |
| எனக்கு உயிர் | எனக்கு ஆத்மாவாய் | இன்று | இன்றைக்கோ வென்னில், |
| ஒண்பொருள் | சிறந்த பொருளா யிருப்பவ னாய் | கருநெல் சூழ் | கருவடைந்த பயிர்களால் சூழப்பட்ட |
| வரு நல் தொல் கதி ஆகிய | மேல்வரப் போகிற நல்ல ப்ராப்ய பூமியும் தானேயா யிருப்பவனான | கண்ணமங்கையுள் | திருக்கண்ண மங்கையிலே |
| மைந்தனை | நித்யயுவாவான பெருமானை | போய் காண்டும் | சென்று ஸேவிப்போம். |
| நெருநல் | நேற்று | | |

* * *—எம்பெருமானை நேற்று திருநீர்மலையிலே கண்டோம், இன்று திருக் கண்ணமங்கையிலே காண்போமென்கிறார். திருநீர்மலைநீர்வண்ணப் பெருமாள் பக்கலிலும் திருக்கண்ணமங்கைப் பத்தராவிப் பெருமாள் பக்கலிலும் பரமபத ப்ரயாணத்திற்கு விடைபெற்றுக் கொள்ளுகிறேனென்பது உட்கருத்து.

ஒருநல் சுற்றம் = "பிதா ச ரக்ஷகச் சேஷீ பர்த்தா ஜ்ஞேயோ ரமாபதி — ஸ்வாம்யாதாரோ மமாத்மா ச போக்தா சாத்ய மனூதித:" என்கிறபடியே திருமந்திரத்தில் தேறுகின்ற ஒன்பதுவகையான உறவுகளையுடையவன் எம்பெருமான் என்பது அறியத்தக்கது. உடன் பிறந்தவர்கள், வயிற்றில் பிறந்தவர்கள், தாய் தந்தையர், பிரமன் ருத்ரன் முதலானவர்கள் ஆகிய இவர்களை பந்துக்களாகக் கொள்வாருடைய கொள்கைகளைப் பூர்வபக்ஷமாக்கி எம்பெருமானொருவனே உற்ற நல்லுறவு எனத் தெளியவுரைக்கிறார் ஒருநல் சுற்றம் என்று. உடன்பிறந்தவர்கள் பந்துக்களல்லர் என்பதை வாலியிடத்திலும் இராவணனிடத்திலுங் காணலாம். தாய் தந்தையர் பந்துக்களல்லர் என்பதைக் கைகேயியிடத்திலும் ஹிரண்யகசிபுவிடத்திலுங் காணலாம். மாதாபிதாக்கள் தங்கள் புத்திரர்களை [illegible]யென்று உபேக்ஷித்தல், க்ஷாமகாலம் வந்தவாறே ஆள்பார்த்துத் தூற்றிலேபோடுதல், விலைகூறி விற்பனை செய்தல், மரணசமயத்திலாவது எம்பெருமானை நினைத்துக் கரைசேர வொட்டாதபடி "சோர்விலும் பொருள் வைத்ததுண்டாகில் சொல்லு சொல்லென்று சுற்றமிருந்து" என்கிறபடியே அலைத்தல் முடித்தல் செய்யாநிற்பர்; ஸ்த்ரீகளுக்குக் கணவன் பந்துவல்லன் என்பது தருமபுத்திராதிகளிடத்திலும் நளனிடத்திலும் காணலாம்.

இவர்களெல்லாம் பந்துக்களல்லரேயாகிலும் நாட்டுக்குக் கண்காட்டியாய்ப் போருகிற சந்திரன் ஸூரியன் முதலானோர் ரக்ஷிக்கவல்ல பந்துக்களாகக் குறையென்? என்னில்; அவர்களும் ஸர்வேச்வரனுடைய ஆஜ்ஞைக்கு அஞ்சித் தாங்கள் நினைத்தபடி ஸஞ்சரிக்கப் பெறாமல் நாழிகை கூறிட்டு உதிப்பதும் அஸ்தமிப்பதுமாய்ப் போருகையாலும், இரணியன் இராவணன் முதலானோருடைய கையில் அகப்பட்டு இழிதொழில் செய்து திரிபவர்களாகையாலும் ரக்ஷகபந்துக்களாக மாட்டார்கள். த்ரிலோகபாலகனென்று பேர்சுமக்குமிந்திரனும் 'நம்முடைய பதவி எப்போது நழுவப்போகிறதோ!' என்று அஞ்சியிருப்பவனும் இந்திரஜித்தின் கையிலே அகப்பட்டுக் கொண்டு கட்டுண்டவனும் மஹாபலி போல்வார் கையிலே செல்வத்தைப் பறிகொடுத்துக் கண்ணுங்கண்ணீருமாய்த் திரிபவனுமாகையாலே பந்துவாகமாட்டான். நான்முகனும் மதுகைடபர்கையிலே வேதங்களைப் பறிகொடுத்து 'கண் இழந்தேன், தனமிழந்தேன்' என்று கலந்துழாவுகையாலே ரக்ஷகபந்துவாகமாட்டான். ருத்ரனும் ஸகலப்ராணிகளையும் ஸம்ஹரிப்பதையே தொழிலாகவுடையவனாய் விடாயர் முகத்திலே நெருப்பைச் சொரிந்தாற்போலே தழல்கிற வண்ணனாய், தன்னை ஆச்ரயித்தவர்களை 'அறுத்துத் தா, பொறித்துத் தா' என்று கொடுந்தொழில்களைச் செய்வித்துக் கொள்ளுகையாலும், தன்னையடுத்த பாணாஸுரனை 'தலையில்பூவாடாதே ரக்ஷிக்கிறேன்' என்று பிரதிஜ்ஞைபண்ணி வைத்து, தன்னைத்தொழுத கைகளைக் கள்ளிக்காடுசெய்த்தாற்போலே சீய்க்கக்கண்டு 'உயிருண்டாகில் உப்புமாறி யுண்ணலாம்' என்று நெற்றிக்கண்ணை மறைத்துக் கொண்டு நழுவினவனாகையாலும், லோககுருவாய்த் தனக்குப் பிதாவான பிரமனது தலையைத் திருகிப் பாதகியாய்க் கையுங் கபாலமுமாய்த் திறந்து கிடந்த வாசல் தோறும் புகுந்து தன்னை வெளியிட்டுக்கொண்டு திரிந்தவனாகையாலும் பந்துவாக மாட்டான்; ஸ்ரீமந்நாராயணனொருவனே மாதாபிதாக்கள் கைவிட்ட நிலைமையிலும் தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு தாய்முகங்காட்டியும் இன்சொற்கள் சொல்லியும் அகவாயிலே நின்று ஸத்தையே பிடித்து நோக்கிக்கொண்டு போரும் பரமபந்து—என்கிற ஸகலசாஸ்த்ர ஸாரப்பொருள் தோன்ற 'ஒருநல் சுற்றம்' என்றாராயிற்று.

எனக்கு உயிர் = எம்பெருமான் ஸகல ஆத்மாக்களுக்கும் உயிராயிருக்கச் செய்தேயும் இவர் 'எனக்கு உயிர்' என்றதற்குக் கருத்து யாதெனில்; உயிரைவிட்டுப்

பிரிந்த வஸ்து ஒரு நொடிப்பொழுதும் தரித்திருக்கமாட்டாதாப்போலே * அவனை விட்டகன்று உயிராற்றகில்லாத தம்முடைய உறைப்பைச் சொல்லுகிறபடி.

ஒண்பொருள் = உலகத்தில் பொருளானது மரணத்தையுண்டாக்கும்; அதாவது—த்ரவ்ய நிமித்தமாகப் பிராணனை விடுவார் பலருண்டே; எம்பெருமானாகிற பொருள் அப்படி அநர்த்த ஹேதுவன்றியே ஸத்தையை யுண்டாக்கும் பொருள் என்றபடி. [வேங்கடத்து] முடிவான ப்ராப்ய பூமியும் தானே யென்கை. ஆக இப்படிப்பட்ட எம்பெருமானைத் திருநீர்மலையிற் சென்று பணிந்தோம் நேற்று; இன்று திருக்கண்ணமங்கையிற் சென்று பணிவோம் என்றதாயிற்று. .... 1

பொன்னைமாமணியை அணியார்ந்ததோர் மின்னை*வேங்கடத்துச்சியிற்கண்டுபோய்*
என்னையாளுடையீசனை யெம்பிரான்றன்னை*யாம்சென்றுகாண்டும் தண்காவிலே. 2

| | | | |
|---|---|---|---|
| பொன்னை | பொன்போல விரும்பத்தகுந்தவனும் | யாம் | அடியோம் |
| மாமணியை | நீலமணிபோன்றவனும் | (நேற்று) | நேற்று |
| அணி ஆர்ந்தது ஓர் மின்னை | அழகுமிக்கதொரு மின்னற்கொடிபோன்று உஜ்ஜ்வல ஸ்வரூபியானவனும் | வேங்கடத்து உச்சியில் | திருவேங்கடமலையின் சிகரத்தில் |
| | | கண்டு | ஸேவித்து, |
| என்னை ஆளுடை ஈசனை | என்னை அடிமைகொண்ட ஸ்வாமியானவனும் | (இன்று) | இன்றைக்கு |
| எம்பிரான் தன்னை | ஸர்வேச்வரனை | தண்காவிலே சென்று காண்டும் | திருத்தண்காவிலே போய் ஸேவிப்போம். |

‘நேற்று’—முதற்பாட்டிலுள்ள ‘நேற்று’ ‘இன்று’ என்னுஞ் சொற்கள் பாசுரந்தோறும் அந்வயிக்கவுரியன. நேற்று வேங்கடத்துச்சியில்கண்டு இன்று தண்காவில்காண்டும் என்றவாறு. இங்ஙனமே மேற்பாசுரங்களிலும் காண்க.

இப்பாசுரங்களில் எம்பெருமானுக்கு இடுகிற விசேஷணங்களை யெல்லாம் ஒருசேர அந்வயித்துக்கொண்டு முடிவில் ‘அத்தலத்தில் கண்டோம், இத்தலத்தில் காண்போம்’ என்பதாக அந்வயித்துக்கொள்க. அன்றி, பாசுரப்போக்கு உள்ள படியே அந்வயித்துக் கொள்வதும் தகும்.

இப்படிப்பட்ட எம்பெருமானைத் திருவேங்கடமலையிலே நேற்று ஸேவித்து இன்று திருத்தண்காவிலே ஸேவிக்கப் பெறுவேனென்றதாயிற்று.

திருத்தண்கா = காஞ்சிபுரத்திலுள்ள விளக்கொளியெம்பெருமான் ஸந்நிதி. திருத்தண்கால் வேறு; அது பாண்டியநாட்டிலுள்ளது. ... ... 2

வேலையாலிலைப் பள்ளிவிரும்பிய* பாலையாரமுதத்தினைப் பைந்துழாய்*
மாலையாலியில் கண்டுமகிழ்ந்துபோய்* ஞாலமுன்னியைக்காண்டும் நாங்கூரிலே. 3

| | | | |
|---|---|---|---|
| வேலை | (பிரளயக்) கடலிலே | ஞாலம் உன்னியை | உலகத்தவர்களெல்லாராலும் தியானிக்கப்படுபவனுமான |
| ஆல் இலை | ஆலந்தளிரிலே | மாலை | ஸர்வேச்வரனை |
| பள்ளி விரும்பிய | திருக்கண் துயில்வதை உகந்தருளினவனும் | ஆலியில் கண்டு மகிழ்ந்து | திருவாலியில் ஸேவித்து ஆநந்தித்து |
| பாலை | பால்போன்றவனும் | | |
| ஆர் அமுதத்தினை | அருமையான அமிருதம் போன்றவனும் | நாங்கூரிலே போய் காண்டும் | திருநாங்கூரிலே சென்று ஸேவிப்போம். |
| பைந்துழாய் | பசுமைதங்கிய திருத்துழாயை யுடையவனும் | | |

***—பிரளயப் பெருங்கடலில் உலகமனைத்தையும் உட்கொண்டு ஆலந்தளிரில் திருக்கண் துயில்கொண்ட பெருமானைத் திருவாலியிலே கண்டோம். இனித் திருநாங்கூரிலே சென்று காணக் கடவோமென்கிறார்.

வேலை—'வேலா' என்னும் வடசொல் விகாரம்; கடற்கரையை உணர்த்தும் இச்சொல் இலக்கணையால் கடலை உணர்த்துகின்றது.

ஞாலமுன்னி=இருவகையாகப் பொருள் கொள்ளலாம்; உலகத்தைச் சிந்திப்பவன்; உலகத்தால் சிந்திக்கப்படுபவன் என்று. உலகத்தைச் சிந்திப்பவன் என்றது—உலகத்துக்கு ரக்ஷணம் செய்யும்படிகளையே சிந்தித்திருப்பவன் என்றபடி. ... ... ... ... ... 3

தூக்கமில்சுடரை அவுணனுடல் பிளக்கும்மைந்தனைப் பேரில்வணங்கிப்போய்*
அளப்பிலாரமுதை அமரர்க்கருள்விளக்கினைச் சென்றுவெள்ளறைக்காண்டுமே. 4

| | | | |
|---|---|---|---|
| தூக்கம் இல் சுடரை | ஒன்றாலும் அழிதலில்லாத ஒளியையுடையவனும் | அமரர்க்கு அருள் விளக்கினை | நித்யஸூரிகளுக்கு அருள் செய்கின்ற விளக்குப் போன்றவனுமான பெருமானை |
| அவுணன் | (இரணியனென்னும்) அசுரனுடைய | பேரில் | திருப்பேர் நகரில் |
| உடல் | உடம்பை | வணங்கிப் போய் | ஸேவித்து |
| பிளக்கும் | பிளந்தொழிந்த | | |
| மைந்தனை | மிடுக்கையுடையவனும் | | |
| அளப்பு இல் ஆர் அமுதை | அளவிடுதலில்லாத போக்யதையையுடைத்தான அமிருதம் போன்றவனும் | வெள்ளறை சென்று காண்டும் | திருவெள்ளறையிலே சென்றுதொழுவோம் |

***—ப்ரஹ்லாதாழ்வானுக்கு விரோதியைப் போக்கின பரமோஜ்ஜ்வலனாய்ப் பரம க்ருபாளுவான பெருமானைத் திருப்பேர் நகரிலேகண்டோம்; இனிச் சென்று திருவெள்ளறையிலே காணக்கடவோ மென்கிறார்.

[தூக்கமில்சுடரை] காற்றாலும் மற்றொன்றாலும் அணைக்கமுடியாத விலக்ஷண ப்ரகாசயுக்தன் என்றபடி. ... ... .... ... ... 4

சுடலையில் சுடுநீறனமர்ந்ததோர்* நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டு* என்
உடலையுள்புகுந்து உள்ளமுருக்கியுண்* விடலையைச்சென்றுகாண்டும் மெய்யத்துளே. 5

| | | | |
|---|---|---|---|
| சுடலையில் | சுடுகாட்டில் | உள்ளம் | நெஞ்சை |
| சுடுநீறன் | சுட்ட சாம்பலைப் பூசுமவனை ருத்ரனுக்கு | உருக்கி உண் | உருக்கி உண்கின்ற |
| அமர்ந்தது | நேர்ந்ததான | விடலையை | யுவாவுமான ஸர்வேச்வரனை |
| ஓர் நடலை | ஒரு கஷ்டத்தை | நறையூர் கண்டு | திருநறையூரிலே ஸேவித்து |
| தீர்த்தவனை | போக்கியருளினவனும் | மெய்யத்துள்ளே சென்று காண்டும் | திருமெய்யத்திலே சென்று ஸேவிப்போம். |
| என் உடலை உள் புகுந்து | எனது சரீரத்தினுள்ளே புகுந்து | | |

***—ருத்ரனுடைய சாபத்தைப்போக்கின பெருமானைத் திருநறையூரிலே கண்டோம்; இனிச் சென்று திருமெய்யத்திலே காணக்கடவோமென்கின்றார்.

'சுடலையில் சுடுநீறன்' என்றது அவனுடைய இழிவுதோற்றுதற்காக. நடலையாவது துன்பம்; ("என் நடலைகளெல்லாம் நாகணைக்கே சென்றுரைத்தியே" என்றாள் சூடிக்கொடுத்தசுடர்க்கொடியும்.) ருத்ரனுடைய துன்பமாவது—பிரமனுடைய சிரமொன்றைக் கிள்ளியெறிந்ததனாலுண்டான கஷ்டம்.

'உடலையுள்' என்றவிடத்து ஐகாரம்—சாரியை. 'இப்படிப்பட்ட குண சாலியுண்டோ!' என்று நெஞ்சு எப்போதும் ஈடுபட்டிருக்கும்படி செய்தலே உடலுள்புகுந்து உள்ளமுருக்கியுண்பதாமென்க.

விடலை = இச்சொல்லுக்குப் பலபொருள்களுண்டு:—ஆண்மகன், திண்ணியன், பாலைநிலத்தலைவன், மணவாளன், மூப்பதுவயதுக்குட்பட்டவன். இப்பொருள்களுள் 'பாலைநிலத்தலைவன்' என்னும்பொருள் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திற் கொள்ளப்பட்டது. "இப்பாலையான பூமியைத் தனக்கு இருப்பிடமாக்கினபடியாலே பாலைநிலமான ஸம்ஸாரத்துக்குத் தலைவனானவனை." என்று விவரணமும் செய்தருளினர். "தம்முடைய ஹ்ருதயத்திற் காட்டில் பாலைநிலமில்லை யென்றிருக்கிறார்" என்ற ஸ்ரீஸூக்தியுங்காண்க. .... ... 5

வானையாரமுதம் தந்தவள்ளலை* தேனைநீள்வயல் சேறையிற்கண்டுபோய் *
ஆனைவாட்டியருளும்அமரர்தம்கோனை* யாம்குடந்தைச்சென்றுகாண்டுமே. 6

| | | | |
|---|---|---|---|
| வானையார் | வானுலகத்திலுள்ளார்க்கு | அமரர்தம் கோனை | நித்யஸூரிகளுக்கு நியாமகனுமான எம்பெருமானை |
| அமுதம் தந்த | அமுதமெடுத்தளித்த | யாம | அடியோம் |
| வள்ளலை | உதாரனும், | நீள் வயல் சேறையில் | நீண்டவயல்களை யுடைத்தான திருச்சேறையில் |
| தேனை | தேன்போல இனியவனும் | கண்டுபோய் | ஸேவித்து |
| ஆனை | (குவலயாபீடமென்கிற) யானையை | குடந்தை | திருக்குடந்தையிலே |
| வாட்டி அருளும் | கொன்றொழித்தவனும் | சென்று காண்டும— | |

***—தன்னைவிரும்பாதே பிரயோஜநாந்தரத்தை விரும்பினவர்கட்கும் திருமேனியைப் பேணாதே கடல்கடைந்து அமுதளித்த பரமோதாரனைத் திருச்சேறையிலே ஸேவித்தோம், இனித் திருக்குடந்தையிலே ஸேவிப்போமென்கிறார்.

வானையார்— வானுலகத்தை (இருப்பிடமாக) உடையார் என்றபடி.

ஆனைவாட்டியருளும்—'ஆன்' என்று எருதுக்கும் பேராதலால் அதனை வலியடக்கினவன் என்று உரைக்கவுமாம். ... .... ... 6

கூந்தலார்மகிழ் கோவலனாய்* வெண்ணெய்மாந்தழுந்தையில் கண்டுமகிழ்ந்துபோய்*
பாந்தட்பாழியில் பள்ளிவிரும்பிய* வேந்தனைச்சென்றுகாண்டும்வெஃகாவுளே. 7

| | | | |
|---|---|---|---|
| கூந்தலார்மகிழ் கோவலன் ஆய் | சிறந்த கூந்தலையுடையரான ஸ்திரிகள் உகக்கும்படியான கோபாலகிருஷ்ணனாய்த் திருவவதரித்து | பாந்தள் பாழியில் | திருவனந்தாழ்வானாகிற படுக்கையிலே |
| வெண்ணெய் | வெண்ணெயை | பள்ளி | திருக்கண்வளர்தலை |
| மாந்த | அமுதுசெய்யாநிற்க | விரும்பிய | விரும்பிக் கைக்கொண்ட |
| அழுந்தையில் | தேரழுந்தூரிலே | வேந்தனை | ஸர்வேச்வரனை |
| கண்டு மகிழ்ந்து போய் ; | | வெஃகாவுள் | திருவெஃகாவில் |
| | | சென்று காண்டும் | போய் ஸேவிப்போம். |

***—கண்ணபிரானாய்த் திருவவதரித்து வெண்ணெய்விழுங்கின திருமாலைத் திருவழுந்தூரிலே கண்டோம்; இனிப்போய்த் திருவெஃகாவிலே காணக்கடவோமென்கிறார்.

தேரழுந்தூரிலெழுந்தருளியுள்ள பெருமானுடைய திருநாமம்—'ஆமருவியப்பன்' ஆகலால் கூந்தலார்மகிழ்கோவலனாய் என்றது. கூந்தலார் என்பது பெண்டிர்க்கு இயற்கைபற்றிய பெயர். அவர்கள் மகிழும்படியான கோவலன்;

"பெண்டிர்வாழ்வார் நின்னொப்பாரைப் பெறுதுமென்னு மாசையாலே, கண்டவர்கள் போக்கொழிந்தார் கண்ணிணையால் கலக்கநோக்கி, வண்டுலாம் பூங்குழலினார் உன்வாயமுதம் உண்ணவேண்டிக் கொண்டு போவான் வந்துநின்றார்" "முந்தைநன்முறை அன்புடைமகளிர் முறைமுறை தந்தம் குறங்கிடையிருத்தி, எந்தையே! என்றன் குலப்பெருஞ்சுடரே! எழுமுகிற்கணத் தெழில்கவரேறே உந்தையாவனென் றுரைப்ப." என்றிவைமுதலான பாசுரங்களில் கூந்தலார் மகிழ்ச்சி விளங்கக் காண்க.

மாந்த + அழுந்தையில், மாந்தழுந்தையில்; தொகுத்தல்விகாரம். பாந்தள்—பாம்பு. பாழி—படுக்கை. திருவெஃகாவில் ஸ்ரீயதோக்தகாரி யெம்பெருமான் சேஷசாயியிறே. வெஃகா = இத்தலத்து எம்பெருமான். பிரமன்செய்த வேள்வியை அழிக்கவந்த வேகவதிநதியைத் தடுக்கும் பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கில் பள்ளிகொண்டருளினவனாதலால் அப்பிரானுக்கு வடமொழியில் 'வேகாஸேது' என்றுபெயர்; அது தமிழில் 'வேகவணை' என்று மொழிபெயர்ந்து அதுபின் (நாகவணையென்பது நாகணையென விகாரப்படுதல்போல) வேகணை என விகாரப்பட்டு அதுபின்னை 'வெஃகணை' எனத்திரிந்து, தானியாகுபெயராய்த் தலத்தைக்குறித்து. அது பின்பு 'வெஃகா' என மருவிவழங்கிற்றென நுண்ணிதின் உணர்க. ... ... ... ... .... ... 7

பத்தராவியைப்பான்மதியை* அணித்தோத்தை மாலிருஞ்சோலைத்தொழுதுபோய் *
முத்தினைமணியைமணிமாணிக்கவித்தினை* சென்றுவிண்ணகர்க்காண்டுமே. 8

| | | | |
|---|---|---|---|
| பத்தர் ஆவியை | பக்தர்களுக்கு ஆத்மாவாகவுள்ளவனும் | மணி மாணிக்கம் | சிறந்த மாணிக்கம்போன்றவனும் |
| பால் மதியை | களங்கமற்ற சந்திரனைப் போல அழகியவனும் | வித்தினை | ஜகத்காரண பூதனுமான எம்பெருமானை |
| அணி தொத்தை | ஆபரணமாலை போன்றவனும் | மாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலையில் |
| முத்தினை | முத்துப்போன்றவனும் | போய்தொழுது | சென்று பணிந்து |
| மணியை | நீலமணிபோன்றவனும் | விண்ணகர் | திருவிண்ணகரிலே |
| | | சென்று காண்டும் | போய் ஸேவிப்போம். |

***—தன் திருவடிகளுக்கு நல்லரானார்க்கு உயிராயிருப்பவனைத் தெற்குத் திருமலையிலே கண்டோம்; இனிப்போய்த் திருவிண்ணகரிலே காண்போமென்கிறார்.

'பத்தராவி' என்பதற்கு இருவகையாகப் பொருளருளிச் செய்வர்; பக்தர்களுக்கு ஆவியாயிருப்பவன் என்பது ஒருபொருள்; பக்தர்களைத் தனக்கு ஆவியாகவுடையவன் என்பது மற்றொரு பொருள். "ஜ்ஞாநீத்வாத்மைவ மே மதம்" என்று கீதையிலருளிச்செய்தபடியே ஞானிகளான பக்தர்களைத் தனக்கு உயிர்நிலையாகவுடையவன் என்றவாறு. [பால்மதியை] சந்திரன்போல எப்பொழுதும் ஆனந்தமாகக் கண்டுகொண்டிருக்கவேண்டிய வடிவுபடைத்தவன் என்றபடி.

"அணித்தொத்தை" என்றும் "மணித்தொத்தை" என்றும் பாடபேதம் வியாக்கியானத்திலுள்ளது. தோத்து—பூங்கொத்து; மாலையுஞ் சொல்லும்.

கம்பமாகளிறஞ்சிக்கலங்க* ஓர்கொம்புகொண்ட குரைகழற்கூத்தனை*
கோம்புலாம்பொழில் கோட்டியூர்க்கண்டுபோய்* நம்பனைச்சென்றுகாண்டும் நாவாயுளே.

| | | | |
|---|---|---|---|
| கம்பம | கண்டார்க்கு நடுக்கத்தை விளைக்கத்தக்கதாய் | | ரமான நடை யுடையவனும் |
| மா | பெரிய வடிவுடைத்தான | | (அன்பர்) விச்வஸிக்கத் |
| களிறு | (குவலயாபீடமென்னும்) யானை | நம்பனை | தகுந்தவனுமான பெருமானை |
| அஞ்சி | | கொம்பு உலாம் பொழில் | கிளைகள் விளங்குகின்ற சோலைகளை யுடைத்தான |
| கலங்க | கலங்கி முடியுமாறு | | |
| ஓர் கொம்பு கொண்ட | அதன் கொம்பை முறித்தெறிந்தவனும் | கோட்டியூர் | திருக்கோட்டியூரிலே |
| | | மேயக் கண்டு | சென்று ஸேவித்து |
| குரை கழல் | ஒலிக்கின்ற வீரக்கழலை யுடையவனும் | நாவாயுள் சென்று காண்டும் | திருநாவாயில் போய் ஸேவிப்போம். |

***—தீயபுந்திக் கஞ்சனால் மதமூட்டி ஏவப்பட்ட குவலயாபீடமதயானையின் கொம்பைப்பறித்த பெருமானைத் திருக்கோட்டியூரிலே கண்டோம்; இனிச் சென்று திருநாவாயிலே காணக்கடவோமென்கிறார்.

கம்பமாகளிறு—'கம்பம்' என்பதை வடசொல்லின்விகாரமாகக் கொண்டால் நடுக்கமென்று பொருள்படும்; கண்டாரை நடுங்கச்செய்யவல்ல களிறு என்றபடி. 'கம்பம்' என்று யானைகட்டுந் தறிக்கும் பெயருண்டு; அப்பொருள்கொள்ளில் அது ஜாத்யுசிதவிசேஷணமாகும்.

நம்பன்—'நம்மை ஒருநாளும் கைவிடான்' என்று ஆச்ரிதர்கள் நம்புதற்கு உரியன் என்றபடி. நாவாய்—மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் ஒன்று; நம்மாழ்வாராலும் திருவாய்மொழி ஒன்பதாம்பத்தில் மங்களாசாஸனஞ் செய்யப்பெற்ற திருப்பதி.

பெற்றமாளியைப் பேரில்மணாளனை* கற்றநூல்கலிகன்றியுரைசெய்த *
சொல்திறமிவைசொல்லியதொண்டர்கட்கு* அற்றமில்லை அண்டமவர்க்காட்சியே. 10

| | | | |
|---|---|---|---|
| பெற்றம் ஆளியை | பசுக்களை ஆளப் பிறந்தவனும் | சொல் திறம் இவை | இந்த சப்தராசியை |
| பேரில் | திருப்பேர் நகரில் | சொல்லிய தொண்டர்கட்கு | ஓதுகின்ற பாகவதர்களுக்கு |
| மணாளனை | மணவாளப்பிள்ளையாக ஸேவை ஸாதிப்பவனுமான பெருமான் விஷயமாக, | அற்றம் இல்லை | (கைங்கரியத்திற்கு) இடையூறு (ஒருநாளும்) இல்லையாம்; |
| நூல் கற்ற கலி கன்றி உரை செய்த | நூல்களைப் பயின்ற திருமங்கையாழ்வார் அருளிச்செய்த | அவர்க்கு அண்டம் ஆட்சி | அவர்களுக்குப் பரமபதம் ஆளவுரியதாம். |

***—வியாக்கியானத்தில், 'பெற்றமாளிகை' என்றும் 'பெற்றமாளியை' என்றும் பாடபேதங் கொள்ளப்பட்டது. முந்தினபாடத்தில், 'பெற்றம்' என்று பெருமையாய், பெருமைபொருந்திய மாளிகைகளையுடைத்தான திருப்பேர்நகரிலுறையுமெம்பெருமானை என்றதாகிறது. பிந்தினபாடத்தில், 'பெற்றம்' என்று பசுக்களுக்குப் பெயராய், கோபாலனாகையாலே பசுக்களை ஆள்பவனும் திருப்பேர் நகரிலுள்ளவனுமான பெருமானை என்றதாகிறது. இப்படிப்பட்ட எம்பெருமான்விஷயமாகத் திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய இப்பாசுரங்களை ஓதவல்ல தொண்டர்கட்கு ஒருநாளும் எம்பெருமானைவிட்டுப் பிரிதலின்றியே நித்யாநுபவமாம்படி பரமபதம் அவர்களிட்டவழக்காகுமென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

கற்றநூல்கலிகன்றி = ஆழ்வார் எம்பெருமானால் மயர்வறமதிநல மருளப் பெற்றவரேயன்றி ஒருவரிடத்திலே சாஸ்த்ராப்யாஸம் செய்தவரல்லரே; அப்படியிருக்க 'கற்றநூல்கலிகன்றி' என்றது எங்ஙனே? என்கிற சங்கைக்கு ஸமாதானமாகப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்யுமது காண்மின்:—"திருமந்த்ரம் கற்றவிடத்திலே கற்றுமித்தனையிறே அல்லாதவையும்" என்று. ஸகலசாஸ்த்ரங்களும் திருமந்திரத்தில் அடங்கினவையாதலால் அத்திருமந்திரத்தை எம்பெருமான் பக்கலில் கற்றபோதே ஸகலசாஸ்த்ரங்களும் கற்கப்பட்டனவாதலால் இங்ஙனஞ் சொல்லக்குறையில்லை யென்க. .... ... ... ... 10

**அடிவரவு** :—ஒரு பேரன் வேலை துளக்கம் சுடலை வான் கூந்தல் பத்தர் கம்பம் பெற்றம் இரக்கம்.

முதல் திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—இரண்டாந்திருமொழி—இரக்கமின்றியெங்கோன்.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியில், ஆழ்வார்க்கு இக்கொடுவுலகத்தினின்றும் நலமந்தமில்லதோர் நாடாகிய பரமபதத்திற்குச் செல்லவேணுமென்னும் விருப்பம் கிளர்ந்து. 'எம்பெருமான் இனி நம்முடைய அபிமதத்தைத் தலைக்கட்டியல்லது நில்லான்' என்கிற நிச்சயமும் தோன்றிப் பரமபதத்திற்குப் பயணம் புறப்படுவதாகவே பாரிப்புக்கொண்டு, பிறந்தகத்தில் நின்றும் புக்ககம் போகப் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வஸித்தவிடத்திலே தன்னோடு மிகவும் முகம்பழகியிருந்த பரமப்ரேமாஸ்பதமான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணிந்து நங்காய்! நான் போய்வருகிறேன்; மாதே! நான் போய்வருகிறேன்; என்று சொல்லிவருதற்குச் சில துறைகள் ஏறியிறங்குமாபோலே ஆழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற்குப் பூர்வாங்கமாகத் தமது மிக்க ஈடுபாட்டிற்கிடமான சில திருப்பதிகளிலே சொல்லிக்கொள்வதாக நுழைந்து புறப்பட்டார்.

பெண்பிள்ளை விவாஹக்கோலங்கள் செய்துகொண்டு தன்னோடாகக்கூடிய ஸந்நாஹங்களெல்லாம் செய்துமுடித்தாலும் தாலிகட்டுமவன் தகவிலனாகில் அந்த ஸந்நாஹமெல்லாம் பழுதேயாமாபோலே, இன்னமும் இவ்வாழ்வாரைக் கொண்டு லோகோஜ்ஜீவநமாகப் பல பாசுரங்கள் பாடுவிக்கத் திருவுள்ளம்பற்றின எம்பெருமான் இவருடைய அபிமதத்தைச் செய்து தலைக்கட்டாதே தன்னுடைய திவ்யாவதார சேஷ்டிதங்களையே அநுபாவ்யமாகக் காட்டிக்கொடுத்தான். அவற்றிலே, இலங்கைப் போர்க்களத்தில் இராவணன் உயிர்துறக்குமளவாய், மாண்டு போனவர்களில் மிகுந்திருந்த அரக்கர்களும் தங்கள்தங்கள் பிராணனுக்கு மன்றாடுமளவான நிலைமையிலே பெருமாளுடைய வெற்றிச் செல்வத்தை யெடுத்துரைத்துப் பாசுரமிட்டுப்பேசி மகிழவேணுமென்னும் ஆசை ஆழ்வார்க்குக் கிளர்ந்தது. அந்த வெற்றியைத் தம்முடைய வாயாலே பேசுவதிலுங்காட்டில் தோற்றுப்போன ராக்ஷஸர்களின் வாயாலே பேசியநுபவித்தல் பாங்கு என்று திருவுள்ளம்பற்றினர்.

தாமான தன்மையி லிருந்துகொண்டும் அந்த வெற்றியைப் பேசலாமாயினும் "நீராடவாராய், பூச்சூடவாராய், காப்பிடவாராய்" இத்தியாதி பாசுரங்களைப் பெரியாழ்வார் தம்வாயாற்பேசாமல் யசோதைசொல்லும் பாசுரமாகப் பேசினைப் போலே இவரும் அந்த வெற்றியைப் பேசுவதற்கு இட்டுப்பிறந்த அரக்கர் பேசும் பாசுரமாகவே அருளிச்செய்கிறார். ஆனாலும், மஹாபாபிகளான ராக்ஷஸர்களின்

நிலைமையை இவர் ஏறிட்டுக்கொள்ளுதல் தகுதியன்றே என்று சிலர் கூடும்; விபீஷணாழ்வான் ராக்ஷஸ யோநியிற் பிறந்திருந்தாலும் ஹ்ருதயசுத்தியைக் கொண்டு அவர் எப்படி உத்தேச்யராகிறாரோ, அப்படியே இந்த அரக்கர்களும் தங்களுடைய தோல்வியையும் பெருமாளுடைய வெற்றியையும் பேசுகிறார்களென்னுங் காரணங்கொண்டு இவர்களுடைய தன்மை ஒருவாறு உத்தேச்யமாகக் குறையில்லை. உண்மையில் விபீஷணாழ்வானுக்கும் இவ்வரக்கர்கட்கும் நெடுந்தூர முண்டு; இராவணன் சக்தனா நிலைமையிலிருக்கும்போதே அவனைவிட்டுத் தொலைத்து ஸ்ரீராமகோஷ்டியில் அந்வயித்து உய்வு பெற்றவர் விபீஷணாழ்வான்; இவ்வரக்கர்களோவென்னில் இராவணன் மாண்டொழியுந் தருணத்திலும் ஸ்ரீராம பக்தர்களின் கோஷ்டியிலே அந்வயித்து உய்வு பெறாதவர்கள். 'இராவணனையும் மற்றும்பல அரக்கர்களையும் போலே எங்களையுங் கொன்றொழிக்க வேண்டா' என்று தங்கள் உயிர்க்கு மன்றாடுகிறார்களத்தனையே யன்றி விபீஷணாழ்வானைப் போலே உண்மையான சேஷத்வத்திற்கு இசைந்து தொழுகின்றார்களல்லர். ழ்வார்க்கு இவ்விஷயத்தில் ஆராய்ச்சி செல்லவில்லை. ஏதேனுமொரு படியாலே 'பருமாளுடைய வெற்றியைப் பேசுகிறார்கள்' என்னுமிவ்வளவே கொண்டு உகந்து அவர்களின் நிலைமையைத் தாம் ஏறிட்டுக் கொள்ளுகிறாரென்க. இவ்விடத்திலே பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திகாண்மின்;—"தமக்கு அபிமதமான ராமவிஜயத்தை எதிரிகள் மேலெழுத்திட்ட பாசுரத்தாலே அநுபவிக்கிறார். அங்குத்தை விஜயம் தமக்கு இஷ்டமாகையாலே அந்த விஜயத்துக்கு இலக்காய்த் தோற்ற ராக்ஷஸர்தசை பிறந்து, பிராட்டிமார்தசைபிறந்து பேசுமாபோலே தாமான தன்மை தோற்றாதே, தோற்ற ராக்ஷஸர் பாசுரத்தாலே ராமவிஜயத்தைப் பேசி அநுபவிக்கிறார்" என்று.

இத்திருமொழியும் மேல்திருமொழியுமாக இரண்டு திருமொழிகளும் ...ங ஙனே செல்லுகின்றன. இத்திருமொழியிற் பாசுரங்களெல்லாம் 'தடம் போங்கத்தம் போங்கோ' என்ற முடிபைக் கொண்டு முடிகின்றன. இத் தொடர் மொழி. இவ்வருளிச்செயலில் தவிர வேறு எவ்விடத்தும் பிரயோகிக்கப்பட்டிருப்பதாகப் புலப்படவில்லை. இதுவொரு ஸங்கேத சப்தாநுகாரம் என்றே தோன்றுகின்றது. "தோற்றவர்கள் தோல்வியாலே பறையடிக்க ஆடுவதொரு கூத்துண்டு; அந்த சப்தாநுகாரம்" என்றிவ்வளவே பெரியவாச்சான்பிள்ளையும் அருளிச் செய்து வைக்கக் காண்கிறோம். மற்றும் விவரணமுள்ள விடங்களிற் கண்டு கொள்க; வல்லார்வாய்க் கேட்டுமுணர்க. ... ... ... ...

இரக்கமின்றியெங்கோன்செய்ததீமை யிம்மையேயெமக்கெய்திற்றுக்காணீர்.*
பரக்கயாமின்றுரைத்தென் ? இராவணன்பட்டனன் இனியாவர்க்குரைக்கோம்?*
குரக்குநாயகர்காள் ! இளங்கோவே ! கோலவல்விலிராமபிரானே ! *
அரக்கராடழைப்பாரில்லைநாங்கள் அஞ்சினோம்தடம்போங்கத்தம்போங்கோ. 1

| | | | |
|---|---|---|---|
| எம் கோன் | எங்களுக்குத் தலைவனான இராவணன் | யாம் | நாங்கள் |
| இரக்கம் இன்றி | ஈரநெஞ்சு இல்லாமல் | பரக்க | விரிவாக |
| செய்த | பண்ணின | உரைத்து என் | சொல்லுவதனால் என்ன பயன் ? |
| தீமை | அபசாரமானது | | |
| இம்மையே | இப்பிறப்பிலேயே | இராவணன் பட்டனன் | இராவணன் மாண்டு போனான்; |
| எமக்கு | எங்களுக்கு | | |
| எய்திற்று காணீர் | பலித்துவிட்டது பாருங்கோள்; | | ...மல் |
| இன்று | இப்போது | யாவர்க்கு உரைக்கோம் | யாருக்குச் சொல்லுவோம் ? |

| | | | |
|---|---|---|---|
| குரங்கு நாயகர்கள் | வானரசேனாபதிகளே! | ஆடு அழைப்பார் இல்லை | வெற்றியைச் சொல்லிக் கூவுவாரில்லை; |
| இளங்கோவே | இளைய பெருமாளே! | நாங்கள் | (தோற்றொழிந்த) நாங்கள் |
| கோலம் வல் வில் இராமபிரானே | அழகிய திண்ணிதான சார்ங்க வில்லைக்கொண்ட ஸ்ரீராம பிரானே! | அஞ்சினோம் | பயப்படுகின்றோம்; |
| அரக்கர் | ராக்ஷஸஜாதியில் | தடம் பொங்கத்தம் பொங்கோ | தோற்றதோல்விக்கு நாங்கள் ஆடுகிற ஆட்டங் காண்மின் என்றவாறு. |

* * * — வாநரவீரர்களையும் இளைய பெருமாளையும் ஸ்ரீராமபிரானையும் விளித்து இலங்கையரக்கர்கள் தங்கள் தோல்வியும் இவர்களின் வெற்றியும் தோற்றச் சொல்லிக் கூத்தாடுகின்றனர்.

“அத்யுத்கடை: புண்யபாபை: இஹைவ பலமச்நுதே.” என்பது சாஸ்திரம். புண்யமோ பாபமோ எல்லைகடந்து செய்யப்படின் அவற்றின் பலன் அந்த ஜன்மத்திலேயே விரைவில் அநுபவிக்கக்கூடியதாகுமென்பது இதன் கருத்து. இந்த சாஸ்த்ரம் தங்கள் திறத்தில் பலித்துவிட்டதென்கிறார்கள். [எங்கோன் இரக்கமின்றிச் செய்த தீமை இம்மையே எமக்கு எய்திற்று.] பாவம் செய்தவன் அவன்; அந்தப் பாவத்தின் பலன் அவனளவோடு நில்லாமல் எங்களளவும் பலித்துவிட்டது; (அதாவது) நாங்கள் உயிர்க்கு மன்றாடும்படியான நிலைமை நேர்ந்துவிட்டது என்கிறார்கள். பெருமாளும் பிராட்டியுமான சேர்த்தியைக்கண்டால் “மல்லாண்ட திண்டோள் மணிவண்ணா! உன் சேவடி செவ்வி திருக்காப்பு...... வடிவாய்நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும்பல்லாண்டு” என்று மங்களாசாஸநம் பண்ண ப்ராப்தமாயிருக்க அது செய்யப்பெறாதே மிதுநத்தைப் பிரித்த கொடுமையை நினைத்து ‘இரக்கமின்றி’ என்றது. அன்றியே, ‘நாம் செய்யும் பெரும் பிழை நம்மோடு போய்விடாது; இதன்பலனை நம்முடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் அநுபவிக்கவேண்டியதாகும்; அந்தோ! நம்மால் நம்முடையவர்கட்கும் பெருந்துன்பம் விளையுமே!’ என்று மனமிரங்காமல் என்று முரைக்கலாம். இராவணன செய்த கொடுமையைத் தங்கள்வாயாலே விவரித்துச் சொல்லக் கூசிப் பொதுப்படையாக ‘எங்கோன் செய்ததீமை’ என்கிறார்கள்.

இராவணன்பட்டனன்=மேல் ஏழாம் பாட்டில் “ஏழையை யிலங்கைக் கிறைதன்னை எங்களை யொழியக் கொலையவனை” என்று—குற்றஞ்செய்யாத எங்களை விட்டுவிட்டுக் குற்றவாளியான இராவணனை மாத்திரம் கொல்லவேணுமென்பதாக வேண்டிக்கொள்ளுகின்றமையால் இராவணன் இன்னமும் முடிந்திலன் என்பது தெரிகின்றதே; அப்படியிருக்க ‘இராவணன்பட்டனன்’ என்று இங்குச்சொல்லுகிறபடி எங்ஙனே? என்று சங்கிக்கக்கூடும்; ‘இனி இவனுக்கு மரணம் ஸித்தம்; பிழைப்பது கிடையாது’ என்கிற நிச்சயம் தங்கட்குத் தோன்றிவிட்டதனால் ‘ஜீவச்சவம்’ என்னுங்கருத்தாலே பட்டனன் என்கிறார்களென்க.

குரங்கு × நாயகர், குரக்குநாயகர்; மென்றொடர் வன்றொடராயிற்று. ஸுக்ரீவன், ஹநுமான், அங்கதன், ஜாம்பவான் முதலானவர்களை உளப்படுத்திக் குரக்குநாயகர்காள்! என்றது.

அரக்கராடழைப்பாரில்லை=‘ராக்ஷஸரில் இனி ஆடுபோலே கூப்பிடக்கடவாரில்லை’ என்று நஞ்சீயர் நம்பிள்ளைக்குப் பொருள் பணிக்க, அதனை நம்பிள்ளை கேட்டு, ‘ஆடு என்று வெற்றிக்கும் வாசகமாதலால் இந்தராக்ஷஸஜாதியில் வெற்றி சொல்லுவாரில்லை; (அதாவது) தோற்றோம் தோற்றோம் என்று தோல்வியைச் சொல்லவல்லாருள்ளோமத்தனையொழிய வென்றோமென்று விஜயத்தைச் சொல்லிக்கொள்ள வல்லாரில்லை—என்று பொருள் கூறலாகாதோ?’ என்ன, நஞ்சீயரும்

இதைக்கேட்டருளி 'இதுவேபொருந்தும்பொருள்; இப்படியே சொல்லிக்கொள்ள அமையும்' என்று நியமித்தருளினராம்.

நாங்கள் அஞ்சினோம் = குற்றவாளியான இராவணன்கீழ்க் குடிவாழ்ந்தவர்களென்னுங்காரணத்தினால் எங்களையுங் கொன்றொழித்து விடுகிறீர்களோவென்று பயப்படுகின்றோமென்கை. [தடம் பொங்கத்தம் பொங்கோ] எங்களுடைய தோல்வியையும் உங்களுடைய விஜயத்தையும் தெரிவிக்குமாறு நாங்கள் ஒரு கூத்தாடுகிறோம் காண்மின் என்றவாறு. ... ... ... ... 1

பத்துநீண்முடியுமவற்றிரட்டிப் பாழித்தோளும்படைத்தவன்செல்வம்*
சித்தம்மங்கையர்பால்வைத்துக்கெட்டான் செய்வதொன்றறியாவடியோங்கள்*
ஒத்ததோளிரண்டுமொருமுடியும் ஒருவர்தந்திறத்தோமன்றிவாழ்ந்தோம்*
அத்தவெம்பெருமான்! எம்மைக்கொல்லேல் அஞ்சினோந்தடம் பொங்கத்தம்பொங்கோ. 2

| | | | |
|---|---|---|---|
| அத்தவெம் பெருமான் | ஸ்வாமியான இராமபிரானே | செய்வது ஒன்று அறியா அடியோங்கள் | இனிச் செய்யத் தக்கதொன்றுமறியவில்லாத நாங்கள் |
| நீள் | நீண்ட | | |
| பத்து முடியும் | பத்துத்தலைகளையும் | | |
| அவை இரட்டி | அந்தந்தத் தலைகளின் கணக்கில் இரட்டிப்பான கணக்கையுடையவையாய் | ஒத்த தோள் இரண்டும் ஒரு முடியும் | ஒன்றோடொன்று ஒப்பான இரண்டு திருத்தோள்களையும் ஒரு திருமுடியையுமுடையராய் |
| பாழி | வலிமைமிக்கவையான | | |
| தோளும் | (இருபது) தோள்களையும் | ஒருவர் தம் திறத்தோம் அன்றி | அத்விதீயரான தேவரீர் பக்கல் இதற்குமுன்பு ஈடுபட்டவர்களல்லாமையாலே |
| படைத்தவன் | உடையனான இராவணன் | | |
| மங்கையர் பால் சித்தம் வைத்து | ஸ்த்ரீ விஷயத்தில் மனம் செலுத்தி | வாழ்ந்தோம் | கெட்டுப்போனோம்; |
| | | எம்மை கொல்லேல் | எங்களைக் கொல்லாதொழியவேணும்; |
| செல்வம் கெட்டான் | (தனது) செல்வம் அழியப்பெற்றான்; | அஞ்சினோம், தடம்பொங்கத்தம் பொங்கோ—. | |

* * *—"விசித்ரா தேஹஸம்பத்திரீச்வராய நிவேதிதும்—பூர்வமேவ க்ருதா ப்ரஹ்மந்! ஹஸ்தபாதாதிஸம்யுதா." என்று எம்பெருமானைத் தொழுது உய்வு பெறுதற்கென்றே கைகால் முதலிய உறுப்புகளோடு கூடின தேஹம படைக்கப்பட்டுள்ளது. அவ்வுறுப்புகளில் தலையானது தலை. தலையை வணக்கியும் கைகளைக் கூப்பியும் வாழ்ச்சி பெறலாம்; இராவணனோ பத்துத்தலைகளையும் இருபது கரங்களையும் படைத்தவன்; இத்தனை உறுப்புகளையுங் கொண்டு வழிபாடு செய்து வாழ்ந்துபோக ப்ராப்தியிருந்தும் அது செய்யாதே மாண்டுபோயினனே! என்ற வருத்தந்தோன்ற நின்றது முதலடி.

[சித்தம் மங்கையர்பால் வைத்துச் செல்வம் கெட்டான்.] இராவணன் போர்க்களத்திலே இராமபிரானது அம்புகட்கு இலக்காகிப் பட்டுப் போனவாறே மந்தோதரி புலம்புகிறாள்—"இந்த்ரியாணி புரா ஜித்வா ஜிதம் த்ரிபுவநம் த்வயா—ஸ்மரத்பிரிவ தத் வைரம் அத்ய தைரேவ நிர்ஜிதஃ" என்றாள். அதாவது—இராவணனே! நீ முன்பு இந்திரியங்களை யெல்லாம் வென்று அதனால் மூவுலகையும் வென்றாய்; (இந்திரியங்களை நிக்ரஹித்துக் கொடுந்தவம் புரிந்து வரம் பெற்றமையால் மூவுலகும் வென்றனனாதலால் இங்ஙன் கூறப்பட்டது.) அந்த இந்திரியங்கள் 'இப்பாவி நம்மை இப்படி தலையெடுக்க வொட்டாமல் பண்ணிவிட்டானே; ஆகட்டும், தக்க ஸமயம் பார்த்து இவனைத் தலையழுக்குவோம்' என்று நெஞ்சில் பகை வைத்துக்கொண்டிருந்து இப்போது உனக்கு ப்ரதிக்ரியை செய்து விட்டன

என்றாள். (இந்திரியங்களை அடக்காமல் அவற்றுக்குப் பரவசப்பட்டு ஸீதையைக் கவர்ந்ததனால் இக்கேடு உனக்கு விளைந்ததென்றபடி.) அவ்விதமாகவே இவர்களும் 'மங்கையர்பால் சித்தம் வைத்துக் கெட்டான்' என்கிறார்கள். இந்த விஷயப்ராவண்யமொன்று இல்லாவிடில் அவனுடைய செல்வமெல்லாம் எவ்வளவோ சிறப்புறுமே; விஷயப்ராவண்யமொன்றினால் தன் செல்வமனைத்தும் பாழாகப் பெற்றானென்கை.

மூன்றாமடியில் 'வாழ்ந்தோம்' என்றது விபரீதலக்ஷணை; 'கெட்டோம்' என்பதற்குப் பரியாயம். பத்துத்தலைகளையும் இருபதுகைகளையு முடையவனான இராவணனைப்போலே விகாரமான வேஷமுடையரன்றியே இரண்டு தோள்களையும் ஒரு திருமுடியையு முடையரான பெருமாள் திறத்திலே ஈடுபட்டு விபீஷணாழ்வானைப்போலே நாங்களும் வாழ்ந்து போகலாமாயிருக்க அது செய்யாதே கெட்டுப்போனோம் என்றவாறு. "இந்து: இந்துரிவ ஸ்ரீமாந்." என்னுமாபோலே தோளுக்குத் தோளே உவமை என்பது தோன்ற 'ஏந்து தோளிரண்டும்' என்றது. அந்தத் தோளுக்கு இந்தத் தோளுவமை: இந்தத் தோளுக்கு அந்தத் தோளுவமை என்றபடி.

ஸ்வாமிந்! எங்களைக் கொலை செய்யாதொழியவேணும் என்று பிரார்த்தித்தார்களாயிற்று. ... ... .. ... ... 2

தண்டகாரணியம்புகுந்தன்று தையலைத்தகவிலியெங்கோமான் *
கொண்டுபோந்துகெட்டானெமக்கிங்கோர் குற்றமில்லை கொல்லேல்குலவேந்தே*
பெண்டிராற்கெடுமிக்குடிதன்னைப் பேசுகின்றதென்? தாசரதீ!* உன்
அண்டவாணருகப்பதேசெய்தாய் அஞ்சினோந்தடம்போங்கத்தம்போங்கோ.

| | | | |
|---|---|---|---|
| குலம் வேந்தே | (குற்றமற்றவர்களைத் தண்டியாத இக்ஷ்வாகுவின்) வம்சத்துக்குத் தலைவரே! | எமக்கு | எங்களுக்கு |
| தாசரதீ | ஸ்ரீராமபிரானே! | ஓர் குற்றம் | ஒரு குற்றமும் கிடையாது; (ஆகையாலே) |
| தகவுஇலி எம் கோமான் | ஈரநெஞ்சு இல்லாதவனாய் எங்களுக்குத் தலைவனாயிருந்த இராவணன் | கொல்லேல் | (எங்களைக்) கொல்லாதொழியவேணும்; |
| அன்று | (நீங்கள் வனத்திலே தாபஸராயிருந்த) அக்காலத்திலே | பெண்டிரால் கெடும் இக் குடி | ஸ்த்ரீசாபல்யங் காரணமாகக் கெட்டுப்போகின்ற இந்த ராக்ஷஸ ஜாதியைப் பற்றி |
| தண்டகாரணியம் புகுந்து | தண்டகாரணியத்தில் பிரவேசித்து | பேசுகின்றது என் | பேசலாவது என்ன இருக்கிறது? |
| தையலை | அழகிற் சிறந்த பிராட்டியை | உன் அண்டவாணர் | தேவரீருக்கு இஷ்டரான தேவதைகள் |
| கொண்டு போந்து | அபஹரித்து வந்து (அக்குற்றங்காரணமாக) | உகப்பது | ஸந்தோஷிக்கக்கூடிய காரியத்தையே |
| கெட்டான் | முடிந்துபோனான்; | செய்தாய் | செய்தருளினீர்; |
| இங்கு | இவ்விஷயத்தில் | | அஞ்சினோம், தடம் பொங்கத்தம் பொங்கோ. |

* * *—குற்றமற்றாரை நலியகில்லாத இக்ஷ்வாகு வம்சவிளக்காக அவதரித்த பிரானே! எங்களிராவணன், தனக்கு ஒருவகையான அபராதமும் செய்யாத உம்மிடத்திலே தானே வீண்பகை கொண்டு நெடுந்தூரங் கடந்து தண்டகாரணியத்திலே புகுந்து சிறிதும் ஈரநெஞ்சு இளநெஞ்சு இல்லாதவனாய் அழகிற்சிறந்த சானகியை அபஹரித்துக் கொண்டுவந்து சேர்ந்தான்; இக்

குற்றம் அவனொருவன் செய்தகதத்தனை யொழிய இதில் நாங்கள் கூட்டல்லோம். நாங்கள் அவனுடைய சேவகர்களாகையாலே அவன்கீழ்க் குடிவாழ்ந்த குற்ற மொழிய ஸீதாபஹாரவிஷயத்தில் சிறிதும் நாங்கள் குற்றவாளிகளல்லோம். ஆகையாலே எங்களைக் கொல்லாதொழியவேணும். விஷயசாபல்யமே ஹேதுவாகக் கெட்டுப்போகின்ற இவ்விழிகுலத்தைப்பற்றி நாங்கள் என்ன சொல்ல வல்லோம்! தேவரீருடைய அடியார்களான தேவர்கள் இராவணனால் நெருக் குண்டவர்களாதலால் அப்பாவிதொலைவது என்றோ? என்று எதிர்பார்த்திருந்தனர். அவர்களின் மநோரதம் தலைக்கட்டிற்றாயிற்று இவ்வளவே போதுமானது; இனி எங்களை ஒரு சரக்காக நினையாதொழியவேணும் என்று பிரார்த்திக்கிறார்களாயிற்று.

தண்டகாரணியம்=ஸூர்யகுலத்தில் மநுசக்ரவத்தியினது குமாரனான இக்ஷ்வாகு மஹாராஜனுடைய மக்கள் நூற்றுவருட் கடைப்பட்டவனும் மூடனும் மூர்க்கனும் துஷ்டனுமாகித் தண்டனைக்குரியவனென்ற காரணத்தால் எதிர்கால வுணர்ச்சியையுடைய தந்தையால் தண்டக னென்று பெயரிடப்பெற்ற ஓரரசன், விந்தியமலைக்கும் சைவலமலைக்கும் இடையிலுள்ள நிலத்தைத் தன் ஆட்சிக்கு உரியதாக்கொண்டு மதுமந்தமென்னும் பட்டணத்தையமைத்து அரசாளுகையில், ஒருநாள் தனது புரோஹிதரான சுக்ராசார்யரது ஆச்ரமத்தினுட் சென்று அவர் மகளாகிய அரஜை யென்பவளைக்கண்டு காதலித்து வலியக கற்பழிக்க, பின்பு அதனையுணர்ந்த அந்தப் பார்க்கவர் சினந்து 'ஏழுநாள்களுள் அவன் குடும்பத்தோடும் சேனை முதலிய பரிவாரத்தோடும் அழிந்துபோகக்கடவன்' என்றும் 'அவனது நாடு மண்மழையால் யாதொரு ஜீவஜந்துவு மில்லாமற் பாழாகக் கடவது' என்றும் சபிக்க அங்ஙனமே அந்நாடும் அவ்வரசனும் ஏழுநாள் மண் மழை பெய்ததனால் அழிந்து போய்விட, அவ்விடம் பின்பு காடாகித் தண்ட காரணிய மென வழங்கலாயிற் றென்றுணர்க.

தையல்—அழகு; அதனையுடையவர்களுக்கு ஆகுபெயர்.

தகவு—தயவு. தாசரதீ!=நீ தசரதன் மகனாகையாலே [நியாயம் தவறாத வரான அவருடைய வயிற்றிற் பிறந்தவனாகையாலே] நியாயப்பழுதாக எங்களைக் கொலை செய்யமாட்டாய் என்று குறிப்பித்தவாறு. வடமொழித்தத்திதாந்த நாமம். அண்டவாணா=அண்டம் வாழ்நர்; மேலுலகத்தில் வாழ்பவரான தேவர்கள். அவர்கள் உகப்பது எங்கள் பரிபவம்; அதைச் செய்தாய் என்கை. ... 3

எஞ்சலில்இலங்கைக்கிறை யெங்கோன்றன்னைமுன்பணிந்துஎங்கள் கண்முகப்பே*
நஞ்சுதானரக்கர்குடிக்கென்று நங்கையையவன்தம்பியேசொன்னான்*
விஞ்சைவானவர்வேண்டிற்றேபட்டோம் வேரிவார்பொழில்மாமயிலன்ன*
அஞ்சலோதியைக்கொண்டுநடமின் அஞ்சிறோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 4

எஞ்சல் இல் — ஒரு குறைவுமில்லாதவனாய்
இலங்கைக்கு இறை — (இந்த) லங்காபுரிக்கு அரசனாய்
எம் கோன் தன்னை — எங்களுக்குத்தலைவனாயிருந்த இராவணனை நோக்கி
முன் — முன்பு
எங்கள் கண் முகப்பே — எங்கள் கண்ணெதிரில்
அவன் தம்பியே — அவனுக்குத்தம்பியான விபிஷணாழ்வான்

நங்கையை அரக்கர் குடிக்கு நஞ்சு தான் என்று சொன்னான் — 'இப்பிராட்டி ராக்ஷஸ குலத்துக்கு விஷமாகத் தோன்றியவள் கிடாய்' என்று

(அப்படி சொல்லியும் அப்பாவி பணிந்து வாழ மாட்டாமையாலே)

விஞ்சை வானவர் வேண்டிற்றே பட்டோம் — தேவஜாதிகள் ஆசைப்பட்டிருந்தபடியே (நாங்கள்) அனர்த்தப்பட்டோம்;
அஞ்சு அல் ஓதியை — (சுருட்சி நீட்சி குளிர்ச்சி அழகு பரிமளம் என்று) ஐந்துவகைப்பட்ட குணங்களையுடையதாய் ராத்ரி போற்கறுத்திருக்கின்ற கூந்தலையுடையளுமான பிராட்டியை
வெறி வார் பொழில் மாமயில் அன்ன — பரிமளத்தையுடைத்தாய் விசாலமான சோலையில் வளர்ந்த சிறந்தமயில் போன்றவளும்
கொண்டு நடமின் — கொண்டு போங்கள்;
அஞ்சினோம் தடம் பொங்கத்தம் பொங்கோ—.

* * *—விபீஷணன் முன்னமே மிக்க பெருஞ்சபை நடுவே இராவணனை நோக்கி 'பாவி! சானகியை அபஹரித்துக் கொண்டுவந்தாயே, இவள் அரக்கர் குடிக்கு விஷம்போன்றவர்கள் என்பதை அறிந்திலையே; இவளைக்கவர்ந்து வந்ததே காரணமாக அரக்கர்குடி முழுதும் வேரற்றொழியப் போகிறதுகிடாய்; இப்போதும் குறையில்லை; இன்றே இராமபிரான் ஸந்நிதியில் இவளைச் சேர்த்திடு' என்று உபதேசித்தான்; வணங்கி வேண்டிக்கொண்டான். அந்த ஹிதோபதேசம் இவன் செவியிற்புகாமையாலே தேவதைகளின் கோரிக்கை நிறைவேறப்பெற்றது. போனது போகட்டும்; இனி உங்கள் பிராட்டியைக்கொண்டு செல்லுங்கள்; எங்களை ஒன்றுஞ் செய்யேல்மின்—என்கிறார்கள்.

எஞ்சல் இல்=ஒருவகையாலும் குறைபாடு இல்லாதவன் என்றபடி. அநுமான் இலங்கையில் புகுந்து முழுதும் நோக்கினவாறே "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர:—ஸ்யாதயம் ஸுரலோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா." என்று, 'என்னஐச்வர்யம்! என்னஐச்வர்யம்!!, இந்த ராவணனிடத்தில் அநீதியொன்று மாத்திரம் தவிர்ந்திருக்குமாயின் ஸாக்ஷாத் தேவலோகத்தையும் ஆட்சி புரியக் கடவனன்றோ இவன்' என்று மதித்தனனுதலால் செல்வத்தில் ஒருவகைக் குறையுமற்றவனென்கிறது. எஞ்சல—குறைதல்.

விஞ்சை வானவர்='வித்யா' என்னும் வடசொல் 'விஞ்சை' என்றும் திரியும். தேவதைகளில் ஒரு வகுப்பான வித்யாதரர்களைச் சொன்னபடி. தேவஜாதிக்கெல்லாம் இது உபலக்ஷணமென்க. "ஸ ஹி தேவைருதீர்ணஸ்ய ராவணஸ்ய வதார்த்திபி:—அர்த்திதோ மாநுஷே லோகே ஜஜ்ஞே விஷ்ணுஸ் ஸநாதந:" என்கிறபடியே இராவணனைத் தொலைக்கவேணுமென்ற வானவர்களின் வேண்டுகோள் நிறைவேறப் பெற்றதாயிற்று என்கிறார்கள்.

அஞ்சுஅல் ஓதியை=ஓதியென்று கூந்தலுக்குப் பெயர். 'ஐந்து' என்பது 'அஞ்சு' என மருவிக்கிடக்கின்றது. மிருதுவாயிருத்தல் குளிர்ந்திருத்தல் நறுமணம் மிக்கிருத்தல் கறுத்திருத்தல் நீண்டிருத்தல் என உத்தமகேச லக்ஷணம் ஐவகைப்பட்டதாகும். 'அல்' என்பது இரவுக்குப் பெயராகி இருளைக் குறிக்கின்றது. இருண்ட கூந்தல் என்றபடி. ஐவகை லக்ஷணங்களில் 'கறுத்திருத்தல்' என்பது சேர்ந்தேயிருத்தலால் 'அல்' என்றது புநருக்தியாகுமே யென்னில், ஐவகையில் கறுத்திருத்தல் என்பதை நீக்கி அடர்ந்திருத்தலைக் கூட்டிக்கொள்க. 'அஞ்சலோதி' என்றது அன்மொழித்தொகை. திருவெழு கூற்றிருக்கையில் "ஐம்பாலோதி" என்றதுங் காண்க சிலர் "அஞ்சிலோதியை" (அம் சில் ஓதியை) என்று பாடம் கொள்ளவேணுமென்பர்; அது சுவைக்கேடு. ... ... ... 4

செம்பொன்நீண்முடியெங்களிராவணன் சீதையென்பதோர்தெய்வம்கொணர்ந்து*
வம்புலாங்கடிகாவிற்சிறையாவைத்ததே குற்றமாயிற்றுக்காணீர்*
கும்பனோடுநிகும்பனும்பட்டான் கூற்றம்மானிடமாய்வந்துதோன்றி*
அம்பினாலெம்மைக்கொன்றிடுகின்றது அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 5

செம் பொன் நீள் முடி — செம்பொன்னாற் செய்யப்பட்ட நீண்ட கிரீடத்தை யுடையனாய்
எங்கள் — எங்களுக்குத் தலைவனான
இராவணன் — ராவணனானவன்
சீதை என்பது ஓர் தெய்வம் கொணர்ந்து — ஸீதையென்கிற ஒரு தெய்வப் பெண்ணைக் கவர்ந்து வந்து
வம்பு உலாம் கடி காவில் — புதுமை மாறாததும் பரிமளத்தை யுடையதுமான (அசோக)வனத்திலே
சிறையா வைத்ததே — சிறையிலிருப்பாம்படி வைத்திருந்த இதுதானே
குற்றம் ஆயிற்று காணீர் — அபராதமாய்த் தலைக்கட்டிற்றுக்கிடீர்;
(அதுவே நிமித்தமாக)
கும்பனோடு நிகும்பனும் பட்டான் — கும்பனும் நிகும்பனும் மாண்டொழிந்தனர்;
கூற்றம் — (இராவணன்கையில் முன்பு தோற்றிருந்த) யமனானவன்
மானிடம் ஆய் வந்து தோன்றி — மநுஷ்ய வேஷத்தைப் பூண்டுகொண்டு வந்து தோன்றி
எம்மை — எங்களை
அம்பினால் — பாணத்தால்
கொன்றிடுகின்றது — கொல்லுகின்றான்;
அஞ்சினோம், தடம் பொங்கத்தம் பொங்கோ—

* * *- வாரீர்!, எங்கள் இராவணனுடைய பெருமை எப்படிப்பட்டது தெரியுமோ? பலதிசைகளிலுஞ் சென்று வெற்றி பெற்றுச் செம்பொன்முடி கவித்துக் கொண்டவன். அனைவரும் அவன்கீழே கைகட்டிக் காத்திருக்கவேண்டியவர்கள்; அப்படி மிகுக்கச்செய்தேயும், ஸீதாபிராட்டியாகிற ஒரு தெய்வப்பெண்ணைக் கவர்ந்துவந்து இவ்வசோகவனத்திலே சிறைவைத்திட்டதே அவனுக்குப் பெரிய அபராதமாகத் தலைக்கட்டிற்று. அதுவே காரணமாகக் கும்பன் நிகும்பன் முதலான பெரிய ரணவீரர்களும் மாண்டொழியலாயிற்று. இராவணன் கையிலே முன்பு தோற்றுக்கிடந்த மிருத்யுவானவன் அந்தவுருவத்துடன் இங்குவரமாட்டாமல் இராமனென்னும் பெயராலே ஒரு மானிடவடிவு கொண்டுவந்து நின்று எங்கள்மேல் சரவர்ஷத்தை வர்ஷிக்கின்றான்; குற்றமற்றவர்களான எங்களது உயிரையும் கொள்ளை கொள்வீர்களோ வென்று அஞ்சுகின்றோம்; நாங்கள் எங்கள் தோல்விக்கும் உங்கள் வெற்றிக்கும் மேலெழுத்திட்டுக் கூத்தாடுகின்றோமாதலால் எங்களை விட்டொழிய வேணும் என்றார்களாயிற்று.

கூற்றம் மானிடமாய்த்தோன்றி = இராவணன் நெடுநாள் தவம்புரிந்து வரப்ரஸாதம் பெறும்போது மானிடரை ஒரு பொருளாகவே மதியாமல் அவர்களைத் தவிர்த்து மற்று யாராலும் தனக்குச் சாவு நேரிடாமை வேண்டினனாதலால் அவன் உபேக்ஷித்த மானிடத்தில் திருமால் வந்து தோன்றினனென்க. யமன்றானே இப்படி மானிடமாய் வந்து தோன்றினனாக இவர்கள் கூறுவது தங்கள் சாதி மொழிக்கு ஏற்றதாம். கூற்றம் = உடலையும் உயிரையும் வேறு வேறு கூறாக்குபவன் என்ற காரணப் பெயர். ... ... ... ... ... 5

ஓதமாகடலைக்கடந்தேறி உயர்கொள்மாக்கடிகாவையிறுத்து*
காதல்மக்களுஞ்சுற்றமுங்கொன்று கடியிலங்கைமலங்கவெரித்து*
தூதுவந்தகுரங்குக்கே உங்கள்தோன்றல்தேவியைவிட்டுக்கொடாதே*
ஆதர்நின்றுபடுகின்றதந்தோ! அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 6

ஓதம் — அலைகளையுடைய
மா கடலை — பெரிய கடலை
கடந்து ஏறி — தாண்டி.
உயர்கொள் மா கடி காவை இறுத்து — உயர்த்தியை யுடைத்தாய்ப் பெரிதாய் மணம்மிக்கதான அசோகவனத்தை முறித்து
காதல் — (இராவணனுடைய) அன்புக்கு இலக்கான
மக்களும் — அக்ஷகுமாரன் முதலிய புத்திரர்களையும்
சுற்றமும் — அந்தரங்க சேவகர்களையும்
கொலை செய்து

கடி இலங்கை மலங்க எரித்து — காவலையுடைத்தான லங்கையானது கலங்கும்படியாகத் தீக்கொளுவி
தூது வந்த — (பிராட்டிபக்கல்) தூது சொல்லவந்த
குரங்குக்கே — அனுமான்கையிலேயே
உங்கள் தோன்றல் தேவியை — உங்கள் ஸ்வாமியான பெருமாளுடைய தேவியான ஸீதையை
விட்டுக்கொடாதே — ஸமர்ப்பியாமல்
ஆதர் — அவிவேகிகளான நாங்கள்
நின்று படுகின்றது அந்தோ — இப்படி துவண்டு நின்று அநர்த்தப்பட வேண்டிற்றாயிற்று ஐயோ!;
அஞ்சினோம், தடம் பொங்கத்தம்பொங்கோ—.

***—வாரீர் வானர வீரர்காள்!, முன்னமே இங்குத் தூதுவந்த அனுமானென்னும் ஓர் வானர வீரன் ஒருவராலும் கடக்க முடியாத கடலைக்கடந்து வந்து அசோகவனத்தையும் அழித்து, பல போர்வீரர்களையும் சேனைத்தலைவர்களையும் அக்ஷகுமாரனையும் கொன்று லங்காதஹநமும் செய்து ஆக இப்படி யெல்லாம் காட்டின வீரத்தைக்கண்டு 'தூதுவந்த குரங்கின் சக்தியே இதுவானால் இதனை அனுப்பின பிரபுவின் நிலைமை எப்படியிருக்கும்!' என்று ஊஹித்துணர்ந்து அப்போதே 'இனி நாம் உயிர்வாழ்ந்திருக்கவேண்டில் ஸீதையை விட்டுக்கொடுப்பதே உரியது' என்று துணிந்து அது செய்திருக்கவேண்டும்; அந்தோ! அது செய்யாமையினாலே இப்போது அநர்த்தப்படவேண்டிற்றாயிற்று; அஞ்சுகின்றோம் என்கிறார்கள்.

தோன்றல்—ஸ்வாமி. ஆதர்—அறிவில்லாதவர். 6

தாழமின்றிமுந்நீரையஞ்ஞான்று தகைந்ததேகண்டுவஞ்சிநுண்மருங்குல்*
மாழைமான்மடநோக்கியைவிட்டு வாழகில்லாமதியின்மனத்தானை*
ஏழையையிலங்கைக்கிறைதன்னை யெங்களையொழியக்கொலையவனை*
சூழுமாநினைமாமணிவண்ணா! சொல்லி[illegible] டம்பொங்கத்தம்பொங்கோ.

மா மணி வண்ணா — நீலமணிநிறத்தனான பெருமானே!
தாழம் இன்றி முந்நீரை — காலதாமதமில்லாமல் கடலை
அஞ்ஞான்று — அன்றைக்கு
தகைந்ததே கண்டு — அணை செய்ததொன்றையே கண்டு,
வஞ்சி நுண் மருங்குல் — வஞ்சிக்கொடிபோன்று நுட்பமான இடையை யுடையளாய்
மாழை மான் மடநோக்கியை — பேதைமைக்குணமுள்ள மானின்பார்வை போன்ற கபடமற்ற கண் பார்வையை யுடையளான ஸீதையை
விட்டு — (தேவரீர் ஸந்நிதியிலே) ஸமர்ப்பித்துவிட்டு
வாழ இல்லா — வாழ்வதற்கு ப்ராப்தியற்ற
மதி இல் மனத்தானை — மதிகெட்டவனும்
ஏழையை — தகாத விஷயத்தில் நசைகொண்டவனுமான
இலங்கைக்கு இறை தன்னை அவனை — அந்த இராவணனை
எங்களை ஒழிய கொலை — எங்களைத் தவிர்த்துக் கொல்லவேண்டும்;
சூழும் ஆநினை — அடியோங்கள் தேவரீரைச் சூழ்ந்துகொண்டு பிரார்த்திக்கிறவிதனைத் திருவுள்ளம் பற்றவேணும்;
சொல்லினோம் — எங்கள் கோரிக்கையை விண்ணப்பஞ்செய்து கொண்டோம்;
தடம் பொங்கத்தம் பொங்கோ—.

***- சிறிதும் தாமதமின்றிக் கடலிலே அணைகட்டிக் கடந்து வருவதென்பது எளிதான காரியமன்றே; மிக அரிதான அக் காரியத்தையும் செய்துவிட்டார்களென்பதை அறிந்தபின்பாவது 'ஓ இவர்கள் ஸாமாந்ய மநுஷ்யரல்லர்;

தெய்வங்களாகவே யிருக்கவேண்டும்; இல்லையேல் இவ்வருந்தொழில் செய்யக் கூடுமோ?" என்று நினைத்து 'இனி நாம் ஸீதையை ஸமர்ப்பித்துவிட்டு உயிர்தப்பி உய்வதே உரியது' என்று கொண்டு அங்ஙனே செய்து வாழ்ந்து போகலாமே ராவணன்; அப்படி வாழமாட்டாதே 'நாம் இலங்கைக்கு அதிபதியன்றோ? நம்மையும் அடர்ப்பாருண்டோ?' என்ற அஹங்காரத்தையே மேற்கொண்டிருந்த அப்பாவியை, மாமணிவண்ணா! இஷ்டப்படி கொன்றுவிடாய்; அக்கொலையில் நின்றும் எங்களைமாத்திரம் தவிர்த்தருளவேணும் என்கிறார்கள். தாழம்—தாழ்வு; காலவிளம்பம்.

பிராட்டியின் வடிவழகையும் கண்ணழகையும் அநுபவிக்கவுரியவன் இராமபிரானொருவனே யன்றி நாம் எங்கே! அவை எங்கே! என்று இராவணன் நினைத்திருக்கவேணு மென்பது தோன்ற 'வஞ்சிநுண்மருங்குல் மாழைமான் மடநோக்கியை' என்றனர். கள்ளங் கபடமின்றிக் கவலையையும் அச்சத்தையுங் கொள்ளும் மகளிர் கண்ணோக்கிற்கு வெருண்ட மானின் மருண்ட பார்வையை உவமை கூறுதல் மரபு. இங்கு இது கூறியதனால், அசோகவனத்தையும் அங்குள்ளாரையுங் கண்டவளவில் பிராட்டி மருண்ட நோக்குடையளாயின ளென்பதுதோன்றும். மாழை—அறிவின்மை, அழகுமாம். ஏழை—தகாத விஷயத்தில் வீணான சாபல்யங் கொண்டவன்.

சூழம் ஆ நினை=நாங்கள் இத்தனைபேர் சூழ்ந்துகொண்டு யாசிக்கின்றோமே இதனைத் திருவுள்ளம் பற்றவேணும் என்கை. ... ... ... 7

மனங்கொண்டேறும்மண்டோதரிமுதலா அங்கயற்கண்ணினார்களிருப்ப*
தனங்கொள்மென்முலைநோக்கமொழிந்து தஞ்சமேசிலதாபதரென்று*
புனங்கொள்மென்மயிலைச்சிறைவைத்த புன்மையாளன்நெஞ்சிற்புகவெய்த*
அனங்கனன்னதிண்டோளெம்மிராமற்கு அஞ்சினேந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 8

| | | | |
|---|---|---|---|
| மனம் கொண்டு ஏறும் | நெஞ்சைக் கவரும்படியான அழகுடையவர்களான | புனம் கொள் மென் மயிலை ச் த | காட்டில் தன்னிஷ்டப்படி திரிகின்ற, அழகிய மயில் போன்றவளான பிராட்டியைச் சிறையிலே வைத்தவனாய் |
| மண்டோதரி முதலா | மந்தோதரி முதலான | | |
| அம் கயல் கண்ணினார்கள் | அழகிய மீன்போன்ற கண்களை யுடையரான மனைவியர்பலர் | புன்மையாளன் | நீசனான இராவணனுடைய |
| இருப்ப | குறையற்றிருக்கச் செய்தேயும், | | மருமத்திலே |
| தனம் கொள் | தனக்குச் செல்வமாயிருக்கின்ற | புக | உறைக்க |
| மெல் முலை | (அவர்களுடைய) அழகிய முலைகளிலே | எய்த | அம்பு செலுத்தியவரும் |
| நோக்கம் ஒழிந்து | கண் செலுத்தாமல், | அனங்கன் அன்ன | மன்மதனைப்போன்ற அழகுடையவரும் |
| சில தாபதர் தஞ்சமே என்று | (இப்பிராட்டிக்காகப் பரிந்து வரக்கூடியவர்கள்) சில காட்டாள்கள் தானே, அவர் கள்சரக்கோ; என்று அவலீலையாக [illegible]த்துக் கொண்டு | திண் தோள் | வலிமைமிக்க திருத்தோள்களையுடையவருமான |
| | | எம் இராமற்கு | எங்களிராமபிரானுக்கு |
| | | [illegible]ம், தடம் பொங்கத்தம் பொங்கோ— | |

* * *—இராவணன் தன்னுடைய போகத்திற்கு உரியவிஷயம் இல்லாமையாலே வழியல்லா வழியிற் புகுந்தானென்று சொல்வதற்கு இடமிருந்தாலாவது

நூற்றமில்லையென்னலாம்; தன் மனத்தைக் கவரும்படியான அழகுவாய்ந்த மண்டோதரி முதலான மாதர் பலர் இருக்கச்செய்தேயும் அவர்களின் அவயவங்களைப்பேணாதே, தன்னிலத்திலே வளரும்மயிலின் சாயல்போன்ற சாயலையுடையளான பிராட்டியைக் கொணர்ந்து சிறைவைத்திட்டான் பாவி; இவனில் விஞ்சின நீசன் உலகில் இல்லை. அப்படிப்பட்டவனுடைய மார்பிலே உறைக்கும்படியாக அம்புகளைப் பொழிந்த இராமபிரானுடைய வீரத்துக்கு அஞ்சுகின்றோமென்கிறார்கள்.

தனங்கொள் மென்முலை='धनम्' என்னும் வடசொல் தனமெனத் திரிந்தது. மாதர்க்குச் செல்வம் முலையாதலால் 'தனங்கொள் மென்முலை' எனப்பட்டது.

தஞ்சமேசில தாபதர் என்று=சில தாபதர் தஞ்சமோ என்று நினைத்தானாம் இராவணன். அதாவது—இந்த 'ஸீதையை நாம் அபஹரிக்கிறோமே, இவளைச் சேர்ந்தவர்கள் பரிந்து எதிரிட்டுவந்தால் நமக்கு அநர்த்தமாகுமோ?' என்று ஆலோசிக்கப் புகுந்து, 'மரவுரியும் சடையுமாய்த் தாபஸ வேஷங்கொண்டிருக்கின்ற ராமலக்ஷ்மணர்கள் இவளுக்குத்தஞ்சமாக வரக்கூடும்: அவர்கள்நமக்கு ஒருசரக்கோ? என்று அவர்களை அபதார்த்தமாக நினைத்துவிட்டு அபஹரித்து வந்தானென்றபடி.

புன்மையாளன்—அற்பன். அநங்கன்—மன்மதன்; வடசொல். ... 8

புரங்கள்மூன்றுமோர்மாத்திரைப்போதில் பொங்கெரிக்கிரைகண்டவனம்பில்*
சரங்களேகொடிதாயடுகின்ற சாம்பவானுடன்நிற்கத்தொழுதோம்*
இரங்குநீயெமக்கெந்தைபிரானே! இலங்குவெங்கதிரோன்றன்சிறுவா *
குரங்குகட்கரசே! யெம்மைக்கொல்லேல் கூறினோந்தடம்போங்கத்தம்போங்கோ. 9

| | |
|---|---|
| ஓர் மாத்திரை போதில் | ஒரு கண்ணிமைப்பொழுதில் |
| புரங்கள் மூன்றும் | முப்புரங்களையும் |
| பொங்கு எரிக்கு | அக்நிஜ்வாலைக்கு |
| இரை கண்டவன் | இரையாக்கின ருத்ரனுடைய |
| அம்பில் | அம்புகளிற்காட்டிலும் |
| சரங்கள் | இந்த ராமபாணங்கள் |
| கொடிது ஆய் | கொடியவைகளாய் |
| அடுகின்ற | பொசிக்கின்றன ; |
| சாம்பவான் | ஸ்ரீஜாம்பவான் |
| உடன் நிற்க | புருஷகாரமாகக் கூடநிற்க |
| தொழுதோம் | வணங்குகின்றோம் ; |
| எந்தை பிரானே | எங்கள் நாயகனே! |
| இலங்கு வெம் கதிரோன் தன் சிறுவா | விளங்குகின்ற ஸூர்யனுக்குப் புதல்வனாய் |
| குரங்குகட்கு அரசே | வாநரங்கட்குப் பிரபுவான ஸுக்ரீவனே ! |
| எமக்கு நீ இரங்கு | எங்கள் விஷயத்திலே நீ இரங்கியருளவேணும் ; |
| எம்மை கொல்லேல் | எங்களைக் கொல்லாதொழிய வேணும் ; |
| கூறினோம் | இந்தப் பிரார்த்தனையையே அடுத்தடுத்துச் சொல்லுகின்றோம ; |
| | தடம் போங்கத்தம் போங்கோ—. |

***—ஸ்ரீ ஜாம்பவானைப் புருஷகாரமாகக் கொண்டு ஸுக்ரீவமஹாராஜரைச் சரணம்புகுகிறார்கள் அரக்கர். முப்புரங்களையும் ஒரு மாத்திரைப்பொழுதில் எரித்த சிவபிரானது பாணத்திற்காட்டிலும் ராமபாணங்கள் கொடியவையா யிருக்கையாலே மிக அஞ்சுகின்றோம்; ஆதித்யனுக்குப் புதல்வனான ஸுக்ரீவ மஹாராஜனே! நீர் குரங்குகட்கெல்லாம் அரசராதலால் அக்குரங்குகளெல்லாம் நீரிட்ட வழக்காயிருக்கக் கடவனவாகையாலே அவை எங்கள்மேற் பாயாதபடி திட்டஞ்செய்வீரென்று ஸ்ரீ ஜாம்பவானைப் புருஷகாரமாகக் கொண்டு உம்மைத் தொழுகின்றோம்; எம்மைக் கொல்லாதபடி இரங்கியருளவேணும் என்கிறார்கள்.

தெய்வங்களாகவே யிருக்கவேண்டும்; இல்லையேல் இவ்வருந்தொழில் செய்யக் கூடுமோ?' என்று நினைத்து 'இனி நாம் ஸீதையை ஸமர்ப்பித்துவிட்டு உயிர்தப்பி உய்வதே உரியது' என்று கொண்டு அங்ஙனே செய்து வாழ்ந்து போகலாமே ராவணன்; அப்படி வாழமாட்டாதே 'நாம் இலங்கைக்கு அதிபதியன்றோ? நம்மையும் அடர்ப்பாருண்டோ?' என்ற அஹங்காரத்தையே மேற்கொண்டிருந்த அப்பாவியை, மாமணிவண்ணா! இஷ்டப்படி கொன்றுவிடாய்; அக்கொலையில் நின்றும் எங்களைமாத்திரம் தவிர்த்தருளவேணும் என்கிறார்கள். தாழம்—தாழ்வு; காலவிளம்பம்.

பிராட்டியின் வடிவழகையும் கண்ணழகையும் அநுபவிக்கவுரியவன் இராமபிரானொருவனே யன்றி நாம் எங்கே! அவை எங்கே! என்று இராவணன் நினைத்திருக்கவேணு மென்பது தோன்ற 'வஞ்சிநுண்மருங்குல் மாழைமான் மடநோக்கியை' என்றனர். கள்ளங் கபடமின்றிக் கவலையையும் அச்சத்தையுங் கொள்ளும் மகளிர் கண்ணோக்கிற்கு வெருண்ட மானின் மருண்ட பார்வையை உவமை கூறுதல் மரபு. இங்கு இது கூறியதனால், அசோகவனத்தையும் அங்குள்ளாரையுங் கண்டவளவில் பிராட்டி மருண்ட நோக்குடையளாயின ளென்பதுதோன்றும். மாழை—அறிவின்மை, அழகுமாம். ஏழை—தகாத விஷயத்தில் வீணான சாபல்யங் கொண்டவன்.

சூழும் ஆ நினை=நாங்கள் இத்தனைபேர் சூழ்ந்துகொண்டு யாசிக்கின்றோமே இதனைத் திருவுள்ளம் பற்றவேணும் என்கை. ... ... ... 7

மனங்கொண்டேறும்மண்டோதரிமுதலா அங்கயற்கண்ணினார்களிருப்ப*
தனங்கொள்மென்முலைநோக்கமொழிந்து தஞ்சமேசிலதாபதரென்று*
புனங்கொள்மென்மயிலைச்சிறைவைத்த புன்மையாளன்நெஞ்சிற்புகவெய்த*
அனங்கனன்னதிண்டோளெம்மிராமற்கு அஞ்சினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 8

| | |
|---|---|
| மனம் கொண்டு ஏறும் | நெஞ்சைக் கவரும்படியான அழகுடையவர்களான |
| மண்டோதரி முதலா | மண்டோதரி முதலான |
| அம் கயல் கண்ணினார்கள் | அழகிய மீன்போன்ற கண்களை யுடையவரான யர்பலர் |
| இருப்ப | குறையற்றிருக்கச் செய்தேயும், |
| தனம் கொள் | தனக்குச் செல்வமாயிருக்கின்ற |
| மென் முலை | (அவர்களுடைய) அழகிய முலைகளிலே |
| நோக்கம் ஒழிந்து | கண் செலுத்தாமல், |
| சில தாபதர் தஞ்சமே என்று | (இப்பிராட்டிக்காகப் பரிந்து வரக்கூடியவர்கள்) சில காட்டாள்கள்தானே, அவர்கள்சரக்கோ; என்று அவலீலையாக நினைத்துக் கொண்டு |
| புனம் கொள் மென் மயிலை சிறை வைத்த | காட்டில் தன்னிஷ்டப்படி திரிகின்ற, அழகிய மயில் போன்றவளான பிராட்டியைச் சிறையிலே வைத்தவனாய் |
| புன்மையாளன் | ...னை ...ராவணனுடைய |
| நெஞ்சில் | மருமத்திலே |
| புக | உறைக்க |
| எய்த | அம்பு செலுத்தியவரும் |
| அனங்கன் அன்ன | மன்மதனைப்போன்ற அழகுடையவரும் |
| ...ள | வலிமைமிக்க ...ள் களையுடையவருமான |
| எம ...ராமற்கு | எங்களிராமபிரானுக்கு |
| அஞ்சினோம், தடம் பொங்கத்தம் பொங்கோ—. | |

* * *- ...ராவணன் தன்னுடைய போகத்திற்கு உரியவிஷயம் இல்லாமையாலே வழியல்லா வழியிற் புகுந்தானென்று சொல்வதற்கு இடமிருந்தாலாவது

குற்றமில்லையென்னலாம்; தன் மனத்தைக் கவரும்படியான அழகுவாய்ந்த மண்டோதரி முதலான மாதர் பலர் இருக்கச்செய்தேயும் அவர்களின் அவயவங்களைப் பேணாதே, தன்னிலத்திலே வளரும்மயிலின் சாயல்போன்ற சாயலையுடையளான பிராட்டியைக் கொணர்ந்து சிறைவைத்திட்டான் பாவி; இவனில் விஞ்சின நீசன் உலகில் இல்லை. அப்படிப்பட்டவனுடைய மார்பிலே உறைக்கும்படியாக அம்புகளைப் பொழிந்த இராமபிரானுடைய வீரத்துக்கு அஞ்சுகின்றோமென்கிறார்கள்.

தனங்கொள் மென்முலை='धनम्' என்னும் வடசொல் தனமெனத் திரிந்தது. மாதர்க்குச் செல்வம் முலையாதலால் 'தனங்கொள் மென்முலை' எனப்பட்டது.

தஞ்சமேசில தாபதர் என்று=சில தாபதர் தஞ்சமோ என்று நினைத்தானும் இராவணன். அதாவது—இந்த 'ஸீதையை நாம் அபஹரிக்கிறோமே, இவளைச் சேர்ந்தவர்கள் பரிந்து எதிரிட்டுவந்தால் நமக்கு அநர்த்தமாகுமோ?' என்று ஆலோசிக்கப் புகுந்து, 'மரவுரியும் சடையுமாய்த் தாபஸ வேஷங்கொண்டிருக்கின்ற ராமலக்ஷ்மணர்கள் இவளுக்குத் தஞ்சமாக வரக்கூடும்: அவர்கள் நமக்கு ஒருசரக்கோ? என்று அவர்களை அபதார்த்தமாக நினைத்துவிட்டு அபஹரித்து வந்தானென்றபடி.

புன்மையாளன்—அற்பன். அநங்கன்—மன்மதன் வடசொல். . 8

புரங்கள்மூன்றுமோர்மாத்திரைப்போதில் பொங்கெரிக்கிரைகண்டவனம்பில்*
சரங்களேகொடிதாயடுகின்ற சாம்பவானுடன்நிற்கத்தொழுதோம்*
இரங்குநீயெமக்கெந்தைபிரானே! இலங்குவெங்கதிரோன்றன்சிறுவா *
குரங்குகட்கரசே! யெம்மைக்கொல்லேல் கூறினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ.

| | | | |
|---|---|---|---|
| ஓர் மாத்திரை போதில் | ஒரு கண்ணிமைப்பொழுதில் | எந்தை பிரானே | எங்கள் நாயகனே! |
| புரங்கள் மூன்றும் | முப்புரங்களையும் | இலங்கு வெம் கதிரோன் தன் சிறுவா | விளங்குகின்ற ஸூர்யனுக்குப் புதல்வனாய் |
| பொங்கு எரிக்கு | அக்நிஜ்வாலைக்கு | குரங்குகட்கு அரசே | வாநரங்கட்குப் பிரபுவான ஸுக்ரீவனே |
| இரை கண்டவன் | இரையாக்கின ருத்ரனுடைய | எமக்கு நீ இரங்கு | எங்கள் விஷயத்திலே நீ இரங்கியருளவேணும்; |
| அம்பில் | அம்புகளிற்காட்டிலும் | எம்மை கொல்லேல் | எங்களைக் கொல்லாதொழிய வேணும்; |
| சரங்கள் | இந்த ராமபாணங்கள் | | |
| கொடிது ஆய் | கொடியவைகளாய் | | |
| அடுகின்ற | பொசிக்கின்றன; | கூறினோம் | இந்தப் பிரார்த்தனையையே அடுத்தடுத்துச் சொல்லுகின்றோம்; |
| சாம்பவான் | ஸ்ரீஜாம்பவான் | | |
| உடன் நிற்க | புருஷகாரமாகக் கூட | | |
| தொழுதோம் | வணங்குகின்றோம்; | | தடம் பொங்கத்தம் பொங்கோ—. |

***— நீ ஜாம்பவானைப் புருஷகாரமாகக் கொண்டு ஸுக்ரீவமஹாராஜரைச் சரணம்புகுகிறார்கள் அரக்கர். முப்புரங்களையும் ஒரு மாத்திரைப்பொழுதில் எரித்த சிவபிரானது பாணத்திற்காட்டிலும் ராமபாணங்கள் கொடியவையா யிருக்கையாலே மிக அஞ்சுகின்றோம்; ஆதித்யனுக்குப் புதல்வனான ஸுக்ரீவ மஹாராஜனே! நீர் குரங்குகட்கெல்லாம் அரசராதலால் அக்குரங்குகளெல்லாம் நீரிட்ட வழக்காயிருக்கக் கடவனவாகையாலே அவை எங்கள்மேற் பாயாதபடி திட்டஞ்செய்வீரென்று ஸ்ரீஜாம்பவானைப் புருஷகாரமாகக் கொண்டு உம்மைத் தொழுகின்றோம்; எம்மைக் கொல்லாதபடி இரங்கியருளவேணும் என்கிறார்கள்.

புரங்கள் மூன்றும் போங்கேரிக்கிரைகண்ட வரலாறு:—முற்காலத்தில் தாரகாஸுரனுடைய புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து பிரமனிடம் பெருவரம் பெற்று வானத்துப் பறந்து செல்லுந் தன்மைவாய்ந்த மூன்று பட்டணங்களை யடைந்து மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்த விடங்களிற் பறந்து சென்று பலவிடங்களின் மேலும் இருந்து அவ்விடங்களைப் பாழாக்கிவருகையில் அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலானோருடைய வேண்டுகோளினால் சிவபெருமான் பூமியைத் தேராகவும் சந்த்ர ஸூர்யர்களைத் தேர்ச் சக்கரங்களாகவும் நான்கு வேதங்களை நான்கு குதிரைகளாகவும் பிரமனைச் சாரதியாகவும் மஹாமேருவை வில்லாகவும் ஆதிசேஷனை வில் நாணியாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்நியை முனையாகவுடைய அம்பாகவும் அமைத்துக்கொண்டு யுத்த ஸந்நத்தனாய்ச் சென்று போர் தொடங்கும் போது சிரித்து அச்சிரிப்பில் நின்று உண்டான நெருப்பினால் அவ்வசுரர்களை அந்நகரங்களுடனே எரித்திட்டனன் என்பதாம்.

ஓர் மாத்திரைப்போதில்=‘கண்ணிமைப்பொழுதும் கைந்நொடிப்பொழுதும் மாத்திரைக்களவாம்’ என்பர் தமிழர்.

இலங்குவெங்கதிரோன்றன் சிறுவா! என்றதன் விவரணம்;—மேருமலையில் நான்முகக் கடவுள் யோகம் பயின்று கொண்டிருக்கையில் அவரது கண்களில் நீர்த்துளி ததும்பியது; அதை அவர் கையாலெடுத்துக் கீழே யெறிந்தனர். அவ்வளவிலே அந்த நீர்த்துளி ஒரு குரங்காக மாறியது. அக்குரங்கு பிரமதேவருக்கு ஒப்பான மஹிமையும் மிக்க வேகமுமுடையோனாகி அம்மலையில் புஷ்பங்களும் பழங்களும் நிறைந்த விருக்ஷங்களடர்ந்த வனங்கள் தோறும் தாவித் திரிந்து விளையாடிக்கொண்டே காலங்கழித்து வந்தது. அஃது ஒருநாள் நாவறண்டு நீர் வேண்டி அந்த மேருமலையின் வடபக்கஞ்சென்றது. அங்கு ஓர் தடாகத்தைக்கண்டு அதன் கரையில் நின்று தண்ணீரை எட்டிப்பார்க்க, அதனுள் தனது நிழல் தோன்றுவதைக் கண்ணுற்றுத் தனக்குப் பகையான மற்றொரு வானரம் அக்கயத்தினுள் குடிகொண்டு தன்னையிகழ்கின்றதெனக் கருதி அதனை வெல்லுமாறு அம்மடுவிற்குதித்தது. குளத்தில் விழுந்து மூழ்கி மெல்ல நீந்திக் கரையேறியவளவில் அது ஓர் அற்புதமான அணங்காக மாறியது. காண்போர் மனத்தைக்கவரவல்ல பொற்கொடியென ஒரு பெண்மணி தனது வடிவழகினால் எல்லாத் திசைகளையும் ஒளி பெறச்செய்து கொண்டு அப்பொய்கைக் கரையில் நிற்குங்கால், தேவேந்திரன் பிரமதேவரிடஞ்சென்று அவரையடிபணிந்து பூஜித்துத் திரும்பி அவ்வழியாக வந்து கொண்டிருந்தான். அதே தருணத்தில் ஸூரியபகவானும் எங்குஞ் சுற்றித்திரிந்து இந்த ஸுந்தரி நிற்குமிடத்தருகே வரலாயினன். இந்திரனும் ஆதித்யனுமாகிய இரண்டு தேவர்களும் அப்பெண்மணியை ஏககாலத்தில் கண்ணுற்றுக் காம பரவசர்களாகி மெய்ம்மறந்து மனங்கலங்கி நின்றனர். உடனே இந்திரனது வீரியம் ஸ்கலிதமாக, அதனை அவன் அவளது சிரஸில் விழுமாறு செய்தனன். அஃது அவ்வாறு முடிமீது விழாது வாலிலே வீழ்ந்தது. தேவர்களது வீரியம் ஒரு பொழுதும் வீணாவதில்லை யாதலின் உடனே அதுமிக்கபலசாலியான ஒரு வானரமாகமாறியது. வாலினின்று உற்பவித்த காரணத்தினால் அவ்வானரத்துக்கு வாலியெனவே பெயர் ப்ரஸித்தமாயிற்று. ஆதித்யனும் அவ்வாறே அனங்கனுக்கு வசமாகித் தனது வீரியத்தை அவளது கழுத்தில் வீழ்த்தினன். க்ரீவையில் [கழுத்தில்] வீழ்ந்த அவ்வீரியம் ஸுக்ரீவனெனப் பெயர்பெற்ற வானரமாகிவிட்டது. இவ்வரலாற்றை உத்தர ஸ்ரீ ராமாயணம் நாற்பத்து மூன்றும் ஸர்க்கத்தில் விரிவாகக் காண்க. 9

அங்குவானவர்க்காகுலம்தீர அணியிலங்கையழித்தவன்றன்னை*
போங்குமாவலவன்கலிகன்றி புகன்றபொங்கத்தங்கொண்டு* இவ்வுலகினில்
எங்கும்பாடிநின்றாடுமின்தொண்டீர்! இம்மையேயிடரில்லை* இறந்தால்
தங்குமூரண்டமேகண்டுகொண்மின் சாற்றினோந்தடம்பொங்கத்தம்பொங்கோ. 10

| | |
|---|---|
| தொண்டீர் | பகவத்பக்தர்களே!, |
| அங்கு வானவர்க்கு ஆகுலம் தீர | தேவலோகத்திலுள்ள தேவதைகளின் மனக்குழப்பம் தீரும்படி |
| அணி இலங்கை அழித்தவன் தன்னை | அழகிய லங்காபுரியை அழித்தருளின பெருமான விஷயமாக, |
| பொங்கு மாவலவன் கலிகன்றி | கிளர்த்தியையுடைய 'ஆடல்மா' என்னுங் குதிரையை நடத்த வல்லவரான ஆழ்வார் |
| புகன்ற | அருளிச்செய்த |
| பொங்கத்தம் கொண்டு | 'பொங்கத்தம் பொங்கோ' என்ற இந்த வெற்றிப் பாசுரங்களைக்கொண்டு |
| இ உலகினில் | இவ்விபூதியிலே |
| எங்கும் | எல்லாவிடங்களிலும் |
| பாடி நின்று ஆடுமின் | பாடிக்கொண்டு கூத்தாடுங்கள்; (இது செய்தால்) |
| இம்மையே இடர் இல்லை | உங்கட்கு இப்பிறவியில் ஒருவகைத்துன்பமுமுண்டாகாது; |
| இறந்தால் | மரணமானபின்பு |
| தங்கும் ஊர் | நீங்கள் போய்ச்சேர்ந்து நிலைநிற்குமிடம் |
| அண்டமே | பரமபதமேயாம்; |
| கண்டுகொண்மின | (இதனை அநுபவத்தாலே) கண்டு கொள்ளுங்கள; |
| சாற்றினோம் | இஃது எல்லாருமறியச் சொன்னோம்; |
| தடம் பொங்கத்தம் | வெற்றியோ வெற்றி. |

* * *—இராவணனுடைய கொடுமையினாற் குடியிழந்து வருந்தின தேவஜாதிகள் செவ்வனே குடிவாழுமாறு இலங்கையை நீறுபடுத்தின இராமபிரானுடைய வீரத்தை, தோற்ற அரக்கர்களின் பாசுரத்தாலே கவிபாடின இத்திருமொழியைக்கொண்டு தொண்டர்களே! இவ்வுலகில் எங்கும் பாடியாடுங்கோள். அங்ஙனே செய்தால் இம்மையில் ஒரு இடருமின்றி வாழப் பெறுவீர்கள்; இறந்தபின்போ * மீட்சியின்றி வைகுந்தமாநகர் மற்றது கையதுவே காண்மின்; இதனை எல்லாருமறியச் சொன்னோம் என்று இத்திருமொழிகற்றார்க்குப்பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

"அங்கவ்வானவர்க்கு" எனப் பாடம் வழங்கும். ஆகுலம்—வடசொல் விகாரம். [பொங்குமாவலவன்] இவ்வாழ்வார் தனதாகக் கொண்டு ஏறிச்செலுத்திய சிறந்த குதிரைக்கு 'ஆடல்மா' எனப் பெயர்வழங்கும்; அதுவே இங்குப் பொங்குமா எனப் பட்டது. வலவன்—வல்லவன், ஸமர்த்தன்; பாகன் என்றபடி.

பொங்கத்தம்=' தடம் பொங்கத்தம் பொங்கோ' என்றதன் ஏகதேசாநுகாரம்.

கீழ் ஒன்பது பாசுரங்களின் முடிவிலும் "தடம் பொங்கத்தம் பொங்கோ" என்றது இராமபிரான் வெற்றியை ராக்ஷஸர்கள் எடுத்துரைத்தபடி. இப்பாட்டின் முடிவில் 'தடம் பொங்கத்தம் பொங்கோ' என்றது எம்பெருமான் வெற்றியை ஆழ்வார்தாம் உரைக்கிறபடி. இத்திருமொழியானது இவ்விருள்தருமா ஞாலத்தைத் தோற்பித்து வெற்றி பெறும்படியைச் சொல்லுகிறதென்பாருமுளர்.

அடிவரவு:—இரக்கம் பத்து தண்டக எஞ்சல் செம்பொன் ஓதம் தாழும் மனம் புரங்கள் அங்கு ஏத்து.

இரண்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் எம்பெருமானுர் ஜீயர் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—மூன்ரும்திருமொழி—ஏத்துகின்ரேம் நாத்தழும்ப.

கீழ்த்திருமொழிபோலவே இத்திருமொழியும் இலங்கையரக்கர்களின் பாசுரமாய்ச் செல்லுகிறது. தோற்றவர்கள் தங்கள் தோல்விக்கு ஈடாக ஆடுவதொரு கூத்துக்குக் குழமணிதூரம் என்று பெயர்போலும். அக்கூத்தையாடுகின்ற அரக்கர்களின் நிலைமையிலே நின்று ஆழ்வார் ஸ்ரீராம விஜயத்தைப் பேசியநுபவிக்கிருராயிற்று.

கீழ்த்திருமொழியில் வந்த 'தடம் பொங்கத்தம் பொங்கோ' என்றதற்கும், இத்திருமொழியில் வரும் 'குழமணிதூரம்' என்றதற்கும் இலக்கணமுமிலக்கியமும் இவ்வருளிச்செயலே போலும். ... .... ... ... *

ஏத்துகின்ரேம்நாத்தழும்ப இராமன்திருநாமம்*
சோத்தநம்பீ! சுக்கிரீவா! உம்மைத்தொழுகின்ரேம்*
வார்த்தைபேசீரெம்மை உங்கள்வானரம்கொல்லாமே*
கூத்தர்போலவாடுகின்ரேம் குழமணிதூரமே. 1

| | |
|---|---|
| இராமன் திருநாமம் | இராமபிரானுடைய திருநாமங்களை |
| நா தழும்ப | நாக்கு தடிக்கும்படி |
| ஏத்துகின்ரேம் | வாயாரச்சொல்லித்துதிரேம்; |
| நம்பீ சுக்கிரீவா | ஸுக்ரீவமஹாராஜரே!, |
| சோத்தம் | இதோ அஞ்ஜலி; |
| உம்மை தொழுகின்ரேம் | உம்மைத் திருவடிகளில் விழுந்து வணங்குகின்ரேம்; |
| உங்கள் வானரம் | நீங்களிட்ட வழக்காயிருக்கின்ற வானரவீரர்கள் |
| எம்மை கொல்லாமே | எங்களைக் கொல்ல நினையாதபடி |
| வார்த்தை பேசீர் | ஒருவார்த்தையருளிச் செய்யவேணும்; |
| கூத்தர் போல | கூத்தாடக்கற்றவர்கள்போல |
| குழமணிதூரம் ஆடுகின்ரேம் | உங்கள் வெற்றியும் எங்கள் தோல்வியுந்தோற்ற ஆடுகின்ரேம். |

***—பாசுரந்தொடங்கும்போதே "ஏத்துகின்ரேம் நாத்தழும்ப இராமன் திருநாமம்" என்ற அழகை என் சொல்வோம்! "ராமோ ராமோ ராம இதி ப்ரஜா நாமபவந் கதா:—ராமபூதம் ஜகதபூத் ராமே ராஜ்யம் ப்ரசாஸதி." [இராமபிரான் அரசாட்சி புரிந்தகாலத்திலே ஜனங்களனைத்தின வாயிலும் ஸ்ரீராமநாமப்ரஸம்ஸை தவிர வேறென்றும் வந்ததில்லை; உலகமே ராமமயமாக ஆய்விட்டது] என்றுப் போலே இலங்கையும் ராமநாம மயமாக ஆய்வடுகின்றதிப்போது. நாக்குத் தடிக்கும்படி ஸ்ரீராமநாமங்களையே சொல்லித் துதிக்கின்ரேமென்கிருர்கள்.

நம்பிசுக்கிரீவா! சோத்தம்=அஞ்ஜலிபண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சிதோற்றச் சொல்லுவதொரு சப்த விசேஷம் சோத்தம் என்பதாம். 'ஸ்தோத்திரம்' என்னும் வடசொல் சோத்தமெனத்திரிந்துகிடக்கிறது என்பாருமுளர். ஸுக்ரீவ மஹாராஜனே! இராமபிரானுடைய தயவுக்கும் வாநரமுதலிகளின் தயவுக்கும் உறுப்பாக உம்முடைய அநுக்ரஹமே முக்கியமாக வேண்டியிருத்தலால் உம்மைக் கைகூப்பித்தொழுகின்ரேம். உங்கள் வானரப்படை எங்களைக் கொல்லாதபடி வார்த்தை பேசியருளவேணுமென்கிருர்கள்.

'வார்த்தை பேசீர்' என்றது—'நீர் எங்களோடு வார்த்தை சொல்லவேணும்' என்பதாகவும் 'நீர் குரங்குகளிடம் ஒருவார்த்தை சொல்லவேணும்' என்பதாகவும் பொருள்படும். முந்தினபொருளையே பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்கிருர். அரசன் ஒருவனேடே வார்த்தை சொன்னல் அதைக்காண்கின்ற ராஜ புருஷர்கள்

'இவன் நம் அரசனுக்கு அந்தரங்கன் போலும்' எனநினைத்து அவர்களும் அவனிடத்து அன்பராயிருக்கக்கடவராகையாலே. உம்முடைய முதலிகள் எங்களை உம்முடைய அந்தரங்கராக நினைத்துக்கொள்ளுமாறு நீர் எம்மோடே வார்த்தை சொல்லுவீராக என்கிறார்களென்க.

முன்பு விபீஷணாழ்வான் ராமகோஷ்டியில் வந்துபுகும்போது, 'சத்ரு பக்ஷத்தில் நின்றும்வந்த இவனை இங்குச்சேர்த்துக்கொண்டால் குடிகெட்டுப் போய் விடும்' என்று இடையூறுசெய்தவர்களில் ஸுக்ரீவன் தலைவனுதலால் அதனை யறிந்துபோலும் இவர்கள அவனையே கால்கட்டுகிறார்கள். ... ... 1

எம்பிரானே! என்னை யாள்வாய் என்றென்றலற்றாதே*
அம்பின்வாய்ப்பட்டாற்றகில்லாது இந்திரசித்தழிந்தான்*
நம்பி அநுமா! சுக்கிரீவா! அங்கதனே! நளனே!*
கும்பகர்ணன்பட்டுப்போனான் குழமணிதூரமே. 2

இந்திரசித்து இந்த்ரஜித்தானவன்
எம்பிரானே என்னை ஆள்வாய் என்று என்று அரற்றாதே — சரணாகதி செய்தும் போதாமல்
அம்பின் வாய் பட்டு — பாணங்களுக்கு இரையாகி
ஆற்றகில்லாது — தரித்திருக்கமாட்டாமல்
அழிந்தான் — மாண்டுபோனான்;
நம்பி அநுமா! சுக்கிரீவா! அங்கதனே! நளனே! —;
கும்பகர்ணன் — கும்பகர்ணனானவன்
பட்டுப்போனான் — முடிந்துபோனான்
குழமணிதூரம் ஆடுகின்றோம்—.

* * *—அநுமான் ஸுக்ரீவன் அங்கதன் நளன் ஆக நால்வரையும் விளித்துத் தங்கள் தோல்வியைச் சொல்லிக்கொள்ளுகிறார்கள். வாநரமுதலிகளுக்குள்ளே இந்நால்வரே முக்கியர்கள். ஹநுமானுடைய வீரச்செயல்களை முந்துற முன்னமே பிடித்துக் கண்டிருக்கின்றனர்; ஸுக்ரீவனை வாநரர்கட்கெல்லாம் அரசனாகையாலே அவனுடைய இரக்கம் முக்கியமென்று அறிந்திருக்கிறார்கள். [அங்கதனுடைய அற்புதச்செயல்களில் ஒன்றுவருமாறு :—] இராவணன் ஸேதுபந்தனம் முதலியவற்றைப்பார்த்தாகிலும் புத்தி திருந்தி வருவானோவென்று மநோரதித்த இராமபிரான் அங்கதனை இராவணனிடம் அனுப்ப, அவன் சென்று ராவண ஸபையிலுட்கார்ந்து அவனை நோக்கி 'ஓ ராக்ஷஸராஜனே! சக்ரவர்த்தி திருமகனார் உனக்கு நியமித்தருளுகிறார்—'நீ இன்னும் சிலநாள் இச்செல்வத்துடன் வாழ நினைத்தாயாகில் ஸீதையைக் கொணர்ந்து கொடுத்துவிடு; மேலும் என்னுடைய தகப்பனாரான வாலி உனக்குத் தெரியுமன்றோ? உன்னைத் தன்வாலினால் சுற்றியெடுத்துக்கொண்டுபோய் நான்குஸமுத்ரத்திலும் ஒரு சிறிய புழுவைத் தோய்ப்பது போல் தோய்த்தெடுத்த பராக்ரமசாலியன்றோ! அந்தவாலியை இந்த ஸ்ரீராமன் ஒரே அம்பினால் கொன்றுவிட்டார்; இதைக் கேட்டாகிலும் இனி நீ அவரிடத்திற் பகையை ஒழித்து நட்புக்கொள்' என்று சொல்ல, இராவணன் சீறி அங்கதனைப் பிடித்துக் கொல்லும்படி அரக்கர்கட்குக் கட்டளையிட, அப்படி பிடித்துக்கொண்ட நான்கு ராக்ஷஸர்களையும் தன்கக்ஷத்திலிடுக்கிக்கொண்டு ஆகாசத்திற்கிளம்பி அவ்வரக்கர்களை இராவணனுடையவிமானத்தின்மேற்சுழற்றி யடித்து அவ்விமானத்தையும் உடைத்துவிட்டு இராமனிடம் வந்து சேர்ந்தான். இப்படிப்பட்ட வீரச்செயலைக் கண்டவர்களாதலால், அங்கதனே! என்று அவனை விளிக்கின்றனர். அணைகட்டுதலாகிற அரும்பெருந்தொழில் நளனால் நிறைவேறிற்றென்பதை அறிந்தவர்களாதலால் நளனே! என்று அவனையும் விளிக்கின்றனர்.

இவர்களை விளித்துச்சொல்லும் வார்த்தையாவது இந்த்ரஜித்தும் கும்பகர்ணனும் 'எம்பிரானே! என்னையாள்வாய்' என்று சொல்லி வாழ்ந்துபோகப் ப்ராப்தியிருக்கச் செய்தேயும் அது செய்யமாட்டாதே அம்புக்கு இலக்காகி மாண்டொழிந்தனர்; நாங்கள் அங்ஙனமாகமே வாழ்ந்துபோகப் பார்க்கிறோ மென்றவாறு. ... ... ... ... ... 2

ஞாலமாளுமுங்கள்கோமான் எங்களிராவணற்கு*
காலனாகிவந்தவாகண்டஞ்சிக் கருமுகில்போல்*
நீலன்வாழ்கசுடேணன்வாழ்க அங்கதன்வாழ்கவென்று*
கோலமாகவாடுகின்றோம் குழமணிதூரமே. 3

| | | | |
|---|---|---|---|
| ஞாலம் ஆளும் | பூமியை யெல்லாம் ரக்ஷித்தருளபவராய் | கரு முகில் போல் | "காளமேகம்போன்ற |
| உங்கள கோமான் | உங்களுக்கு ஸ்வாமியான ஸ்ரீராமபிரான் | நீலன் வாழ்க | நீலன்வாழவேணும், |
| | | சுடேணன் வாழ்க | ஸுஷேணன் வாழவேணும் |
| எங்கள் இராவணற்கு | எங்களுக்குத்தலைவனாயிருந்த இராவணனுக்கு | அங்கதன் வாழ்க | அங்கதன் வாழவேணும்" |
| காலன் ஆகி வந்த ஆ கண்டு | ம்ருத்யுவாக வந்தபடியைப் பார்த்து | என்று | என்று ஒவ்வொருவர்க்கும் பல்லாண்டுபாடிக்கொண்டு |
| | | கோலம் ஆக | அழகாக |
| அஞ்சி | பயப்பட்டு, | | குழமணிதூரம், |

* * *—வானரமுதலிகாள்! பூமண்டலம் முழுவதையும் தனிக்கோல் செலுத்தி ஆளப்பிறந்த உங்கள் ஸ்வாமியான இராமபிரான் எங்களுக்குத் தலைவனாயிருந்த ராவணனுக்கு ம்ருத்யுஸ்வரூபியாய் வந்தாரென்பதை நன்கு தெரிந்து கொண்டோம்; இனி நாம் மார்பு நெறித்து வாழ்வதென்பதில்லை யென்று நிச்சயித்துக் கொண்டு உங்களுக்கு மங்களாசாஸநஞ் செய்வதையே யாத்திரையாகக் கொண்டோம்; 'நீலனுக்குப் பல்லாண்டு; ஸுஷேணனுக்குப் பல்லாண்டு; அங்கதனுக்குப் பல்லாண்டு' என்று சொல்லுபவர்களாய்க் குழமணிதூரமாடுகின்றோங் காண்மினென்கிறார்கள்.

காலன்—வடசொல். சுடேணன்—வாலிக்கு மாமனாராகிய வானரன்.

மணங்கள்நாறும்வார்குழலார் மாதர்களாதரத்தை*
புணர்ந்தசிந்தைப்புன்மையாளன் பொன்றவரிசிலையால்*
கணங்களுண்ணவாளியாண்ட காவலனுக்கிளையோன்*
குணங்கள்பாடியாடுகினறோம் குழமணிதூரமே.

| | | | |
|---|---|---|---|
| மணங்கள் நாறும் வார குழலார் மாதர்கள் | பரிமளம் மிக்க நீண்ட கூந்தலையுடையரான ஸ்த்ரீகள் விஷயத்திலே | வரி சிலையால் | அழகிய வில்வழியாக |
| | | வாளி | அம்புகளைப் பிரயோகித்த |
| | | காவலனுக்கு | ஸர்வரக்ஷகரானவருடைய |
| ஆதரத்தை புணர்ந்த சிந்தை | ஆசையை ஒருபோதும் விடாத நெஞ்சை யுடையனாய் | இளையோன் | திருத்தம்பியாரான லக்ஷ்மணருடைய |
| புன்மையாளன் பொன்ற | மிகவும் நீசனான இராவணன் முடியும்படியாகவும் | குணங்கள் பாடி | திருக்குணங்களைப் பாடிக்கொண்டு |
| கணங்கள் உண்ண | பிசாசுகள் ஏறிப் புசிக்கும்படியாகவும் | | குழமணிதூரம் ஆடுகின்றோம்—, |

* * *—ஸ்த்ரீசாபல்யத்தை மேற்கொண்டதனால் நீசர்களில் முதல்வனாகக் கணக்கிடப்பெற்ற இராவணன் முடிந்துபோம்படியாகவும் அவனுடலைக் கழுக்கள் முதலியவை ஏறியுண்ணும்படியாகவும் வில்லிலே அம்பைத்தொடுத்த பெருமாளுக்குத் தம்பியராய் 'இளையபெருமாள்' என வழங்கப்படுபவரான லக்ஷ்மணருடைய திருக்குணங்களைப் பாடிக்கொண்டு குழமணிதூரமாடுகின்றோமென்கிறார்கள். 'மணங்கள் நாறும்வார்குழலார்' என்றது ஸ்த்ரீஜாதிக்கு இயற்கையான அடைமொழி. மாதர்களாதரத்தைப் புணர்ந்த சிந்தை—ஸ்த்ரீவிஷயமான காதலைக்கொண்ட நெஞ்சுவாய்ந்தவன் என்றபடி. கணம் என்பதை 'கண' என்ற வடசொல்லின் விகாரமாகக் கொண்டு (கழுகு முதலியவற்றின்) கூட்டமென்று பொருள் கொள்வதிற்காட்டிலும், கணம் என்று பிசாசுகட்குப் பேராதலால் அப்பொருளே இங்குக்

வென்றிதந்தோம்மானம்வேண்டோம் தானமெமக்காக *
இன்றுதம்மினெங்கள்வாழ்நாள் எம்பெருமான்தமர்காள்!*
நின்றுகாணீர்கண்களார நீரெம்மைக்கொல்லாதே *
குன்றுபோலவாடிநின்றோம் குழமணிதூரமே.

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் தமர்காள் | ஸ்ரீராமபக்தர்களான வாநர வீரர்களே! | இன்று தம்மின் | இப்போது கொடுத்து விடுங்கள்; |
| வென்றி தந்தோம் | ஜயத்தை உங்களுக்குக் கொடுத்துவிட்டோம்; | நீர் | நீங்கள் |
| மானம் வேண்டோம் | 'நாங்களும் ஆண்பிள்ளைகள்' என்று கொண்டிருந்த அஹங்காரத்தைக் கைவிட்டிட்டோம்; | எம்மை கொல்லாதே | எங்களைக் கொல்லாமல் |
| எங்கள் வாழ்நாள் | எங்களுடைய ஆயுளை | கண்கள் ஆர | கண்படைத்தபயன் பெறுமாறு |
| எமக்கு | எங்களுக்கு | நின்று காணீர் | நின்று காணுங்கோள்; |
| தானம் ஆக | யாசகங்கொடுக்கும் விதமாக | குன்று போல | நாங்கள் மலைமலையாக நின்று கொண்டு |
| | | | குழமணிதூரம் ஆடுகின்றோம்—. |

* * *—ஸ்ரீ ராமபக்தர்களே! நீங்கள் எங்களைக் கொல்லவேணுமென்று நினைக்கிறது உங்களுடைய வெற்றிக்காகவன்றோ; அந்த வெற்றியை நாங்கள் உங்கட்குத் தந்திட்டோம்; (அதாவது—நாங்கள் தோற்றோமென்று சொல்லி உங்களுடைய வெற்றியைப் பிரசுரம் செய்துவிட்டோமென்றபடி.) நாங்களும் ஆண்பிள்ளைகளென்று மார்பு நெறித்து வந்ததனாலன்றோ நீங்கள் எங்களை நலிய வேண்டிற்றாயிற்று; அப்படி எங்களுடைய நலிவுக்கு ஹேதுவான அஹங்காரத்தையும் விட்டுத்தொலைத்தோம்; இனி எங்களுடைய ஜீவனம் நீங்களிட்டவழக்காகையாலே எங்கள் ஆயுஸ்ஸை எங்களுக்கு இன்று தாரைவார்த்துத் தத்தஞ்செய்து விடுங்கோள்; நாங்கள் இங்ஙனே வாயாலே இரந்து கேட்பதற்காகவே நீங்கள் எங்களைக் கொல்லாது விடவேணு மென்பதில்லை; நீங்கள் கண்படைத்த ப்ரயோஜனம் பெற வேண்டில் நாங்களாடும் குழமணிதூரக்கூத்தைக் காணவேணுமன்றோ; எங்களைக் கொன்றுவிட்டால் இக்கூத்தை எங்ஙனே காண்பீர்கள்? ஆகையாலே இவ்வதிசயத்தைக் காணவேண்டியதற்காகவும் எங்களைக்கொல்லா தொழியவேணு மென்கிறார்கள்.

குழமணிதூரக் கூத்தாட்டத்தைக் கண்டு முடிந்தபின்பு தங்களைக்கொல்லும்படி சொல்லுகிறார்களோவென்று சிலர் சங்கிப்பர்; அக்கூத்தைக் கண்டுவிட்டால் 'இப்படி நீசர்களானவர்களையோ நாம் கொல்லுவது!' என்று தன்னடையே

இரக்கம் தோற்று மாகையாலே பிறகு கொல்வதற்கு ப்ரஸக்தியே யில்லை யென்பது அரக்கர்களின் கருத்து.

தாணம்—ஸ்தாநம் என்ற வடசொல் விகாரம். நன்றுபோல ஆடுகின்றோம்—'குன்று கூத்தாடுமா என்ன?' என்று சிலர் கேட்பர்; ஆட்டத்திற்குக் குன்று உவமையன்று. தங்களுடைய உருவத்திற்கும் அணிவகுத்து நிற்கும் நிலைமைக்கும் கூறின வுவமை யென்க. .... ... ... ... .... 5

கல்லின் முந்நீர்மாற்றிவந்து காவல்கடந்து* இலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமான் எம்மையமர்களத்து *
வெல்லகில்லாதஞ்சினோங்காண் வெங்கதிரோன்சிறுவா !*
கொல்லவேண்டா ஆடுகின்றோம் குழமணிதூரமே. 6

| | | | |
|---|---|---|---|
| | (வானர முதலிகாள் !) | அமர் களத்து | யுத்தபூமியிலே |
| உங்கள கோமான் | உங்களுக்குத் தலைவரான ஸ்ரீராமபிரான், | அல்லல் செய்தான் | மிகவும் துன்பங்களுக்கு ஆளாக்கினர் ; |
| கல்லில் | மலைகளைக்கொண்டு | வெம்கதிரோன் சிறுவா | ஸூர்ய புத்திரனான ஸுக்ரீவனே ! |
| முந்நீர் | கடலை | | |
| மாற்றி வந்து | (அணைகட்டித்) தகைந்து வந்து | வெல்ல கில்லாது | (உங்களை) ஜயிக்க மாட்டாமல் |
| இலங்கை | லங்கையிலுள்ள | அஞ்சினோம் | பயப்படுகின்றோம் ; |
| காவல் | அரண்களையும் | கொல்ல வேண்டா | எங்களைக் கொல்லாதொழிய வேணும் ; |
| கடந்து | அதிக்ரமித்து | | |
| எம்மை | எங்களை | | குழமணிதூரம் ஆடுகின்றோம்காண் — . |

***_ [ஸூர்]த்யனுடைய புத்திரரான ஸுக்ரீவமஹாராஜரே! எங்களுடைய நகரத்தில் பிறரொருவரும் புகுதல் அரிது என்று அபிமானித்திருந்தோம்; பெருங்கடலை அகழாகக் கொண்டும் மற்றும் பலவகைப்பட்ட அரண்களையுடைய தாயுமிருக்கின்ற இந்நகரினுள் மானிடப்பிறவியனான ராமன் வந்து புகுந்து அடர்க்க வல்லனோ? என்று இறுமாந்திருந்தோம்; உங்கள் கோமானுடைய சக்தியை நாங்கள் என்ன சொல்லுவோம்? நீரில் போட்டால் அமிழ்ந்துபோகக் கூடிய கற்களைக்கொண்டு கடலிலே அணைகட்டினர்; மற்று முள்ள அரண்களையுங் கடந்து உட்புகுந்தார்; 'இலங்கை சுடுகாடாயிற்று' என்னும்படியாக வாயாற் சொல்லவொண்ணாத அனர்த்தங்களை விளைத்தார். இப்படிப்பட்ட மஹாவீரரை இனிநாங்கள் வெல்லக்கூடுமென்று நினைப்பதற்குக் கனவிலும் ப்ரஸக்தியில்லாமையாலே இந்திரஜித்து, கும்பகரணன் முதலானோர் சென்ற வழியின்பின்னே நாமும் செல்லும்படியாகிறதோ வென்று மிக அஞ்சிக்கிடவாநின்றோம். எங்களை உயிரோடே விட்டிட வேணுமென்று பிரார்த்திப்பவர்களாகிக் குழமணிதூரமாடுகின்றோமென்கிறார்கள். .... .... ... .... ... 6

மாற்றமாவதித்தனையே வம்மினரக்கருள்ளீர் !*
சீற்றம்நும்மேல்தீரவேண்டில் சேவகம்பேசாதே *
ஆற்றல்சான்றதொல்பிறப்பில் அநுமனைவாழ்கவென்று *
கூறமன்னர்காணவாடீர் குழமணிதூரமே. 7

| | | | |
|---|---|---|---|
| அரக்கர் உள்ளீர் | ராக்ஷஸஜாதியிற் பிறந்திருக்கின்ற இலங்கையர்காள்!, | மாற்றம் ஆவது இத்தனையே | (உங்கட்கு நாங்கள்) சொல்லும் வார்த்தை இவ்வளவே |
| | நீங்களும் எங்களோடே வந்து சேருங்கள் ; | நும் மேல் | உங்கள்மேல் |

| | | | |
|---|---|---|---|
| சீற்றம் | (ஸ்ரீராம ஸைந்யங்களுக்குண்டான) கோபம் | தொல் பிறப்பில் ஆற்றல் சான்ற அநுமனை | அநாதி காலமாக மிக்க வலிமையை யுடையரான சிறிய திருவடிக்கு |
| தீர வேண்டில் | தணியவேண்டுமாகில் | வாழ்க என்று | பல்லாண்டு பாடிக்கொண்டு |
| | | கூற்றம் அன்னார் காண | (நமக்கு) ம்ருத்யு போன்ற வானரவீரர்கள் காணும்படியாக |
| சேவகம் பேசாதே | (நீங்கள் இனியும்) மிறுக்குச் சொற்களைப் பேசுதல் தவிர்ந்து | குழமணி தூரம் ஆடீர் | குழமணி தூரக்கூத்தை ஆடுங்கோள். |

* * *—கீழ்த்திருமொழியில் "தடம் பொங்கத்தம் பொங்கோ" என்றும், இத்திருமொழியில் கீழ்ப்பாட்டளவும் "குழமணிதூரமாடுகின்றோம்" என்றும் சொல்லிவருகிற ராக்ஷஸர்களின் திரளில்புகாமல், "த்விதா பஜ்யேயமப்யேவம் நநமேயம்து கஸ்யசித்" [இருபிளவாகப் பிளவுண்டு விழும்போதும் குறுக்குவாட்டாக விழுவனேயன்றித் தலைசாய்ந்தவாறாக விழமாட்டேன்] என்று சொன்ன ராவணனுடைய நெறியிலே நிற்பவர்களான அரக்கர்களும் சிலருண்டாகையாலே இன்னமும் அவர்கள் மீசை முறுக்கிக்கொண்டு வீரவாதம் செய்திடக் கண்டு அவர்களையும் தங்கள் திரளிலே வந்துபுகுந்து உய்யுமாறு அழைக்கிறார்கள் இவ்வரக்கர்கள்.

மாற்றமாவது இந்நிலையே—ஸ்ரீராமபிரானுடையவும் அவனது சேனைத்தலைவர்களுடையவும் பராக்கிரமத்தைப்பற்றி இப்போது நாங்கள் உங்கட்கு விவரித்துச் சொல்லவேண்டியதொன்றுமில்லை; அதனை ப்ரத்யக்ஷமாகவே கண்டிருக்கின்றவுங்களுக்கு நாங்கள் எடுத்துச்சொல்லவேணுமோ; ஆகையால் அதனைச்சொல்லாதே இப்போது நாங்கள் உங்கட்குச் சொல்லுவதாவது, [வம்மினரக்கருள்ளீர்! இத்யாதி.] இக்ஷ்வாகுவம்சத்திலேயே சேர்ந்துவிட்ட விபீஷணாழ்வான் போல்வாரை நாங்கள் அழைக்கப்போகிறோமோ? இன்னமும் ராக்ஷஸர்களாகவே யிருக்கின்ற உங்களையாயிற்று அழைக்கிறோம். இப்படி வாருங்கள்; இராவணனோடு கூடவே ஒழிந்துபோய்விட உங்கள் கருத்தாகில் ஒழிந்துபோமின்; வானரவீரர்களுக்கு நம்மேல் சீற்றம் தணிந்து உயிர்வாழப்பெறவேணுமென்று விரும்பியிருப்பீர்களாகில் இனி மீசை முறுக்குதலையும் மார்பு நெறித்தலையும் விட்டுத்தொலையுங்கள்; பிறப்பே பிடித்துப் பெருவீரனான அநுமானுக்குப் பல்லாண்டு பாடுங்கள்; உங்களுடைய மிருத்யுவே வடிவெடுத்து வந்திருக்கிறதென்னலாம்படியான வானரவீரர்கள் காணும்படியாக எங்களோடே கூடிக் குழமணி தூரமாடுங்கள் என்கிறார்கள்.

மாற்றம்—வாய்வார்த்தை. சேவகம்—வீரவாதம். அநுமான் பிறந்தவுடனே ஸூரியனைப்பார்த்து அவனைப்பிடித்துப்பக்ஷிப்பதாக ஆகாசத்திற்கிளம்பிப்போனவராதலால் 'ஆற்றல்சான்ற தொல்பிறப்பின்' என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. ஆஞ்சனேயரொருவரைவாழ்த்தினால் மற்றுள்ளாரனைவரும் ப்ரஸந்நராய்விடுவர்களென்று ஸூசிப்பிக்கப்பட்டது. ... ... ... ... 7

கவளயானைப்பாய்புரவித் தேரோடரக்கரெல்லாம்
துவள*வென்றவென்றியாளன் தன்தமர்கொல்லாமே *
தவளமாடநீடயோத்திக் காவலன்றன்சிறுவன் *
குவளைவண்ணன்காணவாடீர் குழமணிதூரமே.

| | | | |
|---|---|---|---|
| கவளம் யானை | கவளங்கொள்ளு மியல்பினவான யானைகளும் | கொல்லாமே | (நம்மைக்) கொல்லாதபடி, |
| பாய் புரவி | பாய்ந்து வருகிற குதிரைகளும் | தவளம் மாடம் நீடு | வெண்மையான மாடமாளிகைகளினால் நீண்டிருக்கிற |
| தேரோடு | தேர்களும் ஆகிய இவையெல்லாவற்றோடுங்கூட | அயோத்தி | அயோத்திமா நகர்க்கு |
| அரக்கர் எல்லாம் துவள | ராக்ஷஸ ஜாதியடங்கலும் கஷ்டப்படும்படியாக | காவலன் தன் சிறுவன் | அரசரான தசரதருடைய திருக்குமாரராய் |
| வென்ற | ஜயித்த | குவளை வண்ணன் | குவளை மலர்போன்ற நிறத்தை யுடையவரான இராமபிரான் |
| வென்றியாளன் தன் தமர் | ஜயசீலரான பெருமாளுடைய கிங்கரர்களான வானர வீரர்கள் | காண | காணும்படியாக |
| | | குழமணிதூரம் ஆடீர் | குழமணிதூரக்கூத்து ஆடுங்கள். |

***—இப்பாட்டும் கீழ்ப்பாட்டுப்போலவே அரக்கருள்ளாரை யழைப்பதாம். 'அரக்கருள்ளீர்!' என்ற விளி கீழ்ப்பாட்டிலிருந்து வருவித்துக்கொள்ளத் தக்கது. யானைகளும் குதிரைகளும் தேர்களுமாகிய சேனையுறுப்புகளெல்லா வற்றோடுங்கூட அரக்கர் தொலையுமாறு கொன்று வெற்றி பெற்ற ஆண்புலியின் கிங்கரர்களான வானரவீரர்கள் உங்களைக்கொல்லாதிருக்கவேணுமாகில், குவளை வண்ணரான அந்த சக்ரவர்த்திதிருமகன் கண்டுமகிழும்படியாகக் குழமணிதூரமாட எங்களோடே வந்து கூடுங்கள் என்கிறார்கள்.

கவளயானை—யானையின் உணவுக்குக் கவளம் என்று பெயர்; தீனிகளை யிட்டு மதமூட்டப்பட்ட யானை என்றவாறு. தவளம்—धवलः என்பது வடசொல். சிறந்த சுண்ணாம்பு பூசப்பெற்று வெண்ணிறமாயிருக்கின்ற மாடமாளிகைகளையுடைத்தான அயோத்யாபுரிக்கு இறைவனான தசரதனது திருக்குமாரர் என்றபடி. ... 8

ஏடொத்தேந்தும்நீளிலைவேல் எங்களிராவணனார்
ஓடிப்போனார்*நாங்களெய்த்தோம் உய்வதோர்காரணத்தால் *
சூடிப்போந்தோம்உங்கள்கோமானாணை தொடரேன்மின் *
கூடிக்கூடியாடுகின்றோம் குழமணிதூரமே. 9

| | | | |
|---|---|---|---|
| ஏடு ஒத்த | பனையோலை விரிந்தாற்போல் அகன்றதாயும் | எய்த்தோம் | |
| நீள | நீண்டதாயும் | உய்வது ஓர் காரணத்தால் | (இனி) உஜ்ஜீவிப்பதன் பொருட்டு |
| இலை | இலையை யுடைத்தாயு மிருக்கிற | உங்கள் கோமான் | உங்களுக்கு ஸ்வாமியான பெருமானுடைய ஆஜ்ஞையை |
| வேல் | வேற்படையை | | |
| ஏந்தும | கையிற்கொண்ட | சூடிப் போந்தோம் | சிரஸாவஹிப்பவர்களாயிருக்கின்றோம்; |
| எங்கள் இராவணனார் | எங்கள் பிரபுவான இராவணன் | தொடரேல்மின் | (எங்களைக் கொல்வதற்குத்) தொடரவேண்டா, |
| ஓடி போனார் | முதுகுகாட்டி ஓடிப்போய் விட்டார்; | கூடி கூடி | திரள்திரளாகக் குழாங்கூடி |
| நாங்கள் | நாங்களோ | | குழமணிதூரம் ஆடுகின்றோம். |

***—இத்திருமொழியின் இரண்டாம்பாட்டில் "நம்பி அனுமா! சுக்கிரீவா! அங்கதனே! நளனே!" என்றுள்ள விளிகள் இப்பாட்டில் அநுஸந்திக்கவுரியன. வானரமுதலிகளே! கையில் வேற்படை பிடித்துப் பெருமதிப்பனாயிருந்த எங்கள் பிரபு ஆயுதங்களுறப்புண்டு முதுகுகாட்டி ஓடிப்போனான்; நாங்களோ வென்னில், 'இவர்களையோ கொல்லுவது!' என்று நீங்கள்தாமும் இரங்கும்படியாக இளைத் தொழிந்தோம்; அவ்வளவேயன்று; உங்கள் தலைவரான இராமபிரான் காலாலே

இட்டதைத் தலையாலேதாங்கிச் செய்துமுடிக்க வல்லோமாக விதேயராய் வந்து நிற்கின்றோம்; இனி நீங்கள் எங்களைக் கொல்வதாகத் தொடர வொண்ணாது; நாங்கள் கூட்டங்கூட்டமாக இருக்கிறோமென்பதைக் கண்டு 'போர்புரிய நிற்கின்றார்கள் இவர்கள்' என்று நினைக்கலாகாது; குழமணிதூரமாடுதற்கே திரள் திரளாக இருக்கின்றோங்காண்மின் என்கிறார்கள்.

**எங்கள்இராவணனார் ஓடிப்போனார்**—இராவணன் போர்க்களத்தில் நின்றும் வீட்டுக்கு ஓடிச்சென்றானென்பது இதற்குப் பொருளன்று; இவ்வுலகைவிட்டு யமலோகத்திற்கு ஓடிப்போனானென்று பொருளாகவேணும்; இவ்விடத்தில் உயிரோடிருந்தும் இல்லையென்று சொல்லும்படியாகவே ஆய்விட்டான் என்றவது கொள்ளவேணும்.

**'உய்வதோர் காரணத்தால்'** என்பது நடுநிலைத்தீபகமாகி முன்னும் பின்னும் அந்வயிக்கும்: உய்வதோர் காரணத்தால் நாங்கள் எய்த்தோம்: உய்வதோர்காரணத்தால் உங்கள் கோமானை சூடிப்போந்தோம் என்பதாக. .... 9

வென்றதோல்சீர்த்தென்னிலங்கை வெஞ்சமத்து*அன்றரக்கர்
குன்றமன்னாராடியுய்ந்த குழமணிதூரத்தை*
கன்றிநெய்நீர்நின்றவேற்கைக் கலியனொலிமாலை*
ஒன்றுமொன்றுமைந்துமூன்றும் பாடிநின்றாடுமினே. 10

| | | | |
|---|---|---|---|
| தோல் | நெடுநாளாக | கன்றி நெய் நீர் நின்ற வேல் கை | சினக்குறிப்புடன் கூடியதாய் நெய்யிட்டிருப்பதை நீர்மையாக வுடைத்தாய் நின்ற வேற்படையைக் கையிலுடையரான |
| வென்ற சீர் | வெற்றியையே இயல்பாக வுடைத்தாயிருந்த | | |
| இலங்கை | தென்னிலங்கையில் | | |
| வெம் சமத்து | வெவ்விய போர்க்களத்திலே | கலியன் | திருமங்கையாழ்வார் |
| அன்று | அப்போது | ஒலி | அருளிச்செய்த |
| அரக்கர் | ராக்ஷஸர்கள் | மாலை ஒன்றும் ஒன்றும் ஐந்தும் மூன்றும் | சொல்மாலையாகிய இப்பத்துப் பாசுரங்களையும |
| குன்றம் அன்னார் | மலைபோன்றவர்களாக | | |
| ஆடி உய்ந்த குழமணி தூரத்தை | குழமணிதூரக் கூத்தாடி உயிர் தப்பினபடியைக் குறித்து. | பாடி நின்று | பாடிக்கொண்டு |
| | | ஆடுமின் | (ஆநந்தத்துக்குப் போக்கு வீடாகக்)கூத்தாடுங்கோள. |

* * *—இலங்காபுரியென்பது நெடுநாளாகவே தோல்வியைக் கண்டறியாமலேயிருந்தது; வெற்றியை இயற்கைச் செல்வமாகக் கொண்டிருந்தது. அப்படிப்பட்ட இலங்கையில் நடந்த யுத்தத்தில் ராக்ஷஸர்கள் பெருமாளுடைய வெற்றிக்கும் தங்களுடைய தோல்விக்கும் மேலெழுத்திட்டு "குன்றுபோல ஆடுகின்றோங்குழமணிதூரமே" என்றாற்போலே பல சொல்லிக் கூத்தாடி உயிர்தப்பிப் பிழைத்தபடியைத் திருமங்கையாழ்வார் எடுத்துரைத்த இத்திருமொழியைக் கொண்டு ஸ்ரீவைஷ்ணவர்களெல்லீரும் பாடியாடுங்கோளென்கிறது இதனால். அரக்கர்கள் ஜீவனம் பெறுதற்காகக் குழமணிதூரமாடினர்; ஸ்ரீவைஷ்ணவர்காள்! நீங்கள் உஜ்ஜீவநம் பெறுதற்காக இப்பாசுரங்களைச் சொல்லி ஆடுங்கோள் என்கிறார் போலும். ... .... .... ... ... .... 10

**அடிவரவு**:—ஏத்துகின்றோம் எம்பிரானே ஞாலம் மணங்கள் வென்றி கல்லின் மாற்றம் கவளம் ஏடு வென்ற சந்தம்.

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## பத்தாம்பத்து—நான்காந்திருமொழி—சந்தமலர்க்குழல்தாழ.

**உரையவதாரிகை:**—கீழ் இரண்டு திருமொழிகளும் ராமாவதாரத்தில் அநுபவமாய்ச் சென்றன; இனி க்ருஷ்ணாவதாரத்திலநுபவமாய்ச் செல்லுகிறது. த்வேஷத்தின் எல்லையிலே நின்றவர்களின் பாசுரத்தாலே ராமாவதாரத்தை அநுபவித்தார் கீழ்; ப்ரேமத்தின் எல்லையிலே நின்றவர்களின் பாசுரத்தாலே க்ருஷ்ணாவதாரத்தை அநுபவிக்கிறாரிப்போது. இத்தால் தெரிவிக்கப் பட்டதாகிற தென்னென்னில்: பகவத்விஷயத்திலே த்வேஷமாகவுமாம், ப்ரீதியாகவுமாம்; ஏதேனுமொருபடியாலே பகவத்குணங்களை எடுத்துரைக்கப்பெறில் அது உத்தேச்யமாகக் குறையில்லை யென்னுமிடம் ஸூசிதமாகிறது. ராக்ஷஸர்களின் நிலைமையை ஏறிட்டுக்கொண்டு பேசினதோடு யசோதைப்பிராட்டியின நிலைமையை ஏறிட்டுக்கொண்டு பேசுகிறதோடு வாசியில்லையென்றிருக்கிறாராயிற்று இவ்வாழ்வார்.

கண்ணபிரான் விளையாட்டில் விருப்பத்தாலே முலையுண்பதையும் மறந்து திரியாநிற்க யசோதைப்பிராட்டி அப்பிரானை விளித்து முலையுண்ணுமையை அவனுக்கு அறிவித்துத் தன் முலைகளையுண்ணவேணுமென்று நிர்ப்பந்தித்தபடியை ஆழ்வார்தாமும் அநுபவிக்கவிரும்பித் தம்மை அவ்யசோதைப்பிராட்டியாகவே பாவித்துக் கொண்டு அவனை அம்மமுண்ணுமாறு வேண்டுவதாமித்திருமொழி. பெரியாழ்வார் திருமொழியில் “அரவணையாயாயரேறே! அம்மமுண்ணத்துயிலெழாயே” என்ற திருமொழியோடு ஒக்கும் இத்திருமொழி. உச்சிப்போதிலே முலையுண்ண அழைத்தது அத்திருமொழி; அந்தியம்போதிலே முலையுண்ண வழைக்கிறது இத்திருமொழி என்பது வாசி. .... ... ... ... *

சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித்தனியே
வந்து*என்முலைத்தடந்தன்னைவாங்கி நின்வாயில்மடுத்து *
நந்தன்பெறப்பெற்றநம்பீ ! நானுகந்துண்ணுமமுதே !*
எந்தைபெருமானேயுண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. 1

| | | | |
|---|---|---|---|
| நந்தன் | நந்தகோபர் | தான் தனியே உகந்து ஓடி வந்து | நீ (பலராமனை விட்டுத்) தனியே மகிழ்ச்சியுடன் (எனபக்கல்) ஓடிவந்து |
| பெறப்பெற்ற | பிள்ளையாகப் பெறும்படி வாய்ந்த | என் முலைத்தடம் தன்னை வாங்கி | எனது முலைகளைக் கையிற் பிடித்து |
| நம்பீ | ஸ்வாமியே! | நின் வாயில் மடுத்து | உனது வாயிலே நிறைத்துக் கொண்டு |
| நான் உகந்து உண்ணும் அமுதே | நான் பரிவுடனே புஜிக்கின்ற அமுதமாயிருப்பவனே! | உண்ணாய் | உண்ணவேணும்; |
| எந்தை பெருமானே | என் குலநாதனான கண்ணபிரானே! | என் அம்மம் | என்னுடைய முலைப்பாலாகிற |
| சந்தம் மலர் குழல் | செவ்விப்பூக்களை யணிந்த திருக்குழற்கற்றையானது | சேமம் | க்ஷேமத்தளிகையை |
| தாழ | அலைய | உண்ணாய் | உண்ணவேணும். |

* * *—கண்ணபிரானே! குழலலைய அலைய ஓடிவந்து என்முலைகளை உன் வாயில் மடுத்துப் பாலுண்ணவேணுமென்று அழைக்கிறாள். ‘சந்தமலர்க்குழல்’ என்றதனால் “செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி, எண்பகர் பூவுங் கொணர்ந்தேன் இன்றிவை சூட்டவா” என்று ஏற்கெனவே அழகிய மலர்களைக் குழலிலே சூட்டியிருக்கிறாளென்பது உணரத்தக்கது. குழல்தாழ வரவேணுமென்றது—முலையுண்பதிலுண்டான பேராவல் விளங்குமாறு தன்னைப் பேணாதே ஓடிவரவேணுமென்றபடி. *தன்னேராயிரம் பிள்ளைகளோடு இவன் விளையாடுகிறு

னுகையாலே அவர்களையும் பலராமனையும் விட்டுத் தனியே வரவேணுமென்றழைக்கிறாள். [முலைத்தடந்தன்னை வாங்கி நின்வாயில் மடுத்து.] யசோதைப் பிராட்டிக்கு இப்படியும் ஒரு ஆசை போலும்; தன் கையாலே முலையையெடுத்துக் கண்ணபிரானது திருப்பவளத்திலே தான் மடுப்பதிலுங் காட்டில் அவன் தானே பிடித்து வாயில் மடுத்து உண்ணப்பெறில் அதிலே ஒரு போக்யதாதிசயம் கண்டவள்போலும்.

[நந்தன் பெறப்பெற்ற நம்பீ!] 'நந்தன் பெற்ற நம்பீ!' என்றால் போராதோ? 'பெறப்பெற்ற' என்பானேன்? என்னில்: ஈச்வரனுக்கு இது அலப்யலாபம் என்பது தோற்றுதற்காகவே இப்படி அருளிச்செய்ததென்ப. நந்தகோபன் பிள்ளையாகப் பெறும்படியான பாக்கியம் பெற்றவனே! என்றவாறு. இவனுடைய பிறப்பினால் நந்தகோபனுக்கு ஏற்றம்; நந்தகோபனுக்குப் பிள்ளையாகப் பிறந்ததனால் இவனுக்கு ஏற்றம் என்றிறே நம் ஆசார்யர்கள் நிர்வஹிக்கிறபடி. எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரத்திற்கு இலக்காகப் பெற்ற ஏற்றம் 'நந்தன்' என்ற சொல்வடிவத்திலேயே விளங்கும். மெய்யே இவனை மகனாகப் பெற்ற வஸுதேவனை யெடுத்துக்கொள்வோம்; வஸுதேவன் என்றால் பணத்தால் விளங்குபவன் என்று பொருள். நந்தன் என்றால் ஆநந்தப்படுபவன் என்று பொருள். உலகத்தில் பணக்காரனாயிருப்பவனுக்கெல்லாம் ஆனந்தமுடைமை இன்றியமையாததன்று; பணக்காரன் துக்கமுடையவனாகவும் ஏழை ஆனந்தமுடையவனாகவும் இருக்கவுங் காண்கிறோம். வஸுதேவன் கண்ணபிரானைப் பெறுதற்கு நெடுங்காலம் உபாயாநுஷ்டானம் செய்தவனாதலால் கண்ணனுடைய முகத்தைக்கண்ட மாத்திரத்திலே அவனுடைய நோன்பின் பலன் முற்றுப்பெற்றதாகி அவன் தானே பிள்ளையைத் தலையில் சுமந்து கொண்டுபோய் நந்தகோபனிடத்தில் விட வேண்டியதாயிற்று. நந்தகோபன் ஒருவகை உபாயாநுஷ்டானத்தையும் நெஞ்சிலும் நினையாதவனாயிருந்தவனாதலால் அவனுக்கு ஆநந்தமே நித்யமாகச் சென்றது. அப்படிப்பட்டவனுக்குப் பிள்ளையாகப் பிறந்தது எம்பெருமான்றனக்கு ஆநந்தம். பிறப்பே காரியமாயிருக்கிற ஸம்ஸாரிக்குப் பிறவாமை ஏற்றமாவதுபோல, பிறவாத பெருமானுக்குப் பிறப்பு ஏற்றமாகிறதென்னும் சுவைப்பொருளும் இங்கு உணரத்தக்கது. தனக்குக்கிடையாததைப் பெறுகையிறே அவனவனுக்கு ஏற்றம்.

[நான் உகந்துண்ணும் அமுதே!] தேவர்களுண்கிற உப்புச்சாறுபோலேயோ யசோதையுண்கிற அம்ருதம். *அமுதிலுமாற்றவினிய அமுதமன்றோ இது. அப்படிப்பட்ட அமுதுக்கும் அமுதூட்டப் பாரித்து அழைக்கிறாள். 'அம்மம்' என்பது கண்ணபிரானுடைய குழந்தைப்பருவத்துக்குத் தகுதியாக யசோதை சொல்வதொரு வார்த்தையாகும். 'புவ்வா' என்றும் 'பாப்பம்' என்றும் குழந்தைகட்குச் சொல்லும் சொற்கள்போல இதுவுமொருசொல். "அம்மமுண்ணத்துயிலெழாயே" "உனக்கஞ்சுவனம்மந்தரவே" என்ற பெரியாழ்வார் திருமொழியுங்காண்க. சேமம் என்றது க்ஷேமமென்னும் வடசொல்விகாரம். பிரபுக்களுக்குக் காவலோடே வரும் சோறு 'சேமத்தளிகை' எனவழங்கப்படும். ... ... ... 1

வங்கமறிகடல்வண்ணா! மாமுகிலேயொக்கும்நம்பீ!*
செங்கணெடியதிருவே! செங்கமலம்புரைவாயா!*
கொங்குகைகூரந்திடவுன்னைக் கூவியும்காணாதிருந்தேன்*
எங்கிருந்தாயர்களோடும் என்விளையாடுகின்றாயே? 2

வங்கம் மறி கடல் வண்ணா — அலைகள்மடிந்து மடிந்து எறிகிற கடலின் நிறம்போன்ற நிறமுடையவனே!
மா முகிலே ஒக்கும் நம்பீ — காளமேகத்தை யொத்திருக்கின்ற பிரானே!
நெடிய செம் கண் திருவே — நீண்ட செந்தாமரைக் கண்களையுடைய ஸ்ரீமானே!
செம் கமலம் புரை வாயா — செந்தாமரைப் பூப்போன்ற திருமுகத்தை யுடையவனே!,

| | | | |
|---|---|---|---|
| கொங்கை சுரந்திட | என் முலைகளிலே பால்சுரக்க | ஆயர்களோடும் | இடைப்பிள்ளைகளோடே |
| உன்னை கூவியும் | உன்னையழைத்தும் | எங்கு இருந்து | எவ்விடத்திலிருந்துகொண்டு |
| காணாது இருந்தேன் | நீவரக்காண்கிறிலேன் ; | என் விளையாடுகின்றாய் | என்ன விளையாட்டு யாடுகின்றாய் ? |

* * *—கடல்போலவும் காளமேகம்போலவும் விளங்குகின்ற வடிவையுடையவனே! அவயவ சோபையெல்லாம் ஒருதட்டும் கண்ணழகுமாத்திரம் ஒரு தட்டுமாம்படி 'கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்ட அப்பெரியவாய திருக்கண்களையுடையவனே !, 'திருவுக்குந்திருவாகிய செல்வா !' என்னவேண்டும்படி சிறப்புமிக்கவனே ! செங்கமலப்பூப்போன்ற திருவாயையுடையவனே ! 'தாய் முலை சுரப்பது எப்போதோ ?' என்று நீயே எதிர்பார்த்திருந்து முலைசுரக்குமளவிலேவந்து அம்முலையுண்ணப்ராப்தமாயிருக்க அது செய்யாத தன்றியும், நான் கூவியழைத்தும் வாராதிருக்கிறாயே! என்றவாறே, நெடுந்தூரத்திலிருந்து 'இதோ வருகிறேன்' என்று குரல்காட்டினன் கண்ணபிரான் ; அதைக்கேட்ட யசோதை *மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம்புக்குக் கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்பு துகிலவை கீறி, நிச்சலுந்தீமைகள் செய்பவனுகையாலே இவன் மச்சுமாளிகைகளிலே புக்கு இடைப்பெண்களிடம் ஏதோ தீம்பு செய்கிறான்போலும் என்று நினைத்து எங்கிருந்து ? என்றாள் ; அதாவது, நீ கண்ணுக்குப் புலப்படாமலே குரல் காட்டுகிறாயே!, எங்கிருந்து பேசுகிறாய் ? என்றாள். அதுகேட்ட கண்ணபிரான் 'நாம் ஆய்ச்சிகளோடிருப்பதாக யசோதை சங்கிக்கிறாள் போலும் ; இடைப்பிள்ளைகளோடே விளையாடுகிறோமென்பதை அவளுக்குத் தெரிவிப்போம்' என்றெண்ணித் தன்னுடன்கூட விளையாடுகின்ற இடைப்பிள்ளைகளின் குரலை அவளுக்குச் செவிப்படுத்த, ஆயர்களோடும் என் விளையாடுகின்றாய் ? என்கிறாள். நான் உன்னை எதிர் பார்த்து அழையாநிற்க இதுதானோ விளையாட்டுக்கு ஸமயம் ? என்றவாறு. வங்கம் —அலையும், கப்பலும். ... ... ... ... ... 2

திருவிற்பொலிந்தவெழிலார் ஆயர்தம்பிள்ளைகளோடு*
தெருவில்திளைக்கின்றநம்பி! செய்கின்றதீமைகள்கண்டிட்டு*
உருகியென்கொங்கையின்தீம்பால் ஓட்டந்துபாய்ந்திடுகின்ற*
மருவிக்குடங்காலிருந்து வாய்முலையுண்ணநீவாராய். 3

| | | | |
|---|---|---|---|
| திருவில் பொலிந்த | செல்வத்தினால் மிக்கவர்களாய் | என் கொங்கையின் | என்னுடைய முலையினின்றுண்டான |
| எழில் ஆர் | வடிவழகும் நிறைந்தவர்களான | தீம் பால் | இனிய பாலமுது |
| ஆயர்தம் பிள்ளைகளோடு | இடைப் பிள்ளைகளோடு | | தானே உருகி |
| தெருவில் திளைக்கின்ற | வீதியிலே விளையாடுகின்ற | ஓட்டந்து | வெள்ளமிட்டு |
| நம்பீ | பிரானே ! | பாய்ந்திடு | பெருகிப் பாழாய்ப் போகின்றது ; |
| செய்கின்ற | நீ செய்துவருகிற | | (அப்படி பாழாய்ப்போகாமே) |
| தீமைகள் | தீம்புகளை | குடங்கால் | (எனது) மடியிலே |
| கண்டிட்டு | பார்த்து | மருவி இருந்து | பொருந்தியிருந்து |
| | (அதனாலுண்டான உவப்பினால்) | வாய் | வாயினால் |
| | | முலை உண்ண | முலைப்பாலுண்பதற்கு |
| | | நீ வாராய் | நீ வரவேணும். |

* * *—யசோதைப்பிராட்டியின் கண்ணுக்குப் புலப்படாமல் நாம் விளையாடிக் கொண்டிருந்ததனாலன்றோ அவளுக்கு நம்மேல் அதிசங்கை உண்டாயிற்று ; அங்ஙனன்றியே வெளிப்படையாகவே தெருவில்விளையாடுவோமென்றெண்ணிக் கண்ண

பிரான் 'தன்னேராயிரம் பிள்ளைகளோடு திருவீதியில் விளையாடத்தொடங்கினன்; அவனுடைய விளையாட்டெல்லாம்* கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திடுவதும்' இளம்பிள்ளை கிள்ளியெழுப்பிக் கண்ணைப்புரட்டி விழிப்பதுமான தீமைகளாகவேயிருக்குமாதலால் அப்படிப்பட்ட விளையாடல்களைக்கண்டு சிறவேண்டியதாயிருந்தும்' அஞ்சவுரப்பாள் அசோதை ஆணாட விட்டிட்டிருக்கு மென்னப்படுபவளாகையாலே 'நம் குழந்தையன்றோ இப்படிப்பட்ட தீம்பு செய்யக்கற்றது!' என்று உள் மகிழ்ந்தவளாகி அந்த மகிழ்ச்சியினால் இன்னமும் விஞ்சியே பால் சுரக்கப்பெற்று அந்த நிலைமையை வாய்விட்டுச் சொல்லி, பிரானே! இப்படி தெருவில் விளையாடுதல் தவிர்ந்து என்குடங்காலிலேயிருந்து பாலமுதுண்ணவாரா யென்றழைக்கிறாள்.

திருவிற்பொலிந்த எழிலார் = தன்னுடைய அழகுக்கு ஏறக்குறையத் தகுதியான அழகுடைய பிள்ளைகள் என்றபடி. [தீமைகள் கண்டிட்டு உருகி] ஏற்கனவே ப்ரேமத்தாலே பெருகுகின்றபால், அதற்குமேலே நீ தீமைசெய்யும்படிகளைக் கண்டு உள்ளுருகி வெள்ளமிடுகின்றதென்றபடி. தீம் பால்=மதுரமானபால். 'தீம்' என்று இனிமை. [ஓட்டந்து.] ஓட்டம் தந்து என்ற இரண்டு சொற்கள் சேர்ந்து விகாரப்பட்டு 'ஓட்டந்து' என்றாயிற்று; உடன் பாட்டு இறந்தகால வினையெச்சம். ஓட்டம் தருதலாவது ஓடிவருதல்; ப்ரவஹித்தலைச் சொன்னபடி. .... .... 3

மக்கள்பெறுதவம்போலும் வையத்துவாழும்மடவார்*
மக்கள்பிறர்கண்ணுக்கொக்கும்முதல்வா! மதக்களிறன்னாய்!*
செக்கரிளம்பிறைதன்னைவாங்கி நின்கையில்தருவன்*
ஒக்கலைமேலிருந்தம்மம் உவந்தினிதுண்ணநீவாராய். 4

| | | | |
|---|---|---|---|
| வையத்து வாழும் மடவார் | நாட்டிலே வாழ்கின்ற ஸ்த்ரீகளினுடையவும் | செக்கர் இள பிறை தன்னை | செவ்வானத்திலிருக்கின்ற பாலசந்திரனை |
| பிறர் மக்கள் | மற்றுமுள்ள மநுஷ்யர்களினுடையவும் | வாங்கி | பிடித்து |
| கண்ணுக்கு | கண்களுக்கு | நின் கையில் | உன்கையில் |
| மக்கள் பெறு தவம் போலும் ஒக்கும் முதல்வா | பிள்ளைபெறுதற்கு நோற்கும் நோன்புதான் ஒருவடிவு கொண்டதோ! என்று சொல்லலாம்படியிருக்கின்ற ஜகத்காரணபூதனே! | தருவன் | கொடுப்பேன்; |
| | | ஒக்கலை மேல் இருந்து | (என்) இடுப்பிலே இருந்துகொண்டு |
| | | அம்மம் | முலைப்பாலை |
| | | உவந்து | ஆதரித்து |
| | | இனிது | போக்யமாக |
| மதம் களிறு அன்னாய் | மதம்பிடித்த யானைபோலச் செருக்கியிருப்பவனே! | உண்ண | உண்பதற்கு |
| | | நீ வாராய் | நீ வரவேணும். |

* * *—"வையத்துவாழும் மடவார் பிறர்மக்கள் கண்ணுக்கு மக்கள் பெறு தவமொக்கும் முதல்வா" என்று அந்வயிப்பது (முதலடியில் போலும் என்றது அசை.) நாட்டில் வாழ்கின்ற ஸ்த்ரீகளென்ன, பொதுவாக மனிதர்களென்ன ஆக எல்லோருடையவும் கண்ணுக்கு 'பிள்ளை பெறுகைக்கு நோற்கும் நோன்பு தான் இங்ஙன ஒரு வடிவு கொண்டதோ?' என்னும்படி புலப்படுகிறவனே! என்றபடி. யார்கண்டாலும் 'இவன் நம்முடைய குழந்தையாயிருக்கக்கூடாதோ?' என்றே ஆசைப்படும்படியாக திவ்யஸௌந்தரமங்களவிக்ரஹம் படைத்தவனே! என்பதாகக் கொள்க. இவன் நடக்கிற நடை யானை நடக்குமாபோலே நெஞ்சைக் கவர்வதாயிருந்ததனால் மதக்களிறன்னாய்! என்கிறாள்.

இப்படி யசோதைப்பிராட்டி தன்னைப் புகழ்ந்து கொண்டு அழைப்பதைக் கண்ட கண்ணபிரான் 'அம்மா! உன் சூதெல்லாம் எனக்குத் தெரியும்; நீ என்னைப் புகழ்ந்து பேசுவதெல்லாம் அழைத்துக் கொள்வதற்காகத் தானே; நேற்றெல்லாம் நான் சந்திரனைப்பிடித்துத்தா' என்று உன்னை எவ்வளவோ வேண்டியும் 'மஞ்சில்மறையாதே மாமதி! மகிழ்ந்தோடிவா' என்றும் 'அம்புலீ! கடிதோடிவா' என்றும் 'விண்தனில் மன்னிய மாமதீ! விரைந்தோடிவா' என்றும் 'வாழவுறுதியேல் மாமதி! மகிழ்ந்தோடிவா' என்றும் சந்திரனையழைப்பது போல் ஆசைகாட்டிவிட்டு வஞ்சித்தொழிந்தாய்; அவனைப் பிடித்து என்கையில் தந்தாலொழிய நான் உன்னருகில் வருவதில்லை' என்று சொல்லி நெடுந்தூரத்திலே நிற்க, 'குழந்தாய்! குறை கூறாதே; இன்று இளம்பிறையைப் பிடித்து அவசியம் உன்கையில் தந்திடுவேன், வா' என்று யசோதை அழைக்க கண்ணபிரான் சிறிது அருகே வந்து நின்று 'இதோ வந்தேன்; என்ன செய்யவேணும்?' என்ன 'பிரானே! என் இடுப்பின் மேலிருந்து கொண்டு ஒருமுலையை வாய்மடுத்து ஒரு முலையை நெருடிக்கொண்டு, இருமுலையும் முறை முறையாயேங்கி யேங்கி யிருந்துண்ணவேணுமென்றன்றோ நான் அபேக்ஷிக்கிறேன்; அதற்கு இசைந்துவரவேணுமென்றழைக்கிறாள்.

செங்கீ—செவ்வானம். குழந்தைகள் ஆகாசத்தில் சந்திரனைக்கண்டுவிரும்பி அவனைக் கையிற்பிடித்துத் தரும்படி அபேக்ஷிப்பதும், அவற்றின் உவப்புக்காகத் தாய் தந்தை முதலானோர் 'சந்திரமாமா! வா வா' என்றழைத்துப் போதுபோக்குவதும் உலகவியற்கை. எம்பெருமான் மநுஷ்யஸஜாதீயனாய் அவதரித்த காலத்தில் இந்த விருப்பத்தையும் கொண்டிருந்தனனென்பது பெரியாழ்வார் திருமொழியில் (1—4.) 'தன்முகத்துச் சுட்டி' என்னுந் திருமொழியிலும் விரிவாகக் காணத் தக்கது. ... ... ... ... .... ... 4

மைத்தகருங்குஞ்சிமைந்தா! மாமருதூடுநடந்தாய்
வித்தகனே! விரையாதே வெண்ணெய் விழுங்கும்விகிர்தா!
இத்தனைபோதன்றியென்றன் கொங்கைசுரந்திருக்ககில்லா*
உத்தமனே! அம்மமுண்ணாய் உலகளந்தாய்! அம்மமுண்ணாய்: 5

| | | | |
|---|---|---|---|
| மைத்த கரு குஞ்சி | கறுத்த திருக்குழல்களையுடைய | என்றன் கொங்கை | என்னுடைய ஸ்தனமானது |
| மைந்தா | சிறுக்கனே! | சுரந்து | பால்சுரந்து |
| மாமருதூடு | பெரிய மருதமரங்களினிடையே | இத்தனை போது அன்றி | இதுவரையிலிருந்தது போலல்லாமல் |
| நடந்தாய் | தவழ்ந்து சென்றவனே! | இருக்ககில்லா | இனி இருக்கமாட்டா; |
| வித்தகனே | ஆச்சரிய சக்திவாய்ந்தவனே! | உத்தமனே | சிறந்த குணசாலியே! |
| விரையாதே | ஸாவகாசமாக | | அம்மம் உண்ணாய்—; |
| வெண்ணெய் விழுங்கும் | வெண்ணெயை வாரி விழுங்கவல்ல | உலகு அளந்தாய் | உலகமளந்த பிரானே! |
| விகிர்தா | விலக்ஷணனே! | | அம்மம் உண்ணாய்—. |

* * *—அஞ்சனம் போன்று கறுத்துக் கண்ணுக்குக் குளிர்ந்த குழற்கற்றையையுடையவனே!, உரலோடுங் கட்டுண்டு தவழ்ந்து செல்லுமளவிலே இரட்டை மருதமரங்களினிடையே தவழ்ந்து சென்று அவற்றை முறித்துத் தள்ளி அவையாயிருந்த குபேரபுத்திரர்களையும் சாபத்தில் நின்றும் நீக்கி ஆச்சர்யசக்தியை ஆவிஷ்கரித்தவனே!, நான் வெண்ணெய்க்கலங்களை உறிகளிலே வைத்துச் சேமித்துக் கள்ளக்கயிறிட்டுப் படுக்கையில்போய்ச் சாயுமளவும் பதறாமேயிருந்து ஸாவகாசமாகப் பிறகு எழுந்து வெண்ணெயை வாரிவிழுங்குமவனே!, நான் முலைக்கடுப்

போதே நின்று கூப்பிடுகிறது கேட்டபோதன்றோ; இதுவரையிலும் ஒருவாறு பொறுத்துப் பாடாற்றியிருந்தேனாகிலும் இனி ஒரு நொடிப்பொழுதும் பாடாற்றகில்லேன்: நீ உத்தமனன்றோ? என் நோவைக்காட்டிலும் தாய்நோவு அறியுமவனன்றோ! [உத்தமாய்!] ஒருவரும் அபேக்ஷியாதிருக்கச் செய்தேயும் எல்லார் பக்கலிலும் போய் நின்றவனன்றோ நீ; இப்போது நான் அபேக்ஷிப்பது உனக்கு மிகையாயிற்றோ? பிரானே! சடக்கென வந்து அம்மமுண்ணாய் என்கிறாள்.

விந்தகன்—ஆச்சரியப்படத்தக்க குணசேஷ்டிதங்களையுடையவன்.

'விரையாதே வெண்ணெயை விழுங்கும்' என்றதில் இவனுடைய சாதுரியம் தோன்றும்: வெண்ணெயுண்பதில் பதற்றத்தினால் யசோதை படுக்கையிற் சென்று சாய்வதற்கு முன்னமே அவசரப்பட்டு எடுத்து விழுங்கிவிட்டுக் கையும் பிடியுமாய் அகப்பட்டுக் கொள்ளாதே ஆறப்பொறுத்து மெதுவாகச் சென்று வாரி விழுங்குவனாம். விந்தா!='விந்த' என்னும் வடசொல் திரிந்து விளியுருபு ஏற்றது; அச்சொல்—வேறுபட்டவனென்னும் பொருளுடையது; எங்கும் கண்டறியாத சாதுர்யமுடையவனே! என்றவாறு. ... .. ... 5

பிள்ளைகள்செய்வனசெய்யாய் பேசிற்பெரிதும்வலியை*
கள்ளமனத்திலுடையை காணவேதீமைகள்செய்தி*
உள்ளமுருகியென்கொங்கை ஓட்டந்துபாய்ந்திடுகின்ற*
பள்ளிக்குறிப்புச்செய்யாதே பாலமுதுண்ணநீவாராய். 6

| | | | |
|---|---|---|---|
| பிள்ளைகள் செய்வன செய்யாய் | (உன்னுடைய பிராயத்துப் பருவமுள்ள) பிள்ளைகள் செய்யும் தீம்புகளை நீ செய்கின்றிலை; | தீமைகள் செய்தி | தீம்புகளை செய்கின்றாய்; |
| பேசில் | உன்னைப் பற்றிச் சொல்வோமாகில், | என் உள்ளம் உருகி | என்னுடைய நெஞ்சு நீர்ப்பண்டமாகி |
| பெரிதும் வலியை | மிகவும் மிடுக்குடையையாயிரா நின்றாய்; | கொங்கை | முலைகளும் |
| மனத்தில் | நெஞ்சிலே | ஓட்டந்து பாய்ந்திடுகின்ற | பால் பெருகிப் பாயப்பெறுகின்றன; |
| கள்ளம் உடையை | கபடத்தை உடையையாயிரா நின்றாய் | பள்ளி குறிப்பு செய்யாதே | (கொட்டாவி விடுதல் முதலிய) தூக்கக் குறிப்புகளைச் செய்யாமல் |
| காணவே | (கண்டிக்கவேண்டியவர்கள்) பார்த்துக்கொண்டிருக்கும்படியாக | | பால் அமுது உண்ண நீ வாராய்—. |

* * *—கண்ணா! இத்திருவாய்ப்பாடியில் நீ ஒருவனேயன்று; "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர்நடையிட்டு வருவான்" என்கிறபடியே ஆயிரக்கணக்கான பிள்ளைகளுண்டிறே; அவர்களும் தீம்பு செய்யாதவர்களன்று; "பல்லாயிரவரிவ்வூரிற் பிள்ளைகள் தீமைகள் செய்வார்" என்கிறபடியே எல்லாரும் தீம்பு செய்பவர்களே; ஆயினும் நீ செய்கிற தீம்பு மற்ற பிள்ளைகள் செய்யுந் தீம்பைப்போன்றதன்று. பொதுப்படையாகச் சொல்லுங்கால் 'நீ மிகவும் மிடுக்குடையாய்' என்றே சொல்லத்தகும். நீ நெஞ்சில் நினைக்குமவை இன்னதென்று தெரிந்து கொள்ள வொண்ணாதபடி மிக்க கள்ள நெஞ்சனாயிருக்கின்றாய்; தீம்பு செய்வதில் நின்றும் உன்னைவிலக்கி சிக்ஷிக்க உரிமைப்பட்டவர்களும் மோவாய்க் கட்டையில் கையை வைத்துக்கொண்டு 'இது என்ன ஆச்சரியம்!' என்று வியந்து காணவேண்டும்படியான தீம்புகளைச் செய்யாநிற்கின்றாய். அத்தீமைகளைக் காணவே என் உள்ளம் உருகி முலைவழியே பாலாய்ப்புறப்படாநின்றது. நீயோ முலையுண்

பதில் விருப்பமற்று, கண்கள் சிவப்பது மூரிநிமிர்வது கொட்டாவிகொள்வது முதலான உறக்கக் குறிப்புகளைக் காட்டுகின்றாய்; இது தவிர்ந்து பால முதுண்ண வாராய் என்றழைக்கிறாள்.

கண்ணபிரான் செய்யுந் தீமைகளைப் பாசுரமிட்டுச் சொல்லில் கண்ணெச்சில் படுமென்று பொதுப்படையாகப் 'பிள்ளைகள் செய்வன செய்யாய்' என்றும், 'பேசில்பெரிதும் வலியை' என்றும் சொல்லுகிறாளென்றுணர்க. ... 6

தன்மகனாகவன்பேய்ச்சி தான்முலையுண்ணக்கொடுக்க*
வன்மகனாயவளாவிவாங்கி முலையுண்டநம்பி!*
நன்மகளாய்மகளோடு நானிலமங்கைமணாளா!*
என்மகனே! யம்மமுண்ணாய் என்னம்மம்சேமமுண்ணாயே. 7

| | | | |
|---|---|---|---|
| வல் பேய்ச்சி | நெஞ்சுடையளான பூதனையானவள் | நல் மகள் ஆய் மகளோடு | சிறந்த மகளாகிய நப்பின்னைப் பிராட்டிக்கும் |
| தன் மகன் ஆக | (உன்னைத்) தன் புத்திரன் போல அபிமானித்து | நானிலம் மங்கை மணாளா | பூமிப்பிராட்டிக்கும் வல்லபனானவனே! |
| தான் முலை உண்ண கொடுக்க | தான் தனது முலையை உன் வாயிலே மடுக்க, (அவ்வளவிலே) | என் மகனே | எனக்குப் பிள்ளையாக வாய்த்தவனே! |
| வல் மகன் ஆய் | வலிய ஆண்பிள்ளையாய் | அம்மம் உண்ணாய் —; | |
| அவள் ஆவி வாங்கி | அவளுயிரைக் கவர்ந்து | என் அம்மம் | எனது ஸ்தந்யமாகிற |
| முலை உண்ட நம்பி | அவளது முலையை உண்ட பிரானே | சேமம் உண்ணாய் | க்ஷேமத்தளிகையை உண்ணவேணும். |

* * *—பிரானே! உன்னைக்கண்ட பின்பும் நெஞ்சு நெகிழாத வன்மையையுடையளான பூதனையானவள் என்னுடைய வேஷத்தைப் பூண்டுகொண்டு பரிவு தோற்ற உனக்கு முலைகொடுக்கவந்தாள்; அதற்கு நீ மோசம்போகாதே அவளுடைய தீயபுத்தியைத் தெரிந்துகொண்டு அந்தச் சிறுபிராயத்திலேயே பெரிய ஆண்பிள்ளையாய் அவளுயிரை முலைவழியே உண்டு அவளை முடித்திட்டாய்; உன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை நான் அறியாதவளல்லேன்; நப்பின்னைப் பிராட்டிக்கும் பூமிப்பிராட்டிக்கும் வல்லபனாயிருக்கையாகிற உன் ஏற்றமெல்லாம் அறிவேன்; [என்மகனே!] ஆயினும், எனக்குப் பிள்ளையாகவாய்த்தாய் என்கிற ஸௌலப்யத்தையே பற்றுசாகக்கொண்டு பிரார்த்திக்கிறேன்—அம்மமுண்ணாய், என்னம்மம் சேமமுண்ணாய், என்கிறாள் யசோதைப்பிராட்டி.

மூன்றாமடியில், 'நன்மகள்' என்று தனியே பிரித்து ஸ்ரீமஹாலக்ஷ்மியைச் சொல்லுவதாக நிர்வஹித்தலுமாம்

நானிலமங்கை = நானிலம்—நான்காகிய நிலங்களையுடையதெனப் பூமிக்குக் காரணப்பெயர். நால்வகை நிலங்களாவன—முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் என்பன. காடும் காடுசார்ந்த இடமும் முல்லையெனப்படும்; மலையும் மலைசார்ந்த இடமும் குறிஞ்சியெனப்படும்; நாடும் நாடுசார்ந்த இடமும மருதமெனப்படும்; கடலும் கடல்சார்ந்த இடமும் நெய்தலெனப்படும். மற்றொன்றாகிய பாலை நிலம் பிராணி ஸஞ்சாரத்திற்கு உரியதன்றென்று இங்கு விலக்கப்பட்டது. அது நீரும் நிழலுமில்லாத கொடுநிலம். பாலைக்குத் தனியே நிலமில்லை யென்பதும் நால்வகை நிலங்களும் தத்தம் தன்மை கெட்டவிடத்தே பாலையா மென்பதும் சில ஆசிரியர் கொள்கை. இப்பாட்டில் நானில மென்றது ஸாமாந்யமாகப் பூமியைச் சொல்லக் கடவது ... ... ... ... ... ... 7

உந்தமடிகள்முனிவர் உன்னைநானென்கையிற்கோலால்*
நொந்திடமோதவுங்கில்லேன் உங்கள்தமாநிரையெல்லாம்*
வந்துபுகுதரும்போது வானிடைத்தெய்வங்கள்காண*
அந்தியம்போதங்குநில்லேல் ஆழியங்கையனே! வாராய். 8

| | | | |
|---|---|---|---|
| ஆழி அம் கையனே | திருவாழியினால் அழகுபெற்ற திருக்கையை யுடையவனே! (நீ செய்கிற தீமைகளைக் கண்டால்) | உங்கள் தம் ஆ நிரை எல்லாம் | உங்களுடைய பசுக் கூட்டங்களெல்லாம |
| உந்தம் அடிகள் | உங்கள் பிதாவாகிய நந்தகோபர் | வந்து புகுதரும் போது | (காடுகளில் மேய்ந்து) மீண்டு வந்து (ஊர்க்குள்) புகும் போது |
| முனிவர் | சீறுவர்; | | |
| நான் | நானென்றால் | வானிடை தெய்வங்கள் காண | ஆகாசத்திலுள்ள தேவதைகள் (எச்சிற்கண்ணால்) காணுமாறு |
| என் கையில் கோலால் | என் கையிலுள்ள கோமபினால் | அந்தியம்போது | மாலைப்பொழுதிலே |
| உன்னை நொந்திட மோதவும் கில்லேன் | உன்னை நோகும்படி அடிக்கவும் மாட்டேன்; | அங்கு நில்லேல் | நாற்சந்தியிலே நிற்க வேண்டா; |
| | | வாராய் | (என்னருகே) வந்திடாய். |

* * *—யசோதைப்பிராட்டி இப்படி வேண்டிவருந்தி யழைக்கச்செய்தேயும் கண்ணபிரான் இசைந்துவருதலின்றியே நாற்சந்திகளிலே விளையாட்டுப் பராக்காக நிற்க, அச்சமுறுத்தியழைக்கிறாள். "அஞ்சவுரப்பாள் அசோதை ஆணை விட்டிட்டிருக்கும்" என்கிறபடியே, யசோதை கொடுந்தண்டனைகள் செய்யகில்லாள்; ஆகையாலே அவன் இவளைக்கண்டால் தீம்பில் ஒன்று பத்தாகப் பண்ணப்பது வழக்கம்; ஆகவே, 'உன்னை நான் தண்டிக்கமாட்டேனாகிலும் உன் தகப்பனார் உன்னை லகுவாக விடமாட்டார்காண்' என்று அச்சமுறுத்துகிறாள் உந்தமடிகள் முனிவர் என்று உங்கள் முதலியோர் சீறுவர்கிடீர் என்கிறாள்.—உந்தம் என்று பன்மையாகச் சொன்னது வழக்கு பற்றிய வழுவமைதி. 'பயலே! உங்களண்ணை எங்கே?' என்றாற் போன்ற உலகவழக்குகள் காண்க.

'உந்தமடிகள் முனிவர்' என்று சொல்லும்போது யசோதை தன்கையிலும் தடி வைத்துக்கொண்டிருந்தாளாகையாலே அதனைக் கண்டு அஞ்சி ஓடிப்போய் விடுவனோ வென்று சங்கித்து, பிரானே! நான் அது செய்யகில்லேனென்கிறாள். என்கையில் கோலுள்ளது உண்மைதான்; ஆனால் இது கொண்டு காரியங்கொள்ளும்படியான வன்மை எனக்கில்லை காண் என்கிறாள்.

'யசோதாய்! அடிக்கமாட்டேனென்று நீ சொல்லுகிறபடியாலே அடிக்க வேண்டும்படியான குற்றம் ஏதோ என் பக்கல் உள்ளதுபோல் தோன்றுகின்றதே, அப்படி என்ன தீமை நான் செய்தேன்?' என்று கண்ணபிரான் கேட்க; கானகத்தில் மேயப்போன பசுக்களெல்லாம் மீண்டு ஊர்புகுங்காலமாகிய இம்மாலைப் பொழுதிலே ஆகாசத்திலே பார்த்துக்கொண்டு நிற்கிற துர்தேவதைகள் எத்தனையுண்டு!, அவற்றின் கண்பட்டால் என்னாகும்!, இஃது உணராதே இந்தப் பொழுதிலே அவ்விடத்தே நிற்கின்றாயே; இது தகுதியோ? என்றாள்;

அதுகேட்ட கண்ணபிரான், '*வானிடைத் தெய்வங்களுக்கோ நீ அஞ்சுவது; உன் அச்சம் அழகிதாயிருக்கிறது!; என்கையில் திருவாழியைக் கண்டிலையோ? நீயே முன்பு அம்புலியை நோக்கி "ஆழிகொண்டுன்னை யெறியும் ஐயுறவில்லைகாண், வாழவுறுதியேல் மாமதீ! மகிழ்ந்தோடிவா" என்று சொல்லியிருக்கிறாயே, என்கையில் திருவாழியை மறந்திட்டாயோ?' என்று, முன்பு வஸுதேவ தேவகிகளின் வேண்டுகோளுக்கிணங்கி மறைத்திட்ட திவ்யாயுதத்தைச் சற்று

யின்னச்செய்தருளினன் கண்ணபிரான். 'ஆழியங்கையனே! வாராய்' என்கிறாள். இந்த திவ்யாயுதச்சேர்த்திக்கு ஒரு தீங்கு நேரிடாமே வந்துசேர் என்கிறாள். 'வடிவார் சோதிவலத்துறையுஞ் சுடராழியும் பல்லாண்டு' என்னுமவர்களிறே.

கீழ்ப்பாசுரங்களிற்போலே இப்பாசுரத்தில் 'அம்மமுண்ண' என்பதின்றியே 'வாராய்' என்று மாத்திரம் உள்ளது: நீ முலையுண்ணுதொழிலில் ஒழி; உனக்கொரு அவத்யம் விளையாதபடி அவ்விடத்தைவிட்டு இவ்விடத்தே வந்து சேர்ந்தாற் போதும் என்பது உட்கருத்து. ... 8

பெற்றத்தலைவனெங்கோமான் பேருளாளன்மதலாய்!*
சுற்றக்குழாத்திளங்கோவே! தோன்றியதொல்புகழாளா!*
கற்றினந்தோறுமறித்துக் கானந்திரிந்தகளிறே!*
எற்றுக்கென்னம்மமுண்ணாதே யெம்பெருமானிருந்தாயே? 9

| | | | |
|---|---|---|---|
| பெற்றம் தலைவன் | பசுக்களுக்குத் தலைவனே! | கானம்தோறும் | காடுகள் தோறும் |
| எம் கோமான் | எங்கள் பெருமானே! | கன்று இனம் | கன்றுகளின் கூட்டங்களை |
| பேருளாளன் மதலாய் | மஹாதயாளுவான நந்தகோபருடைய திருக்குமாரனே! | மறித்து | மடக்கி மேய்த்து |
| சுற்றம் குழாம் இளங்கோவே | பந்து ஸமூஹத்துக்கெல்லாம் யுவராஜரானவனே! | திரிந்த | உலாவின |
| தோன்றிய தொல் புகழாளா | எங்கும் பரவி விளங்குகின்ற நித்ய கீர்த்தியை யுடையவனே! | களிறே | கஜராஜமே! |
| | | எம்பெருமான் | எனக்குப் பெருமையை விளைப்பவனே!; |
| | | எற்றுக்கு | எதுக்காக |
| | | என அம்மம் உண்ணாதே இருந்தாய் | என் முலைப்பாலை உண்ணமலிருக்கின்றாய்?. |

* * *– முதலடி முழுவதையும் ஒரே விளியாகக் கொள்ளலாம் போலத் தோன்றுமாயினும் மூன்று விளிகளாகவே கொள்க. பசுக்களுக்குத் தலைவனும் எங்களுக்குக் கோமானும் பரமதயாளுவாயுமிருக்கிற நந்தகோபனுடைய மகனே! என்று (ஏகஸம்போதநமாகக் கொண்டு) பொருள் சொல்லிவிடக்கூடுமாயினும், அக்கண்ணபிரான் தானே மேல்விழுந்து வந்து முலையுண்பதற்காக அவனைப் புகழ்ந்து பேசும் ப்ரகரணமாதலால் மூன்று விளிகளாகப் பிரிந்து பொருள்படத் தகும். பெற்றத்தலைவன்! என்றது அண்மைவிளி; பசுக்களுக்கெல்லாம் ரக்ஷகனே! என்றபடி. அந்த பசுக்களில் வாசியற்ற எங்களுக்கும் ரக்ஷகனே! என்கிறது இரண்டாவது விளி.

பேருளாளன் என்பதையும் தனியே பிரித்து அண்மைவிளியாகக் கொண்டு 'பேருளாளனே!' என்றும், மதலாய்!—குமாரனே! என்றும் பொருள் கொள்ளலாமாயினும், பெரியவாச்சான்பிள்ளை இங்ஙனே யருளிச்செய்யாமையாலே 'பேருளாளன் மதலாய்!' என்றவளவும் ஒருவிளியாகச் கொள்ளத்தக்கது. முற்காலத்தில் [கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் வந்து சேர்வதற்குமுன்] நந்தகோபர்க்குப் 'பேருளாளன்' என்றே ப்ரஸித்தமாகப் பெயர்வழங்குமாம். பேருளாளனென்றால் எல்லாப் பொருள்களிடத்தும் ஈரநெஞ்சு இளநெஞ்சு பொருந்தியவன் என்று பொருள். நந்தகோபர் பசும்புல்மேல் நடந்தாலும் தரையில் காலூன்றாதே 'எந்த ஜந்துவுக்கு என்ன நலிவுநேருமோ' என்று அஞ்சியே மெதுவாக நடப்பவராம். இந்தத் தன்மை எதுவரையில் ?—கண்ணபிரான் தனக்குத் திருக்குமாரனாகவந்து பிறக்கும்வரையில். அதற்குப் பிறகோ வென்னில், அந்ததயாளுத்வம், 1. "கூர்வேற் கொடுந்தொழிலன் நந்தகோபன்" என்னும்படியினால், தொட்டிலின்கீழ் ஓர் சிற்றெறும்பு ஊர்ந்தாலும் புலியின்மேற் பாயுமாபோலே வேற்படையைத் தீட்டிக் கொண்டு பாய்வனும். ஆகவே, இங்குப் பேருளாளனென்றது முன்னையநிலைமை பற்றியென்க. காதில் தோடுகழற்றினாலும் தோடிட்டகாது என்னலாமிறே.

மதலாய்—'மகனே' என்பதன் ஈறுதிரிந்த விளி. [சுற்றத்தார்க்கெல்லாங்கோவே!] பந்துவர்க்கத்திலுள்ளவர்கட்கெல்லாம் இளவரசாகத் தலைவப்படுமவனே! என்கை. [தோன்றிய தோள்புகழாளா!] தாய்தந்தையர் வார்த்தையைத் தவறாதவன் என்று தொல்லைக்காலமுன்னமே [ஸ்ரீ ராமாவதாரத்தில்] புகழ்படைத்தவனல்லையோ நீ: இப்போது நானழைப்பதற்கு இசைந்துவந்து அம்மமுண்ணாவிடில் உன் தொல் புகழ்க்குக் குறையாகுங்கிடாய் என்றுணர்த்துகிறபடி.

[கானந்தோறுங் கற்றினம்மேய்த்துத்திரிந்தகளிறே] "காடுகளூடுபோய்க் கன்றுகள் மேய்த்து மறியோடி" என்கிறபடியே ஒன்றிரண்டு காடுகளன்றிக்கே, உள்ள காடுகள் தோறும் திரள்திரளான கன்றுகளை மேய்த்து ஒருமத்தகஜம் உலாவுமா போலே உலாவினவனே!; அந்த விடாயெல்லாந் தீர அம்மமுண்ண வேண்டுவது ப்ராப்தமாயிருக்க ஏன் அஃதுண்ணாமே திரிகிறாய்? உன்னுடைய விடாய் தீர்வதற்காகவும் நீ முலையுண்ண வேணும்; நான் தரிப்பதற்காகவும் நீ முலையுண்ண வேணுங்காண். ... ... ... ... .... 9

இம்மையிடர்கெடவேண்டி யேந்தெழில்தோட் கலிகன்றி *
செம்மைப்பனுவல்நூல்கொண்டு செங்கணெடியவன்றன்னை *
அம்மமுண்ணென்றுரைக்கின்ற பாடலிவையைந்துமைந்தும் *
மெய்ம்மையேமனத்துவைத்தேத்த விண்ணவராகலுமாமே. 10

| | | | |
|---|---|---|---|
| எழில் ஏந்து தோள் கலிகன்றி | அழகை ஏந்தியிருக்கின்ற தோள்களையுடையரான திருமங்கையாழ்வார் | அம்மம உண் என்று உரைக்கின்ற இவை பாடல் ஐந்தும் ஐந்தும் | 'முலைப்பாலுண்ண வா' என்று அழைப்பதான இப் பத்துப் பாசுரங்களையும் |
| இம்மை இடர் கெட வேண்டி | இப்பிறவியிலுண்டானரெல்லாம் அழிய வேண்டி | | |
| செம் கண் நெடியவன் தன்னை | புண்டரீகாக்ஷனை ஸர்வேச்வரனை நோக்கி | மெய்ம்மை | யதார்த்தமான அன்பு பொலிய |
| | | மனத்து வைத்து | நெஞ்சிற்கொண்டு |
| செம்மை நூல் பனுவல் கொண்டு | சிறந்த சாஸ்த்ரமாகிய அருளிச்செயலைக்கொண்டு | ஏத்த | அநுஸந்திக்குமளவில் |
| | | விண்ணவர் ஆகலும் ஆம் | [illegible]வும் அவர்கட்கு நேரும். |

* * '—யசோதைப் பிராட்டியானவள் கண்ணபிரானை அம்மமுண்ண அழைத்தபடி அவளுடைய தன்மையை ஏன்றுகொண்டு திருமங்கையாழ்வார் பாடின இப்பாசுரங்களை மெய்யன்புடன் அநுஸந்திப்பவர்கள் நித்யஸூரிகளோடொக்கும்படியான தரம் பெறலாமென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

'இம்மையிடர்கெடவேண்டி' என்றதற்குப் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்யும் பொருளின் சீர்மையைக் குறிக்கொண்மின் ;—

"இவள் முலை கொடுத்தல்லது தரியாதாப் போலே ஆழ்வார் கவிபாடியல்லது தரியாதாராய்ப் பாடின கவியாயிற்று"

என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. ஆழ்வார் இப்பாசுரங்களை வாய்விட்டுப் பாடாவிடில் இடர்படுவர்; அவ்விடர் உண்டாகாதபடி கவிபாடினரென்க. 10

அடிவரவு.—சந்தம் வங்கம் திருவில் மக்கள மைத்த பிள்ளைகள் தன்மகன் உந்தம் பெற்றம் இம்மை பூங்கோதை.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—ஐந்தாந்திருமொழி—பூங்கோதையாய்ச்சி.

உரையவதாரிகை:—யசோதைப்பிராட்டி கண்ணபிரானை அம்மமுண்ணவா வென்றழைத்தபடியை ஆழ்வார்தாமும் தம்மை அவளாகப்பாவித்து அங்ஙனமே பேசியநுபவித்தார் கீழ்த்திருமொழியில். குழந்தைவிளையாடல்களில் 'சப்பாணி கொட்டுதல்' என்பது ஒருவிளையாட்டு; அதாவது, ஒருகையோடு மற்றொருகையைச் சேர்த்துக் கொட்டுதல். அவ்விளையாட்டை அக்காலத்தில் யசோதைப்பிராட்டி பிரார்த்தித்து அநுபவித்ததைப் பிற்காலத்தில் பெரியாழ்வார் "மாணிக்கக்கிண்கிணியார்ப்ப" என்னுந் திருமொழியிலே அநுகரித்து அநுபவித்தாப்போலே இவ்வாழ்வாரும் அவ்விளையாட்டை அநுபவிக்கிறார் இத்திருமொழியில். கீழ்த்திருமொழிபோலே இதுவும் யசோதைப் பிராட்டிபேசுகிற பாசுரமாகவே செல்லுகிறது. * * * * * *

பூங்கோதையாய்ச்சி கடைவெண்ணெய்புக்குண்ண *
ஆங்கவளார்த்துப் புடைக்கப்புடையுண்டு *
ஏங்கியிருந்து சிணுங்கிவிளையாடும் *
ஓங்கோதவண்ணனே! சப்பாணிஒளிமணிவண்ணனே! சப்பாணி. 1

| | | | |
|---|---|---|---|
| பூங்கோதை | புஷ்பங்களணிந்த மயிர் | புடை உண்டு | அடிபட்டு |
| ஆய்ச்சி | முடியையுடையவளான யசோதையினால் | ஏங்கி இருந்து | (சற்றுப்போது) அழுது கொண்டிருந்து (பிறகு) |
| கடை | கடையப்பட்ட | சிணுங்கி | சீராட்டப்பெற்று |
| வெண்ணெய் | வெண்ணெயை | விளையாடும் | விளையாடுகின்ற |
| புக்கு உண்ண | (கள்ளத்தனமாய்ப்) புகுந்து அமுது செய்தவளவில் | ஓங்கு ஓதம் வண்ணனே | தேங்கின கடல்போன்ற வடிவையுடையவனே! |
| அவள் | அந்த யசோதை | சப்பாணி | சப்பாணி கொட்டவேணும்; |
| ஆங்கு | அவ்விடத்திலேயே | ஒளி மணி | ஒளிபொருந்திய மணி |
| ஆர்த்து | (தாம்பினால்) கட்டி | வண்ணனே | போன்ற நிறமுடையவனே! |
| புடைக்க | அடிக்க | | சப்பாணி—. |

* * *—யசோதைப்பிராட்டி பேசுகிற இப்பாசுரத்தில் 'பூங்கோதையாய்ச்சி' என்று வந்தது, தன்னையே படர்க்கையாகச் சொல்லிக்கொண்டபடி. பெரியாழ்வார் திருமொழியில் 'சீதக்கடல்' என்னுந் திருமொழியில் இப்படி அடிக்கடி வருதல் காண்க. அன்றியே, ஆழ்வார் யசோதைபேசும் பாசுரமாக அருளிச்செய்தாலும் தாமான தன்மையும் இடையிடையே தோன்றி, அதனால் யசோதையைப் படர்க்கையாகக் குறிக்கின்றார் என்னவுமாம்.

யசோதைப்பிராட்டி கடைந்த வெண்ணெயைக் கள்ளவழியால் வாரிவிழுங்கினவளவிலே அவள் பிடித்துக்கொண்டு * கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டிப் புடைக்க, அதனால் சிறிதுபோது வருந்திக்கிடந்து, பின்னையும் அவள் சீராட்ட அதனால் விளையாட்டிலே இழிகின்ற கடல்வண்ணனே! சப்பாணி கொட்டவேணும் என்று பிரார்த்திக்கிறது.

யசோதை தயிர்கடையும்போது தன் மயிர்முடியை மலர்களிட்டு அலங்கரித்துக் கொண்டே கடைவளாம்: ஏன்? கண்ணபிரானுக்கு அனுக்கம் உண்டாகாமைக்காக. அலங்காரங்களின்றியே இடைச்சாதிக்குரிய 'ஜல்லாரிபில்லாரி' வேஷங்களுடனே கிடந்தால் கண்ணன் அணுகுவதற்கு அஞ்சுவன் போலும். ஆகவே 'பூங்கோதையாய்ச்சி' எனப்பட்டது.

'கடைவெண்ணெய்' என்பது முக்காலத்துக்கும் பொது; கடையப்பட்ட வெண்ணெய், கடையப் படுகிற வெண்ணெய், கடையப்போகிற வெண்ணெய் என்று முக்காலத்துக்கும் பொதுவாக இருந்தாலும் எதிர்காலப்பொருள் பிரகரணத்துக்குச் சேராதாகையால் இறந்தகாலப் பொருளும் நிகழ்காலப் பொருளுமே கொள்ளத்தக்கவன; அவற்றிலும் நிகழ்காலப்பொருள் கொள்வதே இன்சுவை யென்று பெரியவாச்சான்பிள்ளை திருவுள்ளம்பற்றுகிறார்;—"கடைந்து திரட்டிச் சேமித்துவைத்தபின்பு களவுகாண்கை யன்றிக்கே கடைகிறபோதே நிழலிலே யொதுங்கிக் களவுகண்டாயிற்று அமுது செய்வது" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி.

ஏங்கியிருந்து=யசோதை தாம்பினால் தன்னைக் கட்டிப்போட்டிருக்குங் காலத்தில் கண்ணபிரான் ஏங்கியழுவது பாதை பொறுக்கமாட்டாமையாலன்று; திருவாய்ப்பாடியில் ஆங்காங்கு வேண்டியபடியே திரிந்து தீம்பு செய்ய முடியாதபடி கட்டிப்போட்டுவைத்திருக்கிறாளே! எனவருந்துவனென்க. பெரிய திருவிழாக்களில் கள்ளர்களைப் பிடித்துச் சிறைப்படுத்தினால் அவர்கள் ஏங்கியழுது வருந்தக் காண்கிறோம்; 'அவமானகரமான சிறையிருப்பு நமக்கு நேர்ந்ததே!' என்று வருந்துகிறாரல்லர்; அருளிச்செயல் கோஷ்டியிலும் வேதபாராயண கோஷ்டியிலும் அந்வயித்துக் கைங்கரியம் பண்ணத் தடையாயிற்றே யென்றும் வருந்துகிறார்: பெருமாளை முன்னும் பின்னும் ஸேவிக்க ப்ராப்தியில்லையாயிற்றே என்றும் வருந்துகிறாரல்லர். உறங்குவார் கையில் வளைகளைக் கழற்றவும் ஓடுவார் கழுத்தில் மணிகளையறுக்கவும் இப்படி பலவகைக் கொள்ளைகளை வேண்டினபடி செய்து திரிய வொண்ணாதபடி சிறைப்படுத்திவிட்டார்களே யென்றுதான் வருந்துவர்கள்; அதுபோலவே கண்ணபிரானும் திருவாய்ப்பாடியில் கொள்ளைகள் நடத்தத் தடையாயிற்றே யென்பதுகாரணமாகவே வருந்திக்கிடப்பனும்.

யசோதைதானும் * ஆடவிட்டிட்டிருக்குமவளாகையாலே அவனுடைய கொள்ளைகளுக்கு நெடுகத் தடை செய்யமாட்டாளே; "வண்ணக் கருங்குழல் மாதர்வந் தலர்தூற்றிடப், பண்ணிப்பலசெய் திப்பாடியெங்குந் திரியாமே, கண்ணுக்கினியானைக் கானதரிடைக் கன்றின்பின், எண்ணற்கரியானைப் போக்கினேனெல்லே பாவமே" என்று வயிறுபிடிப்பவளாகையாலே. அவன் தீமை செய்யப் பெறாது சிறைப்பட்டு வருந்துவதைக்கண்டு ஆற்றகில்லாதவளாய் உடனேசீராட்டத் தொடங்குவள், அதனால் பழையபடியே விளையாட்டில் கைவைக்கத் தொடங்குவனும்; அது சொல்லுகிறது சிணுங்கி விளையாடும் என்று.

சப்பாணி=ஸஹ, பாணி என்ற இரண்டு வடசொற்கள் சேர்ந்து சப்பாணி யென விகாரப்பட்டு வந்ததென்பர்; 'ஒருகையுடன் கூட' என்று பொருள்; இத்தொடர் மொழி—ஒருகையுடன் கூட மற்றொருகையைச் சேர்த்துக் கொட்டுதலாகிய விளையாட்டைக் காட்டும். ... .... ... .... 1

தாயர்மனங்கள் தடிப்ப*தயிர்நெய்யுண்
டேயெம்பிராக்கள்! இருநிலத்தெங்கள்தம் *
ஆயரழக! அடிகளரவிந்த
வாயவனே! கொட்டாய் சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய் சப்பாணி. 2

| | | | |
|---|---|---|---|
| தாயர் மனங்கள் தடிப்ப | தாய்மாருடைய நெஞ்சு துடிக்கும்படியாக | ஏய் எம்பிராக்கள் | பொருத்தமான காரியம் செய்ததாக நினைத்திருக்கிற எம்பெருமானே! |
| தயிர் நெய் உண்டு | தயிரையும் நெய்யையும் வாரி யமுதுசெய்து | இரு நிலத்து | விசாலமான இப்பூமண்டலத்திலே |

| | | | |
|---|---|---|---|
| எங்கள் தம் ஆயர் | எங்கள் இடைச்சாதிக்குள்ளே | அடிகள் வாய வனே | திருவடிகளையும் திருமுகத்தையுமுடையவனே! சப்பாணி கொட்டாய்—; |
| அழக | அழகிற் சிறந்தவனே! | மால் வண்ணனே | கரிய திருமேனியனே! |
| அரவிந்தம் | தாமரைப் பூப்போன்ற | | சப்பாணி கொட்டாய்—. |

***—பெற்றதாய், வளர்த்ததாய் என்று சொல்லப்படுகிற தாய்மாருடைய நெஞ்சு துடிக்கும்படியாக [—அதாவது, அளவில்லாமல் வாரிவிழுங்குகிறானே, இத்தனையும் இவனுக்கு ஜரிக்கமாட்டாதே, வயிற்றுக்கு வலியாகுமே! என்று நெஞ்சுளுக்கும்படியாக]த் தயிரையும் நெய்யையும் களவுகண்டு புஜித்து, இப்படி செய்தோமே! என்று வெட்கப்படாதே 'பொருத்தமான காரியமே செய்தோம்' என்றிருக்கிற பெருமானே!, இந்நிலவுலகின் கண் எங்களிடைச் சாதியிலுள்ளாரில் மிக்க அழகையுடையவனே!, திருவடிகளும் திருவதரமும் செவ்வித்தாமரைபோலே யிருக்கப்பெற்றவனே!, அதற்குப் பரபாகமாகக் கரிய திருமேனியுடையவனே! சப்பாணி கொட்டவேணும்.

இரண்டாமடியின் முதற்பதம் ஏய் என்று பிரியும். ஏய்தல்—பொருந்துதல், நிறைதலுமாம். தயிரையும் நெய்யையுமுண்டு வயிறு நிறையப்பெற்ற என்னவுமாம்.

'அரவிந்தாயவனே' என்றும் பாடமுளதாக வியாக்கியானங்காண்கிறது; அப்போது, திருவடிகள் தாமரையாயிருக்கிறவனே! என்று பொருள்காண்க.

மால்வண்ணனே!='மால்' என்று கருமைக்கும் வியாமோஹத்திற்கும் பெயர்; வியாமோஹமே வடிவெடுத்திருப்பவனே! என்னவுமாம். ... ... 2

தாமோருநட்டித் தயிர்நெய் விழுங்கிட்டு *
தாமோ தவழ்வரென் றாய்ச்சியர் தாம்பினால் *
தாமோதரக்கையா லார்க்கத் தழும்பிருந்த *
தாமோதரா! கொட்டாய் சப்பாணி தாமரைக்கண்ணனே! சப்பாணி 3

| | | | |
|---|---|---|---|
| தா | தாவி | ஆய்ச்சியர் தாம் | இடைச்சிகள் |
| மோர் உருட்டி | மோர்ப்பானைகளை உருட்டி விட்டு | தாம்பினால் ஆர்க்க | தாம்பால் கட்டவும் |
| தயிர் நெய் விழுங்கிட்டு | தயிரையும் நெய்யையும் விழுங்கிவிட்டு | கையால் மோதர | கைகளால் அடிக்கவும் |
| தாமோ தவழ்வர் என்று | 'இப்படி பெரிய காரியத்தைச் செய்தவரோ (ஒன்று மறியாத குழந்தை போலத்) தவழ்கின்றார்' என்று சொல்லி | தழும்பு இருந்த தாமோதரா | அதனால் காய்ப்பேறிக் கிடக்கின்ற தாமோதரனே! சப்பாணி கொட்டாய்—; தாமரைக் கண்ணனே சப்பாணி—. |

***

ரத்திலும் ெ ... உறங்குவார்கள்; கண்ணபிரான் ஆங்காங்கு ... லே சென்று கையால் தடவிப்பார்ப்பன்; மோர்க்குடம் கைப்பட்டவாறே வெறுத்து உருட்டி விடுவன்; தயிரும் நெய்யும் கைப்பட்டவாறே வாரி விழுங்கிடுவன்; பின்னை 'இந்தப் பூனையா இந்தப்பாலைக் குடித்தது!' என்னவேண்டும்படி ஒன்று மறியாதவன் போலத் தவழ்நடையிடத் தொடங்குவன்; சில குறிப்புகளாலே ஆய்ச்சியர் உணர்ந்தெழுந்து சென்று சேமித்து வைத்திருந்தவற்றை நோக்கினவாறே குறியழிந்திருப்பதையும் மோருருண்

டிருப்பதையுங்கண்டு கண்ணபிரானை இது கொள்ளைகொண்டிருக்கவேணுமென்று நிச்சயித்து இவனைத் தேடி வந்தயாரேனும் இவன் ஒருபாவமுமறியாதவன் போன்று தவழ் நடையிட்டிருக்குமிருப்புக் கண்டு 'இத்தனைகாரியஞ்செய்த இந்த மஹாநுபாவர் தவழ்கிறாரோ!' என்று சொல்லித் தாம்புகளாற் கட்டியும் கையாலடித்தும் சில நலிவுகளைப்பண்ண அதனால் திருமேனி நிறையக் காய்ப்புக்காய்த்து இதுவே நிரூபகமாகத் தாமோதரனென்று திருநாமம் படைத்தவனே! சப்பாணி கொட்ட வேணும்.

முதலடியில் 'தாவி' என்பது 'தா' என்று குறைந்து கிடக்கிறது. [மோது நட்டி] "மோரார்குட முருட்டி" என்றார் சிறியதிருமடலிலும். ... ... 3

பெற்றார் தளைகழலப் பேர்ந்தங்கயலிடத்து *
உற்றாரொருவருமின்றி யுலகினில் *
மற்றாருமஞ்சப்போய் வஞ்சப்பெண் நஞ்சுண்ட *
கற்றாயனே! கொட்டாய் சப்பாணி கார்வண்ணனே! கொட்டாய் சப்பாணி. 4

| | | | |
|---|---|---|---|
| பெற்றார் | தாய் தந்தையருடைய | வஞ்சப் பெண் நஞ்சு உண்ட | (வஞ்சனையுடையவளாக வந்த பூதனையின் (முலையில் தடவியிருந்த விஷத்தை அமுதுசெய்தருளின |
| தளை | கால்விலங்கு | | |
| கழல | கழன்று விழும்படி | | |
| பேர்ந்து | வந்தவதரித்து | | |
| அங்கு | அவ்விடத்தில் | கன்று ஆயனே | கோபாலகிருஷ்ணனே! சப்பாணி கொட்டாய்- |
| அயலிடத்து உற்றார் ஒருவருமின்றி | நெருங்கின உறவுமுறையார் ஒருவருமில்லாமற்போக | கார் வண்ணனே | காளமேகநிறத்தனே! சப்பாணி கொட்டாய்—. |
| உலகினில் மற்றாரும் அஞ்ச | உலகத்திலுள்ள எல்லாரும் அஞ்சும்படியாக | | |

***—தேவகியின்வயிற்றிற் பிறக்கும் பிரஜையினால் தனக்கு மரணமுண்டாகுமென்று ஆகாசவாணியினலறிந்த கம்ஸன் அவளைக் கத்தியினால் வெட்டிக் கொல்லப்புகுந்தபோது நல்வார்த்தைகளால் ஒருவாறு ஸமாதானமடைந்து வஸுதேவதேவகிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்துவைக்க, "மக்களறுவரைக்கல்லிடை மோத இழந்தவள் தன்வயிற்றில், சிக்கனவந்து பிறந்து நின்றாய்" என்கிறபடியே கண்ணபிரான் திருவவதரித்தவுடனே அவ்விலங்கு முறிபட்டுக் கழன்றொழிந்ததென்று இதிஹாஸ புராணங்கள் கூறுவதால் 'பெற்றார்தளைகழல' எனப்பட்டது. "தந்தைகாலில் பெருவிலங்கு தாளவிழ நள்ளிருட்கண் வந்த வெந்தை" "தந்தை காலில் விலங்கற வந்து தோன்றிய தோன்றல்" என்றவையுங்காண்க.

பேர்ந்து என்றது "நாகபர்யங்க முத்ஸ்ருஜ்ய ஹ்யாகதோ மதுராம் புரீம்" என்கிறபடியே திருப்பாற்கடலில் நின்றும் திருவடமதுரைக்கு வந்தபடியைச் சொல்லுகிறது. பேர்தலாவது—முன்னிருந்த இருப்பில் நின்றும் வேறொரு இருப்பைக் கொள்ளுதலாம்.

அயலிடத்து உற்றாரொருவருமின்றி—அயலிட மென்றது வேறொரிடமென்றபடியன்று; மிகவும் நெருங்கின ஸமீபஸ்தலத்தை அயலிட மென்பது பெரும்பான்மையான இலக்கனவழக்கம். ஆகவே 'அயலிடத்து உற்றார்' என்றது ஸமீப பந்துவைச் சொன்னபடி. நெருங்கின உறவுமுறையாரும் மற்றும் ஸாமாந்யரான உலகத்து உறவு முறையாரும் இல்லாதஸமயத்திலே பூதனைமுலைகொடுத்துக் கொல்லவர, அவளை நஞ்சுண்டு முடித்த கோபாலக்ருஷ்ணனே! சப்பாணி கொட்டவேணும் என்கை.

இனி, முதலடிக்கு வேறுவகையாகவும் பொருள் கொள்ளலாம்; பெற்றார்தளை கழல—(மதுரையில் வந்து பிறந்தவாறே) தந்தை தாயர்களின் கால்விலங்கு இற்று முறிந்து விழுந்ததும், அங்கு—அந்த மதுரையில் நின்றும், அயலிடத்துப் பேர்ந்து—('ஒருத்திமகனாய்ப்பிறந்து ஓரிரவிலொருத்திமகனாயொளித்துவளர' என்கிறபடியே) அசலிடமான திருவாய்ப்பாடிக்குச் சென்று—என்னவுமாம்.

கன்று + ஆயன், கற்றாயன். ... ... ... ... 4

சோத்தென நின்னைத் தொழுவன்வரந்தர *
பேய்ச்சிமுலையுண்ட பிள்ளாய்! * பெரியன
ஆய்ச்சியரப்பம்தருவர் * அவர்க்காகச்
சாற்றியோராயிரம்சப்பாணி தடங்கைகளாற்கொட்டாய் சப்பாணி. 5

| | | | |
|---|---|---|---|
| பேய்ச்சி முலை உண்ட பிள்ளாய் | பூதனையின் முலையை உறிஞ்சியுண்ட கண்ணபிரானே!, | தொழுவன் | தொழுகின்றேன்; |
| வரம் தர | என் கோரிக்கையை நீ நிறைவேற்றுதற்காக உனனை | ஆய்ச்சியர் | இடைச்சிகள் |
| சோத்தம் என | சோத்தமென்று சொல்லிக்கொண்டு | பெரியன அப்பம தருவர் | பெரிய அப்பங்களை உனக்குக் கொடுப்பர்கள்; |
| | | அவர்க்காக சாற்றி | அவர்களுக்காகவென்று ஒரு வியாஜமிட்டு |
| | | | ஓர் ஆயிரம் சப்பாணி—; |
| | | | தடங் கைகளால் சப்பாணி கொட்டாய்—. |

* * *—பூதனையின் முலையைச் சுவைத்துயிருண்ட மைந்தனே! என்வார்த்தையை ஆதரித்து நீ சப்பாணி கொட்டுதலாகிற என் அபேக்ஷிதத்தைத்தலைக்கட்டும்பொருட்டு 'சோத்தம்' என்றுசொல்லி உன்னைத் தொழுகின்றேன்; சப்பாணிகொட்டவேணும் என்றுசொல்ல, 'நீ தொழுதாலென்ன? தொழாவிடிலென்ன; எனக்கு வேண்டியது கிடைக்குமாகையில் உன்சொற்படி செய்கிறேன்' என்று கண்ணன் சொல்ல, அதுகேட்ட யசோதை 'குழந்தாய்! அப்படியேயாகிறது; அதற்கென்ன குறை? இதோபார், பலபல ஆய்ச்சிகள் உனக்குக் கொடுப்பதற்காகப் பெரியபெரிய அப்பங்களையெடுத்துக்கொண்டு வந்திருக்கின்றார்கள் காண்; சப்பாணிகொட்டுவாயாகில் உனக்குத் தந்திடுவர்கள்' என்று சொல்ல அதுகேட்ட கண்ணபிரான் 'எனக்கு நீ கொடுப்பது ஒன்றுமில்லையே; அவர்கள் அப்பங்கொடுப்பதற்கு உன் அப்பனை யென்ன? அப்பங்கொடுப்பவர்கள் அவர்களாகில் அவர்கள் விரும்பினால் அவர்கட்காகச் சப்பாணி கொட்டுவேன்; நீ வந்து வெறுங்கையை முழம்போடுவதென்?' என்று சொல்ல, 'பிரானே! எனக்காக வேண்டா; அப்பங் கொடுக்கவல்ல ஆய்ச்சிகட்காகவே சப்பாணி கொட்டு' என்கிறாள்.

சோத்தம் என = சோத்தென; விகாரப்புணர்ச்சி. அஞ்ஜலிபண்ணுமவர்கள் தாழ்ச்சி தோற்றச் சொல்லுவதொரு சொல் சோத்தம் என்பது. ஆயிரம் சப்பாணி = அப்புறம் கையுமாய் வந்து திரண்டிருக்கின்ற ஆய்ச்சிகள் ஆயிரக் கணக்காயிருப்பதால் ஒவ்வொரு அப்பத்துக்கு ஒவ்வொரு சப்பாணி விழுக்காடு ஆயிரம் சப்பாணி கொட்டவேணுமென்கிறாள் போலும்.

'அவர்க்காகச் சாற்றி' என்றது "நாங்கள் நம்பாவைக்குச் சாற்றி நீராடினால்" என்றது போலவென்க. அவர்களுக்காகச் சப்பாணி கொட்டுகிறேனென்று சொல்லிக்கொண்டு என்றவாறு. ... ... ... 5

கேவலமன்றுன் வயிறு* வயிற்றுக்கு
நானவலப்பம் தருவன்* கருவிளைப்
பூவலர்நீண்முடி நந்தன்தன்போரேறே!*
கோவலனே! கொட்டாய்சப்பாணி குடமாடீ! கொட்டாய்சப்பாணி 6

| | | | |
|---|---|---|---|
| கருவிளைப்பூ அலர் | காக்கணம் பூவைக் காட்டு கின்ற நிறமுடையவனே! | நான் வயிற்றுக்கு அவல் அப்பம் தரு வன் | (உனது பெரிய) வயிற்றுக் குப் போதும்படியாக அவ லும் அப்பமும் நான் தரு வேன்; |
| நீள் முடி | நீண்ட திருவபிஷேக முடைய வனே! | | |
| நந்தன் தன் போர் ஏறு | நந்தகோபன் வளர்க்கவளர்ந்த செருக்கின காளையே! | | சப்பாணி கொட்டாய்—; |
| கோவலனே | பசுமேய்க்க வல்லவனே! | | |
| உன் வயிறு கேவலம் அன்று | உன் வயிறு ஸாமாந்யமான தன்று; | குடம் ஆடீ | குடக்கூத்தாடினவனே! |
| | | | சப்பாணி கொட்டாய்—. |

* * *—அட்டுக்குவிசோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறு மடங்கப் பொட்டத் துற்றின திருவயிற்றுக்கு அப்பணியாரவகை ஒன்று போருமோ? இன்னமும் பலவகைப் பொருள்களிலே விருப்பமுற்றவனாய் நிற்க, யசோதை சொல்லுகிறாள்; பிரானே! உன்வயிறு மற்றையோருடைய வயிறுபோல் ஸாமாந்யமானதன்று; *பேழைவயிற்றெம்பிரான் நீ என்பதை நன்கறிவேன். அந்த வயிற்றுக்கு ஏற்றவாறு அவலும் அப்பமும் நான் தருவேன், சப்பாணி கொட்டாய் என்கிறாள்.

இரண்டாமடியில் “நான் வலவப்பம்” என்று பாடபேதமுள்ளதாக அரும்பதவுரை கூறுகின்றது; சிலருடைய பாடமும் அப்படியிருந்தாலும் அது வேண்டா.

‘கருவிளைப்பூவலர்’ என்பது கண்ணபிரானுக்கு விசேஷணம். கருவிளைப் பூவை அலர்விப்பவன் (அதாவது) தன் திருமேனி நிறத்தினால் விளங்கச் செய்பவன் என்றவாறு. ... ... .... ... ... ... 6

புள்ளினை வாய்பிளந்து பூங்குருந்தம்சாய்த்து*
துள்ளிவிளையாடித் தூங்குறிவெண்ணெயை*
அள்ளியகையாலடியேன் முலைநெருடும்*
பிள்ளைப்பிரான்! கொட்டாய்சப்பாணி பேய்முலையுண்டானே! சப்பாணி. 7

| | | | |
|---|---|---|---|
| புள்ளினைவாய் பிளந்து | பகாசுரனுடைய வாயைக் கிழித்தெறிந்து | அள்ளிய கையால் | வாரியெடுத்த கைகளாலே |
| பூ குருந்தம் சாய்த்து | பூத்திருந்த குருந்தமரத்தைச் சாய்த்து முறித்து | அடியேன் முலை நெருடும் | என்னுடைய முலையை(ப் பால் சுரப்பதற்காக) நெருடு கின்ற |
| துள்ளி விளையாடி | நிலத்தில் நில்லாமல் விளையாடல்களைச் செய்து | பிள்ளை பிரான் | பிள்ளையாயும் பிரபுவாயு மிருப்பவனே! |
| தூங்கு உறி வெண்ணெயை | தொங்குகின்ற உறியிலுள்ள வெண்ணெயை | | சப்பாணி கொட்டாய்—; |
| | | | பேய் முலை உண்டானே! சப்பாணி—. |

* * *—உன்னை நலிவதற்குக் கஞ்சனால் ஏவப்பட்ட ஓர் அஸுரன் கொக்கின் வடிவமெடுத்து உன்னை விழுங்கிவிடுவதாகவர, அவன் வாயைக் கிண்டொழித்தவனே!, நீ மலர் கொய்தற்பொருட்டு விரும்பியேறும் குருந்தமரத்திற் பிரவேசித்த

ஓர் அஸுரன், நீ அந்த மரத்தின் மீது ஏறும்போது தான் முறிந்து வீழ்ந்து உன்னையும் வீழ்த்திக் கொல்லக் கருதியபோது அவ்வசுரனுட்பட அம்மரத்தைத் தொலைத்தபிரானே!, அங்குமிங்கும் துள்ளி விளையாடிக்கொண்டே உறிகளிற் சேமித்து வைத்த வெண்ணெயை அள்ளி அமுது செய்த கையில் முடை நாற்றத்தோடே கூடி என்னுடைய முலைக் கண்களைப் பால்சுரக்குமாறு நெருடுகிற பிள்ளைப் பிரானே! சப்பாணிகொட்டவேணு மென்கிறாள்.

மகனை நோக்கித் தாய்சொல்லும் வார்த்தையில் 'அடியேன் முலை நெருடும்' என்றது கூடுமோவெனின்; கீழ்ச்சொன்ன பரத்வ ஸௌலப்யங்களிலே தோற்றுத் தான் அடிமைப்பட்டமை தோற்றச் சொல்லுகிறாளென்க. அன்றி, ஆழ்வாருடைய ஸமாதியும் கூடவே கலசியிருக்கையாலே ஆழ்வார் தம் ஸ்வரூபத்துக்குச் சேர அடியேன் என்றது, என்னவுமாம். புள்ளின்வாய் பிளந்தது, பூங்குருந்தம் சாய்த்தது முதலிய சேஷ்டிதங்கள் சப்பாணிகொட்டும் பருவத்திற்குப் பின்பு நடந்தவையாதலால் அவற்றையிட்டுத் துதித்து 'சப்பாணிகொட்டாய்' என்று யசோதை ப்ரார்த்திப்பது எங்ஙனே பொருந்தும்? என்கிற கேள்வியும் இதனால் ஸமாதானம் செய்யப்பட்டதாகும்; சப்பாணி கொட்டாய் என்று யசோதை ப்ரார்த்தித்த ஸமயத்தில் மேற்குறித்த சேஷ்டிதங்கள் நடவாதிருந்தாலும், அவ் யசோதையின் நிலைமையை ஏறிட்டுக்கொண்டே பேசுகிற ஆழ்வார் பிற்காலத்தவராகையாலே அந்த சேஷ்டிதங்களை இவர் எடுத்தோதக் குறையில்லையென்க. பெரியாழ்வார் திருமொழி வியாக்கியானத்தில் ஸ்ரீ மணவாளமாமுனிகள் இங்ஙனே ஸமாதான மருளிச்செய்துள்ளமை காண்க. .... ... ... ... ... ... 7

யாயும்பிறரு மறியாதயாமத்து *
மாயவலவைப்பெண் வந்துமுலைதர *
பேயென்றவளைப் பிடித்துயிருண்ட *
வாயவனே! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய்சப்பாணி.

| | | | |
|---|---|---|---|
| யாயும் | பெற்ற தாயாகிய நானும் | அவளை | அப்பூதனையை |
| பிறரும் | மற்றுமுள்ளவர்களும் | பேய் என்று பிடித்து | பேய்ச்சி யென்றறிந்து பிடித்துக்கொண்டு |
| அறியாத | கண்விழித்திருக்கப் பெறாமல் உறங்கிக்கொண்டிருந்த | உயிர் உண்ட | அம்முலைவழியே அவளது) பிராணனைக் கவர்ந்த |
| யாமத்து | நடுச்சாமத்திலே | | |
| மாயம் | வஞ்சகையாய் | | |
| அலவை பெண் | துஷ்டஸ்த்ரீயான பூதனை | வாயவனே | திருப்பவளத்தை யுடையவனே! |
| வந்து | (கம்ஸனாலேவப்பட்டுத் திருவாய்ப்பாடிக்கு) வந்து | சப்பாணி கொட்டாய்—; | |
| முலை தர | முலைகொடுத்தவளவிலே | மால் வண்ணனே! சப்பாணி கொட்டாய்—. | |

* * *—கண்ணபிரானுடைய தொட்டிற்பருவத்தில் நிகழ்ந்த சிறுச்சேவகங்களுள் பூதனையின் முலையைச்சுவைத் துயிருண்டது மிக்க பயங்கரமாதலால் அதனை அடுத்தடுத்து எடுத்துப் பேசுகிறாள். பெற்ற தாயாகிய நானும் மற்றுள்ளாரொருவரும் கண்விழித்திருக்கப் பெறாதே உறங்கிக்கொண்டிருந்த நடு நிசியிலே வஞ்சகப் பேய்மகள் வந்து முலையுண்ணக் கொடுக்க, 'இவள் தாய்தான்' என்று ப்ரமித்தொழியாமல் 'பேய்தான்' என்று நிச்சயித்து அவளுயிரைக் கவர்ந்துண்ட பிரானே! சப்பாணி கொட்டவேணும் என்கிறாள்.

யாய் என்றாலும் யோய் என்றாலும் தாய்க்குப் பெயர். யாமம்—வடசொல். அலவை=கெட்டுப்போனவள் என்றபடி. பஹுவாக ஜல்பநம்பண்ணிக்கொண்டு

வருபவள் என்றருளிச்செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. தாய்வடிவுகொண்டு வருகிறளாகையாலே 'என் குட்டனே! வா, என் முத்தமே! வா, என் செல்வமே! வா' என்று போலிப்பிதற்றல்களைச் செய்துகொண்டு வருபவளென்றவாறு. . 8

கள்ளக்குழவியாய்க் காலாற்சகடத்தை *
தள்ளியுதைத்திட்டுத் தாயாய்வருவாளை *
மெள்ளத்தொடர்ந்து பிடித்தாருயிருண்ட *
வள்ளலே! கொட்டாய்சப்பாணி மால்வண்ணனே! கொட்டாய் சப்பாணி. 9

| | | | |
|---|---|---|---|
| கள்ளக் குழவி ஆய் | மாயக் குழந்தையாய்ப் பிறந்து | தொடர்ந்து பிடித்து | நிதானித்திருந்து மேல் விழுந்து பிடித்து |
| சகடத்தை | (அஸுரன் ஆவேசித்திருந்த) வண்டியை | ஆர் உயிர் | அவளது அருமையான உயிரை |
| காலால் தள்ளி உதைத்திட்டு | திருவடியால் தள்ளியுதைத்தவனும், | உண்ட | கவர்ந்தவனான |
| தாய் ஆய் வருவாளை | தாய்வேஷம் பூண்டு வந்த பூதனையை | வள்ளலே | உதாரனே! |
| | | | சப்பாணி கொட்டாய் —: |
| | | மால் வண்ணனே! | சப்பாணி கொட்டாய்—. |

* * *—உன்னை நான் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்தி யமுனை நீராடப்போயிருந்தகாலத்து, கம்ஸனுலேவப்பட்ட அஸுரனொருவன் அந்த வண்டியில் வந்து ஆவேசித்து உன்மேல் விழுந்து உன்னைக் கொல்ல முயன்றதை அறிந்த நீ பாலுக்கு அழுகிற பாவனையில் சிறிய திருவடிகளை மேலே தூக்கியுதைத்து அச்சகடத்தைச் சிந்த பிந்த மாக்கினாய்; தாய்போலவந்த பூதனையைப் பிடித்துயிருண்டாய்; இப்படி அருமையான காரியங்களைச் செய்த நீ எளிதான சப்பாணி கொட்டுதலையும் செய்தருளவேணுமென்கிறாள். ... 9

காரார்புயற்கைக் கலிகன்றிமங்கையர்கோன் *
பேராளன்நெஞ்சிற் பிரியாதிடங்கொண்ட
சீராளா! * செந்தாமரைக்கண்ணா! தண்டுழாய்த்
தாராளா! * கொட்டாய்சப்பாணி தடமார்வா! கொட்டாய்சப்பாணி. 10

| | | | |
|---|---|---|---|
| கார் ஆர் புயல் கை | கார்காலத்து மைய கொண்டலை போன்ற ஔதார்யமுடையவராய் | இடம் கொண்ட | நித்யவாஸம் பண்ணுகின்ற |
| மங்கையர் கோன் | திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவராய் | சீராளா | சீர்மை பொருந்தியவனே! |
| பேராளன் | பெருமை பொருந்தியவரான | செந்தாமரை கண்ணா | செந்தாமரைப் பூப்போன்ற திருக்கண்களையுடைய |
| கலி கன்றி | திருமங்கையாழ்வாருடைய | தண் துழாய் தார் ஆளா | குளிர்ந்த திருத்துழாய் மாலையையணிந்துள்ளவனே! |
| நெஞ்சில் | திருவுள்ளத்திலே | | சப்பாணி கொட்டாய்—; |
| பிரியாது | ஒரு நொடிப்பொழுதும் விட்டுப் பிரியாமல் | தட மார்வா | விசாலமான திருமார்பையுடையவனே! |
| | | | சப்பாணி கொட்டாய்—. |

* * *· ஆழ்வார் தாமானதன்மையிற் பேசாதே பிறருடைய நிலைமையை ஏறிட்டுக்கொண்டு பேசும் பதிகங்களில் இறுதியில் வரும் நிகமனப்பாசுரம் மாத்திரம் வேறுபட்டுவருகிற வழக்கம் இதில் மாறிற்று. முதற்பாட்டில் தன்மேல் வந்து புகுந்த யசோதைநிலைமை இப்பாட்டிலும் நீங்கவில்லையாயிற்று. இதுவும் யசோதைப்பிராட்டி சொல்வதுபோலவே அமைந்துள்ளது. (என் நெஞ்சிற்

போலவே) திருமங்கையாழ்வார் திருவுள்ளத்திலுங் குடிகொண்டிருக்கும் திருமாலே! சப்பாணி கொட்டவேணுமென்று யசோதை சொல்வதாகவே தலைக்கட்டிற்றாயிற்று.

இத்திருமொழி கற்பார்க்குப் பயனுரையாதொழிந்தது, இப்படிப்பட்ட ப்ரார்த்தனையே பயனாக அமையும் என்று காட்டுதற்குப்போலும். ... 10

அடிவரவு :—பூங்கோதை தாயார் தாமோர் பெற்றோர் சோத்தென கேவலம் புள்ளினை யாயும கள்ளம் காரார் எங்கானும்.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று
ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—ஆறாந்திருமொழி—எங்கானுமீதொப்பதோர்.

**உரையவதாரிகை** :—எம்பெருமான் அநந்த கல்யாணகுண நிதியா யிருப்பவன். அத்திருக்குணங்கட்கு ஓர் எல்லைகிடையாது. பலவகைப்பட்டு எல்லையற்றிருக்கின்ற அத்திருக்குணங்கள் மேன்மைக்கு ஏகாந்தமான குணங்களென்றும் எளிமைக்கு ஏகாந்தமான குணங்களென்றும் இரண்டுபாகுபாடுகளை யுடையன. ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்றிவை போன்ற திருக்குணங்கள் மேன்மைக்குணங்கள் [பரத்வகுணங்கள்] என்றும், வாத்ஸல்யம் ஸௌசீல்யம் முதலிய குணங்கள் எளிமைக்குணங்கள் [ஸௌலப்ய குணங்கள்] என்றும் வழங்கப்பெறும். பகவத்குணாநுபவம் பண்ணுகிறவர்களில் சிலர் பரத்வகுணங்களையே அநுபவிப்பர்; சிலர் ஸௌலப்ய குணங்களையே அநுபவிப்பர். பலர் இரண்டையுஞ் சேர அநுபவிப்பர்.

கேவலபரத்வமும் கேவல ஸௌலப்யமும் கொண்டாடத் தகுந்த தன்று. மேருமலை, கைலாஸமலை போன்ற மலைகள் மிகச்சிறந்தவையேயாயினும் அவை ஒருவர்க்கும் எளிதல்லாமையாலே பயனற்றவையாம்; அவைதாமே தரித்ரர்கட்குக் கிடைக்கக் கூடியவையாயிருந்தால் எவ்வளவோ சீர்மைபெறுமே. ஆகவே ஸௌலப்யமற்ற பரத்வம் உபயோகமற்றது. இவ்விதமாகவே பரத்வமற்ற ஸௌலப்யமும் உபயோகமற்றது. தெருக்களில் பரல்கள் பல எளிதாயிருக்கின்றன; அவற்றை விரும்புவாருண்டோ? அவை தாமே மணியும் மாணிக்கமுமாயிருந்தால் எவ்வளவோ பயனுண்டு. ஆகவே, வெறும் ஸௌலப்யமும் வெறும் பரத்வமும் பயனற்றவையே எம்பெருமான் இவ்விருவகைக் குணங்களாலும் நிறைந்தவன். அடியார்கள் கூசாதே வந்து பணிகைக் கீடான எளிமைக் குணங்களாலுங் குறையற்றவன்; வந்து பணிந்தவர்களுக்கு அநிஷ்டங்களைத் தவிர்த்து இஷ்டங்களைத் தலைக்கட்டித் தருகைக்கீடான மேன்மைக்குணங்களாலுங் குறையற்றவன். ஆகவே பகவத்குணாநுபவம் பண்ணுமவர்கட்குப் பரத்வகுணாநுபவம் ஸௌலப்ய குணாநுபவம் என்ற இரண்டும் ப்ராப்தம்.

இவ்வாழ்வார் இக்குணங்களைப் பலபாசுரங்களிலும் அநுபவித்திருக்கின்றாராயினும் இப்போது விலக்ஷணமாக அநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி. கண்ணபிரான் திருவாய்ப்பாடியில் களவுவழியிலே தயிர் நெய்பால்களை வாரியுண்டு இடைச்சிகள் கையிலேயகப்பட்டுத் தாம்பினால் கட்டுண்டு ஏங்கியிருக்குங்காலத்திலே அவனுடைய உண்மையான மேன்மையை யறிந்தவர்கள் 'எவ்வளவு மேன்மை

தங்கிய இவன் எவ்வளவு எளிமையிலே யிருக்கிறான்!, இது என்ன " என்று சொல்லி ஈடுபட்டபடியைத் தாமும் அநுகரித்துப்பேசுகிறதாயிருக்கின்றது இத் திருமொழி. மேல் பதினோராம்பத்தில் * மானமருமென்னோக்கி யென்னுந் திருமொழியிலும் இவ்விருவகைக் குணங்கள் அநுபவிக்கப்படுகின்றன; ஆனால் அவ்விடத்திற்கும் இவ்விடத்திற்கும் வாசியுண்டு. பரத்வத்தை முன்னே பேசி ஸௌலப்யத்தைப் பின்னே பேசுகிறது இவ்விடம், ஸௌலப்யத்தை முன்னே பேசிப் பரத்வத்தைப் பின்னே பேசுகிறது அவ்விடம். அன்றியும், ஒருவர் பேச்சாகவே செல்லுகிறது இத்திருமொழி. இகழ்வாரும் புகழ்வாருமான இருவர் பேச்சாகச் செல்லுகிறது அத்திருமொழி.

இத்திருமொழியின் ஒவ்வொரு பாசுரத்திலும் ஈற்றடியின் பிற்பகுதியை முன்னம் எடுத்துக்கொண்டு அந்வயித்துப்பொருள்கொள்ளும் பக்ஷத்தில். (அதாவது) "இன்று ஆய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டு ஆப்புண்டிருந்தவன் நரநாரணனாய்....அங்காந்தவன் காண்மின்" — "இன்று ஆப்புண்டிருந்தவன்... அன்று மலையேழுலகே மொழியாமை யுண்டவன் காண்மின்" "இன்று ஆப்புண்டிருந்தவன்...மன்னன் சினத்தோளவையாயிரமும் மழுவாலழித்திட்டவன் காண்மின்" என்றிவ்வண்ணமாக அந்வயித்து உரைக்குமிடத்து. ஸௌலப்யத்தை முன்னே அநுபவித்துப் பரத்வத்தைப்பின்னே அநுபவிப்பதாகவே நிர்வஹிக்கக் குறையில்லை. ஆனாலும், பரத்வத்தைப் பூர்வபக்ஷமாக்கி ஸௌலப்யத்தை ஸித்தாந்தமாக்கி யநுபவித்தலே இப்போது ஆழ்வார்க்கு அபிமதம் என்பது தோன்றப் பாசுரம் அமைந்தபடியே பொருள் கொள்ளுதல்நன்று.

எம்பெருமானுடைய பரத்வகுணத்தையே பார்த்து 'அம்மானாழிப்பிரான் அவனெவ்விடத்தான் யானார்?' என்றாற்போலே இவ்விஷயம் நமக்கு ப்ராப்தமன்றென்று வெறுத்துப்போய்விடாதீர்கள்; ஸௌலப்யகுணத்தை நோக்கிக் கூசாதே அணுகுங்கள் என்பதாகவும், "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப் பெற்றான் காடுவாழ் சாதியு மாகப்பெற்றான், பற்றியுரலிடை யாப்புமுண்டான் பாவிகாள்! உங்களுக் கேச்சுக்கொலோ?" என்கிறபடியே, இவனுடைய எளிமைக்குணத்தையே கண்டு 'ஓர் இடைச்சி தன்னைக்கட்டின கட்டை அவிழ்த்துக் கொள்ள மாட்டாத இவனோ நம்முடைய ஸம்ஸாரக்கட்டை அவிழ்க்கப்போகிறான்' என்று குழைச்சரக்காக நினைத்துவிடாமல் இவனுடைய மேன்மைக் குணங்களையும் நோக்கி உகந்திடுங்கள் என்பதாகவும் வெளியிடுதல் இத்திருமொழிக்குப் பரமார்த்தமாகும். ... ... ... ... ... ... *

எங்கானு மீதொப்பதோர்மாய முண்டே? நரநாரணனாயுலகத்தறநூல்*
சிங்காமைவிரித்தவனெம்பெருமான் அதுவன்றியுஞ்செஞ்சுடரும்நிலனும் *
பொங்கார்கடலும்பொருப்பும்நெருப்பும் நெருக்கிப்புகப்பொன்மிடறத்தனைபோது *
அங்காந்தவன்காண்மின்னின் றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 1

| | | | |
|---|---|---|---|
| நரன் நாரணன் ஆய் | (சிஷ்யனும் ஆசார்யனுமாக) நரநாராயணரூபியாய் | செம் சுடரும் | சந்திர ஸூர்யர்களும் |
| உலகத்து | லோகத்திலே | நிலனும் | பூமியும் |
| அறம் நூல் | அறநெறிகளைத் தெரிவிக்கும் நூலாகியவேதம் | பொங்கு ஆர் கடலும் | பொங்குதல் பொருந்திய ஸமுத்ரங்களும் |
| சிங்காமை | சுருங்கிப் போகாதபடி அதை விஸ்தரிப்பித்தவனாயும் | பொருப்பும் | மலைகளும் |
| எம்பெருமான் | எமக்கு ஸ்வாமியாயும் | நெருப்பும் | அக்நியும் (ஆகிய இவையடங்கலும்) |
| அது அன்றியும் | அவ்வளவு மல்லாமல் | நெருக்கி | ஒன்றின்மேலொன்றாய் |

| | | | |
|---|---|---|---|
| புக்கு அத்தனை போது | உள்ளே புகுமளவும் | உண்டு | (திருடி) உட்கொண்டு |
| பொன் மிடறு | திருவயிற்றை | ஆய்ச்சியரால் | இடைச்சிகளால் |
| அங்காந்தவன் காண்மின் | விவரித்துக்கொண் டிருந்தவனன்றோ | ஆப்புண்டிருந் தவன் | (தாம்பால்) கட்டுண்டிருக்கிறான்; |
| இன்று | இப்போது | ஈது ஒப்பது ஓர் மாயம் | இது போன்ற ஆச்சரியம் |
| அளை | தயிரையும் | எங்கானும் | எங்கேனுமோரிடத்திலாவது |
| வெண்ணெய் | வெண்ணெயையும் | உண்டே | கண்டதுண்டோ? |

* * *—தொடங்கும்போதே 'எங்கானு மீதொப்பதோர் மாயமுண்டே' என்ற அழகு என்னே!; மேன்மையின் எல்லையிலே நிற்கிற பரபரன் நீர்மையின் எல்லையிலே நிற்கிறவிது என்ன ஆச்சரியம்! என்ன கபடச்செயல்!, இப்படிப் பட்ட மாயம் பகவத்விஷயத்தில் தவிர வேறு எந்த விஷயத்திலாவது காணக் கிடைக்குமோ? என்கிறார். நீர் கண்ட மேன்மையும் நீர் கண்ட நீர்மையும் என் கொல்? என்ன; மூன்றாமுன்னம் மேன்மையை உபபாதிக்கிறார் நரநாரணனாய் என்று தொடங்கி.

முன்னொருகாலத்தில் குருசிஷ்யக்ரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் நன்கு விளக்குவதற்காக நரனென்னும் சிஷ்யனும் நாராயண னென்னும் குருவுமாக ஸ்ரீபதரிகாச்ரமத்தில் எம்பெருமான் அவதரித்து சிஷ்யனுக்குக் குரு திருமந்திரத்தை உபதேசித்தருளினமை அறியத்தக்கது. "ஸம்ஸாரிகள் தங்களையும் ஈச்வரனையும் மறந்து ஈச்வரகைங்கர்யத்தையுமிழந்து இழந்தோமென்கிற இழவு மின்றிக்கே ஸம்ஸாரமாகிற பெருங்கடலிலே விழுந்து நோவுபட, ஸர்வேச்வரன் தன் க்ருபையாலே இவர்கள் தன்னையறிந்து கரைமரம் சேரும்படி தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று திருமந்த்ரத்தை வெளியிட்டருளினான். சிஷ்யனாய் நின்றது சிஷ்யனிருக்கு மிருப்பு நாட்டாரறியாமையாலே அத்தை அறிவிக்கைக்காக." என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்திகளும் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

நரநாரணனாய் என்றதிலேயே ஒரு மாயமுண்டு; அதாவது—சீரியசிங்காசனத்தில் வீற்றிருந்து ஆசார்யபதம் செலுத்த வேண்டிய தான் தன்னை சிஷ்யனாக அமைத்துக் கொண்ட மாயம்; அதுவும் 'எங்கானு மீதொப்பதோர் மாயமுண்டே' என்றதில் விவக்ஷிதமாகலாம்

அறநூல் சிங்காமை விரித்தவன்=தருமமார்க்கத்தை நிலைநிறுத்த அவதரித்த நூல் வேதநூலாதலால் அதுவே இங்கு அறநூல் எனப்படுகிறது. அவற்றுக்கு உபப்ரும்ஹணங்களான ஸ்ம்ருதி இதிஹாஸ புராணங்களுங்கூடி அறநூல், என்றும் கொள்ளப்படலாம். இப்படிப்பட்ட ஸகலசாஸ்திரங்களிலும் கணக்கற்ற விஷயங்கள் சொல்லப்பட்டிருந்தாலும் எல்லாம் ஐந்து அர்த்தங்களாகத் தொகுக்கப்படும். அவையாவன;—(1) எம்பெருமானுடைய ஸ்வரூபம், (2) அப்பெருமானை யடைகின்ற சேதநனுடைய ஸ்வரூபம். (3) அப்பெருமானைப் பெறுதற்கான உபாயத்தின் ஸ்வரூபம். (4) அவ்வுபாயத்தினால் பெறக் கூடியதான பேற்றின் ஸ்வரூபம் (5) அப்பேற்றைப் பெற வொட்டாமல் தடை செய்கின்ற ப்ரதிபந்தகத்தின் ஸ்வரூபம் (அதாவது) விரோதிஸ்வரூபம். ஆக இவை ஐந்தாம். இவையே அர்த்த பஞ்சக மெனப்படும். "மிக்க இறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையுமோதுங் குருகையர்கோன், யாழினிசை வேதத்தியல்" என்கிறபடியே திருவாய்மொழியில் பேசப்படும் அர்த்தங்களும் இவையேயாம். இவ்வர்த்தபஞ்சகத்தையும் கையிலங்கு நெல்லிக் கனியாகக் காட்டுகின்றது திருவஷ்டாக்ஷரமஹாமந்த்ரமாதலாலும் அதனை நர

நாரணனாய் வெளியிட்டருளினனாதலாலும் அநநூல் சிங்காமை விர்த்தவனெம்பெருமான் எனக்குறையில்லையென்க.

திருமந்திரத்தில் அர்த்தபஞ்சகம் பிரதிபாதிக்கப்படுகிறவிதம் ரஹஸ்யநூல்களில் ஆசார்யமுகமாக அறிந்துகொள்ளத்தக்கது.

கீழ் ஒன்றரையடியால், அறியவேண்டு மர்த்தங்களையெல்லாம் அறிவித்தருளினமையாகிற பரத்வத்தைச் சொல்லி, மேல், ப்ரளயகாலத்தில் ஸர்வஸம்ரக்ஷகனாயிருந்தமையாகிற பரத்வத்தைப் பேசுகிறார் அதுவன்றியும் என்று தொடங்கி. உலகத்துப் பொருள்களில் ஒன்று தப்பாமல் எல்லாம் தன்திருவயிற்றினுள்ளே அடங்கி வாழும்படி திருவயிற்றைத்திறந்து கொண்டிருந்தவன்.

“தாழ்குழலார் வைத்த தயிருண்ட பொன்வயிறு, இவ்வேழுலகமுண்டுமிடமுடைத்தால் சாழலே.” என்றபடியே திருவயிற்றினுள்ளே எத்தனை கோடிக் கணக்கான பதார்த்தங்கள் அடைபட்டாலும் இடம் விசாலமாகவே யிருக்கும் என்று சொல்லப்படாநிற்க, இங்கு ‘நெருக்கிப்புக’ என்கிறதே, இதுவென்? என்னில்; திருவயிற்றினுள்ளே இடம் போதாமல் நெருக்குண்டிருக்கும்படியைச் சொல்லுகிறதன்று இது; பின்னையோ வென்னில், செஞ்சுடர் முதலிய பதார்த்தங்கள் பிரளயாபத்துக்கு அஞ்சித் திருவயிற்றினுள்ளே புகுங்கால், ‘நாம் எங்கே தவறிப்போகிறோமோ, நாம் எங்கே தவறிப்போகிறோமோ’ என்று ஒன்றின்மேலொன்றாக மேல் விழுந்து நெருக்கித்தள்ளிக்கொண்டு உள்ளே புகுகிற நிலைமையைச் சொன்னபடியாமத்தனை.

அங்காத்தல்—வாய்திறத்தல்.

அளைவெண்ணெய் என்பதை உம்மைத்தொகையாகக் கொண்டால் ளையையும் வெண்ணெயையும் என்றதாகிறது. (அளை—தயிர்.) இனி வி்ராகையாகக் கொண்டால், அளையப்படுகிற வெண்ணெய் என்றதாகிறது.

துழாவுதல். ... ... .. ... . ...

குன்றொன்றுமத்தாவரவமளவிக் குரைமாகடலைக்கடைந்திட்டு*ஒருகால்
நின்றுண்டைகொண்டோட்டிவன்கூன்நிமிர நினைந்தபெருமான்அதுவன்றியும்முன்
நன்றுண்டதொல்சீர்மகரங்கடலேழ் மலையேழுலகேழொழியாமைநம்பி*
அன்றுண்டவன்காண்மின்இன்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே.

| | | | |
|---|---|---|---|
| ஒன்று குன்று | (மந்தரமென்கிற) ஒரு மலையை | | அது அன்றியும்—; |
| மத்து ஆ | மத்தாகக்கொண்டு | முன் அன்று | முன்பொருகாலத்தில், |
| அரவம் | (வாஸுகியென்னும்) நாகத்தை | நன்று உண்ட தொல் சீர் | நன்றாகத் தன்னுட் கொள்ளப்பட்ட சிறப்பையுடைய |
| அளவி | (கடைகயிறாகச்) சுற்றி | மகரம் கடல் ஏழ் | மகரங்கள் திளைக்கின்ற ஸப்த ஸாகரங்களும் |
| குரை மா கடலை | ஒலிக்கின்ற பெருங்கடலை | மலை ஏழ் | ஸப்த குலாசலங்களும் |
| கடைந்திட்டு | கடைந்து | உலகு ஏழ் | ஸப்தலோகங்களும் |
| ஒருகால் | மற்றொருகாலத்தில், | ஒழியாமை | ஒன்றுதப்பாதபடி |
| உண்டை கொண்டு | (வில்லிலுள்ள) உண்டை களைக்கொண்டு | நம்பி | (எல்லாவற்றையும்) விரும்பி |
| வன் கூன் | வலிதான கூனை | உண்டவன் காண்மின் | திருவயிற்றிற் கொண்டவனன்றோ |
| ஓட்டி நின்று | போக்கி | | இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவன். |
| நிமிர | (கூன்) நிமிரும்படி | | |
| நினைந்த | திருவுள்ளம்பற்றின | | |
| பெருமான் | ஸர்வேச்வரனாய், | | |

* * '—துர்வாஸ மஹாமுனியின் சாபத்தினால் தேவர்களின் செல்வமெல்லாம் கடலில் புக்கொளித்த காலத்து. அத்தேவர்களின் வேண்டுகோளினால் மந்தர மலையை மத்தாக நாட்டி வாஸுகி நாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிக் கடலைக் கடைந்தருளின பரத்வகுணத்தை முதலடியிலே அநுஸந்திக்கிறார்.

பிரளயத்தில் ஸகல லோகங்களையும் திருவயிற்றில் வைத்து நோக்கின பரத்வம் மூன்றாமடியில் கூறப்பட்டது. ஆக இப்படிப்பட்ட பரத்வம் பொலிய நின்ற பிரான் இன்று அளை வெண்ணெயுண்டு ஆய்ச்சியரால் ஆப்புண்டிருக்கும் எளிமை என்னே! என்று ஈடுபடுகிறாராயிற்று. ... .... ... 2

உளைந்திட்டெழுந்த மதுகைடவர்கள் உலப்பில்வலியாலவர்பால்*வயிரம்
விளைந்திட்டதென்றெண்ணி விண்ணோர்பரவ அவர்நாளொழிந்தபெருமான் முனநாள் *
வளைந்திட்டவில்லாளி வல்வாளெயிற்று மலைபோலவுணனுடல்வள்ளுகிரால் *
அளைந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 3

| | | | |
|---|---|---|---|
| உலப்பு இல வலியால் | எல்லையில்லாத வலிமையினால் | ஒழித்த பெருமான் | முடித்த ஸர்வேச்வரனாய், (அதுவுமல்லாமல்) |
| எழுந்த | பெரியகிளர்த்தியோடே தோன்றின | முனநாள் | முற்காலத்தில் |
| மது கைடவர்கள் அவர் பால் | மதுகைடபர்களென்கிற அவ்வசுரர்களோடே | வளைந்திட்ட வில்லாளி | வளைந்த வில்லைக் கையிலேந்தியுள்ளவனும் |
| வயிரம் | பகை | வல் வாள் எயிறு | வலிமைபொருந்திப் பிறங்கிய பற்களையுடையவனும |
| விளைந்திட்டது என்று எண்ணி | உண்டாகிவிட்டதென்றறிந்து | மலை போல் | மலைபோன்றவனுமான |
| உளைந்திட்டு | அஞ்சி நடுங்கி | அவுணன் | இரணியாசுரனுடைய |
| விண்ணோர் | தேவர்கள் | உடல் | உடலை |
| பரவ | (திருவடிகளிலே தாழ்ந்து) துதிக்க, (அத்தேவர்களுக்காக) | வள் உகிரால் | கூர்மையான நகங்களினால் |
| அவர் நாளை | அந்த மதுகைடபர்களுடைய ஆயுளை | அளைந்திட்டவன் காண்மின் | இரண்டாகக [illegible] னன்றே |
| | | இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவன்—. | |

* * *—மதுகைடபர்களை மாளச்செய்த பெருமையையும் இரணியாசுரனுடலைப் பிளந்த வலிமையும் பேசி இப்படிப்பட்ட பராக்ரமசாலி காண்மின் இன்று அசக்தரைப் போலே கட்டுண்டு கிடக்கிறானென்கிறார். ... ... 3

தளர்ந்திட்டிமையோர்சரண்தாவெனத் தான்சரணாய்முரணாயவனை*உகிரால்
பிளந்திட்டமரர்க்கருள்செய்துகந்த பெருமான்திருமால்விரிநீருலகை *
வளர்ந்திட்டதொல்சீர்விறல்மாவலியை மண்கொள்ளவஞ்சித்தொருமாண்குறளாய் *
அளந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 4

| | | | |
|---|---|---|---|
| இமையோர் | தேவர்கள் | தான் சரண் ஆய் | தான் ரக்ஷகனாக நின்று |
| தளர்ந்திட்டு | (அசுரர்களாலே நெருக்குண்டு மிகவும் தளர்ச்சியடைந்து | முரணயவனை | பெருமிடுக்கனான இரணியனை |
| சரண் தா என | 'நீ எமக்கு ரக்ஷகனாக வேணும்' என்று பிரார்த்திக்க, | உகிரால் | நகங்களாலே |
| | | பிளந்திட்டு | கிழித்துப்போட்டு |
| | | அமரர்க்கு | தேவர்களுக்கு |

| | |
|---|---|
| அருள செய்து | கிருபைபண்ணி |
| உகந்த | திருவுள்ளமுவந்த |
| பெருமான | ஸர்வேச்வரனாய் |
| திருமால் | திருமகள் கொழுநனாய், |
| வளர்ந்திட்ட தொல் சீர் | மேன்மேலும் வளர்கின்ற அதிக ஸம்பத்தையுடைய |
| விறல் | பலிஷ்டனான |
| மாவலியை | மஹாபலியை |
| மண் கொள்ள | பூமியைக் கொள்ளும் பொருட்டு |
| ஒரு மாண் குறள் ஆய் | அத்விதீயனான ப்ரஹ்மசாரி வாமனனாய் |
| வஞ்சித்து | சிறு காலைக்காட்டி ஏமாத்தி |
| விரிநீர் உலகை | கடல்சூழ்ந்த லோகங்களை |
| அளந்திட்ட அவன் காண்மின் | அளந்து கொண்டவனன்றோ |

இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவன்—

* * *- இரணியாசுரனால் தேவர்கள் சாலவும் நெருக்குண்டு தளர்ந்து வந்து நாயனே எம்மை இரங்கருள வேணும்' என்று ப்ரார்த்திக்க, அவர்கட்கு ரக்ஷகனாகி ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள்செய்யும் வியாஜமாகத் தூணில் நரசிங்க வுருக்கொண்டு தோன்றி அவ்விரணியனை மடிமீது போட்டுக்கொண்டு திருக்கை நகங்களாலே பிளந்து ஒழித்து, தேவர்களின் துயரைத் தீர்க்கப் பெற்றோமென்று திருவுள்ள முவந்தவனும், மேன்மேலும் வளர்கின்ற எல்லையில்லாத செல்வமுடைய பெருமிடுக்கனை மஹாபலியை வலியடக்க வேண்டி, அழகிய வாமன வேஷத்தை யுடையனாய்க்கொண்டு வந்து வஞ்சித்து உலகங்களை யளந்து கொண்டவனுமான பரத்வத்திற் குறையற்ற பெருமான் கிடீர் இன்று தரித்ரன் போலே வெண்ணெயைக் களவாடியுண்டு ஓரிடைச்சியிட்ட சிறையை விடுத்துக்கொள்ள மாட்டாதவன் போல விருந்து எளிமைக் குணத்தை விளக்குகின்றானென்கிறார். ... ... 4

நீண்டான்குறளாய்நெடுவானளவும் அடியார்படுமாழ்துயராயவெல்லாம் *
நீண்டாமைநினைந்திமையோரளவும் செலவைத்தபிரான்அதுவன்றியும்முன் *
வேண்டாமைநமன்தமர்என்தமரை வினவப்பெறுவாரலரென்று*உலகேழ்
ஆண்டானவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 5

| | |
|---|---|
| அடியார் படும் | பக்தர்கள் அநுபவிக்கிற |
| ஆழ் துயர் ஆய எல்லாம் | கொடிய பாப பலன்களெல்லாம் |
| நீண்டாமை | அவர்களை ஸ்பர்சியாதபடி |
| நினைந்து | திருவுள்ளம்பற்றி |
| குறள் ஆய் | வாமனமூர்த்தியாகி |
| நெடு வான் அளவும் | பரம்பிய ஆகாசமெங்கும் |
| நீண்டான் | வளர்ந்தவனாய், |
| இமையோர் அளவும் | நித்யஸூரிகளளவும் |
| செல | செல்லும்படியாக |
| வைத்த | திருவடிகளை உயர்த்தி வைத்தருளின |
| பிரான் | உபகாரகனாய், |

அது அன்றியும் முன்—;

| | |
|---|---|
| | ('எல்லாரையும் யமபடர்கள் ஆராயக்கடவர்கள்' என்று தானே யிட்ட கட்டளையை) |
| வேண்டாமை | வேண்டாமையினாலே |
| நமன் நமர் என் தமரை வினவப் பெறுவார் அலர் என்று | 'யமபடர்கள் எம்மடியாரை ஆராயக்கடவர்களல்லர்' என்று நியமித்தருளி |
| உலகு ஏழ் | |
| ஆண்டான அவன் காண்மின் | உலகங்களையெல்லாம் ரக்ஷித்தருளினவனன்றோ |

இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு

* * *—இப்பாட்டின் முன்னடிகளை இரண்டுபடியாக நிர்வஹிக்கலாம்; எங்ஙனே யென்னில்; குறளாய் நெடுவானளவும் நீண்டான் என்று ஒரு வாக்கியமாகவும், "அடியார்படும்" என்று தொடங்கி "இமையோரளவும் செலவைத்தபிரான்" என்றவளவும் வேறொரு வாக்கியமாகவும் யோஜித்தல் ஒருவகை; இந்த யோஜனையில்,

'நீண்டான் குறளாய் நெடுவானளவும்' என்ற மட்டுமே த்ரிவிக்ரமாவதார விஷயம் சொல்லுகிறது' அடியார்படு மென்று தொடங்கி மேல் வாக்கியத்தின் கருத்தாவது:— தனக்கு அடிமைப்பட்டவர்கள் கீழ்க்காலங்களில் செய்த பாபங்களின் பலன்களை அநுபவித்துத் தீர்க்க வேண்டாமல் "வாயினாற்பாடி மனத்தினாற் சிந்திக்கப் போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும்" என்கிறபடியே அவை தன்னடையே கழிந்தொழியுமாறு திருவுள்ளம் பற்றி அவர்களுக்கு ஞானபக்தி விரக்திகளை வளரச் செய்துகொண்டு போந்து அவர்களை நித்யஸூரி துல்யராக ஆக்கி வைக்கும் பெருமான் என்கை. [இமையோரளவும் செல] நித்ய ஸூரித்வ ப்ராப்தி பர்யந்தமாக=நித்ய ஸூரிகளாகவும் ஆய்விடும்படியாக என்றவாறு. வைத்த பிரானென்றது வைக்கும் பிரானென்றபடி. இனி மற்றொரு யோஜனை பதவுரையிற் காணத்தக்கது. மஹாபலியின் செருக்கினால் அடியார்கள் துயருற்றிருந்ததனால் அத்துயர் நீங்குமாறு வாமநமூர்த்தியாய் மாவலி வேள்வியிற் சென்று நெடுவானளவும் நீண்டவனாகி இமையோரளவும் செல்லும்படியாகத் திருவடிகளை நீட்டிவைத்த பிரான் என்றவாறு.

தன்னடியார் திறத்தில் யமபடர்கள் ஒன்றும் ஆராய வொண்ணாதபடி எம்பெருமான் தனது அடியார்களைப் பாதுகாக்குந்திறம் மூன்றாமடியிற் கூறப்பட்டது. ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் (3 7-14) "ஸ்வபுருஷமபிவீக்ஷ்ய பாசஹஸ்தம் வததி யம; கில தஸ்ய கர்ணமூலே பரிஹர மதுஸூதந ப்ரபந்நாந் ப்ரபுரஹமந்யந்ருணாம் ந வைஷ்ணவாநாம்" என்றதும், திருமழிசைப்பிரான் நான்முகன் திருவந்தாதியில் (68) "திறம்பேன்மின் கண்டீர் திருவடி தன் நாமம், மறந்தும் புறந்தொழாமாந்தர்— இறைஞ்சியும் சாதுவராய்ப் போதுமின்களென்றான் நமனும் தன், தூதுவரைக் கூவிச் செவிக்கு" என்றருளிச் செய்ததும் இங்கு அறியத்தக்கன. யமனுடைய தூதர்கள் பாசங்களைக் கையிற் கொண்டு தங்கள் கடமையைச் செலுத்தப் புறப்படும் போது யமன் அத்தூதர்களை யழைத்து ரஹஸ்யங்கள் சொல்லுமாபோலே காதோடே ஒரு வார்த்தை சொல்லுவான்:—ஓ தூதர்களே! நீங்கள் பாகவதர்களிடத்தில் சிறிதும் அதிகாரம் செலுத்தவேண்டா; அவர்கள் கிட்ட நீங்கள் செல்லவே கூடாது; ஒருகால் அவர்கள் நேர்பட்டால் வணங்கி வலஞ்செய்து பரம ஸாத்விகர்களாய் விலகுங்கோள் என்றானாம். இதனால் பாகவதர்களுக்கு யமபய ப்ரஸக்தியே யில்லை யென்றதாம். "அவன் தமர் எவ்வினையராகிலும் எங் கோனவன் தமரே யென்றொழிவதல்லால். நமன் தமரால் ஆராயப்பட்டறியார் கண்டீர் அரவணை மேல், பேராயற் காட்பட்டார்பேர்" என்றார் பொய்கையாழ்வார். "கெடுமிடராய வெல்லாம் கேசவா வென்ன, நாளுங் கொடுவினை செய்யுங் கூற்றின் தமர்களுங் குறுககில்லர்" என்றார் நம்மாழ்வார். "மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்னாமங்கற்ற ஆவலிப்புடைமை கண்டாய்—நாவலிட்டுழிதர்கின்றோம் நமன் தமர் தலைகள் மீதே" என்றார் தொண்டரடிப்பொடி யாழ்வார். யமன் தனது படர்களை யழைத்து அவ்வாறு கட்டளையிடுதலும், பாகவதர்கள் 'நமன் தமர் தலைகளிலே காலை வைத்துக் குழக்குகிறோம்' என்று சொல்லுதலு மெல்லாம் எம்பெருமானுடைய நியமநத்தி னுறைப்பினாலென்பது இப்பாட்டில் வெளியாகின்றது.

[வேண்டாமை] "உயிரும் தருமனையே நோக்கும்" என்ற பொதுவான நீதியின்படி பாகவதர்களின் உயிரும் யமனுக்கு வசப்படவேண்டியதாயிருக்கச் செய்தேயும் பொதுவிதியைப் பாகவதர் திறத்தில் உபயோகப்படுத்த வேண்டாமையினாலென்றபடி. (என் தமரை நமன்தமர் வினவப்பெறுவாரலர்) வினவுதல்—தண்டனை செய்தலுக்குப் பரியாயம். 'என்னுடைய பக்தர்கள் எவ்வகைப்பட்ட பிழைகளைச் செய்தவராயினும் அவர்களை யமபடர்கள் தண்டிக்க உரியாரல்லர்' என்று எம்பெருமான் கட்டளையிட்டு வைத்து ஜகத்பரிபாலனம் பண்ணுகிறானென்கிறது.

இப்படி பிறர்க்கு நேரக்கூடிய பாசங்களையும் தவிர்த்தருளவல்ல பெருமை வாய்ந்தவன் இன்று ஆய்ச்சியர் பாசங்களால் கட்டுண்டிருக்குமெளிவரவு என்னே! என்றவாறு. ... ... ... ... ... 5

பழித்திட்டவின்பப்பயன்பற்றறுத்துப் பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம் *
ஒழித்திட்டவரைத்தனக்காக்கவல்ல பெருமான் திருமாலதுவன்றியும்முன் *
தெழித்திட்டெழுந்தேயெதிர்நின்றமன்னன் சீர்த்தோளவையாயிரமும்மழுவால் *
அழித்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே.

| | | | |
|---|---|---|---|
| பழித்திட்ட | சாஸ்திரங்களில் இகழப்பட்ட | தெழித்திட்டு | பெரிய ஆரவாரத்தைச் செய்துகொண்டு |
| இன்பம் | சிற்றின்பமாகிற | எழுந்து | மார்புதட்டிக் கிளர்ந்து |
| பயன் | அற்ப பலன்களை | எதிர் நின்ற | (போர்புரிய) எதிரே வந்து நின்ற |
| பற்று அறுத்து | வாசனையோடே விட்டிட்டு | மன்னன் | (கார்த்தவீர்யார்ஜுனனென்னும்) அரசனுடைய |
| பணிந்து | திருவடிகளிலே விழுந்து | சீர் | கொழுத் துடிப்புக்கொண்ட |
| ஏத்த வல்லார் | துதிக்கவல்லவர்களுடைய | தோள் அவை ஆயிரமும் | ஆயிரந்தோள்களையும் |
| துயர் ஆய எல்லாம் | துன்பமென்று பேர்பெற்றவை யெல்லாவற்றையும் | மழுவால் | மழுப்படையினால் |
| ஒழித்திட்டு | கழித்தருளி | அழித்திட்டவன் காண்மின் | அழித்தவனான பெருமானன்றோ |
| அவரை | அவர்களை | | |
| தனக்கு ஆக்க வல்ல | தனக்கு நித்யகிங்கரராகச் செய்துகொள்ளவல்ல | | |
| பெருமான் | ஸ்வாமியாய் | | |
| திருமால் | ச்ரிய:பதியாய், | இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவன்—. | |
| அது அன்றியும் முன்—; | | | |

* * *—உலகத்தில் சேதநர்கள் பலவகைப்பட்டிருப்பர்கள்; பலர் அற்பமான பலன்களை விரும்பி அவற்றைப் பெறுதற்பொருட்டுத் தேவதாந்தர பஜனஞ் செய்து போருவர் அவர்கள் கடக்க நிற்க. அங்ஙனம் தேவதாந்தர பஜனம் பண்ணுமல் எம்பெருமானையே பஜிப்பவர்களும் ஐச்வர்யம் வேணுமென்று சிலரும், ஸந்தானம் வேணுமென்று சிலரும், ஸ்வர்க்க புருஷார்த்தம் வேணுமென்று சிலரும், கைவல்ய புருஷார்த்தம் வேணுமென்று சிலருமாய் இப்படி பலவகைப்பட்ட காமனைகளுடனே எம்பெருமானைப் பணிந்தேத்துவாருண்டு, அப்படி யெல்லாமல்லாமல் ஹேயங்களான புருஷார்த்தங்களில் சிறிதும் விருப்பமின்றியே "உன்றன்னோடுற்றோமே யாவோ முனக்கே நாமாட் செய்வோம்" என்கிற அத்யவஸாய மொன்றையே கொண்டு பணிந்து துதிக்க வல்லவர்களுடைய துன்பங்களை யெல்லாம் தொலைத்திட்டு, பெரிய திருவடி திருவனந்தாழ்வான் முதலிய நித்யஸூரிகளைப்போலே அவர்களை அத்தாணிச் சேவகத்துக்கு ஆளாக்கிக் கொள்ளுமியல்வினனான எம்பெருமானென்பன முன்னடிகள்.

இப்படிப்பட்ட பெருமை வாய்ந்தவன் காண்மின் இன்று அசக்தியை அபிநயித்து ஆப்புண்டிருக்கிறான்! ... ... ... ... 6

படைத்திட்டதிவ்வையமுய்யமுனநாள் பணிந்தேத்தவல்லார் துயராயவெல்லாம் *
துடைத்திட்டவரைத்தனக்காகவென்னத் தெளியாவரக்கர்திறல்போயவிய *
மிடைத்திட்டெழுந்தகுரங்கைப்படையா விலங்கல்புகப்பாய்ச்சிவிம்ம*கடலை
அடைத்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 7

| | |
|---|---|
| முன் நாள | முன்பொருகாலத்தில் |
| இ வையம் | இவ்வுலகங்களை |
| படைத்திட்டு | (கரண களேபரங்கள் கொடுத்து) ஸ்ருஷ்டித்து |
| அது | அவ்வுலகம் |
| உய்ய | உஜ்ஜீவிப்பதற்குறுப்பாக |
| பணிந்து | திருவடிகளிலே விழுந்து |
| ஏத்த வல்லார் | துதிக்கவல்லவர்களுடைய |
| துயர் ஆய எல்லாம் | துன்பமென்று பேர்பெற்ற வற்றையெல்லாம் |
| துடைத்திட்டு | போக்கி |
| அவரை | அப்படிப்பட்டவர்களை |
| தனக்கு ஆக்க என்ன | தனக்கே உரியவராக ஆக்கிக் கொள்ள நினைத்தவளவிலே |
| தெளியா | அத்திருவுள்ளத்தை ஸஹிக்க மாட்டாமல் கலங் |

| | |
|---|---|
| அரக்கர் | ராவண ராக்ஷஸர்களுடைய |
| திறல் | மிடுக்கு |
| போய் அவிய | பாழ்படும்படியாக |
| மிடைத்திட்டு எழுந்த | நிபிடமாகத் திரண்ட |
| | வானரவீரர்களை |
| படை ஆ | சேனையாகக்கொண்டு |
| விம்ம | (கடல்) நிரம்பும்படி |
| விலங்கல் | |
| புக பாய்ச்சி | பரப்பியிட்டு |
| கடலை | ஸமுத்ரத்தை |
| டவன காண்மின் | தூர்த்தவனான பெருமா னன்றோ |

இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவன்—,

* * *— முன்பு இவ்வுலகமடங்கலும் பிரளயங்கொண்டு உபஸம்ஹார மடைந்திருந்த காலத்து, மீண்டும் சேதநர்கள் தன்னை வணங்கி வழிபட்டு உஜ்ஜீவிக்கவேணுமென்று திருவுள்ளம்பற்றி, இறகொடிந்த பக்ஷிபோலே கிடந்த ஆன்மாக்களுக்கெல்லாம் கரண களேபரங்களைக் கொடுத்து ஸ்ருஷ்டித்து, அவர்களெல்லாம் தன்னைப் பணிந்து ஏத்தவல்லவர்களாகும்போது அவர்களது துயர்களை யெல்லாம் தொலைத்திட்டு அவர்களைத் தனக்கு அந்தரங்க கிங்கரர்களாக்கிக் கொள்ளவேணும் என்று பாரித்திருக்கையில் ராக்ஷஸர்கள் ஏற்பட்டு அவ்வடியார்களுக்குத் தீங்கிழைத்த காலத்து, அவர்களது திறல் மாளும்படியாக வானரப் படைகளைத் துணைகொண்டு கடலை யணைசெய்த பெருமான்காண்மின் இன்று அஜ்ஞனும் மாய்க்கொண்டு இடைச்சி கையிலே கட்டுண்டு கிடக்கிறான்! என்கிறார். 7

நெறித்திட்டமென்கூழைநன்னேரிழையோடு உடனாயவில்லென்னவல்லேயதனை *
இறுத்திட்டவளின்பமன்போடணைந்திட்டு இளங்கொற்றவனாய்த்துளங்காதமுந்நீர் *
செறித்திட்டிலங்கைமலங்கவரக்கன் செழுநீண்முடிதோளொடுதாள்துணிய *
அறுத்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 8

| | |
|---|---|
| நெறித்தி | நெறித்திராநின்ற |
| மென் | மிருதுவான |
| கூழை | மயிர்முடியையும் |
| நல் நேர் இழையோடு | விலக்ஷணமாய் அழகிய ஆபரணங்களையுமுடையளான ஸீதையோடு |
| உடன் ஆய | கூடப்பிறந்த |
| அல் அன்ன | |
| வில் அதனை | அந்தவில்லை |
| இறுத்திட்டு | முறித்துவிட்டு |
| அவள் இன்பம் | அவளோடு கலவியாலுண்டாகுமின்பத்தை |
| அன்போடு | ப்ரீதியுடனே |
| அணைந்திட்டு | புஜித்து |
| இள கொற்றவன் ஆய் | யுவராஜராவாயிருந்து |
| | (பிறகு வனவாஸம் நேர்ந்த பின்பு) |

| | |
|---|---|
| துளங்காத | ஒருவராலும் அசைக்க முடியாத |
| முந்நீர் | கடலை |
| ட்டு | |
| மலங்க | லங்கை கலங்கும்படியாக |
| அரக்கன் | இராவணனுடைய |
| செழு | செழித்த |
| நீள் | நீண்ட |
| முடி | |
| | தோள்களும் |
| தாள் | கால்களும் |
| துணிய | சிதிலமாகும்படியாக |
| அறுத்திட்டவன் காண்மின் | அறுத்தொழித்தவனன்றோ |

இன்று ஆய்ச்சியரால் அளை வெண்ணெய் உண்டு ஆப்புண்டு இருந்தவன்—,

***—ஸீதாபிராட்டியின் விவாஹத்திற்கு சுல்கமாக அமைக்கப்பட்டிருந்த வில்லை முறித்து அவளைக் கைபிடித்து இன்பம் நுகர்ந்தமை முன்னடிகளிற் கூறப் பட்டது. [நன்னெறியையோடுடனுய] இது வில்லுக்கு விசேஷணமாகவுள்ளது. முன் ஞெரு காலத்தில் தேவசில்பியான விச்வகர்மாவினுல் நிருமிக்கப்பட்ட சிறந்த இரண்டு விற்களுள் ஒன்றைச் சிவபிரானும் மற்றொன்றைத் திருமாலும் எடுத்துக் கொள்ள, பின்பு ஒரு காலத்தில் அவ்விற்களுள் சிறந்தது இன்னதென்பதை அறிய விரும்பிய தேவர்களின் வேண்டுகோளாற் பிரமன் அரனுக்கும் அரிக்கும் போரை மூட்டிவிட, அங்ஙனமே அவர்கள் அவ்விற்களைக் கொண்டு பொருகையில், சிவ பிரானது வில் சிறிது முறிபட, அவ்வாறு இற்றவில்லைச் சிவபிரான் ஜநககுலத்துத் தேவராதனென்னும் அரசனிடம் கொடுத்திட அது வம்சபரம்பரையாய் ஜநகமஹா ராஜனளவும் வந்ததென்றும், அதனையே ஸீதைக்குக் கந்யாசுல்கமாக ஜநகன் வைத்திருந்தான் என்றும் இதிஹாஸங்களில் விளங்கா நிற்க, அந்த வில் பிராட்டி யோடு கூடப்பிறந்ததாக இப்பாட்டில் அருளிச் செய்யப்படுகிறது என் கொல்? என்று பலரும் சங்கிப்பர்கள்; அந்தவில் ஸீதையோடு கூடப்பிறந்ததாக இங்குச் சொல்லப்படுவதன்று. இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்யான வருளிச் செயல் காண்மின்;—"இந்த வில்லை முறித்தார்க்கு இவளைக் கொடுக்கக் கடவதாக நியமித்தபடியாலே 'உடனுய' என்கிறது" என்று. சுல்கபந்தத்தினுல் பிராட்டியை விட்டுப் பிரியாதிருந்த வில் என்றவாறு.

உடனுய என்றதற்குமேல் பல பாடபேதங்களுள; "அல்லன்ன வில்லே யதனை" என்றும், "வல்லன்ன " என்றும், "வில்லென்ன வல்லே யதனை" என்றும். ['அல் என்று இருளாய், இருண்ட வில் என்றுமாம்' என்பர் பெரியவாச்சான் பிள்ளையும்.] 'வல்லன்ன' என்ற பாடத்தில் [கடினமான] என்று பொருள்.

இளங்கோற்றவனுய் என்றதனுல், பன்னிரண்டு வருஷகாலம் திருவயோத்தியில் இளங்கோவாயிருந்து கொண்டு பிராட்டியோடு போகரஸமநுபவித்தமை நினைக்கப் படுகிறது. அதற்கு மேல் கைகேயி வரம் வேண்டக் கானகம் சென்று கடலடைத்து இராவணனைக் கொன்ற வரலாறு மூன்றமடியில் அநுஸந்திக்கப்படுகிறது. இப்படிப் பட்ட வீரப்பாடுடையவன் இவர் தன் பெருமையை யெல்லாமொளித்து எளிமையைக் காட்டாநின்றானென்கிறார். ... .... .... ... 8

சுரிந்திட்டசெங்கேழுளைப்பொங்கரிமாத் தொலையப்பிரியாதுசென்றெய்தி *எய்தா
திரிந்திட்டிடங்கொண்டடங்காததன்வாய் இருகூறுசெய்தபெருமான் முனநாள்*
வரிந்திட்டவில்லால்மரமேழுமெய்து மலைபோலுருவத்தோரிராக்கதிமூக்கு*
அரிந்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால் அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. 9

| | | | |
|---|---|---|---|
| சுரிந்திட்ட | சுருண்டிரா நின்ற | எய்தாது திரிந்திட்டு இடம் கொண்டு அடங்காத அதன்வாய் | கிட்டவாராமல் அங்குமிங்கும் திரிந்து கொண்டு அவகாசங்கொடாதே அவிதேய மாய்க்கிடந்த அந்தக் குதிரையின் வாயை |
| செம் கேழ் | சிவந்தநிறமுடையனவான | இரு கூறு செய்த | மாக்கி யொழித்த |
| உளை | பிடரிமயிர்களையுடைத்தாய்க் கொண்டு | பெருமான் | ஸ்வாமியாய், |
| பொங்கு | களித்துவந்த | முனநாள் | (அன்றியும்) முன்பொரு காலத்திலே |
| அரிமா | குதிரைவடிவனுன கேசி யென்னுமசுரன் | வரிந்திட்ட | கட்டுடைத்தான |
| தொலைய | முடிந்துபோம்படியாக | | |
| பிரியாது | அதனைவிடாதே | | |
| சென்று எய்தி | சென்றுகிட்டி, | | |

| | | | |
|---|---|---|---|
| வில்லால் | வில்லாலே | மூக்கு | மூக்கை |
| மரம் ஏழும் | மராமரங்களேழையும் | அரிந்திட்டவன் காண் மின் | அறுத்தொழித்தவனை பெருமானன்றோ |
| எய்து | முறித்தவனாய், | | |
| மலை போல் உருவம் | மலைபோன்ற வடிவை யுடையவளான | | |
| ஒரு இராக்கதி | சூர்ப்பணகையென்னும் ராக்ஷஸியினுடைய | இன்று ஆய்ச்சியரால் உண்டு ஆப்புண்டு | அளை வெண்ணெய் பன |

* * *—குதிரை வடிவுகொண்டு நலிய வந்த கேசியைக் கொன்றும் மராமரமேழ் செற்றும் சூர்ப்பணகைக்கு அங்கபங்கஞ் செய்தும் தன் விறலை வெளியிட்டுக் கொண்ட பெருமான இவர் இன்று வெண்ணெய்க்களவுக்காகக் கட்டுண்டு கிடக்கிறானென்கிறார்.

கேழ்—ஒளியும் நிறமும். கம்ஸனாலேவப்பட்ட அஸுரர்களில் கேசியென்பானொருவன் குதிரை வடிவங்கொண்டு ஆயர்கள் அஞ்சி நடுங்கும்படி கனைத்துத் துரத்திக்கொண்டு கண்ணபிரான்மேற் பாய்ந்துவர, அப்பெருமான் தன் திருக்கையை நன்றாகப் பெருக்கி நீட்டி அதன் வாயிற் கொடுத்துத் தாக்கிப் பற்களையுதிர்த்து உதட்டைப் பிளந்து அதனுடம்பையும் இருபிளவாக வகிர்ந்து தள்ளினனென்ற வரலாறு அறிக. அக்குதிரையின் பிடரிமயிர் சுருண்டு செந்நிறங் கொண்டிருந்தது பற்றிச் சுரிந்திட்ட செங்கேழுளை என்று அடைமொழியாயிற்று. அக்குதிரை சிலமையம் கண்ணபிரான் கையிற் பிடிகொடாமல் அவிதேயமாய் அங்குமிங்கும் சிதறிக்கொண்டிருந்தமை தோன்ற "எய்தாது இரிந்திட்டிடங் கொண்டடங்காத" எனப்பட்டது. 'அடங்காதது' என்ற விடத்துத் தொகுத்தல் விகாரம்.

ராக்கதன் மூக்கை யரிந்திட்டது முன்பும் மரமேழெய்தது பின்பும் நடந்ததாயிருக்க, இங்கு க்ரமமாறாட்டமாகச் சொல்லியிருப்பது பொருந்துமோ வென்று சங்கிக்கவேண்டா; எம்பெருமானுடைய திவ்ய சேஷ்டிதங்களை அநுபவித்தல் மாத்திரமே இங்கு விவக்ஷிதம்; ஆநுபூர்வியாகச் சரித்திரம் எழுதிக்கொண்டு போகிறார்களன்று.

இராக்கதி—ராக்ஷஸீ என்னும் வடசொல் விகாரம். ... .... 9

நின்றார்முகப்புச்சிறிதும்நினையான் வயிற்றைநிறைப்பானுறிப்பால்தயிர்நெய் *
அன்றாய்ச்சியர்வெண்ணெய்விழுங்கிஉரலோ டாப்புண்டிருந்தபெருமானடிமேல் *
நன்றாயதொல்சீர்வயல்மங்கையர்கோன் கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
என்றானுமெய்தாரிடர்இன்பமெய்தி இமையோர்க்குமப்பாலசெலவெய்துவாரே.

| | | | |
|---|---|---|---|
| நின்றார் முகப்பு | நின்றவர்களுடைய முகத்தை | விழுங்கி | (களவாடி) அமுதுசெய்து |
| சிறிதும் நினையான் | கொஞ்சமும் வெட்கப்படாதவனாய் | அன்று | அப்போது |
| | | உரலோடு | உரலோடே |
| வயிற்றை நிறைப்பான் | வயிற்றை நிறைப்பதற்காக | ஆப்புண்டிருந்த | கட்டுண்டிருந்த |
| | | பெருமான் | |
| ஆய்ச்சியர் | இடைச்சிகளுடைய | அடிமேல் | திருவடிகளின்மேலே, |
| உறி | உறிகளிலேயிருந்த | நன்றாய தொல் சீர் | விலக்ஷணமான ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீயையுடையராய் |
| பால் | பாலையும் | | |
| தயிர் | தயிரையும் | வயல் மங்கையர் கோன் | வயல்சூழ்ந்த மங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரான |
| நெய் | நெய்யையும் | | |
| வெண்ணெய் | வெண்ணெயையும் | கலியன் | ஆழ்வார் |

| | | | |
|---|---|---|---|
| ஒலி செய் | அருளிச்செய்த | இன்பம் எய்தி | நித்யாநந்தத்தைப் பெற்று |
| தமிழ் மாலை | இப்பாசுரங்களை | இமையோர்க்கும் அப்பால் செல | தேவர்களுக்கும் அவ்வருகான பரமபதத்தையடையும்படியான |
| வல்லார் | கற்று வல்லவர்கள | எய்துவார் | பெறுவர்கள். |
| ஒன்றும் | ஒருகாலும் | | |
| இடர் எய்தார் | துன்பமடையார்கள் ; | | |

* * *—இத்திருமொழியில் பாசுரந்தோறும் பரத்வகுணத்தை விஸ்தாரமாகவும் ஸௌலப்ய குணத்தைச் சுருக்கமாகவும் பேசியிருக்கச் செய்தே இதில் ஆழ்வார்தம்முடைய ஊற்றம் ஸௌலப்யகுணாநுபவத்தில்தான்—என்பது விளங்கும் இப்பாசுரத்தில் ; உரலோடாப்புண்டிருந்தபெருமானடிமேல் ஒலி செய்தது என்றாயிற்றுத் தலைக்கட்டுவது. இப்படி யருளிச் செய்த இத்திருமொழியைக் கற்றுவல்லவர்கள் ஒருகாலும் ஸாம்ஸாரிக துக்கங்களை அநுபவிக்கப்பெறார்கள் ; அந்தமில் பேரின்பத்தை யடைந்து ப்ரஹ்மாதிகள் குடியிருப்புக்கும் அவ்வருகான பரமபதத்திலே சென்று சேரப்பெறுவர் என்றுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

நின்றார் முகப்புச் சிறிதும் நினையான் வயிற்றை நிறைப்பான்=இப்படிவயிறு தாரியாய்த் திரிகிறானே யென்று பலரும் மேசுவர்களே! என்று சிறிதும் சுணங்காமல் அபூர்ணரைப்போலே வாரிவாரியுண்டு வயிற்றை நிறைப்பவன். ஆச்ரிதர்களின் ஹஸ்தஸ்பர்சமுள்ள பொருள்களாலல்லது போது போக்கமாட்டாத மஹாகுணம் விளங்கும்.

அடிவரவு :—எங்காலும் குன்று உளைந்து தளர்ந்து நீண்டான் பழித்திட் படைநெறி சுரி இனறார் மானம்,

ஆறுந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பத்தாம்பத்து—ஏழாந்திருமொழி—மானமுடைத்துங்கள்.

உரையவதாரிகை :—வெண்ணெய் களவாடி உரலோடு கட்டுண்டிருக்கைக் கீடான பருவத்தை அநுபவித்துப் பேசினது கீழில் திருமொழி. அதற்குமேலே வெண்ணெயையும் பெண்களையும் ஒக்கக் களவு செய்யும்படியான பருவத்தில் சேஷ்டிதங்களையும் அநுபவிக்கவேணுமென்னும் ஆசை கிளர்ந்தது ஆழ்வார்க்கு. அப்பருவந்தான் ஒரு மஹாபாரதமாய்ச் செல்லுமிறே. *ஆற்றிலிருந்து விளையாடுவோங்களைச் சேற்றாலெறிந்தான் என்று முறையிடுவாரும், *வளை துகில் கைக்கொண்டு காற்றிற் கடியனாய் ஓடி அகம்புகுந்தா னென்று முறையிடுவாரும், *மச்சொடுமாளிகையேறி மாதர்கள் தம்மிடம் புகுந்து கச்சொடு பட்டைக் கிழித்துக் காம்பு துகிலவை கீறி நிச்சலுந் தீமைகள் செய்கிறானே யென்று முறையிடுவாரும், *கொத்தார் பூங்குழல் கன்னி யொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு முத்தார் கொங்கை புணர்ந்து வந்தானென்று முறையிடுவாருமாய்த் திருவாய்ப்பாடி முழுதும் பேராரவாரமாய்ச் செல்லும் பருவமிறே. இப்படிப்பட்ட பருவத்திலுள்ள இவனாலே நோவுபட்டு ஊரிலுள்ளாரடங்கலும் ‘அது போயிற்று, இது போயிற்று’ என்று முறைப்பட, அவை கேட்டு யசோதை சொல்லும் பாசுரமும் முறையிடுவார் சொல்லும் பாசுரமுமாய் நிகழ்ந்தவாறுகளை அவரவர்கள் பாவனையாகவே தாம் பேசி யநுபவிக்கிறார் இத்திருமொழியில்.

கிருஷ்ணாவதார சேஷ்டிதந் தவிர வேறோரவதாரத்தின் வாஸநாலவலேசமும் கலசாத திருமொழியாயிருக்கிறது இது. ... ... ... *

மானமுடைத்துங்களாயர்குலம் அதனாற்பிறர்மக்கள்தம்மை *
ஊனமுடையனசெய்யப்பெறாயென் றிரப்பனுரப்பகில்லேன் *
நானுமுரைத்திலேன்நந்தன்பணித்திலன் நங்கைகாள்! நானென்செய்கேன் *
தானுமோர்கன்னியுங்கீழையகத்துத் தயிர்கடைகின்றான்போலும்.

| | |
|---|---|
| ஆயர் குலம் | உங்களிடைக்குலமானது |
| மானம் -த்து அதனால் | மானத்தோடு வாழுந் தன்மையுடைய தாகையாலே |
| பிறர் மக்கள் தம்மை | அயலாருடைய பெண்பிள்ளைகளிடத்திலே |
| ஊனம் யன செய்ய பெறாய் என்று | இழிவான செயல்களைச் செய்யாதொழிய வேணும்' என்று |
| இரப்பன் | வேண்டிக்கொள்வனே யன்றி |
| உரப்ப இல் லேன் | வெருட்டி வார்த்தை சொல்லியறியேன்; |
| | பெண்பிள்ளைகாள்! |

| | |
|---|---|
| நானும் உரைத் திலேன் | (தாயாகிய) நானும் ஒன்று (சீறிச்) சொல்லியறியேன் |
| நந்தன் | (தகப்பனான) நந்தகோபரும் |
| பணித்திலன் | ஒன்று சொல்லமாட்டார்; |
| | (தாய்தந்தையரான நாங்களிருவரும் இப்படி உதாஸீநராயிருப்பதுவே காரணமாக) |
| தானும் | கண்ணபிரான் தானும் |
| ஓர் கன்னியும் | ஒரு இளவாய்க் கன்னியுமாய்க்கொண்டு |
| கீழை அகத்து | கீழண்டை வீட்டில் |
| தயிர் கடைகின்றான் போலும் | தயிர்கடைந்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது; |
| | நான் என் செய்கேன்?—. |

* * *—கண்ணபிரான் செய்த சில தீமைகளைச் சில ஆய்ச்சியர் யசோதைப் பிராட்டி பக்கலிலே வந்து முறையிட, அதற்கு அவ் யசோதை ஆய்ச்சியரை நோக்கிக் கூறும் பாசுரமாய்ச் செல்லுகிறது இப்பாட்டு.

ஆய்ச்சிகாள்! கண்ணன் அது செய்தான் இது செய்தானென்று நீங்கள் என்னிடம் முறையிடுவது உண்மையே; அவனைத் தண்டிக்கும்படியான வன்மை எனக்கு இருக்குமாகில் நீங்கள் என்னிடம் முறையிட்டுக் கொள்வதற்கு ஒரு ப்ரயோஜனமுண்டாகும்; நானோ அவனைச் சீறி ஒரு வார்த்தை சொல்லமாட்டாதவளாயிருக்கிறேன். அவனை நோக்கி நான் ஏதேனும் சொல்ல விரும்பினால் எங்ஙனே சொல்லுகிற வழக்கமென்றால்; நாயனே! நம்முடைய இடைக்குலமானது மிகவும் கௌரவமாக வாழுங்குடி; இக்குடிக்கு இழுக்காக யாரேனும் மறைவில் ஏதேனுஞ் சொன்னாலும் ஸஹிக்கமாட்டோம்; அவ்வளவு மானம்பேணி வாழுங்குடிகாண் இது: ஆகையாலே அயற் பெண்களிடத்தில் நீ இழிவாக நடந்து கொள்வது இக்குலமரியாதைக்குக் கேடாகுமாதலால் தப்பான காரியமொன்றுஞ் செய்யாதே பிரானே! என்று கையைக் காலைப் பிடித்துக்கொண்டு பிரார்த்தித்துச் சொல்லுவனேயன்றிக் கோபித்துச் சொல்லும் வழக்கமே யெனக்கில்லை; நந்தகோபரும் வாய்விட்டுக் கண்டித்தறியார்; கீழண்டையகத்தில் ஓர் இளம்பெண்ணுடனே உட்கார்ந்து அவளுந் தானுமாகத் தயிர்கடைவதாகத் தெரிகிறது; நங்கைகாள்! நீங்கள் சொல்லுவதில் பொய்ம்மையில்லை: தாய்தந்தையரான எங்களுக்கோ அவனைத் தண்டிக்க வன்மையில்லை; நானென்ன செய்வேன்? என்கிறாள்.

[உங்களாயர்குலம் மானமுடைத்து] "கேளார் ஆயர் குலத்தவ ரிப்பழி கெட்டேன்! வாழ்வில்லை" என்ற பெரியாழ்வார் திருமொழியுங் காண்க. மானம், ஊனம்—வடசொற்கள். [உரப்பகில்லேன்] "அஞ்சவுரப்பாள் யசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்" என்ற நாச்சியார் திருமொழியுங் காண்க. உரப்புதல்—அதட்டுதல் [நானுமுரைத்திலேன்] கீழ் "உரப்பகில்லேன்" என்றதன் அநுவாதமே யிதுவும். ... ... 1

காலையெழுந்து கடைந்தவிம்மோர் விற்கப்போகின்றேன் கண்டேபோனேன்*
மாலைநறுங்குஞ்சிநந்தன்மகனல்லால் மற்றுவந்தாருமில்லை*
மேலையகத்துநங்காய்! வந்துகாண்மின்கள் வெண்ணெயேயன்றிருந்த *
பாலும்பதின்குடங்கண்டிலேன் பாவியேனென்செய்கேன் ? என்செய்கேனே.

காலை எழுந்து — விடியற்காலத்திலெழுந்து
கடைந்த — (வருந்திக்) கடைந்த
இம்மோர் — இந்த மோரை
விற்க — விற்பனை செய்ய
போகின்றேனா — (தெருவேறப்) போகாநின்ற நான்
கண்டே போனேன் — (கண்ணபிரான் எதிரே வருவதைப்) பார்த்தே (திடுக்கிட்டுக் கொண்டே போனேன்
மாலை நறு குஞ்சி — பூவணிந்து மணங்கமழப் பெற்ற மயிர்முடியையுடைய
நந்தன் மகன் அல்லால் — அக்கண்ணபிரான்
மற்று வந்தாரும் இல்லை — மற்றொருவரும் இங்கு வரப்ரஸக்தியில்லை ;
மேலை அகத்து நங்காய் — மேலண்டை வீட்டுப் பெண்பிள்ளாய்! [அசோதாய்]
வந்து காண்மின்கள் — (கண்ணன் செய்த களவுகளை இங்கே) வந்துபாருங்கள்
வெண்ணெயே அன்று — (கடைந்து வைத்த) வெண்ணெயை மாத்திரமல்லாமல்
பதின் குடம் — பத்துக் குடங்களிலே
இருந்த — (கடைவதற்காகச் சேமித்து வைத்திருந்த
பாலும் — பாலையும
கண்டிலேன் — காண்கின்றிலேன் ;
பாவியேன் என் செய்கேன் என் செய்கேனே—.

* * *—ஓர் இடைச்சி கண்ணபிரானுடைய வெண்ணெய் பால் களவுகளைச் சொல்லி முறையிடும் பாசுரம் இது. "வெண்ணிறத் தோய்தயிர்தன்னை வெள்வரைப்பின் முன்னெழுந்து கண்ணுறங்காதே யிருந்து கடைய" என்கிறபடியே ப்ராஹ்ம முஹூர்த்தத்திலே யெழுந்து கடைந்தமோரை விற்பதற்காகத் தலையிற் சுமந்து புறப்பட்டு நான் போகாநிற்கச் செய்தே நடுவழியிலே உன் மகன் கண்ணன் எதிர்படக் கண்டு அப்பொழுதே திடுக்கிட்டுப் போனேன் : வீட்டில் புகுந்து என்ன அநர்த்தம் செய்யப்போகிறானோ!' என்று சிந்தித்துக் கொண்டே, போக வேண்டியது தவிரவொண்ணாமையினாலே போனேன் ; இப்போது வந்து பார்த்தால் வெண்ணெயும் காணோம், பத்துக் குடங்களில் நிரப்பி வைத்திருந்த பாலையுங் காணோம் ; விசாரித்ததில், நந்தகிசோரன் தவிர வேறொருவரும் இங்குப் புகுந்ததாகத் தெரியவில்லை ; அவன் இங்கே பண்ணிவிட்டுப் போயிருக்கிற சேஷ்டைகளைக் கண்படைத்தவர்காள்! வந்து காணுங்கோள் ; இங்ஙனே நான் முறையிட்டுப் பயனென்ன ? தண்டிக்கக் கடமைப்பட்டவர்களே ஆளுடை விட்டிட்டிருக்கும்போது பாவியேன் என்செய்வேன்! என்று தன்னில்தான் வெறுத்துரைத்துக் கொள்ளுகிறாளொருத்தி.

முதலடியில் போகின்றேன் என்றது வினைமுற்றன்று ; முற்றெச்சம்.

வெண்ணெயையும் பாலையும் இழந்த வயிற்றெரிச்சல் ஒருபுறமிருக்கவும் கண்ணபிரானுடைய அழகிலே பரவசமாகவே யீடுபட்டவளாதலால் மாலைநறுங் குஞ்சி நந்தன் மகன் என்று பரமபோக்யமாகப் பேசுகிறபடி காண்மின்.

மேலையகத்து நங்காய்! என்றது யசோதைப் பிராட்டியை விளிக்கிறது என்னவுமாம் ; வேறொரு அயல்வீட்டிடைச்சியை விளிக்கிறது என்னவுமாம் ; வேறொரு அயல்வீட்டிடைச்சியை விளிக்கிறது என்னவுமாம். நங்காய் என்று ஏகவசநமாக இருந்தாலும் ஜாத்யேக வசநமாகக்கொண்டு பன்மைப் பொருள் கொள்ளலாம் ; மேலே காண்மின்கள் என்று பன்மையானமுற்று இருக்கையாலே. அன்றி, நங்காய்! என்று ஒருத்தியை யழைத்தவாறே கண்ணபிரானது தீம்புகளைக் கேட்கைக்

லுள்ள ஆவலினால் உள்ளிருந்து பலபெண்கள் எழுந்தோடி வர, 'வந்துகாண்மின்கள்' என்று அவர்களெல்லாரையும் நோக்கிச் சொல்லுகிறாளென்று நிர்வஹிப்பாருமுண்டு. ... ... ... ... ... ... 4

தெள்ளியவாய்ச்சிறியானங்கைகாள்! உறிமேலைத்தடாநிறைந்த *
வெள்ளிமலையிருந்தாலொத்த வெண்ணெயைவாரிவிழுங்கியிட்டு *
கள்வனுறங்குகின்றான்வந்துகாண்மின்கள் கையெல்லாம்நெய்வயிறு *
பிள்ளைபரமன்றிவ்வேழுலகுங்கொள்ளும் பேதையேனென்செய்கேனோ? 3

| | | | |
|---|---|---|---|
| நங்கைகாள்! | — : | வந்து காண்மின்கள் | வந்து பாருங்கள் : |
| தெள்ளிய வாய் | தெளிந்த திருப்பவளத்தையுடையனான | | (செய்த களவை மறைக்க வொண்ணாதபடி) |
| சிறியான் | இச்சிறு பிள்ளையானவன் | கை எல்லாம் நெய் | கை முழுதும் நெய் மயமாயிரா நின்றது ; |
| உறி மேலைத் தடா நிறைந்த | உறியின் மேலிலுள்ள பானையிலே நிரம்பியிருந்த | வயிறு | (இவனது) வயிறானது |
| வெள்ளி மலை இருந்தால் ஒத்த | வெள்ளிமலை போன்றிருந்த | பிள்ளை பரம் அன்று | பிள்ளைப் பருவத்துக்கு ஏற்றதாயிருந்ததில்லை ; |
| வெண்ணெயை | வெண்ணெயை | இ ஏழ் உலகும் கொள்ளும் | இந்த ஸப்த லோகங்களையும் உட்கொள்ளக் கடவது போலும் ; |
| வாரி விழுங்கியிட்டு | (தன் திருக்கையால்) வாரி விழுங்கிவிட்டு | பேதையேன் | அறிவற்றவளான நான் |
| கள்வன் உறங்குகின்றான் | கள்ளத் தூக்கம் தூங்குகின்றான் | என் செய்கேன் | என்ன பண்ணுவேன் ?. |

* * *—யசோதை தானே முறைப்பட்டுப் பேசும் பாசுரம் இது. நங்கைமீர்! உறிமேலே தடாக்களிலே சேமித்து வைக்கப்பட்டு வெள்ளிமலையிருந்தாற்போன்ற வெண்ணெயை அள்ளி விழுங்கிவிட்டு 'இந்தப் பூனையா இந்தப் பாலைக் குடித்தது!' என்னும்படியாகப் பாசாங்குடன் குறட்டைவிட்டுக் கள்ள நித்திரை செய்கின்றான், இந்த வேடிக்கையை வந்துபாருங்கள்; தன் களவை மறைத்துவிட வேணுமென்ற எண்ணத்தினால் ஒன்றுமறியாதவன்போல உறங்குவதாகப் பாவனை காட்டுகின்ற இவன் கையிலுள்ள நெய்யை நன்றாகத் துடைத்துவிட்டன்றோ உறங்கவேணும்; திருடக்கற்றானேயன்றித் திருட்டை மறைக்கும் வகை கற்றானல்லன்; கையெல்லாம் நெய்மயமாக இருக்கும்படியை வந்து காணுங்கோள்; இவ்வளவு வாரியுண்டும் வயிறு நிரம்பினபாடில்லை இவனுடைய பருவத்துக்குத் தக்க வயிறாக இல்லை. இவ்வேழுலகையும் உட்கொள்ளக் கடவதாக இடமுடைத்தாயிரா நின்றது; என்று யசோதை சொன்னதைக்கேட்ட சில ஆய்ச்சிகள் 'அசோதாய்! இத்தயிரும் பாலும் பாழ் போகாமே ஒரு பிள்ளை வேணுமென்றன்றோ நீ பெற்றது; அவன் இப்போது அமுது செய்தானாகில் நீ இப்படி முறையிடுவானேன்?" என்றுசொல்ல, பேதையேன் என்செய்கேனோ! என்கிறாள். வெண்ணெய் போயிற்றே யென்று வருந்துகிறேனல்லேன், இத்தனையும் இவனுக்கு ஜீர்ணியாதொழியில் என் செய்வதென்று வருந்துகின்றேனென்கிறாள் போலும்.

தெள்ளியவாய்ச் சிறியான் = "கண்ணுக்கு இருக்கிறபடியும் செயலிருக்கிறபடியுங்காண்" என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி. ஒரு சிறுபிள்ளையாகக் கண்ணுக்குத் தோற்றுவானாயினும் செய்கிற காரியம் வலிதாயிரா நின்ற தென்கை. தெள்ளியவாய் என்ற விசேஷணத்தினால், கள்ளத்தனம் முகத்திலே தோற்றாமே தெளிவுதோற்ற விரா நின்ற தென்கை. "தெள்ளியவாசிரியா" என்பது சிலருடைய பாடமாம். அப்பாடத்தில் 1. "நாளிளந் திங்களைக்

கொள்விடுத்து, வேயகம்பால் வெண்ணெய் தொடுவுண்ட" என்கிற பாசுரத்தின் படியே பொருள் கொள்ளவேணும்: அதாவது, உறிகளிலே சேமித்து வைத்த வெண்ணெயைக் களவு காணப்போன போது தன் திருநிறத்தின் இருட்சியாலும் அவ்விடத்தின் இருட்சியாலும் ஒன்றுந் தெரியாமையாலே தடவாநிற்கச் செய்தே கையிலே வெண்ணெய்த்தாழிகள் அகப்படப் பெற்ற மகிழ்ச்சியினால் சிரிப்பு உண்டாகும்; பூர்ண சந்திரனுடைய கிரணம்போலே திருமுத்துக்களின் ஒளி புறப்படவே அந்த வொளியையே கைவிளக்காகக் கொண்டு வாரி விழுங்குவது வழக்கம் என்க. தெள்ளியவா—தெளிவாக, ரிரியா—சிரித்து என்றபடி. 'செய்யா' என்னும் வாய்பாட்டு உடன்பாட்டிறந்தகால வினையெச்சம். இப்பாடத்திற் காட்டிலும் மூந்தின பாடமே வியாக்கியானத்தோடு நன்கு இணங்கும்.

[கையெல்லாம் நெய்] முற்காலத்தில் ஒருபிள்ளை அரசன் தோட்டத்திற் புகுந்து மல்லிகையரும்புகளைத் திருடிக் கொண்டிருக்கையில் அதையறிந்த தோட்டக்காரன் அவனைப்பிடித்து, ராஜஸபைக்குக் கொண்டுபோகா நிற்கையில் அதனை யுணர்ந்த அக்கள்வன் 'இந்த ஆபத்தில் நின்றும் எங்ஙனே தப்பிப் பிழைப்பது' என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்கையில் இச்செய்தியை யறிந்த அவனது தந்தை 'வாயுண்டானால் பிள்ளை பிழைக்கிறான்' என்று அப்பிள்ளையின் செவியிலே படுமாறு செய்விக்க, 'பாம்பின் சுவடு பாம்புக்குத் தெரியும்' என்றாற்போல் தந்தை சொற்கருத்தை யுணர்ந்த அப்புதல்வன் அந்த மல்லிகை யரும்புகளைத் தின்றுமென்றுவிட்டான்; பிறகு வெறுங்கையனான அவனை என்சொல்லி ராஜ தண்டனைக்கு ஆளாக்குவதென்று திகைத்த தோட்டக்காரன் அவனை விட்டிட்டான் என்றொரு கதையுண்டு; தின்னக் கூடாதவற்றையும் தின்று களவைமறைத்துக் கொள்ளும் பிள்ளைகளின்படி தெரிந்திருந்தும் உண்ட நெய்யின் சுவட்டை நாவினால் நக்கிமறைத்துக் கொள்ளலாமாயிருக்க அங்ஙனஞ்செய்யாதே களவு நன்கு வெளிப்படுமாறு கையெல்லாம் நெய்யாகவே கிடந்தது என்னே! இப்படியும் ஒரு பேதைமையுண்டோ? என்று யசோதை தன்னில்தான் உள்குழைகின்றாள் போலும்.

"யந்நாம காத! நவநீத மஞுசுரஸ் த்வம் தச்சாதநாய யதி தேமதிரா விராஸீத், கிம் மூக்த! திக்தமமுநா கரபல்லவம் தே காத்ரே ப்ரம்ருஜ்ய நிரகா: கில நிர்விசங்க:" என்ற ஆழ்வானுடைய அதிமாநுஷஸ்தவ-ஸ்ரீஸூக்தி இங்கே ஸ்ம்ருதி விஷயமாகும். [வெண்ணெயைக் களவுசெய்த கண்ணன் உடையவர்கள் தன்னைப்பிடிக்க வருகிற சுவடறிந்து கையதுவாயதான வெண்ணெயை மறைத்திடவேணுமென்றெண்ணி 'வாயிலே யாவது கையிலே யாவது வெண்ணெயிருக்கக் கண்டாலன்றோ நம்முடைய களவு வெளிப்படலாவது, கையிலும் வாயிலும் இல்லாதபடி யாக்கி விடுவோம்' என்று வெண்ணெயை யெல்லாம் உடம்பிலே தடவிக்கொண்டு நாம் ஆர்க்கும் அஞ்சவேண்டியதில்லை' என்று நிர்ப்பயனாய் வெளிப் புறப்பட்டானென்கிற ஒரு ஸ்ரீ சேஷ்டிதத்தை அநுஸந்தித்து 'என் நாயனே! இப்படியும் ஒரு முக்த்யமுண்டோ? வெண்ணெய்க் களவை மறைக்க நினைத்து அது நன்கு வெளியாம்படியான காரியஞ் செய்தாயே!, இது உண்மையில் முக்த்யத்தாலோ? அன்றி முக்த்ய நாட்யத்தாலோ? சொல்லாய் பிரானே! என்றார்.] இங்கு, நெய்யை நக்கியும் உண்ணாமல் உடம்பிலும் தடவிக்கொள்ளாமல் கையிலேயே தோயவைத்துக்கொண்டிருப்பது முக்த்யத்திலும் மிக்க முக்த்யமிறே.

பரம்—பர: என்ற வடசொல் விகாரம்.

கீழ் மேவிற்பாட்டுக் போல இப்பாட்டிலும் ஈற்றில் 'என் செய்கேனென் செய்கேனே' என்று இரட்டித்து ஓதுதல் அத்யாபக பாடமாயினும் அது யாப்புக்குப் பொருந்தாது. .... ... ... ... ... 3

மைந்நம்புவேற்கணல்லாள் முன்னம்பெற்ற வளைவண்ணநன்மாமேனி *
தன்னம்பிநம்பியுமிங்குவளர்ந்தது அவனிவைசெய்தறியான் *
பொய்ந்நம்பிபுள்ளுவன்கள்வம்பொதியறை போகின்றவாதவழ்ந்திட்டு *
இந்நம்பிநம்பியா ஆய்ச்சியர்க்குய்வில்லை யென்செய்கேன்? என்செய்கேனே. 4

| | | | |
|---|---|---|---|
| மை நம்பு | மையணிந்த | இவை செய்து அறியான் | இப்படிப்பட்ட தீம்புகளைச் செய்ததில்லை ; |
| வேல் கண் | வேற்படை போன்ற கண்களையுடையளான | பொய் நம்பி | பொய்யேவடிவெடுத்தவனாய் |
| நல்லாள் | யசோதைப் பிராட்டி யரானவள | புள்ளுவன் | வஞ்சகனாய் |
| பெற்ற | பெற்ற | கள்வம் பொதி அறை | கள்ளத்தனத்திற்குக் கொள்கலமா யிருப்பவனான இக் கண்ணபிரான் |
| வளைவண்ணம் | சங்குபோல் வெண்ணிறத்த தாய் | | (தான் ஒரு பாவமுமறியாதவன் போல) |
| நல் மா | மிகச்சிறந்த | தவழ்ந்திட்டு | தவழ்நடைகற்று |
| மேனி | திருமேனியையுடைய | போகின்ற ஆ | போகிறபடி என்னே !; |
| தன் நம்பி நம்பியும் | பலராமனும | இ நம்பி நம்பி ஆ | இந்த ஸ்வாமி ஸ்வாமியாக |
| முன்னம் | முன்பு | ஆய்ச்சியர்க்கு | இடைச்சிகளுக்கு |
| இங்கு | இத்திருவாய்ப்பாடியில் | உய்வு இல்லை | ஜீவிக்கவழியில்லை ; |
| வளர்ந்தது | வளர்ந்ததுண்டு ; | | என் செய்கேன் என் செய்கேன்—. |
| அவன் | அந்த பலராமன் | | |

***--நம்பி மூத்தபிரானை [பலராமனை]ப் புகழ்ந்துகொண்டு கண்ணபிரானைப் பழித்துப் பேசுகிறாளொரு ஆய்ச்சியின் பாசுரமாய்ச் இது. 1. "முன்னலோர் வெள்ளிப் பெருமலைக்குட்டன்" என்கிறபடியே வெள்ளை வெளேலென்று இக் கண்ணனுக்கு முற்பிறந்தவனான பலராமனும் இத் திருவாய்ப்பாடியில் வளர்ந்ததுண்டு; அவன் இங்கு விளையாடித் திரியும்போது நாங்கள் இப்பாடுபட்டறியோம்; சூது வஞ்சனை கள்வம் ஒன்றுமறியா னவன். இக்கண்ணபிரானோ வென்னில், மெய்கலவாத பொய்யுரைகளிற் சிறந்தவன்; கடைகிறபோதே பிடித்து 'இவர்கள் எங்கே வைப்பர்களோ' என்று அடியொற்றிக்கொண்டு திரியும்படியானவன்: களவு என்னும் பொருளை வைத்து வைப்பதற்குப் பாங்கான பாத்திரமா யிருப்பவன்; களவுகளை வேண்டினபடி செய்துவிட்டு 'இக் குழந்தை இவ்வளவு காரியம் செய்யுமோ? என்று ஒருவரும் நம்பவொண்ணாதபடி தவழ்நடை பயில்கிறபடியை என்ன சொல்லுவேன்!. இவன் இப்படி சூதும் வஞ்சகமும் கள்வமும் மிக்கவனாக இவ்வூரில் இடைச்சிகளுக்கு வாழ வழியில்லை; இவன் கீழே இச்சேரியில் எங்ஙனே குடியிருப்பபெனன்கி

எம்பெருமானால் நியமிக்கப்பட்ட யோக நித்திரை யெனப்படும் மாயை நந்தகோபருடைய கோகுலத்திலிருந்த வஸுதேவ பத்தினியான ரோஹிணியின் வயிற்றிலிருந்த வாயுருபமான ஆறுமாதத்துக் கர்ப்பத்தைக் கலைத்துவிட்டு வஸுதேவருடைய மற்றொரு பத்தினியான தேவகியின் வயிற்றிலிருந்த ஆதிசேஷாம்சமான கர்ப்பத்தைக் கொண்டுபோய் அந்த ரோஹிணியின் வயிற்றிற் சேர்த்திட இங்ஙனம் வஸுதேவ பத்தினிகளுள் தேவகியின் கர்ப்பத்தில் (ஏழாவது கருவாக) ஆறுமாஸமும், ரோஹிணியின்கர்ப்பத்தில் மற்றோர் ஆறுமாஸமுமிருந்து பலராமன் பிறந்தனனென்று இதிஹாஸங் கூறும். ஆகவே, மைந்நம்புவேற்கண் நல்லாளென்றது, தேவகியையாகவுமாம், ரோஹிணியையாகவுமாம்.

மை நம்பு கண்=மையை விரும்பி யிருக்கின்ற கண்களையுடையவளென்க. "நம்பும் மேவும் நசையாகும்மே." வளைவண்ணநன்மாமேனி] பலராமன் ஆதிசேஷ

னுடைய அட்டகாசத்தால் சங்குபோல் வெளுத்த நிறத்தனாயிருப்பன்; "வளை கொண்ட வண்ணத்தன் பின்தோன்றல்" என்றார் கீழும். "வெள்ளிப் பெரு மலைக் குட்டன்" என்றார் பெரியாழ்வாரும். [நம்பி நம்பியும்] ஸம்ப்ரதாயத்தில் பலராமனுக்கு 'நம்பி மூத்தபிரான்' என்று திருநாமம் வழங்கும். தன் நம்பி நம்பியும் என்றதை "நம்பி தன் நம்பியும்" என்று அந்வயித்துக் கொள்ளலாம். (முதல்நம்பி கண்ணபிரானைச் சொல்லி, இரண்டாம் நம்பி பலராமனைச் சொல்லுகிறது.)

[illegible] = 'நம்பியால்' என்றபாடம் மறுக்கத்தக்கது. 'நம்பியா' என்றது 'நம்பியாக' என்றபடி. "நிரபேக்ஷனை இவன் இவனாக, இவ்வூரில் இடைச்சிகளுக்கு [illegible] விரகில்லை" என்பது பெரியவாச்சான்பிள்ளை வியாக்யான ஸ்ரீஸூக்தி. (இவன் இவனாக) என்றது—இவன் இப்படி தீம்பில் தறையற்றவனாயிருக்கையாலே என்றபடி. ... ... ... 4

[illegible] வந்திலன் நானிங்கிருந்திலேன் தோழிமாராருமில்லை *
சந்தமலர்க்குழலாள் தனியே விளையாடுமிடங்குறுகி *
பந்துபறித்துத் துகில்பற்றிக் கீறிப் படிறன்படிறுசெய்யும் *
நந்தன்மதலைக்கிங்கென் கடவோம்நங்காய் என்செய்கேனென்செய்கேனே? 5

| | | | |
|---|---|---|---|
| நங்காய் | [illegible] நம்பிராட்டியே!, | குறுகி | சென்றுகிட்டி |
| அத்தன் | (இப்பெண்ணின் தாயின்) தகப்பனார் | பந்து பறித்து | (அவளது கையில் நின்றும்) பந்தைப்பிடுங்கியும் |
| வந்திலன் | வீடு வந்து சேரவில்லை; | துகில் பற்றி கீறி | துணியைப்பிடித்துக் கிழித்தும் |
| நான் இங்கு இருந்திலேன் | நானும் வீட்டிலிருந்திலேன்; | படிறு செய்யும் | |
| தோழிமாரார் இல்லை | தோழியரும் ஒருவருமில்லை; | படிறன் | தூர்த்தனாகிய |
| சந்தம் மலர் குழலாள் | பரிமளமிக்க பூக்களை யணிந்த கூந்தலையுடையவளான என் மகள் | நந்தன் மதலைக்கு | கண்ணன் விஷயத்திலே |
| தனியே விளையாடும் இடம் | ஒருத்தியாயிருந்துகொண்டு விளையாடிக்கொண்டிருந்த இடத்திலே | இங்கு என் கடவோம்? | இவ்விடத்தில் என்ன செய்யக் கடவோம்? |
| | | | என் செய்கேன் என் செய்கேன்—, |

* * *—ஒரு ஆய்ப்பெண் பந்தடித்துக்கொண்டிருந்த தனியிருப்பிலே கண்ணபிரான் சென்று செய்த தீமைகளைச் சொல்லி ஓரிடைச்சி முறையிடும் பாசுரமிது. கன்றுகாலிகளை மேய்க்க வெளியிற்சென்ற வீட்டுத் தலைவர் வீடு வந்து சேர்ந்திலர்; நானும் தயிர் மோர் முதலியன விற்க வெளியே போயிருந்தேனாதலால் வீட்டிலிராதொழிந்தேன். பெண்ணின் தோழியர்களும் பிரிந்திருந்தார்கள்; இந்த நிலைமையில் என்மகள் "காரார் குழலெடுத்துக் கட்டி, கதிர் முலையை வாரார வீக்கி மணிமேகலை திருத்தி, ஆராயில்வேற்கணஞ்சனத்தின் நீறணிந்து, சீரார் செழும்பந்து கொண்டடியா நின்றேன் நான்" என்றாற்போலே அலங்காரங்கள் செய்துகொண்டு தனியே பந்துவிளையாடல் பயில்பவளாயிருந்தாள். இவன்தான் 'எந்தப் பெண் எந்த வேளையில் எங்கே தனியேயிருப்பள்' என்று ஆராய்ந்து திரியுமவனாகையாலே அங்கே அடியொற்றினான்! அவள் கையில் நின்றும் பந்தைப்பறித்தான்; அதைப் பறித்துக்கொண்டு பேசாமற் போய்விடலாமே; தான் வந்து அதிகப்ரஸங்கங்கள் செய்ததைப் பலருமறிந்திட வேணுமென்று அவளுடைய புடவையைப் பற்றிக் கிழித்தான்; இவனே தீம்பனென்று ப்ரஸித்தி பெற்றவன்; இவன் செய்த தீம்புகளை இன்னமும் நான் விவரித்துச் சொல்லவேணுமோ? படிறு செய்தானென்று சுருங்கச் சொல்லலாமத்தனையன்றி அதிகமாக ஒன்றுஞ் சொல்ல

கில்லேன். இங்ஙனே பெருந்தீம்பனை நந்தகுமாரன்கீழே நாங்கள் எங்ஙனே குடியிருக்கவல்லோம்? செய்வதொன்றறியேனே! என்கிறாள்.

படிறு—தகாத காரியம். ... ... ... ... 5

மண்மகள்கேள்வன்மலர்மங்கைநாயகன் நந்தன்பெற்றமதலை *
அண்ணலிலைக்குழலூதிநஞ்சேரிக்கே அல்லிற்றன்வந்தபின்னை *
கண்மலர்சோர்ந்துமுலைவந்துவிம்மிக் கமலச்செவ்வாய்வெளுப்ப *
என்மகள்வண்ணமிருக்கின்றவாநங்காய்! என்செய்கேனென்செய்கேனே? 6

| | | | |
|---|---|---|---|
| நங்காய் | யசோதைப்பிராட்டியே! | நம் சேரிக்கே | நம் |
| மண் மகள் கேள்வன் | பூமிப் பிராட்டிக்கு வல்லபனாய் | வந்த பின்னை | வந்த பிறகு, |
| மலர் மங்கை நாயகன் | பெரிய பிராட்டியார்க்கு நாயகனாய் | கண் மலர் சோர்ந்து | குவளைமலர்போன்ற கண்கள் வதங்கியும் |
| நந்தன் பெற்ற மதலை | நந்தகோபன் பெற்ற பிள்ளையாய் | முலை வந்து விம்மி | முலைகள் நெறித்துக் கிளர்ந்தும் |
| அண்ணல் ஆனா | நுண் பிள்ளைத்தனத்தில் குறையற்றவனான கண்ணபிரான் | கமலம் செம் வாய் வெளுப்ப | தாமரைபோற் சிவந்த அதரம் வெளுத்துப் போகவும |
| இலை குழல் ஊதி | இலையினாலாகிய ஊது குழலை ஊதிக்கொண்டு | என மகள் வண்ணம் இருக்கின்றவா | என்மகளின் வடிவு விவர்ணப் பட்டிருக்கிற படியை என் சொல்வேன்!; |
| அல்லில் | இரவில் | | |

என் செய்கேன் என் செய்கேன்—.

* * *—கீழ்ப்பாட்டில் "பந்து பறித்துத் துகில்பற்றிக் கீறி" என்று ஒருத்தி முறையிட்டதைக் கேட்ட இன்னொருத்தி, தேள்கொட்டித் துடிக்கிறவன் வாளாலறுப்புண்டு துடிப்பவனைக் கண்டு துடிப்படங்குமாபோலே நம்முடைய துயரத்தைக் கேட்டுத் தன் துயரம் தொலையப்பெறுக வென்றெண்ணி, கண்ணபிரான் தன் மனையிற் செய்த பெரும்பிழை யொன்றை யெடுத்துப்பேசி முறைப்படுகின்றாள். [கீழ்ப்பாட்டில் ஸம்போகத்தின் உபக்ரமமாத்ரம்; இதில் ஸம்போகம் செய்து தலைக்கட்டினபடி சொல்லுகிறதென்க.]

பழித்து முறையிடுமவர்கள் 'மண்மகள் கேள்வன் மலர்மங்கை நாயகன்' என்று ஏத்தவேணுமோ வென்னில் இது ஏத்தும் வார்த்தையன்று; இவனுக்கு என்ன கேடு? தனக்குவாய்த்த மனைவியர் இல்லையோ? மண்மகளையும் மலர்மகளையும் தன் இஷ்டப்படி அநுபவிப்பதற்கு இடையூறு செய்வாரார்? அகாலத்திலே நம்மனையிலே வந்து இப்பாடு படுத்தவேணுமோ?" என்கிறாள். அன்றியே, கண்ணனைத் தாய்மார் முதலானோர் தாலாட்டும்போது 'மண்மகள் கேள்வனே தாலேலோ மலர் மங்கை நாயகனே தாலேலோ' என்றாற்போலே சொல்லக்கேட்டு அதனை அநுவதிக்கிறாளென்னவுமாம்.

தான் ஏதோ ஸங்கேதம் செய்துவைத்தவன் போல __ ல வருவதும், மெல்லிய ஓசைபட இலைக்குழலை ஊதிக்கொண்டு வருவதும், என் மகளைக் *கண் மலர் சோர்ந்து முலைவந்து விம்மிக் கமலச் செவ்வாய் வெளுப்ப விவர்ணப்படுத்துவதும் தகுதியோ? என்பெண் நிறமழிந்து கிடக்குங் கிடையைக் காணவல்லீர்களோ? இழந்த நிறம் மீண்டும் இவளுக்கு உண்டாகும்படி நான் என்ன உபாயம் செய்யவல்லேன்? என்று தடுமாறுகிறாள்.

இரண்டாமடியில் 'அல்லிற்றன்' என்ற பாடம் பெரும்பாலும் வழங்குமாயினும் அது பொருந்தாது. "குழலையும் ஊதிக்கொண்டு ராத்ரியிலே வந்த பின்னை" என்

பது வியாக்யான வாக்யம். ஆகவே 'அலவற்றான' என்ற பாடமே 'அலவுற்றான்' என விகாரப்பட்டு விட்டதென்னவேணும். அன்றி, 'அல்லுந்தான்' என்றிருந்தால் ஒருவாறு பொருந்தும்; அல்லு, தான் என்று பிரிக்க. அல் என்பது உகரச்சாரியை பெற்றதென்க. அல்லில் என்பதே பொருள்.

"நன்மலர் சோர்ந்து முலை வந்து விம்மிக் கமலச் செவ்வாய் வெளுப்ப" என்றதை நோக்குமிடத்துக் கண்ணபிரானுடைய லீலாவிலாஸம் மர்யாதையை மீறிச் சென்றதாக விளங்குகின்றதே யென்று சிலர் சங்கிப்பர்கள்; அது வேண்டா; ஸ்ரீ வேதாந்த தேசிகன் அருளிச் செய்த யாதவாப்யுதய காவ்யத்தில், [4-63] "விமோஹநே வல்லவயோஷிதாம் த்வ ப்ரஹ்மசர்யம் பிபிதே ததீயம், ஸம்பத்ஸ்யதே பாலக ஜீவநம் தத் ஸத்யேந யேநைவ ஸதாம் ஸமக்ஷம்." என்றுள்ள ச்லோகரத்நம் குறிக்கொள்ளத் தக்கது. பண்டு பாரதப் போரில் அர்ஜுநன் மகனான அபிமந்யுவின் மனைவியாகிய உத்தரை யென்பவளுடைய கருவை நோக்கி அச்வத்தாமாவினால் ப்ரயோகிக்கப்பட்ட அபாண்டவாஸ்திரத்தினால் அக்கருவிலிருந்த சிசு [பரீக்ஷித்] கரியொழிய, அச்சிசுவை மீண்டும் உயிர் பெறுத்தவேணுமென்று ஸுபத்திரையால் பிரார்த்திக்கப்பட்ட கண்ணபிரான் தனது செந்தாமரை மலர்போன்ற திருவடியினால் அச்சிசுவை அடிகொட்டி முடியீறாக ஸ்பர்சித்தருள, உத்தக்ஷணத்திலேயே அச்சிசு உயிர் பெற்றமை ப்ரஸித்தம். அப்படி கண்ணபிரான் திருவடியால் ஸ்பர்சிக்கும்போது, "யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ்ச மயி திஷ்டதி, அப்யாஹதம் மமைச்வர்யம் தேந ஜீவது பாலக:" [நான் உண்மையான ப்ரஹ்மசாரியாக [அஸ்கலித வீர்யனாக] இருப்பேனாகில் ......இந்த சிசு உயிர் பெற்று எழுந்திருக்கட்டும்] என்று சபதஞ்செய்தருளினனாகப் புராணங்கள் கூறுகின்றன. அவ்விஷயத்தையே தேசிகன் மேற்குறித்த யாதவாப்யுதய ச்லோகத்தில் விளக்கியருளினர். அந்த ச்லோகத்தின் வியாக்கியானத்தில் அப்பய தீக்ஷிதர் விரிவாக வகுத்துள்ள விஷயங்களும் நோக்கத்தக்கன. .... .... ... 6

**ஆயிரங்கண்ணுடையிந்திரனாருக்கென்று ஆயர்விழவெடுப்ப ***
**பாசனநல்லனபண்டிகளாற் புகப்பெய்தவதனையெல்லாம் ***
**போயிருந்தங்கொருபூதவடிவுகொண்டு உன்மகனின்றுநங்காய்! ***
**மாயனதனையெல்லாம்முற்றும் வாரிவளைத்துண்டிருந்தான்போலும்.**

| | | | |
|---|---|---|---|
| நங்காய் | அசோதாய்!, | அங்கு | அவ்விடத்தில் |
| ஆயர் | இடையர்கள் | மாயன் உன் மகன் | மாயச்செய்கை வல்லவனான உன் பிள்ளை |
| ஆயிரம் கண் உடை இந்திரனாருக்கென்று | ஸஹஸ்ராக்ஷனான தேவேந்திரனுக்காக | போய் இருந்து | போயிருந்து |
| விழவு எடுப்ப | ஆராதனை செய்வதற்கு | ஒரு பூதம் வடிவு கொண்டு | ஒரு [illegible]ன் வடிவைப் பூண்டு |
| நல்லன பாசனம் | நல்ல பாத்திரங்களிலே | அதனை எல்லாம் முற்ற | அவை முழுவதையும் |
| பண்டிகளால் | (பலபல) வண்டிகளாலே | வளைத்து வாரி | (கைகளால்) வாரித்திரட்டி |
| புகப் பெய்த அதனை எல்லாம் | கொண்டுவந்து தள்ளப்பட்ட அந்த அன்ன ராசியை யடங்கலும் | உண்டிருந்தான் போலும் | உட்கொண்டானாயிற்று. |
| இன்று | இன்றைய தினம் | | |

' ' '—கண்ணபிரானுடைய அதிமாநுஷ சீலவ்ருத்த வேஷங்களைக்கண்டு ஆயர்களனைவரும் 'இவனே நம் குலக் கொழுந்து; இவன் கட்டளைப்படியே நாம் நடக்க வேண்டும்' என்று நிச்சயித்திருந்தனர்; இங்ஙனமிருக்கையில் சரத்காலம் வந்தது; அப்போது இடையர்கள் வருஷந்தோறும் நடத்துவது போல் வழக்கப்படி

இந்திரனுக்குப் பூஜைசெய்யப் பற்பல வண்டிகளில் சோறும் தயிரும் நெய்யும் காய்கறிகளும் மற்றுமுள்ள பூஜாத்ரவ்யங்களுமாகிய இவற்றைச் சேகரிப்பதைக் கண்டு கிருஷ்ணன் 'ஓ பெரியோர்களே! நாமும் நம்முடைய பசுக்களும் எதனால் ஜீவிக்கிறோமோ அதற்கே பூஜை செய்வது தகுதி; இக் கோவர்த்தனகிரியே பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுத்துக் காப்பாற்றுகின்றது; இந்திரனால் நமக்கு என்ன பயன்? ஒன்றுமில்லை; ஆகையால் இப்பூசனைப்படைப்பையும் நீங்கள் இம்மலைக்கே இடுங்கள்' என்ன, இடையர்கள் அதைக்கேட்டு அங்ஙனமே செய்ய, கண்ணபிரான் தானே ஒரு தேவதாரூபங்கொண்டு அவற்றை முற்றும் அமுது செய்தருளினனென்னும் வரலாறு ப்ரஸித்தம்; அந்தக் கதையை யெடுத்துச் சொல்லி முறைப்படுகிறாள் ஓரிடைச்சி.

அசோதாய்! இப்படி பெருவயிறுதாரியான ஒரு பிள்ளையைப் பெற்றாயே! என்று அவளை ஏசுவது வெளிப்படை; இச்செய்தியை ப்ரஸ்தாவிக்கும் முகத்தால், 'ஏழுநாள் கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துத்தாங்கி நின்று கோவலரையும் கோநிரையையும் காத்தருளின பெருமானன்றோ இவன்; அந்தப் பெருமையை யெல்லாம் மறந்து ஸௌலப்ய குணத்துக்கு ஏற்ற சிறுச் சேவகங்களையிட்டுப் பழித்தல் தகுதியோ? என்று காட்டுதல் உள்ளுறை. "அயலகத்தாரும் அசல்சேரியாரும் எல்லாம் ஏககாலத்திலே முறைப்பட்ட படியைக் கண்டு 'இது என்ன புதுமை! நீங்களும் பிள்ளைபெற்றதில்லையோ? என் மகன் இத்தனை செய்ய வல்லனோ? என்று யசோதைப் பிராட்டி சொல்ல, அதைக் கேட்ட எல்லாரும் ஒரு மிடறாய்ச் சேர்ந்து, பர்வதத்தை யுண்டவனன்றோ? அவன் செய்யமாட்டாதது மொன்றுண்டோ? என்கிறவர்கள் படியாலே அநுபவிக்கிறார்" என்பர் அரும்பத வுரைகாரர்.

இப்பாட்டில், 'அதனையெல்லாம்' என்பது இரண்டாமடியிலும் ஈற்றடியிலுமாக இரண்டுமுறை பிரயோகிக்கப்பட்டுள்ளது; *அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர்வாவியும் நெய்யளறுமாகத் திரட்டின திரளிலே ஒரு சிறு அவிழும் மிச்சமாகாதபடி அடக்கலும் துற்றினனென்பதைக் காட்டுதற்கே யாயிற்று இவ்விரட்டிப்பு.

*பாஜனம் என்ற வடசொல் பாசனமெனத்திரிந்தது பண்டி—வண்டி திசைச் சொல் என்பர். ... ... ... ... .. 7

தோய்த்ததயிரும்நறுநெய்யும் பாலும்ஓரோகுடந்துற்றிடுமென்று *
ஆய்ச்சியர்கூடியழைக்கவும் நானிதற்கெள்கியிவனைநங்காய் !*
சோத்தம்பிரானிவைசெய்யப்பெறாயென்று இரப்பனுரப்பகில்லேன் *
பேய்ச்சிமுலையுண்டபின்னை யிப்பிள்ளையைப்பேசுவதஞ்சுவனே. 8

| | | | |
|---|---|---|---|
| | நங்காய் ! | நான் | (பிள்ளையைப் பெற்ற தாயாகிய) நான் |
| தோய்த்த | தோய்த்து வைக்கப்பட்ட | | |
| தயிரும் | தயிரையும் | இதற்கு | இந்தச் செயலுக்கு |
| நறு நெய்யும் | மணம் மிக்க நெய்யையும் | எள்கி | ஈடுபட்டு |
| பாலும் | பாலையும் | இவனை | இப்பிள்ளையை நோக்கி |
| ஓரோ குடம் | ஒவ்வொரு குடத்தில் நின்றும் | பிரான் | பிரானே ! |
| | | சோத்தம் | உனக்கு ஓர் அஞ்ஜலி ; |
| துற்றிடும் என்று | (கண்ணன்) அமுது செய்து விடுவனென்று | இவை செய்ய பெறாய் | "இப்படிப்பட்ட தப்புக்காரியங்களைச் செய்யாதொழிய வேணும்?" |
| ஆய்ச்சியர் | இடைச்சிகளெல்லாரும் | | |
| கூடி | திரண்டு | என்று இரப்பன் | என வேண்டிக்கொள்வனே யன்றி |
| அழைக்கவும் | என்னைக் கூப்பிடச் செய்தேயும் | | |

விட்டுக் கண்வளர்த்திவிட்டு யசோதை யமுனை நீராடப்போயிருந்தகாலத்து, கம்ஸனாலேவப்பட்ட அஸுரனொருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்துக் கண்ணபிரான் மேல் விழுந்து அவனைக் கொல்ல முயன்றதை யறிந்துகொண்ட அத்தெய்வக்குழவி, பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கியுதைத்து அச்சகடத்தை (அஸுரனுட்பட) சின்ன பின்னமாக்கின வரலாறு இப்பாட்டிலுள்ளது.

ஈடும் வலியுமுடைய=ஈடு என்றாலும் வலி என்றாலும் பொருள் ஒன்றேயாயினும் இங்கு வாசி கொள்ளலாம்; ஈடு என்று தேஹபலத்தைச் சொல்லுகிறது; வலி என்று எதிரிகளை அநாயாஸமாக அடர்க்கும் வல்லமையைச்சொல்லுகிறது. வடமொழியில் சௌர்யம் வீர்யம் பராக்ரமம் என்று சொல்லப்படுகிற குணங்களுக்குக் கூறப்படும் பொருள் வாசியை நினைப்பது.

ஏழுதிங்களில்—ஏழாவது திங்களில் என்றபடி. திங்கள்—சந்திரன்; அமாவாசைக்கு அமாவாசை ஒருமாதமெனக்கொண்டு சந்திர ஸம்பந்தத்தாற் காலத்தை வரையறுக்கும் சாந்திரமானரீதி பற்றித் திங்கள் என்று மாதத்திற்குப் பெயர் வழங்கலாயிற்று: இலக்கணை. இங்கு 'எழுதிங்களில்' என்றது மிக்க சிறு பிராயத்தில் என்றபடி. [படலிற் கண்வளர்த்தி] குழந்தையைப் பூமாலையினாலே உறங்கப்பண்ணினனென்க.

சேடன்—இச்சொல்லுக்குப் பல பொருள்களுண்டு; யான் என்ற பொருளில் இங்கு வந்தது. ... .... ... 9

அஞ்சுவன்சொல்லியழைத்திட நங்கைகாள்! ஆயிரநாழிநெய்யை *
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்ற பாகந்தான்வையார்களே *
கஞ்சன்கடியன்கறவெட்டுநாளில் என்கைவலத்தாதுமில்லை *
நெஞ்சத்திருப்பன செய்துவைத்தாய்நம்பி! என்செய்கேனென்செய்கேனே? 10

| | | | |
|---|---|---|---|
| நங்கைகாள் | பெண்காள்! | கறவு | (அவனுக்குச் செலுத்தவேண்டிய) கப்பமோவென்றால் |
| சொல்லி அழைத்திட அஞ்சுவனா | (இவனசெய்யுந் தீம்புகளைச்) சொல்லி முறையிட அஞ்சுகின்றேனா; | எட்டுநாளில | இன்னமும் எட்டுநாளைக்குள் செலுத்தவேண்டியதாக வுளளது; |
| பஞ்சியர் மெல் அடி பிள்ளைகள் | பஞ்சுபோல் மெல்லிய அடியை யுடையரான (இவ்வூர்ப்) பிள்ளைகள் | என் கைவலத்து | என்கையில் |
| ஆயிரம் நாழி நெய்யை | ஆயிரம் நாழி நிறைந்த நெய்யை | ஆதும் இல்லை | ஒன்றுமில்லை; |
| | | நம்பி | கண்ணபிரானே! |
| உண்கின்ற பாகம் தான் வையார்கள் | உன்னுடைய பாகமாக ஸ்வல்பமாகவும் மி... வைத்தார்களில்லை; | நெஞ்சத்து இருப்பன செய்து வைத்தாய் | என்னெஞ்சு புண்பட்டிருக்கும்படியான காரியங்களையே செய்து போருகிறாய்; |
| கஞ்சன் கடியன் | கம்ஸனென்பவன் கோபிஷ்டன்; | | என் செய்கேன் என் செய்கேன்!—. |

'*'—கீழ் இரண்டு பாட்டிலும் 'இப்பிள்ளையைப்பேசுவதஞ்சுவனே' என்றும் 'உரப்புவதஞ்சுவனே' என்றும் சொன்ன யசோதைப்பிராட்டியை நோக்கி ஆய்ச்சிகளெல்லாரும் 'நங்காய்! தாய்க்கு அடங்காதவன் ஊர்க்கு அடங்கான் என்னும் பழமொழி உனக்குத் தெரியாததன்று; நீயே இப்படி கைவிட்டால் இனி நாங்கள் வாழும் வகையுண்டோ? எங்கள் நெய்பால் தயிர் முதலானவற்றையெல்லாம் பறிகொடுப்பதேயோ எங்கள் கதி?' என்று கண்ணுங் கண்ணீருமாய்ச் சொல்ல, அவர்களுக்கும் மறுமாற்றஞ் சொல்லிக் கண்ணபிரானையும் லகுவாகப்பொடிகின்றாள்

யசோதை. கீழிரண்டு பாசுரங்களிலும் 'அஞ்சுவனே' என்று தான் சொன்னது கண்டிப்பான விஷயந்தா னென்பதைத் திண்ணமாகக் காட்டவேண்டி மீண்டும் "அஞ்சுவன் சொல்லியழைத்திட நங்கைகாள்" என்கிறாள். [ஆயிரநாழி நெய்யை இத்யாதி.] நீங்கள் படுகிற கஷ்டத்தை நீங்கள் முறையிடுகிறீர்களே யன்றி நான் படுகிற கஷ்டத்தை நீங்கள் சிறிது மறிந்திலீர்களே ; இத்திருவாய்ப் பாடியில் தயிர் பால் வெண்ணெய் முதலானவற்றைக் கொள்ளை கொள்பவன் இவனொருவனேயோ? "தன்னேராயிரம் பிள்ளைகளோடு தளர் நடையிட்டு வருவான்" என்றாற் போலே மற்றும் ஆயிரக் கணக்கான இவனது தோழப் பிள்ளைகளு முளராதலால் அவர்கள் கொள்ளைகொள்ளும் விதம் நீங்களறியீர் போலும். அவர்களெல்லோரும் புகுந்து ஆயிரநாழி நெய்யைப் பருகும்போது ஸ்வல்ப பாகமேனும் மிச்சப்படுத்தி வைக்கிறார்களோ, அது கிடையாது ; நாமெல்லாரும் கம்ஸனுக்குத் தீர்வை செலுத்தவேண்டிய நாள் ஸமீபித்து விட்டதென்பது உங்கட்குத் தெரியாதோ? எட்டுநாளைக்குள் தீர்வை செலுத்தியாகவேண்டுமே ; கம்ஸனோ கொடியவன், சிறிது தவணை கடந்தாலும் கொடிய தண்டனை விதித்திடுவான். இந்தப் பிள்ளைகள் நெய்யையும் பாலையும் குடித்தொழிந்தால் எந்தப் பொருளை விற்று நான் தீர்வை செலுத்தித் தொலைப்பேன்? என் கையிலோ ஒற்றைக் காசுமில்லையே ;—என்றிங்ஙனே யசோதைப் பிராட்டி சொல்வதைக்கேட்ட ஆய்ச்சிகள் 'அந்தோ! இவளுடைய ஸாமர்த்தியத்தை என்ன சொல்லுவோம்!, இவள் மகன் செய்யுந் தீம்புகளைப் பரக்கச் சொல்லி நாம் முறையிட்டால் அவனை சிக்ஷிக்கமாட்டாமல் ஊர்ப் பிள்ளைகளின் மேல் வசைகூறத் தொடங்கிவிட்டாளே!' என்று ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொள்ள, அவர்களுக்கும் ஒருவாறு த்ருப்திபுண்டாகும்படி கண்ணபிரானை நோக்கிக் கூறுகின்றாள் ஈற்றடியை.

பிரானே! என் நெஞ்சு புண் மாறுதிருக்கும்படியான சேஷ்டைகளையே செய்து வைக்கிறாயே, என்னபண்ணுவேன்! என்றாளாயிற்று.

ஊர்ப்பிள்ளைகள் நெய்பால் முதலியவற்றை யுண்பதற்கு உள்ளே புகும்போது பூனைபோல் அடி ஓசைபடாமல் மெத்தெனப் புகும்படியைத் தெரிவிப்பதாம் பஞ்சியமெல்லடிப் பிள்ளைகள் என்பது. [உண்கின்று] திருவாய்மொழியில் (10-2-5) "அமரர்கோன் அர்ச்சிக்கின்று" என்ற பிரயோகத்தை யொத்ததாமிது. कर: என்னும் வடசொல் பாகமெனத் திரிந்தது.

மூன்றாமடியில் கறவு என்றது, கர: என்னும் வட சொல்லடியான தமிழ்ச் சொல் என்னலாம் ; கப்பம் என்று பொருள்.

கம்ஸனுடைய ராஜதானியாகிய வடமதுரையைச் சார்ந்த விடங்களில் வாழ்பவர்கள் வருஷத்துக்கொருமுறை கம்ஸனுக்குக் கப்பங்கட்டுவது வழக்கமென்பது ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் (5-5-2) முதலிய இடங்களிற்காணத்தக்கது. ... 10

அங்ஙனுந்தீமைகள் செய்வர்களோநம்பி! ஆயர்மடமக்களை *
பங்கயநீர் குடைந்தாடுகின்றார்கள் பின்னேசென் றொளித்திருந்து *
அங்கவர்பூந்துகில்வாரிக்கொண்டிட்டு அரவேரிடையாரிரப்ப *
மங்கைநல்லீர்! வந்துகொண்மினென்று மரமேறியிருந்தாய்போலும். 11

| | | | |
|---|---|---|---|
| நம்பி | கண்ணபிரானே! | தீமைகள் செய்வர்களோ | தீம்புகள் செய்யத் தகுமோ? |
| ஆயர் மடம் மக்களை | இடையர்களுக்கு விதேயரான பெண்பிள்ளைகளிடத்தில் | பங்கயம் நீர் | தாமரைப்பொய்கையிலே |
| அங்ஙனும் | அப்படியும் | குடைந்து | அவகாஹித்து |

| | |
|---|---|
| ஆடுகின்றார்கள் பின்னே சென்று | நீராடப்போனவர்களின் பின்னேபோய் |
| ஒளித்து இருந்து | மறைந்துகொண்டிருந்து |
| அங்கு | அவ்விடத்தில் |
| அவர் | அந்தப்பெண்பிள்ளைகளினுடைய |
| பூ துகில் | அழகிய சேலைகளை |
| வாரிக் கொண்டிட்டு | வாரிக்கொண்டு (அவ்வளவிலே) |
| அரவு ஏர் இடையார் | அரவுபோலே நுண்ணிய இடையையுடையரான அப்பெண்கள் |
| இரப்ப | (அத்துகில்களை) யாசிக்க |
| நல் மங்கைமீர் | 'அழகிய பெண்காள்; |
| வந்து | (நானிருக்குமிடத்திலே) வந்து |
| கொள்மின் | (உங்கள் துகில்களைப்) பெற்றுக்கொள்ளுங்கோள்' |
| என்று | என்றுசொல்லி |
| மரம் ஏறி இருந்தாய் போலும் | மரத்தினுச்சியில் ஏறியிருந்தாயாமே. |

* * *—கீழ்ப்பாட்டில் கண்ணபிரானைப் பொடிவதற்குச் சிறிது தொடங்கின யசோதை இது முதலாக மூன்று பாசுரங்களிலே தான் கேள்விப்பட்டிருந்த சில சேஷ்டிதங்களை யெடுத்துரைத்து இப்படியும் தீமை செய்யலாமோ வென்கிறாள்.

ஆயர்மாதருடனே கூடிக்கலந்திருந்த கண்ணபிரான் சில காரணங்களாலே பிரிய நேர்ந்தது; அப்படி பிரிந்தபோதே தொடங்கி ஊரில் விசேஷங்களை ஆராய்ந்து வருகையில், பஞ்சலக்ஷங்குடிப் பெண்களுக்கும் தனித்தனியே ஆளிட்டு நடந்தவற்றையும் நடக்கின்றவற்றையும் நடக்கப்போகின்றவற்றையும் ஆராய்ந்தறிந்து அந்த ஆய்ப்பெண்கள் பனிநீராடப் போகிறபடியை யுணர்ந்து அவர்களின் பின்னே தானும் போவதாகக் கணிசித்திருந்தான். அந்த ஆய்ச்சிகளோ வென்னில் 'கண்ணபிரானோடு ஸம்ச்லேஷம் பொறுக்க முடியாது; அதுக்குமேலே விச்லேஷவ்யஸநம் மிகவும் அஸஹ்யம்; ஸம்ச்லேஷமோ விச்லேஷ பர்யந்தமாயல்லது இராது; ஆனபின்பு அவனோடு ஸம்ச்லேஷித்துப் பிறகு வருந்துவதிற் காட்டிலும் முந்துற முன்னமே விரஹதாபத்திற்குப் பரிஹாரமாக நீரிலே போய்ப்படிந்து முழுகி ஆச்வஸித்திருப்போம்; அது செய்யும்போது நாமும் அவனுமாய் முன்பு தளித்தும் பொய்கைகளில் புகுந்தால் அவன் அறிந்து வந்திடுவன்; அவனறியாததொரு பொய்கைதேடிப் போகவேணும்' என்று ஸங்கேதம் செய்து கொண்டு எல்லாரும் போனார்கள். கண்ணபிரான் * இருளன்னமாமேனியனாகையாலே அவர்களது நிழலைப் பற்றிக் கொண்டு போய் அவர்களுக்கு முன்னமே பொய்கைக்கரை போய்ச் சேர்ந்தான்; இவர்கள் அவன் வந்ததை யறிந்திலர். இடைப்பெண்களாகையாலே சேலைகளையும் நகைகளையு மெல்லாம் களைந்து கரையிலே வைத்து விட்டு நீரிலே படிந்தார்கள்; அவ்வளவிலே கண்ணபிரான் இவற்றை யெல்லாம் வாரியெடுத்துக் கொண்டு மிக விரைந்து குருந்த மரத்தின் மேலேறி மறைய நின்றான். பிறகு ஆய்ச்சிகள் கரையேறிக் கண்ட வளவில் அவை காணாமையாலே துணுக்கென்று 'நம்முடன் கூட வந்தார் பிறர் ஆருமில்லையே!, இவற்றை ஆகாயங் கொண்டதோ? கிருஷ்ணன் கொண்டானோ? என்றிங்ஙனே கலங்கிப் பல வகைகளாகச் சங்கித்து எங்கும் பருகு பருகென்று பார்த்துக்கொண்டு வாரா நிற்கக் கண்ணபிரானைக் குருந்த மரத்தின்மேற் கண்டு 'கூறைதாராய்' என்று யாசிக்க, 'நானிருக்கு மிடத்தேற வந்து கொள்ளுங்கோள்' என்று அவ்வாய்ச்சிகளைக் கண்ணபிரான் நெடும் போது சிரமப்படுத்தின வரலாறு நாச்சியார்திருமொழியில் * கோழியழைப்பதன் முன்னமென்னுந் திருமொழியில் விரிவாகவுள்ளது; இப்பாட்டில் அது சுருங்கக் கூறப்பட்டது.

கண்ணபிரானைச் சீறவேணும் தண்டிக்கவேணும் என்று மன்றாடின இடைச்சிகட்காக யசோதைப் பிராட்டியின் வாயில் 'அங்ஙனுந் தீமைகள் செய்வர்களோ நம்பி!' என்ற வார்த்தை வந்திட்டது. இவள் சொல்லுகிற சொல்நயத்திலே மேன்மேலும்

அவன் திம்பிலே கைவளரும்படியாநின்றதே யன்றி அஞ்சி நிற்பதற்குறுப்பாநின்றதில்லை. இது பற்றியே 'அஞ்ச வரப்பா ளசோதை ஆணாடவிட்டிட்டிருக்கும்' என்று ஆய்ச்சிகள் வருந்திக் கூறுவது.

பங்கய நீர்=தாமரைகள் நிறைந்த நீர்நிலே; தாமரைத் தடாக மென்றபடி; (பங்கஜம்—வடசொல்.) பங்கை நல்லீர்—உருபுபிரித்துக் கூட்டியுரைக்கப்பட்டது. யசோதை தான் நேரே கண்டிலளாதலால் 'இருந்தாய் போலும்' என்றாளென்க. 11

அச்சந்தினைத்தனையில்லையிப்பிள்ளைக்கு ஆண்மையுஞ்சேவகமும் *
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்கு உரைத்திலன்தானின்றுபோய் *
பச்சிலைப்பூங்கடம்பேறிவிசைகொண்டு பாய்ந்துபுக்கு * ஆயிரவாய் *
நச்சழற்பொய்கையிலுநாகத்தினோடு பிணங்கிநீவந்தாய்போலும். 12

| | | | |
|---|---|---|---|
| இ பிள்ளைக்கு | இந்தப்பிள்ளைக்கு கொஞ்சமேனும் | பூ கடம்பு | கடப்பமரத்தின்மீது |
| அச்சம் இல்லை | பயமில்லை | ஏறி | ஏறி |
| ஆண்மையும சேவகமும் | சௌர்யமும் வீர்யமுமே யுள்ளது; | விசைகொண்டு | வேகத்துடனே |
| உச்சியில் முத்தி | உச்சிமோந்து | பொய்கையில் பாய்ந்து புக்கு | (காளியநாகக்கிடந்த) பொய்கையிலே குதித்து. |
| வளர்த்து எடுத்தேனுக்கு | வளர்த்தெடுத்த தாயாகிய எனக்கும் | ஆயிரம் வாய் நஞ்சு அழல் | ஆயிரம்வாயாலும் விஷத்தைக் கக்குகின்ற |
| தான் உரைத்திலன் | தான் சொல்லாதவனாய் | நாகத்தினோடு | (அந்தக்காளிய) நாகத்தோடு |
| இன்று போய் | இன்று வெளியிற்போய் | பிணங்கி | போர் செய்து |
| பச்சிலை | பசுமையான இலைகளையுடைத்தாய் | நீ வந்தாய் போலும் | நீ வந்தாயாமே. |

* * *—ஒருநாள் கண்ணபிரான் கன்றுகளை ஓட்டிக்கொண்டு ஒருவரும் ஸஞ்சரியாத வழியே போகத் தொடங்க, மற்றுள்ள இடைப்பிள்ளைகள் அழைத்து 'க்ருஷ்ணா! அவ்வழி நோக்கவேண்டா; அவ்வழியிற் சென்றால் யமுநா நதியில் ஓர் மடுவிலிருந்து கொண்டு அம்மடு முழுவதையும் தன் விஷாக்கினியாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானத்துக்கு அநர்ஹமாம்படி செய்த காளியனென்னும் கொடிய ஐந்தலை நாகம் குடும்பத்தோடு வாஸஞ்செய்து கொண்டு அணுகினவர்களைவரையும் பிணமாக்கி விடுதலால் நாங்கள் அஞ்சுகின்றோம்' என்ன, அதைக்கேட்ட கண்ணபிரான் உடனே அந்தக் காளிய நாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்ற திருவுள்ளங் கொண்டு அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின் மேலேறி அம்மடுவிற் குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின் மேலேறித் துவைத்து நர்த்தனஞ் செய்து நசுக்கி வலியடக்கின னென்ற வரலாற்றைக் கேள்விப்பட்ட யசோதை 'அந்தோ! சிறிதும் அச்சமில்லாமல் இப்படியுஞ் செய்யலாமோ' என்கிறாள். இப்பாட்டில் முன்னடிகள் யசோதை தன்னில்தான் சொல்லிக்கொள்வன; அன்றி ஆய்ச்சிகளை நோக்கிச் சொல்லுவனவுமாம்; பின்னடிகள் கண்ணபிரானை நோக்கிச் சொல்லுவன.

இப்பிள்ளைக்கு ஆண்மையும் சேவகமும் உள்ளனவேயன்றி இளமைக்கு உரிய அச்சம் சிறிதுமில்லை; எவ்வளவோ அன்பாக இவனை உச்சிமோந்து வளர்ப்பவளான என்னிடத்திலும் ஒருவார்த்தை சொல்லாமே போய்விட்டானென்கிறாள். "ஏகதா து விநா ராமம் க்ருஷ்ணோ ப்ருந்தா வகம் யயௌ,......ஹ்ரதம் காளிய நாகஸ்ய ததர்சாதி விபீஷணம்" யத்விச்லேஷலேவாபி காளியபுவே கோலாஹ

லாயாபவத்" இத்யாதிப்படியே பலராமனைத் துணைகொள்ளாமற்போனதோடு தன்னோடு ஒருவார்த்தை சொல்லாமற்போனதும் யசோதைக்கு வருத்தமாயிற்றென்க.

பச்சிலைப்பூங்கடம்பேறி—ஸ்ரீ விஷ்ணுபுராணத்தில் காளியன் கிடந்த பொய்கையைப்பற்றிச் சொல்லுமிடத்து "விஷாக்நிநா ப்ரஸரதா தக்ததீரமஹீருஹம்" என்றபடியே அக்கடம்பமரம் காளியனுடைய விஷாக்நியினால் கொளுத்தப்பட்டு இலை பூ காய் கனி முதலியவை யொன்றுமின்றி மொட்டை மரமாக இருந்தாலும் கண்ணபிரான் அதன்மேலேறும்போது அவனுடைய திருவடி ஸம்பந்தமுண்டான மாத்திரத்தினால், * பச்சிலைப் பூங்கடம்பாயிற்று என்று ஆசாரியர்கள் நிர்வஹிக்கும்படி, பசுமை + இலை, பச்சிலை.

[ஆயிரவாய் நாகத்தினோடு.] காளியனைச் சில விடங்களில் ஐந்தலை நாகமென்று சொல்லியிருக்க ஆயிரவாய் நாகமென்றதென்? எனில்; பயங்கரத்வம் தோற்றுதற்காகவா மத்தனை,

தினைத்தனை = தினையென்பது ஒரு மிகச்சிறிய தானியம்; அதிக அற்பமான அளவுக்கு அதனை உவமை கூறுவார்கள் கவிகள்; கிஞ்சித்தும் என்றபடி "தினையாஞ் சிறிதளவும்" என்ற பெரிய திருவந்தாதியுங் காண்க. ... ... 12

தம்பரமல்லனவாண்மைகளைத் தனியேநின்றுதாம்செய்வரோ ?
எம்பெருமான் ! உன்னைப்பெற்ற வயிறுடையேன் இனியானென்செய்கேன் ?
அம்பரமேழு மதிருமிடிகுரல் அங்கனற்செங்கணுடை *
வம்பவிழ்கானத்து மால்விடையோடு பிணங்கிநீ வந்தாய்போலும். 13

| | | | |
|---|---|---|---|
| எம்பெருமான் | என்னுடைய கண்ணபிரானே | வம்பு அவிழ் கானத்து அங்கு | பரிமளம் வீசுகின்ற அச்சோலையிடத்திலே, |
| தம் பரம் அல்லன ஆண்மைகளை | தம் பருவத்தினளவல்லாத பௌருஷங்களை | அம்பரம் ஏழும் அதிரும் இடி குரல் | மேலுலகங்களெல்லாம் அதிரும்படியான கனத்த குரலையும் |
| தனியே நின்று தாம் செய்வரோ | தனிமையாயிருந்து செய்யத் தகுமோ? | அனல் செம் கண் உடை | நெருப்புப்போலே சிவந்த கண்களையுமுடையனவான |
| உன்னை பெற்ற வயிறு உடையேன் | (தனியே அதிமாநுஷகாரியங்களைச் செய்கிற) உன்னைப் பெறும்படியான வயிறு படைத்தவளானேன்; | மால் விடையோடு | கரிய எருதுகளோடே |
| யான் இனி என் செய்கேன் | உன்னைப் பெற்ற பின்பு நான் என்ன செய்யவல்லேன்? | நீ பிணங்கி வந்தாய் போலும் | நீ போர் செய்து வந்தாயாமே. |

* * *—இதுவும் யசோதைப்பிராட்டி கண்ணபிரானை நோக்கிக் கூறும் பாசுரம். கண்ணனை நலியக் கருதின கஞ்சனால் ஏவப்பட்டு மிகவும் பயங்கரமான ரிஷபத்தின் உருக்கொண்ட அரிஷ்டாஸுரன் திருவாய்ப்பாடியிற் புகுந்து கோநிரையையும் கன்றுகளையும் கோவலரையும் பலவாறாக நலியத் தொடங்க, அடியார் துயரத்தைப் பொறுக்கமாட்டாத கண்ணபிரான் அக்காளையின்மேற் கடுங்கோபங்கொண்டு அதன் இரண்டு கொம்புகளையும் பிடித்துச் சிறிது தூரம் நெட்டிக்கொண்டுபோய்க் கீழே விழும்படி தள்ளி மீதேறி மிதித்து நின்று அவ்விரண்டு கொம்புகளையும் வேருடன் பறித்து அவைகளையே வஜ்ராயுதமாக இரண்டு திருக்கைகளிலுந் தாங்கி உறுதியாகப் பிடித்துப் பின் பாய்ச்சல்கொண்டு கிறுகிறென்று சுழற்றி முன் பாய்ந்துவந்து மோதி யடித்து உதைத்தார்; அவ்வளவில் அவ்வசுரன்

மூக்கினும் வாயினும் உதிரத்தைக் கக்கிக்கொண்டும் கிடுகிடென்று நடுங்கி உதைத்துக் கொண்டும் பிராண பயமடைந்து மூத்திரபுரீஷங்கள் செய்துகொண்டும் ஒருதரங்கதறி ஓரிரைச்சலிட்டு உயிரைத் துறந்தானென்ற ஒரு வரலாறு உண்டு; (இவ்வசுரன் பெயர் அரிஷ்டநேமி யென்றும் வழங்கும்.) இப்பாட்டிற் கூறுவது இவ்வரலாறு ஆகவுமாம்; அன்றியே; ஸீதா விவாஹத்திற்கு வில் முறியைப் பந்தயமாக வைத்திருந்தது போல நப்பின்னைப் பிராட்டியின் திருமணத்திற்கு எருது முறியைப் பந்தயமாக வைத்திருந்ததனால் அப்படியே கண்ணபிரான் எருதுகளேழையும் வலியடக்கினனென்ற வரலாறு ஆகவுமாம்.

கண்ணனுடைய தீப்புகளைச் சொல்லி முறையிடுகின்ற ஆய்ச்சிகளை ஒருவாறு த்ருப்தி செய்விக்க முன்னடிகள் அமைந்தன; உன்னுடைய பருவத்துக்கும் சக்திக்கும் ஈடல்லாத காரியத்தை நீ செய்வதே பிசகு; அதிலும் பலராமனொடு கூட வந்து செய்தாலாவது கண்ணெச்சில் படாதிருக்கும்; அஸஹாயனாய் நின்று செய்யத் தகுமோ? இனிச் சொல்லி என்? இப்படிப்பட்ட உன்னை இந்த வயிற்றில் சுமந்து பெற்றுவிட்டேன்; இனி நான் என்ன செய்யக்கூடுமென்கிறாள்.

தம்பரமல்லன=பரः என்னும் வடசொல் பரமெனத் திரிந்தது. தன்னால் தாங்க முடியாதவற்றை என்றபடி. ஆண்மைகள்—ஆண் புலி யென்பதைக் காட்டக்கூடிய வீரச்செயல்கள். அம்பரம்-வடசொல். ... .... .... 13

அன்னநடைமடவாய்ச்சி வயிறடித்தஞ்ச அருவரைபோல் *
மன்னுகருங்களிற்றாருயிர் வவ்வியமைந்தனை மாகடல்சூழ் *
கன்னிநன்மாமதிள் மங்கையர்காவலன் காமருசீர்க்கலிகன்றி *
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க்கு ஏதுமிடரில்லையே. 14

| | | | |
|---|---|---|---|
| அன்னம நடை | அன்னத்தின் நடைபோன்ற நடையையும் | மா கடல் சூழ் | பெரிய கடலாலே சூழப்பட்டு |
| மட | மடமைக் குணத்தையு முடையளான | கன்னி நல் மா மதிள் | ஸ்திரமாய் விலக்ஷணமான பெரிய திருமதிள்களை யுடைத்தான |
| ஆய்ச்சி | யசோதைப் பிராட்டியானவள் | மங்கையர் | திருமங்கைநாட்டில் உள்ளவர்கட்கு |
| வயிறு அடித்து அஞ்ச | வயிற்றிலேமோதிக்கொண்டு பயப்படும்படியாக | காவலன் | பரிபாலகராய் |
| அரு வரை போல் மன்னு | பெரிய மலைபோலப் பேராதே நின்ற | காமரு சீர் | விரும்பத்தக்க திருக்குணங்களை யுடையரான |
| கரு களிறு | (குவலயாபீட மென்கிற) கரிய யானையினுடைய | கலிகன்றி | ஆழ்வார் (அருளிச்செய்த) |
| ஆர் உயிர் | அருமையான உயிரை | இன் இசை மாலைகள் ஈர் ஏழும் | மதுரமான இசையையுடைய சொல்மாலையான இப்பதின்னான்கு பாசுரங்களையும் |
| வவ்விய | கவர்ந்த | வல்லவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு |
| மைந்தனை | மிடுக்கனான கண்ணபிரான் விஷயமாக, | இடர் ஏதும் இல்லை | துன்பமொன்றுமில்லையாகும். |

* * *—எருதோடு பொருததிலுங் காட்டில் யானையோடு பொருதது மிகவும் பயங்கரமான வீரச் செயலாதலால் யசோதைப்பிராட்டி அதனையுஞ் சொல்லி வயிறெரிந்தது இந்த நிகமனப் பாசுரத்தில் ஒருவாறு தோற்றுவிக்கப்படுகின்றது. வில்விழா வென்கிற வியாஜம் வைத்துக் கம்ஸனால் மதுரைக்கு வரவழைக்கப்பட்ட கண்ணபிரான் அவனது அரண்மனை வாயிலிற் புகும்போது தன்னைக் கொல்லுமாறு அவனால் ஏவி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்னும் மத (யானை சீறிவர, கண்ணபிரான் அதனை யெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு

அடித்து அவ் யானையையும் யானைப் பாகனையும் உயிர் தொலைத்த வரலாறு அறிக. 'தன்னைப் பேணாதே இப்படியும் ஒரு வீரச்செயல் செய்யலாமோ' என்று யசோதைப்பிராட்டி வயிற்றிலே மோதிக்கொண்டு வருந்தும்படியாக மலைபோன்ற மத யானையைப் பொருது உயிர் தொலைத்திட்ட கண்ணபிரான் விஷயமாகத் திருமங்கையாழ்வார் அருளிச்செய்த இப்பதினான்கு பாசுரங்களையும் கற்று வல்லவர்கட்குத் துன்பம் சிறிதுமில்லையாகும். யசோதைப்பிராட்டியைப் போலே அநுபவத்திற் குறைய நில்லாதே இன்பமே அதிகரிக்கப் பெறுவர் என்றவாறு. ... 14

அடிவரவு :—மானம், காலை, தெள்ளி, மை, தந்தை, மண், ஆயிரம், தோய், ஈடு, அருசவன், அங்ஙனும், அச்சம், தம்பரம், அன்ன, காதில்.

ஏழாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## பத்தாம்பத்து—எட்டாந்திருமொழி—காதிற்கடிப்பிட்டு.

உரையவதாரிகை:—கண்ணபிரானுடைய சிறுச் சேவகங்களைச் சொல்லி அலர் தூற்றுவாருடைய பாசுரத்தாலும், அவனை நியமிப்பவளான யசோதைப் பிராட்டியின் பாசுரத்தாலும் பேசி நின்றது, கீழ்த்திருமொழி. புணர்ந்து பிரிந்து பிரிவாற்றாதாருடைய ஊடல் திறத்தைப் பேசியநுபவிப்பது இத்திருமொழி.

கண்ணபிரான் ஒரு ஆய்ப் பெண்ணோடே புணர்ந்து பிரிந்தானாய், பிரியும் போது 'மீண்டும் இன்னபோதிலே வருகிறேன்' என்று ஒரு ஸமயங் குறிப்பிட்டு வைத்து அந்த ஸமயத்தில் அங்குவந்து சேரமுடியாதபடி வேறொரு ஆய்ச்சியோடே போது போக்கிவிட்டுக் காலங்கடந்து வந்து சேர்ந்தவாறே, நெடும் போதே பிடித்து இவனை எதிர்பார்த்துக் கொண்டிருந்த அவ்வாய்ச்சி ப்ரணய ரோஷம் தலையெடுக்கப் பெற்று 'ஸ்வாமிந்! எங்கு எழுந்தருளிற்று? ஏதுக்கு எழுந்தருளிற்று? தேவரீர்க்குத் தகுதியான தேவிமார்கள் பலரிருக்க அவர்களைவிட்டு இங்கு ஏது காரியம்?' என்றாற்போலே சில ஊடற் பாசுரங்களைச் சொல்லி அவனுக்கு முகங்கொடாதே இகழ்ந்தவிதம் ப்ரணயதாரையின் மேலெல்லையாதலால் அங்ஙனே அநுபவிக்க வேணுமென்று விரும்பிய ஆழ்வார், பெருமாள் திருமொழியிலே * ஏர் மலர்ப் பூங்குழலென்னுந் திருமொழியிலே ஸ்ரீ குலசேகராழ்வார் அநுபவித்தாற் போலவும், திருவாய்மொழியிலே * மின்னிடை மடவார்களென்னுந் திருவாய்மொழியிலே நம்மாழ்வார் அநுபவித்தாற்போலவும் அவ்வாய்ச்சிகளின் பாவனை முதிர்ந்து அநுபவித்துப் பேசுகிறார் இத்திருமொழியில் ... ... ... *

**காதிற்கடிப்பிட்டுக்கலிங்கமுடுத்து * தாதுநல்லதண்ணந்துழாய் கொடணிந்து ***
**போதுமறித்துப்புறமேவந்துநின்றீர் * ஏதுக்கிதுவென்? இதுவென் இதுவென்னோ ? 1**

| | (பெரியவரே !) | | |
|---|---|---|---|
| காதில் | காதிலே | அணிந்து கொடு | அணிந்து கொண்டும் |
| கடிப்பு | குண்டலத்தை | புறமே | கதவின் புறமாக |
| இட்டு | அணிந்துகொண்டும் | போதுமறித்து வந்து | காலந்தாமதமாக வந்து |
| கலிங்கம் உடுத்து | திருப்பரியட்டத்தைச்சாத்திக் கொண்டும் | ஏதுக்கு நின்றீர் | ஏன் நிற்கின்றீர் ; |
| தாது நல்ல தண் அம் துழாய் | தாதுகளையுடைத்தாய் நல்ல குளிர்ந்த அழகிய திருத்துழாய் மாலையை | | என் ? இது என் ?— |

* * *—[காதில் கடிப்பிட்டு.] கண்ணபிரானை இளம்பிராயத்திலே யசோதை யானவள் "கேசவநம்பீ! உன்னைக் காதுகுத்த ஆய்ப்பாலர் பெண்டுகளெல்லாரும் வந்தார் அடைக்காய் திருத்தி நான் வைத்தேன்" "மகரக்குழை கொண்டு வைத்தேன், வெய்யவே காதில் திரியையிடுவன் நீ வேண்டியதெல்லாந் தருவன்" "இக்கடிப்பிட்டால் இனிய பலாப்பழம் தந்து, சுணநன்றணிமுலை யுண்ணத் தருவன் நான் சோத்தம்பிரானிங்கே வாராய்" என்றிப்படி பலவகையாக நல் வார்த்தைகள் சொல்லிக் காது குத்திக் கடிப்பிட அழைக்கச் செய்தேயும் இளமைக்குரிய துரு துருக்கைத்தனத்தினால் தாய்கையில் பிடிகொடாதே காது குத்தப் பெறாதேயிருந்திட்டு, பின்பு பருவம் நிரம்பி விளையாடப் புகுந்தவாறே பெண்களெல்லாரும் காதைக் கண்டு 'விடுகாதழகியார்' என்றும் 'சுளைகாதழகியார்' என்றும் பரிஹாஸம் பண்ணத் தொடங்கவே அது பொறுக்கமாட்டாமல் காது குத்திக் கடிப்பிட்டுவரத் தொடங்கினனென்று விநோதமாக அருளிச் செய்வது காண்க.

[கலிங்கமுடுத்து] பத்துப் பாட்டில் சிறுபாணாற்றுப் படையில் (85) "வானம் வாய்த்த வளமலைக்கவா அற் கானமஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய" என்ற விடத்திற்கு நச்சினார்க்கினியர் உரையிடுமிடத்து, (கலிங்கம் நல்கிய—) "போர்வையைக் கொடுத்த" என்றுரைத்தனராதலால் இங்குக் கலிங்கமென்றதற்குப் போர்வை யென்று பொருள் கொள்ளலாம். பிறர்க்குத் தெரியாமலிருத்தற் பொருட்டுப் போர்வை போர்த்துக்கொண்டு வந்தனன் போலும். கலிங்கமாவது கறுப்புத் திருப் பரிவட்ட மென்பர் ஒரு அரும்பதவுரைகாரர். மேற்பாட்டில் 'துவராடையுடுத்து' என்ற விடத்திற்கு வியாக்கியான மருளா நின்ற பெரியவாச்சான் பிள்ளை—"முற்பட உடுத்ததுக்கு ஈடுபடாமையாலே அதுக்குமேலே ஒரு சிவப்பு நிறப்புடவையைச் சிமிழ்த்துக்கொண்டு வந்தானாயிற்று" என்றருளிச் செய்திருக்கக் காண்கையாலே இங்குக் கலிங்கமென்றது கறுப்பு வஸ்திரத்தை யென்னலாம்.

[தாதுநல்ல தண்ணந்துழாய்கொடு அணிந்து] பரிமளத்தையும் செவ்வியையும் குளிர்த்தியையு முடைத்தான திருத்துழாய் மாலையிலே அனைவரும் ஈடுபடக் கண்டவனாகையாலே அதனை அணிந்துகொண்டு வந்தானாயிற்று. ப்ரணய ரோஷம் நீங்கிக் கடுக அணைத்துக்கொள்வளென்னும் விருப்பத்தாலே இங்ஙனே சில அலங்காரங்களைச் செய்துகொண்டு வந்தானாயிற்று.

இவன்றான் காலதாமதஞ் செய்து வந்தானாகையாலே "த்ருடி யுகாயதே த்வாம பச்யதாம்" என்றும் "ஒரு பகலாயிர மூழியாலோ" என்றும் சொல்லும் படியாக விருக்கிற அவ்வாய்ச்சி ஆதரித்து முகங்கொடுத்து வார்த்தை சொல்ல மாட்டிற்றிலள்; அதுவே ஹேதுவாக இவனும் விரைந்து செல்ல மாட்டாதே கதவின் புறமே கவிழ்தலையிட்டு நிற்கவேண்டியவனாயினன்; அந்த நிலைமையைக் கண்டு ஆய்ச்சி "போது மறித்துப் புறமே வந்து நின்றீர் ஏதுக்கிதுவென் "இது வென் இதுவென்னோ"? என்கிறாள்.

'காதில் கடிப்பு இட்டுக்கொண்டு வரவேண்டுகையாலும் அரையில் கலிங்க முடுத்துக்கொண்டு வரவேண்டுகையாலும் நல்ல தண்ணந்துழாய் அணிந்துகொண்டு வரவேண்டுகையாலும் இவற்றுக்காகத் தாமதமாயிற்றேயன்றி உன்னை யொழிய வேறொருத்தியிடத்தே போயிருந்தேனாய்த் தாமதித்து வந்தேனல்லேன்' என்று கண்ணபிரான் ஸூசிப்பிக்க இதுவென்? இது வென்? இது வென்? என்கிறாள்; அதாவது—[இதுவென்?] வெறுங்காதே பரம போக்யமாயிருக்கக் காதிலே கடிப்பிடுவானேன்? [இதுவென்] * பூணித் தொழுவினிற்புக்குப் புழுதியளைந்த பொன்மேனியைக் காணப் பெரிது முகப்பார் நாங்களாயிருக்கக் கலிங்க முடுத்து அத்திருமேனி யழகை மறைப்பானேன்? [இது வென்?] 'ஸர்வகந்த' என்கிறபடியே திருமேனி தானே பரிமள ப்ரசுரமாயிருக்கத் திருத்துழாய்ப் பரிமளம் ஏறிடுவானேன்? இருந்த

படியே உகக்கிற எங்களுக்காக அலங்கரித்து வரவேணுமோ? என்கை. [ஏதுக்கிது?] கொடும் பசிவேளையிற் கிடையாத சோறு ஏதுக்கு? உம்மழகை நீரே கண்டு கொண்டு உம்முடம்பையும் நீரே தொட்டுக்கொண்டு நீரே மோந்து கொண்டு நீரே கட்டிக்கொண்டு நீரே மகிழ்ந்திரும்; எங்களுக்கேதுக்கு? வேண்டா வேண்டா என்று கதவடைக்கின்றாள் போலும். ... ... ... 1

துவராடையுடுத்தொருசெண்டுசிலுப்பி * கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டி *
சுவரார்கதவின்புறமேவந்துநின்றீர் * இவரார்? இதுவென்? இதுவென்? இதுவென்னோ 2

| | | | |
|---|---|---|---|
| துவா ஆடை | சிவப்புநிறமான திருப்பரியட்டத்தை | கலி கச்சு கட்டி | வலிய கச்சுப்பட்டையை (இடுப்பில்)கட்டிக்கொண்டு |
| உடுத்து | சாத்திக்கொண்டு | சுவர் ஆர் கதவின் புறமே | சுவரோடு சார்ந்த கதவின் புறமாக |
| ஒரு செண்டு சிலுப்பி | ஒரு செண்டையும் (கையால்) சிலுப்பிக்கொண்டு | வந்து நின்றீர் | வந்து நிற்கின்றீர்; |
| கவர் ஆக முடித்து | (திருக்குழலை) வாரிமுடித்து, | இவர் ஆர் | இப்படி நிற்கிற இவர் ஆர் கொல்? |
| | | | இது என்? இது என்? இது என்?—. |

*** கீழ்ப்பாட்டில் கலிங்க முடுத்து வந்தமை கூறப்பட்டது; இப்பாட்டில் துவராடை யுடுத்தமை கூறப்படுகின்றது; கண்ணபிரான் வரும்போதே துவராடையையும் சுருட்டியிடுக்கிக்கொண்டு வந்தான் போலும்; கலிங்க முடுத்து வந்ததற்கு இவள் ஈடுபடக் காணமையாலே துவராடையை யுடுத்துக் காட்டுவோம், அதிலாகிலும் ஈடுபடுகிறாளோ பார்ப்போம் என்றெண்ணித் துவராடையை உடுத்துக் கொண்டானாயிற்று. [ஒரு செண்டு சிலுப்பி.] கையிலே ஒரு பூஞ்செண்டைச் சிலுப்பிக்கொண்டு வந்தானாயிற்று. சிலுப்புதல்—அசைத்தல். [கவர் ஆகமுடித்து.] கவர்—இரண்டாகப் பிரிகை; எனவே, குழலை வாரி முடித்து என்றதாயிற்று. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் "மயிரைப் புகுந்து முடித்து" என்றதில் 'புகுந்து' என்றது அச்சுப்பிழை: 'பகுந்து' எனத்திருத்துக. பகுத்தல்—அலகலகாக வாருதல். [கலிக்கச்சுக் கட்டி.] மிகப்பெரிய ஆற்று வெள்ளத்தில் [illegible] வாரைப்போலே குழலைவாரி முடித்துக் கொண்டும் வலிய கச்சுப்பட்டையை அரையிலே இறுக்கிக் கட்டிக்கொண்டும் இந்த போகஸ்ரோதஸ்ஸிலே அவகாஹிக்க வந்தான் போலும்.

வந்தவன் ஆய்ச்சியினுடைய முகக்குறிப்பைக் கண்டவாறே தைரியமாக உள்ளுப் புகமாட்டாமல் சுவரார்ந்த கதவுக்குப் புறம்பே நின்றானாயிற்று; அதைத் தானறிந்தமை சொல்லுகிறாள் சுவரார் கதவின் புறமே வந்து நின்றீர் என்று. கண்ணபிரான் அந்த வார்த்தையையே அவகாசமாகப் பற்றிக்கொண்டு அணுகிச் சென்று மடிபிடிக்கப் புகுந்தான்; புகவே இவரார்? இதுவென் இதுவென் இதுவென்னோ? என்கிறாள். ... ... ... ... ... ... 2

கருளக்கொடியொன்றுடையீர்! தனிப்பாகீர்!* உருளச்சகடமது உறக்கில் நிமிர்த்தீர் *
மருளைக்கொடுபாடிவந்தில்லம்புகுந்தீர் * இருளத்திதுவென்? இதுவென்? இதுவென்னோ? 3

| | | | |
|---|---|---|---|
| கருளன் | கருடனாகிற | நிமிர்த்தீர் | திருவடியைத் தூக்கினவரே! |
| கொடி ஒன்று உடையீர் | ஒருத்வஜத்தை யுடையவரே! | இருளத்து | இவ்விராப்போதிலே |
| தனி பாகீர் | அக்கருடனை நடத்துவதில் ஒப்பற்றவரே! | மருள | (பெண்கள்) மோஹிக்கும்படியாக |
| உறக்கில் | தூங்கும்போது | பாடிக்கொடு வந்து | இசைபாடிக்கொண்டு வந்து |
| சகடம் அது | (அஸுரனாலே ஆவேசிக்கப்பட்ட) வண்டியானது | இல்லம் புகுந்தீர் | வீட்டினுள் வந்து சேர்ந்தீர்; |
| உருள | உருமாய்ந்துபோம்படி | | இது என் இது என் இது என்?—. |

* * *—நீர் மிகப் பெரியீர்; பெரிய திருவடியைக் கொடியாக வுடையீர்; அவனை ஏறி நடத்துவதில் அஸாதாரணமான வல்லமையுடையீர்; உறங்கும்போது அஸுராவிஷ்டமான சகடம் மேலே விழ, பாலுக்கழுகிற பாவனையிலே நிமிர்த்த திருவடியாலே அதனைப் பொடிபடுத்தினீர்; இப்படிப்பட்ட பெருமைகள் வாய்ந்த வுமக்கு நாங்கள் லக்ஷ்யமோ? இப்படி எங்களைக் குறைச்சரக்காக நினைத்து உபேக்ஷிக்கிற நீர் எங்களை நெஞ்சிலும் இட்டெண்ணாதே யிருந்துவிட லாகாதோ? பெண்பிறந்தாரெல்லாரும் நஞ்சுண்டாரைப் போலே மோஹிக்கும்படியாகப்பண்ணை நுனுங்கிக்கொண்டு அபர ராத்ரியிலே இங்கு வந்து புகுந்தீரே, இது ஏதுக்கு? போம், போம் என்கிறாள்.

கருளன் × கொடி, கருளக்கொடி. கருட: என்னும் வடசொல் கருள னெனத் திரிந்தது. மூன்றாமடியில், 'மருளைக்கொடுபாடி' என்றபாடம் மறுக்கத் தக்கது; மருள—வினையெச்சம். கொடுபாடி—பாடிக்கொடு. கொடு=கொண்டு என்பதன் சிதைவு. ... ... ... ... ... 3

நாமம்பலவுமுடை நாரணநம்பி! * தாமத்துளபம்மிக நாறிடுகின்றீர் *
காமனெனப்பாடிவந்தில்லம்புகுந்தீர் * ஏமத்திதுவென்? இதுவென்? இதுவென்னோ? 4

| | | | |
|---|---|---|---|
| நாமம் பலவும் உடை | பல பல திருநாமங்களையுடைய | இடுகின்றீர் | அணிந்துகொண்டிருப்பவரே! |
| | | காமன் என | மன்மதன்போல |
| நாரண நம்பி | பூர்ணமான நாராயணமூர்த்தியே! | பாடி வந்து | பாடிக்கொண்டுவந்து |
| மிக நாறு | மிகவும் பரிமளித்துக்கொண் டிருக்கிற | ஏமத்து | இராப்பொழுதில் |
| | | இல்லம்புகுந்தீர் | வீட்டினுள் புகுந்தீர்; |
| துளபம் தாமம | திருத்துழாய்மாலையை | | இதுஎன் இதுஎன் இதுஎன?—. |

* * *—"நாமம் பலவுமுடை" என்பதற்கு * விச்வம் விஷ்ணுர் வஷட்கார: என்று தொடங்கி ஓதப்படுகிற ஸஹஸ்ர நாமங்களை யுடையவர் என்பதாக இங்குப் பொரு ளன்று; இங்குப் பெரியவாச்சான்பிள்ளை யருளிச்செய்வது காண்மின்;—"இன்ன ளுக்கு அடியான் இன்னளுக்கு அடியான் என்று நீர் படைத்த பேர்களுக்கு எல்லை யுண்டோ? சொல்லவேணுமோ? நீர் ஊர்ப் பொதுவல்லீரோ? நீர் நிரபேக்ஷ ரல்லீரோ?" என்று.

நாச்சியார் திருமொழியில் (4—11.) "நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர்" என்ற விடத்திற்கு எம்பார் அருளிச்செய்யும் ரஸோக்திகளை இங்கு அநுஸந்திக்கவேணும். அதாவது—'நிறைபுகழாய்ச்சியர்' என்பதற்கு ஸாமாந்யமாகச் சிலர் என்ன பொரு ளுரைப்பரென்றால், நம்மைப்போலே * உண்டியே உடையே உகந்தோடித் திரிந்து பழுதே பலபகலும் போக்காமல் மூச்சந்தியும் பகவத்விஷய சிந்தனையேயாய்ப் போது போக்குகிறார்கள் ஆய்ச்சிகள் என்ற காரணத்தினால் அவர்கட்குப் புகழ் நிறைந்திருக்குமென்று சொல்லுவர்களாம்; எம்பார் அருளிச் செய்யும் விசே ஷார்த்தம் இதுவன்று; 'ஆய்ச்சியர்க்கு நிறைபுகழாவது க்ருஷ்ணனை இன்னாள் நாலுபட்டினி கொண்டாள், இன்னாள் பத்துப் பட்டினி கொண்டாள் என்னும் புகழ்காணும்' என்பராம் எம்பார். இதன்கருத்து என்னென்னில்; "கூர் மழை போல் பனிக்கூதலெய்திக் கூசி நடுங்கி யமுனையாற்றில், வார்மணற் குன்றில் புலர நின்றேன் வாசுதேவாவுன் வரவு பார்த்தே" என்னும்படியே கண்ணபிரா னுடைய வரவை எதிர்பார்த்திருப்பர்கள் தனித்தனியே பல மாதர்; இவனோ வென்னில் இப்படி பலபேர்களை எதிர்பார்த்திருக்கும்படிசெய்து விட்டுத் தன் மனத் துக்கினியாளான ஒருத்தியோடே கலந்திருந்து போது போக்குவன்; அப்போது, எதிர்பார்த்திருந்த மாதர்கள் "இன்னமென்கையகத்தீங்கு ஒருநாள் வருதி யேல் என்சினம் தீர்வன் நானே" என்கிறபடியே 'இனி அந்தக் கண்ணன் இங்கேற வருவனாகில் முகங்கொடுத்து ஒருவார்த்தையும் சொல்லக் கடவோ

மல்லோம்' என்று ஸங்கல்பம் செய்துகொண்டு அளவற்ற ரோஷத்துடனிருப்பர்கள்: பிறகு தனக்கு ஒழிந்தபோது ஒருநாள் கண்ணபிரான் அளவுகடந்த அன்பு பூண்டவன்போல ஆடிப் பாடிக்கொண்டு அவர்கள் முன்னே வந்து நிற்பன்; அப்போது அவர்கள் தாங்கள் முன்பு செய்துகொண்ட ஸங்கல்பத்தின்படியே முகங்கொடாமலே யிருப்பர்கள்; அப்போது இவன் கண்ணீர் விட்டழுவதும் காலில் கும்பிடுவதுமாய் ஊணுமுறக்கமுமில்லாமல் பலநாட்களளவும் அவர்கள் வீட்டை விட்டுப் பேராமல் இடைகழித் திண்ணையிலே கிடந்து படுவன்; இப்படி நாலுநாள் பட்டினி கிடந்தபிறகு ஒருத்தி மனமிரங்கி முகங் கொடுப்பள்; மற்றொருத்தி அவ்வளவிலும் மறம் மாறாதே இவன் எட்டுநாள் பட்டினிகிடந்த பின்பு முகங் கொடுப்பள். மற்றுமொருத்தி அவ்வளவிலும் ஊடல் தீராதே இவன் பத்துநாள் பட்டினி கிடந்த பின்பு முகங் கொடுப்பள். இங்ஙனே பல பலநாள் பட்டினிகிடந்தாகிலும் அவ்வாய்ச்சிகள் பக்கலிலே இவன் முகம்பெற நினைப்பது அவர்களிடத்துள்ள தேஹகுணம் ஆத்மகுணம் முதலியவற்றாலான வைலக்ஷண்யத்தைப்பற்றி யென்க. இதனால் அவர்களுடைய புகழ் வீறுபெறு மென்பதாம். இப்படி பல பல ஆய்ச்சிகளிடத்திலே பட்டினி கிடந்து முகம் பெறுவனும் கண்ணபிரான். ஆகவே, தனித்தனி இன்னானுக்கடியான் இன்னானுக்கடியானென்று இவன்படைத்த திருநாமங்கள் பல பலவாயின; அதைச் சொல்லுகிறது நாமம் பலவுமுடை என்று.

தாமத்துளபம் மிகநாறிடுகின்றீர் = விரஹதாபம் பொறுக்கமாட்டாமல் நீர் ஸம்ச்லேஷிக்க வருகிறீராகில் விரஹாக்நியாலே துளபமாலை கருகிப்போ யிருக்க வேணுமே? இப்படி பரிமளிக்க ப்ரஸக்தியுண்டோ? என்பதாகக் கருத்துக் காண்க.

ஏமத்து இதுவென்? = ஏமம் என்று இரவுக்கும் பெயர்; காவலுக்கும் பெயர்; இரண்டு பொருளும் இங்குக்கொள்ளத் தகுவனவே. கட்டுங் காவலுமான இடத்திலே ஏதுக்கு வந்து சேர்ந்தீர்; இரவிலே நீர்தேடிப் போகவேண்டிய இடம் வேறாயிருக்க இங்கு ஏதுக்கு வந்தீர்? ... ... .... ... 4

சுற்றுங்குழல்தாழச்சுரிகையணைந்து * மற்றும்பலமாமணிபொன்கொடணிந்து *
முற்றம்புகுந்துமுறுவல் செய்துநின்றீர் * எற்றுக்கிதுவென்? இதுவென்? இதுவென்னோ? 5

| | | | |
|---|---|---|---|
| குழல் | திருக்குழல்களானவை | அணிந்துகொடு | சாத்திக்கொண்டும் |
| சுற்றும் | பிடரியைச்சுற்றிலும் | முற்றம் புகுந்து | (எங்கள்வீட்டு) முற்றத்திலே வந்து சேர்ந்து |
| தாழ | தாழ்ந்தலையப்பெற்றும் | | |
| சுரிகை | உடைவாளை | | |
| அணைத்து | தரித்துக்கொண்டும் | முறுவல்செய்து | புன்சிரிப்புச் சிரித்து |
| மற்றும் பல | மற்றுமபலவகைப்பட்ட | எற்றுக்கு நின்றீர் | ஏதுக்காக நிற்கிறீர்? |
| மா மணி | சிறந்த ரத்நாபரணங்களையும் | | |
| பொன் | பொன்னாபரணங்களையும் | இதுஎன் இதுஎன் இது என்? | |

* * *- இரண்டாம்பாட்டில் "கவராக முடித்து" என்றபடியே மயிர் முடித்து வந்ததில் ஈடுபடக் காணாமையாலே "களிவண்டெங்குங் கலந்தாற்போல் கமழ் பூங்குழல்கள் தடந்தோள்மேல், மிளிரநின்று விளையாட" என்றாற்போலே குழல்களைத் தோள்களிலே தாழவிட்டான்; அதைக்கண்டு சொல்லுகிறாள் 'சுற்றுங் குழல்தாழ' என்று. [சுரிகை யணைந்து] இடுப்பிலே அழகுக் குடலாகச் சொருகும் கத்திக்குச் சுரிகை யென்று பெயர்; சுரிகா என்ற வடசொல் விகாரம்; அதை யணிந்து கொண்டு வந்தானாயிற்று. இங்கே வியாக்கியான வாக்கியங் காண்மின்;— "(சுரிகையணைந்து) உகப்பார்க்கும் உகவாதார்க்கும் கருவி ஒன்றாயிற்று; சத்ருக்களை இருதுண்டமாக விட்டு முடிக்கும்; அநுகூலரை அழகாலே கொல்லும்."

[மற்றும் பல இத்யாதி.] பலவகைப்பட்ட ரத்நபூஷணங்களையும் பொன்னாபரணங்களையும் சாத்திக்கொண்டு வந்தீர்; காலங் கடந்து வந்தீராகையாலே

உள்ளே வரமாட்டாமையாலே முற்றத்தளவிலே நின்று 'புன்முறுவல் செய்து பார்ப்போம், இவள் அநுராகந்தோற்ற இருந்தாளாகில் உள்ளே புகுவோம்; ரோஷந்தோற்ற இருந்தாளாகில் சற்று நிதானிப்போம்' என்று கருதிப் புன்முறுவல் செய்து நிற்கிறீர்? ஏதுக்கு இவ்வளவு ப்ரயாஸப்படுகிறீர்? உம்முடைய திருவுள்ளத்துக்குப் பொருந்தினவரை விட்டிட்டு இங்கே வந்து ஏதுக்கு இத்தனை வருத்தப்படுகிறீர்?. ... ... ... ... ... 5

ஆனாயருமாநிரையுமங்கொழிய * கூனாயதோர்கொற்றவில்லொன்றுகையேந்தி *
போனாரிருந்தாரையும்பார்த்துப்புகுதீர் * ஏனோர்கள்முன்னென்? இதுவென்! இதுவென்னோ! 6

| | | | |
|---|---|---|---|
| ஆன் ஆயரும் | கோபாலர்களையும் | போனார் இருந்தாரையும் பார்த்து புகுதிர் | போனவர்கள்யார், இருப்பவர்கள்யார் என்று பார்த்துக் கொண்டு வருகின்றீர்; |
| ஆ நிரையும் | பசுக்கூட்டங்களையும் | | |
| அங்கு ஒழிய | அங்கேவிட்டுவிட்டு, | | |
| கூன் ஆயது | வளைந்திருப்பதாய் | | |
| கொற்றம் | ஐச்வர்யஸூசகமான | ஏனோர்கள் முன் என் | ப்ரதிகூலர்களின்! எதிரே ஏனிப்படி? |
| வில் ஒன்று | ஒருவில்லை | | |
| கை ஏந்தி | கையில் பிடித்துக்கொண்டு | இது என் இது என்?—. | |

* * *—வாரீர் மஹாநுபாவரே! உமக்கு நாங்கள் லக்ஷ்யமோ? இடையரும் கன்றுகளும் பசுக்களும் கிடைத்துவிட்டால் அவற்றை ரக்ஷிப்பதேயன்றோ உமக்குப்பணி. அந்த ஆனையரையும் ஆநிரையையும் விட்டுவிட்டு ஏதுக்கு இங்கு வந்தீர்? வருகிறவர் கொற்ற வில்லொன்றைக் கையிலேந்தி வந்தீர். 'ஆய்ச்சியிடம் போவதாகப் பிறர்க்குத் தெரிந்தால் அவமானமாகும்; ஏதோ வேட்டையாடப் போவது போல் பாவனை செய்வோம்' என்று கருதியன்றோ வில்லைக்கையிலேந்தி வந்தீர். எங்களிடம் வருவது உமக்கு அத்தனை அவமானமாயிருக்கின்றதோ? போகிறவர்களையும் இருப்பவர்களையும் கள்ள விழிவிட்டுப் பார்த்துக்கொண்டே புகுகின்றீர்; இங்ஙனே கூசியாகிலும் ஏதுக்கு நீர் இங்குவரவேணும்? உம்முடைய வருகையினாலே ஏதேனும் பலன் கிடைப்பதாயிருந்தாலாகிலும் குற்றமில்லை; பழி கழிக்க வந்து போகிறீரித்தனை. இங்குள்ளவர்களோ ஒருவரும் விச்வாஸமுடையாரல்லர்; "அதுகண்டிவ்வூர் ஒன்று புணர்க்கின்றதே" என்னும்படியான விரோதிகளின் கண் வட்டத்திலே வீண்பழியை மாத்திரம் விளைப்பதான இவ்வருகை ஏதுக்கு? ஸ்வாமிந்! இங்குப் புகாதே யெழுந்தருளீர் என்கிறாள். ... 6

மல்லேபொருததிரடோள்மணவாளீர்! * அல்லேயறிந்தோம்நும்மனத்தின்கருத்தை *
சொல்லாதொழியீர்சொன்னபோதினில்வாரீர் எல்லே! யிதுவென்? இதுவென்! இதுவென்னோ!

| | | | |
|---|---|---|---|
| மல் | மல்லர்களை | சொல்லாது ஒழியீர் | (இன்னபோது வருவேனென்றொரு குறிப்பிட்டுச்) சொல்லாமற் போகிறிரில்லை; |
| பொருத | போர்செய்தழித்த | | |
| திரள் தோள் | திரண்டபுஜங்களையுடைய | | |
| மணவாளீர் | மணவாளரே! | சொன்னபோதினில் வாரீர் | குறிப்பிட்ட காலத்தின்படி வருகிறீரில்லை; |
| நும் மனத்தின் கருத்தை | உம்முடைய திருவுள்ளத்தை | | |
| அல்லே | (நேற்று) இரவே | எல்லே | அந்தோ!, |
| அறிந்தோம் | தெரிந்துகொண்டோம்; | இது என் இது என் இது என்?—. | |

* * *—மல்லர்களோடே போர் செய்யும்படியான மிடுக்குடையீர் நீர்; உம்முடைய தோளோடே ஸம்பந்தம் பெறுகைக்கு அந்த முரட்டாண்களேயன்றோ இட்டுப் பிறந்தவர்கள்; வீணாக நாங்கள் ஆசைப்பட்டுப் பயனென்? என்று ஆய்ச்சி சொன்னவாறே, 'அந்தோ! உன்னையொழிய வேறொரு புகல் அற்றவனை என்னை நோக்கி இப்படி வெட்டிதாக வார்த்தை சொல்லலாமோ? கம்ஸனுடைய

ஏவப்பட்ட மல்லர்கள் மேல்விழுந்து என்னை முடிக்க வந்தார்களாகையாலே அவர்களைப் பொடிபடுத்த வேண்டி அவர்களோடே பொருதேனேயன்றி அவர்களையணையவேணுமென்று ஆசைப்பட்டுச் செய்த காரியமொன்றுமில்லையே; ஏதுக்கு வீணாக வருந்துகிறாய்?' என்று கண்ணபிரான் சொல்ல [அல்லே யறிந்தோம் நும்மனத்திற் கருத்தை] நேற்றிரவு ஸம்ச்லேஷிக்கிறபோதே நினைவு ஒன்றும் செயல் ஒன்றுமாயிருந்தது உமக்கு; செருப்புவைத்துத் திருவடி தொழுவாரைப் போலே வந்தீரென்பதை நேற்றிரவே நன்கறிந்துகொண்டோம் என்றாள் ஆய்ச்சி.

அதைக்கேட்ட கண்ணபிரான் 'வீணாக என்மேல் ஏதேனும் பழியிட்டுப் பேசுவது உனக்குத் தகுதியன்று; என்மனம் வேறுபட்டிருக்குமாகில் இப்போது நான் இவ்விடம் ஏதுக்கு வந்திருக்கவேணும்? நேற்றிரவு சொல்லிப் போனபடியே இப்போது நான் வந்து நிற்கச் செய்தேயும் பழியிடுவது பாங்கன்று' என்று சொல்ல; [சொல்லாதொழியீர் சொன்னபோதினால் வாரீர் எல்லேயீதுவென்?] பல்லாயிரம் தேவிமார்களை யுடையீரான நீர் ஸமயம் குறித்துப்போவது பிசகு; உம்முடம்பு உம்மதாயிருந்தாலன்றோ குறிப்பிட்ட ஸமயத்தின்படியே வந்துசேர முடியுமென்று திடமாக ஸமயம் குறிப்பிட்டுப் போகலாம்; ஊர்ப் பொதுவான நீர் ஏதுக்கு ஸமயம் குறிப்பிட்டுப் போவது! பிரிந்து போகிறவர் வாயை மூடிக்கொண்டு போயிருந்தால் இத்தனை துடிப்புக்கு இடமிருக்குமோ? ஸமயம் குறித்துப்போனால் குறித்தபடி வரவேண்டாவோ? உம்முடைய பேச்சுக்கும் செயலுக்கும் சேர்த்தியில்லையே! என்கிறாள்.

(இரண்டாமடியில்) அல்—இரவு; நேற்றிரவு என்றபடி. 7

**புக்காடரவம்பிடித்தாட்டும்புனிதீர்! * இக்காலங்கள்யாமுமக்கேதொன்றுமல்லோம் ***
**தக்கார்பலர்தேவிமார்சாலவுடையீர் * எக்கே! யிதுவென்? இதுவென்? இதுவென்னோ? 8**

| | | | |
|---|---|---|---|
| புக்கு | (பொய்கையிலே) குதித்து | தக்கார் | உமக்குத் தகுந்திருப்பவர்களாய் |
| ஆடு அரவம் பிடித்து | படமெடுத்தாடுகின்ற காளிய நாகத்தைப் பிடித்து | பலர் | அளவற்றவர்களான |
| ஆட்டும் | ஆட்டிவாட்டின | தேவிமார் | மஹிஷிவர்க்கங்களை |
| புனிதீர் | பரிசுத்தரே! | சால | மிகவும் |
| இக் காலங்கள் | இப்போது | உடையீர் | உடையராயிருக்கின்றீர் |
| யாம் | நாங்கள் | எக்கே | இது என்ன கஷ்டகாலம்! |
| உமக்கு | உமக்கு | | இது என் இது என் இது என்—. |
| ஏது ஒன்றும் அல்லோம் | ஒரு சரக்காகவும் எண்ணப் படுவோமல்லோம்; | | |

* * *—ஸ்வாமின்! உமக்கு ஓர் அஞ்ஜலி: உம்மை அணுகுவதற்கும் எனக்கு யோக்யதையில்லை காணும்? நீர் ஐந்தலை நாகத்தோடே எதிர்த்துப் போர்செய்ய வல்ல மிடுக்குடையீர்; உம்முடைய மிடுக்குக்கு நாங்கள் இலக்காகக் கடவோமோ? என்று ஆய்ச்சி சொன்னவாறே, 'அந்தோ! இப்படி ரோஷந்தோற்ற வார்த்தை சொல்லலாமோ? எனக்கு உங்களை யொழியவும் வேறே சிலருண்டோ' என்று கண்ணபிரான் பரம விநயந்தோற்றச் சொல்ல, [இக்காலங்கள் யாமுமக்கு ஏதொன்றுமல்லோம்] நீர் சொல்லுகிறது பண்டைக்காலத்து வார்த்தையன்றோ? இப்படி நீர் சொல்லுவதற்கு இப்போது என்ன ப்ரஸக்தியிருக்கிறது? உமக்கு இப்போது நாங்கள் ஒரு சரக்காகப் புலப்படுகிறோமோ? என்றாள். நான் வேறேயும் சிலரை அறிவேனோ வென்றான் கண்ணபிரான். [தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்] என்கிறாள்.

*அறிவொன்றுமில்லாத ஆய்க்குலத்திலே பிறந்த எங்களையேயோ நீர் கணிசித்திருப்பது?* மன்னு நரகன்றன்னைச் சூழ்போகி வளைத்தெறிந்து கன்னி மகளிர் தம்மைக் கவர்ந்த கடல்வண்ணரல்லீரோ? "பல்லாயிரம் பெருந்தேவிமாரொடு பௌவமெறி துவரை, எல்லாருஞ்சூழச் சிங்காசனத்தே யிருந்தானைக் கண்டாருளர்" என்றும் "பதினாறுமாயிரவர் தேவிமார் பணிசெய்யத் துவரை யென்னுமதில் நாயகராகி வீற்றிருந்த மணவாளர்" என்றும் சொல்லுகிறபடியே நரகாசுரனைத் தொலைத்திட்டுக் கவர்ந்த பதினாறுயிரத் தொருநூற்றுக் கன்னிகைகள் உமக்குத் தகுதியான அழகுடையார் இல்லையோ? மதுராம் ப்ராப்ய கோவிந்த: கதம் கோகுலமேஷ்யதி? நகர ஸ்த்ரீ கலாலாபமது ச்ரோத்ரேண பாஸ்யதி." [வடமதுரைக்குச் சென்று கண்ணபிரான் எங்ஙனே மீண்டும் இடைச்சேரிக்குத் திரும்புவான்? நகரத்துப் பெண்களினுடைய இனிய பேச்சுக்களாகிற அமுதத்தைச் செவியினால் பருகிக்கொண்டு அவ்விடத்திலேயே யிருந்திடுவானத்தனை.] என்கிறபடியே உம்முடைய அபிநிவேசங்களை நாங்களறியோமோ? ஏதுக்குப் போலியான அன்பை ஏறிட்டுக்கொண்டு இங்ஙனே வந்து தடுமாறுகிறீர்? கடக்க நில்லும் என்கிறாள். ... ... .... ... ... ... 8

ஆடியசைந்துஆய்மடவாரோடு நீ போய் * கூடிக்குரவைபிணை கோமளப்பிள்ளாய் *
தேடித்திருமாமகள்மண்மகள்நிற்ப * ஏடி! யிதுவென்? இதுவென்? இதுவென்னோ? 9

| | | | |
|---|---|---|---|
| திரு மா மகள் | பெரியபிராட்டியாரும் | ஆடி அசைந்து | ஆடி யசைந்துகொண்டு |
| மண் மகள் | பூமிப்பிராட்டியாரும் | குரவை பிணை | ராஸக்ரீடை நடத்தின |
| தேடி நிற்ப | தேடிக்கொண்டிருக்க, | கோமளம் பிள்ளாய் | அழகிய பிள்ளாய்! |
| நீ போய் | அவர்களை உபேக்ஷித்துப் போய் | இது என் | இது என்ன காரியம்! |
| ஆய் மடவாரோடு | இடைப்பெண்களோடே | ஏடி | வாராய் தோழி! |
| கூடி | கலந்து | | இது என் இது என்?—. |

* * *—'திருமாமகள் மண்மகள் தேடிநிற்ப ஆய்மடவாரொடு ஆடியசைந்து போய்க் குரவைபிணை கோமளப்பிள்ளாய்! என்று கண்ணனை விளித்து ஒரு வார்த்தை சொல்லத் தொடங்கினாள் ஆய்ச்சி; அதற்குள்ளே கண்ணபிரான் அவள் சொல்லப்போகிற வார்த்தையைத் தெரிந்துகொண்டு 'நங்காய்! என் சாயத்தை யெல்லாம் வெளியிட வேண்டா, உன்னைக் கும்பிடுகிறேன்' என்று அவளது காலைப் பற்றிக்கொண்டான்; 'இவனை உள்ளே புகவிட்ட தோழியை யன்றோ பொடியவேண்டும்' என்று கருதி அவனை நோக்கி வார்த்தை சொல்லுகை தவிர்ந்து 'ஏடீ யிதுவென் இதுவென் னிதுவென்னோ? என்று தோழியை நோக்கியுரைத்துத் தலைக்கட்டினாளாயிற்று.

திருமகளும் மண்மகளும் உன்னைத் தேடி நிற்கும்படியாக அவர்களை வஞ்சித்துவிட்டு ஆடியசைந்துகொண்டு சில ஆய்மடவாரோடு கூடிச்சென்று குரவைக் கூத்தாடிவிட்டு அவர்களையும் வஞ்சித்து என்பால் அன்புள்ளவன்போல இப்போது இங்கு வருகின்றாய்; உடனே என்னையும் வஞ்சித்து ஓடப்போகிறாய்; நீ ஒருவர்க்கும் மெய்யனல்லை ஆகையாலே கடக்க நில்—என்றவாறு.

"கருமலர்க் கூந்தலொருத்தி தன்னைக் கடைக்கணித்து ஆங்கே ஒருத்தி தன்பால் மருவி மனம்வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப். புரிகுழல் மங்கையொருத்தி தன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை, மருதிறுத்தாய்! உன் வளர்த்தியோடே வளர்கின்றதாலுன்றன் மாயைதானே" என்ற பெருமாள் திருமொழிப் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது.

குரவை பிணைதல்—ஆய்ச்சியரோடு கைகோத்தாடல்; ராஸக்ரீடை யெனப் படும்.

கோமளப்பிள்ளாய்! என்று க்ருஷ்ணனை விளித்து 'ஏதுக்கு இங்குவந்தாய்?' என்று சொல்ல நினைத்த ஆய்ச்சியானவள் "இந்த வார்த்தையும் நாம் இவன் முகத்தை நோக்கிச் சொன்னோமாக வொண்ணாது; 'மெய்ம்மை சொல்லி முகம் நோக்கி விடைதான் தருமேல் மிக நன்றே' என்றாற்போலே இதுதன்னையும் இவன் பெருமையாக நினைத்திடுவனாகையாலே இவன் முகம்பார்த்து நாம் வார்த்தை சொன்னதாக இருக்கவே தகாது என்றெண்ணி "த்ருணமந்தரத க்ருத்வா" என்ற கணக்கிலே தோழியின் முகத்தை நோக்கிக் கூறை வார்த்தையையும் கூறினளாயிற்று என்று அழகிய மணவாளச் சீயர் உபந்யஸித்தருளும்படி. ... 9

**அல்லிக்கமலக்கண்ணனை அங்கோராய்ச்சி * எல்லிப்பொழுதூடிய வூடற்றிறத்தை ***
**கல்லின்மலிதோள்கலியன்சொன்னமாலை * சொல்லித்துதிப்பாரவர்துக்கமிலரே.** 10

| | | | |
|---|---|---|---|
| அல்லி கமலம் கண்ணனை | தாதுகளையுடைய தாமரைப் பூப்போன்ற திருக்கண்களை யுடைய கண்ணபிரானைக் குறித்து | கல்லில் மலி | மலையைக்காட்டிலும் சயித்த (வலிமைகொண்ட) |
| | | தோள் | திருத்தோள்களையுடையரான |
| அங்கு | திருவாய்ப்பாடியில் | கலியன் | திருமங்கையாழ்வார் |
| ஓர் ஆய்ச்சி | ஓரிடைச்சி | சொன்ன | அருளிச்செய்த |
| | | மாலை | இச் சொல்மாலையை |
| எல்லி பொழுது | இராப்பொழுதிலே | சொல்லி | வாயாரச்சொல்லி |
| ஊடிய | ப்ரணயரோஷந் தோற்றப் பேசின | துதிப்பார் அவர் | எம்பெருமானை ஏத்துமவர்கள் |
| ஊடல் திறந்தை | வெறுப்புவார்த்தை விஷயமாக, | துக்கம் இலர் | துன்பமற்று வாழப் பெறுவர்கள். |

* * *—ஆய்ச்சி இங்ஙனே ப்ரணயரோஷம் தோற்றப் பேசின பேச்சுக் களும் கண்ணபிரானுடைய திருவுள்ளத்திற்குப் பரமாநந்தத்தை விளைவிப்பனவா யிருந்தன என்பதைத் தோற்றுவிக்கவேண்டி 'அல்லிக் கமலக்கண்ணனை' எனப் பட்டது; திருவள்ளுவர் குறளில்—"புலத்தலிற் புத்தேள் நாடுண்டோ நிலத்தொடு, நீர் இயைந்தன்னாரகத்து" [நிலத்துடன் நீர் கலந்தாற் போன்ற கணவரிடம் ஊடு வதைப்போல நமக்கு இன்பந்தருவதொரு வான் நாடு உண்டோ? இல்லை.] என்றும், "உணலினும் உண்டதறல் இனிது, காமம் புணர்தலின் ஊடல் இனிது" [உண் பதிலும் உண்ட உணவு அறுதல் இனிது; அதுபோலக் காமத்திற்கு, புணர்ச்சி யைக் காட்டிலும் ஊடுவது இனிது] என்றும் சொல்லுகிறபடியே புணர்ச்சியைக் காட்டிலும் ஊடல் இன்பம் பயக்குமாதலால் நெஞ்சிலுண்டான மகிழ்ச்சி திருக்கண் களில் புறவெள்ளமிட்டமைபற்றி அல்லிக் கமலக் கண்ணனெனப்பட்டானென்க.

அவ்வூடல் திறத்தை யெடுத்துரைக்கு மிந்தத் திருமொழியைக் கற்பவர்கள் ஒரு துக்கமுமின்றி இன்பமாக வாழப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக் கட்டிற்றாயிற்று. .... ... ... ... ... 10

அடிவரவு: காதில் துவர் கருமாக்கொடி நாமம் சுற்றும் ஆனையர் மல்லே புக்கு ஆடி அல்லி புள்ளூரு.

எட்டாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## பத்தாம்பத்து—ஒன்பதாந்திருமொழி—புள்ளுருவாகிநள்ளிருள்வந்த.

உரையவதாரிகை:—திருத்தாயார் பாசுரமாகச் செல்லுகிறது இத்திருமொழி. ஸர்வேச்வரனென்கிற நாயகனோடே கலந்து பிரிந்து பிரிவாற்றதாளான பரகாலநாயகியின் கடலில் மிக்க காதலையும், அக்காதலுக்குத் தக்கபடி அவன்றான் வந்து கலவி செய்யாதே உபேக்ஷித்திருக்கிறபடியையும் நோக்கின திருத்தாயார் எம்பெருமானை நோக்கி 'பிரானே! இவளை நீ இங்ஙனே நோவுபடவிட்டிருப்பது தகுதியோ? பரத்வத்தின்மேலெல்லையிலே நிற்கிற நமக்கு இப்பெண்பிள்ளை ஒரு பொருளோ? என்று அலக்ஷியமாக இவளை நினைத்திருக்கிறாய் போலும்; இதுதானோ உன் பெருமைக்குத் தகுவது? என்று ஒவ்வொரு பாசுரத்திலும் ஒவ்வொரு பழமொழியையெடுத்துரைத்துப் பேசுகிற முகத்தாலே ஆழ்வார் தம்முடைய காதலின் மிகுதியையும், உபேக்ஷியாமல் கடுகக் கைப்பற்றியாகவேணுமென்பதையும் விண்ணப்பஞ் செய்கிறாராயிருக்கிறது.

[illegible]

[illegible], திருவாழியைக் கருவியாகக் கொண்டு எல்லாவுலகங்களிலும் துஷ்டர்களை நிரஸித்து சிஷ்டர்களை வாழ்விப்பதையே விரதமாகக் கொண்டிருக்கிறீர்; இப்படி ஸர்வ ரக்ஷகரான நீர் இவளையும் ரக்ஷிக்கக் கடமைப் பட்டிருந்தும் இவளொருத்தியை மாத்திரம் பாதுகாவாது கைவிட்டிருக்கிறீர்; 'இவள் நம்மால் அவசியம் காக்கப்பட வேண்டியவளல்லள்; அப்படிப்பட்ட தகுதி இவளிடத்து ஒன்றுமில்லை' என்றிகழ்ந்து கைவிட்டீரோ? அன்றி நம்மால் காக்கப்படும் உலகங்களுக்கு இவள் உட்பட்டவளல்லள்; வெளிப்பட்டவள்' என்று கருதிக் கைவிட்டீரோ?] என்ற பாசுரம் இத்திருமொழிக்கு ஒரு புடை ஒப்பு நோக்கத்தக்கது.

புள்ளுருவாகிநள்ளிருள்வந்த பூதனைமாள * இலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்த ஊக்கமதனைநினைந்தோ? *
கள்ளவிழ்கோதைகாதலுமெங்கள் காரிகைமாதர்கருத்தும் *
பிள்ளைதன்கையிற்கிண்ணமேயொக்கப் பேசுவதெந்தைபிரானே ! 1

| | |
|---|---|
| எந்தை பிரானே | எம்பெருமானே ! |
| எங்கள் கள் அவிழ் கோதை காதலும் | தேனொழுகுகின்ற மயிர் முடியையுடையளான என் மகளின் ஆசையையும் |
| காரிகை மாதர் கருத்தும் | (அவ்வாசையைப் பழிக்கின்ற) அழகியாருடைய கருத்தையும் |
| பிள்ளை தன் கையில் கிண்ணமே ஒக்க பேசுவது | சிறுபிள்ளையின் கையிலுள்ள கிண்ணத்தை உபேக்ஷித்திருக்குமாபோலே உபேக்ஷித்திருப்பதானது, |

| | |
|---|---|
| புள் உரு | (சிறுகுழந்தைகளை அநுங்கச் செய்யவல்ல) பறவையினுருவத்தையுடையவளாகி |
| நள் இருள் | நடுநிசியிலே |
| வந்த | (முலைகொடுத்துக் கொல்ல) வந்த |
| | பூதனை |
| மாள | மாளும்படியாகவும் |
| இலங்கை | லங்காபுரியை |
| ஒள் எரி மண்டி உண்ண | ஜ்வலிக்கிற அக்நி வியாபித்து புஜிக்கும்படியாகவும் |
| பணித்த | செய்தற்குறுப்பான |
| ஊக்கம் அதனை | மிடுக்கை |
| நினைந்தோ | திருவுள்ளம்பற்றியோ? |

* * *—"பிள்ளை கையிற் கிண்ணம் மெள்ளவே கொள்ளலாம்." என்ற பழமொழி இப்பாசுரத்தில் அமைக்கப்பட்டுள்ளது. மிக்க வலிமையுள்ளவர்கள் பொற்கிண்ணமொன்றைக் கவர்ந்தால் அதை மீட்டுக் கைப்பற்றுவதற்கு ப்ரயாஸங்கொள்ளவேணும்; அங்ஙனல்லாமல் சிறு பிள்ளை கவர்ந்த கிண்ணத்தைக் கைப்பற்றிக் கொள்ளவேணுமானல் அதற்காக ப்ரயாஸப்படவேண்டுவதில்லை; நினைத்த போது எளிதாக வாங்கிக்கொள்ளுகிறேமென்று ஆறியிருக்கும்படியாக இருக்குமேயன்றிப் பதறவேண்டியிராது; அதுபோல இப்பரகாலநாயகி விஷயத்தில் நீ நினைத்திருக்கிறு யென்றது, இவளை அவ்விதமாக அலக்ஷியம் செய்திருக்கிறு யென்றபடி.

எங்கள் கள்ளவிழ்கோதை காதலையும் அலக்ஷியம் செய்கிறுய், காரிகை மாதர் கருத்தையும் அலக்ஷியம் செய்கிறுய் என்று பின்னடிகளிற் கூறப்படுகின்றது. அதாவது, இவளுடைய கரைபுரண்ட காதலை நோக்கி நீ பதறியோடி வந்து இவளைக் கைப்பற்றவேணும்; அது செய்கின்றிலை; வகுத்த விஷயத்தில் காதல் கொண்டவிது நன்றே என்று உகந்திடாமல் இதனைப் பழிக்கின்ற ஊரவர் பழிச்சொற்களை நோக்கியாகிலும் பதறியோடிவந்து இவளைக் கைப்பற்றி, பழிப்பவர்களின் முகத்தைப் பங்கம் செய்திடவேணும்; அதுவும் செய்கின்றிலை; இரண்டையும் அலக்ஷியம் செய்திருக்கிறுய் என்றவாறு.

இப்படி இவளை உபேக்ஷித்திருப்பதற்குக் காரணம் யாது? "நல்லவென் தோழீ' நாகணை மிசை நம்பரர், செல்வர் பெரியர், சிறுமானிடவர் நாம் செய்வதென்?" என்னும்படியான உன்னுடைய பெருமைகளைப் பாராட்டியோ இவளை இங்ஙனே அலக்ஷியஞ் செய்திருக்கிறது? என்கிறுள் முன்னடிகளில். பூதனையை முலையுண்டு முடித்த பெருமிடுக்குடைய நமக்கு இவள் ஈடோ? இராவணனை முடித்த மஹாவீரனை எனக்கு இவள் ஏற்றிருப்பளோ? என்று திருவுள்ளம்பற்றியிருக்கிறுய் போலும். க்ருஷ்ணவதாரத்திலும் ராமாவதாரத்திலும் காட்டின பராக்கிரமங்களை நினைத்துச் செருக்கியிருக்கிறுய் போலும் என்றவாறு.

புள்ளுருவாகிவந்த பூதனை=பூதனையானவள் பகாஸுரனைப்போலே பறவையினுருவங் கொண்டு வந்தாளென்று சொல்லுகிறதன்று; மேலே ஸஞ்சரித்துக் குழந்தைகளை அணுங்கப்பண்ணும் சில பறவைகளுண்டு; அப்படிப்பட்டவளாய் வந்தாளென்று இவளுடைய கொடுமையைக் குறிப்பிட்டவாறு.

புள்ளுருவாகி நள்ளிருள் வந்த பூதனை மாளப்பணித்த ஊக்கமதனை நினைந்தோ? இலங்கை யொள்ளெரி மண்டியுண்ணப் பணித்த ஊக்கமதனை நினைந்தோ? என்று இரண்டு வாக்யார்த்தமாக விவக்ஷிதம். இனி, 'புள்ளுருவாகி' என்பதைப் பூதனைக்கு விசேஷணமாக்காதே எம்பெருமானுக்கே விசேஷணமாக்கி, புள்ளுருவாகிப் பணித்த ஊக்கமதனை நினைந்தோ? நள்ளிருள்வந்த பூதனை மாளப்பணித்த ஊக்கமதனை நினைந்தோ? இலங்கை பொள்ளெரி மண்டி யுண்ணப் பணித்த ஊக்கமதனை நினைந்தோ? என்று மூன்று வாக்யார்த்தமாக நிர்வஹித்தலுமாம். இப்பக்ஷத்தில் புள்ளுருவாகி என்று ஹம்ஸாவதாரம் செய்தருளினபடியைச் சொல்லுகிறது. ஹம்ஸாவதாரமும் க்ருஷ்ணவதாரமும் ராமாவதாரமும் செய்தோமென்கிற செருக்குக் கொண்டோ இவளை உபேக்ஷிக்கிறுய் என்றதாயிற்று.

ஊக்கம்—பரத்வம், அஹங்காரம், மிடுக்கு.

இலங்கை ஒள்ளெரி மண்டி உண்ண=இராமபிரான் இலங்கை வந்து சேர்வதற்கு முன்பு அக்நி லங்கையில் ஸ்வேச்சையாகப் புகுந்தறியான்; சோறு சமைப்பது, வெந்நீர் காய்ச்சுவது முதலிய காரியங்களுக்கு வேண்டியமட்டுமே இராவணனது கட்டளைக்குப் பணிந்து புகுந்திடுவன்; இராமபிரானுடைய திருத்தோள்களை

பின்பே அந்த அக்நி இலங்கையில் ஸ்வேச்சையாகத் திரிய வல்லவனாயின னென்க.

[பிள்ளை தன்கையில் கிண்ணமே போகப் பேசுவது] "பலவான்கள் கையில் கிண்ணியிறே வாங்க அரிது: பாலராயிருப்பார் கையிலது நினைத்தபோது வாங்கு கிறோ மென்று ஆறியிருக்கிறாப்போலே ஆறியிருக்கிறாயோ?" என்பது வியாக்கி யான ஸ்ரீஸூக்தி.

ஈற்றடியில் பேசுவது என்றது, வாய்விட்டுச் சொல்லுகிறபடியைக் கூறுவ தன்று; நெஞ்சில் நினைக்கிறபடியைக் கூறுவதாமத்தனை; இலக்கணையால். சிறிய திருமடலில் "கையதுவும் சீரார் வலம்புரியே யென்றாள்" என்ற விடத்து 'என்றாள்' என்பதற்கு 'என்று நெஞ்சால் நினைத்தாள்' எனப்பொருள் கொள்வதுபோல. இங்ஙனே மற்றும் பல பிரயோகங்களுமுண்டு. உய்யவுமாங் கொலோ வென்று சொல்லி" இத்யாதிகள் காண்க. ... ... ... ... 1

மன்றின்மலிந்துகூத்துவந்தாடி மால்விடையேழுமடர்த்தாயர் *
அன்றுநடுங்கவாநிரைகாத்த ஆண்மைகொலோ! வறியேனன் *
நின்றபிரானே நீள்கடல்வண்ணா! நீயிவள்தன்னை நின்கோயில் *
முன்றிலெழுந்தமுருங்கையிற்றேனா முன்கைவளைகவர்ந்தாயே. 2

நின்ற பிரானே — திருமலையில் நின்றருளும் பிரானே!
நீள் கடல் வண்ணா — பெரிய கடல்போன்ற வடிவை யுடையவனே!
நீ — நீ
நின் கோயில் முன்றில் எழுந்த முருங்கையில் தேன் ஆ — தன் கோயில் முற்றத்தி லுண்டான முருங்கை மரத்தின் தேனை எளி தாகக் கவருமாபோலே
இவள் — இப்பெண்மகளினுடைய
முன் கைவளை — முன்கையிலுள்ளவளைகளை
கவர்ந்தாயே — கைக்கொண்டாயே, (இது)
மன்றில் மலிந்து — நாற்சந்தியிலே பொருந்,நின்று
உவந்து — திருவுள்ள முகந்து
கூத்து ஆடி — (குடக்கூத்து முதலிய) கூத்துக்களையாடியும்
மால் விடை ஏழும் அடர்த்து — கரியகாளைகளேழையும் வலி யடக்கியும்
அன்று — (இந்திரன் கல்மாரி பொழிந்த) அக்காலத்திலே
ஆயர் நடுங்க — இடையர்கள் நடுங்கிநிற்க
ஆநிரை — பசுக்கூட்டங்களை
காத்த — ரக்ஷித்தோமென்கிற
ஆண்மை கொலோ — மேனாணிப்பினாலோ?
நான் அறியேன் — என்னகாரணமென்று நான அறிகின்றிலேன்.

* * *—நாற் சந்திகளிலே பெண்கள் கண்குளிர நின்று குடக்கூத்தாடி ஸ்த்ரீ ரத்னங்கள் பலவற்றையும் மயக்கி ஆண்டுகொண்ட நமக்கு இந்தப் பரகால நாயகி யொருத்தி ஒரு சரக்கோ? என்று நினைக்கிறாய் போலும்; கொழுத்துச் செருக்கி யிருந்த ஏழு ரிஷபங்களையும் வலியடக்கி நப்பின்னைப் பிராட்டியை மணந்து கொண்ட நமக்கு இவள் ஈடோ? என்று நினைக்கிறாய் போலும். கோவர்த்தன மலையைக் குடையாக ஏந்தி நின்று கோவலரையும் கோநிரையையும் காத்தருளின பெருமை வாய்ந்த நமக்கு இவளொருத்தியை உபேக்ஷிக்குமளவால் என்ன குணக் கேடு வந்திடப்போகிறது! என்று நினைக்கிறாய் போலும், என்றாள் முன்னடிகளில் திருத்தாய்; அதைக் கேட்ட எம்பெருமான் 'இவளை நான் உபேக்ஷித்ததாகச் சொல்லுதற்கு யாதுகாரணம்? எதைக் கொண்டு நான் இவளை உபேக்ஷித்தேனாகச் சொல்லுகிறாய்?' என்று கேட்க, இவள் தன்னை முன் கைவளை கவர்ந்தாயே! என்கிறாள். கையில் வளை நிற்கமாட்டாதபடி இவளை ஒரு துரும்புபோலே இளைக்கச் செய்து விட்டாயே!, இது கொண்டு சொல்லுகிறே னென்றபடி.

நின்கோயில் முன்றிலெழுந்த முருங்கையில் தேன் = நெடுந்தூரத்திலிருப்பதன்றியே ஸமீபத்தில் வாசலிலே உள்ளதான ஒரு மரத்தில் தேன் இருந்தால் அதனை எப்படி எளிதாகக் கவரலாகுமோ, அப்படி எளிதாக இவளது கைவளைகளைக் கவர்ந்து கொண்டாயே! என்றவாறு.

மன்றில் மலிந்து கூத்தாடின ஆண்மையை நினைத்தோ, மால்விடை யேழு மடர்த்த ஆண்மையை நினைத்தோ, ஆநிரை காத்த ஆண்மையை நினைத்தோ நீ இவள் தன்னை முன் கைவளை கவர்ந்தாய்? என விரிக்க. ... ... 2

ஆர்மலியாழிசங்கொடுபற்றி ஆற்றலையாற்றல்மிகுத்து *
கார்முகில்வண்ணா! கஞ்சனைமுன்னங்கடந்தநின்கடுந்திறல்தானே?
நேரிழைமாதைநித்திலத்தொத்தை நெடுங்கடலமுதனையாளை *
ஆரெழில்வண்ணா! அங்கையில்வட்டாம் இவளெனக்கருதுகின்றாயே. 3

| | | | |
|---|---|---|---|
| கார் முகில் வண்ணா | காளமேக நிறத்தனே! | | (இப்படி நினைத்திருப்பதானது) |
| | | முன்னம் | முன்பு |
| ஆர் எழில் வண்ணா | மிக்க அழகுடையவடிவு படைத்தவனே! | ஆர் மலி | கூர்மை |
| நேர் இழை | நேர்மையான ஆபரணங்களை யுடையவளாய் | ஆழி | திருவாழியையும் |
| | | சங்கொடு | திருச்சங்கையும் |
| நித்திலம் தொத்தை | முத்துமாலை போன்றவளான | பற்றி | கையிலேந்தி, (அவதரித்து) |
| | | ஆற்றலை | மிடுக்கை |
| நெடு கடல் அமுது அனையாளை | பெரிய கடலிற்றோன்றிய அமிருதம் போன்றவளான | ஆற்றல் மிகுத்து | ஆறுதல் மிகும்படியாக்கி [யடக்கி] |
| மாதை | இப்பெண்பிள்ளை விஷயத்தில் | கஞ்சனை | கம்ஸனை |
| இவள் அம் கையில் வட்டு ஆம் என கருதுகின்றாய் | 'உள்ளங்கையிலுள்ள கருப்புகட்டி போன்றவளா மிவள்' என்று நினைத் திருக்கிறாய்; | கடந்த | தொலைப்பதற் குறுப்பாயிருந்த |
| | | நின் கடு திறல் தானோ | உன்னுடைய வலியதான பராக்ரமத்தை |

* * *—விலக்ஷணமான ஆபரணங்களை யணிந்துள்ளவளும், அணைத்தால் தாபமெல்லாம் ஆறும்படியாக முத்துக்கொத்து போல் குளிர்ந்த வடிவுடையவளும், கடலில் தோன்றிய அமுதம்போலே இனியளுமான இப்பரகால நாயகியை ஒரு சரக்காகவே மதிக்கின்றாயில்லையே!, இஃது ஏன்? நாம் சங்கு சக்கரங்களைக் கையிலேந்தியுள்ளோம் என்கிற பெருமையைப் பாராட்டியோ? கம்ஸனை முடித்த மிடுக்குடைய நமக்கு இவள் ஒரு சரக்கோ! என்று நினைத்தோ? சொல்லாய் பிரானே!

ஆர்மலியாழி=ஆர்—கூர்மை. இனி, ஆர் என்று அரங்களுக்கும் பெயருண்டாதலால் அரங்கள் நிரம்பிய சக்கரம் என்றுமாம். [ஆற்றலை ஆற்றல் மிகுத்து] முதலிலுள்ள 'ஆற்றல்' என்பதற்குப் பராக்ரமமென்று பொருள். அதற்குமேல், ஆற்றலாவது—ஆறுதல். ஆற்றல் மிகுத்து—ஆறுதல் மிகும்படியாகச் செய்து; பராக்ரமத்தை ஆறுதல் மிகும்படியாகச் செய்தலாவது—உலகத்தை யெல்லாம் ஸம்ஹரிக்க வல்லதான பராக்ரமத்தை ஒரு புழுவான கம்ஸனளவிலே அடக்கி உபயோகப் படுத்தின படியைச் சொன்னவாறு. தனக்குள்ள பராக்ரமத்தை முழுவதும் செலுத்தாமல் அதில் ஸ்வல்ப பாகங்கொண்டே கம்ஸனைக் கடிந்தமை கூறியவாறு. இங்கே வியாக்கியான வாக்கியங் காண்மின்;—"(ஆற்றல் மிகுத்து) ஒரு ஜகதுபஸம்

ஹாரத்துக்குப் போந்திருக்கச் செய்தே கம்ஸனளவிலே யாம்படி அமைத்து" என்பதாம்.

[அங்கையில்வட்டாம் இவளெனக் கருதுகின்றாய்] "கையிலிருந்த கருப்புக்கட்டி தின்னவுமாய்ப் பொகடவுமாயிருக்குமிறே; அப்படியே நினைத்திருக்கிறாயோ இவளை யும்" என்பது வியாக்கியானம். உலகத்தில் எல்லார்க்கும் கைப்படாத பொருள் களில் விருப்பம் பெருகிச் செல்லுமேயன்றி, அப் பொருள் தானே கைப்பட்டு விட்டால் பிறகு அதில் உபேக்ஷையே உண்டாகும். அதுபோல இப்பரகால நாயகி யும் கைப்பட்ட சரக்காதலால் இவளை அலக்ஷியம் செய்கிறாய் போலும் என்கை.

இப்பாட்டில் எம்பெருமானுக்கு 'கார்முகில்வண்ணா!' என்றும் 'ஆரெழில் வண்ணா!' என்றும் இரண்டு ஸம்போதனங்கள் உள்ளன; பரகாலநாயகியைப்பற்றிச் சொல்லும்போது மூன்றாமடியில் மூன்று விசேஷணங்கள் இடப்பட்டன; இந்த வாசியினால் தெரிவதாவது, 'உன்னைக் காட்டிலும் இவள் மிக்க வீறுபெற்றவளாத லால் இவளை நீ அலக்ஷியம் செய்யலாகாது' என்பதாம்.

இராமபிரானையும் பிராட்டியையும் திருமணப்பந்தலிலே கண்டவர்கள் துல்யசீலவயோவ்ருத்தாம் துல்யாபிஜநலக்ஷணாம், ராகவோர்ஹதி வைதேஹீம் தஞ்சேயமஸிதேக்ஷணா" என்றார்களாம். அதாவது, இந்த திவ்ய தம்பதிகள் பரஸ்பரம் எல்லா லக்ஷணங்களும் ஒத்திருக்கப் பெற்றிருக்கிறார்கள்; இராகவனுக்கு ஏற்ற மனைவி ஸீதை வாய்த்தாள்; ஸீதைக்கு ஏற்ற கணவன் இராகவன் வாய்த் தான் என்று சொல்லும்போது ஒரு விசேஷார்த்தம் மூலத்தில் குறிப்பிடப் பட்டுள்ளது; பிராட்டிக்கு 'அஸிதேக்ஷணா' என்றொரு விசேஷணம் அதிகப்படியாக இட்டமையாலும் சாபத பிரயோகம் பண்ணினமையாலும், "இராகவனுக்கு மாத் திரம் நல்ல பாக்கியமே சிறந்த மனைவி கிடைக்கப்பெற்றான்; ஆனால் சீதைக்கு அவ்வளவு பாக்கியமில்லை; இவளுடைய கண்ணழகுக்கு ஏற்றவாறு இன்னமும் சிறந்த அழகுவாய்ந்த கணவன் கிடைத்திருக்கலாம்; ஆனாலும் குற்றமில்லை; கூடியமட்டும் ஏற்ற கணவனே" என்பதான அபிப்ராயம் தோன்றுகின்றது. கம்ப ராமாயணத்திலும் இங்ஙனே யுள்ளது; மிதிலாபுரியில் திவ்ய தம்பதிகள் ஊர்வலம் வரக்கண்டவர்கள் "நம்பியைக்காண நங்கைக்கு ஆயிரநயனம் வேண்டும்" என்று சிலர் சொன்னார்கள்; (அதாவது—இராமபிரானழகைக் காண்பதற்குப் பிராட் டிக்கு இவ்விரண்டு கண்கள் போராது; ஆயிரங் கண்கள் வேணும் என்கை.) அதைக்கேட்ட மற்றுள்ளவர்கள் "கொம்பினைக் காணுந்தோறும் குரிசிற்கு மன்ன தேயாம்" என்றார்கள்; (அதாவது—வஞ்சிக் கொம்புபோன்ற பிராட்டியினழகைக் காணவேண்டில், காண்கிற ஒவ்வொரு நிமிஷத்துக்கும் இராமபிரான் ஆயிரங்கண் படைக்கவேணும் என்கை)

அவ்விதமாகவே, உன்னிலும் அழகு மிக்கவளான இவளை நீ உபேக்ஷித்தல் தகாதென்கிறாள் திருத்தாய் ... ... ... ... 3

மல்கியதோளும்மானுரியதளு முடையவர்தமக்குமோர்பாகம் *
நல்கியநலமோ? நரகனைத்தொலைத்த கரதலத்தமைதியின்கருத்தோ *
அல்லியங்கோதையணிநிறங்கொண்டுவந்து முன்னேநின்றுபோகாய் *
சொல்லியென்? நம்பி! யிவளைநீயுங்கள்தொண்டர்கைத்தண்டென்றவாறே. 4

| | |
|---|---|
| நம்பி | ஸ்வாமிந் ! |
| அல்லி அம் கோதை | செவ்விமாலையினாலே அழகு பெற்ற மயிர் முடியை யுடையளான இப்பெண் பிள்ளையினுடைய |
| அணி | விலக்ஷணமான |
| நிறம் | மேனி நிறத்தை |
| கொண்டு | அபஹரித்தது மன்றி |
| முன்னே, வந்து நின்று போகாய் | உருவெளிப்பாட்டாலே எப்போதும் இவள் கண்ணெதிரே தோற்றிப் புறப்பு போகிறாயில்லை ; |
| | நீ |
| | இப்பெண்பிள்ளையை |
| உங்கள் தொண்டர் கை தண்டு என்ற ஆறு | அடியார் கையிலுள்ள தடியைப்போலே நினைத்திருக்கும் விதம் என்னே !; |
| சொல்லி என் | (இவள் திறத்திலே உனக்கு உள்ள உபேக்ஷையைப்பற்றி விரிவாகச்) சொல்வதனால் என்ன பயன் ? |

| | |
|---|---|
| | (இப்படி உபேக்ஷித்திருப்பதானது) |
| மல்கிய தோளும் | பணைத்த தோள்களையும் |
| மான் உரி அதளும் | மானின் உரிக்கப்பட்ட தோலையும் |
| உடையவர் தமக்கும் | உடையவரான சிவபிரானுக்கும் |
| ஓர் பாகம் | திருமேனியில் ஒரு பகுதியை |
| நல்கிய | (இடமாகக்) கொடுத்திருக்கிறோமென்கிற |
| நலமோ | பெருமையை நினைத்தோ ? |
| | (அன்றி) |
| | நரகாஸுரனை |
| தொலைத்த | கொன்றொழிப்பதற்கேயான |
| கரதலத்து | கையிலுள்ள |
| அமைதியின் கருத்தோ | மிடுக்கை நினைத்தோ ? |

* * *—அஹங்காரியான ருத்ரனுக்கும் நாம் உடம்பிலே ஒருகூறு கொடுத்திருக்கிறோமென்கிற சீலகுணத்தை நினைத்தோ, நரகாசுரனை முடித்த மிடுக்குடையோமென்று கையில் மிடுக்கை நினைத்தோ இவளை நீ உபேக்ஷித்திருக்கிறாய் என்கிறாள்.

எம்பெருமான் வராஹாவதாரஞ்செய்து பூமியைக்கோட்டாற்குத்தியெடுத்த பொழுது, எம்பெருமானுடைய ஸ்பர்சத்தால் பூமிதேவிக்குக் குமாரனாய்ப் பிறந்தவனும், அஸமயத்தில் சேர்ந்து பெறப்பட்டதனால் அஸுரத்தன்மை பூண்டவனுமான நரகனென்பவன் ப்ராக்ஜோதிஷமென்னும் பட்டணத்திலிருந்துகொண்டு ஸகல ப்ராணிகளையும் நலிந்து, தேவஸித்த கந்தர்வாதிகளுடைய கன்னிகைகளையும் ராஜாக்களுடைய கன்னிகைகளையும் பற்பலரைப் பலாத்காரமாய் அபஹரித்துக் கொண்டு போய்த் தான் மணம் புணர்வதாகக் கருதித் தன்மாளிகையிற் சிறைவைத்து, வருணனது குடையையும் மந்தரகிரி சிகரமான ரத்ந பர்வதத்தையும், தேவமாதாவான அதிதி தேவியின் குண்டலங்களையுங் கவர்ந்து போனது மன்றி, இந்திரனுடைய ஐராவத யானையையும் அடித்துக்கொண்டு போகச் சமயம் பார்த்திருக்க, அஞ்சிவந்து பணிந்து முறையிட்ட இந்திரனது வேண்டுகோளால், கண்ணபிரான் கருடனை வரவழைத்து, பூமிதேவியின் அம்சமான ஸத்யபாமையுடனே தான் கருடன் மேலேறி அந்நகரத்தை யடைந்து சக்ராயுதத்தைப் பிரயோகித்து, அவனது மந்திரியான முரன் முதலிய பல அஸுரர்களையும் இறுதியில் அந்த நரகாஸுரனையும் அறுத்துத்தள்ளி யழித்து, அவன் பல திசைகளிலிருந்து கொண்டு வந்து சிறைப்படுத்தியிருந்த பதினாறாயிரத்தொரு நூறு கன்னிகைகளையும் த்வாரகையிற் கொண்டுசேர்த்து மணஞ்செய்து கொண்டானென்பது நரகனைத் தொலைத்த வரலாறு.

சிவபிரானுக்குத் திருமேனியில் கூறு கொடுத்ததையும் நரகனைத் தொலைத்ததையும் இங்கு எடுத்துக் கூறுவதன் கருத்து, யாதெனில்; இப்பரகால நாயகியை உபேக்ஷித்ததனால் நமக்கு யாதொரு அபகீர்த்தியும் விளைந்திடாது; அஹங்காரி

யான ருத்ரனுக்கு உடம்பில் இடங்கொடுத்த சீலகுணம் உலகமெங்கும் பரவி யிருக்கும்போது இதுவொரு அபகீர்த்தியாகுமோ நமக்கு? என்று நினைக்கிறாயோ; நரகனைத்தொலைத்துக் கவர்ந்த பதினாறு பல்லாயிரமெண்ணிறந்த பெருந்தேவிமார் இருக்க இவள் ஒரு பொருளோ என்று நினைக்கிறாயோ? என்பதாம்.

[அல்லியங்கோதை யணிநிறங்கொண்டு வந்து முன்னே நின்று போகாய்] அல்லியங் கோதை யென்பது பரகால நாயகியை; இவளுடைய அழகிய மேனி நிறம் விரஹ வேதனையினால் அழிந்துபோனது பற்றி 'அணிநிறங் கொண்டு' எனப்பட்டது. "முன்னே வந்து நின்று போகாய்" என்றது உருவெளிப் பாட்டைச் சொன்ன படி. அதாவது, ப்ரத்யக்ஷ ஸமானாகாரமாக உருவம் கண்ணுக்குத் தோற்றுகை. "வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜினாம்பரம்" என்று மாரீசனுக்கு இராமபிரானுடைய உருவம் எங்கும் தோற்றினதுபோல அன்பர்கட்கும் தோற்று மென்க. திருவாய்மொழியில் (5—5) "எங்ஙனேயோ வன்னைமீர்காள்!" என்னுந் திருவாய்மொழியில் இதனைக்காண்க. "எங்ஙனே நீர் முனிவது என்னை யினி நம்பியழகு; இங்ஙனே தோன்றுகின்றதென் முன்னே—அங்ஙனுருவெளிப்பாடா வுரைத்த தமிழ்மாறன்" என்ற திருவாய்மொழி நூற்றந்தாதியுங் காண்க.

அலக்ஷியம் செய்கிற நீ உருவெளிப்பாட்டாலே இவளை நோவ படுத்துவது ஏதுக்கு? உன்னை மறந்தும் வாழவொட்டாதே இப்படி ஹிம்ஸிப்பாயோ என்றாளாயிற்று.

இவளை நீ உங்கள் தொண்டர்கைத் தண்டென்றவாறே—"சாபமாநய ஸௌமித்ரே! என்று நினைத்தபோது வாங்கிக் காரியங் கொள்ளலாம்படி உரிய அடியார்கையில் ஆயுதத்தோபாதி நினைத்திரா நின்றாய்" என்பது வியாக்கியான ஸ்ரீஸூக்தி. அடியவர்களின் கையிலுள்ள ஆயுதத்தை வாங்குதல் எப்படி அலக்ஷியமோ, அப்படி இவளையும் அலக்ஷியம் செய்கிறாயே! என்றவாறு. .... ... 4

செருவழியாதமன்னர்கள்மாளத் தேர்வலங்கொண்டவர்செல்லும் *
அருவழிவானமதர்படக்கண்ட ஆண்மைகொலோவறியேனன் *
திருமொழியெங்கள்தேமலர்க்கோதை சீர்மையைநினைந்திலையந்தோ!
பெருவழிநாவற் கனியினுமெளியள் இவளெனப் பேசுகின்றாயே. 5

| | | | |
|---|---|---|---|
| எங்கள் | எங்களுடையவளாய் | அழியாத | ஒருநாளும் தோற்றறியாத |
| திருமொழி | சிறந்த [மதுரமான] பேச்சை யுடையவளாய் | மன்னர்கள் | அரசர்கள் |
| | | மாள | மாண்டுபோகும்படியாக |
| தேன் மலர் கோதை | தேனொழுகும் மலர்களணிந்த மயிர் முடியையுடையளான இப்பெண்பிள்ளையினுடைய | தேர் வலம் கொண்டு | தேரின் வலிமையையே கொண்டு |
| சீர்மையை | சிறப்பை | அவர் செல்லும் | அவ்வரசர்கள் போகக்கூடிய |
| | அறிகின்றிலை; | | |
| அந்தோ | ஐயோ!; | அரு வழி வானம் | அருமையான வழியை யுடைய வீரஸ்வர்க்கத்தை |
| இவள் பெரு வழி நாவல் கனியினும் எளியள் என பேசுகின்றாய் | பெரிய வழியில் விழுந்து கிடக்கிற நாவற் பழத்தைக் காட்டிலும் இவள் எளியவள் என்று நினைத்திருக்கிறாயே!, | அதர்பட கண்ட | பெருவழியாக்கின |
| | | ஆண்மைகொலோ | ஆண்பிள்ளைத் தனத்தை நினைத்தோ? |
| | (இது) | நான் அறியேன் | எனக்குத் தெரியவில்லை. |
| செரு | போர்க்களத்திலே | | |

* * *- -பிரானே! பேச்சிலினிமையாலே உனது நெஞ்சையும் கவர வல்லளாய், தலையில் பூவணிந்திருக்குமழகாலே உன்னைப் பிச்சேற்றவல்லளான இப்பரகாலநாயகியின் சிறப்பைச் சிறிதும் நினைக்கின்றிலையே!, இவளிடத்தில் மிகவும் அலக்ஷியம் பாராட்டுகின்றனையே!, இதற்கு என்னகாரணம்? * பார்த்தன் சிலை வளையத் திண்டேர்மேல் முன்னின்று, மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும் பலர்குலைய நூற்றுவரும் பட்டழியச் செய்த மிடுக்கை நினைத்தோ இவளை இங்ஙனே அலக்ஷியஞ் செய்கிறாய் என்கிறாள்.

**செருவழியாத மன்னர்கள்**=பாரத யுத்தத்திற்கு முன்பு ஒருகாலும் ஓரிடத்திலும் தோல்வி பெற்றறியாத (அதிரதமஹாரதர்களான) பீஷ்மத்ரோணாதிகள். [தேர்வலங் கொண்டு] தான் ஆயுதமெடுப்பதில்லையென்று பிரதிஜ்ஞை பண்ணி வைத்திருக்கையாலே தேர்க்காலாலே ப்ரதிபக்ஷங்களை உழக்கினானாயிற்று. போர்க்களத்திலே மாண்டொழிந்தவர்கள் வீரஸ்வர்க்கம் புகுவதாக சாஸ்த்ரங்களின் கொள்கையாதலால் "அவர் செல்லுமருவழி வானம்" எனப்பட்டது. பாரத யுத்தத்துக்கு முன்பு நெடுநாளாகவே வீரஸ்வர்க்கத்துக்குப் போவாரில்லாமையாலே புல்லெழுந்து கிடந்த அவ்வழியைப் பெருவழியாம்படி செய்தனன் கண்ணபிரானென்க. அப்படிப்பட்ட ஆண்பிள்ளைத் தனத்தை நினைத்தோ இவளை அபதார்த்தமாக நினைக்கிறாய்?.

**பெருவழிநாவற்கனியினும் மெளியளிவள்**—பெரியதொரு வழியிலே நாவற்பழம் கிடந்தால் அதைக் குனிந்தெடுக்கவுமாய்த் தவிரவுமாயிருக்குமன்றோ; மரத்திலே எட்டாத நிலத்திலே யிருக்குமாகில் அபேக்ஷை விஞ்சியிருக்கும்; ஸர்வஸாதாரணமான வழியிலே வீழ்ந்து கிடந்ததாகில் ஒரு பொருளாகத் தோற்றாதிறே. அதுபோலவே இவளையும் கருதுகின்றாய் போலும். பேசுகின்றயே என்றது—கருதுகின்றாயே என்றபடி. (முதற்பாட்டினுரை காண்க.) ... 5

**அரக்கியராகம் புல்லெனவில்லால் அணிமதிளிலங்கையர் கோனை ***
**செருக்கழித்தமரர்பணியமுன்னின்ற சேவகமோசெய்ததின்று ***
**முருக்கிதழ்வாய்ச்சிமுன்கை வண்சங்கங்கொண்டு முன்னேநின்றுபோகாய் ***
**எருக்கிலைக்காகவெறிமழுவோச்சல் என்செய்வதெந்தைபிரானே.** 6

| | |
|---|---|
| எந்தை பிரானே | எம்பெருமானே! |
| முன் | முன்பொருகால் |
| அரக்கியர் | ராக்ஷஸ ஸ்த்ரீகளினுடைய |
| ஆகம் | மார்பு |
| புல்லென | சூன்யமாம்படியாக, |
| அணி மதிள் இலங்கையர் கோனை | அழகிய மதிள்களையுடைய இலங்காபுரியிலுள்ளார்க்குத் தலைவனான இராவணனை |
| வில்லால் | ஒரு வில்லாலே |
| செருக்கு அழித்து | கொழுப்படக்கி |
| அமரர் பணிய நின்ற | தேவர்கள் வணங்குமாறு நின்ற |
| சேவகமோ | பராக்ரமத்தை நினைத்தோ |
| இன்று செய்தது | இன்று (இவள் விஷயத்தில் உபேக்ஷை) செய்வது? |
| | (என்ன செய்கிறேனென்ன) |
| முருக்கு இதழ் வாய்ச்சி | முருக்கம்பூப்போன்ற அதரத்தையுடையளான பெண்பிள்ளையினுடைய |
| முன் கை | முன்கையிலுள்ள |
| வண் சங்கம் | அழகிய வளைகளை |
| கொண்டு | பறித்துக்கொண்டதுமன்றி |
| முன்னே நின்று போகாய் | உருவெளிப்பாட்டாலே எப்போதும் இவள் கண்ணெதிரே தோன்றிப் புறம் போகிறாயில்லை; |
| எருக்கு இலைக்கு ஆக | எருக்கிலையை உதிர்ப்பதற்காக |
| எறி மழு ஓச்சல் என் செய்வது? | வீசுகோடாலியைக் கொண்டு ஓங்கியடிப்பது எதுக்கு? |

* * *—பிரானே! இவளுடைய அதரத்தின் வைலக்ஷண்யத்தைச் சிறிதும் நினைக்கிறாயில்லையே; இவளது உடலை ஈர்க்குபோல இளைக்கச்செய்து கைவளைகளைக் கழலச் செய்தாயே! உன்னை மறந்தாவது இவள் பிழைக்கலாமென்று பார்த்தால் அதுதனக்கும் இடமறும்படி உருவெளிப்பாட்டாலே நலிகின்றாயே; அபலையான இவளைக் கொலைசெய்வதற்கு நீ இத்தனை ப்ரயாஸங்கொள்ள வேணுமோ? தன்னடையே பழுத்து நெகிழ்ந்து விழக்கடவதான எருக்கிலையை உதிர்ப்பதற்கு மழுப்படைகொண்டு வியாபரிப்பாருண்டோ? இராவணனை ஸம்ஹாரம்பண்ணி, தேவர்களால் வணங்கப்பெற்று நின்ற அந்த வீரச்செயலை இன்று நீ இவள் திறத்திலே காட்டுகின்றாய்போலும் என்கிறாள்.

அரக்கியராகம் புல்லென=ராக்ஷஸ மாதர்களெல்லாரும் தாலியிழக்கும்படி என்றவாறு. 'செருக்கழிந்து' என்றதை செருக்கு அழிந்து என்றும், செரு கழித்து என்றும் பிரிக்கலாம். (செரு—போர்க்களத்திலே, கழித்து—நிரஸித்து என்றபடி.) அமராணிய முன்னின்ற=ஸ்ரீ ராமாயண யுத்தகாண்டத்தில் நூற்றிருபதாம் ஸர்க்கத்தில் இவ்விஷயம் விசதமாகக் காணத்தக்கது. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி பரமபோக்யமாக வுள்ளது: அதாவது—"ராவணவதாநந்தரம் பிராட்டி எழுந்தருளிவர, பெருமாள் முகங்கொடாதே யொழிய, தேவஜாதி வந்து 'பவாந் நாராயணோ தேவ:' என்றும் 'ஸீதா லக்ஷ்மீர் பவாந் விஷ்ணு:' என்றும் உணர்த்த, முகங்கொடாதே நின்ற அச்சேவகம்போலே யிருந்ததீ! இச்சேவகமும்." என்று. ... ... ... ... 6

ஆழியந்திண்டேரரசர்வந்திறைஞ்ச அலைகடலுலகமுன்னாண்ட *
பாழியந்தோளோராயிரம்வீழப் படைமழுப்பற்றியவலியோ *
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்து முன்னேநின்றுபோகாய் *
கோழிவெண்முட்டைக்கென்செய்வதெந்தாய்! குறுந்தடிநெடுங்கடல்வண்ணா!

நெடுங்கடல் வண்ணா எந்தாய்!-;

| | |
|---|---|
| முன | முற்காலத்து, |
| திண் | வலிமைபொருந்திய |
| ஆழி | உருளையோடு கூடின |
| அம் தேர் | அழகிய தேரையுடையரான |
| அரசர் | ராஜாக்கள் |
| வந்து இறைஞ்ச | வந்து வணங்கும்படியாக |
| அலை கடல் உலகம் | அலைகடல் சூழ்ந்த உலகங்களை |
| ஆண்ட | ஆட்சிபுரிந்த |
| ஓர் ஆயிரம் பாழி அம் தோள் வீழ | (கார்த்தவீரியனுடைய) வலிமிக்க ஓராயிரந் தோள்கள் இற்று விழும்படியாக |
| படை மழு பற்றிய வலியோ | கோடாலிப்படையை ஏந்திய )க்கை |
| மாழை மென் நோக்கி | மானினுடைய அழகிய நோக்குப் போன்ற நோக்கையுடையளான பெண்பிள்ளையினுடைய |
| மணி நிறம் கொண்டு | அழகிய மேனி நிறத்தைக் கொள்ளை கொண்டது மன்றி |
| முன்னே வந்து நின்று போகாய் | உருவெளிப்பாட்டாலே இவள் கண்ணெதிரே தோற்றி நின்று புறம்பு போகிறாயில்லை; |
| கோழி வெண் முட்டைக்கு | (தன்னடையே உடைந்து போகக்கூடியதான) கோழி முட்டையை -டைபப தற்கு |
| குறு தடி என் செய்வது | சிறிய தடிதானும் எதுக்கு? |

* * *—கடல் வண்ணனே! மாழைமான் மடநோக்கியான இப் பரகால நாயகியின் மேனி நிறத்தைக் கவர்ந்துகொண்டாய்; இதுசெய்த நீ இவளை அடியோடு முடித்துவிடலாமே; இவளைச் சித்திரவதம் பண்ணவேணுமென்று கருதியோ உரு வெளிப்பாட்டாலே நலிகின்றாய்! கார்த்தவீர்யார்ஜுநனுடைய ஆயிரந் தோள்களையும் (பரசுராமாவதாரத்தில்) கோடாலிப்படையினால் அறுத்துத் தள்ளின

நீ இவள் திறத்திலே காட்டுகின்றாய்போலும்; இவளை மாய்ப்பதற்கு இத்தனை ப்ரயாஸங்கொள்ள வேணுமோ! தன்னடையே உடைந்துபோகக் கூடியதான கோழிமுட்டையைத் தகர்ப்பதற்குச் சிறியதடி தானும் வேணுமோ! ஏதுக்கு இவ்வளவு வீண் ப்ரயாஸங் கொள்ளுகிறாய் என்கிறாள்.

கார்த்தவீரியார்ஜுநனுடைய பெருமையைக் கூறுவது முதலடி; அரசர்களனைவராலும் வணங்கப்பட்டுக் கடல் சூழ்ந்த வுலகம் முழுவதையும் ஆண்டு வந்தவனும் அவன். ... .... ... .... ... 7

பொருந்தலனாகம் புள்ளுவந்தேற வள்ளுகிரால் பிளந்தன்று *
பெருந்தகைக்கிரங்கிவாலியைமுனிந்த பெருமைகொலோ? செய்ததின்று *
பெருந்தடங்கண்ணிசுரும்புறுகோதை பெருமையைநினைந்திலைபேசில் *
கருங்கடல்வண்ணா! கவுட்கொண்டநீராம்இவளெனக்கருதுகின்றாயே. 8

| | |
|---|---|
| அன்று | முன்பொருகால் |
| பொருந்தலன் | பகைவனான இரணியனுடைய |
| ஆகம் | சரீரத்திலே |
| புள் | (கழுகு பருந்து முதலிய) பறவைகள் |
| உவந்து ஏற | மகிழ்ந்து ஏறியுண்ணும்படியாக |
| வள் உகிரால் | கூர்மையான நகங்களாலே |
| பிளந்து | (அவ்வுடலைப்) பங்கஞ் செய்து |
| பெருந்தகைக்கு | பெருந்தன்மை வாய்ந்தவனான ஸுக்ரீவனுக்கு |
| இரங்கி | அருள் கூர்ந்து |
| வாலியை முனிந்த | வாலியைச் சீறி முடித்தோமென்கிற |
| பெருமை கொலோ | பெருமையை நினைத்தோ |
| இன்று ...ய்தது | இப்போது இவளை ... (உபேக்ஷை) செய்வது? |
| கருங்கடல் வண்ணா!—; | |
| பெரு தட கண்ணி | மிகப் பரந்த கண்களை யுடையளாய் |
| சுரும்பு உறு கோதை | (மதுபான விருப்பத்தினால்) வண்டுகள் மாறாதகூந்தலை யுடையளான இப் பெண்பிள்ளையினுடைய |
| பெருமையை | வைலக்ஷண்யத்தை |
| பேசில் | ...வள் திறத்தில் நீ கொண்டிருக்கு மெண்ணத்தைப்) பேசப் புகுந்தால் |
| இவள் கவுள் கொண்ட நீர் ஆம் என கருதுகின்றாய் | வாயினுட் கொள்ளப்பட்ட நீர்போலே இவளை நினைத்... |

* * *—கடல்வண்ணனே! இப்பரகால நாயகியின் வைலக்ஷண்யத்தை நீ சிறிதும் நினைக்கின்றிலை; இவள் எப்படிப்பட்டவள் தெரியுமோ? [பெருந்தடங்கண்ணி] "தோள்களாயிரத்தாய்" என்னும்படியான விச்வரூப வடிவுகொண்டு இவளை நீ அநுபவிக்கப் புக்காலும் உன்னுடைய அந்தத் திருமேனிப் பரப்பையெல்லாம் இவள் தன் கடைக்கண் நோக்கத்தின் ஒரு மூலையிலே ஆழங்காற்படுத்திக் கொள்ள வல்லள்காண் என்கை. 'போகோபோத்காத கேலீகுலகித பகவத் வைச்வரூப்யாநுபாவா' என்ற ஸ்ரீ குணரத்நகோச ஸ்ரீஸூக்தியை நினைப்பது. இப்படிப்பட்டவளையோ நீ உபேக்ஷிப்பது? இரணியனை வள்ளுகிரால் பிளந்தொழித்த நம்முடைய பெருமைக்கும் வாலியை முடித்த நம்முடைய மிடுக்குக்கும் இவள் ஈடோ? என்று நினைக்கிறாய்போலும். ப்ரஹ்லாதாழ்வானுக்கு அருள் செய்வதற்காக இரணியனை முடித்தாயென்றும், ஸுக்ரீவனுக்கு அருள் செய்வதற்காக வாலியை முடித்தாயென்றும் கேள்விப்படுகிறோம்; இதனால் ஆச்ரிதவாத்ஸல்ய முடையவன் நீ என்று தெரிகிறது. அக்குணம் இவள் திறத்திலே இங்ஙனேயோ பலித்தது? [கவுள் கொண்ட நீராமிவளெனக் கருதுகின்றாயே] கபோலமென்னும் வடசொல் கவுள் எனச் சிதைந்தது; வாய்க்குள் கொள்ளப்பட்ட நீர் உள்ளே இழிச்சுகைக்கும் வெளியில் கொப்பளிக்கைக்கும்

உரியதாயிருக்குமாபோலே ‘ இவளைக்கைப்பற்றினாலும் பற்றுவோம், விட்டாலும் விட்டிடுவோம்’ என்று நினைத்திருக்கிறாயேயன்றி, * பெருந்தடங்கண்ணி சுரும்புறு கோதையாகிய இவளையோ நாம் உபேக்ஷிப்பது என்று திருவுள்ளம்பற்றுகிறாயில்லையே! என்கிறாள்.

பொருந்தலன்=மனப்பொருத்தமற்றவன்; பகைவன் என்றபடி; பிரகரண பலத்தினால் இரணியனைக் குறித்தது. புள் உவந்தேற=ப்ரேத சரீரத்தைக் கழுகு முதலிய பறவைகள் உகந்து உண்ணும். (பிணமாம்படியாக என்றவாறு.)

பெருந்தகை=கம்பீரஸ்வபாவமுள்ளவனென்று ஸுக்ரீவனைச் சொல்லுகிறது இங்கு. ... ... ... ... ... 8

**நீரழல்வாயுய் நெடுநிலங்காலாய் நின்றநின்னீர்மையை நினைந்தோ? ***
**சீர்கெழுகோதையென்னலதிலளென் றன்னதோர்தேற்றன்மைதானோ? ***
**பார்கெழுபவ்வத்தாரமுதனைய பாவையைப்பாவஞ்செய்தேனுக்கு ***
**ஆரழலோம்புமந்தணன்தோட்டமாக நின்மனத்துவைத்தாயே.**

பாவம் செய்தேனுக்கு } பாவியான என்னுடைய

பார் கெழு பௌவத்து ஆர் அமுது அனைய பாவையை } பூமியைச் சூழ்ந்த கடலிலுண்டான அருமையான அம்ருதம்போன்ற கட்டழகியை

ஆர் அழல் ஓம்பும் அந்தணன் தோட்டம் ஆக நின் மனத்து வைத்தாய் } அக்நிஹோத்ரியான அந்தணனுடைய தோட்டமாகத் திருவுள்ளம் பற்றி...

(இது)

நிலம்நீர் அழல் வான் நெடு நிலம் கால் ஆய் நின்ற நின் நீர்மையை நினைந்தோ } பஞ்சபூதங்களும் நாமேயாயிருக்கிறோமென்கிற பெருமையை நினைத்தோ?

(அன்றி)

சீர் கெழு கோதை } சிறந்த மயிர்முடியையுடையளான இவள்

என் அலது இலள் என்று } என்னைத் தவிர்த்து வேறொரு கதியையுடையவளல்லள் என்றுண்டான

அன்னது ஓர் தேற்றன்மை தானோ } அப்படிப்பட்ட தைர்யத்தினாலோ?

* * *—பிரானே! இப்பரகாலநாயகியை [ஆரழலோம்புமந்தணன் தோட்டமாக நின்மனத்து வைத்தாயே.] இதற்குச் சிலர் கருத்துக் கூறுவதாவது—நித்தியம் தீ வளர்த்து ஹோமம் செய்கிற அந்தணனானவன் தன்னுடைய தோட்டத்திலுள்ள மரங்களையெல்லாம் கொஞ்சங்கொஞ்சமாக வெட்டி வெட்டி நெருப்புக்கு இரையாக்கி அழித்துவிடுவதுபோல இவளை நீ சிறிது சிறிதாக அழித்துவிடப் பார்க்கிறாயே! என்றும்; இது சுவையற்ற கருத்து: “அக்நி பரிசர்யை பண்ணவே காலம் போந்திருக்கிற ப்ராஹ்மணன்தோட்டமாக நினைத்தாயே” என்ற பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியானத்தில் காட்டப்பட்ட கருத்தே சுவையுடையதாம். அல்லும் பகலும் அதற்கென்றே உழைக்கக்கூடியவனுடைய தோட்டம் செழிப்புற்றோங்கி வளருமேயல்லது அக்கிஹோத்ரம் பண்ணிப் போது போக்குமவனுடைய தோட்டம் செழித்து வளரமாட்டாது; கவனிப்புக்குறைவினால் பாழாய்ப்போய்விடும். ஆகவே, அக்கிஹோத்ரியானவனுக்குத் தோட்டத்திலே எப்படி அலக்ஷ்யதாபுத்தி இருக்குமோ அப்படி உனக்கும் இவளிடத்திலே அலக்ஷியம் உண்டாய்விட்டதே! என்பதாகவே கருத்தாகும்.

இப்படி நீ இவளை அலக்ஷியம் செய்வது [நீரழல்வானாய் நெடுநிலங்காலாய் நின்ற நின்னீர்மையை நினைந்தோ?] பஞ்சபூதங்களும் நாமிட்ட வழக்காக இருக்கும்படியான பெருமைவாய்ந்த நமக்கு இப்பெண்பிள்ளை ஒரு சரக்கோ? என்று கருதுகின்றாயோ? அன்றி இவளுக்கு நம்மைத் தவிர வேறு புகலாவார் இல்லாமையாலே நம் கையையே எதிர்பார்த்துக் கதறித்துடிக்கட்டும் என்று நினைவோ? என்கிறாள்.

**வேட்டத்தைக்கருதாதடியிணைவணங்கி மெய்ம்மைநின்றெம்பெருமானை ***
**வாட்டிறற்றானைமங்கையர்தலைவன் மானவேற்கலியன்வாயொலிகள் ***
**தோட்டலர்பைந்தார்சுடர்முடியானைப் பழமொழியாற்பணிந்துரைத்த ***
**பாட்டிவைபாடப்பத்திமைபெருகிச் சித்தமுந்திருவொடுமிகுமே.** **10**

| | | | |
|---|---|---|---|
| வேட்டத்தை கருதாது | மேன்மேலே பெருகி வருகிற காமனைகளைக் கொள்ளாமல் | மங்கையர் தலைவன் | திருமங்கை நாட்டிலுள்ளார்க்குத் தலைவரும் |
| அடி இணை வணங்கி | தன் திருவடியிணைகளையே (பரமப்ரயோஜனமாகக் கொண்டு) வணங்கிநிற்க | மானம் வேல் | பெருமைதங்கிய வேற்படையை யுடையவருமான |
| மெய்ம்மை நின்ற | (அப்படிப்பட்ட பரமைகாந்திகளுக்கு) உண்மையாகத் தன்னைக் காட்டிக் கொடுக்குமவனும் | கலியன் | திருமங்கையாழ்வாருடைய |
| | | வாய் ஒலிகள் | ஸ்ரீஸூக்தியாய் |
| | | பழமொழியால் பணிந்து உரைத்த | பழமொழிகளைக் கொண்டு விநயத்துடன் அருளிச்செய்தவையான |
| தோடு அலர் பை தார் சுடர் முடியானை | இதழ்களானவை விரிந்து விகஸிக்கப்பெற்ற பசுமை தங்கிய (திருத்துழாய்) மாலையை ஒளிமிக்க திருமுடியிலே அணிந்துள்ளவனுமான | பாட்டு இவை பாட | இப்பாசுரங்களைப் பாடவே |
| | | சித்தம். | (பாடுமவர்களது)நெஞ்சானது |
| | | பத்திமை பெருகி | பரமபக்தி தலையெடுக்கப் பெற்று |
| எம்பெருமானை | எம்பெருமானை நோக்கி, | திருவொடு மிகும் | (எம்பெருமானது திருவடிகளில் நித்ய கைங்கரிய விருப்பமாகிற) செல்வமும் விஞ்சிவளரப்பெறும். |
| வாள் திறல் தானை | வாள்வலிகொண்ட சேனையை யுடையவரும் | | |

* * *—இத்திருமொழியை அதிகரிப்பவர்கள் பரமபக்தி தலையெடுக்கப் பெற்று நித்யகைங்கர்ய ஸாம்ராஜ்ய லக்ஷ்மியையும் பெறுவர்களென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று.

வேட்டமாவது ஆசைப்பெருக்கம். இஹலோகத்து ஐச்வரியம் ஸ்வர்க்கலோகத்து ஐச்வரியம் கைவல்ய மோக்ஷம் முதலானவற்றை விரும்பாமல் ஸ்வயம்ப்ரயோஜநமாகத் திருவடி பணியுமவர்கள் பக்கலிலே உண்மையாகக் கடாக்ஷித்தருள்பவன் எம்பெருமான் என்கிறது முதலடி. வணங்கி—எச்சத்திரிபு; வணங்க என்றபடி. நின்ற+எம்பெருமான், நின்றெம்பெருமான்; தொகுத்தல் விகாரம். மெய்ம்மைநிற்றலாவது—விரைவில் அழியக்கூடியவைகளும் அற்பங்களுமான பலன்களைக்கொடுத்துவிடாதே சாச்வதமாய்ச் சிறந்ததான பரம புருஷார்த்தத்தை அளிப்பவனாக அமைதல்.

இத்திருமொழியில் பாசுரந்தோறும் ஒவ்வொரு பழமொழியையிட்டு அருளிச்செய்திருக்கையாலே பழமொழியால் பணிந்துரைத்த பாட்டிவை எனப்பட்டது.

திருவொடுமிகும்—கைங்கரிய விருப்பமே திருவெனப்படும். இலங்கைச் செல்வமனைத்தையும் விட்டிட்டுப் புகலற்று வானத்திலே வந்துநின்ற விபீஷணாழ்வானை

“அந்தரிக்ஷகத: ஸ்ரீமாந்” என்றார் வால்மீகி முனிவர்; அப்போது அவ்விபீடணரிடத்து இருந்த ஸ்ரீயாவது ஸ்ரீராமசரணாரவிந்த கைங்கர்யோத்ஸாஹலக்ஷ்மியேயன்றோ. அயோத்திச் செல்வமனைத்தையும் உபேக்ஷித்து இராமபிரான் பின்னே காட்டுக்குப் புறப்பட்ட இளையபெருமாள் “லக்ஷ்மணோ லக்ஷ்மிஸம்பந்ந:” என்பட்டார்; அப்போது லக்ஷ்மணனுக்கிருந்த லக்ஷ்மியாவது ஒழிவில்காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டு நாமென்கிற கைங்கரியக் காதற்செல்வமேயன்றோ. முதலையின்வாயிலே அகப்பட்டுத் துடியாநின்ற ஸ்ரீ கஜேந்திராழ்வான் ‘ஸது நாகவர: ஸ்ரீமாந்” எனப்பட்டான்; அப்போது கஜேந்திராழ்வானுக்கிருந்த ஸ்ரீயாவது, கையில் பறித்த தாமரைப்பூக்களை எம்பெருமான் திருவடிகளிலே ஸமர்ப்பித்து அடிமை செய்யப் பெறவேணுமென்றுகொண்ட காதலேயன்றோ. இப்படிப்பட்ட கைங்கர்யஸ்ப்ருஹை இத்திருமொழி கற்பார்பெறும் பேறாக இதிற் சொல்லப்பட்டதாயிற்று. ... ... ... 10

அடிவரவு: புள் மன்றில் ஆர் மல்கிய செரு அரக்கியர் ஆழி பொருந்தலன் நீர் வேட்டத்தை திருத்தாய்.

ஒன்பதாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பத்தாம்பத்து—பத்தாந்திருமொழி—திருத்தாய் செம்போத்தே.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழி பரகாலநாயகியின் திருத்தாயார் பாசுரமாகச்சென்றது; இத்திருமொழி பரகாலநாயகியின் பாசுரமாகச் செல்லுகிறது. செம்போத்து, காக்கை, குயில், கிளி முதலிய பறவைகள் தங்கள் வழக்கத்தின்படி ஒலிசெய்துகொண்டிருக்கையில் அவற்றையழைத்து ‘எம்பெருமான் இங்கேவந்து சேரும்படியாகக்கூவவேணும்’ என்று வேண்டிக்கொள்ளுகிறபாசுரமாயிருக்கிறது இத்திருமொழி. ... ... ... ... ... *

**திருத்தாய்செம்போத்தே!* திருமாமகள்தன் கணவன்***
**மருத்தார்தொல்புகழ்மாதவனைவர* திருத்தாய்செம்போத்தே!** 1

| | | | |
|---|---|---|---|
| செம் போத்தே | ஓ செம்போத்துப் பட்சியே! | தொல் புகழ் | நித்யஸித்தமான கீர்த்தியை யுடையவனை |
| திரு மா மகள் தன் கணவன் | பெரியபிராட்டியார்க்குக் கொழுநனாய் | மாதவனை | எம்பெருமானை |
| மரு தார் | மணம்மிக்க மாலையை யணிந்துள்ளவனாய் | வர திருத்தாய் | இங்கேவருமாறு நீ திருத்த வேணும்; |
| | | | செம்போத்தே! திருத்தாய் |

* * *—செம்போத்து என்னும் பறவை வலமானல் அபீஷ்டமான காரியம் கடுக ஸித்திக்குமென்பது சகுந சாஸ்திரிகளின் கொள்கையாதலால் அதையறிந்த பரகாலநாயகி செம்போத்தை நோக்கி ‘எம்பெருமான் இங்கே வந்து சேருகையாகிற என்னுடைய உத்தேச்யம் கை புகும்படி நீ வலமாகவேணும்’ என்று வேண்டுகிறாள். ‘திருத்தாய்’ என்ற வினைமுற்றின் கருத்து இதுவே.

அது, தன்னடையே வலமானல் நல்ல சகுனமெனப்படுமேயன்றி அதனை நோக்கி நீ வலமாகவேணுமென்பது தகுதியோ? பூர்ண கும்பத்துடனே ஸ—மன்

கலி எதிர்வரப் புறப்படுகை நல்ல சகுனமென்றால் இது தைவாதீனமாக நேர்ந்தால் சகுனமாகுமேயல்லது தாமாகவே ஒரு ஸுமங்கலியைப் பூர்ணகும்பத்துடனே வரச்சொல்லிவிட்டுப் புறப்படுதல் தகுதியன்றே; இப்பரகாலநாயகி "திருத்தாய் செம்போத்தே!" என்றும் "கரையாய் காக்கைப்பிள்ளாய்!" என்றும் "கொட்டாய் பல்லிக்குட்டி!" என்றும் சகுனங்களை ஸ்வப்ரயத்நத்தாலே ஏதுக்காக உண்டாக்கப் பார்க்கிறாள்? என்று சங்கை பிறக்கக்கூடும். கேண்மின்: செம்போத்து வலம் வருதல், காக்கை கூவுதல், பல்லி கொட்டுதல் முதலியவை இஷ்டஸித்திக்கு ஸூசகங்கள்மாத்திரமேயன்றி இவைதாமே இஷ்டங்களைப் பெறுவிப்பனவல்ல என்பது உண்மையேயாயினும், வியாமோஹாதிசயத்தினால் அதனை மறந்து, இவைதாமே எம்பெருமானை இங்குக் கொண்டுவந்து சேர்க்கும்படியான சக்திவாய்ந்தவை என்று ப்ரமித்து இங்ஙனே அருளிச்செய்வதாகக்கொள்க. *மயர்வற மதிநலமருளப்பெற்ற ஆழ்வார்க்கும் ப்ரமமுண்டாகலாமோவென்னில்; இந்த ப்ரமம் கர்மநிபந்தனமானதன்று; ஒப்புயர்வற்ற பகவத்ப்ராவண்யாதிசயத்தினால் உண்டாவதாதலால் உத்தேச்யமாகவேயிருக்கும். "ஜ்ஞாநவிபாக கார்யமான அஜ்ஞாநத்தாலே வருமவையெல்லாம் அடிக்கழஞ்சு பெறும்" என்ற ஸ்ரீவசநபூஷணஸூக்தியும் ஸ்மரிக்கத்தக்கது.

[திருமாமகள்தன்கணவன்] செம்போத்தே! எம்பெருமானை இங்குவரத் திருத்துதல் உனக்கு அருமையன்றுகாண்; புருஷகாரம் செய்யவல்ல பிராட்டி அருகேயுண்டுகாண்; நீ கூசாதே சென்று காரியம் பார்க்கலாம் என்றவாறு. [மருந்தார் தோல்புகழ்] ஆச்ரிதரக்ஷணத்துக்கென்றே தனிமாலையிட்டுக்கொண்டு அப்படியே ஆச்ரிதர்களையும் ரக்ஷித்துப் புகழ்படைத்திருப்பவன்காண் என்கிறது. [மாதவனை] கீழே 'திருமாமகள்தன்கணவன்' என்று சொல்லியிருக்கச்செய்தேயும் மீண்டும் மாதவனென்றது திருநாமக்ரஹணம்.

... ... மொழியில் பாசுரந்தோறும் முதலடியும் ஈற்றடியும் ஒன்றேயாயிருக்கும்; ஆதராதிசயத்தினால் இரட்டித்துச் சொல்லுகிறபடி. ... ... 1

**கரையாய்காக்கைப்பிள்ளாய்!* கருமாமுகில்போல்நிறத்தன்***
**உரையார்தோல்புகழுத்தமனைவர* கரையாய்காக்கைப்பிள்ளாய்!** 2

| | | | |
|---|---|---|---|
| காக்கைப் பிள்ளாய் | காக்கைக்குட்டியே!, | உரை ஆர் தொல் புகழ் | சொற்களில் நிரம்பியநித்ய கீர்த்தியையுடையனான |
| கரு மா முகில் போல் நிறத்தன | காளமேகநிறத்தனாய் | உத்தமனை | புருஷோத்தமனை |
| | | வர கரையாய் | வருமாறு கூப்பிடவேணும்; காக்கைப் பிள்ளாய்! கரையாய்—. |

* * *—விட்டு
ஜநத்தின் வருகை
... தறிந்து 'கரையாய் காக்கைப்பிள்ளாய்!' என்கிறாள். "காக்கை வாயிலும் கட்டுரைகொள்வர் காரணகுருளக்கொடியானே!" (5—1—1) என்ற பெரியாழ்வார் திருமொழி இங்கு உணரத்தக்கது.

'காக்காய்!' என்னாதே 'காக்கைப்பிள்ளாய்! என்றது கௌரவப்பேச்சு; பகவத்விஷயத்தில் உபகாரம் செய்பவர்களை மரியாதையுடனே துதித்துச்சொல்ல வேண்டுதல் மரபு என்பது இதனால் ஸூசிப்பிக்கப்படுமென்ப.

[கருமாமுகில்போல்நிறத்தன்] எம்பெருமானுடைய திருவுருவத்தை நினைத்துக் கொண்டால் இப்பிரிவு பொறுக்கக்கூடியதாயில்லையே! நினைத்தமாத்திரத்திலே

தாபமெல்லாம் தீரும்படியான வடிவுபடைத்தவனன்றோ அப்பெருமான். உன்னுடைய உருவம்போலே வெறுங்கறுப்பேயென்று நினைத்திருக்கிறாயோ? காண்பார் கண்களும் கருதுவார் நெஞ்சும் குளிரும்படியான வடிவுகாண் அவனது. [உரையார் தொல்புகழ்] ஸ்ரீராமாயணம் மஹாபாரதம் முதலிய நூல்களிலே நிரம்பிய திருப்புகழ்கள் பலவு முடையவன்காண். ஆச்ரிதர்களை ஒருகாலும் கைவிடமாட்டாதவன் என்கை.

[உத்தமனை] அதமாதமன், அதமன், மத்தியமன் உத்தமன் என்று உலகில் பிராணிகள் நால்வகைப்பட்டிருப்பார்கள். பிறரை நலிந்து தன் வயிற்றை வளர்ப்பவன் அதமாதமன்; 'நாம் வாழவேண்டியதே முக்கியம்; பிறரும் வாழ்ந்தால் வாழட்டும்' என்றிருப்பவன் அதமன்; பிறரும் வாழ்ந்து நாமும் வாழவேணுமென்றிருப்பவன் மத்தியமன்; தான் கெட்டும் பிறரை வாழ்விக்குமவன் உத்தமன். (தானுங்கெட்டுப் பிறரையுங்கெடுப்பவனுடைய வகுப்பு அறிவரிது). எம்பெருமான் "நாட்டில் பிறந்து படாதனபட்டு மனிசர்க்காய், நாட்டை நலியு மரக்கரைநாடித் தடிந்திட்டு" என்கிறபடியே தான் பல கஷ்டங்கள் பட்டாகிலும் அடியாரை வாழ்விக்குமவனாதலால் உத்தமனவன். காகங் கத்தினமாத்திரத்திலே எம்பெருமான் பதறி ஓடிவந்திடுவனென்ற கருத்தினால் "உத்தமனைவரக் கரையாய் காக்கைப் பிள்ளாய்!" என்கிறாள். கரைதல்—ஒலிசெய்தல். ... .. 2

கூவாய்பூங்குயிலே!* குளிர்மாரிதடுத்துகந்த*
மாவாய்கீண்டமணிவண்ணனைவர* கூவாய்பூங்குயிலே!.

| | | | |
|---|---|---|---|
| பூ குயிலே | அழகிய குயிலே! | மா வாய் கீண்ட | கேசியென்னுங் குதிரையின் வாயைக்கீண்டவனும் |
| குளிர் மாரி | (இந்திரனால் பெய்விக்கப்பட்ட) குளிர்மழையை | மணிவண்ணனை | நீலமணி நிறத்தனுமான எம்பெருமானை |
| தடுத்து | (கோவர்த்தன மென்னுங் கொற்றக்குடையினால்) தடைசெய்து | வர கூவாய் | வருமாறு கூவவேணும் |
| உகந்த | திருவுள்ளமுவந்தவனும் | | பூங் குயிலே! கூவாய்—. |

* * *—ஒரு மரத்தின் கிளையிலே குயில் உட்கார்ந்துகொண்டு கூவிக்கொண்டிருந்தது; அதனை நோக்கிக் 'குளிர்மாரிதடுத்துகந்த மாவாய்கீண்ட மணிவண்ணனை வரக்கூவாய்' என்கிறாள். நாச்சியார் திருமொழியில் *மன்னு பெரும்புகழ் மாதவன் என்னுந் திருமொழி இங்கு நினைக்கத்தக்கது. குயில் கூவினால் எம்பெருமான் கடுகவந்திடுவனென்று நினைவு போலும். குயில் கூவின பின்பும் எம்பெருமான் வாராதொழியில் வருத்த மிகுதியினால் "பாடுங் குயில்காள்! ஈதென்ன பாடல்? நல்வேங்கட-நாடர் நமக் கொருவாழ்வு தந்தால் வந்து பாடுமின், ஆடுங் கருளக்கொடியுடையார் வந்தருள் செய்து, கூடுவராயிடில் கூவி நும்பாட்டுக்கள் கேட்டுமே" என்று சீறிச் சொல்லுவதுமுண்டு; இப்போது பரகாலநாயகி குயிலை இதுவே முதல் தடவையாக வேண்டுகிறாளாதலால், குயில் கூவினால் எம்பெருமான் வருகை ஸித்தமென்றிருக்கிறாள்.

[குளிர்மாரிதடுத்துகந்த] குயிலே! பரஸ்மாத்பரனான எம்பெருமானை நாம் கூவினால் அவன் எழுந்தருள்வானோ என்று நினையாதேகொள்; திருக்குண மறியாயோ? பசுக்களும் கன்றுகளும் இடையரும் பெருமழையிலே தொலையப்புக, கைக்கெட்டினதொருமலையை யெடுத்துக் குடையாகப்பிடித்து அவற்றை ரக்ஷித்து 'இவை நோவுபடா தொழியப் பெற்றோமே!' என்று திருவுள்ளமுவந்தவன்காண். ஆச்ரித ரக்ஷணத்திலே அத்தனை கருத்துடையானைக் கூவவோ நீ இளைப்பது.

"மாவாய் கீண்ட" என்பதற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் 'பகாஸுரனுடைய வாயைக்கிழித்த" என்று பொருள் காண்கிறது. இது அச்சுப்பிழையாயிருக்கலாமோவென்று ஸந்தேகிக்கவுரியது; அருளிச் செயலிற் பலபல விடங்களில் "மாவாய் கீண்ட" என்றும் "மாவாய்பிளந்த" என்றும் வருவதுண்டு; இங்ஙனே வருமிடந்தோறும் [குதிரை வடிவுகொண்டு நலியவந்த கேசியென்னு மஸுரனுடைய வாயைக் கிழித்த] என்றே பொருளுரைக்கப்பட்டுள்ளது. மா—குதிரை. ... ... ... ... ... 3

**கொட்டாய்பல்லிக்குட்டி! குடமாடியுலகளந்த***
**மட்டார்பூங்குழல்மாதவனைவரக்* கொட்டாய்பல்லிக்குட்டி!**

| | | | |
|---|---|---|---|
| பல்லிக் குட்டி | ஓ பல்லிக்குட்டி! | மாதவனை | திருமகள் கொழுநனுமான எம்பெருமானை |
| குடம் ஆடி | குடக்கூத்தாடினவனும் | | |
| உலகு அளந்த | (திரிவிக்கிரமனாகி) உலகங்களை அளந்து கொண்டவனும் | வர | இங்கேவருமாறு |
| மட்டு ஆர் பூ குழல் | தேன் பொருந்திய பூக்களணிந்த திருக்குழற்கற்றையையுடையவனும் | கொட்டாய் | ஒலிசெய்; |
| | | | பல்லிக்குட்டி! கொட்டாய்—. |

* * *--உலகவழக்கில் பல்லிசொல்லுக்குப் பலன் சொல்வதுண்டு; "பல்லியின் சொல்லும் சொல்லாக் கொள்வதோவுண்டு பண்டுபண்டே" என்ற திருவிருத்தமுங் காண்க. பல்லிக்குட்டி தன்னடையே ஒலிசெய்யுமதைக் கொண்டு இஷ்டஸித்தியை ஊஹிக்க வேண்டியிருக்க, இவள் தானாகவே 'கொட்டாய் பல்லிக் குட்டீ!' என்றது வியாமோஹத்தினாலென்க.

[குட மாடி] பெண்களையெல்லாம் வசப்படுத்திக்கொள்ள வேண்டிக் குடக்கூத்தாடினவன் எனக்காக வராமற் போகான்; அவன் வரும்படி நீ ஒலி செய்யாமையே குறை; அக்குறைதீர ஒலி செய்திடாய் என்கிறாள். [உலகளந்த] தானாகவே எல்லார் தலையிலும் திருவடியை வைத்து ஸத்தை பெறுவிக்குமவன் நம்மை உபேக்ஷிக்கமாட்டான் என்று ஸூசிப்பிக்கிறபடி. [மட்டார் பூங்குழல்] தேன்மாறாத பூமலரையுடைத்தான திருக்குழலையுடையவன் என்று அவனுடைய போக்யதையைச் சொல்லுகிறபடி.

'மாதவனை' என்பதில் ஏகதேசமான 'மா' என்பதற்குப் பெரியபிராட்டியார் பொருளாதலால் *மட்டார் பூங்குழல் என்ற விசேஷணத்தை அப்பிராட்டிக்கு ஆக்கியுரைத்தலுமாம். ... ... ... ... ... 4

**சொல்லாய்பைங்கிளியே! சுடராழிவலனுயர்த்த***
**மல்லார்தோள்வடவேங்கடவனைவரச்* சொல்லாய்பைங்கிளியே!** 5

| | | | |
|---|---|---|---|
| பைங்கிளியே | பசுமைதங்கிய கிளியே! | மல் ஆர் தோள் | மிடுக்குடைய திருத்தோள்களையுடையவனும் |
| ஆழி | ஒளிமிக்க திருவாழிப்படையை | வடவேங்கடவனை | வடதிருவேங்கடமலையில் எழுந்தருளியிருப்பவனுமான பெருமானை |
| வலன் | வலத்திருக்கையிலே | | |
| உயர்த்த | உயரத் தாங்கியிருந்துள்ளவனும் | வர சொல்லாய் | இங்குவரச் சொல்லவேணும்; |
| | | | பைங்கிளியே! சொல்லாய்—. |

* * *—பைங்கிளியை நோக்கிக் கூறுகின்றாள்—கிளியே! நீ ஏதேனுஞ் சில சொற்களைச் சொல்லிக்கொண்டிருப்பதனால் என்ன பயனுண்டு? எம்பெருமானை

இங்கு வரச்சொல்லு என்கிறாள். ப்ராப்திப்ரதிபந்தகங்கள் பல கிடக்கும்போது எளிதாக அப்பெருமான் இங்கு வந்திடுவானோ என்று அக்கிளி நினைக்க, அப்படி நினைக்கலாமோ? விரோதிகளை இருதுண்டமாக்குதற்குப் பாங்கான திருவாழியாழ்வானை வலத்திருக்கையில் ஏந்தியுள்ளான்காண்; அவ்வாயுதந்தானும் மிகையாம்படி மிடுக்கில் குறையற்ற திருத்தோள்களையுடையவன்காண்; என்னை அணைவதற்கென்றே பயணமெடுத்துவிட்டுத் திருவேங்கடமலையிலே நிற்கிறான்காண்; அன்னவனை இங்கு வரச்சொல்லாய் என்கிறாள். ... ... ... 5

**கோழிகூவென்னுமால்*தோழி! நானென்செய்கேன்?***
**ஆழிவண்ணர்வரும்பொழுதாயிற்று* கோழிகூவென்னுமால். 6**

| | | | |
|---|---|---|---|
| தோழி | வாராய் தோழீ! | | (மறுபடியும்) |
| கோழி கூ என்னும் | கோழியானது கூவென்று கத்துகிறது; | கோழி கூ என்னும் | கோழியானது கூவென்று கூப்பிடப்போகிறதே! (எம்பெருமான் பிரிந்து போய்விடப் போகிறானே) |
| ஆழி வண்ணர் வரும் பொழுது ஆயிற்று | கடலவண்ணனான எம்பெருமான் இங்குவந்து சேருகிற வேளையாயிற்று; | நான் என் செய் | நான் என்னபண்ணுவேன்!; |
| ஆல் | ஸந்தோஷம்; | ஆல் | கஷ்டம்! |

* * *—'கோழி கூவென்னுமால், ஆழிவண்ணர் வரும் பொழுதாயிற்று; கோழி கூவென்னுமால்! தோழி நான் என் செய்கேன்' என்று அந்வயித்துக் கொள்க. கண்ணபிரான் முதலில் சாமக்கோழி கூவினதும் தான் குறித்த பெண்ணுடன் கலவி செய்யச் சென்று, மீண்டும் அக்கோழி கூவினவாறே அவளை விட்டுப் பிரிவது என்று ஒரு நியதியுண்டு. இந்த நியதியையறிந்த பரகாலநாயகி, தன் தோழியை நோக்கி 'கோழி கூவென்னுமால் ஆழிவண்ணர் வரும்பொழுதாயிற்று' என்றாள்; கோழியானது கூவென்று கூவாநின்றபடியால் கடல்வண்ணனான கண்ணபிரான் என்னோடு கலவிசெய்தற்கு வருங்காலமாயிற்று என்று மகிழ்ந்து சொன்னபடி. "பலபல ஊழிகளாயிடும் அன்றியோர் நாழிகையைப் பலபல கூறிட்ட கூறாயிடும்..." (திருவிருத்தம்) என்கிறபடியே விச்லேஷ காலம் அநேக கல்பங்களாகவும் ஸம்ச்லேஷ காலம் அதிஸ்வல்ப காலமாகவும் தோற்றுவது இயல்வாதலால் இவள் க்ருஷ்ணஸம்ச்லேஷம் நிகழ்ந்து முடிவதாகக் கொண்டு வருந்தித் 'தோழி! நான் என் செய்கேன்! கோழி கூவென்னுமால்' என்கிறாள். ஐயோ தோழி! நான் என் செய்வது! மறுபடியும் கோழி கூவென்னப் போகிறதே! கோழி கூவினால் கண்ணன் ஓடிப்போய்விடுவனே! என்றபடி.

இப்பாட்டின் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில்—' க்ருஷ்ணன் கோழியை மடியிலே இட்டுக்கொண்டு வரும்போலே காணும் என்று பட்டர் அருளிச்செய்தாரென்று ப்ரஸித்தமிறே" என்றுள்ள ஸ்ரீஸூக்தி குறிக்கொள்ளத் தக்கது. ஸம்ச்லேஷஸமயத்தை ஸூசிப்பிக்கின்ற கோழியும் விச்லேஷஸமயத்தை ஸூசிப்பிக்கின்ற கோழியும் இப்பாட்டில் ஒருங்கே ப்ரஸ்தாவிக்கப்பட்டமையால் பட்டர் இங்ஙனே ரஸோக்தியாக அருளிச்செய்வரென்க.

ஆல்—மகிழ்ச்சியும் வருத்தமும் தோன்றநின்ற இடைச்சொல். (முதலடியில் மகிழ்ச்சி; ஈற்றடியில் வருத்தம்). ... ... ... ... 6

**காமற்கென்கடவேன்?* கருமாமுகில்வண்ணற்கல்லால்***
**பூமேலைங்கணைகோத்துப்புகுந்தெய்ய* காமற்கென்கடவேன்? 7**

| | | | |
|---|---|---|---|
| கருமா முகில் வண்ணற்கு அல்லால் | கறுத்துப் பெருத்த மேகம் போன்ற திருமேனியுடையரான பெருமாளுக்குக் கடமைப்பட்டிருப்பதல்லாமல் | கோத்து | (கருப்புவில்லிலே) தொடுத்து |
| மேல் | அதற்குமேலே | புகுந்து | உள்ளேபுகுந்து |
| பூ | புஷ்பங்களாகிற | எய்ய | ப்ரயோகித்து ஹிம்ஸிக்கும்படியாக |
| ஐ கணை | பஞ்சபாணங்களை | காமற்கு | (என்வயிற்றிற் பிறந்த பிள்ளையான) மன்மதனுக்கு |
| | | என் கடவேன் | கடமைப்பட்டவளோ நான்? |

காமற்கு என் கடவேன்?—.

* * *—'தாலிகட்டின கணவன் வருத்தப்படுத்துவது ஸஹஜம்; வயிற்றிற் பிறந்தபிள்ளை வருத்தப்படுத்துவதற்கு என்ன ப்ராப்தியுண்டு' என்கிறது இப் பாசுரம்.

ருக்மிணிப் பிராட்டியினிடத்து மன்மதனுடைய அம்சமாக ப்ரத்யும்நன் பிறந்தனாதலால், மன்மதன் கண்ணபிரானுடைய புத்திரனென்றும் கண்ணன் 'காமன்றன் தாதை' என்றும் வழங்கப்படுவதுண்டு; இப்பரகாலநாயகியும் கண்ணபிரானுடைய தேவியாதலால் இவள் மன்மதனைத் தன் புதல்வனாகப் பாவித்துப் பகர்தல் தகுதியே. இப்பாட்டில் மன்மதனைப் புத்திரனாகப் பாவித்துக் கூறுதல் ஸ்பஷ்டமாக இல்லையாயினும், மேலே (11-3-7) "காமன்றனக்கு முறையல்லேன்.... எனக்குத் தானும் மகன் சொல்லில்" என்ற பாட்டில் இது ஸ்பஷ்டமாயிருப்பதால் அக்கருத்தே இங்கும் உள்ளுறையுமென்க. "வயிற்றிற் பிறந்த காமனுக்கு என் கடவேன்" என்பர் பெரியவாச்சான்பிள்ளையும்.

நல்லதோ கெட்டதோ கருமாமுகில் வண்ணனை நமது நாயகனாலே நமக்கு நேருவதாயிருந்தால் ப்ராப்தமென்று ஒருவாறு ஸஹிக்கலாம்; நம் வயிற்றில் பிறந்த ஒரு சிறுபயல் நம்மை அம்பு தொடுத்து நலியும்படியாகவோ நம் கதியாயிற்று! என வருந்துகின்றாள்.

"பேரமர்காதல் கடல்புரைய விளைவித்த காரமர்மேனி நங்கண்ணன்" என்கிறபடியே காதலை வளர்த்த கார்முகில் வண்ணர் வாளாவிருக்க இந்தச் சிறு பையல் ஏதுக்காக அதிகப்ரஸங்கம் பண்ணுகிறானென்கிறாள். [ஐங்கணை] 'பஞ்சபாணன்' என்பது மன்மதனுக்கு வழங்கும் பெயர். "மதனன் பஞ்சபாணமாவன, முல்லையசோகு முழுநீலம் சூதப்பூ, அல்லிமுளரியோடைந்தெனமொழிப" என்ற திவாகர நிகண்டினால் பஞ்சபாணவகைப் பெயர் உணர்க. ஆசை அதிகரித்துச் செல்லுவதையும், அது கைகூடாமையாலே கஷ்டம் மீதூர்ந்து செல்லுவதையும் காமனுடைய ஹிம்ஸையாகச் சொல்லுவது மரபு. ... ... 7

**இங்கேபோதுங்கொலோ?* இனவேல்நெடுங்கண்களிப்ப***
**கொங்கார்சோலைக்குடந்தைக்கிடந்தமால்* இங்கேபோதுங்கொலோ? 8**

| | | | |
|---|---|---|---|
| கொங்கு ஆர் | தேன்நிறைந்த | இனம் வேல் நெடு கண் களிப்ப | ஒன்றுக்கொன்று ஒப்பாய் வேல்போன்ற நீண்ட (எனது) கண்களானவை கண்டுகளிக்கும்படியாக |
| சோலை | சோலைகளையுடைய | இங்கே | இவ்விடத்தே |
| குடந்தை | திருக்குடந்தையிலே | போதும் கொலோ | எழுந்தருளக்கூடுமோ? |
| கிடந்த | திருக்கண்வளர்ந்தருளாநின்ற | | |
| மால் | எம்பெருமான், | | |

இங்கே போதும் கொலோ!—.

***—ஸ்வாமியானவன் அடியானுள்ளவிடத்தே தானே எழுந்தருளிக் கைக்கொள்ளுதல் முறைமையேயன்றி ஸ்வாமியைத்தேடி அடியான் செல்லுதல் இரண்டு தலைக்கும் அவத்யம் என்பது ஸத்ஸம்ப்ரதாயம். அசோகவனத்தில் பிராட்டி பொறுக்கவொண்ணாத துன்பங்களை அநுபவித்து வருந்திக்கிடக்குமளவில் திருவடி சென்று 'ஸீதே! என்தோளிலே வற்றிரும்; ஒரு நொடிப்பொழுதிலே உம்மை இராமபிரான் ஸந்நிதானத்திலே கொண்டு சேர்த்திடுவேன்' என்ன, அதற்குப் பிராட்டி சொல்லுகிற வார்த்தை காண்மின்;—"சரைஸ் து ஸங்குலாம் க்ருத்வா லங்காம் பரபலார்த்தந:, மாம் நயேத் யதி காகுத்ஸ்த: தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்" என்றாள். சக்ரவர்த்தி திருமகனார்தாமே எழுந்தருளி இலங்கையைப் பொடிபடுத்தி என்னை மீட்டுக்கொண்டு போவராகில் அதுவன்றோ தகுதியென்றாள். ஸொத்தைப்பெற்று மகிழவேணுமென்னுமாவல் ஸ்வாமிக்கு இருப்பதே தகுதியாகும்; அந்த முறைமைப்படியே இப்பாட்டில் "கொங்கார் சோலைக் குடந்தைக் கிடந்தமால் இங்கே போதுங்கொலோ" என்கிறாள். ஏதுக்காக அவர் இங்கு எழுந்தருள வேணுமென்ன, இனவேல் நெடுங்கண்களிப்ப என்கிறாள். கண்ணாரக் காண்பதற்குமேலே வேறொரு ப்ரயோஜனமில்லையென்றிருப்பர்கள் முந்துற முன்னம்; காணப்பெற்ற பின்பு அணைய வேணுமென்றிருப்பர்கள்; அணையவும் பெற்றால் இதற்கு ஒருகாலும் இடையூறுவாராமே இவ்விருப்பு நித்யமாய்ச் செல்ல வேணுமென்றிருப்பர்கள். ["*அதர்சநே தர்சநமாத்ரகாமா:* இத்யாதியை நினைப்பது."]

போதும்—போதரும். 8

இன்னாரென்றறியேன்* அன்னேயாழியொடும்*
பொன்னார்சார்ங்கமுடையவடிகளை* இன்னாரென்றறியேன்

அன்னே — அம்மே!,
ஆழியொடும் — திருவாழியாழ்வானையும்
பொன் ஆர் சார்ங்கம் — அழகுபொருந்திய சார்ங்க வில்லையும்
உடைய — (திருக்கையிலே) உடையவரான
அடிகளை — ஸ்வாமியை
இன்னார் என்று அறியேன் — இன்னாரென்று தெரிந்து கொள்ளமாட்டுகின்றிலேன்
இன்னார் என்று அறியேன்-

***—"கொங்கார்சோலைக் குடந்தைக் கிடந்தமால் இங்கேபோதுங்கொலோ" என்று கீழ்ப்பாட்டில் எம்பெருமானுடைய வருகையைப் பிரார்த்தித்து மநோரதித்த பரகாலநாயகிக்கு உருவெளிப்பாட்டாலே காட்சி தந்தருளினான் எம்பெருமான்; ஆழியும் சார்ங்கமுமேந்திவந்து ஸேவை ஸாதித்தான்; அஸாதாரண லக்ஷணங்களைக் காணுகிற்கச் செய்தேயும் இன்னாரென்று அறுதியிடக் கூடாமலிருக்கிறதாயிற்று அத்தலையில் வைலக்ஷண்யம். பெருமையைப் பார்க்குமிடத்தில் தேவனென்னலாயிருந்தது; எளிமையைப் பார்க்குமிடத்தில் மனிதரிலே ஒருவனென்னலாயிருந்தது; ஆகவே 'இன்னாரென்றறியேன்' என்கிறாள்.

அன்னே!—வியப்புக்குறிப்பிடைச் சொல். அடிகள்—ஸ்வாமி. 9

தொண்டீர்!பாடுமினோ* சுரும்பார்பொழில்மங்கையர்கோன்*
ஒண்டார்வேற்கலியனொலிமாலைகள்* தொண்டீர்!பாடுமினோ. 10

தொண்டீர் — பாகவதர்களே!,
சுரும்பு ஆர் பொழில் — வண்டுகள் நிறையப்படிந்த சோலைகளையுடைய
மங்கையர் கோன் — திருமங்கை நாட்டில் வர்கட்குத்தலைவரும்

| | | |
|---|---|---|
| ஒண் தார் வேல் { அழகிய மாலையையும் வேற்படையையுமுடையவருமான } கலியன் ஆழ்வார் | ஒலி மாலைகளை பாடுமின் | அருளிச்செய்த இச்சொல்மாலையை பாடுங்கள்; தொண்டர்! பாடுமின்—. |

* * *—உண்டியே உடையே உகந்தோடுகிற ஸம்ஸாரிகள் தங்கள் ஜீவனத்துக்கு வேண்டிய பாட்டுக்களைப் பாடிப் போதுபோக்கித் திரிகிறார்கள்; அவர்கள் அப்படியே தொலையட்டும்; அப்படியல்லாமல், பகவத் குணங்களிலே யீடுபட்டுத் தொண்டர் என்று புகழ்பெற்றிருக்கும் நமவர்களே! நீங்கள் உங்கள் ஸ்வரூபத்துக்குத் தகுதியாக இத்திருமொழியைப் பாடித் திரியுங்கோள் என்கிறாராயிற்று. இத்திருமொழிகற்கைக்கு வேறொரு பலன் அருளிச்செய்யாதொழிந்தது, இதனைப் பாடுகை தானே ஸ்வயம் ப்ரயோஜநமென்று காட்டுதற்காக. ... ... 10

அடிவரவு:—திருத்தாய் கரையாய் கூவாய் கொட்டாய் சொல்லாய் கோழி காமற்கு இங்கே இனவர் தொண்டர் குன்றமொன்று.

பத்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த

திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்

## பெரியதிருமொழி பத்தாம்பத்து உரை

முற்றுப்பெற்றது.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# பெரிய திருமொழி

[ஸ்ரீமத் ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது.]

## பதினோராம்பத்து—முதல் திருமொழி—குன்றமொன்றெடுத்தேந்தி

உரையவதாரிகை:—*வாடினேன்வாடி தொடங்கி ஒன்பதாம் பத்தோடே திவ்யதேசங்களின் அநுபவத்தைத் தலைக்கட்டின ஆழ்வார் அதற்குப் பிறகு பரமபதஞ்செல்ல வேணுமென்னும் விருப்பங்கிளரப்பெற்று ‘எம்பெருமான் இனி நம்முடைய அபிமதத்தைத் தலைக்கட்டியல்லது நில்லான்’ என்கிற நிச்சயமுந்தோன்றிப் பரமபதத்திற்குப் பயணம் புறப்படுவதாகவே பாரிப்புக்கொண்டு பிறந்தகத்தில் நின்றும் புக்ககம்போகப் புறப்படுகின்ற பெண்பிள்ளை தான் நெடுநாள் வஸித்தவிடத்திலே தன்னோடு மிகவும் முகம் பழகியிருந்த பரமப்ரேமாஸ்பதமான சில பெண்பிள்ளைகளைச் சென்று பணிந்து, ‘நங்காய்! நான் போய்வருகிறேன், மாதே! நான் போய்வருகிறேன்’ என்று சொல்லுதற்குச் சில குறடுகள் ஏறி இறங்குமாபோலே ஆழ்வாரும் தம் புக்ககமாகிய பரமபதத்தின் பயணத்திற்குப் பூர்வாங்கமாகத் தமது மிக்க ஈடுபாட்டிற்கிடமான சில திருப்பதிகளிலே சொல்லிக்கொள்வதாக நுழைந்து நுழைந்து புறப்பட்டார்—கீழ்ப்பத்தாம்பத்தின் முதற்பதிகத்திலே. பெண்பிள்ளை மணக்கோலங்கள் செய்துகொண்டு தன்னோடு கூடிய ஸம்ஸ்காரங்களெல்லாம் செய்து முடித்தாலும் தாலிகட்டுமவன் தகவிலனானால் அந்த ஸம்ஸ்காரமெல்லாம் பழுதேயாமாபோலே இன்னமும் இவ்வாழ்வாரைக்கொண்டு லோகோஜ்ஜீவநமாகப் பல பாசுரங்கள் பாடுவிக்கத் திருவுள்ளம் பற்றின எம்பெருமான் இவருடைய அபிமதத்தைச் செய்து தலைக்கட்டாதே தன்னுடைய திவ்யாவதார சேஷ்டிதங்களையே மேன்மேலும் அநுபாவ்யமாகக் காட்டிக்கொடுக்க, அவற்றையெல்லாம் ஒவ்வொரு படியாக அநுபவித்துப் பேசி வந்தார் “இரக்கமின்றியெங்கோன் செய்த தீமை” என்னுந்திருமொழி முதலாக, ‘காதிற் கடிப்பிட்டு” என்னுந் திருமொழியளவும்.

அவ்வளவிலே பழைய அபிநிவேசமே மீதூர்ந்து செல்ல, எம்பெருமானது சீரற்றமையின் மிகுதியை மேலிரண்டு திருமொழிகளாலே அந்யாபதேசப் பாசுரமுகமாக வெளியிட்டார். இத்திருமொழியிலே, தென்றல் முதலான பாதக பதார்த்தங்களாலே மிகவும் நோவுபடுகிற வொருபிராட்டி பாசுரத்தாலே தம்முடைய விரஹ வேதனையை விளங்கக்காட்டுகிறார். ராமக்ருஷ்ணாதி அவதாரங்களாலே பல படியாலும் உலகத்தை வாழ்வித்த பெருமான் நம்மை இப்பாடுபடுத்துவதே! என்கிறாள். .... ... .... .... ... ... *

குன்றமொன்றெடுத்தேந்தி * மாமழை அன்றுகாத்தவம்மான் * அரக்கரை
வென்றவில்லியார்வீரமேகொலோ * தென்றல்வந்துதீவீசுமென்செய்கேன்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அன்று | முன்பொருகால் | மா மழை | (இந்திரன் பெய்வித்த) பெரு மழையில் நின்றும் | | |
| குன்றம் ஒன்று | (கோவர்த்தனமென்கிற) ஒரு மலையை | | | | |
| எடுத்து | (குடையாக) உயரவெடுத்து | காத்த | (அடியார்களைக்) காப்பாற்றியருளின | | |
| ஏந்தி | (ஏழுநாள் ஓய்வின்றிப்) பிடித்துக் கொண்டிருந்து | அம்மான | ஸ்வாமியும் | | |

முந்நீர் வண்ணனாக என் சங்கிழக்கும் வழக்குண்டே" என்ற நாச்சியார் திரு மொழியின் கருத்துக் காண்க.

ஈர்தல்=அறுத்தல் ... ... ... ... 2

சங்குமாமையுந்தளருமேனிமேல் * திங்கள்வெங்கதிர்சீறுமென்செய்கேன் ?
பொங்குவெண்திரைப்புணரிவண்ணனார் * கொங்கலர்ந்ததார்கூவுமென்னையே. 3

| | | | |
|---|---|---|---|
| சங்கும | கைவளைகளும | பொங்கு வெண் திரை புணரி வண்ணனார் | கிளர்ந்து கிளம்புகின்ற வெளுத்த அலைகளையுடைய கடல் போன்ற நிறமுடையாரான பெருமானுடைய |
| மாமையும | நிறமும் | | |
| தளரும் | சோர்ந்திருக்கப்பெற்ற | | |
| மேனி மேல் | (எனது) உடம்பின்மேலே | கொங்கு அலர்ந்த தார் | பரிமளம் விரிகின்ற திருத்துழாய்மாலையானது |
| திங்கள் | சந்திரனுடைய | | |
| வெம் கதிர் | கொடிய கிரணங்களானவை | என்னை கூவும் | என்னோடே கைபார்க்கவல்லையோ என்று அறைகூவுகின்றது |
| சீறும | சீறுகின்றன ; | என் செய்கேன் | என்ன செய்வேனோ! |

* * *—கையில்வளைகளும் தங்கமாட்டாதே நிறமும் நிலைநிற்கமாட்டாதே மாறும்படியாய்த் தளர்ந்து கிடக்கின்ற எனது உடம்பின்மேலே சந்திரன்தானும் தனது நெருப்புப்போன்ற நிலாவைவிட்டு நிக்ரஹிக்கின்றானே! இதற்கென் செய்வேன்!. இவ்வளவேயோ? இன்னமும், கடல்வண்ணனுடைய திருத்துழாய் மாலையும் மார்பு நெறித்து வந்து 'என்னோடே ஒரு கைபார்க்கவல்லையோ?' என்று அறை கூவுகின்றதே!, இதற்குத்தான் என் செய்வேனென்கிறாள்.

விரஹிணிகட்கு நிலா பாதகமென்பது "மேவுதண்மதியம் வெம்மதிய மாலோ" என்ற திருவாய்மொழியாலும் விளங்கும்.

"கொங்கலர்ந்த தார் கூவும்" என்றதன்கருத்து யாதெனில்: தோளிணை மேலும் நன்மார்பின் மேலும் சுடர் முடிமேலும், தாளிணை மேலும் புனைந்த தண்ணந்துழாயுடை யம்மான்" என்கிறபடியே அவயவங்கள் தோறும் அப்பெரு மான் திருத்துழாய் மாலை அணிந்துகொண்டிருக்குமழகை ஆராயுங்கால். ஸ்த்ரீத்வத் திற்குத் தக்கபடி உள்ளே பதுங்கியிற்கவேண்டிய அடக்கத்தையும் அப்பால் தள்ளி விட்டு வீதியேறப் புறப்பட்டுச்சென்றாகிலும் கண்டு களிப்பதே கருமம் என்று துணிவு உண்டாகின்றதே யென்றவாறு. "காரிகையார் நிறைகாப்பவர் யாரென்று கார்கொண்டின்னே மாரி கைமேறி அறையிடுங்காலத்து" என்ற திரு விருத்தத்தை அடியொற்றி "கூவும்" என்பதற்குக் கருத்துக் கொள்க. ... 3

அங்கோராய்க்குலத்துள்வளர்ந்துசென்று * அங்கோர்தாயுருவாகிவந்தவள் *
கொங்கைநஞ்சுண்டகோயின்மைகொலோ ? திங்கள்வெங்கதிர்சீறுகின்றதே. 4

| | | | |
|---|---|---|---|
| திங்கள் | சந்திரனுடைய | அங்கு ஓர் தாய் உரு ஆகிவந்தவள் | அங்குத்தாயாகிய யசோதைப் பிராட்டியின் வடிவு பூண்டு வந்தவளான பூதனையி னுடைய |
| வெம் கதிர் | கொடிய கிரணங்கள் | | |
| சீறுகின்றது | சீறுவதானது, — | | |
| சென்று | (மதுரையில்நின்றும்) போய் | கொங்கை நஞ்சு உண்ட | முலையில் தடவியிருந்த விஷத்தை உறிஞ்சியுண்ட |
| அங்கு ஓர் ஆய் குலத்துள் வளர்ந்து | அந்த விலக்ஷணமான இடைக் குலத்திலே வளர்ந்து கொண்டிருக்கையில், | கோயின்மை கொலோ | பராக்ரமமடியாகவோ ? |

* * *—குளிர்ச்சியையே இயல்வாகவுடைய சந்திரன் இப்போது என் திறத்திலே தன் தன்மைமாறி வெக்காயம் காட்டுவது வெறுமனன்று; "இன்ன இன்ன பதார்த்தங்கள் இன்ன இன்னபடி வர்த்திக்கக்கடவன" என்று முதலிலே ஸங்கல்பித்தவன் ஸர்வேச்வரனுகையாலே அவனுடைய ஸங்கல்பாதீனமாகவே குளிர்ச்சியை இயல்வாகவுடையனாயிருந்த சந்திரன் இப்போதும் அந்த எம்பெருமானுடைய ஸங்கல்பத்தினாலேயே இப்படி சுடவேண்டும். அவன்றான் * ஒருத்தி மகனாய்ப் பிறந்து ஓரிரவி லொருத்திமகனா யொளித்து வளர்ந்தருளுங்காலத்திலே தன்னை நலிவதாகத் தாயுருக்கொண்டுவந்த பூதனை யென்னும் பேய்ச்சியின் முலையை உயிரோடே உறிஞ்சியுண்ட பராக்ரமத்தையே என்னிடத்திலுங் காட்டவேண்டி அதற்காக இங்ஙனே சந்திரனை ஏவினான் போலும் என்கிறாளென்க.

[அங்கு ஓர் ஆய்க்குலத்துள்.] கண்ணபிரான் பிறந்த இடமோ கம்ஸனுக்கு மிகவுமஞ்சவேண்டிய இடம்; அந்தோ! என் செய்வதென்று வஸுதேவரும் தேவகியாரும் நோவுபடுகிற ஸமயத்திலே ஒதுங்கி வளர்வதற்கு ஓர் புகலிடம் வாய்த்ததே! என்ற மகிழ்ச்சியினால் 'அங்கு ஓர்' என்றது.

கோயின்மை = கேட்பாரற்ற செயல். "குழுமியெங்கள் குழுமணனை கொன்று கோயின்மைசெய்து கன்மமொன்றில்லை" என்ற திருவாய்மொழிப் ப்ரயோகமுங் காண்க. இச்சொல் வேறு பொருளிலேயும் வருவதுண்டு; "அடிமை யென்னும் அக்கோயின்மையாலே" என்ற பெரியாழ்வார் திருமொழி காண்க. ... 4

அங்கோராளரியாயவுணனைப் பங்கமா இருகூறு செய்தவன்
மங்குல்மாமதிவாங்கவேகொலோ? பொங்குமாகடல் புலம்புகின்றதே. 5

| | | | |
|---|---|---|---|
| அங்கு | ப்ரஹ்லாதாழ்வான் 'எங்கும் உளன் கண்ணன்' என்று சொன்னவப்போதே | இரு கூறு செய்தவன் | இருதுண்டமாகக் கிழித்த பெருமான் |
| ஓர் | ஒப்பற்ற | மங்குல் மா மதி | ஆகாசத்தில் விளங்குகின்ற சிறந்த சந்திரனை |
| ஆள் அரி ஆய் | நரஸிம்ஹ மூர்த்தியாக அவதரித்து | வாங்கவே கொலோ | தன்னிடத்தில் நின்றும் பறித்ததனாலேயோ |
| அவுணனை | (இரணியனென்னும்) அஸுரனை | பொங்கு மா கடல் | திரைக்கிளப்பத்தையுடைய கருங்கடலானது |
| பங்கம் ஆ | மானபங்கமாக்கி | புலம்புகின்றது | கோஷிக்கின்றது! |

* * *—விரஹிகளுக்குக் கடலோசையும் பாதகமாகையாலே அதற்கு நோவுபட்டுச் சொல்லுகிறாள். இக்கடல் எதுக்கு இங்ஙனே புலம்புகின்றது? என்று ஆராய்ந்து பார்த்தாள்; எம்பெருமான் இக்கடலிடத்தில் நின்றும் மாமதியை வாங்கிவிட்டதனாலேயோ இது இங்ஙனே புலம்புகின்றது! என்று தன்னில்தான் அநுமானித்துச் சொல்லிக்கொள்ளுகிறாள். இங்கு மாமதி என்றது சிலேடை; (இரண்டு பொருள்படநின்றது) நல்ல புத்தி என்று ஒரு பொருள்; சந்திரன் என்று மற்றொரு பொருள். நல்லபுத்தியிருந்தால் இக்கடல் இங்ஙனே புலம்ப மாட்டாது; மதியையிழந்ததனாலன்றோ இங்ஙனே புலம்புகின்றது! என்று ஒரு சமத்காரமாகச் சொல்லுகிறபடி. மதியையிழந்தது மெய்யோ? என்னில்; எம்பெருமான் அமரர்களுக்காக இக்கடலைக் கடைந்தருளின காலத்தில் "அச்வாப்ஸரோவிஷஸுதாவிது பாரிஜாத லக்ஷ்ம்யாத்மநா பரிணதோ ஜலதிர்ப்பபூவ." (அதிமாநுஷஸ்தவம்.) என்கிறபடியே, ஐராவதயானை உச்சைச்ரவஸ் என்னுங் குதிரை, காலகூடவிஷம், அம்ருதம், கல்பவிருக்ஷம், லக்ஷ்மி முதலிய பதார்த்தங்களுடனே மதியும் வெளிப்பட்டதிறே. (மதி—சந்திரன்.)

ஆக, ப்ரஹ்லாதாழ்வானுக்குப் பரிந்து இரணியனை இருபிளவாக்கிப் பங்கப் படுத்தின பெருமான் கடல்கடைகிற வியாஜத்தாலே மாமதியை வாங்கிவிட்ட தனாலேயோ இது கீழ்மண் கொண்டு மேல்மண்ணெறிந்து ஆரவாரிக்கின்றது! என்றதாயிற்று. ஒருவன் நல்ல சரக்கைப் பறிகொடுத்துவிட்டால் புலம்புகை ப்ராப்தமேயன்றோ.

இங்கே வியாக்யான வாக்யங்கள் காண்மின்;—“தன்னை நெருக்கிக் கடைந்து உள்ளுண்டான மதியை வாங்குகையாலேயோ இக்கடல் இங்ஙனே கிடந்து கூப்பிடுகிறது!; என்னைப்போலே மதியிழந்தோ இக்கடலுங் கூப்பிடுகிறது!; * மதியெல்லா முள்கலங்கியன்றோ இவளுங் கிடக்கிறது! ஒன்றுக்கும் விக்ருதையாகாத நான் கலங்கிக் கூப்பிடுகிறாப்போலேயிருக்கிறது! இக்கடலும் தன் காம்பீர்யமெல்லாம் அழிந்து கூப்பிடுகிறபடியும்.” .. ... 5

சென்றுவார்சிலைவளைத்திலங்கையை * வென்றவில்லியார்வீரமேகொலோ?
முன்றிற்பெண்ணைமேல்முளரிக்கூட்டகத்து * அன்றிலின்குரலடருமென்னையே. 6

| | | | |
|---|---|---|---|
| சென்று | எதிரிகளிருக்குமிடத் தேறச் சென்று | முன்றில் பெண்ணை மேல் | வாசலிலுள்ள பனைமரத்தின் மேலே |
| வார் | பெரியவில்லை | | |
| வளைத்து | (நாணேற்றி) வளையச் செய்து | முளரி கூட்டகத்து | தாமரைப் பூவாலே இயற்றப் பட்ட கூட்டிலே கிடக்கிற |
| இலங்கையை | லங்காபுரியை | | |
| வென்ற | அழித்த | | |
| வில்லியார் | வில்வல்லவரான பெருமானுடைய | அன்றிலின் குரல் | அன்றிற்பறவையினுடைய த்வனியானது |
| வீரமே கொலோ | பராக்ரமமடியாகவோ | என்னை அடரும் | என்னை வருத்துகின்றது!. |

* * *—அன்றில் என்பது ஒரு பறவை; அது எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாது நிற்கும்; கனைப்பொழுது ஒன்றை ஒன்று விட்டுப் பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறுமல் ஒன்றை ஒன்று இரண்டு மூன்று தரம் கத்திக் கூவி அதன் பின்பும் தன்துணையைக் கூடாவிடின் உடனே இறந்துபடும்: இப்பறவையை வடநூலார் க்ரௌஞ்ச மென்பர். ஆணும்பெண்ணுமான அந்த அன்றிற் பறவை இணைபிரியாமல் நெருங்கி ஒன்றோடொன்று வாயலகைக் கோத்துக் கொண்டு உறங்கும்பொழுது அவ்வுறக்கத்தில் வாயலகு தன்னில் நெகிழ்ந்த வளவிலே துயிலுணர்ந்து அந்த நெகிழ்ச்சியையும் பொறுமல் மெலிந்து பெருந் தொனியாகக் கத்துகிற மிக இரங்கத்தக்க சிறுகுரல் காமோத்தீபகமாய்ப் பிரிவாற்றாமைத் துயரை வளர்த்து விரஹிகளை மிக வருத்துமென்பர். “பெண்ணை மேல் பின்னுமவ்வன்றில் பெடைவாய்ச் சிறு குரலும், என்னுடைய நெஞ்சுக்கு ஓர்வாளா மென்செய்கேன்” என்பர் பெரிய திருமடலிலும். இங்கும் இவ்வன்றிலின் குரலினால் தான் நோவுபடுகிறபடியைக் கூறுகின்றாள் பரகாலநாயகி.

* உண்ணாது உறங்காது ஒலி கடலையூடறுத்து இலங்கை சென்று சிலை வளைத்து அம்பு எய்து செய்த செயலெல்லாம் என்னைப் போன்றவொரு பிராட்டிக் காகவேயன்றோ; அவளிடத்துப்போலே என்னிடத்தும் இரக்கங் காட்டிக் காரியஞ் செய்ய வேண்டியிருக்க அது செய்யாதே எதிரிகளிடத்திற் காட்டின வீரத்தையே என்னிடத்திலுங்காட்டவேண்டி இங்ஙனே அன்றிலின் குரலையிட்டு அடர்க்கிறார் போலும்! என்கிறாளாயிற்று. பரிவுக்கு இலக்காக்காதே பராக்ரமத்துக்கோ என்னை இலக்காக்கிற்று! என்கிறாள்.

யானது எனது உள்ளத்தில்புக ; (அதாவது) அத் திருத்துழாயை நான் நெஞ்சால் நினைத்தமாத்திரத்திலே என்றபடி. [வந்தேதார் ஆலி கோல் வாடையுங் கொண்டு வந்ததால்.] ஆலியாவது சிறுதுளி. (மழைத்துளி.) இது விரஹிகளுக்கு உத்தீபகமெனப்படும். இது ஏற்கனவே வந்து என்னை நலிவதற்கு நிலைபார்த்துப் போயிற்று ; தநந்த துணை கூட்டிக்கொண்டு வந்து நலிய வேணுமென்று பண்டேபார்த்துப் போயிற்று ; அது இப்போது வாடைக்காற்றைத் துணைகொண்டு வந்திட்டது ; இனி என்னைக் காத்துக்கொள்ளுதல் எளிதன்று என்கிறாள்.

முதலடியும் இரண்டாமடியும் யமகம். ... ... ... 8

கெண்டையொண்கணுந்துயிலும் * என்னிறம்பண்டுபண்டுபோலொக்கும் * மிக்கசீர்த்
தொண்டரிட்டபூந்துளவின்வாசமே * வண்டுகொண்டுவந்தூதுமாகிலே. 9

| | | | |
|---|---|---|---|
| மிக்க சீர் தொண்டர் | அநந்யப்ரயோஜநரான வைஷ்ணவர்கள் | ஊதும் ஆகில | (என்னருகில்) ஊதுமானால் |
| இட்ட | ஸமர்ப்பித்த | கெண்டை ஒண்கணும் | கெண்டை மீன்போன்று அழகிய (எனது) கண்களும் |
| பூ துளவின் | திருத்துழாய் மலரின் | | உறக்கங்கொள்ளும் ; |
| வாசம் | பரிமளத்தை | என நிறம் | எனது மேனிநிறமும் |
| வண்டு | வண்டானது | | |
| கொண்டு வந்து | முகந்துகொண்டு வந்து | பண்டு பண்டு போல் ஒக்கும் | முன்னைய வண்ணமாகும். |

* * *—எம்பெருமானுடைய திருவடியிணைகளிலே பரம பாகவதர்கள் ஸமர்ப்பித்த திருத்துழாய் மலர்களின் பரிமளத்தைக் கொய்து கொண்டுவந்து இங்ஙனே வண்டு ஊதுமாகில் என்னுடைய கண்களும் துயில்கொள்ளும், என்னுடைய மேனியும் பழையநிறம் பெறும் என்கிறாள்.

'என்நிறம் பண்டுபோலொக்கும்' என்னாதே "பண்டுபண்டுபோலொக்கும்" என்றதில் ஒரு விசேஷார்த்தமுண்டு ; கேண்மின். இப்போதைய என் அவஸ்தைக்கு முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ, அதற்கும் முற்பட்டதான யாதொரு அவஸ்தையுண்டோ, அவ்வவஸ்தையில் நான் எப்படி யிருந்தேனோ அப்படி யாவேன் என்றபடி. இதனை விவரிப்போம் ;— இப்போதைய அவஸ்தை யாவது விரஹாவஸ்தை (பிரிவுநிலைமை); இதற்கு முந்திய அவஸ்தையாவது ஸம்ச்லேஷாவஸ்தை (கூடிக்களித்திருந்த நிலைமை); அதற்கு முந்திய அவஸ்தையாவது— பகவத் விஷய வாஸனையே தெரியாமல் அந்யபரமாகப் போது போக்கின காலம் ; *உண்டியே உடையே உகந்திருந்த காலம். அப்போது சரீரம் வாடாமல் வதங்காமல் மாமை குன்றாமல் பசுகுபசுகுகென் றிருக்குமிறே. ஒரு விசாரமுமின்றி உண்டுடுத்துத் திரியுங் காலத்திலே மேனி நித்ய புஷ்டமாயிருக்கும். பகவத் விஷயத்தில் வாஸனை பண்ணிப் போந்தது முதலாக "ஸம்யோகா விப்ரயோகாந்தா:" என்கிறபடியே க்ஷணகாலம் ஸம்ச்லேஷமும் நெடுங்காலம் விச்லேஷமுமாய் வ்யஸநமே மீதூர்ந்து செல்லுகையாலே, இப்போதைய விரஹாவஸ்தைக்கு முந்திய தான ஸம்ச்லேஷாவஸ்தையிலுள்ள நிறத்தைப் புகழ்ந்து கூறுதல் சிறவாதென்று, அதற்கும் முந்தியதான அந்யபரத்வாவஸ்தையில் இருந்த நல்ல நிறத்தை உத்தேசித்துப் பண்டுபண்டுபோலொக்கும் என்றது. இங்கே பெரியவாச்சான் பிள்ளையின் மிக வழகிய திவ்ய ஸூக்திகள் காண்மின் ; "அவன் வாய் புலற்றும் நிறம் அறப் பண்டுபோலேயாம் ; கலக்கையாகிறது பிரிவுக்கு அங்குரமிறே ; கலந்து பிரிந்து லாபாலாபங்களறியாதே பூர்ணையா யிருந்தபோதை நிறம்போலேயாம்"—என்று.

நாச்சியார்திருமொழியில் "பாணியா தென்னை மருந்து செய்து பண்டு பண்டாக்க வுறுதிராகில்" என்றதும் நோக்கத்தக்கது ; அங்கும் இதுவே கருத்தென்க.

## பதினோராம்பத்து—இரண்டாந்திருமொழி—குன்றமெடுத்து மழை தடுத்து.

அவதாரிகை:—இத்திருமொழியும் நாயகீஸமாதியாலே செல்லுகிறது. வ்யாமோஹம் மீதூர்ந்து அன்றில் தென்றல் முதலிய பதார்த்தங்களும் நோவு படுத்தும்படியைப் பன்னியுரைப்பது இத்திருமொழியும். ... ... *

**குன்றமெடுத்துமழைதடுத்திளையாரோடும் * மன்றிற்குரவைபிணைந்தமால்என்னைமால்செய்தான் * முன்றிற்றனிநின்றபெண்ணைமேற் கிடந்தீர்கின்ற * அன்றிலின் கூட்டைப் பிரிக்ககிற்பவரார்கொலோ. 1**

| | | | |
|---|---|---|---|
| குன்றம் | கோவர்த்தனமலையை | முன்றில் | வாசலிலே |
| எடுத்து | குடையாக வெடுத்துப் பிடித்து | தனி நின்ற | தனியே நின்ற |
| மழை தடுத்து | மழையைத் தடை செய்தவனும் | பெண்ணை மேல் | பனைமரத்தின் மீது |
| இளையாரொடும் | இளம் பெண்களோடே | கிடந்து | இருந்துகொண்டு |
| மன்றில் | நாற்சந்தியிலே | ஈர்கின்ற | ஹிம்ஸிக்கின்ற |
| குரவை பிணைந்த | கைகோத்துக் குரவைக் கூத்தாடினவனுமுள்ள | அன்றிலை | அன்றிற் பறவையை |
| மால் | கண்ணபிரான் | கூட்டின் | கூட்டில் நின்றும் |
| என்னை மால் செய்தான் | என்னை மதிமயங்கப் பண்ணி விட்டான்; | பிரிக்க கிற்பவர் ஆர் கொலோ | பிரித்துவிட வல்லவர்யாரோ (அறியேன்)? |

* * *—கோவர்த்தன மலையைக் குடையாக வெடுத்துப்பிடித்து ஏழு நாள் ஒரு படியாகத் தாங்கிநின்று கோவலரையும் கோநிரையையும் காத்தருளினவனும், ஆய்மங்கையரோடே பலர்காணக் குரவைக்கூத்தாடினவனுமான எம்பெருமான் என்னை இப்படிப்பட்ட வ்யாமோஹத்திற்கு ஆளாக்கிவிட்டான் என்பன முன்னடிகள். ஆனைத்தொழில் செய்தும் அடியார்களைக் காத்தருளினவனன்றோ? உகந்தாரோடே ஒருநீராகக் கலந்து பரிமாறுவதற்குப் பாங்காகப் பலவடிவுகள் கொண்டு அங்கநாமங்கநாமந்தரே மாதவோ மாதவம் மாதவஞ் சாந்தரேணாங்கநா.'' என்னும்படியே) ராஸக்ரீடை செய்தருளின ரஸிகனன்றோ; இப்படிப்பட்டவன் நம்மைக் கைவிடுவனோவென்று நம்பியிருந்து மோசம் போனேன் என்பது உட்கருத்து. தன்னுடைய திருக்குணங்களைக்காட்டி என்னை யீடுபடுத்தி இங்ஙனே சந்தியில் நின்று திண்டாட வைத்தானென்கிறாள்.

இதுவே ஸமயமாகக் கண்ணெதிரே பனைமரத்தி லிருந்துகொண்டு அன்றிற்பறவையும் மெல்லிய தழுதழுத்த குரலாலே ஓய்வின்றி நலிகின்றது; எம்பெருமானைக் கொண்டுவந்து என்னோடே கூட்டாதொழியினும் இவ்வன்றிற்பறவையைக் கூட்டிலிருந்து துரத்தவல்லாரையாவது கிடைக்கப்பெறுமோ வென்பன பின்னடிகள்.

அன்றிலின்கூட்டை—உருபுபிரித்துக் கூட்டியுரைக்கப்பட்டது. அன்றிலைக் கூட்டில் நின்றும் பிரிக்கவேணுமென்கை. ... ... .... 1

**பூங்குருந்தொசித்தானைகாய்ந்தரிமாச்செகுத்து * ஆங்குவேழத்தின்கொம்புகொண்டுவன்பேய்முலை வாங்கியுண்ட * அவ்வாயன்நிற்கஇவ்வாயன்வாய் ஏங்குவேய்ங்குழலென்னோடாடுமிளமையே. 2**

| | | | |
|---|---|---|---|
| பூ குருந்து ஒசித்து | பூத்திருந்த குருந்தமரத்தை முறித்தொழித்தவனும் | அரி மா செகுத்து | (கேசியென்கிற) சத்துருவான குதிரையை கொன்றவனும் |
| ஆனை காய்ந்து | ரிஷபங்களைச் சிறி முடித்தவனும் | ஆங்கு | கம்ஸனது அரண்மனை வாசலிலே |

| | | | |
|---|---|---|---|
| வந்து | நானிருக்குமிடத்திலே வந்து வீசி | கொல்லை வல் ஏற்றின் மணியும் | வெளி நிலங்களில் நின்றும் மீண்டுவருகிற வலிய காளைகளின் கழுத்துமணியோசையும் |
| அடும் | நலிகின்றது ; | கொயின்மை செய்யும் | தொந்தரவுபடுத்தாநின்றது. |
| அதுவும் அன்றி | அதுவுந்தவிர | | |

* * *—சாணூரன் முஷ்டிகன் முதலான மல்லர்களையும் கம்ஸனையும் தீர்க்க நித்திரை செய்யும்படியாகக் கொன்றொழித்த கண்ணபிரானுடைய கலவி கிடைக்கப் பெறுதொழியினும் அவனது திருமேனியில் ஸம்பந்தம் பெற்ற திருத்துழாய் மாலையாகிலும் சிறிது கிடைக்குமோ வென்று அல்லும்பகலும் இதுவே சிந்தனையாகக் கிடக்கிற என்னை அந்தக்காற்றும் மாட்டின் கழுத்து மணியோசையும் வருத்துகின்றனவே யென்கிறாள்.

எம்பெருமானுடைய திருத்துழாய்ப் பிரசாதத்தை நான் கருதாமல் ஊராரோடொப்ப உண்டுடுத்துக் களித்துத் திரிந்தேனாகில் ஒன்றுக்கும் நான் வருந்த வேண்டியிராது : அதில் ஆசை வைத்தமையாலன்றோ பிறர்க்கு இன்பமளிப்பவற்றால் நான் துன்புறவேண்டிற்றாயிற்று என்கிறாள். ... ... 3

மாருதம் -வடசொல்.

பொருந்துமாமரமேழுமெய்தபுனிதனூர் * திருந்துசேவடியென்மனத்துநினைதோறும் *
கருந்தண்மாகடல் கங்குலார்க்குமதுவன்றியும் * வருந்தவாடைவருமிதற்கினியென்செய்கேன். 4

| | | | |
|---|---|---|---|
| பொருந்து | தம்மில்தாம் பொருந்திநின்ற | கரு தண் மா கடல் | கறுத்துக் குளிர்ந்து பெரிதான கடலானது |
| மா மரம் ஏழும் எய்த | பெரிய ஸாலவ்ருக்ஷங்களையும் அம்பு செலுத்தித் துளைபடுத்தின | கங்குல் | இரவு முற்றும் |
| | | ஆர்க்கும் | ஆரவாரிக்கும் ; |
| புனிதனூர் | ரமடரிசுத்தரான பெருமானுடைய | அது அன்றியும் | அதுவுந்தவிர, |
| திரு உந்து | | வாடை | வாடைக்காற்றும் |
| | | வருந்த | நான் பரிதபிக்கும்படியாக |
| சே அடி | திருவடிகளை | வரும் | வந்து வீசுகின்றது ; |
| என் மனத்து | என்னெஞ்சிலே | இதற்கு | இதற்குப் பரிஹாரமாக |
| நினைதோறும் | அநுஸந்திக்கும்போதெல்லாம் | இனி என் | இனி என்ன பண்ண வல்லேன் ?. |

* * *—ஆச்ரிதனை ஸுக்ரீவ மஹாராஜனுக்கு அரியன செய்தும் விச்வாஸத்தைப்பிறப்பித்துக் காரியம் செய்த மஹாநுபாவர் ஏற்கனவே விச்வாஸங் கொண்டிருக்கிற நம்மைக் கைவிடமாட்டாரென்று அவருடைய திருவடிகளையே தஞ்சமென்றிருக்கை நமக்கு ப்ராப்தம் என்று அத்யவஸாயங்கொண்டு அத்திருவடிகளைச் சிந்திக்கும்போதெல்லாம் ஸமுத்ரகோஷமும் வாடைக்காற்றும் வந்து நலிகின்றனவே யென்கிறாள். என்னுடைய மநோரதப்படி அவருடைய திருவடிகள் எனக்குக் கிடையாமையாலே விரஹ வேதனையினால் கிலமங்கையாடைக்கும் வாடைக்கும் வருந்த வேண்டியிருக்கிறதென்கை.

இதற்கு இனி என் செய்கேன் !=ரக்ஷகர்தாமே கைவிட்டால் நான் செய்துகொள்ளத் தக்கது ஏதேனுமுண்டோ? அவருடைய அருளே அரண் என்றவாறு.

இரண்டாமடியில் ‘திருந்து சேவடி’ என்றதற்கு “ஐச்வர்யப்ரகாசகமான திருவடிகளை” என்று பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான மிட்டருளினதற்கு

இணைக்க "திருவுந்து" என்று பிரித்து உரைக்கப்பட்டது. 'திருவுந்து' என்று சந்தியாகாதது தொகுத்தல் விகாரம். இனி 'திருந்து சேவடி' என்பதை வினைத்தொகையாகவுங்கொண்டு உரைக்கலாம்; திருந்துதலாவது ஆச்ரிதர்கட்கென்றே வாய்த்திருத்தல். ... ... .. ... ... 4

அன்னை முனிவதும் அன்றிலின் குரலீர்வதும்* மன்னுமறிகடலார்ப்பதும் வளைசோர்வதும்*
பொன்னங்கலையல்குலன்னமென்னடைப்பூங்குழல்* பின்னைமணாளர்திறத்தமாயினபின்னையே. 5

| | | | |
|---|---|---|---|
| அன்னை முனிவதும் | பெற்ற தாய் சீறிச் சொல்லுவதும் | அன்னம் மென் நடை | அன்னத்தின் நடைபோன்று அழகிய நடையையுடையவளும் |
| அன்றிலின் குரல் ஈர்வதும் | அன்றிற் பறவையின் குரல் அறுப்பதும் | பூ குழல் | பூவணிந்த கூந்தலை யுடையளுமான |
| மன்னும் மறி கடல் ஆர்ப்பதும் | எப்போதும் அலை மடியப் பெற்ற கடல் கோஷிப்பதும் | பின்னை | நப்பின்னைப் பிராட்டியின |
| வளை சோர்வதும் | கைவளைகள் கழல்வதும் (ஆகிய இவையெல்லாம்) | மணாளர் | நாயகரான கண்ணபிரானுடைய |
| பொன் அம் கலை அல்குல் | அழகிய பொன்னாடையணிந்த நிதம்பத்தையுடையவளும் | திறத்தம் ஆயின பின்னையே | விஷயத்தில் ஈடுபட்டோமாயின பிறகே. (அதற்கு முன்பு இல்லை) |

***—நான் பகவத் விஷயத்தில் கைவைப்பதற்கு முன்னம் தாயானவள் என்னை ஒருவார்த்தையும் பொடிந்து சொல்லியறியாள்; அன்றில் பறவையின் குரல் முன்பு கேட்கப்படும்போது செவிக்கு மிக இனிதாயிருந்தது; அப்போது கடலோசைதானும் காது கொடுத்துக் கேட்கலாயிருந்தது; உடலும் பூரித்து வளைகள் நெருக்குண்டிருந்தன. இப்போது அநுபவிக்கிற கஷ்டங்களில் ஒன்றும் முன்பு நான் அநுபவித்ததேயில்லை; பின்னை மணாளரான எம்பெருமான் திறத்திலே நெஞ்சு செலுத்தப் பெற்றபின்பே தாய் சீறிச் சொல்லும்படியாகவும் அன்றிலின் குரலால் நலிவுபடும்படியாகவும் கடலோசைக்கு நோவுபடும்படியாகவும் கைவளைகள் கழலும்படியாகவும் பெற்றேன் என்கிறாள்.

[அன்னை முனிவதும்.] 'தாய் தகப்பன்மார் சுற்றத்தார் முதலானோர் இருக்கும்போது அவர்களைக்கொண்டு தனக்குற்ற நன்மைகளைத் தேடிக்கொள்ள வேண்டியது கடமையாயிருக்க, இச் சிறுபெண்பிள்ளை எல்லாரையும் திரஸ்கரித்துவிட்டுத் தான்தோன்றியாகத் தானே (பகவத் விஷயத்தில்) ஒரு நாயகனைக் காதலித்துப் புறப்பட்டாள்!; இப்படியும் ஒரு அநியாயமுண்டோ?' என்பது தாய் சீறிச் சொல்லும் வார்த்தையாமென்க.

மூன்றாமடி முழுதும் நப்பின்னைப் பிராட்டிக்கு அடைமொழி.

இப் பாட்டின் வியாக்கியானத்திலே—"பூர்வாபரங்களுக்குச் சேர்த்தி போராதாகிலும் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் 'பின்னைமணாளர் திறத்தோமான பின்பன்றோ இவை இப்படியாயிற்று; ஸாமாந்யனென்று இருமீடெல்லாம் இடவமையும் என்பாரைப்போலே அவரோடே ஒரு ஸம்பந்தஞ்சொல்லி நலிகிறவை நலிக்காலென்? என்பராம்"—என்ற ஸ்ரீஸூக்திகள் இங்குக் காணத்தக்கன. பாதகபதார்த்தங்களால் நோவுபட்டு வருந்திப் பேசுகிற இத் திருமொழியிலே இப் பாட்டுக்குப் பிள்ளையுறங்கா வில்லிதாஸர் அருளிச்செய்யும் கருத்து பிரகரணத்தோடு அவ்வளவு பொருந்தாதாயினும் சுவையுடைத்தாயிருக்கும். அவர் அருளிச்செய்யும் கருத்து ஏதென்னில்; அன்னை முனிவதும் அன்றிலின் குரல் ஈர்வதும் மன்னுமறிகடலார்ப்பதும் வளைசோர்வதும் நாம் பின்னைமணாளர் திறத்திலே மீடு

பட்டிருக்கிறேனென்கிற காரணத்தினாலன்றோ அந்தக் காரணம்பற்றியாகில் அவை நமக்கு உத்தேச்யமே—என்பதாம்.

“ஸாமாந்யனென்று இடிமிடெல்லாம் இடவமையும் என்பாரைப்போலே” என்ற வியாக்கியான வாக்கியத்தின் கருத்து யாதெனில்; முற்காலத்தில் திருமாலிருஞ் சோலையில் ஸாமாந்யரென்றும் சோழியரென்றும் இருவகுப்பினர் ஸந்நிதி கைங்கரியாதி விஷயமாக அடிக்கடி பிணக்குண்பர்: அதனால் ஒருவர்க்கொருவர் போர்செய்து வலிதாக அடித்துக் கொள்ளுதலுமுண்டாம்; ஒரு ஸமயத்தில் மிக இருட்டான இடத்திலே [ஸந்நிதி ப்ரதக்ஷிணத்திலே] கைகலந்து போர் நடக்கையில், ஒரு சோழியர் மற்றொரு சோழியரையே வலிதாகப் புடைத்தார்; புடைப்பவருடைய மிடற்றோசையைக் கண்டறிந்த புடையுண்பவர் ‘ஐயோ! நான் சோழியனாயிற்றே, என்னை ஏதுக்கு அடிக்கிறீர்?’ என்று கதற, அதுகேட்ட அவர் ‘அப்படியா?, தெரியாது அடித்து விட்டேன்; ஸாமாந்யனென்றுப்ரமித்து அடித்து விட்டேன்’ என்ன; அது கேட்ட இவர் ‘அப்படியாகில் இன்னமும் அடியும்; ஸாமாந்யனென்று என்னை எவ்வளவு அடித்தாலும் அத்தனையும் எனக்கு உத்தேச்யமே’ என்றாராம். அதுபோல, பகவத் விஷயத்தில் ஈடுபட்டேனென்கிற காரணத்தினால் அன்னைமுனிவது முதலான கஷ்டங்கள் எனக்கு நேர்வனவாகில் தாராளமாக நேரட்டும் என்பதாகப் பிள்ளையுறங்காவில்லி தாஸருடைய தாத்பர்யங் காண்க. இதனால் பகவத்விஷயத்தில் இத்தலைவிக்கு உள்ள காதலின் உறைப்பு வெளியாகும்.

நிறத்தம்—தன்மைப்பன்மைக் குறிப்புவினைமுற்று. ... ... 5

ஆழியுஞ்சங்குமுடைய நங்களடிகள்தாம்* பாழிமையான கனவில் நம்மைப்பகர்வித்தார்*
தோழியும் நானுமொழிய வையந்துயின்றது* கோழியுங்கூகின்றதில்லை கூரிருளாயிற்றே. 6

| | | | |
|---|---|---|---|
| ஆழியும் சங்கும் உடைய | திருவாழி திருச்சங்குகளையுடையரான | தோழியும் நானும் ஒழிய | தோழியும் நானும் தவிர |
| நங்கள் அடிகள் தாம் | அஸ்மத்ஸ்வாமியான ஸர்வேச்வரன் | வையம் | மற்ற உலகத்தாரெல்லாரும் |
| நம்மை | நம்மை | துயின்றது | உறங்கிவிட்டார்கள்; |
| பாழிமையான கனவின் | மிகப்பெரிதாய் ஸ்வப்நதுல்யமான ஸம்ச்லேஷத்தினால் | கோழியும் | கோழிகூட |
| பகர்வித்தார் | இப்படி கூப்பிடும்படியாகச் செய்துவிட்டார்; | கூகின்றது இல்லை | (விடிவுக்கு அறிகுறியாகக்) கூவுகின்றதில்லை; |
| | | கூர் இருள் ஆயிற்றே | இரவோடும் காளிருளாயிருக்கின்றதே! |

***—“ அங்கைத்தலத்திடை யாழிகொண்டானவன் முகத்தன்றி விழியேனென்று, செங்கச்சுக் கொண்டு கண்ணாடையார்த்துச் சிறுமானிடவரைக் காணில் நாணுங், கொங்கைத்தலமிவை” என்றாற்போலே திருவாழி திருச்சங்குகளாகிற அஸாதாரண லக்ஷணங்களோடே கூடின தலைவனையாயிற்று இப்பரகாலநாயகி காதலிப்பது; அப்படியே அவர்வந்து ஸ்வப்நம் போன்ற ஸம்ச்லேஷத்தைச் சிறிதுபோது தந்தருளி உடனே பிரிந்து போயினராதலால் நான் இங்ஙனே கதறவேண்டியதாயிற்று என்கிறாள் முன்னடிகளால்.

பாழிமையான கனவின்=இங்குக்கனவு என்கிறது ஸம்ச்லேஷத்தையென்று கொள்க. எப்போதோ நடந்த கலவி இவளுக்கு இப்போது ஸ்வப்ந துல்யமாயிருப்பதால் கனவு என்கிறது. பாழிமையாவது வலிமை; வலிதான ஸம்ச்லேஷத்தினாலென்றபடி.

"பெரிய மென்மையுடையவர் கையைக் காலைப்பிடித்துத் தாழ நின்று பரிமாறின பரிமாற்ற மானகையாலே அநுஸந்திக்கப்புக்கால் கரைகாண வொண்ணாத படியா யிருக்கிற அபர்யாப்த ஸம்ச்லேஷத்தாலே" என்ற வியாக்கியான வாக்கியங்காண்க.

நானும் என்னுடைய தோழியுந்தவிர மற்றவுலகர்களெல்லாரும் அன்யபரர்களாதலால் அவர்களனைவரும் சுகமே உறங்கிக்கிடக்கிறார்கள்; எனக்கோ ஓரிரவு ஏழூழியாய் நெடுநீச்செல்லாநின்றது; கோழி கூவினாலாவது பொழுது விடியப் போகிறதென்று சிறிது ஆறியிருக்கலாம்; கோழியும் உறங்கிப் போயிற்றுப் போலும் என்கிறாள் பின்னடிகளில் ... ... ... 6

காமன்றனக்கு முறையல்லேன் கடல்வண்ணனார்* மாமணவாளரெனக்குத்தானுமகன் சொல்லில்*
யாமங்கடோறெரிவீசுமென்னிளங்கொங்கைகள்* மாமணிவண்ணர்திறத்தவாய்வளர்கின்றவே. 7

| | | | |
|---|---|---|---|
| காமன் தனக்கு முறை அல்லேன் | மன்மதனால் நான் நலியப் பெறுதற்கு முறையுடையவளல்லேன்; | எனக்கு மகன் | எனக்கு மகனாகப் பெற்றான்; (அப்படியிருந்தும்) |
| சொல்லில் | ஏதென்னில்; | யாமங்கள் தோறு | எப்போதும் |
| கடல் வண்ணனார் | கடல்வண்ணரான கண்ணபிரான் | எரி வீசும் | நெருப்பைத் தூவுகின்றான்; |
| எனக்கு மா மணவாளர் | எனக்குச் சிறந்த நாயகராயிருக்கின்றார்; (இவ்வழியாலே) | என் இள கொங்கைகள் | எனது இளமுலைகளோவென்னில் |
| தான் | அந்த மன்மதன்தான் | மா மணி வண்ணர் திறத்த ஆய வளர்கின்ற | நீலமணி வண்ணரான அப்பெருமானை நோக்கியே வளர்கின்றனவாயுள்ளன. |

***—நான் கடல்வண்ணனை எம்பெருமானை எப்போது மணவாளனாகக் கொண்டேனோ அப்போதே மன்மதன் எனக்கு மகனாய்விட்டான்; மகனானவன் பெற்றதாயை இங்ஙனே கொலை செய்வது வழக்கோ? கையைப்பிடித்த கணவனார் என்ன நலிவுசெய்தாலும் பொறுக்கலாம்; வயிற்றிற் பிறந்த மகன் நலிவு செய்ய என்ன முறையுண்டு? என்கிறாள் முன்னடிகளில்.

மன்மதன் செய்கிற ஹிம்ஸை ஏதென்ன, யாமங்கடோறு எரிவீசும் என்கிறாள். ஸர்வகாலத்திலும் தபிக்கிறானென்றபடி. மன்மதன் இப்படி நெருப்பை வீசச் செய்தேயும் எனது இளமுலைகள் தாம் கொண்ட கொள்கையை விடுகின்றில; அப்பெருமானுக்கே அற்றுத் தீர்ந்தனவாய் விம்மி வளர்கின்றனவென்கிறாள். 7

மஞ்சுறுமாலிருஞ்சோலைநின்றமணாளனார்* நெஞ்சம்நிறைகொண்டுபோயினார்நினைகின்றிலர்*
வெஞ்சுடர்போய்விடியாமலெவ்விடம்புக்கதோ* நஞ்சுடலந்துயின்றால்நமக்கினிநல்லதே. 8

| | | | |
|---|---|---|---|
| மஞ்சு உறு | மேகமண்டலத்தைக் கிட்டி ஓங்கின (சிகரத்தையுடைய) | வெம் சுடர் | ஸூர்யனானவன் |
| மாலிருஞ் சோலை | திருமாலிருஞ் சோலைமலையிலே | போய் | அஸ்தமித்துப்போய் |
| நின்ற | நித்யவாஸம் [illegible] | விடியாமல் | மறுபடியும் உதியாமல் |
| மணாளனார் | எம்பெருமான் | எவ்விடம் புக்கதோ | எங்கே புகுந்தொளித்தானோ |
| நெஞ்சம் | (எனது) நெஞ்சிலுள்ள | இனி | இப்படியான பின்பு |
| நிறை | அடக்கத்தை | நமக்கு | நம்முடைய |
| கொண்டு போயினார் | அபஹரித்துக் கொண்டு போனவராய் | உடலம் | சரீரமானது |
| நினைகின்றிலர் | (இத்தலையை) மறந்தொழிந்தார்; | நஞ்சு | சிதிலமாகி |
| | | துயின்றால் | முடிந்துபோமாகில் |
| | | நல்லது | நன்றாகும். |

* * *—திருமாலிருஞ் சோலைமலையிலே நித்யவாஸம் செய்தருளாநின்ற அழகப்பிரானர் பெண்மைக்கு ஈடாக என்னெஞ்சிலிருந்த அடக்கத்தைக் கொள்ளை கொண்டு போய்விட்டார்; போனவர் 'ஒருத்தியை இப்படி ஸர்வஸ்வாபஹாரம் பண்ணிவந்தோமே, அவள் எப்பாடுபடுகிறாளோ!' என்று நெஞ்சில் இத்தனை இரக்கமும் அற்றிராநின்றார். அவர்தாம் அப்படி இரக்கமற்றொழிந்தால் ஸூர்ய பகவானும் இரக்கமற்றொழியவேணுமோ? அவன் அஸ்தமித்தால் மீண்டும் முப்பது நாழிகையிலே உதிக்கவேணுமென்று ஒரு நியதியில்லையோ? அந்த நியதியையுங் கடந்து அடியோடு முகங்காட்டாதே எங்கோ புக்கொளித்தானே!; இங்ஙனே எம்பெருமானும் இரக்கமற்றவனாகி அவனுடைய பரிஜநமும் இரக்கமற்றொழிந்ததான பின்பு ஏதுக்கு நாம் இந்தவுடலைச் சுமந்து வருந்தவேணும்? இவ்வுடலம் சிதிலமாகி முடியப்பெறுமாகில் அதுவே நமக்குச்சிறந்த வாழ்ச்சியாகுமே யென்கிறாள்.

விரஹிகளுக்கு இரவு நீட்டித்துத் தோற்றுதல் இயல்பாதலால் 'வெஞ்சுடர் போய்விடியாமல் எவ்விடம் புக்கதோ'' என்னப்பட்டது.

நைஞ்சு='நைந்து' என்பதன் போலி; ('ஐந்து' என்பதற்கு 'அஞ்சு' என்று போலியாவது போல.) 'உடலம்' என்றதில் அம்—சாரியை. நுயிலுதல்—தீர்க்க நித்திரையாகிய மரணத்தையடைந்தால் என்றபடி; உபசாரவழக்கு. எம்பெருமானை அநுபவிப்பதற்கு உபயோகப்படாத சரீரம் ஒழிவதேநன்று என்கிறாள். "நாகமிசைத் துயில்வான் போலுலகெல்லாம் நன்கொடுங்க, யோகணைவான் கவராத உடம்பினால் குறைவிலமே'' என்ற திருவாய்மொழியுங் காண்க. ... 8

காமன்கணைக்கோரிலக்கமாய்நலத்தின்மிகு * பூமருகோலநம்பெண்மைசிந்தித்திராதுபோய் *
தூமலர்நீர்கொடுதோழி! நாந்தொழுதேத்தினால்? * கார்முகில்வண்ணரைக்கண்களாற்காணலாங்கொலோ?

| | | | |
|---|---|---|---|
| தோழி | வாராய்தோழி! | போய் | புறப்பட்டுப்போய் |
| காமன கணை | மன்மதபாணங்களுக்கு | கார் முகில் வண்ணரை | காளமேகச்யாமரான பெருமானை |
| ஓர் இலக்கம் ஆய் | இலக்காகியிருப்பதனாலே | தூ மலர் நீர் கொடு | பரிசுத்தமான புஷ்பங்களையும் தீர்த்தங்களையுங் கொண்டு |
| நலத்தின் மிகு | நன்மைமிக்கதாய் | | |
| பூமரு | விரும்பத்தக்கதாய் | | |
| கோலம் | அழகியதான | நாம் தொழுது ஏத்தினால் | நாம் வணங்கித் துதித்தால் |
| நம் பெண்மை | நமது பெண்மைக்குணத்தை | | |
| சிந்தித்து | நினைத்துக்கொண்டு | கண்களால் காணல் ஆம் கொலோ | (அவரைக்) கண்ணாலே ஸேவிக்கப் பெறலாமோ? |
| இராது | இவ்விடத்திலேயே இருந்திடாமல் | | |

* * *-யநுபவிப்பதற்குப் பாங்கல்லாத இந்தப்பாழும் சரீரம் முடிந்து போவதே நல்லதென்றாள் கீழ்ப்பாட்டில்; சரீரம் இருப்பதும் போவதும் நம்முடைய இஷ்டத்தைப் பொறுத்ததன்றே. அது எம்பெருமானுடைய ஸங்கல்பத்தின்படியே ஆகக்கடவதாயிற்றே. "கண்ணாளா கடல்கடைந்தாய்! உனகழற்கே வரும்பரிசு, தண்ணாவாதடியேனைப்பணிகண்டாய் சாமாறே'' என்று ப்ரார்த்தித்தவிடத்திலும் உடனே அது ஸித்தித்ததில்லையே; இவ்வாழ்வாரை எம்பெருமான் இன்னமும் இவ்வுலகத்திலே வைத்துப்பல உபகாரங்களைச் செய்விக்கத் திருவுள்ளம்பற்றினவனாதலால் ஆழ்வாருடைய எண்ணப்படி உடலம் ஒழியப் பெற்றதில்லை; எவ்வகையினாலாவது எம்பெருமானைக் கண்களால்காண ஆசை அதிகரித்ததனால், தோழீ! நம்முடைய ஸ்வரூபத்தை அழித்துக்கொண்டு அதிப்ரவ்ருத்தி செய்தாகிலும் அவரைக் கண்டுவிடுவதே யாகுங்கொல்' என்கிறாள்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## பதினோராம்பத்து—மூன்றாந்திருமொழி—மன்னிலங்கு பாரதத்து.

உரையவதாரிகை:—கீழ்த் திருமொழியில் "நம்பெண்மை சிந்தித்திராது போய்த் தாமலர்நீர்கொடு தோழி! நாந் தொழுதேத்தினல், கார்முகில் வண்ணரைக் கண்களால் காணலாங்கொலோ' என்று ஸ்வரூப விருத்தமாக அதிப்ரவ்ருத்தி பண்ணியாகிலும் எம்பெருமானைக் காணப்பெறுவோமென்று ஆழ்வார் கோலின வளவிலே, இதனைப் பொறுக்கமாட்டாத எம்பெருமான் வந்து முகங்காட்டி 'ஆழ்வீர்! சற்றுப்போது தாமதித்த மாத்திரத்தினல் நீர் இத்தனை ஸாஹஸத்திலே இழியலாமோ? ஒரு சேதனனைப் பெறுகைக்கு நான் எவ்வளவு பாடுபடுகிறவ னென்பதை நீர் அறியமாட்டீரோ? உம்மைப் பிரிந்ததனல் நானன்றோ க்லேசப் படுகிறவன்? என்னைவிட்டு நொடிப்பொழுதும் தரிக்கமாட்டாதவர்கள் யாவரோ, அவர்களைவிட்டு நானும் தரிப்பவனல்லேனே; என்னுடைய படிகளை நீர் அறிந்து வைத்தும் இங்ஙனே க்லேசப்படுதல் தகுமோ? என்றாற்போலே சில வார்த்தை களைச் சொல்லித் தன் செல்லாமை யடங்கலுங் காட்ட, ஆழ்வார் அதனை யெல்லாம் அநுஸந்தித்து. தாஹித்தவன் சிறிது தண்ணீர் குடித்தால் அது தாஹசாந்திக்கு உடலாகாதே மேன்மேலும் விடாயை வளரச்செய்யுமாபோலே அவ்வநுஸந்தாந மானது மேலும் விடாயைப் பிறப்பிக்க, அதனல் மிகவும் நோவுபட்டு, பின்னையும் அவனைக்கிட்டி நித்யாநுபவம் பண்ணப் பெற்றிலோமேயாகிலும் இவ்விடாயும் பதற்றமுமெல்லாம் இவ்விஷயத்திலே ஆகப்பெற்றோமே! என்று உண்டான திருப்தியோடே பேசித் தலைக்கட்டுவதாம் இத்திருமொழி. இதுவும் நாயகி பாசுரத் தாலே செல்லுகிறதாயிற்று.

இத்திருமொழி அந்தாதித்தொடையினலமைந்தது. .... .... *

மன்னிலங்குபாரதத்துத்தேரூர்ந்து* மாவலியைப் பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்துப்பொருகடல்சூழ்
தென்னிலங்கையீடழித்த தேவற்கிதுகாணீர் * என்னிலங்குசங்கோடெழில்தோற்றிருந்தேனே. 1

| | | | |
|---|---|---|---|
| மன் இலங்கு | (பல) அரசர்கள் விளங்கா நின்ற | தென இலங்கை | தென்னிலங்கையினுடைய |
| பாரதத்து | பாரதயுத்தத்திலே | ஈடு | மதிப்பை |
| தேர் ஊர்ந்து | (ஸாரதியாய் நின்று) தேரை நடத்தினவனும் | அழித்த | அழித்தவனுமிருக்கிற |
| மாவலியை | மஹாபலியை | தேவற்கு | எம்பெருமானுக்கு |
| பொன் இலங்கு திண் விலங் கில் வைத்து | பொன்மயமாக விளங்குகின்ற திடமான விலங்கிலே பிணைத்தவனும் | என் இலங்கு சங்கோடு | எனது ஒளிமிக்க கைவளை களையும் |
| பொரு கடல் சூழ் | அலையெறிகின்ற கடலாலே சூழப்பட்ட | எழில் | அழகையும் |
| | | தோற்றிருந் தேன் | இழந்திரா நின்றேன்; |
| | | இது காணீர் | இவ்விருப்பைக் காணுங் கோள். |

* * *—பலபல அரசர்கள் திரண்டுகிடந்த பாரதப் போரிலே பாண்டவர்கட்கு வெற்றியுண்டாகுமாறு பார்த்தஸாரதியா யிருந்து தேரை நடத்ினவனும், கண்ணுங் கண்ணீருமாக வந்து அடிபணிந்து இரந்த இந்திரனுக்குத் திருவுள்ள மிரங்கி மாவலியைப் பாதாளத்திலே செலுத்தினவனும், கடல் சூழ்ந்த இலங்காபுரியை சீடழித்தவனுமான எம்பெருமானை ஆசைப்பட்டு நான் பெற்றபேறு வளையிழந்ததும் நிறமழிந்ததுமே காணீர்? என்று படியெடுத்துக் காட்டுகிறாள் பரகாலநாயகி.

"மன்னிலங்குபாரதத்துத் தேரூர்ந்து" என்றவிடத்திற்கு "மலைபுரைதோள் மன்னவரும் மாரதரும் மற்றும், பலர் குலைய நூற்றுவரும் பட்டழியப் பார்த்தன்

சிறைவைத்தாய்க் குன்றெடுத்தாய் முன்னின்ற என்ற பெரியாழ்வார் திருமொழிச் செய்யுள் அநுஸந்திக்கத்தக்கது.

ஔதார்யமே பற்றாசாக மாவலியை உயிர்முடிக்காதே பாதாளத்தில் சிறை வைத்ததைப் "பொன்னுலகந் திண்ணிலத்தில் வைத்து" என்றார். *கல்யம ஸ்வதேத ... காராக்ருஹே ... பந்த:* (வரதராஜ பஞ்சாசத்.) என்ற வேதாந்த தேசிகனுடைய ஸ்ரீஸூக்தி இங்கு ஸ்மரிக்கத் தக்கது. ... ... .. .. .. ... 1

**இருந்தானென்னுள்ளத்திறைவன் * கறைசேர்பருந்தாட்களிற்றுக்கருள்செய்தசெங்கண் ***
**பெருந்தோள்நெடுமாலைப் பேர்பாடியாட * வருந்தாதென்கொங்கையொளிமன்னுமன்னே !** 2

| | | | |
|---|---|---|---|
| என் உள்ளத்து | எனது நெஞ்சினுள்ளே | பெருந்தோள் | பெருமைதங்கிய திருத்தோள்களையுடையனுமான |
| இருந்தான் | வாழ்ந்திருப்பவனும் | நெடுமாலை | ஸர்வேச்வரனுடைய |
| இறைவன் | ஸர்வஸ்வாமியும் | பேர் | திருநாமங்களை |
| கறை சேர் பருந்தாள் | உரல்போன்று பருத்த அடியையுடைத்தான | பாடி ஆட | வாயாரப்பாடிக் கூத்தாட |
| களிற்றுக்கு அருள்செய்த | கஜேந்திராழ்வானுக்கு அருள்செய்தவனும் | என் கொங்கை | எனது முலைகளானவை |
| | | வருந்தாது | வருத்தமற்று |
| செங்கண் | செந்தாமரைக் கண்ணனும் | ஒளி மன்னும் | ஒளிபெறும். |

***—கீழ்ப்பாட்டில் தோன்றின வருத்தம் சிறிது தலைமடிந்து மகிழ்ச்சி தோற்றப் பேசுகிறபாசுரம் இது. எம்பெருமான் இனிவிட்டுப் போகிறவனல்லனாக என் ஹ்ருதயத்திலே புகுந்திருக்கின்றான்; ஸ்ரீகஜேந்திராழ்வானுக்கு அரை குலையத் தலைகுலைய மடுவின் கரையிலே ஓடிவந்து அருள்செய்த வாத்ஸல்யமெல்லாம் கண்களிலே தோற்றும்படி யிராநின்றான். இப்படிப்பட்ட எம்பெருமானுடைய திருநாமங்களை பரிசித்துப் போக்கு வீடாகப்பாடி உடல் இருந்தவிடத்தி லிருக்கமாட்டாதே ஆடுமளவில் என்கொங்கைகள் வருத்தந்தீர்ந்து புகர் பெறுகின்றபடி பாராய் என்கிறாள்.

[கறைசேர்] கறை என்னுஞ்சொல் பல பொருள்களையுடையது; உரல் என்கிற பொருள் இங்குக் கொள்ளப்பட்டது. இனி, உதிரம் என்ற பொருளும் கொள்ளத் தக்கதே; முதலையின்வாய்க் கௌவு பெற்று வ்ரணத்தினால் ரக்தமொழுகப் பெற்ற கால் என்றபடி.

**பாசுரத்தின் முடிவிலுள்ள அன்னே என்பதைப் பாதபூரணமாகவுங் கொள்ளலாம், தோழீ! என்றபடியாகவுங்கொள்ளலாம். . ... ... 2**

**அன்னே ! இவரையறிவன் * மறைநான்கும் முன்னேயுரைத்தமுனிவரிவர்வந்து ***
**பொன்னேய்வளைகவர்ந்து போகார்மனம்புகுந்து * என்னே ? இவரெண்ணுமெண்ணமறியோமே.** 3

| | | | |
|---|---|---|---|
| அன்னே | அம்மா! | வந்து | (ஒருகால் என்பக்கலில்) வந்து |
| இவரை அறிவன் | இந்த மஹாநுபாவரை (நான் நன்கு) அறிவேன்; | பொன் ஏய் வளை கவர்ந்து | பொன்மயமான கைவளைகளை விரும்பி |
| இவர் | இப்பெரியவர் | | |
| முன்னே | முற்காலத்திலே | மனம் புகுந்து | எனது நெஞ்சினுள்புகுந்து |
| மறை நான்கும் | நால்வேதங்களையும் | போகார் | விட்டுப் போகாமலிராநின்றார்; |
| உரைத்த | (பிரமனுக்கு) உபதேசித்த | இவர் எண்ணும் எண்ணம் | இவர் நினைத்திருக்கும் நினைவு |
| முனிவர் | முனிவராவர்; (இப்படிப்பட்ட இவர்) | என்னே | எதுவாயிருந்ததோ? |
| | | அறியோம் | அறிகின்றிலோம். |

* * *—"இன்னாரென்றறியேன் அன்னே ஆழியொடும் பொன்னார் சார்ங்க முடையவடிகளை இன்னாரென்றறியேன்" என்ற வாயாலே "அன்னே யிவரை யறியேன்" என்கிறாள். இங்கே வியாக்கியான வாக்கியங்கள் ஆன்மின்;—'நெருங்கக் கலந்தபோதாக இன்னாரென்றறியேன்' என்னிலுமென்னும்; காதாசித்கமாக ஸம்ச்லேஷித்தபோது ஸ்வாபாவிக சேஷித்வத்தாலும் முகத்தில் தண்ணளியாலும் அறிவேனென்னிலுமென்னும்." என்று.

மறைநான்கும் முன்னோயுரைத்த முனிவரிவர்—ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்னப்படுகிற நான்கு வேதங்களையும் முன்பு பிரமதேவனுக்கு உபதேசித்தவர் என்றபடி. வேதம் அபௌருஷேய மெனப்படும்; அதாவது, ஒரு புருஷனாலும் செய்யப்படாததென்கை. அப்படியிருக்க இங்கு 'மறை நான்கும் முன்னோ யுரைத்த முனிவர்' என்று சொல்லப்படுகிறதே: ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் எம்பெருமான் நான்முகனுக்கு வேதோபதேசம் செய்தருளினனென்றால் ஸ்ருஷ்டிக்கு முன்பு வேதம் இருக்க முடியாதே: ஆகையால் ஸர்வேச்வரனை வேதகர்த்தா என்று இசையலாமன்றோ என்னில்: அப்படியன்று; வேதத்துக்கு நாம் எப்படி கர்த்தாக்களல்லோமோ அப்படியே ஸர்வேச்வரனும் கர்த்தாவல்லன்; உலகத்தின் ஸ்ருஷ்டியானது ஒன்றன் பின் ஒன்றாக அநாதி காலமாக நடந்து வருகிறது; ஒவ்வொரு கல்பத்தின் தொடக்கத்திலும் ஈச்வரன் நான்முகனுக்கு வேதங்களை உபதேசிக்கிறான்; ஆனால் முன்கல்பத்தில் வேதம் எந்த மாதிரியான ஆநுபூர்வியோடு இருந்ததோ அந்த ஆநுபூர்வியாகவே மறுகல்பத்தின் ஆரம்பத்திலும் வேதத்தை உபதேசிக்கிறான்; எவ்விதமான மாறுதலும் செய்வதில்லை. அநாதி காலமாக இப்படியே செய்து வருகிறான். இவ்வளவே எம்பெருமான் செய்வது. புதிதாக வேதத்தை இயற்றுவதில்லை. எவ்விதமான மாறுபாடும் செய்வதுமில்லை. ஆகையால் ஈச்வரனும் வேதகர்த்தா வல்லன் என்க. ஸ்ரீரங்கராஜஸ்தவ உத்தர சதகத்தில் * வேதே கர்த்ராத்யபாவாத் * என்ற ச்லோகத்தில் இவ்விஷயம் விளங்கக் காணத்தக்கது. அங்கு நம்முடைய விரிவுரை காண்க.

இப்படிப்பட்ட எம்பெருமான் எனது பொன்வளையிலே ஆசை கொண்டவராய் என்னெஞ்சிற்புகுந்து போகாதேயிருக்கிறார்; இவர் என்னை என்னென்ன செய்யக் கருதியிருக்கிறாரோ அறியேன் என்கிறாள் பின்னடிகளில்.

என்வளையில் ஆசைவைத்திருக்கிறார் என்றது—எனக்கு உடனே பிரிவை உண்டாக்கி உடலை இளைப்பித்து வளைகள் கழன்றொழியுமாறு செய்யவே கருதியிருக்கின்றார் என்றபடி. இப்போது இவர் மனம்புகுந்து போகாமலிருக்கிறது உடனே பிரிவுக்கு இட்ட அடியாம் என்கை. ... .. ... 3

**அறியோமேயென்றுரைக்கலாமே? யெமக்கு * வெறியார்பொழில்சூழ்வியன் குடந்தைமேவி ***
**சிறியானோர்பிள்ளையாய்மெள்ள நடந்திட்டு * உறியார் நறுவெண்ணெயுண்டுகந்தார் நம்மையே.**

| | | | |
|---|---|---|---|
| வெறி ஆர் | பரிமளம் மிக்க | உறி ஆர் நறு வெண்ணெய் | உறிகளிலே சேமித்திருந்த மணம்மிக்க வெண்ணெயை |
| பொழில் சூழ் | சோலைகளாலே சூழப்பட்டு | | |
| வியன | [illegible] | உண்டு உகந்தார் தம்மை | வாரியமுது செய்து திருவுள்ள முகந்தவருமான இப்பெரியவரை |
| குடந்தை | திருக்குடந்தையிலே | | |
| மேவி | பொருந்தியிருப்பவரும், | | |
| சிறியான் ஓர் பிள்ளை ஆய் | (க்ருஷ்ணவதாரத்தில்) ஒப்பற்ற சிறு குழந்தையாய் | அறியோம என்று உரைக்கல் | 'அறிகின்றிலோம' என்று சொல்லுதல் |
| மெள்ள நடந்திட்டு | மெதுவாக நடந்து சென்று | எமக்கு ஆமே | எமக்குத் தகுமோ? |

* * *—கீழ்ப்பாட்டில் "அன்னை யிவரையறிவன்" என்ற பரகாலநாயகியை நோக்கித் தோழியானவள் 'நங்காய்! இவரை நீ எங்ஙனே அறிந்தாய்? 'இன்னாரென்றறியேன்' என்று முன்பு சொன்னாய்; இப்போது அறிவேனென்கிறாய்; பொருந்தாத வார்த்தையாயிருக்கின்றதே!' என்ன; இவரை நான் அறிவேனென்பதே உண்மையென்கிறாள்; இவரை யறியோம் என்று நான் எங்ஙனே சொல்லக் கூடும்? "இங்கே போதுங்கொலோ இனவேல் நெடுங்கண் களிப்பக், கொங்கார் சோலைக் குடந்தைக் கிடந்தமால் இங்கே போதுங்கொலோ" என்று நான் மநோரதித்த படியே 'வெறியார் பொழில்சூழ் வியன்குடந்தை மேவியான பெருமானனரே எழுந்தருளியிருக்கிறார்; 'இவன் இதைத் திருடினான் என்று சொல்லவொண்ணாதபடியான இளம்பிராயத்தையுடையனாய்ப் பொய்யடி யிட்டுப் போய்ப் புக்கு உறிகளிலே சேமித்து வைத்த வெண்ணெயை அமுதுசெய்து ஆச்ரிதருடைய ஹஸ்த ஸ்பர்ச முள்ள த்ரவ்யத்தை உட்கொள்ளப் பெற்றோம்' என்று உகந்தாப் போலே என்னைத் தழுவியணைத்துத் தலைதடுமாறாகப் பரிமாறி ஆநந்தத்தின் மேலெல்லையிலே யிருக்கின்ற இவரை 'அறியோம்' என்று எங்ஙனே சொல்லக்கூடுமென்கிறாள். ... ... ... .. ... ... 4

**தம்மையேநாளும்வணங்கித்தொழுவார்க்கு * தம்மையேயொக்கவருள்செய்வராதலால் ***
**தம்மையேநாளும்வணங்கித்தொழுதிறைஞ்சி * தம்மையேபற்றாமனத்தென்றும் வைத்தோமே.**

| | | | |
|---|---|---|---|
| நாளும | எப்போதும் | நாளும் | |
| தம்மையே வணங்கி தொழுவார்க்கு | தம்மையே விஷயமுனவணங்குமவர்கட்கு | வணங்கி தொழுது இறைஞ்சி | எப்போதும் த்ரிகரணங்களாலும் நமஸ்கரித்து |
| தம்மையே ஒக்க அருள் செய்வர் | தம்முடைய ஸாம்யத்தை அருள் செய்பவர்; (எம்பெருமான்,) | தம்மையே என்றும் பற்று ஆ | அவர் தம்மையே எப்போதும் புகலாக |
| ஆதலால் | ஆகையினால் | மனத்து வைத்தோம் | உறுதி கொண்டோம். |
| தம்மையே | அவர் தம்மையே | | |

* * *—தேவதாந்தர பஜனத்தை நெஞ்சிலும் நினையாதவர்களாய் ப்ரயோஜநாந்தரத்தையும் சிந்தையிற் கொள்ளாதவர்களாய் ஆச்ரயிக்கின்ற பக்தர்களுக்கு*ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜநः பரமம்ஸாம்யமுபைதி*என்று உபநிஷத்தில் ஓதியிருக்கிறபடியே தம்மோடு பரமஸாம்யாபத்தியைத் தந்தருள்பவரான எம்பெருமானையே நாம் இடைவிடாது வணங்கி, அவரையே சரணமாக உறுதி கொண்டோமென்கிறாள்.

தம்மையே பற்றா=பற்றாக என்றபடி. பற்றப்படுவது பற்று; அதாவது பலனைச் சொன்னபடியாய் அவரையே பரமப்ரயோஜநமாகக் கொண்டோமென்னவுமாம். உபாயம் உபேயம் என்ற இரண்டும் அவரேயாகக் கொண்டோமென்றதாயிற்று. 5

**வைத்தாரடியார்மனத்தினில்வைத்து * இன்பம் உய்த்தாரொளிவிசும்பிலோரடிவைத்து * ஓரடிக்கும்**
**எய்த்தாதுமண்ணென்றிமையோர்தொழுதிறைஞ்சி*கைத்தாமரைகுவிக்குங்கண்ணனென் கண்ணனையே.**

| | | | |
|---|---|---|---|
| ஒளி விசும்பில் | (சந்திரன் ஸூரியன் முதலிய) சுடர்ப்பொருள்கள் மிக்க ஆகாசத்திலே | மண் எய்த்தாது என்று | பூமி போதாதே! என்று |
| | | இமையோர் | (பிரமன் முதலிய) தேவர்கள் |
| ஓர் அடி வைத்து | ஒரு திருவடியை ஓங்க வைக்க, | தொழுது இறைஞ்சி | வணங்கித் துதித்து |
| ஓர் அடிக்கும் | மற்றொரு திருவடிக்கு | கை | தங்களுடைய கைகளை |

| | | | |
|---|---|---|---|
| தாமரை குவிக்கும் | தாமரைமொக்கு போலே அஞ்ஜலிசெய்யப்பெற்ற | மனத்தினில் வைத்தார் | தங்கள் நெஞ்சிலே நாட்டினார்கள்; |
| என கண்ணன் கண்ணனை | எனக்குக் கண்போன்ற ஸ்ரீக்ருஷ்ணனை | வைத்து | அப்படி நாட்டியதனால் |
| அடியார் | அடியவர்கள் | இன்பம் உய்த்தார் | ஆநந்தத்தை அடையப் பெற்றார்கள். |

* * *—எம்பெருமானை நான் எப்படி மனத்திற் கொண்டேனோ இப்படியே அவனை மனத்திற் கொள்வார்க்கெல்லாம் பரமாநந்தம் ஸித்தம் என்கிறாள். மாவலிகையில் நீரேற்று ஒரு திருவடியை மேலுலகத்திலே பரப்ப வைத்து மற்றொரு திருவடியை நிலத்திலே பரப்பவைக்குமளவில் அத் திருவடிக்கு நிலம் இடம் போராவில்லையே யென்று இந்த த்ரிவிக்ரமாபதானத்தையெடுத்துப் பேசித் துதித்து அஞ்ஜலி செய்து தேவர்களால் வணங்கப்படுகின்ற எம்பெருமானை எந்த அடியார்கள் மனத்தில் வைக்கின்றார்களோ, அவர்கள் வைத்தவாறே பரமாநந்தத்தைப் பெற்றவரேயாவர் என்றதாயிற்று.

"ஓரடிக்கு மெய்த்தாதுமண்" என்றது ஈடுபாட்டினால் ............ வார்த்தை. "பிரானுன்பெருமை பிறரார்றிவார், உராயுலகளந்த ஞான்று-வராகத் தெயிற்றளவு போதாவாறென்கொலோ? எந்தையடிக்களவு போந்தபடி." (முதல் திருவந்தாதி 81) என்று வேறொரு சமத்காரமாகப் பேசினருளினார். 6

கண்ணன்மனத்துள்ளேநிற்கவும் * கைவளைகள் என்னேகழன்றஇவையென்னமாயங்கள்? *
பெண்ணானோம்பெண்மையோம்நிற்க * அவன்மேய அண்ணல்மலையுமரங்கமும்பாடோமே.

| | | | |
|---|---|---|---|
| கண்ணன் மனத்துள்ளே | கண்ணபிரான் (என) நெஞ்சினுள்ளே | பெண்மையோம் | வெகு அழகாகப் பெண்மையை உடையவர்களாயிருக்கின்றோம்; |
| நிற்கவும் | எழுந்தருளியிருக்கச் செய்தேயும் | நிற்க | இது நிற்க: |
| கை வளைகள் | (எனது) கையில்வளைகளானவை | அவன் மேய | அந்த எம்பெருமான் விரும்பி வாழ்த்திக்குமிடமாய் |
| என்னே கழன்ற | ஏனோ கழன்று போயினவே!; | அண்ணல் மலையும | சிறந்ததான திருவேங்கட மலையையும் |
| இவை என்ன மாயங்கள் | இவை என்ன ஆச்சரியம்!: | அரங்கமும் | திருவரங்கத்தையும் |
| பெ | பெண்குடியிலே பிறந்துள்ளநாம | பாடோமே | பாடுகைக்குத் தடையுடையராயிருக்கிறோமோ? |

* * *—திருவாய்மொழியில் (4—7—6) "நோக்கி நோக்கியுன்னைக் காண்பான் யானெனதாவியுள்ளே, நாக்குநீள்வன் ஞானமில்லை நாடோறுமென்னுடைய ஆக்கையுள்ளுமாவியுள்ளு மல்ல புறத்தினுள்ளும், நீக்கமின்றியெங்கும் நின்றாய் நின்னையறிந்தறிந்தே" என்ற பாசுரத்தின் கருத்தை ஈண்டு அறிந்து கொள்ளுதல் வேண்டும். எம்பெருமான் தம்முடைய ஸகல அவயவங்களிலும் புகுந்து நிற்கச் செய்தேயும் அதில் த்ருப்தி பெறாதே கண்ணால் காணப்பெறவேணுமென்று ஆசைப்பட்டு வருந்தின நம்மாழ்வாரைப்போலே இப்பராகால நாயகியும் தனது நெஞ்சினுள்ளே எம்பெருமான் உறையப்பெற்று வைத்தும் த்ருப்தியடையாதே விளையிழக்கிறாள் காண்மின்.

எம்பெருமான் தூரஸ்தனாயிருந்தால் விரஹம் பொறாதே மேனி மெலிந்து வருந்துதல் தகுதியே; அவன் என் மனத்தினுள்ளே யிருந்து ஸந்நிஹிதனாய் நிற்கச் செய்தேயும் இங்ஙனே என் மேனி மெலிவதற்கு என்னகாரணமோ? இது ஆச்

சரியான ஸம்பவமாயிருக்கின்றதே! என்கிறாள் முன்னடிகளில். பணப்பையிலே ஏராளமான பணம் கிடக்கச் செய்தேயும் புறங்கால் வீங்குவாரைப்போலேயாயிற்று இந்நாயகியின்படியும். *சங்கும் சக்கரமும் சிரித்த முகமும் தொங்கும் பதக்கங்களுமாய்க் கண்ணெதிரே வந்தருளி ஸேவை ஸாதியாமல் உள்ளே யுறைந்து மறைந்து கிடக்குமதனால் என்னபயன்? என நினைத்திருக்கிறாளாயிற்று.

பெண்ணானோம் பெண்மையோம்—பெண்ணாய்ப் பிறந்த நாம் பெண்மையை நன்றாகக் காப்பாற்றிக் கொண்டோமானாலும்; கண்ணன் மனத்துள்ளே நிற்கவும் கைவளை கழலப் பெறுகின்ற மகத்தும் பெண்மைக்கும் வெகுதூரமுண்டு என்றபடி. [நிற்க] இந்த விஷயமெல்லாம் ஒருபுறமிருக்கட்டும்; "குளிரருவி வேங்கடத்தென் கோவிந்தன் குணம்பாடி அளியத்த மேகங்காள்! ஆவி காத்திருப்பேனே" என்றாற்போலே உள்ளவரையில் ஆவியைக் காத்திருப்பதற்காக, அவன் விரும்பியுறையும் திவ்ய தேசங்களைப் பாடுகையில் ஒரு தடையுடையரா யிருந்தோமோ? கைவளைகள் கழன்றொழிந்தா லொழியட்டும்; பெண்மைக்குக் கேடு வந்தால் வரட்டும்; அவன் விரும்பியுறையும் திருமலையையும் திருவரங்கத்தையும் பாடுவோம் என்றாளாயிற்று.

மூன்றாமடிக்கு வேறு வகையாகவும் பொருள் கூறுவர்; பெண் ஆனோம்—பெண்ணாய்ப்பிறந்த நாம், பெண்மையோம் நிற்க—பெண்மைக் குணத்தை வழுவாதபடி யுடையராய்க்கொண்டு ஸத்தைபெற்று நிற்கும்படியாக—என்று. .... 7

பாடோமே யெந்தைபெருமானைப் பாடிநின் றாடோமே* ஆயிரம்பேரானைப்பேர்நினைந்து
சூடோமே* சூடுந்துழாயலங்கல்சூடிநாம் கூடோமே* கூடக்குறிப்பாகில்நன்னெஞ்சே! 8

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | நல்லமனமே! | நினைந்து | |
| எந்தை பெருமானை | எம்பெருமானை | சூடும் துழாய் அலங்கல் | அவன் சாத்திக்கொள்ளுகிற திருத்துழாய் மாலையை |
| பாடோமே | பாடமாட்டோமோ? | சூடோமே | அணிந்துகொள்ள மாட்டோமோ? |
| ஆயிரம பேரானை | ஆயிரந்திருநாமங்களையுடையனை அப் பெருமானை | சூடி | அப்படி அணிந்துகொண்டு |
| பாடிநின்று | பாடி | | அவனோடு கூடுகைக்கு |
| ஆடோமே | (மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாக) ஆடமாட்டோமோ? | குறிப்பு ஆகில் | உன் இசைவு உண்டாகில் |
| பேர் | (அவனது) திருநாமங்களை | நாம் கூடோமே | நாம் கூடப்பெற மாட்டோமோ? |

** "மந எவ மநுஷ்யாணாம் காரணம் பந்தமோக்ஷயோ:" என்று நன்மை தீமைகளுக்கு நெஞ்சமேயிறே காரணமாக சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டுள்ளது. "யானுமென் னெஞ்சு மிசைந்தொழிந்தோம்" என்கிறபடியே நெஞ்சு அநுகூலிக்கப் பெற்றதாகில் அருமையானதொன்றுமில்லை யன்றோ. இவ் விஷயமே இப்பாட்டில் வெளியிடப்படுகிறது.

இப்பாசுரம் நான்கு வாக்யார்த்தமாயிருக்கின்றது. 'நன்னெஞ்சே கூடக் குறிப்பாகில்' என்பதை ஒவ்வொரு வாக்யத்திலும் இயைத்துக் கொள்ளலாம். நெஞ்சமே! நீ இசைந்து வரப்பெறில் எம்பெருமானையே பாடிப் போதுபோக்குதல் அரிதோ? பாடினபாட்டு இருந்தவிடத்திலிருக்க வொட்டாதே "மொய்ம்மாம் பூம்பொழிற் பொய்கை." என்னும் திருவாய்மொழியிற்படியே ஸம்ப்ரமத்துடன் நர்த்தனம் பண்ணிப் போதுபோக்குதல் அரிதோ? *நாமமாயிரமேத்த நின்ற நாராயணனைச் சிந்தித்துக்கொண்டு அவன் சூடிக்களைந்த திருத்துழாய்மாலையை நாம் சூடப்

பெறுதல் அரிதோ? முடிவாக எம்பெருமானோடே கூடப்பெறுதல் தான் அரிதோ? நெஞ்சமே! நீ அநுகூலிக்கப் பெற்று வருவாயாகில் எதுவும் அரிதன்று காண் என்றாராயிற்று.

குறிப்பாகில் என்பதற்கு 'எம்பெருமானுக்குத் திருவுள்ளமாகில்' என்றும் பொருள் கூறுவர். எம்பெருமானுக்குத் திருவுள்ளமாகில் அரியதும் எளிதாகும்; அஃது இல்லையாகில் எளிதும் அரியதாகுமென்க. ... ... 8

**நன்னெஞ்சே! நம்பெருமான் நாளுமினிதமரும் * அன்னஞ்சேர் கானலணியாலிகைதொழுது ***
**முன்னஞ்சேர்வல்வினைகள்போகமுகில்வண்ணன் * பொன்னஞ்சேர்சேவடிமேற்போதணியப்பெற்றோமே.**

| | | | |
|---|---|---|---|
| நல் நெஞ்சே | நல்லமனமே ! | முன்னம் சேர் வல் வினைகள் போக | நெடுநாளாகச் சேர்ந்திருக்கிற கொடு வினைகளெல்லாம் நீங்குகைக்கு |
| நம்பெருமான் | நமக்கு ஸ்வாமியானவன் | முகில் வண்ணன் | காளமேக நிறத்தனான எம்பெருமானுடைய |
| நாளும் | எப்போதும் | பொன்னம் சேர் சேவடி மேல் போது | விரும்பத்தக்க திருவடிகளின் மேலுள்ள புஷ்பங்களை |
| அமரும் | திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்குமிடமாய் | அணியப் பெற்றோம் | அணிந்துகொள்ளுமாறு பாக்கியம் பெற்றோம். |
| அன்னம் சேர் கானல் | அன்னப்பறவைகள் சேர்ந்து வாழ்கிற நெய்தல் நிலங்களை யுடையதாய் | | |
| அணி | இவ்விபூதிக்கு அலங்காரமாயிருக்கின்ற | | |
| ஆலி | திருவாலியை | | |
| கை தொழுது | ஸேவித்து, | | |

* * *—ஆகாசம் பாராதே ஆறு கடவாதே மலையுமேறாதே நாமிருந்த திருவாலி நாட்டிலே எம்பெருமான் ஸந்நிதிபண்ணியிருக்கும்படியான பாக்கியம் பெற்றோமே; கைப்பட்ட பொருளைக் கணிசியாமல் கைக்கு எட்டாப் பொருளை ஆசைப்பட்டு உடம்பு வெளுக்க வேண்டாதே இருந்தவிடத்திலே தானே எம்பெருமான்றன் திருவடி மலர்களைச் சூடிப் புனிதராகப் பெற்றோமே' என்று உகப்போடே தலைகட்டுகிறது. இதுதானும் நெஞ்சு இசையப்பெற்றதனாலுண்டான பேறன்றோவென்று மூதுற நெஞ்சைக் கொண்டாடுகிறார். கீழ்ப்பாட்டில் நன்னெஞ்சே! என்றது—அநுகூலிக்கைக்காகக் கொண்டாடின கொண்டாட்டம்; இப்பாட்டில் நன்னெஞ்சே! என்கிறவிது அநுகூலித்ததற்குக் கொண்டாடுகிற கொண்டாட்டம். .... ... .... ... ... ... 9

**பெற்றாராராயிரம்பேரானை*பேர்பாடப்பெற்றான் கலியனொலிசெய்தமிழ்மாலை***
**கற்றாரோமுற்றுலகாள்வர்இவைகேட்க லுற்றார்க்கு * உறுதுயரில்லையுலகத்தே. 10**

| | | | |
|---|---|---|---|
| ஆயிரம் பேரானை | ஆயிரந்திருநாமங்களை யுடையனான எம்பெருமானுடைய | பெற்று ஆரார் | அந்த எம்பெருமானை லபித்தும் த்ருப்தியடையமாட்டார்கள் ; |
| பேர் | திருநாமங்களை | முற்று உலகு ஆள்வர் | உலகங்கள் முழுவதையும் ஆளப்பெறுவார்கள் ; |
| பாடப் பெற்றான் | பாடப்பெற்றவரான | இவை | இப்பாசுரங்களை |
| கலியன் | ஆழ்வார் | கேட்கல் உற்றார்க்கு | செவிதாழ்த்துக்கேட்டவர்களுக்கு |
| ஒலி செய் | அருளிச்செய்த | உலகத்தே | உலகமெங்கும் |
| தமிழ் மாலை | தமிழ்ச் சொல்மாலையாகிய இத்திருமொழியை | உறு துயர் | அநுபவிக்கக்கூடிய துக்கமொன்றுமில்லையாகும். |
| கற்றார் | கற்பவர்கள் | | |

* * *-பேருமாயிரம் பேசநின்ற பெருமானுடைய திருநாமங்களையே பாடிப் போதுபோக்கும்படியான பாக்யமுடையரான ஆழ்வார் அருளிச்செய்த இத்திருமொழியை அதிகரிப்பவர்கள் இவர் தம்மைப்போலவே ஆயிரம்பேரானைப் பேர் பாடப் பெற்று ஆராத காதலையுடையரா யிருப்பர்கள்; இவ்வளவேயல்லாமல் முற்றுலகையும் ஆளும்படியான செல்வச் சிறப்பும் பெற்றிடுவர்கள். இத் திருமொழியைக் கற்பவர்கட்கு மாத்திரமேயன்று பலன்; இதனைச் செவி தாழ்த்துக் கேட்க விரும்புமவர்கட்கும் அவசியம் அநுபவித்தே தீரவேண்டிய துயர்களும் தொலைந்திடும் என்று பயனுரைத்துத் தலைகட்டிற்றாயிற்று. ... 10

மூன்றாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

பதினோராம்பத்து—நான்காந் திருமொழி— நிலையிடமெங்குமின்றி.

அவதாரிகை:-"பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே." என்பது எம்பெருமானுடைய திருமுகப்பாசுரம். 'சிஷ்டர்களை ரக்ஷிப்பதற்கும் துஷ்டர்களைச் சிக்ஷிப்பதற்கும் அறநெறியை நிலைநாட்டுதற்கும் அடிக்கடி அவதாரங்கள் செய்து போருவேன்' என்றருளிச்செய்து வைத்தான். இதில் பகவதவதாரத்திற்கு மூன்று பிரயோஜனங்கள் சொல்லப்பட்டுள்ளன; [சிஷ்ட பரிபாலனம், துஷ்ட நிக்ரஹம், தர்மஸ்தாபனம் என்பன.] இவை மூன்றும் ஒரே பிரயோஜனமாகத் தலைக்கட்டக்கூடியது. எங்ஙனே யென்னில், "பரித்ராணாய ஸாதூநாம்" என்று முதலிலே சொல்லப்பட்ட சிஷ்ட ஸம்ரக்ஷணமாவது—அவர்களுடைய விரோதிகளைப் போக்கி அவர்களுக்கு அபிமதமான தர்மஸ்தாபநத்தைச் செய்துவைப்பதே யாம். ஆகையாலே "பரித்ராணாய ஸாதூநாம்" என்றதற்கே மற்றவையிரண்டும் விவரணரூபம் என்று கொள்ளத்தகும்.

இப்படிப்பட்ட சிஷ்டபரிபாலனம் செய்யவேண்டில், ஸங்கல்பமாத்திரத்தாலே ஸகல ஜகத்ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களையெல்லாம் அவலீலையாக நடத்தவல்ல எம்பெருமான் கர்ம வச்யரைப்போலே வந்து பிறக்கவேணுமோ? இருப்பிடத்திலிருந்து கொண்டே "சிஷ்டர்கள் வாழவேணும், துஷ்டர்கள் தலைமடிய வேணும்" என்று ஸத்ய ஸங்கல்பனான தான் ஸங்கல்பித்துவிட்டால் உத்தேசியம் எளிதாக நிறைவேறிவிடுமன்றோ? "அஜாயமாநோ பஹுதா விஜாயதே" என்றும் "எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றும் சொல்லுகிறபடியே பலபல யோனிகளிலே வந்து பிறக்க வேண்டுவானேன்? என்று சங்கையுண்டாகலாம்; திருவாய்மொழியில் (3—1—9) 'மழுங்காத வைநுதிய சக்கரநல் வலத்தையாய், தொழுங்காதல் களிறளிப்பான் புள்ளூர்ந்து தோன்றினையே, மழுங்காத ஞானமே படையாக மலருலகில், தொழும்பாயார்க்களித்தால் உன் சுடர்ச்சோதி மறையாதே" என்ற பாசுரத்தில் இந்த சங்கைக்குப் பரிஹார முணர்த்தப்பட்டது, அதாவது, ஸங்கல்ப மாத்திரத்திலும் எம்பெருமான் சிஷ்டபரிபாலனம் செய்யுமளவில் அடியார்கட்கும் த்ருப்திபிறவாது, எம்பெருமானுக்கும் த்ருப்தி பிறவாது; 'துஷ்டர்கள் மடிய வேணும், கர்மமார்க்கம் தழைக்கவேணும்' என்பது மாத்திரமே அடியார்களின் அபேக்ஷிதமன்று; "கூராழி வெண்சங்கேந்திக் கொடியேன்பால் வாராய்" என்றும் 'தாமரை நீள்வாசத் தடம்போல் வருவானே ஒருநாள் காணவாராயே"

என்றும் "கொம்மை முலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல், இம்மைப் பிறவி செய்யாதே இனிப்போய்ச் செய்யுந் தவந்தானென், செம்மையுடைய திரு மார்பில் சேர்த்தானேலு மொருநான்று, மெய்ம்மை சொல்லி முகம்நோக்கி விடை தான் தருமேல் மிகநன்றே" என்றும் கதறுகின்ற அடியார்களின் அபேக்ஷிதம் ஸங்கல்பத்தினால் தலைக்கட்டக்கூடியதோ? ஆண்களையும் பெண்ணுடை யுடுத்தச் செய்யவல்ல வடிவழகைக்காண வாசைப்பட்டார்க்கு ஸங்கல்பம் என்ன செய்யும்? *மீனமர் பொய்கை நாண்மலர் கொய்வான் வேட்கையினோடு சென்றிழிந்த கானமர் வேழமானது "நாராயணாவோ! மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய்" என்று கதறினது, முதலையின் வாயிற் கோட்பட்ட இடரை நீக்கவேணு மென்றோ? அஃதன்று; 'மிக வருந்திப் பறிக்கப்பட்ட இப்பூவை எம்பெருமா னுடைய திருவடிகளில் ஸமர்ப்பிக்கப் பெறுகின்றிலோமே!' என்ற இடரன்றோ கஜேந்திராழ்வானுக்கு உண்டாயது. இது ஸங்கல்பத்தினால் நீக்கக்கூடிய இடரன்றே.

எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைப் பார்த்தாலும் நேரே யெழுந் தருளி முகங்காட்டி ரக்ஷித்தாலல்லது த்ருப்திபெறாத ஸ்வபாவமுடையனா யிரா நின்றான்; மிக்க பெருஞ்சபை நடுவே துச்சாஸநனால் பரிபவிக்கப்பட்ட த்ரௌபதி 'கோவிந்த புண்டரீகாக்ஷ! ரக்ஷ மாம் சரணாகதாம்" என்று கூவினவுடனே புடவை சுரக்கு மாறு அருள்செய்து அவளுடைய அபேக்ஷிதத்தைத் தலைக்கட்டி யிருக்கச் செய்தேயும் 'அந்தோ! முகங்காட்டி மகிழ்விக்கப் பெற்றிலோமே!, அவளுக்கு நம்முடைய திருநாமம் காரியம் செய்ததேயன்றி நாம் நேர் நின்று உதவிசெய்யப் பெற்றிலோமே!' என்று திருவுள்ளம் புண்பட்டு, தன்னுடைச் சோதிக் கெழுந் தருளும்போதும் இது ஒரு பெரிய மனக்குறையாகவே யிருந்ததிறே.

ஆகவிப்படி ஆச்ரிதர்களின் த்ருப்திக்காகவும் தன்னுடைய த்ருப்திக்காகவும் அவதாரங்கள் செய்யவேண்டுவது எம்பெருமானுக்கு ஆவச்யகமாயற்றதாகையாலே "மீனோடாமை கேழலரி குறளாய் முன்னுமிராமனாய்த் தானாய்ப், பின்னு மிராமனாய்த் தாமோதரனாய்க் கற்கியுமானான்" என்கிறபடியே பல திருவவதாரங்கள் நிகழ்ந்தன வாயின. அவ்வவதாரங்களை இப்போது ஆழ்வார்க்கு நினைப்பூட்டி 'ஆழ்வீர்! ஆச்ரிதர்க்காக நாம் அவதரித்த அவதாரங்களை அநுஸந்தித்துத் தரிக்க மாட்டீரோ?' என்ன, ஆழ்வாரும் அப்படியே சில பகவதவதாரங்களைப் பாசுரந்தோறும் அநு ஸந்தித்துத் தரிக்கிறாராய்ச் செல்லுகிறது இத்திருமொழி ... .... *

நிலையிடமெங்குமின்றிநெடுவெள்ளமும்பர் வளநாடுமூடவிமையோர்*
தலையிடமற்றெமக்கோர்சரணில்லையென்ன அரணாவனென்னுமருளால்*
அலைகடல்நீர்குழம்பவகடாட வோடிஅகல்வானுரிஞ்சமுதுகில்*
மலைகளைமீதுகொண்டுவருமீனை மாலைமறவாதிறைஞ்சென்மனனே! 1

மனனே — என் நெஞ்சமே!,
எங்கும் நிலை இடம் இன்றி — நிலைத்து நிற்கைக்கு ஓரிடமு மில்லாமல்
நெடு வெள்ளம் — மஹாப்ரளய வெள்ளமானது
உம்பர் — மேலுலகத்தவர்களுடைய
வளம் நாடு — செழிப்புற்றிருந்த ஸ்தானங்களை
மூட — வியாபித்தவளவிலே
இமையோர் — தேவர்கள் (அஞ்சிநடுங்கி)
எமக்கு — "எங்களுக்கு
தலை இட — தலைவணங்கி யாசிக்க
மற்று ஓர் சரண் இல்லை — (உன் திருவடி தவிர) வேறொரு புகலிடமில்லை"
என்ன — என்று விண்ணப்பஞ் செய்து நமஸ்கரிக்க (அவ்வளவிலே)
அரண் ஆவன் என்னும் அருளால் — 'உங்களுக்கு நான் சரணமாகின்றேன்' என்று கொண்டகிருபையினாலே

| | |
|---|---|
| | (தேவர்கட்கு நிலையிடம் தருவதற்காக) |
| அலை கடல் நீர் குழம்ப | அலையெறிகின்ற ஸமுத்ர ஜலம் குழம்பாகும்படியாகவும் |
| அகடு | தனது வயிற்றிலே அலையெறியும்படியாகவும் |
| அகல் வான | அகன்ற ஆகாசத்திலே |
| ஓடி | (பிரமன் முதலியோருடைய குடியிருப்பிலே) சென்றோடி |
| உரிஞ்ச | விசும்படியாகவும் |
| முதுகில் | தன் திருமுதுகிலே |
| மலைகளை | மலைகளை |
| மீது கொண்டு | ஏறிட்டுக்கொண்டு |
| வரும் | வருகிற |
| மீனை மாலை | மத்ஸ்யரூபியான எம்பெருமானை |
| மறவாது | ஒருகாலும் மறவாமல் |
| இறைஞ்சு | வணங்குவாயாக. |

*—மத்ஸ்யாவதார வரலாற்றை அநுஸந்திக்கிற பாசுரம் பிரளயாபத்தில் நின்றும் பிரஜைகளைக் காத்தருளினதும், அசுரர் கவர்ந்து சென்ற வேதங்களை மீட்டு உபகரித்தருளினதும் மத்ஸ்யாவதார வரலாறு. பிரளயாபத்தில் நின்றும் ரக்ஷித்தருளின மஹோபகாரம் இப்பாசுரத்தில் பேசப்பட்டது. கூரத்தாழ்வானருளிய ஸுந்தரபாஹுஸ்தவத்தில் (தஸாவதார ஸ்தோத்ர ப்ரகரணத்தில்) "ப்ரலயஜநீர பூரபரிபூரி தஸ்வநிலயாவஸந்ந வதநேத்யாதி ச்லோகம் ஒசையின்பமும் பொருள் நயமும் ஒற்றுமைப்பட இப்பாசுரத்திற்கே சிறந்த மொழி பெயர்ப்பாக அமைக்கப் பட்டிருக்கின்றதென்பது இங்கு அறியத்தக்கது. இப்பாசுரத்தின் அடிதோறும் ஒற்று நீங்கலாக இருபத்துமூன்றெழுத்துக்கள் அமைந்திருப்பதற்கிணங்க அந்த ச்லோகத்திலும் பாதந்தோறும் இருபத்துமூன்று அக்ஷரங்கள் அமைந்திருப்பதும் அறியத்தக்கது.

'நிலையிடமெங்குமின்றி' என்றது நெடு வெள்ளத்திலும் அந்வயிக்கலாம், இமையோரிலும் அந்வயிக்கலாம்; நிலைகொள்ளலாவதோரிடமுமில்லாமல் ஆழங்காலாயிருக்கிற நெடுவெள்ளம் என்னவுமாம்; ஒரிடத்தில் நில்லாதே அலைந்துவருகிற நெடுவெள்ளம் என்னவுமாம். இனி இமையோர்களிடத்து அந்வயிக்கும்போது; நெடு வெள்ளமானது உம்பர் வளநாட்டை மூடினவளவிலே இமையோர்கள் [எங்கும் நிலையிடமின்றி] ஓரிடத்திலும் கால்பாவி நிற்கமாட்டாமல் என்பதாகப் பொருள்கொள்க. இமையோர்கட்கு நிலையிடம் அமைத்துக் கொடுப்பதற்காகவே எம்பெருமான் மீனாய்த் திருவவதரித்துக் கடலினுள்ளிருந்த குலமலைகளைத் திருமுதுகிற் சுமந்து கொண்டுவந்து வெளிப்படுத்தினனென்க.

'தலையிடமற்று' என்பதை 'தலை இட மற்று' என்றும் 'தலை இடம் அற்று' என்றும் பிரிக்கலாம். முந்தின யோஜனையில் இமையோர்களின் வார்த்தையாகும். 'இப்படிப்பட்ட மஹாப்ரளய ஆபத்தைப் போக்கவேணும்' என்று நாங்கள் ஒருவன் காலிலே தலையைமடுப்பதற்கு உன்னையொழிய வேறொரு நாதனையுடையோமல்லோம் என்று தேவர்கள் முறைப்பட, 'நான் இருக்க நீங்கள் அஞ்சவேணுமோ; நான் ரக்ஷிக்கிறேன்' என்று தன்னுடைய நிர்ஹேதுக க்ருபையாலே அருந்தொழில் செய்த எம்பெருமானை மனமே! ஒருநாளும் மறவாது இறைஞ்சு என்கிறார்.

"ஸர்வாதிகனான ஸர்வேச்வரன் தன்னுருக்கெடுத்து வேற்றுருக்கொண்டு அரியனசெய்து ரக்ஷியாநின்றான்; உனக்குச் செய்யவேண்டும் அருந்தேவை அவனை மறவாதிருக்கை; இத்தனையும் செய்யப்பாராய்; மறக்கவொண்ணாதசெயல்களை அவன் செய்யாநின்றால் நீ மறவாதிருக்க வேண்டாவோ?" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் காண்க. ... .... ... ... 1

செருமிகுவாளெயிற்றஅரவொன்றுசுற்றித் திசைமண்ணும்விண்ணுமுடனே*
வெருவரவெள்ளைவெள்ளமுழுதுங்குழம்ப இமையோர்கணின்றுகடைய*
பருவரையொன்றுநின்று முதுகிற்பரந்துசுழலக்கிடந்துதுயிலும்*
அருவரையன்னதன்மை யடலாமையானதிருமால்நமக்கோரரணே. 2

| | |
|---|---|
| செரு மிகு | வலிமிக்கதாய் |
| வாள | ஒளிபொருந்தியதான |
| எயிற்ற | பற்களையுடைய |
| அரவு ஒன்று | வாஸுகி நாகத்தை |
| சுற்றி | (கடைகயிறாகச்) சுற்றி |
| திசை | திக்குக்களிலுள்ளாரும் |
| மண்ணும் | பூமியிலுள்ளாரும் |
| விண்ணும் | மேலுலகங்களிலுள்ளாரும் |
| உடனே | ஏகரூபமாக |
| வெருவர | அஞ்சி நடுங்கும்படியாகவும் |
| வெள்ளை வெள்ளம் முழுதும் | திருப்பாற்கடலடங்கலும் |
| குழம்ப | குழம்பாகும்படியாகவும் |
| இமையோர்கள் | தேவர்கள் |
| நின்று கடைய | நின்று கடைவதற்குப் பாங்காக |
| பரு வரை ஒன்று | பெரியதொரு மலையானது |
| முதுகில் | தனது முதுகிலே |
| பரந்து நின்று | பரம்பி நின்று |
| சுழல | சுழலும்படியாக |
| கிடந்து | அந்த மலையின் கீழே கிடந்து |
| துயிலும் | சாய்ந்துகிடவா நின்ற |
| அரு வரை அன்ன தன்மை | பெரியதொரு மலை சாய்ந்து கிடக்கிறாப் போன்றுள்ள |
| அடல் | வலிமைகொண்ட |
| ஆமை ஆன | கூர்மரூபியான |
| திருமால் | எம்பெருமான் |
| நமக்கு | நமக்கு |
| ஓர் அரண் | ஒப்பற்ற ரக்ஷகன். |

* * *—கூர்மாவதார வரலாற்றைப் பேசும் பாசுரம் — துர்வாஸ மஹாமுனியின் சாபத்தினால் தேவர்களின் செல்வம் யாவும் ஒழியவே அசுரர் வந்து பொருது அமரரை வென்றிட, பின்பு இந்திரன் தேவர்களோடு வந்து திருமாலைச் சரணமடைந்து அப்பிரான் அபயமளித்துக் கட்டளையிட்டபடி அசுரர்களையுந் துணைக்கொண்டு மந்தரமலையை மத்தாகநாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டிப் பாற்கடலைக் கடையுமிடத்து, மத்தாகிய மந்தரகிரி கடலினுள்ளே அழுந்திவிட, தேவர்களின் வேண்டுகோளினால் பெரியதோர் ஆமை வடிவமெடுத்து அம்மலையின் கீழே சென்று அதனைத் தனது முதுகின்மீது கொண்டு தாங்கி அம்மலை கடலில் அழுந்திவிடாமல் கடைதற்கு உபயோகமாம்படி அதற்கு ஆதாரமாக எழுந்தருளியிருந்த திருமால் நமக்கு நிகரற்ற ரக்ஷகன் என்றதாயிற்று.

"மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால், மின்னுமிருசுடரும் விண்ணும் பிறங்கொளியும், தன்னினுடனே சுழல மலைதிரித்து ஆங்கு, இன்னமுதம் வானவரை யூட்டி அவருடைய மன்னுந்துயர் கடிந்த வள்ளலை' என்ற பெரிய திருமடல் இங்கு நோக்கத்தக்கது. ... ... .. ... 2

தீதறுதிங்கள்பொங்குசுடரும்பருமபருலகேழினொடுமுடனே*
மாதிரமண்சுமந்தவடகுன்றுநின்றமலையாறுமேழுகடலும்*
பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தினொருபாலொடுங்கவளர்சேர்*
ஆதிமுனேனமாகியரணாயமூர்த்தியதுநம்மையாளுமரசே. 3

| | |
|---|---|
| தீது அறு | குற்றமற்ற |
| திங்கள் | சந்திரனும் |
| பொங்கு சுடர் | தபிக்கின்ற தேஜஸ்ஸையுடைய ஸூர்யனும் |
| உம்பர் | தேவர்களும் |
| உம்பர் உலகு ஏழினொடும் | மேலுலகங்களேழும் |
| மாதிரம் | திசைகளும் |
| மண் சுமந்த வட குன்று | பூமியைத் தரிக்கின்ற மேரு பர்வதமும் |
| நின்ற மலை ஆறும் | மிச்சமான குலபர்வதங்களாறும் |
| ஏழு கடலும் | ஸப்த ஸாகரங்களும் (ஆகிய இவையெல்லாம்) |
| பாதம் அமர் | திருவடிகளிலே பொருந்தியுள்ள |
| சூழ் குளம்பின் | பரம்பிய திருக்குளம்பினுடைய |

| | | | |
|---|---|---|---|
| அகம் மண்டலத்தின் | உன் வலயத்தின் | முன் | வராஹகல்பாதியிலே |
| ஒருபால் | ஏகதேசத்திலே | ஏனம் ஆகி | மஹாவராஹரூபியாய் |
| ஒடுங்க | அடங்கும்படி | அரண் ஆய | ரக்ஷகனாய் நின்ற |
| வளர் | வளரா நிற்பவனாய் | மூர்த்தி அது | அந்த ஸ்வாமியே |
| சேர் | தகுதியான | நம்மை ஆளும் அரசு | நம்மை அடிமைகொள்ள வல்ல பிரபு. |
| | காரணபூதனாய் | | |

* * *—வராஹாவதாரத்தை அநுபவித்துப் பேசுகிறார். ஹிரண்யகசிபுவின் உடன் பிறந்தவனான ஹிரண்யாக்ஷனென்னுங் கொடிய அசுரன் தன்வலிமையாற் பூமியைப் பாயாகச் சுருட்டி யெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிச் சென்றபோது தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளினால் திருமால் மஹாவராஹரூபியாய்த் திருவவதரித்துக் கடலினுட்புக்கு அவ்வசுரனை நாடிக் கண்டு பொருது கோட்டினாற்குத்திக் கொன்று பாதாள லோகத்தைச் சார்ந்திருந்த பூமியைக் கோட்டினாற்குத்தி அங்கு நின்றும் எடுத்துக்கொண்டு வந்து பழையபடி விரித்தருளினன் என்றும், இப்பொழுது நடக்கிற ச்வேதவராஹகல்பத்துக்கு முந்தின பாத்மகல்பத்தைப் பற்றிய பிரளயத்தின் இறுதியில் ஸ்ரீமந்நாராயணன் ஏகார்ணவமான பிரளய ஜலத்தில் முழுகியிருந்த பூமியை மேலேயெடுக்க நினைத்து மஹாவராஹரூபியாகிக் கோட்டு நுனியாற் பூமியை யெடுத்து வந்தனனென்றும் வராஹாவதாரத்தைப்பற்றி வரலாறுகள் கூறப்படும். அந்த வராஹநாயனாருடைய திருமேனிப் பெருமையை இதில் வருணிக்கிறார். அண்டபித்தியிற் சார்ந்து கிடந்த பூமிப் பிராட்டியை அங்குநின்று ஒட்டுவிடுவித் தெடுக்கும்போது மேருமலை முதலிய பெரும் பெருத்த வஸ்துக்களெல்லாம் (வராஹமூர்த்தியின்) குளம்பில் ஒடுங்கிப் போம்படி மிகப் பெரிய வராஹத் திருவுருவெடுத்ததாகப் புராணங்கள் கூறும். "சிலம்பினிடைச் சிறுபரல்போல் பெரியமேரு திருக்குளம்பில் கண கணப்பத் திருவாகாரங் குலுங்க, நிலமடந்தைதனை யிடந்து புல்கிக் கோட்டிடை வைத்தருளிய வெங்கோமான் கண்டீர்" என்றார் திருத்தெற்றியம்பலத் திருப்பதிகத்திலும். பெரிய வடிவுகொண்டு உலகளந்த காலத்து மிக விசாலமான அத்திருவடிக்குப் பர்யாப்தமாயிருந்த பூமியானது வராஹாவதார காலத்தில் எயிற்றின் ஏகதேசத்திலும் அடங்காதிருந்த விசித்திரம் என்கொல்! என்று வியந்து பேசிய "வராகத்தெயிற்றளவு போதாவாறென்கொலோ எந்தை, அடிக்களவு போந்தபடி" என்ற பொய்கையார் பாசுரமுங் காண்க. ஸ்ரீமத் வேதாந்த தேசிகனும் வரதராஜ பஞ்சாசத் ஸ்தோத்ரத்தில் *தஸ்யைவ தத் வரத! ஹந்த கதம் ப்ரபூதம் வாராஹ மாஸ்திதவதோ வபுரத்புதம் தே* என்று வராஹாவதாரத்தின் பெருமையில் ஈடுபட்டுப் பேசின ச்லோக முணர்க.

சந்திரன் ஸூரியன் முதலிய ஸகல பதார்த்தங்களும் திருவடிக் குளம்பின் ஏகதேசத்திலே ஒடுங்கும்படியாக மிக வளர்ந்த வராஹநாயனார் நம்மை ஆளவல்ல பிரபு என்றாராயிற்று.

பாதம் + அமர்; பாதமமர் எனச் சந்தியாக வேண்டுமிடத்துப் பாதமர் என்றானது தொகுத்தல். ... ... 3

நினையவிழ்கோலந்தமாலை இருபால்தயங்க எரிகான்றிரண்டுதறுகண்*
அனையவெழுவெம்மைமிக்க அரியாகியன்றுபரியோன்சினங்களவிழ*
வளையுகிராளிமொய்ம்பின் மறவோனதாகம்மதியாதுசென்றொருகிரால்*
பிளவெழவிட்டகுட்டமதுவையமூடு பெருநீரின்மும்மைபெரிதே.

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில் | வளை உகிர் ஆளி | வளைந்த திருநகங்களை யுடையனுய்க் கொண்டு |
| தளை அவிழ் கோதை மாலை | கட்டு அவிழ்கின்ற [விகஸிக்கின்ற] பூமாலையானது | மொய்ம்பில் மறவோனது | வலிமையோடு கூடி த்வேஷத்தை யுடையனான இவ்விரணியனது |
| இருபால் | இரண்டு பக்கத்திலும் | | |
| தயங்க | அசைந்து விளங்க, | | |
| எரி கான்ற | அழலை உமிழா நின்றுள்ள | ஆகம் | -லை |
| இரண்டு தறுகண் | வட்டணித்த இரண்டு திருக்கண்களும் | மதியாது சென்று | ஒருபொருளாக நினைக்காமல் கிட்டி |
| அளவு எழ | அளவு கடந்து மலர(ப் பெற்ற) | ஒரு உகிரால் | ஒரு திருநகத்தாலே |
| | | பிளவு எழ | இரண்டு பிளவாம்படி செய்த தனுலுண்டான |
| வெம்மை மிக்க அரி ஆகி | பயங்கரமான நரஸிம்ஹ ரூபியாய் | குட்டம் அது | ரக்தமடுவானது |
| பரியோன் | ஸ்தூலகாயனான இரணியனுடைய | வையம் | இவ்வுலகத்தையெல்லாம் வியாபிக்கின்ற |
| சினங்கள் | பகவத் பாகவத விஷயங்களிலுண்டான மாச்சரியமெல்லாம் | பெரு நீரில் | பிரளயப்பெருவெள்ளத்திற் காட்டில் |
| அவிழ | குலையும்படியாக | மும்மை பெரிது | மும்மடங்கு பெரிதாயிருந்தது! |

* * *—நரஸிம்ஹாவதாரத்தை அநுபவித்துப் பேசுகிறார். ஆச்ரித விரோதியான ஹிரண்யகசிபுவுக்குக் குடல் குழம்பும்படி பயங்கரமான வடிவத்தை ஏற்றுக்கொண்டு வரச் செய்தேயும் பக்தசிகாமணியான ப்ரஹ்லாதாழ்வானுக்குக் கண் குளிர ஸேவைஸாதிக்க விரும்பிப் பரமபோக்யமான பூமாலையை அணிந்துகொண்டு வந்து தோன்றினன் நரஸிம்ஹ பகவான் என்கிறார் 'தளையவிழ் கோதைமாலை இருபால் தயங்க' என்றதனுல். 'தளையவிழ்' என்றது விகஸித்தலைச் சொன்னபடி. "கட்டு நெகிழா நின்றுள்ள தொடைகொள்மாலை பூமாலை யென்னு மிவை இரண்டருகும் அசைந்துவர" என்பது வியாக்யான வருளிச்செயல்.

எரிகான்ற+இரண்டு, எரிகான்றிரண்டு; தொகுத்தல். உண்டான சீற்றம் ப்ரஹ்லாத விரோதியான இரணியனளவில் மாத்திரமேயன்றி 'உலகங்களெல்லாம் இப்போதே உபஸம்ஹாரம் விளைந்திடுமோ!' என்று அனைவரும் அஞ்சி நடுங்கும்படி அளவுமீறி யிருந்ததனுல் 'அளவெழ வெம்மைமிக்க அரியாகி' என்றது.

'பரியோன் சினம் அவிழ' என்னுதே 'சினங்கள்' என்று பன்மையாகச் சொன்னது இரணியனுக்கு பகவத் பாகவத விஷயங்களில் பலவகைப்பட்ட சீற்றம் இருந்தமையைக் காட்ட.

'வளையுகிராளி' என்றது நரஸிம்ஹமூர்த்திக்கும் விசேஷணமாகலாம் இரணியனுக்கும் விசேஷணமாகலாம். வளைந்த நகங்களை யுடைத்தாயிருக்கை அசுரனுக்கும் சிங்கத்துக்கும் ஒக்கும்.

இரணியனுடைய மார்பை இருபிளவாகக் கிழித்தபோது உண்டான ரக்தப் பெருக்கு மஹாப்ரளய வெள்ளத்திற்காட்டிலும் மும்மடங்கு பெரிதாயிருந்தது என்றதாயிற்று.

'வையம் ஊடு' என்று பிரித்து வையத்தினுள் என்னவுமாம். .... 4

வெந்திறல்வாணன்வேள்வியிடமெய்தி அங்கோர்குறளாகிமெய்ம்மையுணர*
செந்தொழில்வேதநாவின்முனியாகி வையமடிமூன்றிரந்துபெறினும்*
மந்தரமீதுபோகிமதிநின்றிறைஞ்ச மலரோன்வணங்கவளர்சேர்*
அந்தரமேழினூடுசெலவுய்த்தபாத மதுநம்மையாளுமரசே. 5

| | | | |
|---|---|---|---|
| வெந்திறல் | கொடியவலிமையையுடையனான | இரந்து | யாசித்து |
| வாணன் | மஹாபலியினுடைய | பெறினும் | பெற்றவாறே |
| வேள்வி இடம் | யாகபூமியிலே | மந்தரம் மீது போகி | மந்தரத்துக்கு மேலேபோய் அளாவி |
| அங்கு ஓர் குறள் ஆகி | விலக்ஷண வாமனமூர்த்தியாய்க் கொண்டு | மதி நின்று இறைஞ்ச | சந்திரன் நின்று தொழும்படியாகவும் |
| எய்தி | எழுந்தருளி | மலரோன் | நான்முகக்கடவுள் |
| உணர | 'இவன் மெய்யான யாசகன்' என்று மாவலி தெரிந்துகொள்ளுமாறு | வணங்க | வணங்கும்படியாகவும் |
| | | வளர் சேர் | வளர்ந்து செல்லுவதாய் |
| செந்தொழில் வேதநாவின் முனி ஆகி | நல்ல அநுஷ்டானங்களில் உபயோகப்படுகின்ற வேதத்தை நாவினால் உச்சரிக்கும் [illegible] நின்று | அந்தரம் ஏழின் ஊடு | மேலுலகங்களேழினுள்ளும் |
| | | செல உய்த்த பாதம் அது | செல்லும்படி நடத்தப்பெற்ற அந்தத்திருவடியானது |
| மூவடியை | மூவடி நிலத்தை | நம்மை அரசு ஆளும் | நம்மை ரக்ஷிக்கக் கடவது |

* * *—வாமநாவதாரத்தையும் த்ரிவிக்ரமாவதாரத்தையும் ஒருங்கே அநுபவித்துப் பேசும் பாசுரம் இது. மாவலி ஔதார்யத்தில் மிக்க ப்ரஸித்திபெற்றிருக்கச் செய்தேயும் தேவர்களின் குடியிருப்பை அழிக்கும்படியான மிக்கதிறல் கொண்டிருந்ததனால் 'வெந்திறல் வாணன்' எனப்பட்டது. அவனுடைய யஜ்ஞபூமியில் வாமநமூர்த்தி யெழுந்தருளும்போது "*ஸ்வாத்யாயஸ்வரஸம்பதா பரிஷதாம் ப்ரீதிம் ஸமாதந்வதம்*" என்கிறபடியே வேத வாக்கியங்களை ஆவ்ருத்தி செய்து கொண்டே யெழுந்தருளினமையால் "வேதநாவின் முனியாகி" என்றது. 'இவன் உண்மையான ப்ரஹ்மசாரிதான்; யாசகஞ்செய்யவே வந்திருக்கிறான்' என்று மாவலி நினைக்கும்படியாகச் செய்தபடியைச் சொன்னதால் 'மெய்ம்மையுணர' எனப்பட்டது.

செந்தொழில் வேதம் = யஜ்ஞம் முதலிய நல்ல அநுஷ்டானங்களுக்கு உபயோகப்படுகிற வேதம் என்றபடி. முன்னடிகளிரண்டாலும் வாமநாவதாரச் செயலைப் பேசிப் பின்னடிகளால் த்ரிவிக்ரமாவதாரச் செயலைப் பேசுகிறார். இப்பின்னடிகளையே திருநெடுந்தாண்டகத்தில் "ஒண்மிதியிற் புனலுருவியொருகால் நிற்ப வொருகாலுங் காமருசீரவுணனுள்ளத்து, எண்மதியுங் கடந்தண்டமீது போகி இருவிசும்பினூடு போயெழுந்து, மேலைத் தண்மதியுங் கதிரவனுந் தவிர வோடித் தாரகையின் புறந்தடவி அப்பால் மிக்கு, மண்முழுது மகப்படுத்து நின்ற வெந்தை மலர்புரையுந் திருவடியே வணங்கினேனே" என்ற பாசுரத்திற் பன்னியுரைத்திருப்பது காண்க.

ஆழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் *ஸ்ரீரங்கராஜ சரணௌ ப்ரணுமோ யயோ: கலு* என்ற ச்லோகத்தினால் கீழுலகங்களையெல்லா மளந்த வொரு திருவடியைப் பேணிப் பேசினார்; இப்பாசுரத்தில் மேலுலகங்களை யளந்த ஒரு திருவடியைப் பேணிப் பேசினாராழ்வார் என்க. ... ... ... 5

இருநிலமன்னர்தம்மை யிருநாலுமெட்டு மொருநாலுமொன்று முடனே*
செருநுதலூடுபோகி யவராவிமங்க மழுவாளில்வென்ற திறலோன்*
பெருநிலமங்கைமன்னர் மலர்மங்கைநாதர் புலமங்கைகேள்வர் புகழ்சேர்*
பெருநிலமுண்டுமிழ்ந்த பெருவாயராகியவர் நம்மையாள்வர் பெரிதே.

| | |
|---|---|
| இரு நிலம் மன்னர் தம்மை | பரம்பின இப்பூமண்டலத்திலிருந்த அரசர்களின் |
| இருநாலும் எட்டும் ஒரு நாலுடனே ஒன்றும் | இருபத்தொரு தலைமுறையளவும் |
| செரு நுதலூடு போகி | பூசற்களத்தின் முகப்பிலே சென்று |
| அவா மங்க | அவ்வரசர்களின் உயிர் முடியும்படியாக |
| மழு வாளில் | கோடாலிப்படையினால் |
| வென்ற | கொன்றொழித்த |
| திறலோன் | மிடுக்கையுடையராய் |
| பெரு நிலம் மங்கை மன்னர் | பூமிப்பிராட்டிக்கு நாயகராய் |
| மலர் மங்கை நாதர் | பெரிய பிராட்டியார்க்கும் நாதராய் |
| புலம் மங்கை கேள்வர் | தன்னுடைய ஸகலேந்திரியங்களையும் இழுக்க வல்ல நீளா தேவிக்கும் நாயகராய் |
| புகழ் சேர் | மஹாயசஸ்வியாய் (பிரளயகாலத்திலே) |
| பெரு நிலம் | பூமியை முழுதும் |
| உண்டு | திருவயிற்றில் வைத்து நோக்கி |
| உமிழ்ந்த | பின்பு வெளிப்படுத்தியருளின |
| பெரு வாயர் ஆகியவர் | பெரிய திருவாயையுடையரான பெருமாள் |
| பெரிதே | மேலுள்ள மஹாகாலமெல்லாம் |
| நம்மை ஆள்வர் | நம்மை அடிமைகொள்வர். |

* * *—பரசுராமாவதாரத்தைப் பேசும் பாசுரம் இது. கார்த்தவீரியார்ஜுநன் செய்த குற்றங் காரணமாக, உலகில் க்ஷத்ரியரென்று பேர்பெற்றாரெல்லாரும் முடியும்படி இருபத்தொருபடிகால் க்ஷத்ரிய குலத்தை யறுத்தொழித்த கோடாலிப் படையைக் கையிலேந்தினவனும் ஸ்ரீ பூமி நீளாதேவிக்குக் கொழுநனும், திருக்கல்யாண குணங்களினாலுண்டான கீர்த்திக்குக் கொள்கலமாயிருப்பவனும், ஒரு காலத்தில் ஸகல லோகங்களையும் திருவயிற்றிலே வைத்து ரக்ஷித்தவனுமான பெருமான் நீடூழி நம்மை அடிமைகொள்வனென்றதாயிற்று.

முமுக்ஷுக்களுக்குப் பரசுராமாவதாரம் உபாஸனைக்கு உரியதன்றாகிலும் விரோதிகளைக் களைந்தொழித்த உபகாரத்துக்குத் தோற்றுத் துதிப்பதில் குறையில்லை யென்க. ஆழ்வார்கள் இப் பரசுராமாவதாரத்தைப் பற்றிப் பேசுவதும், இராமாநுச நூற்றந்தாதியில் "கோக்குல மன்னரை மூவெழுகால் ஒரு கூர் மழுவால் போக்கிய தேவனைப் போற்றும் புனிதன்.........இராமாநுசன்" என்று அமுதனார் அருளிச்செய்வதும் விரோதி நிரஸநஸ்வபாவத்துக்குத் தோற்றுத் துதிப்பது மாத்திரமே யென்க. ... ... ... ... 6

**இலைமலிபள்ளியெய்தியிதுமாயமென்ன இனமாயமான்பினெழில்சேர்***
**அலைமலிவேற்கணாளை யகல்விப்பதற்கோருருவாயமானையமையா***
**கொலைமலிவெய்துவித்தகொடியோனிலங்கை பொடியாகவென்றியமருள்***
**சிலைமலிசெஞ்சரங்கள்செலவுய்த்த நங்கள்திருமால்நமக்கோரரணே.** 7

| | |
|---|---|
| இலை மலி பள்ளி எய்தி | பர்ணசாலையினருகே வந்து |
| எழில் சேர் | மிக்க அழகையுடையளாய் |
| அலை மலி வேல் க | துன்பப்படுத்துமியல்வு பொருந்திய வேல் போன்ற திருக்கண்களையுடையளான பிராட்டியை |
| அகல்விப்பதற்கு | பிரிப்பதற்காக |
| இனம் ஆய மான் பின் | ஸஜாதீயமான மான்களின் பின்னே |
| இது மாயம் என்ன | 'இது ஆச்சரியமான மான்' என்று சொல்லும்படியாக |
| ஓர் உரு ஆய | விலக்ஷணமான ரூபத்தை யேறிட்டுக்கொண்டு வந்த |
| மானை | (மாரீசனாகிற) மாயமானை |
| அமையா | நிரஸித்து, |

| | | | |
|---|---|---|---|
| கொலை பழிவு எய்துவித்த கொடியோன் | பிராட்டியையே தன் னிடத்துப் பூர்த்தியாகக் கொண்டிருந்த கொடிய ராவண னுடைய | வென்றி அமருள் | வெற்றிப் போர்க்களத்திலே |
| | | சிலை மலி செம் சரங்கள் | வில்லிலே நிறைந்த செவ்விய அம்புகளை |
| | | செல உய்த்த | பிரயோகித்த |
| இலங்கை | லங்காபுரியானது | நங்கள் திருமால் | எம்பெருமான் |
| பொடி ஆக | பொடிபடும்படி | நமக்கு ஓர் அரண் | நமக்கு ஒப்பற்ற சரண்யன். |

* * *—ஸ்ரீராமாவதாரத்தைப்பற்றிப் பேசும் பாசுரம் இது. மாயமான் வடிவெடுத்து வந்த மாரீசனையும் இராவணனையுங் கொன்றொழித்த வரலாறுகள் இதிற் கூறப்பட்டன.

பிராட்டி இராமனைப் பிரிந்து பட்ட வருத்தங்கட்கெல்லாம் மூலகாரணம் மாரீசனென்கிற மாயமானே யாதலால் கொடியோன் என்ற விசேஷணத்தை இந்த மானுக்கு இடவேண்டியிருக்க இடாதது மாரீசனிடத்துள்ள நன்றியறிவினால் என்றுணர்க; மஹாத்ரோஹியான மாரீசனிடத்தில் நன்றிபாராட்டுதல் ஏதுக்கென்னில்; கேண்மின்: சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு, ஜனஸ்தானத்திலிருந்த தமையனாகிய கரன் பக்கல் சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினவளவில் அக் கரன் பதினாலாயிரம் சேனைபதிகளையும் சேனைகளையும் இராமபிரானோடு போர்செய்ய அனுப்ப, இராமன் அவர்களத்தனை பேரையும் தாம் ஒருவராகவே கொன்று வென்றிட்டு, பிறகு வந்த கரனையும் கொன்றுவிட்டு ஜனஸ்தானத்தை சூன்யமாக்கினபோது, அங்கு இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளித்து ஓடிப்போன அகம்பநன் இலங்கைக்குச் சென்று ஜனஸ்தானமடங்கலும் பாழ்பட்ட செய்தியையும் இராமன் ஒருவராலும் வெல்லமுடியாதவனென்பதையுஞ் சொல்லி 'ஸீதையை அபஹரித்துக் கொண்டு வந்தால் அந்த வருத்தத்தினால் இராமன் முடிந்துவிடக்கூடும்' என்று தெரிவிக்க, இராவணன் அவனது சொற்படியே 'ஸீதையைக் கொள்ளை கொள்ள உபாயமென்?' என்று யோசித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்து 'நீ எனக்கு ஒருதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட, அதுகேட்ட மாரீசன் 'அப்பா! இராவணா! அந்த மஹாநுபாவனுடன் உனக்குப் பகை பயனபடாது; இந்த இராமன சிறுபிள்ளையா யிருக்கும்பொழுதே விச்வாமித்ர யாகத்தில் அவனுடைய பாணத்துக்கு இலக்காகி நான்பட்ட பாடு இன்னும் மறக்கமுடியவில்லை; அத்திருநாமம் செவிப்படும் போதே என் உடல் நடுங்குகின்றது, இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று யுக்தமாக உபதேசிக்க, அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான்; பிறகு சூர்ப்பணகை இலங்கைக்குச் சென்று, தான் மூக்கறுப்புண்டபடியையும் தாசரதிகளுடைய ஸௌந்தர்யபராக்ரமாதி குணங்கள் எல்லையற்றிருக்கிறபடியையும் ஸீதையின் இருப்பையுஞ் சொல்லி 'இராமனை நீ எவ்விதத்திலாவது பங்கஞ் செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்ல' என்று கூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடஞ் சென்று நயபயங்களினால் அவனைத் தன் சொல்வழிப்படுத்திக்கொண்டு அம்மாரீசனுந் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தான் ஓரிடத்தில் ஒளித்திருந்தான். மாரீசன் இராவணனுடைய வலிகட்டாயம் பொறுக்கமாட்டாமல் மனம் நொந்துகொண்டே உடன்பட்டு நாம் காரியஞ் செய்யாவிடில் இவன் நம்மைக் கொலைசெய்யப் போகிறான்; இவனுக்கு உடன்பட்டுக் காரியஞ் செய்தோமாகில் இராமபிரான் நம்மைக் கொன்றுவிடப் போகிறார்; இப்பாவியின் கையில் நாம் கொலையுண்பதிற்காட்டிலும் அப் பரமபுருஷன் கையிற் கொலையுண்பது நற்கதிக்கு ஹேதுவாம்' என்றெண்ணித் தன்

மரணத்தைத் தீர்மானித்துக் கொண்டே வந்தானத்தனை. பிறகு மாரீசன் பொன் மானின் வடிவெடுத்துக்கொண்டு வந்து ஸீதையின் பார்வையில் மேயத்தொடங்கி, அக்காட்டில் நெடுந்தூரம் இராகவனை இழுத்துக்கொண்டு போய்விட்டான்; அப்பொழுது இராகவன் ‘இவன் யாரோ அரக்கன்’ என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார்; அதனால் அடியுண்ட மாரீசன் மானுருவை விட்டு நிஜ ரூபத்துடன் கீழேவிழுந்து ‘ஹா லக்ஷ்மணா! ஹா ஸீதே! கெட்டேன்’ என்று இராகவனைப்போல் கூச்சலிட்டுக்கொண்டு மரணமடைந்தான்; இங்கு நாம் ஆலோசிக்க வேண்டியதென்னவென்றால், இப்படி இவன் கூச்சலிட்டது இராவணனுக்கு உபகாரஞ் செய்யவேணுமென்கிற எண்ணத்தினாலோ? அபகாரஞ் செய்யவேணுமென்கிற எண்ணத்தினாலோ? என்று ஆராயவேண்டும்; இராவணன்கையாற் கொலையுண்பதைவிட இராமபாணத்தாற் கொலையுண்டு முடிதல் நன்று’ என்கிற எண்ணத்தோடு வந்த மாரீசனுக்கு இராவணன் திறத்தில் உபகாரஞ் செய்யவேணுமென்கிற எண்ணம் உண்டாக ப்ரஸக்தியில்லை. ‘நாம் மாண்டொழிவதுபோல் அனைவரையும் மாண்டொழியச் செய்துவிடவேண்டு’ மென்ற எண்ணங்கொண்டே இராகவனைப்போல் கூச்சலிட்டான்; மாரீசன் இப்படி கூச்சலிடாமல் வெறுமனே செத்திருப்பானாகில் பிராட்டி லக்ஷ்மணனைப் பிரிய நேர்ந்திராது; இராவணன் பிராட்டியைக் கவர்ந்து கொண்டு போகவும் அது நிமித்தமாகத் தான் மாண்டு போகவும் நேர்ந்திராது; தேவர்களின் பிரார்த்தனை ஈடேறவும் வழியிராது; மரண காலத்தில் மாரீசன் போட்ட கூச்சலே ராவண ஸம்ஹாரத்திற்கு மூலகாரணமாக நின்றமையால் ஸ்ரீராமவிஷயத்திலே மாரீசன் உபகாரகனேயன்றி அபகாரனல்லன் என்று உணரத்தக்கது. ... ... ... ... 7

முன்னுலகங்களேழுமிருள்மண்டியுண்ண முதலோடுவீடுமறியாது*
என்னிதுவந்ததென்னவிமையோர்திசைப்ப எழில்வேதமின்றிமறைய*
பின்னையும்வானவர்க்கும்முனிவர்க்கும் நல்கியிருள்தீர்ந்திவ்வையமகிழ*
அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்த அதுநம்மையாளுமரசே. 8

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்பொருகால் | பின்னையும் | மீண்டும் |
| உலகங்கள் ஏழும் | ஸகல லோகங்களையும் | வானவர்க்கும் | தேவர்களுக்கும் |
| | | முனிவர்க்கும் | மஹர்ஷிகளுக்கும் |
| இருள் | அஜ்ஞான அந்தகாரம் | நல்கி | அருள்கூர்ந்து |
| மண்டி உண்ண | வியாபிக்கும்படியாகவும் | இ வையம் | இவ்வுலகமானது |
| இமையோர் | தேவர்கள் | இருள் தீர்ந்து மகிழ | இருளால் விடுபட்டு ஆநந்திக்கும்படியாக |
| முதலோடு வீடும் அறியாது | ஆதியுமந்தமுமறியாமல் | அன்னம் அது ஆய் இருந்து | ஹம்ஸரூபியாய்த் திருவவதரித்து |
| என் இது வந்தது என்ன | ‘திடீரென்று இப்படியான விது என்னோ?’ என்று | அங்கு | அப்போது |
| திசைப்ப | திகைத்து நிற்கும்படியாகவும் | அறம் நூல் | வேத சாஸ்திரங்களை |
| | | உரைத்த | அருளிச்செய்த |
| எழில் வேதம் | அழகிய வேதங்கள் | அது | அந்தப் பரஞ்சோதியே |
| இன்றி மறைய | இல்லாமல் மறைந்து போன வளவிலே | நம்மை அரசு ஆளும் | நம்மை அடிமைகொள்ளும். |

* * *—ஹம்ஸாவதார வரலாற்றைப் பேசும் பாசுரம் இது. முன்னொரு காலத்தில் மதுகைடபரென்ற அசுரர்கள் பிரமதேவனிடத்திலிருந்து வேதங்களை அபஹரித்துக்கொண்டு கடலில் முழுகி மறைந்துவிட, ஞான வொளியைத்தரும் பெருவிளக்கான வேதங்கள் ஒழிந்தமைபற்றி உலகமெங்கும் பேரிருள்மூடி நலியாநிற்க, பிரமன் முதலியோரனைவரும் கண்கெட்டவர்போல யாதொன்றும் செய்ய

வறியாமல் நிலைத்து வருந்துவது கண்டு திருவுள்ளமிரங்கித் திருமால் கடலினுட் புக்கு அவ்வசுரர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் கொன்று வேதங்களை மீட்டுக் கொணர்ந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு உபதேசித்தருளினன்; இவ்வரலாறு சிறிது வேறுபடக் கூறுதலுமுண்டு. ... ... ... 8

துணைநிலைமற்றெமக்கோருளதென்றிராது தொழுமின்கள்தொண்டர்!* தொலைய
உணமுலைமுன்கொடுத்தவுரவோளதாவி யுகவுண்டுவெண்ணெய்மருவி*
படைமுலையாய்ச்சியர்மாதருரலோடுகட்ட அதனோடுமோடி அடல்சேர்*
இணைமருதிற்றுவீழநடைகற்றதெற்றல் வினைபற்றறுக்கும்விதியே. 9

| | | | |
|---|---|---|---|
| தொண்டர் | பாகவதர்கள்! | வெண்ணெய் மருவி | வெண்ணெயை ஆசைப்பட்டு (க்களவு செய்ய) |
| எமக்கு மற்று ஓர் துணைநிலை உளது என்று இராது | 'நமக்கு வேறொரு ஆச்ரயமுண்டு' என்று நினைத்திராமல் | படை முலை ஆயர் மாதர் | பருத்தமுலையை யுடையளான யசோதைப் பிராட்டியானவள் |
| தொழுமின்கள் | (எம்பெருமானை) வணங்குங்கோள்; | உரலோடு கட்ட | உரலோடே பிணித்துவைக்க |
| முன் | முன்பொருகால் | அதனோடும் ஓடி | அவ்வுரலையுமிழுத்துக் கொண்டோடி |
| தொலைய | (கண்ணன்) முடிந்துபோக வேணுமென்றெண்ணி | அடல் சேர் | வலிமிக்க |
| | | இணை மருது | இரட்டைமருதமரங்கள் |
| உண | தன்னை உண்ணும்படியாக | இற்று வீழ | முறிந்துவிழும்படியாக |
| முலை கொடுத்த | (நஞ்சு தீற்றிய தனது) முலையை (வாயில்) கொடுத்த | நடை கற்ற | நடைபயின்ற |
| | | தெற்றல் | தெளிவுள்ள சிறுகுழந்தை |
| உரவோளது | வலிமையுள்ளவளான பூதனையினுடைய | வினை பற்று அறுக்கும் | (நமது) பாபங்களை வாஸனையோடே போக்கியருளும்; |
| ஆவி உக | உயிர் மாளும்படி | | |
| உண்டு | ஸ்தந்யபானம்பண்ணி | விதியே | திண்ணமே. |

*** ஸ்ரீக்ருஷ்ணாவதார சேஷ்டிதங்களில் சிலவற்றைப் பேசியநுபவிக்கிறார். விஷந்தடவின முலையை உண்ணக் கொடுத்த பேய்ச்சியின் உயிரை முடித்தவனும் வெண்ணெயை ஆசைப்பட்டுக் களவுசெய்தவளவிலே கண்டு பிடித்து யசோதைப்பிராட்டி உரலோடே பிணித்துவிட அதனையும் இழுத்துக் கொண்டு தவழ்ந்து செல்லுமளவிலே இரட்டை மருதமரங்களை வீழ்த்தவனுமான எம்பெருமான் நம்முடைய பாவங்களைப் பற்றறத்தொலைத்தருள்வன்; ஆகையாலே 'எம்பெருமானொருவனே நமக்குத்துணை' என்கிற அத்யவஸாயத்தோடே அவனைத் தொழுங்கோளென்று தொண்டர்களை நோக்கி யருளிச்செய்தாராயிற்று.

தொண்டர் = அண்மைவிளி.

நளகூபரன் மணிக்ரீவன் என்னுங் குபேர புத்திரர் இருவரும் ஒருகாலத்தில் பல அப்ஸரஸ் ஸ்திரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்து கொண்டிருக்கையில் நாரத முனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்து நீங்க. இந்த மைந்தர்மாத்திரம் மதுபான மயக்கத்தினால் வஸ்த்ரமில்லாமலே யிருக்க நாரதர் கண்டு கோபங்கொண்டு மரங்கள்போல் நிற்கிற நீங்கள் மரங்களாயீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வேண்டிக்கொண்டதற்கு இரங்கி நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களருகில் நெருங்குஞ் சமயத்தில் இவ்வடிவமொழிந்து முன்னைய வடிவம்பெற்று மீள்வீர் என்று சாபவிடை கூறிப் போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனாலேவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்துக்கிடந்தனர். இது இப்படியிருக்க, கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச்

செய்யக்கண்டு கோபித்த யசோதை கிருஷ்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி உரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை இழுத்துக்கொண்டு தவழ்ந்து அவ்விரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளியபோது, அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில் அம்மரங்களாய்க் கிடந்த குபேர புத்திரரிருவரும் சாபந்தீர்ந்து சென்றனர்: ஆவேசித்திருந்த அசுரர்களும் மாண்டொழிந்தனர்.

உண—உண்ண உரவோள்—வலிய நெஞ்சுடையவள். நேற்றவ்—நெள்ளியவன்.

கோலங்கெழுசெம்முகந்தகளிறொன்றுகொன்று கொடியோனிலங்கைபொடியா*
சிலைகெழுசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள் திருமாலைவேலைபுடைசூழ்*
கலிகெழுமாடவீதிவயல்மங்கைமன்னு கலிகன்றிசொன்னபனுவல்*
ஒலிகெழுபாடல்பாடியுழல்கின்ற தொண்டரவராள்வதும்பருலகே. 10

| | | | |
|---|---|---|---|
| கோலம் கெழு | கோலஞ்செய்யுமியல்வு விளங்கப்பெற்ற | கலி கெழு மாட வீதி | வலிமைமிக்க மாடவீதிகளையுடையதாய் |
| செம் முகத்த | சிவந்த முகத்தையுடைத்தாய்க் கொண்டுவந்த | வயல் | கழனிகளையுடைத்தான |
| | | மங்கை | திருமங்கைநாட்டில் |
| களிறு ஒன்று | (குவலயாபீடமெனனும்)ஒரு யானையை | மன்னு | பொருந்திவாழ்கிற |
| கொன்று | கொன்றொழித்தவனாயும், | கலிகன்றி | ஆழ்வார் |
| கொடியோன | கொடியவனான இராவணனுடைய | சொன்ன | அருளிச்செய்த |
| | | பனுவல் | ஸூக்தியாய் |
| இலங்கை | லங்காபுரியானது | ஒலி கெழு | சொற்கள் சிறந்த |
| பொடி ஆ | பொடியாகும்படி | பாடல் | இத்திருமொழியை |
| சிலை கெழு செம் சரங்கள் செல உய்த்த | வில்லிலுள்ள நெருப்புப் போன்ற அம்புகளைப் பிரயோகித்தவனாயுமுள்ள | பாடி | வாயாரப்பாடி |
| | | உழல்கின்ற | இதுவே பொழுதுபோக்காய்த் திரிகின்ற |
| நங்கள் திருமாலை | எம்பெருமானைக் குறித்து, | தொண்டர் அவர் | பாகவதர்கள் |
| வேலை புடை சூழ் | கடலாலே சுற்றுஞ் சூழப்பட்டதாய் | உம்பர் உலகு ஆள்வர் | பரமபதத்தை |

***—எம்பெருமான் இங்ஙனே பலபல திருவவதாரங்கள் செய்தருளியிருந்தாலும் ஸ்ரீக்ருஷ்ணாவதாரமும் ஸ்ரீராமாவதாரமுமே நெஞ்சுக்கு இனியவை என்பது தோன்றுமாறு இந்த நிகமனப் பாசுரத்தில் அவ்விரண்டவதாரங்களை யெடுத்துப் பேசுகிறாரென்க. கம்ஸனது குவலயாபீட மதயானையைக் கொன்றொழித்தவனும் இலங்கை பாழாளாகப் படை பொருதவனுமான எம்பெருமானைக் குறித்துக் கலியன் திருவாய்மலர்ந்தருளிய இத்திருமொழியைப் பாடித்திரிகின்ற தொண்டர்கள் பரமபதத்தைப் பெற்று அநுபவிப்பர்கள் என்று பயனுரைத்தாராயிற்று.

[வேலைபுடைசூழ்] திருமங்கைநாட்டுக்குக் கடல் அணித்தாக இல்லாமையாலே 'வேலை' என்பதற்குக் கடல் என்று பொருள் கொள்ளாமல் கடல்போன்ற காவிரி நதி யென்று பொருள் கொள்ளலாமென்பர் சிலர்; அதுவேண்டா; "வேலை மோதும் மதில்சூழ் திருக்கண்ணபுரம்" என்றவிடங்களுக்குக் கூறும் சமாதானம் இங்கு நோக்கும். ... ... ... ... ... 10

அடி வரவு:—நிலை, செரு, நிதறு, தனை, வெந்திறல், இருநிலம், இலைமலி, முன், கொலை, மான.

நான்காந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பதினோராம்பத்து—ஐந்தாந்திருமொழி—மானமருமென்னோக்கி.

**உரையவதாரிகை**:—எம்பெருமான் அநந்த கல்யாணகுண நிதியாயிருப்பவன். இத்திருக்குணங்கட்கு ஓர் எல்லைகிடையாது. பலவகைப்பட்டு எல்லையற்றிருக்கின்ற அத்திருக்குணங்கள்—மேன்மைக்கு ஏகாந்தமான குணங்களென்றும் எளிமைக்கு ஏகாந்தமான குணங்களென்றும் இரண்டு பாகுபாடுகளை யுடையன. ஜ்ஞானம் சக்தி பலம் ஐச்வர்யம் வீர்யம் தேஜஸ்ஸு என்றிவை போன்ற திருக்குணங்கள் மேன்மைக் குணங்கள் [பரத்வ குணங்கள்] என்றும் வாத்ஸல்யம் ஸௌசீல்யம் முதலிய குணங்கள் எளிமைக் குணங்கள் [ஸௌலப்ய குணங்கள்] என்றும் வழங்கப்பெறும். பகவத்குணாநுபவம் பண்ணுகிறவர்களில் சிலர் பரத்வ குணங்களையே அநுபவிப்பர்; சிலர் ஸௌலப்ய குணங்களையே அநுபவிப்பர். பலர் இரண்டையுஞ் சேர அநுபவிப்பர்.

கேவல பரத்வமும் கேவல ஸௌலப்யமும் கொண்டாடத் தகுந்ததன்று. மேருமலை கைலாஸமலை போன்ற மலைகள் மிகச் சிறந்தவையேயாயினும் அவை எல்லார்க்கும் எளிதல்லாமையாலே பயனற்றவையாம். அவைதாமே தரித்ரர்கட்குக் கிடைக்கக்கூடியவையா யிருந்தால் எவ்வளவோ சீர்மைபெறுமே. ஆகவே ஸௌலப்யமற்ற பரத்வம் உபயோகமற்றது. இவ்விதமாகவே பரத்வமற்ற ஸௌலப்யமும் உபயோகமற்றது; தெருக்களில் பரல்கள் பல எளிதா யிருக்கின்றன; அவற்றை விரும்புவாருண்டோ? அவைதாமே மணியும் மாணிக்கமுமா யிருந்தால் எவ்வளவோ பயனுண்டு. ஆகவே, வெறும் ஸௌலப்யமும் வெறும் பரத்வமும் பயனற்றவையே.

எம்பெருமானோவென்னில் இவ்விருவகைக் குணங்களாலும் நிறைந்தவன். அடியார்கள் கூசாதே வந்து பணிகைக்கீடான எளிமைக் குணங்களாலுங் குறையற்றவன்; வந்து பணிந்தவர்களுக்கு அநிஷ்டங்களைத் தவிர்த்து இஷ்டங்களைத் தலைக்கட்டித் தருகைக்கீடான மேன்மைக் குணங்களாலுங் குறையற்றவன். ஆகவே பகவத்குணாநுபவம் பண்ணுமவர்கட்குப் பரத்வகுணாநுபவம் ஸௌலப்ய குணாநுபவம் என்ற இரண்டும் ப்ராப்தம்.

இவ்வாழ்வார் இக்குணங்களைப் பல பாசுரங்களிலும் அநுபவித்திருக்கின்றாராகிலும் இப்போது விலக்ஷணமாக அநுபவிக்கத் திருவுள்ளம்பற்றி ஏக காலத்திலே இரண்டு பிராட்டிமாருடைய நிலைமையையடைந்து ஏசிப்பேசுகிற ஒருத்தியின் பாசுரத்தாலே ஸௌலப்யகுணத்தையும், ஏத்திப் பேசுகிற மற்றொருத்தியின் பாசுரத்தாலே பரத்வகுணத்தையும் அநுபவிக்கிறாராய்ச் செல்லுகிறது இத்திருமொழி.

பெரியாழ்வார் “என்னாதன் தேவிக்கு” என்னுந் திருமொழியிலே இரண்டு ஆயர் மங்கைகளின் அவஸ்தையைத் தாமடைந்து ஒருத்தி கிருஷ்ணவதார வ்ருத்தாந்தத்தைப் பாடுவதாகவும் ஒருத்தி ராமாவதார வ்ருத்தாந்தத்தைப் பாடுவதாகவும் அருளிச்செய்ததும், “கதிராயிரமிரவி” என்னுந் திருமொழியிலே அவ்வாழ்வார் தாமே தம்மை இரண்டுவகையாக வகுத்துக்கொண்டு ‘ஸர்வேச்வரனைக் கண்ணாலே காணவேணும்’ என்று தேடுகை ஒரு வகுப்பாகவும் ‘அப்படி தேடுவார்களில் அவனை உள்ளபடி கண்டாருளர்’ என்று விடைசொல்லுகை மற்றொரு வகுப்பாகவுமாய் அருளிச்செய்ததும், சூடிக்கொடுத்த சுடர்க்கொடியும் “பட்டிமேய்ந்தோர் காரேறு” என்னுந் திருமொழியிலே தன்னையே இரண்டு வகுப்பாகக்கொண்டு “இங்கே போதக்கண்டீரே” என்று கேட்பதும் “விருந்தா

வனத்தே கண்டோமே" என்று விடை கூறுவதுமாய் அருளிச்செய்ததும் இங்கு நினைக்கத்தக்கன.

ஒருவர் இரண்டு வ்யக்திகளின் அவஸ்தையை ஏககாலத்திலே அடையுமாறு பொருந்துமோ? எனின்; எம்பெருமானது அருளின் மிகுதியால் ஞானத்தில் தடையற்றால் பொருந்தாததொன்றில்லை. பரமபதத்தில் நித்ய முக்தர்கள் ஏககாலத்தில் பல சரீரங்களைப் பரிக்ரஹிப்பதாக "ஸ ஏகதா பவதி த்ரிதா பவதி" இத்யாதி உபநிஷத்துக்கள் கூறுகின்றன; அது பொருந்துவது எம்பெருமானருளாலென்பதுபோலக் கொள்க. ... ... .... ... *

மானமருமென்னோக்கி வைதேவியின் துணையா* கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்தான் காணேடீ!
கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்த பொன்னடிகள்* வானவர்தம் சென்னிமலர் கண்டாய் சாழலே

| | | | |
|---|---|---|---|
| ஏடீ | தோழி! (நீ ஏத்திச்சொல்லுகிற புருஷன்) | | (என்று ஒருத்தி சொல்ல) (மற்றொருத்தி அதற்கு மறுமாற்றமுரைக்கிறாள்;) |
| மான் அமரும் | மானையொத்த | சாழலே | தோழி!, |
| மென் நோக்கி | மென்மையான கண்களையுடையவளான | கான் அமரும் கல் அதர் போய் | காட்டிலே பொருந்திய கல நிறைந்த வழியே சென்று |
| வைதேவி | விதேஹராஜவம்சத்துப் பிறந்தவளான ஸீதையை | | |
| இன் துணை ஆ | இனிய துணைவியாகக் கொண்டு | காடு உறைந்த | காடுகளிலே ஸஞ்சரித்த |
| கான் அமரும் | காட்டிலே பொருந்திய | பொன் அடிகள் | திருவடிகளானவை |
| கல் அதர் | கல் நிறைந்தவழியிலே | | |
| போய் | போய் | வானவர் தம | தேவர்களினுடைய |
| காடு | காடுகளிலே | சென்னி | முடியில் (அணியத்தக்க) |
| உறைந்தான் காண் | வாஸம் பண்ணினான் காண்; | மலர் கண்டாய் | புஷ்பங்களாயிரா நின்றன காண். |

* * * முன்னடிகள் ஒருத்தியின் பாசுரம், பின்னடிகள் மற்றொருத்தியின் பாசுரம். முன்னடிகளால் ஸௌலப்யகுணம் வெளியிடப்படுகிறது, பின்னடிகளால் பரத்வகுணம் வெளியிடப்படுகிறது. தோழீ! எங்கள் பெருமான் மிகச் சிறந்தவன், உபயவிபூதிநாதன் என்கிறாயே; அஃது உண்மையாயின் அப்ராக்ருதமானவொரு தேச விசேஷத்திலே "ஒண்டொடியாள் திருமகளும் நீயுமே நிலாநிற்ப" என்கிறபடியே யிருந்துகொண்டு மேன்மையாக விளங்கமாட்டானோ? இந்த இருள்தருமாஞாலத்திலே வந்து பிறந்தான்; தசரத சக்ரவர்த்திக்கு மூத்தமகனாய்ப் பிறந்து வைத்தும் அரசுரிமையை யிழந்து தன் பெண்டாட்டியையுங் கூட்டிக்கொண்டு கல்லும் முள்ளுமான காட்டிலே கால்நோவ நடந்து சென்றானே; மேன்மையுடையார்படி இதுவோ! என்றாள் ஒருத்தி.

ஐயோ! பரத்வத்தோடே கூடினவிடத்தில் உள்ள ஸௌலப்யம் கொண்டாடத் தகுந்ததென்பதை அறிந்திலையே; கானமருங் கல்லதர்போய்க் காடுறைந்தான் என்பதை மாத்திரம் பேசுகிறாயேயன்றி, அப்படி நடந்த திருவடிகளையே வானவர்கள் சென்னிக்கு மலர்ந்த பூவாகக் கொள்ளுகிறார்களென்பதை அறிந்திலையே!, வானவர்களின் தலைகளிலேயே யிருக்கவேண்டிய அத் திருவடிகள் ஆச்ரித ரக்ஷணார்த்தமாகவன்றோ காடுறைந்தன; துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனங்களை ஸங்கல்பமாத்திரத்தினால் செய்துவிடாமல் கைதொட்டுச் செய்து திறம்பெறவேணுமென்கிற விருப்பத்தினால் சிஷ்டர்களான மஹர்ஷிகளும் துஷ்டர்களான அசுர ராக்ஷஸர்களும் இருந்தவிடங்களைத் தேடித்திரிந்து நடந்துசென்று காரியம் பார்த்த மஹாகுணம் அறியாயோ? என்கிறாள் மற்றொருத்தி. ... .... 1

**தந்தைதளைகழலத்தோன்றிப்போய்*ஆய்ப்பாடி நந்தன்மதலையாய்வளர்ந்தான்காணேடீ!**
**நந்தன்மதலையாய்வளர்ந்தான்நான்முகற்குத் தந்தைகாண்*எந்தைபெருமான்காண்சாழலே.**

| | | | |
|---|---|---|---|
| ஏடீ | தோழீ!, | வளர்ந்தான காண் | வளர்ந்தானன்றோ ; |
| தந்தை | தந்தையாகிய வஸுதேவனுடைய | | |
| தளை | கால் விலங்கு | சாழலே | தோழீ!, |
| கழல | கழன்று விழும்படியாக | நந்தன் குலம் மதலை ஆய் வளர்ந்தான | இடைப்பிள்ளையாய் வளர்ந்தவன் |
| தோன்றி | அவதரித்து | | |
| போய் | மதுரையில் நின்றும் பெயர்ந்து போய் | நான்முகற்கு | நான்முகனுக்கு |
| ஆய்ப்பாடி | திருவாய்ப்பாடியில் | தந்தை காண் | தகப்பன் காண் ; |
| நந்தன் | நந்தகோபருடைய | எந்தை பெருமான் காண் | என்னுடைய குலநாதன் காண். |
| குலம் | குலத்திற்கு(க் கொழுந்தான) | | |
| மதலை ஆய் | பிள்ளையாய் | | |

***—தோழீ! எங்கள் பெருமான் பிறப்பிலி, ஸர்வரக்ஷகன் என்று ஏற்றமாகச் சொல்லிக்கொள்ளுகிறாயே, இது உண்மையாக இருக்கவில்லையே; வஸுதேவர்க்குப் புத்திரனாய் வந்து பிறந்தானென்று புராணஜ்ஞர் சொல்லுகிறார்களே; நம்மைப்போன்ற ஒருவனுக்குப் புதல்வனாகப் பிறந்தவனைப் பிறப்பிலியென்று சொல்லுதல் எங்ஙனே பொருந்தும்? அவ்வளவேயோ? பிறந்தவிடத்தில் பெருமதிப்புடனே வாழப்பெறாமல் "ஒருத்திமகனாய்ப் பிறந்து ஓரிரவிலொருத்தி மகனாயொளித்துவளர" என்கிறபடியே கம்ஸனுக்கு அஞ்சித் திருவாய்ப்பாடியிலே புக்கொளித்து நந்தகுமாரனாய் வளர்ந்தானுமே; ஒரு சிறு புழுவோடொக்க நினைக்கலாம்படியான கம்ஸனுக்கு அஞ்சி மறைந்து வாழ்பவன் ஸர்வரக்ஷகனாக எங்ஙனே ஆகக்கூடும்? என்பது முன்னடிகளின் கருத்து.

தோழீ! வஸுதேவர்க்குப் பிள்ளையாய்ப் பிறந்து நந்தகிசோரனாக வளர்ந்த பெருமான் "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்கிறபடியே *உய்யவுலகு படைக்க வேண்டி உந்தியில் நான்முகனைத் தோற்றினவன் என்பது அறிந்திலையோ; ஸகலஜகத் ஸ்ருஷ்டிகர்த்தாவான நான்முகனையும் படைத்தவனான பெருமான் வந்து பிறந்தானென்றால் நம்மைப்போலே கருமம் காரணமாக வந்து பிறந்தானென்றோ நினைக்கிறாய்? "அஜாயமாநோ பஹுதா விஜாயதே: தஸ்ய தீரா: பரிஜாநந்தி யோநிம்" என்று வேதபுருஷன் ஓதினது அறியாயோ? அநுக்ரஹம் கொண்டு வந்து பிறந்தானத்தனையே. இப்படிப்பட்ட மஹாநுபாவன் ஒளித்து வளர்ந்தது மநுஷ்ய பாவனைக்குச் சேர என்னுமிடம் சொல்லவேணுமோ?

**தந்தை தளைகழல**=கம்ஸனால் விலங்கிடப்பட்டுச் சிறையிருந்த வஸுதேவ தேவகிகளின் கால்விலங்குகள் கண்ணபிரான் திருவவதரிக்கும்போது இற்று முறிந்தொழிந்த வரலாறு அறியத்தக்கது. ... ... ... 2

**ஆழ்கடல்சூழ்வையகத்தாரேசப்போய்*ஆய்ப்பாடி தாழ்குழலார்வைத்ததயிருண்டான்காணேடீ!***
**தாழ்குழலார்வைத்ததயிருண்டபொன்வயிறு* இவ்வேழுலகுமுண்டுமிடமுடைத்தால்சாழலே.** 3

| | | | |
|---|---|---|---|
| ஏடீ | தோழீ! | தாழ் குழலார் வைத்த | தாழ்ந்த கூந்தலையுடைய இடைப்பெண்கள் சேமித்து வைத்திருந்த |
| ஆழ் கடல் சூழ் வையகத்தார் | ஆழ்ந்த கடலால் சூழப்பட்ட பூமியிலுள்ளாரெல்லாரும் | தயிர் | தயிரை |
| ஏச | ஏசும்படியாக | உண்டான் காண் | வயிறார உட்கொண்டவனன்றோ ; |
| ஆய்ப்பாடி | இடைச்சேரியிலே | | |

| | | | |
|---|---|---|---|
| சாழலே | தோழீ ! | ஏழ் உலகும் உண்டும் | இவ்வுலகங்களையெல்லாம் அமுது செய்தவளவிலும் |
| தாழ் குழலார் வைத்த தயிர் உண்டபொன் வயிறு | இடைச்சிகள் வைத்திருந்த தயிரை உட்கொண்ட திருவயிறனது | இடம் உடைத்து | இன்னமும் அவகாசத்தை யுடையதாயிருக்கின்றது ; |
| | | ஆல் | ஆச்சரியம். |

***—தோழீ ! நீ உகக்கிற பெருமான் அவாப்தஸமஸ்தகாமனாக இருந்தாலன்றோ விசேஷம் ; அவனுடைய சரித்திரங்களை ஆராய்ந்தால் அவனும் நம்மைப் போலவே பிறர் பொருள்களில் விருப்பமுள்ளவனாகக் காணப்படுகிறானேயல்லது அவாப்தஸமஸ்தகாமனாகக் காணப்படவில்லையே. ஆய்ப்பாடியில் கண்ணனாய்ப் பிறந்து கள்ளவழியால் தயிர் வெண்ணெய் பால் முதலியவற்றை வாரியுண்டான் எனத் தெரிய வருவதால் இங்ஙனம் பிறர் பொருள்களில் ஆசையுள்ளவன் பரமபுருஷனாயிருக்கத் தகுமோ ? என்ன ;

அதற்கு மறுமொழி கூறுகின்றாள் மற்றொருத்தி. தோழீ !, திருவாய்ப்பாடியில் இடைச்சிகள் சேமித்துவைத்திருந்த தயிரை அமுது செய்தானென்பது உண்மையே ; நம்முடைய வயிறுபோலே ஏதேனும் சிலவற்றை உண்டு நிறைந்துவிடுகிற திருவயிறோ அவனது ? *காரேழ் கடலேழ் மலையேழுலகுண்டும் ஆராவயிற்றனாயிருப்பவன் காண். ஸப்தலோகங்களையும் வாரித் திருவயிற்றினுள் இட்டாலும், இன்னமும் இப்படிப் பதினாயிரமுலகங்களை யிட்டாலும் நிறையமாட்டாமல் விசாலமாகவே இடமுடைத்தாயிராநின்றதுகாண். ஆகையாலே நம்மைப்போலே வயிற்றை நிறைக்கவேணுமென்கிற எண்ணத்தினால் தயிர் முதலியவற்றை அவன் வாரியுண்பவனாகில் அவனுடைய அவாப்தஸமஸ்த காமத்வத்திற்குக்குறையுண்டாகும் ; அடியவர்களுடைய ஹஸ்தஸ்பர்சமுள்ளதொரு பொருளாலல்லது தரிக்கமாட்டாத மஹாகுணத்தை வெளியிடவேண்டித் தாழ்குழலார் வைத்த தயிருண்டானத்தனையாகையாலே கொண்டாடத்தக்க எளிமை காண் இது, என்றாளாயிற்று.

**அறியாதார்க்கானாயனாகிப்போய்* ஆய்ப்பாடி உறியார்நறுவெண்ணெயுண்டுகந்தான்காணேடீ***
**உறியார்நறுவெண்ணெயுண்டுகந்தபொன்வயிற்றுக்கு* எறிநீருலகனைத்துமெய்தாதால்சாழலே.** 4

| | | | |
|---|---|---|---|
| ஏடீ | தோழீ!, | சாழலே | தோழீ!, |
| அறியாதார்க்கு | ஒன்றுமறியாதவர்களுக்குள்ளே | உறி ஆர் நறு வெண்ணெய் உண்டு உகந்த | உறிகளிலே பொருந்திய நறுவெண்ணெயை உட்கொண்டு உவந்த |
| ஆயன் | மாடுமேய்க்குமிடைக் குலத்தவனாய் | பொன் வயிற்றுக்கு | திருவயிற்றுக்கு |
| ஆய்ப்பாடி | இடைச்சேரியிலே | எறி நீர் உலகு அனைத்தும் | கடல்சூழ்ந்த லோகங்களெல்லாம் |
| உறி ஆர் | உறிகளிலே பொருந்தின | எய்தாது | போதாது ; |
| நறு வெண்ணெய் | மணம்மிக்க வெண்ணெயை | ஆல் | ஆச்சரியம். |
| உண்டு | (களவுசெய்து) உட்கொண்டு | | |
| உகந்தான் காண் | ஸந்தோஷித்தான் காண் ; | | |

***—திருவாய்ப்பாடியில் கண்ணபிரான் தயிர்வெண்ணெயுண்ட வரலாற்றிலே ஆழ்வார்களெல்லாரும் மிக ஈடுபாடுடையர்களாதலாலும் இவ்வாழ்வார் தாமும் அதிலே விசேஷமான ஈடுபாடுடையராதலாலும் கீழ்ப்பாட்டின் ப்ரமேயமே இப்பாட்டிலும் பொலிய நிற்கிறது. அறியாதார்க்கு ஆனாயனாகி=ஸர்வஜ்ஞனான எம்பெருமான் அறிவில்லாதவொரு சன்மத்திலே பிறக்கவேணுமென்று நினைத்தால் இடக்கையும் வலக்கையுங்கூட அறியமாட்டாதபடி அறிவுகேட்டுக்கு எல்லை நில

மான இடைக்குலத்திலே நான் பிறக்கவேணுமோ? அறியாதார்க்கு—அறிவில்லாதவர்களுக்குத் தன்னை, ஆனாயனே—கடைகெட்ட இடையனே. [இந்தப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்யானத்தில் சில ப்ரக்ஷேப உத்க்ஷேபங்கள் இருப்பதை ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு திருத்திக்கொள்க.] ... ... ... 4

**வண்ணக் கருங்குழல் ஆய்ச்சியால் மொத்துண்டு* கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ!***
**கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும்,* எண்ணற்கு அரியன் இமையோர்க்கும் சாழலே.** 5

| | | | |
|---|---|---|---|
| ஏடீ | தோழீ!, | கட்டுண்டான் காண் | கட்டுண்டு கிடந்தான்காண்; |
| வண்ணம் | அழகிய | | |
| கரு | கறுத்த | சாழலே | தோழீ!, |
| குழல் | கூந்தலையுடைய | | கண்ணி குறு கயிற்றால் கட்டுண்டான் ஆகிலும் —; |
| ஆய்ச்சியால் | யசோதைப்பிராட்டியாலே | இமையோர்க்கும் | தேவர்களுக்கும் |
| மொத்துண்டு | அடியுண்டு | | |
| கண்ணி குறு கயிற்றால் | முடிகளையுடைத்தாய் (எட்டம்போராதபடி) குறிய தான கயிற்றினால் | எண்ணற்கு அரியன | நெஞ்சால் நினைப்பதற்கும் அஸாத்யன் |

***—தோழீ! நீ உகக்கும் பெருமான் ஸர்வசக்தனாயிருந்தாலன்றோ அதிசயம்? அப்படியில்லையே; வெண்ணெய் முதலியன திருடிய குற்றத்திற்காக யசோதைப்பிராட்டியினால் மொத்துண்டதுமன்றியிலே *கண்ணிநுண் சிறுத்தாம்பினால் அவள் கட்டிப்போட்டுவைக்க, அந்தக்கட்டை அவிழ்த்துக்கொள்ளமாட்டாதே கட்டுண்டபடியே கிடந்தான் கிடாய் என்ன;

அதற்கு மறுமொழி கூறுகின்றாள் மற்றொருத்தி; வானவர்கட்கும் நெஞ்சால் நினைப்பரியனான பெருமான் இங்ஙனே தன்னுடைய ஸௌசீல்யகுணத்தைக் காட்டவேண்டிக் கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டு கிடந்தானென்று அறியமாட்டிற்றில்லையே என்றவாறு.

**கண்ணிக்குறுங்கயிற்றால்** = கண்ணபிரான் வெண்ணெய் களவு செய்கிற தன்னை யசோதைப்பிராட்டி அடிக்கடி தாம்பினால் கட்டி வருத்துகிறாளென்று வீட்டிலுள்ள கயிறுகளையெல்லாம் துண்டுதுண்டாக அறுத்து வைத்திட்டே வெண்ணெய் திருடச் செல்வது வழக்கம்; விதிவசத்தால் பிடியுண்ட அவனை ஒரு கையாலே பிடித்துக்கொண்டு, கட்டுவதற்காகத் தாம்பு தேடப்போவள் யசோதை; துண்டுதுண்டான தாம்புகளே கிடைக்கும். அவற்றை அவள் ஒன்றோடொன்று முடிபோட்டு ஒரு கயிறு வடிவமாக்கி அதுகொண்டு கண்ணபிரானைக் கட்டுவள்; ஆனதுபற்றிக் கண்ணிக்குறுங்கயிறு எனப்பட்டது.

**கட்டுண்டான்** = யசோதைப்பிராட்டி கண்ணிக் குறுங்கயிற்றினால் தன்னைக் கட்டும்போது தன் உடம்புக்கு எட்டம் போராதபடி மிகச் சிறிதான அத் தாம்பினால் கட்டமுடியாதபடி எளிதில் தன்னைத் தப்புவித்துக்கொள்ள வல்லவனாயினும், தனது ஸௌசீல்யம் ஸௌலப்யம் ஆச்ரித பாரதந்த்ரியம் முதலிய சீலங்களை வெளியிடுவதற்கென்றே பரத்வநிலையைத் தவிர்ந்து மநுஷ்ய ஸஜாதீயனாக அவதரித்திருக்கிற தான் தாம்பினால் கட்டுண்டிருக்கை முதலான இவ்வகைகளால் தான் அக்குணங்களை விளங்கச்செய்துகொள்ளவேணுமென்று கொண்டு, ஒரு சுற்றுக்குப் போராத தாம்பு இரண்டு மூன்று சுற்றுக்குப் போரும்படி உடம்பைச் சுருக்கி அமைத்துக்கொண்டு கட்டுண்டு கிடந்தானென விரித்துக் கொள்க.

**இமையோர்க்கும் எண்ணற்கரியன்**—"மத்துறுகடை வெண்ணெய் களவினில் உரவிடையாப்புண்டு, எத்திறம் உரலினோடிணைந்திருந் தேங்கிய எளிவே"

“இமையோர் தமக்கும்—தனிப்பெருமூர்த்திதன் மாயஞ் செவ்வே நெஞ்சால் நினைப்பரிதால் வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே” என்றவை இங்கு அநுஸந்தேயம். ... ... ... ... ... ... 5

கன்றப்பறைகறங்கக்கண்டவர்தம்கண்களிப்ப* மன்றில்மரக்கால்கூத்தாடினான்காணேடீ !*
மன்றில்மரக்கால்கூத்தாடினனாகிலும்* என்றுமரியனிமையோர்க்கும் சாழலே.

| | | | |
|---|---|---|---|
| ஏடீ | தோழி !, | சாழலே | தோழி !, |
| கன்ற | (விரோதிகளின் நெஞ்சு) கன்றும்படியாக | | |
| பறை கறங்க | பறைகள் ஒலிக்கவும் | மன்றில் மரக்கால்கூத்து ஆடினன் ஆகிலும—; | |
| கண்டவர் தம் | பார்த்தவர்களினுடைய | | |
| கண் | கண்களானவை | | |
| களிப்ப | களிக்கவும் | | |
| மன்றில் | நாற்சந்திகளிலே | இமையோர்க்கும் | |
| மரக்கால் கூத்து ஆடினான் காண் | மரத்தைக் காலிலே கட்டியாடுவதொரு கூத்தை ஆடினனன்றோ ? | என்றும் | என்றைக்கும் |
| | | அரியன் | அருமைப்பட்டவன் காண். |

* * *—ஸ்ரீக்ருஷ்ணவதாரத்தில் நாற்சந்திகளிலே நின்று மரக்கால் கூத்தாடினமையைச் சொல்லி ஏசிப் பேசுகிற தோழியின் பாசுரமாகச் செல்லுகின்றன முன்னடிகள் ;

மரக்கால் கூத்தாவது என்னென்னில் ; குடங்களை யெடுத்தெறிந்து ஆடுவதொரு கூத்துப்போலே மரக்கால்களை யெடுத்தெறிந்து ஆடுவதொரு கூத்துக்கு மரக்கால் கூத்தென்று பெயர் என்பர் சிலர் ; இது வியாக்கியானத்திற்குப்பொருந்தாது ; “ மரத்தைக் காலிலேகட்டி ஆடினன் காண் ” என்பது பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி. இதற்குச் சேரப் பொருள் கூறவேண்டில், மிக நீண்டதொரு கொம்பை நிலத்திலே நிறுத்தி அதன்மேலே கால்கட்டை விரலை யூன்ற வைத்துக்கொண்டு அந்தரத்திலே ஆடுவதொரு கூத்து மரக்கால் கூத்தெனப்படுமென்பதே தகுதி. தொம்பரவர்போலே இப்படி மரக்கால் கூத்தாடுகிறவனையோ தோழீ ! நீ பரமபுருஷனாகப் போற்றுவது ? என்று தோழி சொல்ல ; இமையோர்க்கும அரியவனை பெருமானிவன் என்றறிந்திலையே ; அப்படிப்பட்டவனுக்கு உண்டான தாழ்வு குணமேயன்றிக்குறையன்றுகாண் என்று உணர்த்துகிற முறைமையிலே பின்னடிகளில் மறுமொழி கூறிற்றாயிற்று. ... 6

கோதைவேல்ஐவர்க்காய்மண்ணகலம்கூறிடுவான்* தூதனாய்மன்னவனாற்சொல்லுண்டான்காணேடீ*
தூதனாய்மன்னவனாற்சொல்லுண்டானாகிலும்* ஓதநீர்வையகமுன்னுண்டுமிழ்ந்தான்சாழலே. 7

| | | | |
|---|---|---|---|
| ஏடீ !, | | சொல் உண்டான் காண் | இழிவான சொற்களைச் சொல்லப் பெற்றானன்றோ? |
| கோதை வேல் | (அரசர்க்குரிய) பூமாலையையும் வேற்படையையும் | சாழலே | தோழீ!, |
| ஐவர்க்கு ஆய் | உடையவரான பஞ்சபாண்டவர்களுக்கு விதேயனாய் | தூதன் ஆய் மன்னவனால் சொல்லுண்டான் ஆகிலும்—; | |
| | தரு பாண்டவர்கட்குப்) | முன் | முன்பொருகால் |
| மண் அகலம் | பூமியைப் பங்கிட்டுக் | ஓதம் நீர் வையகம் | கடல் சூழ்ந்த உலகத்தையெல்லாம் |
| கூறு இடுவான் | கொடுத்துச் சந்தி செய்வதற்காக | | (பிரளயங்கொள்ளாதபடி) |
| தூதன் ஆய் | தூது சென்றவனாய் | உண்டு உமிழ்ந்தான் | வயிற்றிலே வைத்து நோக்கி வெளிப்படுத்தினான் காண் |
| மன்னவனால் | துரியோதனனென்னும் அரசனால் | | |

... [illegible] பெருமான் எல்லார்க்கும் மேம்பட்டவனு [illegible]: அவன் அப்படியிருந்தானாகில் பிறர்க்கு இழிதொழி [illegible] பஞ்சபாண்டவர்களுக்கு அரசுரிமை பெறுவித்தற் பொருட்டு [illegible]' என்று பெயர்சுமந்து துரியோதனாதிகளிடத்தில் தூது நட [illegible] நடந்தவிடத்திலே அந்தத் துரியோதனனால் இழிவான வார்த் [illegible] பெற்றான்; இவனையோ நீ பரமபுருஷனென்று கொண்டாடு [illegible]? [illegible]:

[illegible] மறுமொழி கூறுகின்றாள் மற்றொருத்தி :—பாண்டவர்கட்குத் தூது [illegible] சொல்லுண்டதும் மெய்யே; இவற்றையேயோ நீ பார்ப் [illegible] களையெல்லாம் பின்பு பிரளயங்கொள்ளாதபடி திருவயிற் [illegible] பிறகு வெளிப்படுத்தினவன் இவனே என்கிற பெருமையை [illegible].

[illegible] லக்ஷணமான பூமாலையைச் சொன்னபடி; அரசி [illegible] பாண்டவர்கட்கு அப்போது பூமாலையில்லையாகிலும் அதனை [illegible] ஸ்வரூப யோக்யதையைக் கொண்டு இங்கு இவ்விசேஷண [illegible].

[illegible] கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டர்க்கு ஸ்ரீராம [illegible] அளவற்ற பக்ஷபாதமுண்டென்பது ப்ரஸித்தம். சிறியாத்தானென் [illegible] பட்டருடைய ரஸோக்திகளைக் கேட்க விரும்பி ஒருநாள் பட்டர் ஸந்நிதியில் [illegible] 'சக்ரவர்த்தி திருமகனார்க்கு எல்லா ஏற்றமுமுண்டேயாகிலும் [illegible] களுக்காகக் கழுத்திலே ஓலைகட்டித் தூதுபோன ஏற்றமில்லையே; அந்த [illegible] கண்ணபிரானுக்கேயன்றோ வுள்ளது' என்றார். அதை பட்டர் கேட்டருளி '[illegible]! [illegible] இராமபிரானுக்குத் தூதுபோதல் அநிஷ்டமன்றுகாணும்; [illegible] வம்சத்தில் ஸார்வபௌமனாகப் பிறந்தானாகையாலே மஹாராஜன் [illegible] ஓலையைக் கட்டித் தூதுபோக விடுவாரைக் கிடையாமையாலே இராமன் [illegible] பெற்றிலனத்தனை; அந்த அவதாரத்திலே சிறிய திருவடி அந் [illegible] வருவதாய்க்கொண்டு தூதக்ருத்யஞ் செய்து வார்த்தை சொல்வித் [illegible] கண்டு 'நாமும் இப்படி ஆச்ரிதர்களுக்காகத் தூது போகப் [illegible]' என்று திருவுள்ளம் குறைபட்டு அக்குறை தீருகைக்காகவே [illegible] இழிகுலத்திலே வந்து பிறந்து தூதுசென்றான்; க்ஷத்ரியனென்று நிச்ச [illegible] தூதுபோக விடமாட்டார்களென்று அத்தை மறைத்து வளர்ந்தான் [illegible]; அபிஷிக்த க்ஷத்ரியகுலத்திலே பிறந்தால் 'தூது போ' என்று ஏவ ஒருவர்க்கும் [illegible]" என்றருளிச் செய்தாராம்.

[illegible] சொல்லுண்டான்—கண்ணபிரான் தூது எழுந்தருளுங்காலத்தில், [illegible] திருமாளிகையிலே புகுந்து அமுது செய்துவிட்டு ஸபைக்கு எழுந்தருள [illegible] மாஞ்சைவ மதுஸூதந!, கிமர்த்தம் புண்டரீகாக்ஷ! புக்தம் வ்ருஷலபோஜநம்?" [ஞானத்திற்சிறந்த த்ரோணாசாரியரும் செல்வத்திற் சிறந்த [illegible] மிருக்க எங்களையெல்லாம் விட்டு ஏதுக்குப் பள்ளிச்சோறு தின்று [illegible]?] என்றதை நினைத்தே இங்குச் சொல்லுண்டான் என்றது.

[illegible] யோதனன் கண்ணபிரானை வையச் செய்தேயும் தூஷணமான ஸம்போ [illegible] வசைகூறாதே புண்டரீகாக்ஷ!' என்றே விளிக்கவேண்டும்படியான [illegible] பொலியாநிற்கிறதுபாராய் என்பதுதோன்றச் 'சொல்லுண்டானாகிலும்' என்றது. ... ... ... ... ... .... 7

கண்டாரிரங்கக்கழியக்குறளுருவாய்* வண்தாரான்வேள்வியில்மண்ணிரந்தான் காணேடீ:
வண்தாரான்வேள்வியில்மண்ணிரந்தானாகிலும்* விண்டேழுலகுக்கும்மிக்கான்காண்சாழலே.

ஏடீ — தோழீ!,
கண்டார் — பார்த்தவர்களெல்லாரும்
இரங்க — மனமிரங்கும்படி
கழிய குறள உரு ஆய் — மிகக் குள்ள வடிவுடையனாய்க்கொண்டு
வண் தாரான் — வள்ளல்தனத்தைக் காட்டு கின்ற தனிமாலையை யணிந்த மாவலியினுடைய
வேள்வியில் — யாகபூமியிலே
மண் இரந்தான் காண் — மண்ணையாசித்தானன்றோ?
சாழலே — தோழீ!,
வண் தாரான் வேள்வியில் மண் இரந்தான ...
விண்டு — ...வாய
ஏழ் உலகுக்கும் மிக்கான் காண் — எல்லாவுலகத்திலும் மேம்பட்டவன் காண்,

* * *—தோழீ! நீ உகக்கும் பெருமான் செல்வம் மிக்கவனாயிருந்தாலன்றோ விசேஷம்; அப்படியில்லையே; கண்டவர்களும் 'ஐயோ! பாவம்!!' என்று சொல்லி யிரங்கும்படியாக மிகக் குள்ள வடிவெடுத்து மாவலியின் வேள்வியிற் சென்று மூவடி மண் இரந்தானன்றோ? இப்படிப்பட்ட இரப்பாளனையோ நீ பரம புருஷனாகக் கொண்டாடுவதென்ன;

தோழீ! அவ்வளவையேயோ நீ கண்டது? அவன்தானே த்ரிவிக்ரமனாகி ஏழுலகுக்கும் மிக்கானானான் என்பதறிந்திலைபோலும்; மஹாபலி ஔதார்யமென்று ஒரு பெருங்குணத்தை யுடையனாயிருந்தமையாலே அவனைத் தலையறுக்கமாட்டாதே நல்விரகாலே செருக்கழிக்க வேணுமென்று திருவுள்ளம்பற்றி ஆச்ரிதனான இந்திரனுக்காக இரப்பாளனாய்ச் சென்றானத்தனையல்லது, தனக்கொரு குறை யுண்டாகி அக்குறைதீர இரந்து சென்றானல்லன் என்றாளாயிற்று.

ஈற்றடியில் விண்டு என்றது 'விஷ்ணு' என்ற வடசொல்லின் விகாரமாகவுமாம்; 'விள்' என்னும் வினைப்பகுதி யடியாப்பிறந்த வினையெச்சமாகவுமாம். 9

கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான்*
வெள்ளத்தான்வேங்கடத்தா னென்பரால்காணேடீ!
வெள்ளத்தான்வேங்கடத்தானேலும்*கலிகன்றி
உள்ளத்தினுள்ளேயுளான்கண்டாய்சாழலே. 10

ஏடீ
கள்ளத்தால் — கபடவேஷத்தினால்
மாவலியை — மாவலியிடத்தில்
மூ அடி மண் கொண்டு — மூன்றடிமண்ணை இரந்து பெற்று
அளந்தான் — அளந்துகொண்டவன்
(ஒருவர்க்கும் எளியனாகாதபடி)
வெள்ளத்தான் — திருப்பாற்கடலிலே உளான்,
வேங்கடத்தான் — திருமலையிலே உள்ளான்,
எனபர் காண் — என்று சொல்லுகிறார்களன்றோ?;
சாழலே — தோழீ!,
வெள்ளத்தான் வேங்கடத்தான் ஏலும் — திருப்பாற்கடலிலும் திருமலையிலும் அருமைப்படவுள்ளவனே யாகிலும்
கலியனுடைய
...ன உள்ளே — ஹ்ருதயத்தினுள்ளே
உளன் கண்டாய் — எளியனாயுள்ளன் காண்.

* * *—தோழீ! நீ உகக்கும் பெருமான் ப்ராமாணிகனல்லன்; க்ருத்ரிம வேஷத்தாலே மாவலி பக்கலில் மூவடிமண்வாங்கி மூவுலகுமளந்தவனாகையாலே

வஞ்சகன்; அதுகிடக்கட்டும்; ஒருவர்க்கும் சென்று கிட்டவொண்ணாதபடி எங்கேயோ திருப்பாற்கடலிலும் திருவேங்கடமலையிலும் இருப்பவனைச் சொல்லு கிறீர்களேயன்றி ஸந்நிஹிதனல்லனோ வென்ன;

தோழீ! இவ்வளவேயோ நீ யறிந்தது? திருமங்கையாழ்வாருடைய திருவுள்ளத்திலே வந்து வஸிப்பதற்கு உபாயாநுஷ்டாநம் செய்கிறபடியாகவன்றோ அவன் திருப்பாற்கடலிலும் திருமலையிலும் வஸித்தது; இப்போது அவ்விடங்களையெல்லாம் விட்டு ஆழ்வாருடைய திருவுள்ளத்திலே ஸந்நிஹிதனயுள்ளன் காண் என்கிறாள்.

எம்பெருமானுக்கு, பரமபதத்திலும் திருப்பாற்கடலிலும் கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான உகந்தருளினவிடங்களிலும் இருப்பதிற்காட்டிலும் மெய்யடியாருடைய ஹ்ருதயகமலத்தில் வாழ்வதே பரமோத்தேச்யமென்றும், மையம்பார்த்து அன்பருடைய நெஞ்சிலே வந்து சேர்வதற்கே மற்றவிடங்களில் எம்பெருமான் தங்குகிறானென்றும், ஆகவே பரமபதம் முதலியவற்றில் வாஸம் உபாயமாய் பக்தருடைய ஹ்ருதயத்தில் வாஸமே புருஷார்த்தமா யிருக்குமென்றும், இது ஸித்தித்துவிட்டால் பரமபதம் முதலியவற்றில் வாஸஞ் செய்வதில் ஆதரம் மட்டமாய்விடுமென்றும் ஸ்ரீவசநபூஷணத்தில் பிள்ளையுலகாசிரியர் பரமரஸமாக அருளிச்செய்தவையும், அவற்றுக்கு அடியாயுள்ள "கல்லுங் கனைகடலும் வைகுந்தவானாடும், புல்லென்றொழிந்தன கொல் ஏ பாவம்!—வெல்ல நெடியான் நிறங்கரியா னுள்புகுந்து நீங்கான் அடியேனதுள்ளத்தகம்" என்ற பெரிய திருவந்தாதிப் பாசுரமும் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

ஸம்வாதமுகத்தாலே இங்ஙனே குணாநுபவம் செய்வதே ஆழ்வார்க்குப் பரம போக்யமாயிருந்ததனால் பலச்ருதியில்லாமே இத்திருமொழி தலைக்கட்டிற்றாயிற்று.

அடிவரவு:—மானமரும், தந்தை, ஆழ்கடல், அறியாதார், வண்ணக், கன்ற, கோதை, பார்மன்னர், கண்டார், கள்ளம், மைந்நின்ற.

ஐந்தாந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம்

## பதினோராம்பத்து—ஆறாந்திருமொழி,—மைந்நின்ற கருங்கடல்வாய்.

உரையவதாரிகை:—கீழ்த்திருமொழியிலே எம்பெருமானுடைய நீர்மையையும் மேன்மையையும் தோள்மாறி அநுபவித்த ஆழ்வார் "ஏக: ஸ்வாது ந புஞ்ஜீத—இன்கனி தனியருந்தான்" என்ற கணக்கிலே, இப்படி குணக்கடலான எம்பெருமானுடைய அநுபவத்தை நாம் தனியே செய்வதிற்காட்டிலும் மற்றும் பலரோடே கூடிக் களித்து அநுபவித்தல் நன்று என்று ஆசைகிளரப்பெற்று நமக்கு உசாத்துணையாக வருவார் ஆரேனுமுண்டோவென்று இவ்விபூதியிலே எங்குங் கண் வைத்தார்; எங்குப்பார்த்தாலும் தேவதாந்தரங்களைத் தொழுவாரும் துதிப்பாருமான மனிசர் காணப்பட்டனரேயன்றித் தமக்கு உசாத்துணையாவாரொருவரையுங் கண்டிலர். அந்தோ! எம்பெருமான் நமக்குச் செய்தருளும் உபகாரங்களைப் பேணாதே இப்படியும் தேவதாந்தரபஜநம் பண்ணுவாருண்டோ? இந்தத் தேவதைகளெல்லாம் பிரளயகாலத்திலே அப்பெருமானது திருவயிற்றிலே கிடந்த எச்சில் என்பதை இப்பாவிகள் அறிந்திலர்போலும்; இவர்களாச்ரயிக்கிற தேவதைகளின் இழிவையும் ஸர்வஸமாச்ரயணீயனான எம்பெருமானுடைய உயர்வையும் அறிவித்தோமாகில் இவர்கள் திருந்தக்கூடுமென்று திருவுள்ளம்பற்றி அங்ஙனம் அறிவித்து எல்லீரும் எம்பெருமானையே அடிபணிந்து உஜ்ஜீவிக்கப் பாருங்கோள்

என்று உபதேசிப்பதும் அவ்வுபதேசம் சடக்கெனப் பலிக்கமாட்டாமையைக் கண்டு திருவுள்ளம் நொந்து பேசுவதுமாய்ச் செல்லுகிறது இத்திருமொழி. ... *

மைந்நின்றகருங்கடல்வாயுலகின்றி வானவரும்யாமுமெல்லாம் *
நெய்ந்நின்றசக்கரத்தன் திருவயிற்றில் நெடுங்காலங்கிடந்ததோரீர் *
எந்நன்றிசெய்தாரா ஏதிலோர்தெய்வத்தையேத்துகின்றீர் ? *
செய்ந்நன்றிகுன்றேன்மின் தொண்டர்காளண்டனையேயேத்தீர்களே. 1

| | | | |
|---|---|---|---|
| தொண்டர்காள் | (தகுதியற்றவிடத்திலே) தொண்டுபட்டிருப்பவர்களே! | நெடுங் காலம் | வெகுகாலம் |
| மைந்நின்ற கரு கடல்வாய் | மைபோன்று நின்ற கறுத்திருக்குமுள்ள கடலிடத்து | கிடந்தது | அடங்கியிருந்தமையை |
| | | ஓரீர் | அறிகின்றீரில்லையே ; |
| உலகு இன்றி | லோகமொன்றுமில்லாமல் | எந்நன்றி செய்தாரா | என்னவுபகாரம் பண்ணினவர்களாகக் கொண்டு |
| வானவரும் | தேவர்களும் | ஏதிலோர் தெய்வத்தை | விரோதிகளின் தேவதாந்தரங்களை |
| யாமும் | (மனிதர்களான) நாமும் | | |
| எல்லாம் | (ஆகிய) எல்லாப்பொருள்களும் | ஏத்துகின்றீர் | [illegible]ர்கள் ? |
| நெய்ந்நின்ற சக்கரத்தன் திருவயிற்றில் | நெய்யிட்டு விளங்காநின்ற திருவாழியையுடையவனான எம்பெருமானுடைய திருவயிற்றில் | செய் நன்றி குன்றேல்மின் | (எம்பெருமான்) செய்த நன்றியை மறவாதீர்கள் ; |
| | | அண்டனையே ஏத்தீர்கள் | (அந்த) ஸர்வேச்வரனையே துதியுங்கோள். |

***—தேவர் மனிசர் முதலான ஒரு பதார்த்தமும் உலகிற்காணவொண்ணாதபடி அனைத்தையும் கபளிகரித்த மஹாப் பிரளயவெள்ளம் பரந்தகாலத்திலே "அருளார் திருச்சக்கரத்தால் அகல்விசும்பும் நிலனும், இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்" என்கிறபடியே ரக்ஷணபரிகரமான திருவாழியாழ்வானையுடையனான எம்பெருமானது திருவயிற்றிலே ஸகல பதார்த்தங்களும் அடங்கியிருந்து ரக்ஷைபெற்ற விஷயத்தை அந்தோ! அறிவாராருமில்லையே ; பாவிகாள் நீங்கள் அறியமாட்டீர்களோ? மிகப்பெரிய அவ்வாபத்தில் நின்றும் காப்பாற்றியருளின மஹோபகாரகனை எம்பெருமான் நிற்க, இவனைப் பணிந்து போற்றுதல் ப்ராப்தமாயிருக்க அது செய்யாதே, விரோதிகளான தாமஸர்கள் கொண்டா[illegible]

ஒரு காரணம் இருக்கவேணும் ; அத்தெய்வங்களிடத்தில நீங்கள் என்ன உபகாரம் பெற்றீர்கள் ? பேருதவிபுரிந்த பெருமானைவிட்டு ஒருதவியும் புரியாத ஏதிலோர் தெய்வத்தை ஏத்துதல் உங்களுடைய க்ருதஜ்ஞதைக்குச் சேராதே. "நன்றிமறப்பார் காயினுங் கேடாவார்" என்றது உங்கட்குத் தெரியாதோ? நீங்கள் க்ருதஜ்ஞர்களாக இருக்கவேண்டில் உபயவிபூதி நாதனை எம்பெருமானையே ஏத்தப்பாருங்கள் என்றாராயிற்று.

ஓரீர் = முன்னிலைப்பன்மை யெதிர்மறை வினைமுற்று. ஓர்தல்—ஆராய்ந்தறிதல். ... ... ... ... ... ... 1

நில்லாதபெருவெள்ளம்நெடுவிசும்பின்மீதோடி நிமிர்ந்தகாலம் *
மல்லாண்டதடக்கையாற் பகிரண்டமகப்படுத்தகாலத்து * அன்று
எல்லாருமறியாரோ? எம்பெருமானுண்டுமிழ்ந்தவெச்சில்தேவர் *
அல்லாதார்தாமுளரே? அவனருளே யுலகாவதறியீர்களே ? 2

| | | | |
|---|---|---|---|
| நில்லாத | ஓரிடத்திலும் நிலைநில்லாத | தேவர் எம்பெருமான உண்டு உமிழ்ந்த எச்சில் (என்று) எல்லாரும் அறியாரோ | தேவதைகளெல்லாம் எம்பெருமானது திருவயிற்றில் புகுந்து புறப்பட்ட எச்சில் என்பதை எல்லாரும் அறியமாட்டார்களோ? |
| பெருவெள்ளம் | மஹாப்ரளய வெள்ளமானது | | |
| நெடுவிசும்பின் மீது | நெடுகிய ஆகாசத்தின் மீது | | |
| ஓடி | வழிந்தோடி | | |
| நிமிர்ந்த காலம் | ப்ரவஹித்தபோது | | |
| மல் ஆண்ட தடகையால் | மிடுக்கையுடைய பெரிய திருக்கையினாலே | அல்லாதார் தாம் | அப்படி எச்சிலாகாத தேவதைகள் |
| | | உளரே | உண்டோ? (இல்லை;) |
| பகிரண்டம் | பகிரண்டங்களை | உலகு | லோகமானது |
| | | ஆவது | ஸத்தை பெற்றிருப்பது |
| அகப்படுத்த காலத்து அன்று | (பிரளயங்கொள்ளாதபடி) அகப்படுத்திக்கொண்ட அந்த ஸமயத்திலே | அவன் அருளே | அப்பெருமானுடைய க்ருபையின் அதீனமென்பதை |
| | | அறியீர்களோ | அறிகின்றிலீர்களோ! |

* * *—ஓரிடத்திலும் நிலைநில்லாதே பேராரவாரத்துடன் பெருகி வருகின்ற மஹாப்ரளய வெள்ளமானது அபரிச்சிந்நமான ஆகாசத்துக்கு மேலே போய்ப் பெருகுங்கால் "அண்டரண்டபகிரண்டத் தொருமாநிலமெழுமால்வரை முற்றும்" என்கிறபடியே எல்லாப் பொருள்களையும் தனது * மல்லாண்ட திண்டோளாலே வாரிப் பிடித்துத் திருவயிற்றிற் புகப்பெய்தருளின காலத்திலே அயனரனிந்திரன் முதலான எல்லாத் தெய்வங்களும் எம்பெருமான் உண்டு உமிழ்ந்த எச்சில் என்பதை அறியாதாருண்டோ? அப்படி எச்சிலாகாதே தப்பி நின்ற தெய்வம் ஒன்றுமில்லை என்பதை இன்று நாமுரைக்கவேணுமோ? உலகத்திலுடைய ஸத்தை அப்பெருமானுடைய அநுக்ரஹாதீனமென்பதை அறியமாட்டீர்களோ? இனியாகிலு மறிந்து * தொண்டர்காள்! அண்டனையே ஏத்தீர்களே.

பகிரண்டம் என்ற வடசொல் பரமபதத்துக்குப் புறம்பான மற்ற அண்ட ஸமூகங்களைச் சொல்லவுமாம்; பிரளய வெள்ளத்திற்கு வெளிநிலமான பரமபதத்தைச் சொல்லவுமாம்.—"ஸர்வேச்வரன் பிரளயம் சென்று அடராதபடி தன் திருக்கையாலே பரமபதத்தைத் தன் கைக்கீழே யிட்டுக்கொண்டு நின்றகால மென்னவுமாம்" என்ற வியாக்கியான வாக்கியங் காண்க.

ஈற்றடியில் "அவனருளே உலகாள்வது" என்றும் பாடம் வழங்குவதுண்டு; "உலகாவது" என்ற பாடமே ஸம்ப்ரதாயம். ... ... ... 2

நெற்றிமேற்கண்ணானும் நிறைமொழிவாய் நான்முகனும் நீண்டநால்வாய் *
ஒற்றைக்கைவெண்பகட்டின் ஒருவனையு முள்ளிட்டவமரரோடும் *
வெற்றிப்போர்க்கடலரையன் விழுங்காமல்தான்விழுங்கியுய்யக்கொண்ட *
கொற்றப்போராழியான் குணம்பரவாச்சிறுதொண்டர்கொடியவாறே! 3

| | | | |
|---|---|---|---|
| நெற்றி மேல் கண்ணானும் | நெற்றிக் கண்ணனான சிவபிரானும் | நீண்ட நால் வாய் ஒற்றைக் கை வெண் பகட்டின் ஒருவனையும் உள்ளிட்ட | நீண்டு தொங்குகின்ற வாயையும் துதிக்கையையுமுடைய (ஐராவத மென்கிற) வெள்ளை யானைப்பாகனான இந்திரனும் முதலான |
| நிறை மொழி வாய் நான் முகனும் | வேதங்களை உச்சரிப்பவனான பிரமனும் | | |

| | | | |
|---|---|---|---|
| அமரரோடும் | தேவர்களெல்லாரையும் | கொற்றம் போர் ஆழியான் | யுத்தங்களில் வெற்றிபெறுகின்ற திருவாழியை யுடையனை எம்பெருமானுடைய |
| வெற்றி போர் கடல் அரையன் விழுங்காமல் | ஜயசீலனை ஸமுத்ரராஜன் விழுங்க வொண்ணாதபடி | குணம் | திருக்குணங்களை |
| | | பரவா | துதிசெய்யகில்லாத |
| தான் விழுங்கி | தான் திருவயிற்றில்வைத்து | சிறு தொண்டர் | க்ஷுத்ர ஜனங்களுடைய |
| உய்யக் கொண்ட | உஜ்ஜீவிப்பித்தருளின | கொடிய ஆறுஏ | கொடுந்தன்மை இருக்கிறபடி என்னே ! |

* * *—நெற்றியில் கண்ணுடையோம் என்று செருக்குக் கொண்டிருக்கிற ருத்ரனும், இடைவிடாது வேதவாக்கியங்களை உச்சரித்துக் கொண்டிருக்கிற நான்முகக்கடவுளும், ஐராவத யானையை ஏறி நடத்துகின்ற தேவேந்திரனும் மற்றுமுள்ள அமரர்களுமான யாவரையும் பிரளயப் பெருங்கடல் கொள்ளைகொண்டு விழுங்காவண்ணம் தன் திருவயிற்றிலே அடக்கிவைத்து ரக்ஷித்த ஸர்வேச்வரனுடைய திருக்குணங்களை ஸங்கீர்த்தனம்பண்ணுவது ப்ராப்தமாயிருக்க அது செய்யமாட்டாத நீசர்களின் கொடுந்தன்மை என்னே ! என்று ஆச்சரியப்படுகிறார்.

பகடு—யானை ; வெண்பகடு—ஐராவதமென்னும் யானை. பகட்டினொருவன்—யானையின்மீதேறி நடப்பவனான ஒருவன் ; தேவேந்திரனைச் சொன்னபடி.

வெற்றிப்போர்க் கடலரையன்=ஸமுத்ரவெள்ளம் பெருகப் புகுந்தால் அதனை அடர்க்கவல்லார் வேறொருவருமில்லாமையாலே 'ஜய சீலனான கடலரையன்' எனப்பட்டது. ... ... .. ... ... 3

பனிப்பரவைத்திரைததும்பப்பாரெல்லாம் நெடுங்கடலேயானகாலம் *
இனிக்களைகணிவர்க்கில்லையென்று உலகமேழினையுமூழில்வாங்கி *
முனித்தலைவன் முழங்கொலிசேர் திருவயிற்றில்வைத்தும்மையுய்யக்கொண்ட *
கனிக்களவத்திருவுருவத்தொருவனையே கழல்தொழுமாகல்லீர்களே. 4

| | | | |
|---|---|---|---|
| பார் எல்லாம் | பூமியடங்கலும் | முழங்கு ஒலி சேர் வயிற்றில் வைத்து | மஹாகோஷம் நிரம்பிய திருவயிற்றினுள் வைத்து |
| பனி பரவை | குளிர்ந்து பரந்திருக்கிற அலைகளானவை | | |
| ததும்ப | நிறையும்படி | உம்மை | உங்களை |
| நெடுங் கடலே காலம் | மஹாப்ரளய வெள்ளமே பரந்தபோது | உய்யக் கொண்ட | உஜ்ஜீவிப்பித்தருளினவனும் |
| இவர்க்கு | 'இவ்வுலகத்தார்க்கு | முனி தலைவன் | ஸாத்விகர்களில் தலைவனும் |
| இனி | இனிமேல் | கனி களவம் திரு உருவத்து ஒருவனையே | கனிந்த களாப்பழம் போன்ற திருவுருவத்தை யுடையனுமான ஒரு பெருமானையே |
| களைகண் இல்லை என்று | ரக்ஷகராவார் ஆருமில்லை' என்று | | |
| உலகம் ஏழினையும் | உலகங்களெல்லாவற்றையும் | கழல் தொழும் ஆ | திருவடிதொழும்படியை |
| ஊழில் வாங்கி | முறையாலே வாங்கி | கல்லீர்களே | கற்கமாட்டீர்களோ ? |

* * *—குளிர்ந்து பரந்திருக்கின்ற அலைகளின் கிளப்பத்தை யுடைத்தான கடலானது ஸர்வலோகங்களிலும் பெருகப்பெற்ற காலத்திலே 'இப் பெருவெள்ளத்தில் ஆழ்ந்து மாய்ந்துபோகக்கூடிய இவர்களை நாம் உபேக்ஷித்துவிட்டால் நம்மையொழிய வேறொருவரும் இவர்களைக் காக்கவல்லாரில்லையே!' என்று திருவுள்ளமிரங்கி, ஸர்வ ஸ்வாமியா யிருக்கையாகிற தனது முறைமையாலே ஸகல

லோகங்களையும் வாரிப் பிடித்துத் தனது திருவயிற்றினுள்ளே வைத்து உஜ்ஜீவிப்பித்தவனும், இப்படி ஆச்ரிதர்களை ரக்ஷிக்கப்பெற்றதனாலுண்டான மகிழ்ச்சியினால் திருமேனி புகர் பெற்றுக் களங்கனிவண்ணனுமான எம்பெருமானொருவனையே திருவடி வணங்கப் பாருங்கோளென்றாராயிற்று.

களைகண்—சரணம்.

முனிந்தலைவன் =நெஞ்சினுள்ளே சிந்தை செய்பவற்கு முனி யென்று பெயர்; எப்போதும் உலகங்கட்கு நன்மையைச் சிந்தை செய்பவனான தலைவன் என்றபடி.

இவ்வுலகங்களெல்லாம் திருவயிற்றினுள்ளே புகும்போது உண்டாகக் கூடிய ஆரவாரத்தின் மிகுதியைச் சொல்லுகிறது 'முழங்கொலிசேர் திருவயிறு' என்று.

பாராரும்காணுமேபரவைமா நெடுங்கடலேயானகாலம் *
ஆரானுமவனுடையதிருவயிற்றில் நெடுங்காலம்கிடந்தது * உள்ளத்
தோராதவுணர்விலீர் ! உணருதிரேலுலகளந்த வும்பர்கோமான் *
பேராளன்பேரான பேர்களாயிரங்களுமேபேசீர்களே. 5

| | | | |
|---|---|---|---|
| பார் | பூமியிலே | உணர்வு | மூடர்களே ! (நீங்கள்) |
| ஆரும் காணாமே | ஒருவரையும் காணவொண்ணாதபடி | உண[illegible]ர் ஏல் | சேதனர்களாயிருப்பீர்களாகில் |
| பரவை மா நெடு கடலே ஆன காலம் | பரந்திருந்துள்ள மஹாப்ரளய வெள்ளமே யான சமயத்தில் | உலகு அளந்த | உலகங்களை யளந்தருளின |
| ஆரானும் | எவரும் | உம்பர் கோமான் | நித்யஸூரிநாதனும் |
| அவனுடைய திரு வயிற்றில் | அப்பெருமானுடைய திருவயிற்றில் | பேராளன் | பெருமை பொருந்தியவனான எம்பெருமானுடைய |
| நெடுங்காலம் கிடந்தது | வெகுகாலம் வரையில் அடங்கியிருந்ததை | பேர் ஆன | திருநாமங்களான |
| உள்ளத்து | நெஞ்சிலே | பேர்கள் ஆயிரங்களுமே | ஸஹஸ்ரநாமங்களையே |
| ஓராத | சிந்திக்கப்பெறாத | பேசீர்கள் | பே |

* * *—இப்பூமண்டலத்தில் ஒருத்தரையுங் காணவொண்ணாதபடி எங்கும் தானேயாய்க்கொண்டு கடல்வெள்ளம் பரம்பினகாலத்திலே ஒருவர் தப்பாமல் எம்பெருமானுடைய திருவயிற்றிலே நெடுங்காலம் கிடந்து ஸத்தை பெற்ற தன்மையை ஆராயமாட்டாத அறிவுகேடர்காள்! நீங்கள் பெற்றிருக்கிற சைதந்யம் பயன்படவேண்டில், தன்னுடைய ஸர்வஸ்வாமித்வம் தோன்ற உலகங்களை யளந்துகொண்டவனான உம்பர்கோமானுடைய பல்லாயிரம் திருநாமங்களையே பேசிக்கொண்டிருத்தல் உங்கட்குத் தக்கதாம் என்றாராயிற்று.

பாட்டினடியில் பார் என்று நிலவுலகத்தைச் சொன்னது மற்றுமுள்ள உலகங்கட்கும் உபலக்ஷணமென்க. ... ... ... ... 5

பேயிருக்குநெடுவெள்ளம்பெருவிசும்பின் மீதோடிப்பெருகுகாலம் *
தாயிருக்கும்வண்ணமேயும்மைத்தன் வயிற்றிருத்தியுய்யக்கொண்டான் *
போயிருக்கமற்றிங்கோர்புதுத்தெய்வம் கொண்டாடும்தொண்டீர் *
பெற்றதாயிருக்கமணேவெந்நீராட்டுதிரோ ? மாட்டாததகவற்றீரே. 6

| | | | |
|---|---|---|---|
| பேய் இருக்கும் | (மனிசரொருவருமில்லாத படி) பேய் பிசாசுகளே யிருக்கவேண்டும்படியான | உய்யக் கொண்டான் | உஜ்ஜீவிப்பித்தருளின பெருமான் |
| நெடு வெள்ளம் | மஹாப்ரளய வெள்ளமானது | போயிருக்க | வெறுக்கும்படியாக |
| | | இங்கு | இங்கே |
| பெரு விசும்பின் மீது ஓடி | ஆகாசத்தின்மேல் வழிந்தோடி | மற்று ஓர் புது தெய்வம் | மற்றொரு க்ஷுத்ர தேவதையை |
| | | கொண்டாடும் | கொண்டாடுகிற |
| பெருகு காலம் | பிரவஹித்த காலத்திலே | தொண்டீர் | தொண்டர்களே ! |
| தாய் இருக்கும் வண்ணமே | பெற்றதாய்போல (ப் பரிந்து) | பெற்ற தாய் இருக்க மணை வெந்நீர் ஆட்டுதிரோ | பெற்றதாய் இருக்க (அவளை உபேக்ஷித்து) மணைக்கட்டைக்கு உபசாரம் செய்கிறீர்கள் |
| உம்மை | உங்களை | | |
| தன் வயிறு | தன் திருவயிற்றிலே | மாட்டாத தகவு அற்றீர் | செய்யமாட்டாத இரக்கம் அற்றவரானீர்கள். |
| இருத்தி | இருக்கவைத்து | | |

* * *—மனிசர் முதலானோர் ஒருவருமில்லாமையாலே பேய் பிசாசுகளே இருக்கவேண்டும்படியாக மஹாப்ரளய வெள்ளமானது அண்டகடாஹத்தின் மேலுஞ் சென்று பெருகப் புகுந்தகாலத்திலே, பெற்றதாய்போலப் பரிந்துவந்து உங்களையெல்லாம் வாரித்திரட்டித் திருவயிற்றிலே வைத்து உஜ்ஜீவிப்பித்தவனை எம்பெருமான் திருவுள்ள முகக்கும்படியாக அவனைத் துதித்தல் ப்ராப்தமாயிருக்க, அது செய்யாதே அவன் திருவுள்ளம் வெறுக்கும்படியாகச் சில க்ஷுத்ர தெய்வங்களை நீங்கள் கொண்டாடுவதானது, பெற்றதாய்க்கு ஒரு உபசாரமும் பண்ணாதே விட்டிட்டு அறிவற்றதொரு மணைக்கட்டைக்கு உபசாரம்பண்ணுவது போலிரா நின்றதென்று இழித்துரைக்கிறார்.

உய்யக்கொண்டான் போயிருக்க=உஜ்ஜீவிப்பித்தருளின எம்பெருமான் இருக்கையில் அவனை விட்டு என்றும் பொருள் கொள்ளலாம்.

பெற்றதாயிருக்க மணைவெந்நீராட்டுதிர்=‘மணை’ என்றது அசேதந வஸ்துக்களையெல்லாம் சொன்னபடி. ‘வெந்நீராட்டுதிர்’ என்றது உபசாரங்கள் பலவற்றையுஞ் சொன்னபடி. ‘மணைவெந்நீராட்டுமாபோலே செய்கின்றீர்’ என்று சொல்ல வேண்டுமிடத்து (அவாய் நிலையாக) உவமையை உள்ளடக்கிச் சொல்லியிருப்பதன் கருத்து யாதெனில், தேவதாந்தரபஜனம் பண்ணுவதோடு மணை நீராட்டுவதோடு ஒருவாசியில்லை; இதுதான் அது, அதுதான் இது என்று இரண்டுக்குமுள்ள அபேதத்தைக் காட்டினபடியாம். மாதர்கள் பிரஸவித்தவுடனே பெற்ற அத்தாயையும் பிறந்த சிசுவையும் ஸ்நாநஞ்செய்வித்தல் மலைநாட்டு வழக்கமாக வெகு முற்காலத்தில் இருந்ததாம்; பிரஸவித்தவுடனே தாயை நீராட்டுவது பலவகைக் கஷ்டங்களுக்குக் காரணமாவதால் அத்தாய்க்குப் பதிலாக ஒரு மணைக்கட்டையை ஸ்நானஞ் செய்விப்பது இடைக்காலத்து வழக்கமாக இற்றைக்கும் நடந்து வருகின்றதாம்; அதனைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்கிறபடி என்று சிலர் சொல்லுவர். நம்மாழ்வார் திருவாசிரியத்தில் ஆறாம்பாட்டில் “ஈன்றோளிருக்க மணைநீராட்டி” என்றருளிச் செய்ததுங் காண்க.

மாட்டாத தகவு அற்றீரே=ஒருவர்க்கும் எளிதில் கிடைக்கமாட்டாத எம்பெருமானுடைய திருவருளுக்கு இலக்காகாதொழிந்தீர்களே ! என்றவாறு. ... 6

மண்ணாடும்விண்ணாடும்வானவரும் தானவரும்மற்றுமெல்லாம்
[illegible] ...ண்ட *
கண்ணாளன்கண்ணமங்கைநகராளன் கழல்சூடி * அவனையுள்ளத்
தெண்ணாதமானிடத்தை யெண்ணாதபோதெல்லா மினியவாறே.

| | |
|---|---|
| மண் நாடும் | பூலோகமும் |
| விண் நாடும் | சுவர்க்கமும |
| வானவரும் | தேவர்களும் |
| தானவரும | அசுரர்களும் |
| மற்றும் எல்லாம் | மற்றுமுண்டான பொருள்களுமெல்லாம் |
| | தகைய வொண்ணாத |
| பெரு வெள்ளம் | மஹாப்ரவாஹம் |
| உண்ணாமல் | (உலகத்தை) விழுங்காதபடி |
| தான் விழுங்கி | தான் திருவயிற்றிலே வைத்து நோக்கி |
| உய்யக் கொண்ட | உஜ்ஜீவிப்பித்தருளின |
| கண்ணாளன் | பரமதயாளுவும் |
| கண்ணமங்கை நகராளன் | திருக்கண்ணமங்கைத் தலத்திற்குத் தலைவனுமாய எம்பெருமானுடைய |
| கழல் | திருவடிகளை |
| சூடி | சிரமேற்புனைந்து |
| அவனை | அப்பெருமானை |
| உள்ளத்து | நெஞ்சிலே |
| எண்ணாத | சிந்திக்கமாட்டாத |
| மானிடத்தை | மனிசர்களை |
| எண்ணாத போது எல்லாம் | நினைக்கப்பெறாதகாலமெல்லாம் |
| இனிய ஆறே | (எமக்கு) இனிதாகச் செல்லும் விதம் என்னே! |

* * *—ஒருவராலும் தகையவொண்ணாத மஹாப்ரளய வெள்ளமானது மண்ணுலகம் விண்ணுலகம் வானவர் தானவர் முதலான எல்லாப் பொருள்களையும் ஆக்ரமித்துக்கொள்ளப் புகுங்கால் அந்த ஆபத்து நேராதபடி அனைத்தையும் தானே திருவயிற்றினுள்ளடக்கிவைத்துப் பாதுகாத்தருளின பரம தயாளுவாய் அப்பெருங்குணம் நன்கு விளங்கத் திருக்கண்ணமங்கைத் திருப்பதியிலே நித்ய ஸந்நிதிபண்ணியிருக்குமவனான எம்பெருமானுடைய திருவடிகளைத் தலைமேற் புனைந்து அப்பெருமானையே இடைவிடாது சிந்தித்திருத்தல் நன்றியறிவுக்குத் தகுதி; அப்படி சிந்திக்கமாட்டாத பாவிகளை நாம் நெஞ்சிலும் இட்டு எண்ணாதிருந்தால் அதுவே நமக்குப் பரமபோக்யம் என்கிறார்.

அவனையுள்ளத் தெண்ணாதமானிடத்தை யெண்ணாதபோதெல்லா மினிய வாறே" என்றருளிச் செய்கின்ற இவ்வாழ்வாருடைய உட்கருத்து யாதெனில்; கேண்மின்; நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் "மேலால் பிறப்பின்மை பெற்று அடிக்கீழ்க் குற்றேவலன்று, மறப்பின்மையான் வேண்டும் மாடு" என்று எம்பெருமானை ஒருபோதும் மறவாதிருக்கப் பெறவேணுமென்று பிரார்த்தித்தார்; திவி வா புவி வா மமாஸ்து வாஸோ நரகே வா நரகாந்தக! ப்ரகாமம்—அவதீரிதசாரதாரவிந்தௌ சரணௌ தே மரணேபி சிந்தயாமி." (முகுந்தமாலை) என்று பிரார்த்தித்த மஹான்களுமுண்டு; எம்பெருமானையும் எம்பெருமானடியார்களையும் சிந்திக்கையாகிற புருஷார்த்தத்திற் காட்டிலும் பகவத் பாகவத விமுகர்களைச் சிந்தியாதிருக்கப் பெறுகையே பரமபுருஷார்த்தமென்பது திருமங்கையாழ்வாருடைய திருவுள்ளம். கீழ்க் கடன்மல்லைத் தலசயனத் திருப்பதிகத்தில் "மருவினிய தண்ணார்ந்த கடன்மல்லைத் தலசயனத் துறைவாரை, எண்ணாதே யிருப்பாரையிறைப்பொழுது மெண்ணோமே" என்றார்; அப்படி பகவத்விமுகர்களை எண்ணப் பெறாதிருக்கிற காலமே மிகச் சிறந்ததென்றாரிங்கு. இதனால் தேர்ந்த பொருள் யாதெனில்; ஒருவன் பகவத் பாகவதர்களைச் சிந்திக்கவுமாம், சிந்தியாதொழியவுமாம்; பகவத்பாகவத விரோதிகளை நெஞ்சாலும் நினைக்கப் பெறாதிருந்தால் அதுவே போதும் என்றதாம். "இங்கே வியாக்கியான வாக்கியமுங் காண்மின்:—ஜ்ஞாநமும் வேண்டா; வைஷ்ணவ ஸஹவாஸமும் வேண்டா; அவைஷ்ணவர்களை நினையாத போது இனிதென்கை." ... ... ... ... 7

மறங்கிளர்ந்தகருங்கடல்நீருரந்துரந்து பரந்தேறியண்டத்தப்பால் *
புறங்கிளர்ந்தகாலத்துப் பொன்னுலகமேழினையுமூழில்வாங்கி *
அறங்கிளர்ந்ததிருவயிற்றினகம்படியில் வைத்தும்மையுய்யக்கொண்ட *
நிறங்கிளர்ந்தகருஞ்சோதிநெடுந்தகையை நினையாதார்நீசர்தாமே.

| | | | |
|---|---|---|---|
| மறம் கிளர்ந்த | கொடுமைபொருந்திய | அறம் கிளர்ந்த திரு வயிற்றின் அகம் படியில் வைத்து | தருமம் விஞ்சின திருவயிற்றி னுட்புறத்திலே வைத்து |
| கருங்கடல் நீர் | கருங்கடலின் வெள்ளமானது | உம்மை | உங்களை |
| உரம | வேகத்தோடு | உய்யக் கொண்ட | உஜ்ஜீவிப்பித்த |
| துரந்து | ஓடி | கரு நிறம் | கருமை மிக்கிருந்துள்ள |
| பரந்து | சுற்றும்பரம்பி | சோதி | தேஜஸ்ஸையுடைய |
| அண்டத்து அப்பால் புறம் | அண்டகடாஹத்திற்கு அவ்வருகாக | நெடுந் தகையை | ஸர்வேச்வரனை |
| ஏறி | வியாபித்து | நினையாதார் தாம் | சிந்திக்கப்பெறுதவர்கள் |
| கிளர்ந்த காலத்து | கிளர்ந்த ஸமயத்திலே, | நீசர் | இழிகுலத்தவரேயாவர். |
| பொன் | விரும்பத்தக்க | | |
| உலகம் ஏழினையும் | உலகங்களை யெல்லாம் | | |
| ஊழில் | முறைமையாலே | | |
| வாங்கி | வாரிப்பிடித்து | | |

* * *—பாதுகாப்புக்காக ஏற்படுத்தப்பட்டிருந்த கருங்கடல்தானே கொடுமை பொருந்தியதாகிக் கனவேகமாகப் பாய்ந்தோடிச் சுற்றும் பரம்பி அண்ட கடாஹத்துக்கு அவ்வருகாகக் கிளர்ந்த ஸமயத்திலே, இவ்வுலகங்கட்கெல்லாம் நம்முடைய வயிறல்லது வேறுபுகலில்லையென்று திருவுள்ளம்பற்றித் தன்னுடைய ஸ்வாமித்வமே ஹேதுவாக ஏழுலகங்களையும் வாரிப்பிடித்துத் திருவயிற்றினுள்ளே வைத்து ரக்ஷித்தருளி அதனால் திருமேனி புகர்படைத்தவனான பரஞ்சோதிப் பெருமானை நினைக்கமாட்டாதவர்களுக்கு மேற்பட்ட நீசரில்லை என்றாராயிற்று. ... 1

அண்டத்தின்முகடழுந்தஅலைமுந்நீர்த் திரைததும்ப ஆ! ஆ! வென்று *
தொண்டர்க்குமமரர்க்கும்முனிவர்க்கும் தானருளி*உலகமேழும்
உண்டொத்ததிருவயிற்றினகம்படியில் வைத்தும்மையுய்யக்கொண்ட *
கொண்டற்கைம்மணிவண்ணன் தண்குடந்தைநகர்பாடியாடீர்களே

| | | | |
|---|---|---|---|
| அண்டத்தின் முகடு | அண்டபித்தியானது | திருவயிற்றின் அகம்படியில் வைத்து | திருவயிற்றி னுட்புறத்திலே வைத்து |
| அழுந்த | உள்ளே அழுந்தும்படியாக | உம்மை | உங்களை |
| அலை முந்நீர் | அலைக்கின்ற கடலினுடைய | உய்யக் கொண்ட | உஜ்ஜீவிப்பித்தருளின |
| திரை | அலைகளானவை | கொண்டல் கை | மேகம்போல் உதாரனாய் |
| ததும்ப | செறிய, | மணி வண்ணன | நீலமணி நிறத்தனான பெருமானுடைய |
| ஆ ஆ என்று | ஐயோவென்று | தண் குடந்தை நகர் | திருக்குடந்தைப் பதியை |
| தொண்டர்க்கும் | பக்தர்களுக்கும் | பாடி | பாடிக்கொண்டு |
| அமரர்க்கும் | தேவர்களுக்கும் | ஆடீர்கள் | நர்த்தனம் செய்யுங்கோள். |
| முனிவர்க்கும் | ரிஷிகளுக்கும் | | |
| தான் அருளி | தான் கிருபைசெய்து | | |
| உலகம் ஏழும் உண்டு | உலகங்களை யெல்லாம் அமுது செய்தவிடத்திலும் | | |
| ஒத்த | முன்போலவே யிருக்கப்பெற்ற | | |

* * *—அண்டபித்தியையும் அளாவிச்சென்று அலையெறிகின்ற மஹாப்ரளயவெள்ளம் பரந்தவளவிலே 'ஐயோ! நம்முடைய உலகுக்கு இப்படிப்பட்ட அனர்த்தம் விளைந்திட்டதே!' என்று திருவுள்ளம் நொந்து ஹாஹாகாரம்பண்ணித்

தொண்டர்க்கும் தேவர்கட்கும் முனிவர்கட்கும் மற்றுமுள்ளார்க்கும் மஹா க்ருபை பண்ணி ஏழுலகங்களையும் திருவயிற்றினுள்ளே வைத்து உஜ்ஜீவிப்பித் தருளின பரமோதாரனை நீலமணிவண்ணனான எம்பெருமான் நித்யவாஸம் செய்தருளு மிடமான திருக்குடந்தை நகரைப்பாடி யாடுங்கோளென்கிறார்.

உண்டு ஒத்த திருவயிறு—ஏழுலகங்களையும் உட்கொண்ட வயிறு மிகப் பருத்திருக்கவேணுமே; அப்படியில்லை; உட்கொள்வதற்கு முன்பு எங்ஙனமிருந்ததோ அங்ஙனமேயிருந்தது, (அல்லது) மற்ற அவயவங்களைப் போலவே யிருந்தது என்றவாறு.

* வாடினேன் வாடியென்று தொடங்கின முதல்திருமொழியில் "சொற் பொருளாளீர்! சொல்லுகேன் வம்மின் சூழ்புனற் குடந்தையே தொழுமின்" என்ற தற்குச் சேர இங்குத் "தண்குடந்தை நகர்பாடியாடீர்களே" என்று உபஸம் ஹாரம் செய்தருளினரென்று உணர்க. மேலே திருநெடுந்தாண்டகத்திலும் "தண்குடந்தைக் கிடந்த மாலை நெடியானை யடிநாயேன் நினைந்திட்டேனே" என்று தலைக்கட்டியருளுமாறறிக. ... .. .... ... 9

தேவரையுமசுரரையுந்திசைகளையும் கடல்களையும்மற்றும்முற்றும் *
யாவரையுமொழியாமேயெம்பெருமா னுண்டுமிழ்ந்ததறிந்துசொன்ன *
காவளரும்பொழில்மங்கைக்கலிகன்றி யொலிமாலைகற்றுவல்லார் *
பூவளரும்திருமகளாலருள்பெற்றுப் பொன்னுலகிற்பொலிவர்தாமே. 10

| | |
|---|---|
| தேவரையும் | தேவர்களையும் |
| அசுரரையும் | அசுரர்களையும் |
| திசைகளையும் | திக்குக்களையும் |
| கடல்களையும் | ஸப்த ஸாகரங்களையும் |
| மற்றும் முற்றும் யாவரையும் ஒழியாமே | மற்றுமுள்ள எல்லாவற்றையும் ஒன்று தப்பாமல் |
| எம பெருமான் உண்டு உமிழ்ந்தது | எம்பெருமான் (பிரளய காலத்தில்) திருவயிற்றிலே வைத்து (ப்பின்பு) வெளிப்படுத்தியதை |
| அறிந்து | உள்ளபடியறிந்து |
| சொன்ன | அருளிச்செய்த |
| காவளரும் பொழில் மங்கை | பூந்தோட்டங்கள் வளரப் பெற்ற சோலைகளையுடைய திருமங்கை நாட்டுக்குத் தலைவரான |
| கலிகன்றி | ஆழ்வாருடைய |
| ஒலி மாலை | சொல்மாலையாகிற இத்திருமொழியை |
| கற்று வல்லார் தாம | ஓதி உணரவல்லவர்கள் |
| பூ வளரும் திரு மகளால் அருள் பெற்று | தாமரைப்பூவில் வளர்கின்ற பெரிய பிராட்டியாராலே அருள்செய்யப்பெற்று |
| பொன் உலகில் | நித்ய விபூதியிலே |
| பொலிவர் | விளங்கப் பெறுவர்கள். |

* * *-தேவர் அசுரர் திசைகள் கடல்கள் முதலான மு பொருள்களையும் பிரளயங்கொள்ளாதபடி எம்பெருமான் பாதுகாத்தருளின வரலாற்றை யறிந்துரைத்த இத்திருமொழியைக் கற்றுவல்லவர்கள் புருஷகாரபூதையான பெரிய பிராட்டியாருடைய திருவருளுக்கு இலக்காகப் பெற்று நித்யவிபூதியிலே * நித்ய ஸ்ரீர் நித்யமங்களமாக வாழப்பெறுவர் என்று பயனுரைத்துத் தலைக்கட்டினாயிற்று. ... ... ... ... ... 10

அடிவரவு:—மை, நில்லாத, நெற்றி, பனி, பாராரும், பேய், மண், மறம், அண்டம், தேவரை, நீணகம்.

ஆறுந்திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பதினோராம்பத்து—ஏழாந்திருமொழி, நீணாகஞ்சுற்றி.

**உரையவதாரிகை:**—செவி வாய் கண் மூக்கு முதலிய உறுப்புக்களை எம்பெருமான் நமக்கு அளித்தது இவ்வுறுப்புகளைக்கொண்டு பகவத்விஷயாநுபவம் பண்ணிக் களிப்பதற்காகவே யன்றி வேறொரு ப்ரயோஜனத்துக்காக வன்று என்பதை இவ்வாழ்வார் நன்குணர்ந்தவராகையாலே இப்படிப்பட்ட தம்முணர்வைப் பலரும் தெரிந்துகொள்ளுமாறு இத்திருமொழி அருளிச்செய்கிறார். தாங்கள் பெற்ற கரணங்களின் உபயோகத்தைத் தெரிந்துகொள்ளாமல் பாழாய்ப் போகிறவர்களை நிந்தித்து எம்பெருமானுடைய செயல்களை அநுபவியாதவர்களின் உறுப்புகள் உறுப்புகளேயல்லவென்கிறார்.

அவரவர்கள் தாம் தாம் படைத்த கரணங்களைக்கொண்டு பகவத்விஷயத்திலே அவகாஹித்து உஜ்ஜீவநம் பெறுவதே உரியது என்று உபதேசிப்பதிலே இத்திருமொழி நோக்குடையது என்றுணர்க. *

**நீணாகம்சுற்றிநெடுவரைநட்டு*ஆழ்கடலைப் பேறான்கடைந்தமுதம்கொண்டுகந்தபெம்மானை ***
**பூணாரமார்வனைப்புள்ளூரும்பொன்மலையை*காணாதார்கண்ணென்றும்கண்ணல்லகண்டாமே. 1**

| | | | |
|---|---|---|---|
| நீள் நாகம் | நீண்ட வாஸுகிநாகத்தை | பூண் ஆர மார்வனை | ஹாரங்களை யணிந்த திருமார்பையுடையனும் |
| சுற்றி | (கடைகயிறாகச்) சுற்றி | புள் ஊரும் | பெரிய திருவடியை ஏறிச்செலுத்துகின்ற |
| நெடு வரை | பெரிய (மந்தர) மலையை | பொன் மலையை | பொன்மலை போன்றவனுமான ஸர்வேச்வரனை |
| நட்டு | (மத்தாக) நாட்டி | காணாதார் | ஸேவிக்கப்பெறாதவர்களுடைய |
| ஆழ் கடலை | ஆழ்ந்த கடலை | கண் | கண்களானவை |
| பேறான் | மதியாதவனாகி | என்றும் | ஒருநாளும் |
| கடைந்து | கடைந்து | கண் அல்ல | கண்களே அல்ல; |
| அமுதம் | அம்ருதத்தை | கண்டாம் | (இதை நாம் நன்கு) அறிவோம். |
| கொண்டு | (தேவர்கட்கு) எடுத்துத் தந்து | | |
| உகந்த | திருவுள்ளமுவந்த | | |
| பெம்மானை | பெருமானும், | | |

***—துர்வாஸ முநியின் சாபத்தினால் செல்வமனைத்தையும் இழந்த இந்திரன் தேவர்களோடு வந்து சரணமடைய அவனுக்கருள்செய்து மந்தரமலையை மத்தாககாட்டி வாஸுகியென்னும் மஹாநாகத்தைக் கடைகயிறாகப் பூட்டித்திருப்பாற்கடலைக் கடைந்து அமுதமெடுத்துக் கொடுத்தருளித் திருவுள்ளமுவந்தவனும், முத்து வடங்களணிந்த திருமார்பையுடையவனும், ஒரு பொன்மலைமேலே பொன்மலை யிருந்தாற்போலே பெரிய திருவடி தோளின்மேலே யெழுந்தருளி யிருப்பவனுமான எம்பெருமானை ஸேவிக்கப் பெறாதவர்களின் கண்கள் கண்களேயல்ல, புண்களேயாம் என்றவாறு.

**பேறான் கடைந்து**—'திருப்பாற்கடல் நம்முடைய படுக்கைத்தலமாயிற்றே, இதையோ நாம் கடைவது' என்று பாராமல் ஆச்ரிதர்கட்குக் காரியஞ் செய்வதையே கனமாகக்கொண்டு கடைந்தபடியைச் சொல்லுகிறது.

**அமுதங்கொண்டு உகந்த**—இந்திரன் வந்து சரணமடைந்தது ப்ரயோஜநாந்தரத்துக்காக வாயினும், 'இந்த அற்ப பலனை யபேக்ஷித்தும் வேறொரு தெய்வத்தைப்பணியாதே நம்மை வந்து பணிந்தானே' என்று அதையே மஹாகுணமாகக் கொண்டு தன்பேறாகக் காரியம்செய்து கொடுத்து மகிழ்ந்தபடி.

புள்ளூரும் பொன்மலையை—திருவாய்மொழியில் "காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல்" என்று 'பொன்மலையின்மேலே காள மேகம் படிந்தாற்போலே' என்றநுபவித்தார் நம்மாழ்வார்; இங்கு இவ்வாழ்வாருடைய அநுபவம் விலக்ஷணமாயிருக்கிறது; பொன்னுருவாகக்கொண்டு பேசுகிற படி. நீலமேகத் திருவுருவைப் பொன்னிறமாகச் சொல்வதெங்ஙனே யெனில்; "ஹிரண்யவர்ணாம்ஹரிணீம்" என்கிற சுருதியின்படியே பொன்னின் நிறம் போன்ற நிறமுடையவளான பிராட்டியின் நித்ய ஸம்ச்லேஷத்தாலே எம்பெருமானுடைய கரிய திருமேனியும் அப்படியே பொன்னிறமாகப் பெற்றதென்னலாம்; சாந்தோக்ய உபநிஷத்தில் (1—6) "ய ஏஷோந்தராதித்யே ஹிரண்மய: புருஷோத்ருச்யதே ஹிரண்யச்மச்ருர் ஹிரண்யகேச ஆப்ரணகாத் ஸர்வ ஏவஸுவர்ண:" என்று ஓதப்பட்டுள்ளமையால் அதுகொண்டு சொல்லிற்று என்னலாம். பொன்மலை—பொன்போல் விரும்பத்தக்க மலை என்னவுமாம்.

காணாதார் கண் என்றும் கண்ணல்ல—"கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே? கண்ணிமைத்துக் கண்டார்தம் கண்ணென்ன கண்ணே!".

கண்டாம்—கண்டோம். .... ... ... ... 1

நீள்வான்குறளுருவாய்நின்றிரந்துமாவலிமண் * தாளாலளவிட்ட தக்கணைக்குமிக்கானை *
தோளாதமாமணியைத்தொண்டர்க்கினியானை * கேளாச்செவிகள்செவியல்லகேட்டாமே. 2

| | | | |
|---|---|---|---|
| நீள்வான் | நீண்டு வளர்வதற்காக | தக்கணைக்கு மிக்கானை | அக்ரதாம்பூலமளிப்பதற்குச் சிறந்தவனும் |
| குறள் உரு ஆய் | வாமநவேஷதாரியாய் | தோளாத மா மணியை | துளைபட்டு ஒளி மழுங்காத நீலமணி போன்றவனும் |
| நின்று | (யஜ்ஞசாலையிலேவந்து) நின்று | தொண்டர்க்கு இனியானை | பக்தர்களுக்குப் போக்யனுமான எம்பெருமானை |
| மாவலி | மஹாபலியினிடத்தில் | கேளா | கேட்கப்பெறாத |
| மண் | (மூவடி) மண்ணை | செவிகள் | காதுகள் |
| இரந்து | யாசித்து | செவி அல்ல | காதுகளேயல்ல; |
| தாளால் | திருவடிகளாலே | கேட்டாம் | (இதை நாம் பெரியோரிடத்துக்) கேட்டிருக்கின்றோம். |
| அளவு | [illegible]'காண்டவனும் | | |

* * *—வாமநமூர்த்தியாய் மஹாபலியின் யஜ்ஞபூமியிலே சென்று மூவடி மண் யாசித்துப் பெற்றுத் திரிவிக்ரமனாகி மூவுலகங்களையு மளந்துகொண்ட பரம பூஜ்யனும், அநுபவித்து ஒளிமழுங்காத ரத்னம்போலே சீர்மைபெற்றிருப்பவனும், அன்பருடைய நெஞ்சிலே இன்புற இருப்பவனுமான எம்பெருமானுடைய திருப்புகழ்களைக் கேட்பதே செவிபடைத்ததற்குப் பயனாதலால் அப்படி கேட்கப் பெறாத செவிகள் செவியல்ல; நிலத்திலுள்ள பாழிகளோடு அவற்றோடு ஒரு வாசியில்லை யென்றவாறு.

நீள்வான் குறளுருவாய்—புலி, சிங்கம் முதலியவை உடலைச் சுருக்கிக்கொண்டு பதுங்கி நிற்பது எப்படி பாய்வதற்காகவோ அப்படியே எம்பெருமானும் நீளுகைக்காகவே குறளுருவாயின னென்க.

"சுருங்க நின்றதனையும் பெருக்க வளருகைக்கு உறுப்பாக" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியுங் காண்க.

தக்கணைக்கு மிக்கான்—'தக்ஷிணா' என்னும் வடசொல் தக்கணையெனத் திரிந்தது. தக்ஷிணைக்கு மிகச் சிறந்தவனென்றது பரமபூஜ்யனென்பதைச் சொன்னபடி; தருமபுத்திரருடைய ராஜஸூயயாகத்திலே இது தெளிவாம்.

தோஷாத மாமணியை—ரத்னத்திற்குத் துளைவிட்டால் நூல் நுழைத்து அநுபவிக்கப்படுவதாகும்; அப்படி அநுபவிக்கப்பட்டு ஒளி குன்றப்பெறும் ரத்னம் போலன்றியே பெட்டியிலிட்டுக் காணவேண்டும்படியான ரத்னம்போலே ஒளி மல்கப் பெற்றிருக்குந் தன்மையைச் சொன்னபடி. "அநாவித்தம் ரத்நம்" என்ற சாகுளந்தளநாடக ச்லோகமு முணர்க.

'தொண்டர்க்கினியானைக் கேளாச் செவிகள்' என்றது தொண்டர்க்கினியானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதி விஸ்தரங்களை இதிஹாஸபுராணாதி முகமாகக் கேட்கப் பெறாத செவிகள் என்றபடி.

கேட்டாம்—கேட்டோம். ... ... ... ... 2

தூயானைத்தூயமறையானை*தென்னாலி மேயானைமேவாளுயிருண்டமுதுண்ட
வாயானை*மாலைவணங்கிஅவன்பெருமை பேசாதார்*பேச்சென்றும்பேச்சல்லகேட்டாமே. 3

| | | | |
|---|---|---|---|
| தூயானை | பரமபவித்திரனும | மாலை | திருமாலை |
| தூய மறையானை | பரிசுத்தமான வேதங்களினால் பிரதிபாதிக்கப் படுபவனும் | வணங்கி | அடிபணிந்து |
| | | அவன் | அப்பெருமானுடைய |
| தென் ஆலி மேயானை | அழகிய திருவாலிப் பதியிலே பொருந்தி வாழ்பவனும் | பெருமை | பெருமேன்மையை |
| | | பேசாதார் | பேசப்பெறாதவர்களுடைய |
| மேவாள் உயிர் உண்டு அமுது உண்ட வாயானை | பொருத்தமற்றவளான பூதனையினுடைய உயிரை உறிஞ்சியுண்டு (அந்த விஷத்திற்கு மாற்றாகத் தாயின்) முலைப்பாலமுதை உண்ட வாயை யுடையவனுமான | பேச்சு | பேச்சுக்களானவை |
| | | என்றும் | ஒருநாளும் |
| | | பேச்சு அல்ல | பேச்சுக்களாகமாட்டா; |
| | | கேட்டாம் | (இதனை நாம் பெரியோர்களிடத்துக்) கேட்டிருக்கின்றோம். |

*** பரமபரிசுத்தனும் வேதங்களால் ஓதப்படுபவனும் திருவாலித் திருநகரியில் எழுந்தருளியிருப்பவனும் பூதனையின் முலையைச் சுவைத்துயிருண்டு அதற்கு மாற்று மருந்தாக அமுதுண்டவாயனுமான திருமாலை வணங்கி அவனுடைய பெருமைகளைப் பேசுவதே பேச்சாகும்; மற்றதொன்றும் பேச்சாகமாட்டாது என்றதாயிற்று.

தூயான்—அபரிசுத்திக்கு எல்லைநிலமான நம்முடைய உடலிலே உறையச் செய்தேயும் தன்னுடைய பரிசுத்தத்தன்மை குன்றாமலிருப்பவன் தானும் பரிசுத்தனாய்ப் பிறரையும் பரிசுத்தராக்கவல்லவன்.

தூயமறையான்—மறைக்குத் தூய்மையாவது "வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:" "ஸர்வேவேதாயத் பதமாமநந்தி" இத்யாதிப்படியே எம்பெருமானொருவனையே பிரதிபாதிக்கவற்றா யிருக்கை.

தென்னாலிமேயானை- ல ப மாகக் கேட்டுப் போகையன்றிக்கே அர்ச்சாவதாரங்களிலே க் காணலாயிருக்கை.

அவன் பெருமை பேசாதார்பேச்சு என்றும் பேச்சல்ல—அவர்கள் பேச்சோடு கடலோசையோடு ஒரு வாசியில்லை யென்க. ... .. ... 3

கூடாவிரணியனைக்கூருகிரால்மார்பிடந்த*ஓடாவடலரியைஉம்பரார்கோமானை*
தோடார்நறுந்துழாய்மார்வனை*ஆர்வத்தால் பாடாதார்பாட்டென்றும்பாட்டல்லகேட்டாமே.

| | | | |
|---|---|---|---|
| கூடா | பகைவனான | தோடு ஆர் நறு துழாய் மார்வனை | இதழ்கள் மிக்க நறுந்துழாய் மாலையணிந்த திருமார்பை யுடையனுமான எம்பெருமானை |
| இரணியனை | ஹிரண்யாஸுரனுடைய | ஆர்வத்தால் | அன்புடனே |
| மார்வு | மார்பை | பாடாதார் | பாடப்பெறாதவர்களுடைய |
| கூர் உகிரால் | கூர்மைபொருந்திய நகங்களாலே | பாட்டு | பாட்டுக்களானவை |
| | கீண்டருளின, | என்றும் | ஒரு நாளும் |
| ஓடா | (அவ்விரண்யனுக்குப்) பின் வாங்காத | பாட்டு அல்ல | பாட்டுக்களாகமாட்டா; |
| அடல் | வீரம் பொருந்திய | கேட்டாம | (என்று நாம் பெரியோர்களிடத்தில்) கேட்டிருக்கிறோம். |
| அரியை | | | |
| உம்பரார் கோமானை | நித்யஸூரிகட்குத் தலைவனும் | | |

* * *—அநுகூலித்து வாழப்பெறாதே பகைவனாய் முடிய நின்ற இரணியனை ஆயுதத்தாலன்றியே திருநகங்களாலே கிழித்தொழித்த விலக்ஷணமான நரஸிம்ஹ மூர்த்தியானவனும், இவ்வவதாரத்தாலே பிரமன் முதலியோர்க்குக் குடியிருப்புக் கொடுத்துத் 'தான் அவர்களுக்கு ஸ்வாமி' என்பதை நிலைநிறுத்திக் கொண்டவனும், சிறுக்கனான ப்ரஹ்லாதாழ்வானுக்கு விரோதியைப்போக்கி மாலையிட்டிருந்தவனுமான ஸர்வேச்வரனை ப்ரேமபரவசராய்ப் பாடுகின்றவர்களின் பாட்டுக்களே பாட்டுக்களாம்; அல்லாதாருடைய பாட்டுக்களெல்லாம் நரியூளை பிறந்தோடு வாசியற்றிருக்குமென்றவாறு.

ஓடாவடலரியை—இரணியனைக்கண்டு பின்வாங்கியோடாத நரசிங்கம்; இனி, ஓடுதல் நடையாடுதலாய், நாட்டில் நடையாடாத [விலக்ஷணமான] நரசிங்கம் என்னவுமாம். ... ... ... ... ... 4

மையார்கடலும்மணிவரையும்மாமுகிலும்*கொய்யார்குவளையும்காயாவும்போன்றிருண்ட
மெய்யானை*மெய்யமலையானைச்சங் கேந்தும் கையானை*கைதொழாக்கையல்லகண்டாமே. 5

| | | | |
|---|---|---|---|
| மை ஆர் கடலும் | கருங்கடலையும் | மெய்யம் மலையானை | திருமெய்ய மலையில் கோயில் கொண்டிருப்பவனும |
| மணி வரையும் | நீலமணிமயமான மலையையும் | சங்கு ஏந்தும் கையானை | திருச்சங்கை ஏந்திக்கொண்டிருக்கின்ற திருக்கையை யுடையனுமான பெருமானை |
| மா முகிலும | காளமேகத்தையும் | தொழா | அஞ்சலிபண்ணாத |
| கொய் ஆர் குவளையும் | பறிக்கவேணுமென்று விரும்பத்தக்க நீலோற்பலத்தையும | | கைகளானவை |
| காயாவும் | காயாம்பூவையும் | அல்ல | கைகளேயல்ல; |
| போன்று | | | |
| இருண்ட | கறுத்த | கண்டாம | (இதனை நாம் நன்கு) அறிவோம். |
| மெய்யானை | திருமேனியையுடையவனும் | | |

* * *—கடல்போலே எல்லைகாணவொண்ணாததாய், மணிமலைபோலே நெஞ்சுக்கு ஆகர்ஷகமாய், காளமேகம்போலே குளிர்ந்து விடாயைத் தீர்ப்பதாய், குவளைப்பூவும் காயாமலரும்போலே வைத்தகண்வாங்காதே பார்த்துக்கொண்டேயிருக்கவேண்டும்படியான திருமேனியையுடையவனும், இப்படிப்பட்ட திவ்ய மங்கள விக்ரஹத்தைத் திருமெய்யமலையிலே ஆச்ரிதர்க்கு முற்றூட்டாகக் கொடுத்துக் கொண்டிருப்பவனும், சங்கேந்துங் கையனுமான ஸர்வேச்வரனைத் தொழாத கைகள் கையல்ல, உலக்கையே என்றதாயிற்று.

கைதொழாக் கையல்ல—தொழாக்கை கையல்ல என்று அந்வயிப்பது. ... 5

கள்ளார்துழாயுங்கணவலரும்கூவிளையும் *
முள்ளார்முளரியுமாம்பலுமுன்கண்டக்கால் *
புள்ளாயோரேனமாய்ப்புக்கிடந்தான்பொன்னடிக்கென்று
உள்ளாதாருள்ளத்தையுள்ளமாக்கொள்ளோமே.

| | | | |
|---|---|---|---|
| கள் ஆர் | தேன்பொருந்திய | புள் ஆய் ஓர் ஏனம் ஆய் புக்கு இடந்தான் பொன் அடிக்கு என்று | ஹம்ஸரூபியாய் அவதரித்தவனும் வராஹ ரூபியாயவதரித்துப் பூமியைப் பேதித்தெடுத்தவனுமான எம்பெருமானுடைய திருவடிகளுக்கு உரியவையென்று |
| துழாயும் | திருத்துழாயையும் | | |
| கணவலரும் | அலரியும் | | |
| கூவிளையும் | பில்வபத்திரத்தையும் | | |
| முள் ஆர் | முட்கள் நிரம்பிய | | |
| முளரியும் | தாமரைப்பூவையும் | | |
| ஆம்பலும் | ஆம்பல்மலரையும் | | |
| முன் | கண்ணெதிரில் | உள்ளாதார் | நினையாதவர்களுடைய |
| கண்டக்கால் | பார்த்தால், | உள்ளத்தை | நெஞ்சை |
| | (இவை) | உள்ளம் ஆ கொள்ளோம் | நெஞ்சாகக் கொள்ள மாட்டோம். |

நத்துழாய முதலிய எநத வஸ்துவைக் கண்டாலும் 'இது எம்பெருமானுக்குச் சாத்தத்தக்கது' என்று அத்யவஸாயங் கொள்ளாதாருடைய நெஞ்சை நெஞ்சாகக் கொள்ளமாட்டோம், நஞ்சாகவே கொள்வோமென்றவாறு.

இப்பாட்டில், எம்பெருமானுக்கே உரித்தான திருத்துழாயோடு விஜாதீய வஸ்துக்களும் கூட்டி யெடுக்கப்பட்டிருத்தலால், எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணுமென்கிற சுத்த பாவத்துடனே கொள்ளுகிற புஷ்பம் எதுவாயிருந்தாலும் குற்றமில்லை; 'செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி' என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற புஷ்பங்களாகவே யிருக்கவேணுமென்கிற நியதியில்லை, ஏதேனுமொரு பூவாயிருக்கலாமென்பது தோற்றுவிக்கப்படும். திருவாய்மொழியில் [1—6—1.] "பரிவதிலீசனைப்பாடி விரிவதுமேவலுறுவீர்!, பிரிவகையின்றி நன்னீர் தூய்ப் புரிவதுவும் புகை பூவே" என்ற பாசுரத்தை ஸ்ரீபட்டர் உபந்யஸிக்கும்போது "புரிவதுவும் புகை பூவே" என்ற சப்தஸ்வாரஸ்யத்தைத் திருவுள்ளம்பற்றி 'இவ்விடத்தில் அகில்புகை என்றாவது கருமுகைப்பூ என்றாவது சிறப்பித்துச் சொல்லாமையாலே ஏதேனும் ஒரு புகையும் ஏதேனும் ஒரு பூவும் எம்பெருமானுக்கு அமையும்; செதுகையிட்டுப் புகைக்கலாம், கண்டகாலிப் பூவும் சூட்டலாம்' என்று உபந்யஸித்தாராம்; அதை நஞ்சீயர் கேட்டு "ந கண்டகாரிகா புஷ்பம் தேவாய விநிவேதயேத்" [கண்டகாலிப்பூவை எம்பெருமானுக்குச் சாத்தலாகாது] என்று சாஸ்த்ரம் மறுத்திருக்க, இப்படி அருளிச் செய்யலாமோ?" என்று கேட்டார்; அதற்கு பட்டர் அருளிச்செய்த ரஸோக்தி-" சாஸ்த்ரம் மறுத்தது மெய்தான்; கண்டகாலிப்பூ எம்பெருமானுக்கு ஆகாதென்று மறுத்தபடியன்று; அடியார்கள் அப்பூவைப் பறித்தால் கையில் முள் பாயுமே என்று பக்தர்கள் பக்கலில் தயையினால் சாஸ்த்ரம் நிஷேதித்ததேயன்றி எம்பெருமானுக்கு ஆகாத பூ எதுவுமில்லை" என்றாம். திருவாய்மொழிக்குப் பதினெண்ணாயிர முரைத்த பரகால ஸ்வாமி இந்த ஸம்வாதத்தைக்கண்டு ரஸியாமல் திரஸ்கரித்துரைத்தது கிடக்க. "அத்யந்த பக்தியுக்தாநாம் நசாஸ்த்ரம் நைவசக்ரம:" [பக்தி எல்லைகடந்தால் நூல் வரம்பில்லை] என்ற அருளிச்செயல் தொடை யழகையும் நோக்கி ரஸப்பொருளுரைப்பதில் குதர்க்க வாதம் செய்கை விவேகிகட்குப் பணியன்று.

இப்பாட்டின் வியாக்கியானத்திலே பெரியவாச்சான் பிள்ளை அருளிச்செய்தது காண்மின்:—"ஸ்நேஹமில்லாதவன் இடில் திருத்துழாயுமாகாது? ஸ்நேஹத்தோடே இடில் அலரியும் ஆகும்."

முற்காலத்தில் ஸ்ரீ ஜகந்நாதத்திலெம்பெருமான் செண்பகப்பூவை உகந்து சாத்திக்கொள்வது வழக்கமாயிருந்ததனால் சில ராஜகுமாரர்கள் எம்பெருமானுக்குச் செண்பகப்பூ ஸம்பாதித்து ஸமர்ப்பிக்கவேணுமென்று கடைவீதி யேறச் சென்றனர்; அங்குப் பூவெல்லாம் விற்றுப்போய் ஒரே ஒரு பூ மாத்திரம் மிகுந்திருந்தது. விலைக்கு வாங்கவந்த ராஜகுமாரர்கள் செல்வச் செருக்குடையவர்களாதலால் ஒவ்வொருவரும் இப்பூவை நாமே பெற்றுப் போய் ஸமர்ப்பிக்கவேணுமென்ற ஆவல் கொண்டவராகி மேன்மேலும் விலையை ஏற்றிக்கொண்டே வந்தார்கள். கடைசியாக அளவற்ற விலைகொடுத்து ஒரு ராஜபுத்திரன் அதை வாங்கிப் பெருமானுக்குச் சாத்த, அன்றிரா அவனுடைய கனவிலே எம்பெருமான் காட்சி தந்து 'நீ இட்ட பூ எனக்குக் கனத்துச் சுமக்கவொண்ணாததா யிருக்கிறது!" என்றருளிச் செய்தான்—என்ற இதிஹாஸமும் வியாக்கியானத்திலுள்ளது. இதனால், ஸ்நேஹபூர்வமாகப் பூவிட்டால் அது எம்பெருமானுக்கு அலப்யலாபமாயிருக்குமென்றதாயிற்று.

புள்ளாய் ஓரேனமாய்ப்புக்கிடந்தான்=ஏதேனும் பக்ஷியாகவும் மிருகமாகவும் தன்னை அமைத்துக்கொண்ட எம்பெருமானுக்கு ஆகாதது எதுவுமில்லையென்று காட்டுகிறபடி. பக்ஷிகளுக்கும் மிருகங்களுக்கும் ஆகாதது இல்லையிறே. அவன் ஜந்மத்தில் நியமங் கொள்ளாதாப்போலே உகந்து கொள்ளுகிற பதார்த்தங்களிலும் நியமங்கொள்ளா னென்கை.

"பொன்னடிக்கென்று உள்ளாதாருள்ளத்தை" என்றதனால், —ரு- சொன்ன புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு போய் ஸமர்ப்பிக்கவேணுமென்கிற நிர்ப்பந்தமுமில்லை, 'இவை எம்பெருமானுக்கு ஆம்' என்று நெஞ்சால் நினைக்குமளவும் போதும் என்பது பெறப்படும். "நினைவே அமையும்; செயல் மிகை" என்பர் பெரியவாச்சான் பிள்ளையும். ... ... ... 6

**கனையார்கடலுங்கருவிளையுங்காயாவும் அனையானை*அன்பினலார்வத்தாலென்றும்**
**சுனையார்மலரிட்டுத்தொண்டராய்நின்று*நினையாதார்நெஞ்சென்றும்நெஞ்சல்லகண்டாமே.**

| | | | |
|---|---|---|---|
| கடலும் | ஒலிமிக்க கடலையும் | தொண்டர் ஆய் நின்று | தொண்டர்களாயிருந்து கொண்டு |
| கருவிளையும் | கருவிளைப்பூவையும் | என்றும் | எப்போதும் |
| காயாவும் | காயாம்பூவையும் | நினையாதார் | நினைக்கப்பெறுதவர்களினுடைய |
| அனையானை | ஒத்திருக்கின்ற எம்பெருமானை | நெஞ்சு | நெஞ்சானது |
| அன்பினல் ஆர்வத்தால் | அன்போடும் ஆற்றாமையோடும் | என்றும் | ஒருநாளும் |
| சுனை ஆர் மலர் இட்டு | தடாகங்களில் நிரம்பிய பூக்களைக் கொணர்ந்து ஸமர்ப்பித்து | நெஞ்சு அல்ல | நெஞ்சாகமாட்டாது; |
| | | கண்டாம் | (இதனை நாம் நன்கு) அறிவோம். |

* * *—கடல், கருவிளைப்பூ, காயாம்பூ என்னுமிவற்றை [illegible]ப்பாகச் சொல்லலாம்படியான திருமேனிபடைத்த எம்பெருமான் பக்க[illegible]ிசேஷத் தோடே, சுனைகளில் ஏற்கனவே நிறைந்துள்ள புஷ்பங்களைக் [illegible] பித்து அடிமைத் தொழிலுக்கு இசைந்து அவனையே சிந்தித்திருக்கமாட்டாத நெஞ்சு நெஞ்சேயன்று யென்றதாயிற்று.

அன்பினல் ஆர்வத்தால்—அன்பாவது ஸ்நேஹம்; ஆர்வமாவது, பெருவிடில் முடிந்துபோம்படியான ஆற்றாமை.

சுனை நிறை மலர்—இவன் புதிதாகப் புஷ்பங்களை ஸ்ருஷ்டிக்கவேண்டிய அருமையில்லை; ஏற்கனவே சுனைகளில் பூக்கள் நிரம்பியுள்ளன? இசைவுதானே வேண்டுவது என்று காட்டுகிறபடி "தாமுளரே தம்முள்ள முள்ளுளதே தாமரையின் பூவுளதே ஏத்தும் பொழுதுண்டே" என்ற பூதத்தாழ்வார் பாசுரம் இங்கு நினைக்கத்தக்கது. ... ... ... 7

வெறியார்கருங்கூந்தலாய்ச்சியர்வைத்த*உறியார்நறுவெண்ணெய்தானுகந்துண்ட
சிறியானை*செங்கணெடியானைச்சிந்தித் தறியாதார்*என்று மறியாதார்கண்டாமே. 8

| | | | |
|---|---|---|---|
| வெறி ஆர் | பரிமளம்மிக்க | சிறியானை | சிறியவனும் |
| கரு கூந்தல் | கரிய கூந்தலையுடைய | செம் கண் | சிவந்த (கண்களை) யுடையவனுமான |
| ஆய்ச்சியர் | இடைச்சிகளாலே | | |
| வைத்த | சேமித்துவைக்கப்பட்டதாய் | நெடியானை | ஸர்வேச்வரனை |
| உறி ஆர் | உறிகளிலே பொருந்தியதாய் | சிந்தித்து அறியாதார் | நெஞ்சாலும் நினைத்தறியாதவர்கள் |
| நறு | மணம்மிக்கதான | | |
| வெண்ணெயை | வெண்ணெயை | என்றும் | எப்போதும் |
| தான் உகந்து உண்ட | தான் விரும்பி யமுதுசெய்த | அறியாதார் | அவிவேகிகளேயாவர் |
| | | கண்டாம் | நன்கு அறிவோம். |

***—இடைச்சிகள் உறிகளிலே சேமித்துவைத்த நறு வெண்ணெயை அந்த த்ரவ்யமாகையாலே பெறாப் பேறு பெற்றானாய் வாரியமுதுசெய்த சிறு பிள்ளையும் செந்தாமரைக் கண்ணனுமான ஸர்வேச்வரனை நினைத்தறியாதவர்கள் எத்தனையேனும் சாஸ்த்ரஜ்ஞானத்தாலே சீரியர்களாயினும் அறிவில்லாதவர்களே யாவர் என்றாராயிற்று.

***—ஒண்டாமரையாள் கேள்வனொருவனையே நோக்குமுணர்வு" என்கிறபடியே எம்பெருமானை அறியுமதுவே அறிவாதலால் "செங்கணெடியானைச் சிந்தித்தறியாதார் என்றுமறியாதார்" எனக் குறையில்லை யென்க. ... 8

தேனோடுவண்டாலும்திருமாலிருஞ்சோலை*தானிடமாக்கொண்டான்தடமலர்க்கண்ணிக்காய்*
ஆன்விடையேழன்றடர்த்தார்க்காளானாரல்லாதார்*மானிடவரல்லரென்றென்மனத்தேவைத்தேனே! 9

| | | | |
|---|---|---|---|
| வண்டு | வண்டுகளானவை | கண்ணிக்காய் | கண்களையுடையளான நப்பின்னைப்பிராட்டிக்காக |
| தேனோடு | வாயில் தேனோடே | | |
| ஆலும் | ஆரவாரிக்கின்ற | ஆன் விடை ஏழு | ஏழு ரிஷபங்களை |
| திருமாலிருஞ்சோலை | திருமாலிருஞ்சோலை மலையை | அடர்த்தார்க்கு | வலியடக்கின பெருமானுக்கு |
| தான் இடமா கொண்டான் | தனக்கு இருப்பிடமாக அமைத்துக்கொண்டவனும் | ஆள் ஆனார் அல்லாதார் | அடிமைப்பட்டவர்கள் தவிர மற்றையோர் |
| அன்று | முன்பொருகாலத்தில் | மானிடவர் அல்லர் என்று | மநுஷ்யகோடியில் சேர்ந்தவர்களல்லரென்று |
| தட | விசாலமாய் | என் மனத்து | என்னெஞ்சிலே |
| மலர் | குவளைமலர்போன்ற | வைத்தேன் | உறுதியாகநாட்டினேன். |

***—வண்டுகள் வாயோடே முரலப்பெற்ற சோலைமலையைக் கோயிலாகக்கொண்டு வாழ்பவனும், அழகிற்சிறந்த நப்பின்னைப் பிராட்டியை மணம்புணர்ந்து கொள்ளவேண்டி, அவளது தந்தை கந்யாசுல்கமாகக் குறித்திருந்தபடி மிகக் கொடிய ரிஷபங்களேழையும் வலியடக்கினவனுமான எம்பெருமானுக்கு ஆட்படாதவர்கள் மநுஷ்யயோநியிற் பிறந்துவைத்தும் அப்பிறவியின் பயன் பெறாதவர்களாகையாலே மானிடவரல்லர் என்று நான் வித்[illegible] செய்துகொண்டேன் என்கிறார்.

உணவுகளையுண்டு வயிறு நிரப்புகை, விஷயபோகங்கள் செய்கை, உறங்குகை முதலிய காரியங்கள் பசுக்களுக்கும் மானிடர்க்கும் பொதுவாகையாலே, இனி மானிடரென்கிற ஏற்றம் பெறவேண்டில் எம்பெருமானுக்கு ஆட்படுகையொன்றினால் தான் ஏற்றம் பெறவேண்டும்; அஃதில்லாதார் மானிடவரல்லர் என்னத் தட்டில்லை. "என் மனத்தே வைத்தேனே" என்கையாலே, இது எவ்விதத்தாலும் மாறமாட்டாத ஸித்தாந்தம் என்றதாம். ... ... ... 9

மெய்ந்நின்றபாவமகல*திருமாலைக் கைந்நின்றவாழியான்சூழுங்கழல்சூடி*
கைந்நின்றவேற்கைக்கலியனொலிமாலை*ஐயொன்றுமைந்துமிவைபாடியாடுமினே. 10

| | | | |
|---|---|---|---|
| மெய் நின்ற | பிரகிருதியிலே அநுபவிக்க வேண்டிநின்ற | சூடி | முடிமேற்கொள்ளுமவராய் |
| பாவம் | பாவங்கள் | கை நின்ற வேல் கை | கையும் வேற்படையுமாய் நிற்பவரான |
| அகல | ஒழிவதற்காக, | கலியன் | திருமங்கையாழ்வார் |
| கை நின்ற ஆழியான் | திருக்கையில் பொருந்திய திருவாழியையுடையனை | ஒலி | அருளிச்செய்த |
| திரு மாலை | திருமகள் கொழுநனுடைய | மாலை | சொல்மாலையாகிய |
| சூழும் கழல் | ஸர்வவ்யாபியான திருவடிகளை | ஐ ஒன்றும் ஐந்தும் இவை | பத்துப் பாசுரங்களையும் |
| | | பாடி | வாயாரப்பாடி |
| | | | நர்த்தனம்பண்ணுங்கோள். |

* * *—அடியார்களின் வினையை அகற்றுகைக்கு எப்போதும் கைகழலாநேமியானாயிருக்கின்ற எம்பெருமானுடைய திருவடிகளைத் தலைமேற்புனைந்து பாவங்கள் தொலையப்பெற்ற கொற்றவேற்பரகாலன் கலியன் சொன்ன இத்திருமொழியைப் பாடி யாடுங்கோளென்கிறார். பாடினால் வாக்கு ஸபலமாகும்; ஆடினால் சரீரம் ஸபலமாகும்; பாடுதலுமாடுதலும் மனப்பூர்வமாகவே உண்டாகவேண்டுதலால் அர்த்தாத் அந்தஃகரணமும் ஸபலமாகுமென்று நாட்டார்க்கு வழிகாட்டினாராயிற்று. ... 10

அடிவரவு:—நீணகம், நீள்வான், தூயான், கூடா, மையார், கள்ளார், கனைவெறி, தேன், மெய், மாற்றம்.

ஏழாந் திருமொழி உரை முற்றிற்று.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## பதினோராம்பத்து—எட்டாந்திருமொழி, மாற்றமுளவாகிலும்.

உரையவதாரிகை:—அவதரித்தபோதே தொடங்கி பகவத்விஷயத்தில் பக்தி பண்ணாமல் முதலில் உலகவாழ்க்கையில் ஊன்றியவராய் அதற்கு ஏற்ற தொழில்களையே செய்துவந்தவரான இவ்வாழ்வார்க்கு எம்பெருமான் தனது திருவருளால் வலியவந்து காட்சிதந்து திருமந்திரத்தை உபதேசித்து இவரை ஆட்கொள்ள, அதனால் தெளிவடைந்து தமக்கு அப்பெருமான் செய்த திருமந்திரோபதேசமாகிய மஹோபகாரத்தை மறவாது தமது நன்றியறிவுதோன்ற அதனால் முதல்திருமொழியிலே கொண்டாடிப்பேசி, அதன் பின் அந்த எம்பெருமான் தனது நிர்ஹேதுகக்ருபையினால் உலகத்தைச் சீர்திருத்தி உஜ்ஜீவிப்பிக்கும் பொருட்டு அடியவர்க்கு எளியனாய்த் தனது நீர்மைதோன்ற எழுந்தருளியிருக்கிற திவ்யதேசங்களிலெல்லாஞ் சென்று அந்த எம்பெருமானை அநுபவிப்பவராய் வடநாடுமுதல்

மலைநாடு ஈருகப் பலநாடுகளிலுமுள்ள திருமால் திருப்பதிகள் பலவற்றைக் குறித்துப் பலதிருமொழிகள் பாடி, அத்திருமாலின் அர்ச்சாவதாரங்களுக்கு அடியான ராம க்ருஷ்ணாதி விபவாவதாரங்களின் குணசேஷ்டிதங்களைக் குறித்து உள்ளங்கரைந்து சிலதிருமொழிகள் விண்ணப்பஞ் செய்து, இத்திருமொழியோடு தமது பெரிய திவ்யப்ரபந்தத்தைத் தலைக்கட்டுகின்றார்.

பிறவித்துன்பம் மிக்க கொடிது என்பதையும், அது அவசியம் போக்கிக் கொள்ளவேண்டியதொன்று என்பதையும், அது தம்மால் ஒழிக்கவொண்ணுதபடி யுள்ளதனல் அதற்குத் தாம் மிக அஞ்சுகிறபடியையும், எம்பெருமானது திருவடி களிற் சரணம் புகுந்தே அது தவிர்க்கக் கடவதாயிருக்கிறபடியையும் அப்பெரு மானை முன்னிலைப்படுத்தி அவன் ஸந்நிதியில் விண்ணப்பஞ்செய்து 'உன்னை இடை விடாது அநுபவிப்பதற்குத் தடையாகவுள்ள தேஹஸம்பந்தத்தை அடியேனுக்குப் போக்கியருளவேணும்' என்று அவன் திருவடிகளிலே விழுந்து வேண்டுகின்றார் இத்திருமொழியில்.

பயிர் செய்பவன் பயிர்த்தலையிலே குடிசைகட்டிக்கொண்டு அதில் இருந்து அப்பயிரைப் பாதுகாப்பதுபோல எம்பெருமான் இந்நிலவுலகத்தில் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருக்கிற திவ்யதேசங்களுக்குள் தலைமைபெற்றதான திரு வரங்கமும், இவ்வாழ்வாரது திருவவதாரஸ்தலத்துக்கு அணித்தான திருவாலியும் ஆகிய சோழநாட்டுத் திருப்பதிகளிரண்டும் இத்திருமொழியிலே எடுத்தாளப் பட்டுள்ளமை அறிக. ... ... .... ... ... *

மாற்றமுளவாகிலும்சொல்லுவன்*மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொல் ? என்றின்னம் *
ஆற்றங்கரைவாழ்மரம்போலஞ்சுகின்றேன்*நாற்றச்சுவையூறொலியாகியநம்பி ! 1

நாற்றம் சுவை ஊறு ஒலி ஆகிய நம்பீ — கந்தம் ரஸம் ஸ்பர்சம் சப்தம் என்னும் புலன்கட்கு உரிய ஞன எம்பெருமானே !

மாற்றம் ஆகிலும் — (('நீ அடியேனை ஆட்கொண்டருளினுயில்லை' என்று நான் உன்மேற் குறை கூறும் வார்த்தைகட்கெல்லாம்) மாருக ('நீதானே ஆட்பட்டு உய்ந்தாயில்லை' என்று என்மேற்குற்றமாக நீ) சொல்லத்தக்க வார்த்தைகள் பல உள்ளனவே யாகிலும்

சொல்லுவன் — (அவைநிற்க) யான் ஒன்று கூறுவேன் ;

(அதுயாதெனில் ;)

மக்கள் தோற்றம் குழி இன்னம் தோற்றுவிப்பாய்கொல் என்று — ((உன்னைச் சரணமடையாத ஸாதாரண) மனிதர்கள் கர்மவசத்தாற்) பிறக்குமிட மான கர்ப்பஸ்தானத்திலே என்னை இன்னமும் பிறக்கும்படி செய்திடுவையோ என்று கருதி

ஆற்றங் கரை வாழ் மரம் போல் — (ஆற்றங்கரையிலேயுள்ள மரம்போன்றவனுகி

அஞ்சுகின்றேன் — (வரக்கடவதான அபாயத்தைக் குறித்து எப்பொழுதும்) பயப்படுகின்றேன்.

* * *—மாற்றமுளவாகிலுஞ் சொல்லுவன்=மாருகக் கூறுவது மாற்றம் ; மறு வார்த்தை ; அதாவது எதிர்மொழி, ப்ரத்யுத்தரம். எம்பெருமானே ! என்னுடைய வாதங்களுக்கெல்லாம் நீ பிரதிவாதம் கூறும்படியான ஆற்றலுடையாய் என்பது அறிவேன் ; ஆனாலும் ஒன்று சொல்லுவேன் கேளாய் என்கிறார்.

ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் ஸம்வாதம் நிகழும்வகை ;—

ஜீவாத்மா—நித்யர்கள் போலவே பரமபதத்தில் எப்பொழுதும் உன்னையடுத் திருந்து நித்யாநந்தத்தை அநுபவிக்கக்கூடியவையான ஜீவகோடிகள் அவ்வியல் பைத் தொன்று தொட்டு இழந்து இப்பிரபஞ்சத்தில் இழிவடைய வேண்டுவதென் ?

பரமாத்மா—இவ்வுலகத்து ஜீவகோடிகள் என்னைப் பராமுகஞ்செய்து பிரபஞ்ச விஷயங்களில் இழிந்து அங்கு ஆழங்காற்பட்டுப் புண்யபாபரூபமான கருமங்களைச் செய்து அக்கர்மபரம்பரையானது ஜந்மபரம்பரையிலே செலுத்த அவ்வழிகளால் மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து வருந்துமிடத்தும் அப்பிறவித்துயர்க்கு அஞ்சி என்னைச் சரணமடையாமலே அங்ஙனம் அழிவுறுகின்றன; கருமங்களைச் செய்தவர்களிடத்திலே அவற்றின் பயன் சென்று சேரக்கடவதன்றோ? இதில் என்குற்றம் ஒன்றுமில்லையே;

ஜீவாத்மா—விருப்புவெறுப்புக்களுக்கு அடியான மனம் உன் அதீனமாதலால் உன்பக்கல் விருப்பங்கொண்டிலோமென்று எம்மேல நீ குற்றஞ்சொல்லக் காரணமில்லையே; இன்னமும், கர்மஸ்வரூபத்தைப் பார்க்குமிடத்தில் தொழில் வடிவமாதலால் உடனே அழியுந்தன்மையதான அது உனது நிக்ரஹாநுக்ரஹரூபமாய் உன் திருவுள்ளத்தில் நிலைநின்றே பயனை விளைத்தால் ஸர்வேச்வரனான நீ அதனைப் பொறுத்தருளினால் அதுதீர்ந்திடுமே; அங்ஙனஞ் செய்தருளுமிடத்து உன்னைத் தடுப்பவருண்டோ? பரதந்திரமான ஜீவகோடிகளுக்கு ஸ்வாதந்திரியமில்லையே; உடைமையைப் பாதுகாக்குங்கடமை உடையவனன்றோ? ஆகவே, எங்களிழவுக்கு உன் அநாதரமேகாரணம்;

பரமாத்மா—நீங்கள் சேதநராதலால் நீங்களே முயற்சிசெய்து என்பக்கல் வரவேண்டாவோ? நான் முன்னமே உங்கட்கு ஜ்ஞானசக்திகளைத் தந்துள்ளேனே; அப்படியிருக்க என்மேல் வீண்பழி சுமத்துவது ஏதுக்கு?

இங்ஙனம் எம்பெருமானால் நல்லறிவருளப்பெற்ற ஆழ்வார் தாமும் முற்றுணர்வுடையனான எம்பெருமானும் வாதிப்ரதிவாதிகள் போன்று வேதவேதாந்தங்களைக் கொண்டு கர்மஸ்வரூபத்தையும் பரப்ரஹ்மஸ்வரூபத்தையும் ஜீவாத்மஸ்வரூபத்தையும்பற்றி நின்று பேசிக்கொண்டு சென்றால் அதற்கு ஓர் எல்லையில்லாமையாலும், அவ்வாதம் தமது பிறவித்துயர் தீர்வதற்குக் காரணமாகாதாலும் அதனை விட்டுக் காரியமே கண்ணாக மாற்றமுளவாகிலும் சொல்லுவன் என்று தொடங்கித் தம் குறையையும் வேண்டுகோளையும் விண்ணப்பஞ்செய்கிறார். "திரையவித்து நீராடலாகா உரைப்பார், ருரையவித் தொன்றுஞ்சொல்லில" என்றபடி வாத ப்ரதிவாதங்கட்கு ஒரு முடிவில்லையாகையால் மாற்றமுளவாகிலும் எனப்பட்டது.

ஆற்றங்கரையிலுள்ள மரம் அந்த ஆற்றில் வெள்ளம் பெருகித் தன் வேரை அகழ்ந்திடத் தொடங்கினால் அவ்வபாயத்தைப் பரிஹரித்துக் கொள்ளவாவது அத்தீங்குக்கு இடமின்றி விலகிநிற்கவாவது அத்துயரைத் தீர்ப்பதற்குப் பிறரைத் துணையாகக் கூப்பிடவாவது மாட்டாமல் முறிந்து விழுந்து அழிவுக்குள்ளாகும். தமது நிலைமை எப்பொழுதும் அபாயத்துக்கு இடமாதல் பற்றியும் தமக்கு வரும் துன்பத்தைத் தாமே போக்கிக்கொள்ள மாட்டாமைபற்றியும் தமக்கு அந்த மரத்தை உவமை கூறினர். ஆற்றங்கரைமரம் எப்போதும் அபாயத்துக்கு இடமாகுமென்பதை "ஆற்றங்கரையின் மரமும் அரசறிய, வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே" என்றதனாலுமறிக.

சேதநரான தமக்கு அசேதநமான மரத்தை உவமை கூறியதனால் தமக்கு உண்டான உணர்வு அஞ்சுவதற்கே காரணமாவதன்றி அபாயத்தை அகற்றுதற்குக் காரணமாகாதென்றவாறும். ஆகவே அந்த மரத்தினது நிலைமையிற்காட்டிலும் தமது நிலைமைக்கு உள்ள தாழ்வைப் புலப்படுத்தியபடி. இதுபற்றியே 'மரம் போன்றேன்' என்னமல் 'மரம்போலஞ்சுகின்றேன்' என்றார். மரத்துக்கு அபாயமுளதேனும் அச்சமில்லை, அசேதநமாதலால்; தமக்கோ அபாயத்தோடு அச்சமுமுண்டு, சைதந்யமுள்ளமையால்—என வேறுபாடு காண்க.

எம்பெருமானுடைய நியமனத்தால் அவதரித்து அவனுடைய திருவருளாற் தத்துவஞானம் உதிக்கப் பெற்றுச் சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் அவனுக்கே தொண்டு பூண்டிருக்கின்ற ஆழ்வார் இங்ஙனம் அஞ்ச வேண்டுவதில்லையாயினும், எம்பெருமான் உபேக்ஷித்தால் இங்கேயே கிடந்து வருந்தவும் அவன் ஆதரித்தால் அங்கேபோய்ப் பேரின்பம் பெறவுமாம்படி பொதுவாகவுள்ள இந்நிலவுலகத்து உடல்வாழ்க்கையின் தன்மையிற் கருத்து ஊன்றியதனாலும், தமக்கு உண்டான ஞானம் விரைவில் வீடுபெறும்படி தூண்டுதலாலும், நஞ்சு இல்லாத நீர்ப்பாம்பும் பாம்பென்ற மாத்திரத்தால் அச்சந்தருதல்போலக், கர்ம கார்யமல்லாத தமது பிறப்பும் பிறப்பென்ற மாத்திரத்தால் அச்சந்தருதலாலும், ஸாமாந்யரான மனிதர் அஞ்சுவதுபோலவே தாமும் அஞ்சுகின்றார்; "அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ, தஞ்சலறிவார் தொழில்" அன்றோ?

நாற்றச்சுவையூறொலியாகிய நம்பி! = சப்தாதி விஷயங்களெல்லாம் எம்பெருமானுக்கு அதீனமாகவேயிருத்தலால் அவ்வொற்றுமை நயம்பற்றியதாம் இவ்விளி. அங்ஙனமுள்ளவனான நீ புலன்வழிச்சென்றேனென்று என்மேற்குறை சொல்லக் காரணமில்லையென்பது உட்கோள். எனவே, "பயக்ருத் பயநாசந:" என்கிறபடியே அச்சத்துக்குக் காரணமும் பரிஹாரமும் நீயேயென்றவாறு; உன்னிடத்தினின்றும் என்னையகற்றுகைக்குக் காரணமான சப்தாதி விஷயங்கட்கெல்லாம் நீயே நியாமகனென்றபடி.

மாற்றம் என்பது பால்பகா அஃறிணைப் பெயராதலால் 'உள' என்னும் பன்மைமுற்றைக்கொண்டது. பாட்டின்முடிவில் நம்பி! என்பதும் பாடம். ... 1

**சீற்றமுளவாகிலும்செப்புவன்*மக்கள் தோற்றக்குழிதோற்றுவிப்பாய்கொலென்றஞ்சி**
**காற்றத்திடைப்பட்டகலவர்மனம்போல்*ஆற்றத்துளங்காநிற்பனாழிவலவா!** 2

| | |
|---|---|
| ஆழி வலவா | சக்கரப்படையைப் பிரயோகித்தலில் வல்லவனே! |
| சீற்றம் உள ஆகிலும் | நீ கோபிக்கும்படியான குற்றங்கள் (என்னிடம்) உள்ளனவாயினும் |
| செப்புவன் | (உன்னையன்றி எனக்கு வேறுகதியில்லையாகையால் உன்பக்கல் என் குறையைச்) சொல்லிக் கொள்வேன்; |
| மக்கள் தோற்றம் குழி தோற்றுவிப்பாய் கொல் என்று அஞ்சி | மனிதர்கள் (கர்மாதீனமாகப்) பிறக்கும் பிறவியிலே என்னையும் புகுவிப்பையோ வென்று எண்ணி அச்சமுற்று |
| காற்றத்து இடை பட்ட கலவர் மனம் போல் | பெருங்காற்றில் அகப்பட்டுக் கொண்ட மரக்கலத்திலேயுள்ளாரது மனம்போல |
| ஆற்ற | மிகவும் |
| துளங்காநிற்பன் | நடுங்கி நிற்பேன். |

** -கீழ் "மாற்றமுளவாகிலுஞ் சொல்லுவன்" என்று தொடங்கித் தாம் விண்ணப்பஞ் செய்தபோது 'ஆழ்வீர்! நீர் பல பிழைகளையுடையராயிருந்தும் அவற்றையுணராமல் உம்மை நல்லவர்போலக் கொண்டு, கண்ணோட்டமில்லாதவனைக் கூறுமாறுபோல என்னைத் 'தோற்றக்குழியின்னந் தோற்றுவிப்பாய்கொல்' எனக் குறைசொல்லுவதென்? என்று எம்பெருமான் தமது பிழைகளைக் குறித்துச் சீறியதாகக்கொண்ட ஆழ்வார் 'சீற்றமுளவாகிலுஞ் செப்புவன்' என்கிறார். நீ சீற்றங்கொள்ளும்படியான பிழைகள் என்பக்கல் இல்லாமையாற் சொல்லுகிறேனல்லேன்; உன்னையன்றி எனக்கு வேறுகதியில்லாமையாலே உன்னிடமே சரண்புக்குக் கூறுகிறேனென்றபடி. எம்பெருமான் பொறுக்கவொண்ணாத திருவுள்ளத்தில் கோபங்கொள்ளும்படி நிலவுலகத்தாரிடம் நேர்கின்ற குற்றங்கள்—

பகவதபசாரமும் பாகவதாபசாரமும் பிறவுமாம். எம்பெருமானுக்கே அடிமைப்பட்டதான ஆத்மவஸ்துவை எனது என்று ஸ்வதந்த்ரம் பாராட்டுதலும், அப்பெருமான் துஷ்டநிக்ரஹ சிஷ்டபரிபாலனஞ்செய்து தருமத்தை நிலைநிறுத்தி உலகத்தைச் சீர்திருத்துதற் பொருட்டுத் தன் ஸங்கல்பத்தினாற் கொள்ளும் திருவவதாரங்களைக் கருமவசத்தாலாகும் பிறப்போடொப்ப மதித்தலும், அவனது ப்ரவேசம் பெற்ற அர்ச்சாவிக்ரஹங்களைக் கல் பொன் வெள்ளி செம்பு என்று அவமதித்தலும் முதலானவை பகவதபசாரங்களாகும். அப்பெருமானடியார்களை கொண்டாடாது அவர்கள் பக்கல் செய்யும் பொல்லாங்குகள் பாகவதாபசாரங்களாம். பிறவுயிர்களுக்கு நலிவு செய்தலும், பகவானுடைய ஆஜ்ஞாரூபமான வேதசாஸ்த்ரவிதிகளின்படி நடவாதிருத்தலும், சப்தாதி விஷயாந்தரங்களிலே ஊன்றி எம்பெருமான்பக்கல் பராமுகஞ் செய்தலும் முதலானவை 'பிற' எனப்படும் அபசாரங்களாகும். இப்படிப்பட்ட அபசாரங்கள் இவ்விருள்தருமா ஞாலத்தில் வாழ்வார் தமக்கும் நேரக்கூடியனவாகக் கொண்டு இவை நிமித்தமாக அடியேன்மீது சீற்றமுண்டானாலும் வேறுபுகலிடமில்லாமையாலே, *குற்றம் பார்க்கில் கதியில்லையாதலால் என்பிழைகளைப் பாராட்டாது பொறுத்தருள வேணுமென்று பிரார்த்திக்கிறேனென்பதாக முதலடியின் கருத்துக்காண்க.

சீற்றமுளவாகிலுஞ்செப்புவன் என்ற விதற்கு ஸ்ரீவசநபூஷண ரீதியிலே யோஜநாபேதமான அர்த்தமுமொன்றுண்டு; சீற்றமுளவாகிலும்—('மக்கள் தோற்றக் குழி தோற்றுவிப்பாய் கொல்' என்று யான் உன்மேற் குறைகூறுவதால் உனக்குக் கோபமுண்டாகுமாகிலும், செப்புவன்—(சீற்றத்தை ஜீவிக்கவொட்டாத உன்னுடைய க்ருபையையும், சீற்றங்கொண்டு அஞ்சி வாய்மூடியிருக்க வொண்ணாதபடி கரையழிந்து செல்லுகிற ஸம்ஸார ஆர்த்தியையும், சீறியெடுத்து எறியிலும் வேறு புகலில்லாமையாகிற அநந்ய கதித்வத்தையுங்கொண்டு) விண்ணப்பஞ் செய்கிறேன் என்பதாம். 'கீழ்ப்பண்ணின அபசாரங்களாலே சீற்றமிருந்தாலும்' என்பது பெரியவாச்சான்பிள்ளை கொண்ட பொருள்; 'இப்போது அடியேன் சொல்லப் போகிற வார்த்தையினாலே சீற்ற முண்டானாலும்' என்பது பிள்ளைலோகாசாரியர் கொண்ட பொருள். இவ்வளவே வாசி. [ஸ்ரீ வசந பூஷணம் மூன்றாம் பிரகரணத்தின் முடிவில்—"சீற்றமுள வென்ற அநந்தரத்திலே இவ்வர்த்தத்தைத்தாமே அருளிச்செய்தாரிறே. சீற்ற முண்டென்றறிந்தாற் சொல்லும்படி யென்னென்னில்; அருளும் ஆர்த்தியும் அநந்யகதித்வமும் சொல்லப் பண்ணும். சீறினாலும் காலைக் கட்டிக் கொள்ளலாம்படி யிருப்பானொருவனைப் பெற்றால் எல்லாம் சொல்லலாமிறே" என்றுள்ள ஸ்ரீஸூக்திகளும் அவற்றின் வியாக்யானமும் இங்கு அறியத்தக்கன.]

"மக்கள் தோற்றக்குழி தோற்றுவிப்பாய்கொல்" என்றதன் கருத்தாவது—நீ சீறவேண்டும்படியான கருமங்களை நான்செய்து அவற்றின் பயனைச் சில பிறப்புக்களிலே நான் செல்ல நேர்ந்தால் தடுத்து என்னை மீட்காமல் அருமைநிபன்னி உதாஸீநர்போலே யிருந்துவிடுகிறாயோ? என்பதாம். விலக்காமையே தோற்றுவிப்பதாகக் கூறப்படுகிறது. பரமாத்மா கைவிடுதலே ஜீவாத்மாவின் பிறவித் துயர்க்கு ஹேது. கிணற்றில்விழுங் குழந்தையைத் தாய் எடாதிருந்தால் தாயே தள்ளினள் என்கைக்குத் தட்டில்லையே.

கீழ்ப்பாட்டில் தம்முடைய அச்சத்திற்கு ஆற்றங்கரை வாழ்மரத்தை த்ருஷ்டாந்தமாக அருளிச்செய்தவர் இப்பாட்டில் †காற்றத்திடைப்பட்ட கலவர் மனத்தை த்ருஷ்டாந்தமாகக் கூறுகின்றார். பெருங்காற்றிலே அகப்பட்ட மரக் கலத்தினுள்ளே கிடப்பவர்களின் நெஞ்சுபோலே என்னெஞ்சம் துளங்குகின்றது தென்

கிறார். அவர்கட்கு அச்சம் மேலிடுமேயன்றி அவ்வச்ச... ன் ... தீர்க்கும் சக்தியில்லாமைபோல எனக்கும் அஞ்சுதலேயன்றி அச்சத்தின் காரணத்தைத் தவிர்க்கும் சக்தியில்லையென்பார் அவர்கள் மனத்தைத் தமக்கு உவமைகூறி 'அஞ்சித் துளங்காநிற்பன்' என்றார். அம்மரக்கலத்திலுள்ளார் பலர்க்கும் உண்டாகிற அச்சத்தினளவு அச்சம் இவரொருவர்க்குமே உண்டாயிற்றென்பது தோன்ற 'கலவர்' எனப் பன்மையாற் கூறினார். அவர்களுக்குக் கவலை உடம்பு அழிதலில் மாத்திரம்; இவர்க்குக் கவலை—உயிர் பேறுபெறாது அழிதலில், என நுண்ணிய வேறுபாடு தோன்றுமாறு 'ஆற்றத் துளங்காநிற்பன்' என்றார். அம்மரக்கலத்தாரது கலக்கத்தினும் தமது கலக்கம் மிக்கதென வெளியிட்டவாறு; ஆதலால், கலவர்மனம் இவர்க்கு ஒருபுடை யுவமையேயன்றி முற்றுவமையன்றென்க. "வந்ததே ஆழ்கலத்தன்னகலுழ்" "பண்ணாற்களிறேபோற் பாயோங்குயர்நாவாய், கண்ணார் கடன்மண்டிக் காற்றிற் கவிழுங்கால், மண்ணார் மணிப்பூணாய் மக்களுறுந் துன்பம், நண்ணாநரகத்தின் நான்காமடியன்றே" எனப் பிற நூல்களிலும் கலங்கவிழ்மக்கள் படுந்துன்பமே மிகப்பெருந் துன்பத்துக்கு எடுத்துக் காட்டப்படுதல் காண்க.

ஆழிவலவா! = சரணாகதர்களுடைய எவ்வகைக் கலக்கத்தையும் ஒழிப்பதற்கு ஏற்ற கருவியும் ஆற்றலுமுடையாய்! என்றபடி. வலவன்—வல்லவன். வலக்கையிலேயுடையவன் என்றும் பொருள் கூறலாம்.

சீற்றம்—தொழிற்பெயர்; சீறு—பகுதி: இது இங்குக் காரியவாகு பெயராய், கோபகாரணத்தின்மேல் நின்றது. உள என்ற பன்மையால் அக்குற்றமும் பலவென்க. காற்றத்திடை—காற்றிடை; அத்து—சாரியை. கலவர்—சாரியை பெறாது நின்றது; சாரியை பெறுமிடத்துக் கலத்தவர் என நிற்கும். .... .... 2

தூங்கார்பிறவிக்களின்னம்புகப்பெய்து*வாங்காயென்றுசிந்தித்துநானதற்கஞ்சி
பாம்போடொருகூரையிலேபயின்றாற்போல்*தாங்காதுள்ளம்தள்ளுமென்தாமரைக்கண்ணா 3

| | | | |
|---|---|---|---|
| என் தாமரைக் கண்ணா | செந்தாமரைபோன்ற திருக் கண்களையுடைய எனது தலைவனே! | நான் அதற்கு அஞ்சி | நான் அப்பிறவித்துன்பத்திற்கு அச்சமுறுதலால் |
| தூங்கு ஆர் பிறவிக்கள் | சஞ்சலம் மிக்க பிறப்புக்களிலே | பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற் போல் | பாம்பினுடனே ஒரு வீட்டிலே பழகி வஸிப்பதுபோல |
| இன்னம் புக பெய்து | (இதுவரைப்பட்டது போதாமல்) இன்னமும் புகும்படி போட்டு | | |
| வாங்காய் சிந்தித்து | என்னை மீட்காதிருந்திடுவையோ? என்று கவலை கொண்டு | தாங்காது உள்ளம் தள்ளும் | (பல பொல்லாங்குகட்கு இடமான உடலோடு கூடிவாழ்தலைப்) பொறாமல் என்மனம் தடுமாறுகின்றது. |

* * * -கீழ் இரண்டு பாசுரங்களில் ஆழ்வார் தமது குற்றங்களையும் அங்கீகரித்து எம்பெருமான்மேற் குறையுங்கூறி அவனது ஸம்பந்தத்தை விடாது பெறும் விருப்பால் வேண்டியதற்கு இரங்கி அப்பெருமான் கண்குளிரக் கடாக்ஷித்தருளி 'ஆழ்வீர்! குற்றங்களை உண்டென்றுஞ்சொல்லி நம்மையும் நீர் வெறுப்பதென்? நாம் செய்கிறபடி செய்கிறோமென்று பாரத்தை நம்மேல் இட்டு நீர் ஆறியிருக்கலாகாதோ? என்று திருவுள்ளம்பற்றினதாகக்கொண்டு 'தாமரைக்கண்ணா' என் உள்ளம் நிலைநில்லாது; யான் என்செய்கேன்? என்கிறார். இன்னமும் பலபல யோனிகளிலே என்னைப் புகும்படிசெய்து மீட்காதிருந்திடுவையோவென்று கவலைகொண்டு அப்பிறவித் துன்பங்களை நினைத்து அஞ்சுகின்றேனாதலால், பொல்

ளாத பாம்புடனே ஒரு வீட்டில் பழகி வசிப்பதுபோலப் பல பொல்லாங்குகட்கு இடமான உடலோடு கூடி வாழ்வதைப் பொறாமல் என்மனம் தடுமாறுகின்றதென்கிறார். 'உள்ளந் தள்ளுமென் தாமரைக்கண்ணா!' என்கையாலே என்னுள்ளம் தடுமாறாதபடி கடாக்ஷித்தருள வேணுமென்பது தோன்றும்.

தூங்கு—முதனிலைத் தொழிற்பெயர்; தூங்குதல்—அசைதல்; சலித்தல். மனம் சஞ்சலப்படுதற்கு ஹேதுவான ஸம்ஸாரமென்றபடி. இனி, தூங்குதலாவது உறங்குதலெனக் கொண்டு, தமோகுணவசத்தால் அஜ்ஞானம் மிக்க பிறப்புக்கள் எனினுமாம்.

'பிறவிக்கண்' என்பது பழமையான பாடம்; கண்—ஏழனுருபு. அடுத்த பாசுரத்திற்கும் இது கொள்க. அஞ்சி—அஞ்ச; எச்சத்திரிபு; இங்ஙனங் கொள்ளாதபோது மேலே அந்வயியாது. கூரை—வீட்டின்மேல் வேயப்படுவது; இது சினையாகுபெயராய், சிறுவீட்டைக் குறித்தது. ... ... ... 3

உருவார்பிறவிக்களின்னம்புகப்பெய்து*திரிவாயென்றுசிந்தித்தியென்றதற்கஞ்சி *
இருபாடெரிகொள்ளியினுள்ளெறும்பேபோல்*உருகாநிற்குமென்னுள்ளமூழிமுதல்வா!

| | | | |
|---|---|---|---|
| ஊழி முதல்வா | பிரளயகாலத்து (உலக முழுவதையும் வயிற்றில் வைத்துப் பாதுகாக்கிற) தலைவனே!, | அதற்கு அஞ்சி | அப்பிறவிகளில் திரிதற்கு அஞ்சி, |
| உரு ஆர் பிறவிக்கள் | வடிவமமைந்த பிறப்புக்களிலே | இரு பாடு எரி கொள்ளியின் உள் எறும்பே போல் | இரண்டு பக்கத்திலும் நெருப்புப்பற்றி யெரிய அவற்றின் நடுவிலே அகப்பட்டு வருந்தும் எறும்பு போல, |
| இன்னம் புக பெய்து | இன்னமும் (என்னைப்) பிரவேசிப்பித்து | | |
| திரிவாய் என்று சிந்தித்தி என்று | (கருமவசத்தால்) திரியக்கடவாய் என்று (என்னைக் குறித்து நீ) திருவுள்ளங் கொள்ளுகின்றனையோ? என்று | என உள்ளம் உருகாநிற்கும் | என்மனம் (க்லேசத்தால்) நெகிழ்ந்து உருகிக் கொண்டேயிருக்கும். |

* * *—பிரளயாபத்திலே அனைத்தையும் பாதுகாக்கிற இறைவனே இந்த ஆபத்துக்கும் உதவத் தக்கவனென்று கொண்டு ஊழிமுதல்வா! என விளித்துக் கூறுகின்றார். பிரமன் முதலிய ஸகல தேவர்களுமுட்பட யாவும் அழிந்து போகின்ற கல்பாந்த காலத்திலே ஸ்ரீமந்நாராயணன் அண்டங்களையெல்லாம் தன் திருவயிற்றில் வைத்து அடக்கிக்கொண்டு சிறுகுழந்தை வடிவமாய்ப் பிரளயப் பெருங்கடலிலே ஆதிசேஷனது அம்சமானதோர் ஆலிலையின்மீது பள்ளிகொண்டு அறிதுயில் செய்தருள்கின்றனனென்று வரலாறு இங்கு அறியத்தக்கது. ஊழி முதல்வா! இன்னமும் மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து திரிவேனும்படி திருவுள்ளம்பற்றியிருக்கின்றாயோ என்று நினைத்து அஞ்சி, இரண்டு பக்கத்திலும் நெருப்புப் பற்றியெரிகின்ற கொள்ளிக்கட்டையின் நடுவிலே அகப்பட்டு வருந்தும் எறும்புபோல என்மனம் கிலேசப்பட்டுக்கொண்டேயிருக்கின்றதென்கிறார்.

உரு ஆர் பிறவி=உடம்பும் உயிருங்கூடியதாயினும் உடம்பின் குணமான பேதைமையேமிக்கு உயிரின் குணமான உணர்வுகுன்றித் தேஹாபிமானமே மிகுந்து ஆத்மோஜ்ஜீவந வகையிற்புகாத பிறப்பு என்றபடி. பலவகைப்பட்ட வடிவங்கொண்ட பிறப்பு என்னவுமாம். அச்சத்துக்குக் காரணமாயமைந்த பிறப்பு என்றும் பொருள் கொள்ளலாம். திரிதல்—மாறிமாறிப் பல பிறப்பும் பிறந்து இறந்து உழலுதல்.

இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல்=எந்தப்பக்கம் போனாலும் நெருப்பே அடையும்படி ஜநநமரணங்களிரண்டுக்கும் நடுவே அகப்பட்டுநோவு படுகிற தன்மைக்கும் எங்கும் புகவிடமின்றிப் பொறுக்கவும் மாட்டாது படுகிற பாட்டுக்கும் ஏற்ற உவமை. தமது எளிமைதோன்ற எறும்பை உவமை கூறினர், திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்திலுள்ள "இருதலை மின்னுகின்ற, கொள்ளிமேல் எறும் பெனுள்ளம்" என்ற செய்யுள் இங்கு நினைக்கத்தக்கது. ... 4

கொள்ளக்குறையாதவிடும்பைக்குழியில்*தள்ளிப்புகப்பெய்திகொல்? என்றதற்கஞ்சி *
வெள்ளத்திடைப்பட்டநரியினம்போலே * உள்ளம்துளங்காநிற்ப னூழிமுதல்வா! 5

| | | | |
|---|---|---|---|
| ஊழி முதல்வா | ப்ரளயகாலத்தில் அத்விதீயனாயிருப்பவனே! | வெள்ளத்து இடை | வெள்ளத்திலே |
| கொள்ளக் குறையாத இடும்பைக் குழியில் | அநுபவிக்க அநுபவிக்கக் குறையாதபடியுள்ள துன்பங்களை விளைப்பதான கர்ப்பஸ்தானத்திலே | பட்ட | அகப்பட்டுவருந்துகிற |
| | | நரி இனம் போலே | நரிக்கூட்டம்போலே |
| தள்ளிப் புகப் பெய்திகொல் என்று | நான் புகும்படி என்னைத் தள்ளிப் போகடுவையோ நீ என்று | உள்ளம் துளங்கா நிற்பன் | மனம் நடுங்கிநிற்பேன்யான் |
| அதற்கு அஞ்சி | அப்பிறவித்துயர்க்கு அஞ்சி | | |

* * *—இன்னமும் என்னைக் கொடிய ஸம்ஸாரத்திலே தள்ளி அகற்றிவிடப் பார்க்கிறாயோவென்று பெருநீர்ப் பெருக்கிலகப்பட்ட நரியினம் போலே ஒன்றுந் தோன்றாது நிலைகலங்கிக் கிடக்கின்றேனென்கிறார்.

இவ்வளவுகாலம் அநுபவித்துக் கழிவதென ஓர் எல்லையுண்டாகில் அக்கால வரையறையை எதிர்பார்த்து அது கழியுமளவும் கிலேசப்பட்டாலும் படலாம்; அங்ஙனமன்றி, காலதத்துவமுள்ளவளவும் அநுபவித்துக்கொண்டிருந்தாலும் முதலிற் குறைவுபடாது மேன்மேல் வளர்கிற துன்பங்களைத் தருவதானபிறப்பு, என்பது முதலடியின் கருத்து.

பிறப்பில் புகுதற்குக் காரணம் ஊழ்வினையேயாயினும் அதனை எம்பெருமான் ஒழித்திடுவதற்கு ஸமர்த்தனாயிருந்தும் அங்ஙனம் ஒழித்திடாதிருத்தலே காரணமாக 'தள்ளிப்புகப்பெய்தி கொல்' என்று அவன்மேல் ஏற்றிக் கூறுகின்றார். "கிணற்றிலே விழுகிற ப்ரஜையை வாங்காத தாயைத் தானே தள்ளினாள் என்னக் கடவதிறே" என்ற வியாக்கியான வாக்கியம் அறியத்தக்கது.

தள்ளிப்புகப்பெய்திகொல்?='நெருப்பிலே அகப்பட்டு எரிகிறவனைத் திரிய அதுக்குள்ளே தள்ளி ஒன்றையிட்டு அமுக்குவாரைப்போலே.

நரியினம்போலே=வெள்ளத்திலகப்பட்ட ஒரு நரியின் வருத்தம் தமது கிலேசத்திற்கு ஒப்பாதற்குப் போதாதென்னுங்கருத்தால் ' நரியினம் போலே உள்ளம் துளங்கா நிற்பன்' என்கிறார். நரிகள் பலவற்றுக்கு முண்டானபயம் இவரொருவர்க்குமே உண்டாயிற்றென்க.

ஊழிமுதல்வா!=முன்பு நீ பரிஹரித்த ப்ரளயாபத்தினளவல்ல நான் நோவுபடுகிற ஸம்ஸாரப்ரளயம்; அங்கு ஒருவரும் அபேக்ஷியாதிருக்கப் பரிஹரித்தாய்; இங்கு நான் அபேக்ஷிக்கச் செய்தேயும் பராமுகமாயிருக்கிறாய், என்பது குறிப்பு. 5

படைநின்றபைந்தாமரையோடு * அணிநீலம் மடைநின்றலரும்வயலாலிமணாளா! *
இடையனெறிந்தமரமேயொத்திராமே * அடையவருளாயெனக்குன்றனருளே. 6

| | | | |
|---|---|---|---|
| படை நின்ற | உழுபடையாகிய கலப்பையைக் கொண்டு உழும்போது அதில் அகப்பட்டு அழியாமல் தப்பியொதுங்கி நின்ற | மணாளா | மணவாளனென்னுந் திருநாமமுடைய எம்பெருமானே! |
| பைந்தாமரையோடு | பசுமையான தாமரைக் கொடிகளும் | இடையன எறிந்த மரமே ஒத்து இராமே | (ஆடுமாடுகள் எட்டித்தழை மேயும்படி) இடையர்கள் (விரைந்து கையிற் கத்திகொண்டு கிளைகளை) வெட்டிச் சாய்க்கப்பெற்ற மரங்கள்போல் யான் ஒருபுறம் உலராதபடி |
| அணிநீலம் | அழகிய நீலோற்பலக் கொடிகளும் | அடைய | நான் உன்னையடையும்படி |
| மடை நின்று | (பின்பு களையாகப்பறித்தெறியப்பட்டு அங்ஙனம் எறியப்பட்ட இடமான நீர்பாயும் மடையிலே கிடந்து | எனக்கு | எளியவனான அடியேனுக்கு |
| அலரும் | மலரப்பெற்ற | உன்தன் அருள் | உனது கருணையை |
| வயல் | கழனிகளையுடைய | அருளாய் | செய்தருளவேணும் |
| ஆலி | திருவாலியென்னுந் திருநகரியிலெழுந்தருளியிருக்கிற | | |

* * *—இவ்வாழ்வார்க்கு அதிஸமீபஸ்தனான வயலாலி யெம்பெருமான் "அடியேன் பிறந்தேன் பிறந்தபின்னை, வற்றாநீர் வயல்சூழ் வயலாலியம்மானைப், பெற்றேன் பெற்றதுவும் பிறவாமைப் பெற்றேனே" என்றும் "அணியாலி கைதொழுது, முன்னஞ்சேர் வல்வினைகள்போக முகில் வண்ணன், பொன்னஞ்சேர் சேவடிமேற் போதணியப்பெற்றோமே" என்றும் மிக ஈடுபட்டுக் கூறும்படி மிகப் பாங்கான வழிபடுகடவுளாதலால் அப்பெருமானை விளித்து 'எனக்கு உன்றன் அருள் அருளாய்' என்கிறார்

விளை நிலங்களில் கலப்பைகொண்டு சால்சாலாக உழும்போது இருபுறத்தும் உழுபடை செல்ல அதற்கு அறாமல் இடையிடையே கிடக்குமிடமும் படை யெனப்படும். கலப்பைச் சாலில் அகப்படாமல் தப்பிப் படையென்னும் அந்நடுவிடத்திலே நின்ற பசுமையான தாமரைக்கொடிகளும் அழகிய நீலோற்பலக் கொடிகளும் பின்பு பயிர் செய்பவர்களால் களையாகப் பறித்துப் புறத்திலே யெறியப்பட்ட இடமான நீர்பாய்மடையிற் கிடந்து மலருமென அந்நாட்டின் நிலவளச் செழுமை கூறியவாறும். *வற்றாநீர் வயல்சூழ் வயலாலியாதலால் இங்ஙனமாதல் கூடும். "மணிகெழுநீர் மருங்கலரும் வயலாலி" மையிலங்கு கருங்குவளை மருங்கலரும் வயலாலி" "வம்பார் பூவயலாலி" எனப் பிறவிடங்களிலும் இவ்வாழ்வார் அருளிச் செய்தல் காண்க.

மணாளன்=மணவாள னென்பதன் மரூஉ; கலியாணப்பிள்ளையென்று பொருள்படும். மணம் ஆளன் எனப் பிரியும். திருவாலியி லெம்பெருமான் அமிருத கடவல்லி நாச்சியாரை மணம்புரிந்த மணவாளத் திருக்கோலத்துடனே வந்து இவ்வாழ்வார்க்குக் காட்சிதந்து வலிய ஆட்கொண்டு மந்திரோபதேசஞ் செய்து அருள்புரிந்ததனாலும் மணவாளனெனத் திருநாமமுடையன். இவ்வாழ்வார் தம்மைத் தலைமகளாகப் பாவித்து இப்பெருமானைத் தமக்கு மணவாளனாகக் கொண்டு சில திருமொழிகள் விண்ணப்பஞ் செய்திருத்தலும் உணர்க.

பின்னடிகளின் கருத்தாவது;—ஆடுமாடுகள் எட்டித் தழைமேயலாம்படி இடையர்கள் சிலமரங்களின் கிளைகளைக் கைக்கத்திகொண்டு பாதியளவு வெட்டிச் சாயவிட்டிருத்தல் இயல்பு. அம்மரம் ஒருசார் பசுமையாய் ஒருசார் உலர்ந்து கிடக்கும்; அதுபோலநான் ஞானலாபத்தாலுண்டான மகிழ்ச்சியைப் பெற்றதனோடு பேறுகிடைக்கப் பெறாமையாலுண்டான வாட்டத்தையும் அடைந்திராதபடி எனக்கு அருள்செய்யவேண்டுமென்கிறார். "நீடுபன் மலர்மாலையிட்டு நின்னிணையடி தொழுதேத்துமென் மனம்வாட நீ நினைபோல்.........அணியாலியம்மானே!" என்றார் முன்னும். முழுவதும் ஆக்கமே பெறும்படி அருளவேண்டுமென்றவாறு. வேர்பறித்த கொடியின் மலர்களும் போட்டவிடத்திலே செவ்வி பெறும்படி செய்யுந் தேசத்திலே வாழ்பவனாய் முதல் பறித்ததற்குஞ் செவ்வி பெறுத்தவல்ல பரமசக்தியுக்தனான உனக்கு வேர்பறியாது ஒருசாருலர்ந்தது மாத்திரமாயுள்ள மரத்துக்கு முழுவதும் பசுமையுண்டாம்படி செய்தல் எளிதே; ஆகவே, அம்மரம்போல ஒருபுறந் தளிர்த்து ஒருபுறம்வாடும் எனக்கு நீ பூர்ணாநந்தத்தை விளைக்கத் தட்டில்லையென இப்பாசுரத்தின் நயமுணர்க. பலபொல்லாங்குகட்கு இடமான உடம்புடனே இவ்வுலகத்திலே யிருந்து தொண்டுசெய்தலினால் பூர்ணத்ருப்தியுண்டாகாமைபற்றி நான் பரமபதத்தில் உன்னையடையும்படி அருள்புரியவேணுமென்று வேண்டினாராயிற்று.

'இடையனெறிந்த மரம்' என்றதொடர் ஒரு பழமொழியாய் வழங்கிவந்ததென்பது "அடையப்பயின்றார்" என்று தொடங்கும் பழமொழிச் செய்யுளின் ஈற்றடியாக அத்தொடர் அமைந்திருத்தலால் தெரிகின்றதென்பர். இங்ஙனமே இத்திருமொழியின் முன்பின் பாசுரங்களில் வந்த 'ஆற்றங்கரை மரம்' 'காற்றிடைப்பட்ட கலவர் மனம்' 'பாம்போடொரு கூரையிற் பயிலல்' 'இருதலைக் கொள்ளியெறும்பு' 'வெள்ளத்திடைப்பட்ட நரியினம்' 'வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது' என்பனவும் முதுமொழியாதலைப் பழைய நூல்களிற் காணலாமென்ப. ... ... ... ... ... .. 6

வேம்பின்புழுவேம்பன்றியுண்ணாது* அடியேன் நான்பின்னும் உன்சேவடியன்றி நயவேன் *
தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து* ஐவாய்ப் பாம்பினணைப்பள்ளிகொண்டாய்பரஞ்சோதி! 7

தேம்பல் — (தக்ஷ) முனிவனது சாபத்தினாலுண்டான க்ஷயரோகத்தால், உடல் தேய்ந்து மெலிந்து வருந்துதலையுடைய

இளந் திங்கள் — பருவம் நிரம்பாத சந்திரனை

சிறை விடுத்து — (நோயாகிய சிறைத்துன்பத்தினின்று விடுவித்து

ஐவாய் பாம்பின் அணை பள்ளி கொண்டாய் — ஐந்துதலையையுடைய ஆதிசேஷனாகிய சயனத்தில் அறிதுயில் கொண்டருள்பவனே!

பரஞ்சோதி — எல்லாவொளிகளினுஞ் சிறந்த ஒளியையுடைய

வேம்பின் புழு — வேப்பமரத்திலுண்டான புழுவானது

வேம்பு அன்றி உண்ணாது — அம்மரத்தின் இலை முதலியவற்றைச் சுவைபட உண்ணுமேயன்றி வேறொன்றை உண்ணாது;

(அதுபோலவே)

அடியேன் நான் — உனக்கே அடிமைப்பட்டவனான நான்

பின்னும் — நீ வெறுத்தாலும்

உன் சே அடி அன்றி நயவேன் — உனது சிவந்த திருவடிகளையன்றி வேறொன்றை விரும்பேன்.

* * *—கொண்ட கணவன் இனியனவே செய்யினும் இன்னாதனவே செய்யினும் தலைகட்டு அவனையன்றிக் கதியில்லாதாப்போலே, தலைவனான எம்பெருமான் யாது செய்யினும் அடியவனான ஜீவனுக்கு அப்பரமனையன்றிப் புகலிடமில்லை

என்பது இப்பாசுரத்தின் தேர்ந்த பொருள். "வேம்பின்புழு வேம்பன்றி யுண்ணாது" என உபமான வாக்கியமும் "அடியேன் நான்பின்னும் உன் சேவடி யன்றி நயவேன்" என உபமேய வாக்கியமும் தனித்தனி நின்று இடையில் உவம வுருபு பெறாமல் பிம்பபிரதிபிம்ப பாவந் தோற்ற நிற்றலால் எடுத்துக் காட்டுவமையணி.

இதில் "தொண்டர் தங்கள் சிந்தையுள்ளே முளைத்தெழுந்த தீங்கரும்பு" என்றும் "அமுதம் பொதியின்சுவைக் கரும்பு" என்றும் "கன்னலைக் கரும்பினிடைத் தேறலை" என்றும் ஸர்வரஸனான எம்பெருமானது மிக்க இனிமைக்கும் அவ்வினிமையில் தாம் கொண்டுள்ள ஈடுபாட்டுக்கும் ஏற்பக் கரும்பை உவமைகூறிப் போந்தவர் அதற்கு மாறாகவும், "இன்சுவைக் கட்டி" எனப்படுகிற அப்பரம் பொருளின் தகுதிக்குப் பொருந்தாதபடியும் வேம்பை உவமைகூறியது என்னென்னில்;—யான் உன்னையே விரும்பியிருப்பது நீ மிக இனியனாயிருத்தல் பற்றியே யன்று; நீ மிக இன்னாதவனாயிருப்பினும் உன்னையே விரும்பியிருக்கும் கடப்பாடுடையேன் யான் என்னுங்கருத்து அமைய இங்ஙனங் கூறினரென்க. எம்பெருமானிடத்தில் நமக்குள்ள அடிமை குணங்காரணமாகவன்று; ஸ்வரூப ப்ரயுக்தம் என்று காட்டினபடி.

இப்படி தாம் பரம்பொருளையன்றி வேறுகதி கொள்ளாமலிருத்தலை உறுத்திக் கூறுமிடத்துக் கரும்பன்றியுண்ணாமையை உவமைகூறினால் இத்துணைச் சிறப்பு அமையாமைபற்றி வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாமையை உவமை கூறினர். ஆகவே, இது இழிவுவமைக் குற்றத்தின்பாற் படாமையுணர்க. "மிகுதலுங் குறைதலுந் தாழ்தலு முயர்தலும், பான்மாறுபடுதலும் பாகுபாடுடைய" என்ற தண்டியலங்கார சூத்திரத்தாலும் அதன் உரையாலும் உயர்ந்த பொருளை இழிந்த பொருளோடு உவமித்தல் புன்புலவர் புணர்க்குங்கால் சிறப்பின்மை தெரிந்து ஆன்றோரால் குற்றமென்று தள்ளப்படுதலும், அதுவே நன்புலவர் புணர்க்குங்கால் சிறப்புடைமை தெரிந்து ஆன்றோரால் குணமென்று கொள்ளப்படுதலுங் காண்க; இவ்வாறே "நாயனையார் கேண்மை கெழீஇக் கொளல் வேண்டும்" என்றாற்போல நல்லிசைப் புலவர் செய்யுள்களில் வருவன கண்டுகொள்க.

திங்கள் சிறைவிடுத்த வரலாறு வருமாறு:—சந்திரன் தக்ஷமுனிவனது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்ரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் ரோஹிணி யென்பவளிடத்து மிகவுங் காதல் கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங்கூடி வாழ்ந்திருக்க, மற்றை மகளிரின் வருத்தத்தை நோக்கிச் சினங்கொண்ட அம்முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தால் சந்திரன் பதினாறு கலைவடிவாகவுள்ள தனது உடல் நாளடைவிற் குறைபவனாகி அங்ஙனம் தனக்கு விரைவில் நேரக்கடவதான அழிவைப் போக்கிக் கொள்ளுதற்கு வேறு புகலிட மொன்றுங்காணாமல் சிந்தித்து ஸ்ரீரங்க க்ஷேத்ரத்தை யடைந்து அங்குள்ள நவ தீர்த்தங்களிலொன்றும் கோயிலின் வடபுறத்தே யுள்ளதுமான புண்யதீர்த்தத்தில் நீராடி அதன்கரையில் ஒரு புன்னைமரத்தின் நிழலில் இருந்து ஸ்ரீரங்கநாதனைக் குறித்துத் தவஞ்செய்ய, அந்தம்பெருமாள் அவனுக்குப் பிரத்யக்ஷமாகி, மீண்டும் கலைகள் நாள்தோறும் வளர்ந்து வரும்படி அநுக்ரஹித்தனனென்பதாம். அத்திவ்ய தீர்த்தம் இதனால் சந்த்ரபுஷ்கரிணி யென்று பெயர் பெற்றது. ஸ்ரீபட்டர் அருளிச்செய்த ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் இப்புஷ்கரிணியைப் பற்றின ச்லோகத்தில் "அப்யாஸதோபாமகமர்ஷணீநாம் சந்த்ரஸ் ஸுதாதீதிதிதாமவாப." என்றது காண்க. "கோள்வாய் மதியம் நெடியான் விடுத்தாங்கு" (சீவக சிந்தாமணி) எனப் பிறவிடத்தும் திருமால் சந்திரனுக்கு உதவியதாகக் கூறுதல் காண்க. சந்திரன் தர்மகஸிபருடைய

சாபத்தினால் தனது கலைகள் குறையலுற்று வந்து தவஞ்செய்து ஸ்ரீரங்கநாதனது திருவருளினாற் பழையபடி கலைநிரம்பப் பெற்றனனென்ன வரலாறு வழங்குதலுமுண்டு. தேம்பல்—இளைத்தல்; தொழிற்பெயர்; தேம்பு—பகுதி; அல்—விகுதி; சிறைவிடுத்து—சிறையாவது காவல்; நிர்ப்பந்தம். இங்குத் துன்பத்துக்கு இலக்கணை.

'நான்' என்று மாத்திரஞ் சொன்னால் அஹங்காரமென்கிற யானென்னுஞ் செருக்குத் தோன்றுமென்று 'அடியேன் நான்' என்றார். இயற்கையில் கரும்பாயிருக்கிற நீ என்திறத்தில் வேம்பாக ஆனாலும் உன்னை நான் விடமாட்டேனென்றது போலவே, இயற்கையில் உனக்கு அடியவனாயிருக்கிற நான் அவ்வடிமை மாறப்பெற்றாலும் உன்னை விடமாட்டேனென்பதாக 'பின்னும்' என்ற சொல்லுக்குக் கருத்துரைப்பர் சிலர்.

'தேம்பலிளந் திங்கள் சிறைவிடுத்து ஐவாய்ப் பாம்பினணைப் பள்ளிகொண்டாய்' என்ற தொடர், அடுத்த பாசுரத்தில் வருகிற அரங்கநகரப்பனைக் குறித்ததாம். "துண்ட வெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய வண்டு வாழ் பொழில்சூழரங்கநகர் மேயவப்பன்" என்ற திருப்பாணாழ்வார் பாசுரம் இங்கு ஒப்பு நோக்கத்தக்கது. சந்திரனது உடற்குறையைப் போக்கின நீ என்மனக் குறையையும் போக்குவாயென்பது 'தேம்பலிளந்திங்கள் சிறைவிடுத்து' என்றதன் குறிப்பு.

'ஐவாய்ப் பாம்பினணைப் பள்ளிகொண்டாய்' என்றது உன்னை யெப்பொழுதுஞ் சேர்ந்திருக்க விரும்புகின்ற அடியார்க்கு அங்ஙனம் நினது நிரந்தர ஸம்ச்லேஷத்தைத் தந்தருள்வாயென்ற குறிப்பு; திருவனந்தாழ்வானைப்போலே என்னையும் எப்பொழுதும் உன்னைவிட்டுப் பிரியாமல் உன்னிடஞ் சேர்த்துக் கொண்டருளவேணு மென்றவாறு. கீழும் 'அடையவருளாய் எனக்குன்றனருளே' என்றார்.

எம்பெருமானது திவ்ய தேஜஸ்ஸில் தாம் ஈடுபட்டமை தோன்ற 'பரஞ்சோதீ!' என விளிக்கின்றார். பரஞ்சோதி—ஸூரியன் சந்திரன் அக்கி என்னும் முச்சுடர்களின் ஒளியினும் மேம்பட்ட ஒளி. ... ... ... 7

அணியார்பொழில்சூழரங்கநகரப்பா!* துணியேயினி நின்னருளல்லதெனக்கு *
மணியே! மணிமாணிக்கமே! மதுசூதா! * பணியாயெனக்குய்யும்வகைபரஞ்சோதி! 8

| | | | |
|---|---|---|---|
| அணி ஆர் பொழில் சூழ் | அழகுமிக்க சோலைகள் சூழப்பெற்ற | மணி மாணிக்கமே | சிறந்த ரத்நமான மாணிக்கம் போல மேன்மை யுடையவனே! |
| அரங்கம் நகர் | திருவரங்கமென்னுந் திருநகரத்தில் எழுந்தருளியிருக்கின்ற | மதுசூதா | மதுவென்னும் அசுரனை யழித்தவனே! |
| அப்பா | தந்தையே! | | |
| இனி | இனிமேல் | பரம் சோதி | சிறந்த வொளியை யுடையவனே! |
| நின் அருள் அல்லது | உனது கருணையையே யன்றி மற்றொன்றை | | |
| எனக்கு துணியேன் | எனக்கு(த் தஞ்சமாக) நினைத்திடேன்; | எனக்கு உய்யும் வகை பணியாய் | யான் (பிறவித்துயர் தீர்ந்து பரமபதம் பெற்று) உஜ்ஜீவிக்குமாறு எனக்கு ஒரு நல்வார்த்தையருளிச் செய்ய |
| மணியே | நீலமணிபோன்ற வடிவை யுடையவனே! | | |

* * *—அரங்கநகரப்பனே! ஆபத்காலத்திலுதவும் உற்ற வுறவினனான நீ மிக்க குளிர்ச்சியுடையதாய் இளைப்புத் தீர்க்கவல்லதான திவ்ய தேசத்திலே அடியார்களை உஜ்ஜீவிப்பிக்கும் பொருட்டு வந்து எழுந்தருளியிருத்தலால் உனது

அருளையன்றி வேறொன்றை எனக்குப் பற்றுக்கோடாகக் கொள்ளேன் யான் என்கிறார். துணிதல்—ரக்ஷகமாக நிச்சயித்தல்.

அணி ஆர் பொழில்—வரிசையாகப் பொருந்திய சோலையெனினுமாம். சேதநர்கட்கு ஹிதங்களைச் செய்வதில் தந்தைபோலுதலால் எம்பெருமான் அப்பன் எனப்பட்டான்.

மணியே! கண்டவர் கண்குளிரும்படி நீலமணிபோன்று காண்பவரிளைப்பைத் தீர்க்கும்படியான வடிவுடையவனே! என்றபடி. மணிமாணிக்கமே—மிக்க விலையுள்ளதும் பெறுதற்கரியதுமான மாணிக்கமென்னுஞ் சிறந்த ரத்நம் போல இயற்கையில் மேன்மையுடையவனே யென்றவாறு. இவ்விரண்டும் உவமையாகு பெயர். மதுசூதனன் என்ற வடசொல்—மதுவென்ற அசுரனை அழித்தவனென்று பொருள்படும். ‘மணியே மணிமாணிக்கமே’ என்றழைத்தது வடிவழகிலும் மேன்மையிலுங்கொண்ட ஈடுபாட்டினால். ‘மதுசூதா’ என்றழைத்தது, நீ முன்பு மதுவென்னும் அசுரனைக் களைந்தாற்போல இப்பொழுது எனக்குப் பகையான பிறவித் துயரத்தை அழித்தருள்வாயென்ற குறிப்பு.

செய்வது இன்னதென்று அறியாது சோகித்து நின்ற குறித்து ‘உனது பாரமுழுதையும் நம்மேல் ஏறிட்டு நம்மையே தஞ்சமாக இரு; நாம் உன் விரோதிகளைப் போக்குகிறோம்; நீ சோகியாதே’ என்று கீதையருளிச் செய்தாற்போல, நான் உய்யும்படி எனக்கு ஒரு நல்வார்த்தை யருளிச் செய்யவேணு மென்பார் ‘எனக்கு உய்யும்வகை பணியாய்’ என்கிறார். நீ பேறு தந்தருள்வது பின்பொரு ஸமயத்திலானாலும், முன்னர் ‘தருவேன்’ என்று சொல்லுதல் மாத்திரஞ் செய்தாலும் அதுகொண்டு ஆறியிருப்பேனென்பது உட்கோள்.

இங்ஙனம் தாம் பிரார்த்தித்ததற்கு இரங்கி அவன் ஒன்று சொல்லத்தொடங்கும்போது அவனது திருமுகமண்டலத்திலும் திருமேனியிலும் அருளினாலுண்டாவதொரு பெருவிளக்கத்தை யுட்கொண்டு பரஞ்சோதி யென விளித்தனரென்பர் பெரியவாச்சான்பிள்ளை. ... ... ... ... 8

**நந்தாநரகத்தழுந்தாவகை*நாளுமெந்தாய்! தொண்டரானவர்க்கு இன்னருள்செய்வாய்**
**சந்தோகா! தலைவனே! தாமரைக்கண்ணா!* அந்தோ! அடியேற்கருளாயுன்னருளே.**

| | | | |
|---|---|---|---|
| நந்தா நரகத்து | அழியாததொரு நரகமாகிற பிறவித்துயரத்திலே | சந்தோகா | வேதங்களையெல்லாம் அறிந்தவனே! |
| அழுந்தாவகை | மூழ்கிக்கிடக்க வேண்டாதபடி | தலைவனே | மேம்பட்டவனே! |
| நாளும் | எப்பொழுதும் | தாமரை கண்ணா | செந்தாமரைமலர்போன்ற திருக்கண்களை யுடையவனே! |
| தொண்டர் ஆனவர்க்கு | உனது அடியவரானவர்களுக்கு | அந்தோ | ஐயோ! |
| இன் அருள் செய்வாய் | இனிமையான கருணையைச் செய்யுமியல்வுடையவனே! | அடியேற்கு | அடியேனுக்கு |
| | | உன் அருள் | உனது கிருபையை |
| எந்தாய் | எமது தந்தையே! | அருளாய் | செய்தருள். |

* * *—செய்த பாபங்களுக்குத் தக்கபலனாகிய கொடுந்துன்பத்தை அநுபவித்த வளவிலே நரகத்தைவிட்டு நீங்குதல் கூடுமாகையாலே அந்த யமனுடைய நரகத்துக்கு அழிவுண்டு; பிறவித்துயர்க்குக் காரணமான அவித்யை முதலியவற்றிற்கு ஒழிவில்லாமையால் அப்பிறவித் துயரம் மாறாதே அநுபவிக்கப்படுவ

காதல் பற்றி 'நந்நரகம்' எனப்பட்டது. நரகயாதனையோடொத்த கொடுந் துன்ப மென்றபடி. விவேகிகள் ஸம்ஸாரத்தையே நரகமென்றபெயரால் வழங்குவர். இதற்கு அழிவு செய்வது எம்பெருமானருளன்றி வேறில்லையாதலால் "அழுந்தா வகை நாளும் இன்னருள் செய்வாய்" என்கிறார். அத் திருவருளைப் பெற்றுத் துயர்நீர்ந்து வீடு பெறவேண்டுவார்க்கு அப்பெருமான் திருவடிகளில் வழிபாடு செய்தல் அவசியமென்பது தோன்ற 'தொண்டரானவர்க்கு' எனப்பட்டது.

கண்டோனுட்ட முடையனுப் கருணை மழைபொழிய மலரவிழித்த திருக் கண்களின் ஈடுபாட்டினுல் 'தாமரைக்கண்ணு!' என்கிறார். அந்தோ! என்ற இரக்கக் குறிப்பு முறைபிடுதற்கண் வந்தது [எந்தாய்! அந்தோ அடியேற்கு அருளாய்] தந்தை அரசாண்டு இன்புறயிருக்க, மைந்தன் தரித்திரனுயிருந்தாற்போல, நீ எவ் வகையாலுங் குறைவில்லாதிருக்க யான் இங்ஙனம் எளிமைப்படுவதே! என்று சிந்தித்து இரங்குகின்றனரென்க. செய்வாய் என்பதில், வகரவிடை நிலை—எதிர் கால முணர்த்தாது தன்மை யுணர்த்திற்று.

சந்தோகன்—வடசொல். சந்தஸ்—வேதம்; அதனுல் கானம் பண்ணப்படு பவன்; சந்தோகன். இனி, சந்தஸ்ஸையடைந்தவ னெனினுமாம். அடைத லென்னும் பொருளுடைய சொற்களுக்கெல்லாம் அறிதலென்னும் பொருளுமுண் டென்பது வடநூல் வழக்கு: இனி, எல்லா வேதங்களாலும் எடுத்து உரைக்கப்படு பவன் என்றுங் கருத்துக்கொள்ளலாம். சந்தோகமென்னும் ஸாம வேதத்தின் பகுதியை யறிந்தவனே யென்றும் சாந்தோக்யோபநிஷத்துக்கு விஷயமானவனே யென்றும் பொருள் கொள்ளவுமிடமுண்டு.

நாளும்—நாள்தோறும்; எந்நாளும்: உம்மை தொறுப்பொருளது. ... 9

குன்றமெடுத்தாநிரைகாத்தவன்றன்னை*மன்றில்புகழ் மங்கைமன்கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றவொன்பதும்வல்லவர்தம்மேல்*என்றும்வினையாயினசாரகில்லாவே. 10

| | | | |
|---|---|---|---|
| குன்றம் எடுத்து | (கோவர்த்தன) மலையைக் குடையாகவெடுத்துப் பிடித்து (அது கொண்டு பெருமழையைத் தடுத்து) | கலிகன்றி சொல் | ஆழ்வார் அருளிச்செய்த |
| | | ஒன்று நின்ற ஒன்பதும் | இப்பத்துப் பாசுரங்களையும் |
| ஆநிரை காத்தவன் | பசுக்கூட்டத்தை பாதுகாத்தவனை எம்பெருமானைக் குறித்து | வல்லவர் தம் மேல் | ஓதியுணர்ந்தவர்களின் மேல் |
| | | வினை ஆயின | கருமங்கள |
| மன்றில் புகழ் | சபைகளில் புகழப்படுபவராய் | என்றும் | எப்பொழுதும் |
| மங்கை மன் | திருமங்கை நாட்டுக்குத் தலைவரான | சாரகில்லா | அணுகிப் பயன் விளைக்க மாட்டா. |

* * * ச் சார்ந்த உயிர்களை உயர்திணையோடு அஃறிணையோடு வாசியற இடையூறில்லாதபடி குறிக்கொண்டு பாதுகாத்தருள்பவனை எம்பெரு மான் விஷயமாகத் திருமங்கைமன்னன் திருவாய்மலர்ந்தருளிய இத் திருமொழியை ஓதியுணருமவர்கள் எவ்வினையும் நீங்கப்பெற்று இன்புறுவர் என்று பயனுரைத்து இப்பெரிய திருமொழியைத் தலைக்கட்டியருளினாராயிற்று.

இரண்டாமடியில் 'மன்றில் புகழ்' என்ற பழையபாடம் மறைந்துபோய் 'மன்றில் மலி புகழ்' என்ற புதிய பாடமே எங்கும் பரவிநின்றாலும் அது பெரி யோர்க்கு உடன்பாடன்று. இத்திருமொழியில் நேரசை முதலான பாசுரங்கள் தோறும் ஒவ்வோரடியும் ஒற்றொழித்துப் பன்னிரண்டெழுத்தும், நிரையசை

முதலான பாசுரங்கள்தோறும் ஒவ்வோரடியும் ஒற்றொழித்துப் பதின்மூன்றெழுத்தும் அமைந்துள்ளன வென்பதைக் கண்டறிந்தால் இப்பாட்டில் 'மலி' என்பது அதிகப்படியான பாடமென்று எளிதிற் புலனாகும்.

மன்று—பலர்கூடும் வெளியுமாம். சிலரேனும் பலரேனும் கூடுமிடங்களிலெல்லாம் அவர்களனைவராலும் பாராட்டிப் பேசப்படுகின்றது ஆழ்வாருடைய கீர்த்தி யென்றபடி. முன்பு ஐம்புலன் வழிச் சென்றிருந்தமை தவிர்ந்து பின்பு எம்பெருமானைச் சரணமடைந்து அவனருளைப் பெற்றதனாலாகிய தமது புகழையே இங்ஙனம் பாராட்டிக் கூறினராதலால் இது தற்புகழ்ச்சிக் குற்றத்தின் பாற்படாது.

ஒன்று நின்ற ஒன்பது—ஒன்றோடு கூடிநின்ற ஒன்பது. ஒன்றும், நின்ற ஒன்பதும் என்று பிரித்தலுமாம். [மங்கைமன் கலிகன்றிசொல் ஒன்று நின்றவொன்பதும்] அரசாட்சிச் செருக்குடையரா யிருந்தவர் அச்செருக்கு ஒழிந்து தமது குற்றங் குறைகள் மாத்திரமேயன்றி உலகத்தாரது கலிதோஷத்தையுங் கடியுமாறு அருளிச்செய்த திருமொழி. நல்வினையும் பிறப்பிற்குக் காரணமாதலால் அதனையும் உட்படுத்தி 'வினையாயின சாரகில்லா' என்றார்: "இருள் சேரிருவினையுஞ் சேரா இறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்றார் திருவள்ளுவரும். [வினையாயின சாரகில்லா] அவர்கள் இருவினையும் அற்றுப் பிறவித்துயரகல வீடு பெறுவரென்றபடி. இத்திருமொழி வல்லவர் எம்பெருமானருளாற் பரமபதமடைவரென்ற கருத்தை 'வல்லவர்தம்மேல் என்றும் வினையாயின சாரகில்லாவே' என்று எதிர்மறைமுகத்தால் நன்கு விளக்கினர். அடியவரான தமது பிறப்பைத் தவிர்த்தருளவேணுமென்று எம்பெருமான் பக்கல் விண்ணப்பஞ்செய்து அவனை அதற்கு இணங்கும்படி செய்த திருமொழியாதலால், இதனை ஓதியுணர்பவர்க்கும் வினைசாராவென்று பயன்கூறினர். விளக்கின்முன் இருள்போலவும் காட்டுத்தீயின்முன் பஞ்சுத்துப்போலவும் இத்திருமொழி யோதுதலாகிற ஞானத்துக்குமுன் வினைகள் இருந்தஇடமுந் தெரியாதபடி அழிந்திடுமென்றவாறு. 10

அடி வரவு:—மாற்றம், சிற்றம், தூங்கார், உறுவார், கொள்ள, படை, வேம்பின் அணியார், நந்தா, குன்றம், நிதியினை.

ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி அருளிச்செய்த

**திவ்யப்ரபந்த திவ்யார்த்த தீபிகையில்**

## பெரிய திருமொழி பதினோராம்பத்து உரை

முற்றுப்பெற்றது.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

**எம்பெருமானார் திருவடிகளே சரணம்.**

ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.







# திருக்குறுந்தாண்டகம்.

திருக்குறுந்தாண்டகமென்னும் இத் திவ்யப்ரபந்தமானது இந்த வுலகில் இருள் நீங்க வந்துதித்து அந்தமிழால் நற்கலைகள் ஆய்ந்துரைத்த ஆழ்வார்களுள் பிரதானரான நம்மாழ்வாரருளிச்செய்த சதுர்வேத ஸாரமான நான்கு திவ்ய ப்ரபந்தங்களுக்கு ஆறங்கங்கூற அவதரித்த திருமங்கையாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய ஆறு திவ்யப்ரபந்தங்களுள் ஒன்றாகும். [பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், திருநெடுந்தாண்டகம் என்பன ஆறு திவ்யப்ரபந்தங்களாம்.] ஸ்ரீமந்நாதமுனிகள் வகுத்தருளின அடைவில் இரண்டாவது ஆயிரத்தில் இரண்டாவது பிரபந்தமாக அமைந்தது இது.

"வென்றியேவேண்டி வீழ்பொருட்கிரங்கி வேற்கணார் கலவியே கருதி, நின்றவாநில்லா நெஞ்சினையுடையேன்" என்றும் "சாந்தேந்து மென்முலையார் தடந்தோள் புணரின்பவெள்ளத் தாழ்ந்தேன்" என்றும் தாமே அருளிச்செய்தபடி விஷயப்ரவணராய்த் திரிந்துகொண்டிருந்த இவ்வாழ்வார்தம்மை எம்பெருமான் திருத்திப் பணிகொள்ளத் திருவுள்ளம்பற்றி 'விஷயங்களில் ஆழ்ந்து திரிகிற இவரை சாஸ்த்ரங்களைக் காட்டித் திருத்தமுடியாது; நம் அழகைக் காட்டியே மீட்கவேணும்' என்று கொண்டு தன் அழகைக் காட்டிக்கொடுக்க, ஆழ்வாரும் அதைக்கண்டு ஈடுபட்டு "வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது அடியேன் நான் பின்னுமுன் சேவடியன்றி நயவேன்" என்னும்படி அவகாஹித்தார்.

இவர் இப்படி தன்பக்கல் அவகாஹிக்கக்கண்ட எம்பெருமான் 'இப்போது இவர்க்கு நம்மிடத்து உண்டான பற்று மற்ற விஷயங்களிற் போலல்லாமல் ஸம்பந்த வுணர்ச்சியை முன்னிட்டுப் பிறந்ததாகவேணும்; இல்லையேல் இப்பற்று இவர்க்கு நிலைநிற்காதொழியினும் ஒழியும்' என்றெண்ணி எல்லாப் பொருள்களையும் விளக்குவதான திருமந்திரத்தையும் தனது ஸௌசீல்யம் முதலிய திருக்குணங்களையும் திருமந்த்ரார்த்தத்துக்கு எல்லை நிலமான திவ்யதேசங்களையும் ஆழ்வார்க்குக் காட்டிக்கொடுக்க அவரும் வாடினேன்வாடி யென்று தொடங்கி எம்பெருமானுகந்தருளின இடமே பரமப்ராப்யமென்று அநுபவித்தார். இங்ஙனம் அநுபவித்த ஆழ்வார்க்கு இவ்வநுபவம் நித்யமாய்ச் செல்லுகைக்காக இவரைத் திருநாட்டிலே கொண்டுபோகவேணுமெனக் கருதிய எம்பெருமான் ஸம்ஸாரத்தில் இவர்க்கு ஜிஹாஸை பிறக்கும்படி அதனுடைய தண்மையை அறிவிக்க, அறிந்தவிவர் அஞ்சி நடுங்கி 'மாற்றமுள' என்னும் திருமொழியிலே "ஆற்றங்கரைவாழ் மரம்போல்" "காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல்" "பாம்போடொரு கூரை

பிலே பயின்றாற்போல்" "இருபாடெரி கொள்ளியினுள் ளெறும்பேபோல்" "வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே" என்று தமது அச்சத்திற்குப் பல வற்றை த்ருஷ்டாந்தமாகச் சொல்லிக் கதறினார்.

இப்படி இவர் கதறிக்கதறி "பணியாயெனக் குய்யும்வகை பரஞ்சோதி!" என்றும் "அந்தோ வடியேற்கருளா யுன்னருளே" என்றும் சொல்லி வேண்டின விடத்தும், சிறுகுழந்தைகள் பசி பசியென்று கதறியழுதாலும் அஜீரணம் முதலியவை கழிந்து உண்மையான பசி உண்டாமளவும் சோறிடாத தாயைப் போலே எம்பெருமான் இவர்க்கு முற்றமுதிர்ந்த பரமபக்தி பிறக்குமளவும் நாம் முகங் காட்டுவோமல்லோம் என்று உதாஸீநனாயிருக்க, ஒருக்ஷணமும் அவனைப் பிரிந்திருக்கமாட்டாத ஆழ்வார், மிகுந்த தாஹங்கொண்டவர்கள் நீரிலே விழுந்து நீரைக் குடிப்பதும் நீரைவாரி மேலே யிறைத்துக்கொள்வதும் செய்யுமாபோலே அப்பெருமானை வாயாலே பேசியும் தலையாலே வணங்கியும் நெஞ்சாலே நினைத்தும் தரிக்கப்பார்க்கிறார்—திருக்குறுந்தாண்டகமென்னும் இத்திவ்வியப் பிரபந்தத்திலே.

தாண்டகம் என்பது தமிழில் ஓர்வகைப் பிரபந்தம். இது, அறுசீர்கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது, எண்சீர்கொண்ட அளவொத்த அடிகள் நான்கினாலாவது இஷ்ட தேவதையைப் புகழ்ந்துபாடும் பிரபந்தமாம். அறுசீர் கொண்டது குறுந்தாண்டகமென்றும் எண்சீர்கொண்டது நெடுந்தாண்டக மென்றும் வழங்கப்படும்.

> "மூவிரண்டேனு மிருநான்கேனும், சீர்வகை நாட்டிச் செய்யுளிடைவர், கடவுளர்ப் புகழ்வன தாண்டகம் அவற்றுள், அறுசீர்குறியது, நெடிய தெண் சீராம், அறுசீரெண்சீரடிநான்கொத்தங் கிறுவது தாண்டக மிருமூச் சீரடி குறியது, நெடியதிருநாற்சீரே"

எனப் பன்னிருபாட்டியலில் தாண்டக வகைக்கு இலக்கணமுரைத்தது காண்க.

குறுந்தாண்டகத்தில் அடிதோறும் மெய்யெழுத்து முட்படப் பதினேழெழுத்துக்குக் குறையாமலும் இருபத்தாறெழுத்துக்கு மேற்படாமலுமிருத்தல் வேண்டும். நெடுந்தாண்டகத்தில் அடிதோறும் இருபத்தா றெழுத்துக்கு மேற்பட்டே யிருத்தல் வேண்டும் என்கிற நியதியுமுண்டு.

சைவப் பிரபந்தங்களுள் குறுந்தாண்டகங் காண்பது அருமையாயினும் நெடுந்தாண்டகம் விசேஷமாகக் காணக் கிடைக்கும். ... .... *

ஸ்ரீ

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

திருமங்கை மன்னன் திருவாய்மலர்ந்தருளிய

# திருக்குறுந்தாண்டகம்.

[ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய
திவ்யார்த்த தீபிகையுடன் கூடியது]

நிதியினைப்பவளத்தூணை நெறிமையால்நினையவல்லார் *
கதியினைக்கஞ்சன்மாளக் கண்டுமுன்னண்டமாளும் *
மதியினைமாலைவாழ்த்தி வணங்கியென்மனத்துவந்த *
விதியினைக்கண்டுகொண்ட தொண்டனேன்விடுகிலேனே. 1

| | | | |
|---|---|---|---|
| நிதியினை | (அன்பர்கட்கு) 'பான்றவனும் | மாலை | அடியார் திறத்தில் வியாமோஹமே வடிவெடுத்தவனும் |
| பவளம் தூணை | பவளம்போல் இனியனும் தூண்போல் தாரகனும் | | |
| நெறிமையால் நினைய வல்லார் கதியினை | ஒரு நெறிப்பட்டுச் சிந்திக்க வல்லவர்களுக்குப் பரம கதியாயிருப்பவனும் | வாழ்த்தி வணங்கி என் மனத்து வந்த விதியினை | நான் வாழ்த்தி வணங்கும்படியாக என்னெஞ்சிலே வந்துநின்ற பாக்ய ஸ்வரூபியுமான எம்பெருமானை |
| முன் | முன்பு | | |
| கஞ்சன் மாள கண்டு | கம்ஸன் முடிந்துபோம்படி செய்து | கண்டு கொண்ட | ஸேவிக்கப்பெற்ற |
| அண்டம் | உலகங்களை | | |
| ஆளும் | ரக்ஷித்தருளினவனும் | தொண்ட | அடியேன் |
| மதியினை | (அடியவர்களை எப்போதும்) நினைத்துக்கொண்டேயிருப்பவனும் | விடுகிலேன் | (இனி ஒருநாளும்) விடமாட்டேன். |

* * *—எம்பெருமானுடைய பெருமைகளைப் பன்னியுரைத்து, என்னெஞ்சிலே வந்து புகுந்த இப்பெருமானை இனி நான் ஒருநாளும் விடமாட்டுகின்றிலேனென்கிறார்.

நிதியினை=புதைத்து வைக்கப்படும் பொருள் நிதியெனப்படும். "யோ வேத நிஹிதம் குஹாயாம்" என்ற தைத்திரீய உபநிஷத்தினால் எம்பெருமான் நிதியாக அறியப்படுவன்; "வைத்தமாநிதியாம் மதுசூதன்" என்பர் நம்மாழ்வாரும். நிலத்தினுள் புதைத்துவைத்து ஆளவேண்டியதாயிருக்கும் நாட்டிலுள்ள நிதி; எம்பெருமானாகிற நிதி அங்ஙனல்லாமல் நெஞ்சிலே புதைத்து ஆளத்தக்கதென வாசி காண்க.

நிதியானது தன்னையுடையவர்களை _ரவும் பகலுமு டாது; எந்த வேளையில் யார் கொள்ளை 'காள்வரோவென்று துஞ்சாதிருப்பர் நிதியுடையார்; எம்பெருமானை யுடையவர்களுமப்படியே; "கண்ணாரக் கண்டு கழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள் துஞ்சுதலே" என்கிறபடியே காண்பதற்கு முன்பும் உறக்கமில்லை; கண்டாலும் * ஸதாப ்யந்தியாகையாலே உறக்கமில்லை.

நிதியுடையவன் மார்பு நெறிப்பன்; எம்பெருமானைக் கைக்கொண்டவர்களும் "எனக்காரும் நிகரில்லையே" "மாறுளதோ விம்மண்ணின்மிசையே" "எனக்கென்னினி வேண்டுவதே" "இல்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரில்லையெனக்கெதிரே" என்று செருக்கிப் பேசுவர்கள்.

நிதிபடைத்தவனை உலகமெல்லாம் அநுவர்த்திக்கும்; எம்பெருமானைக் கைக்கொண்டவனையும் அப்படியே; "மைத்ரேயஃ பரிபப்ரச்ச ப்ரணிபத்யாபிவாத்ய ச" இத்யாதிகள் காண்க.

நிதியையிழந்தவன் கதறிக்கதறி யழுவன்; எம்பெருமானை யிழந்தவனுமப்படியே. ஸ்ரீராமபிரானாகிற வைத்தமாநிதியை யிழந்த பரதாழ்வான் ஸபையிற் புரண்டு கதறியழுதானிறே. "தத் ச்ருத்வா பரதோ வாக்யம் சோகேநாபிபரிப்லுதஃ, விலலாப ஸபாமத்யே" என்றது காண்க. *பழுதே பல பகலும் போயினவென்று கதறியழுவர்கள். "இன்பத்தையிழந்த பாவியேனெனதாவி நில்லாதே" "எழில்கொள் நின் திருக்கண்ணிணை நோக்கந் தன்னையு மிழந்தேனிழந்தேனே" "உன்னைக்காண்பான் நானலப்பாய் ஆகாயத்தை நோக்கி யழுவன்" என்றிப்படியெல்லாம் கதறுவர்கள். "ஏகஸ்மிந்நப்யதிக்ராந்தே முஹூர்த்தே த்யாநவர்ஜிதே—தஸ்யுபிர் முஷிதேநேவ யுக்தமாக்ரந்திதும் ந்ருணாம்."—எம்பெருமானுடைய சிந்தனையை யிழந்து ஒருக்ஷணப்பொழுது கழியப்பெற்றாலும், கள்வர் ஸர்வஸ்வத்தையும் கொள்ளைகொண்டால் எப்படி கதறியழக்கூடுமோ அப்படி கதறி யழவேணுமென்பர் அறிவுடையார்.

நிதியானது ஸித்தாஞ்ஜனமணிந்த சில பாக்யசாலிகளுக்கே கிடைக்கும்; எம்பெருமானும் பக்திஸித்தாஞ்ஜனம் பெற்ற ஆழ்வார்கள் போன்ற சில பாக்யவான்களுக்கே. இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் கண்டுகொள்க.

பவளத்தூணை—தூணானது பலவற்றையும் தரித்துக்கொண்டிருந்து தன் ஒதுங்குவார்க்கு நிழல் கொடுக்குமாபோலே எம்பெருமானும் ஸகலலோக யோக க்ஷேம துரந்தரனாய்த் தன்னடிச் சார்ந்தாரெல்லார்க்கும் தாபங்களைத் தணிக்குமவனாயிருத்தலால் தூண் என்றது. கல் தூணும் மரத்தூணும்போலல்லாமல் அனைவரும் மிகவிரும்பிப் பற்றத்தக்க தூண் என்பதற்காகப் பவளத்தூண் என்றது.

நெறிமையால் நினையவல்லார் கதியினை—மற்ற பொருள்களை நினைப்பதற்கும் எம்பெருமானை நினைப்பதற்கும் நெடுவாசியுண்டு; "நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சு இடிந்துகும்" என்கிறபடியே எம்பெருமானைச் சிந்தித்தமாத்திரத்திலே *உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்து உடம்பெலாங் கண்ணநீர் சோரநிற்கை ப்ராப்தமாகையாலே இவ்வண்ணமாக நினைத்தலே நெறிமையால் நினைத்தலாம்; அப்படி நினைப்பார்க்கு உபாயமாயிருப்பவன் எம்பெருமான் என்க.

கஞ்சன்மாளக் கண்டுமுன் அண்டமாளும்—*சாதுசனத்தை நலியுங் கஞ்சன் உயிரோடிருக்குமளவும் எம்பெருமானுடைய ஆட்சி குன்றிநின்றமையால் அவனை உயிர்மாய்த்துத் தன்னுடைய ஜகத்ரக்ஷகத்வத்தை நிலை நிறுத்திக்கொண்டானென்கிறது. "நாட்டை ஈரக்கையாலே தடவிக் கம்ஸனைப்பட்ட நோவுதீர ரக்ஷித்து" என்ற வியாக்கியான வாக்கியம் நோக்கத்தக்கது.

மதியினை—மதியென்பது வடசொல்; புத்தியென்று பெயர். "எய்ப்பென்னை வந்து நலியும்போது அங்கேதும் நானுன்னை நினைக்கமாட்டேன், அப்போதைக்கிப்போதே சொல்லிவைத்தே னரங்கத்தரவணைப் பள்ளியானே!" என்றும் "ஆமிடத்தே யுன்னைச் சொல்லிவைத்தேன்" என்றுஞ் சொல்லுகிற படியே நாம் பாங்காயிருக்கும்போது எம்பெருமானைச் சிந்தித்துவைத்தால் பிறகு நாம் சிந்திக்கப்பெறாத தசையிலே அவன்றானே நம்மைச் சிந்தித்துக்கொண்டிருப்பவனென்றவாறு.

புத்திக்கு வாசகமான மதி யென்னுஞ் சொல் இவ்வளவு அர்த்தத்தைத் தருவது லக்ஷணையால். புத்தியின் காரியமாகிய நினைத்தலைத் தானே செய்பவனென்றபடி.

மாலை—மால் என்னுஞ்சொல் பெருமையுள்ளவன், கருநிறமுள்ளவன். (அடியாரிடத்தில்) வியாமோஹமுள்ளவன் என்ற பல பொருள்களைக் கொண்டது. "ஆசாலேசமுடையார் பக்கல் வ்யாமுக்தனுயிருக்குமவனை" என்பது வியாக்கியான வாக்கியம். அடியார்க்கு எத்தனை உபகாரங்கள் செய்திருந்தாலும் ஒன்றுஞ் செய்திலனாகவே தன்னை நினைத்துக்கொண்டு 'என் செய்வோம், என் செய்வோம்' என்றே பாரிப்புக் கொண்டிருக்கையாய்த்து எம்பெருமானுடைய வியாமோஹத்தின் பரிசு.

வாழ்த்திவணங்கி என்மனத்துவந்த விதியினை—'வணங்கி' என்றதை எச்சத் திரிபாகக் கொள்க: வணங்க என்றபடி; நான்வாழ்த்தி வணங்கும்படியாக என் மனத்தே வந்து சேர்ந்தவிதியை என்றவாறு. அன்றியே, "என்மனத்து வந்த விதியினை வாழ்த்தி வணங்கி விடுகிலேன்" என்று அந்வயிக்கவுமாம். விதி யென்னும் வடசொல் அமரகோசத்தின்படி பாக்கியத்தைச் சொல்லும். தம்முடைய பாக்கியமே எம்பெருமானாக வடிவெடுத்ததென்கிறார். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை இன்று காணப்பெற்ற அடியேன் இனி விடமாட்டேனென்றாராயிற்று. ... *

காற்றினைப்புனலைத்தீயைக் கடிமதிளிலங்கைசெற்ற
ஏற்றினை * இமயமேய எழில்மணித் திரளை * இன்ப
வாற்றினையமுதந்தன்னை அவுணனாருயிரையுண்ட
கூற்றினை * குணங்கொண் டுள்ளம்! கூறுநீகூறுமாறே. 2

| | | | |
|---|---|---|---|
| காற்றினை புனலை தீயை | காற்று நீர் தீ முதலான பஞ்ச பூதமயமான ஜகத்தை சரீரமாக வுடையவனும் | அவுணன் | (இரணியனென்னும்) அசுரனுடைய |
| கடி மதிள் இலங்கை செற்ற ஏற்றினை | அரணாகப்போரும்படியான மதிளை யுடைத்தான இலங்காபுரியை முடித்த காளை போன்றவனும் | ஆர் உயிரை | அருமையான உயிரை |
| | | உண்ட | கவர்ந்த |
| | | கூற்றினை | ம்ருத்யுவுமான எம்பெருமானை |
| | | உள்ளம் | நெஞ்சே! |
| இமயம் மேய | இமயமலையில் (திருப்பிரிதியிலே) பொருந்தி வாழ்கிறவனும் | குணம் கொண்டு | திருக்குணங்களை முன்னிட்டு |
| எழில் மணி திரளை | அழகிய மணித்திரள் போன்றவனும் | கூறு | அநுஸந்திக்கப்பார்; (என்று தாம் சொன்னதும் அப்படியே அநுஸந்தித்த நெஞ்சை நோக்கி) |
| இன்பம் ஆற்றினை | (வடிவெடுத்த) ஆனந்த வெள்ளமாயிருப்பவனும | நீ கூறும் ஆறே | நீ அநுஸந்தித்த விதம் என்னே! (என்று ஈடுபடுகிறபடி.) |
| அமுதம் | போனவுயிரை மீட்கவல்ல அமுதம்போன்றவனும | | |

* * *--தம்முடைய திருவுள்ளத்தை நோக்கிக் கூறுகின்றார்; நெஞ்சே; எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களை அநுஸந்திக்கப்பார் என்றார்; அப்படியே அது அநுஸந்திக்கக் கண்டு ஆச்சரியப்பட்டு 'நெஞ்சே! நீ அநுஸந்திக்கும் விதம் என்னே!' என்று ஈடுபடுகிறார்.

காற்றினைப்புனலைத் தீயை—பஞ்ச பூதங்களில் மூன்று பூதங்களைச் சொன்னது மற்ற பூமியும் ஆகாசமுமாகிற இரண்டு பூதங்களுக்கும் உபலக்ஷணமென்க. பஞ்ச பூதங்களின் காரியமாகிய உலகங்களைச் சொல்லிற்றாய், உலகங்களைச் சரீரமாகக் கொண்டுள்ளவனென்றதாகிறது. சரீரத்தைச் சொல்லும்படியான சொற்கள் சரீரிபர்யந்தமாகச் சொல்லி நிற்குமென்பது வேதாந்திகளின் கொள்— யென்றுணர்க.

கடிமதிளிலங்கைசெற்ற ஏற்றினை—பல மதிள்களை அரணாகக்கொண்டிருந்த இலங்காபுரியைச் சுடுகாடாக்கின மஹாவீரன் என்றவாறு.—"தீண்டாவழும்புஞ் செந்நீரும் சீயும் நரம்புஞ் செறிதசையும், வேண்டாநாற்றமிகு முடல்" என்று சொல்லப்படுகிற இந்த ப்ராக்ருதமான சரீரம் இலங்காபுரியாகக் கொள்ளத்தக்கது. அது கடலால் சூழப்பட்டிருக்கும்; இது ஸம்ஸாரமாகிற பெருங்கடலினால் சூழப் பட்டிருக்கும். அது பத்துத் தலைகளையுடையனான ஒரு பிரபுவினால் ஆக்ரமிக்கப் பட்டிருந்தது; இது பத்து இந்திரியங்களாகிற தலைகளைக்கொண்ட மநஸ் ஸென்கிற ஒரு பிரபுவினால் ஆக்ரமிக்கப்பட்டிருக்கின்றது; அதில் ஸீதாபிராட்டி தீனதசையை யடைந்திருந்தாள்; இதில் ஜீவாத்மா சிறைவைக்கப்பட்டு வருந்திக் கிடக்கிறான். அங்குச் சிறிய திருவடிவந்து ஸ்ரீ ராமகுணகீர்த்தநம்பண்ணி க்ரமேண சிறைவிடுத் ததுபோல, இங்கும் அத்திருவடியைப்போல் மஹாபண்டிதர்களான ஆசாரியர்கள் பகவத்குணங்களை உபதேசித்துச் சிறை விடுவிக்க முயல்வார்கள். முடிவில் எம் பெருமானால் அவ்விலங்கை அழிந்ததுபோல இந்த ப்ராக்ருதசரீரமும் எம்பெருமா னருளால் தொலையும் என்றுணர்க.

இமயமேய எழில்மணித்திரளை—இமயம் என்று பொன்னுக்குப் பெயருண்டாத லால் அப்பொருளும் இங்குக் கொள்ளக்கூடியதே; அப்போது மேற்பதத்தை 'ஏய' என்று பிரித்து, பொன்போலப் புகர்கொண்டவனென்று உரைத்துக் கொள்க. அன்றியே, "எண்ணையான் இமயத்துள்ளான்" என்றவிடத்துப் போல, இமய மலையின்கணுள்ள திருப்பிரிதியில் நித்யவாஸம் பண்ணுமவனென்னவுமாம். "ஏலநாறுதண்தடம் பொழிலிடம்பெற இருந்த நல்லிமயத்துள்.........பிரிதி சென்றடை நெஞ்சே!" என்றதுகாண்க. அழகிய நீல ரத்னங்களைக் குவித்து வைத்தாற்போல் இனியனாயிருப்பவனென்கிறது எழில் மணித்திரளை யென்றதனால்.

இன்பவாற்றினை—ஆனந்தவெள்ளமே வடிவெடுத்திருப்பவன். விடாய்த்தவர் களின் விடாயையெல்லாம் தீர்க்கும் ஆறு; எம்பெருமான் தாபத்ரயத்தையும் தணிப்பன். குளம் முதலானவை இருந்தவிடத்தே யிருந்து உதவும்; ஆறு அங்ஙனல்லாமல் வேண்டினவிடத்தே திறந்துபாய்ச்சி விளைவித்துக் கொள்ளலாம் படியிருக்கும்; எம்பெருமானும் அப்படியே. வேண்டுவார் வேண்டுமிடங்களிலே யெழுந்தருளிக் காதல் கடல்புரைய விளைவிப்பன்.

அமுதந்தன்னை—அன்பர்கட்கு ஆராவமுதமாயிருப்பவன். கடலில் தோன்றிய உப்புச்சாறாகிற அமுதம் வாய்கொண்டு பருகலாயிருக்கும்; இவ்வாராவமுதம் கண்கொண்டு பருகத்தக்கது. "ஏததேவாம்ருதம் த்ருஷ்ட்வா த்ருப்யந்தி" என்றது காண்க.

அவுணருயிரையுண்ட கூற்றினை—கீழ்ச் சொன்னபடியே அமுதமாயிருக்குந் தன்மை அன்பர்களின் திறத்திலேயத்தனை; பிரதிகூலர் திறத்திலோ வென்னில் ம்ருத்யுவாயிருப்பன்; ப்ரஹ்லாதாழ்வானுக்குப் பரமபோக்யமான அமுதமாயிருந்த வன் தானே இரணியனுக்குக் கூற்றமாயிருந்தானிறே. அவுணர் என்று அசுர வர்க்கத்தை யெல்லாம் சொல்லிற்றாகக்கொண்டு உரைத்தலுமாம். கூற்று— உடலையும் உயிரையும் வேறு கூறாக்குபவன் என்று யமனுக்குக் காரணப்பெயர்.

உள்ளம்—அண்மைவிளி; உள்ளமே! என்றபடி. "உள்ளம்! குணங்கொண்டு நீ கூறு" என்று அருளிச்செய்தவுடனே "நீ கூறுமாறே!" என்று ஈடுபட்டு அருளிச் செய்திருத்தலால், இடையில் திருவுள்ளத்தில் ஒரு விலக்ஷணமான அநு ஸந்தானம் சென்றமை தோன்றும். "உள்ளம்! குணங்கொண்டு நீ கூறுமாறே கூறு" என்று ஒரு வாக்யமாகவே அந்வயித்து, 'நெஞ்சமே! எம்பெருமானுடைய திருக்குணங்களை உனக்கு அநுஸந்திக்கத் தெரிந்தவகையிலே அநுஸந்தானம் செய்' என்று உரைக்கலாமாயினும் அது அத்துணைச் சிறவாது. ... 2

பாயிரும்பரவைதன்னுள் பருவரைதிரித்து* வானோர்க்
காயிருந்தமுதங்கொண்ட அப்பனையெம்பிரானை*
வேயிருஞ்சோலைசூழ்ந்து விரிகதிரியநின்ற*
மாயிருஞ்சோலைமேய மைந்தனை வணங்கினேனே.

| | | | |
|---|---|---|---|
| பாய் இரு பரவை தன்னுள் | பரந்து ஆழ்ந்த திருப்பாற் கடலிலே | வேய் இருஞ் சோலை சூழ்ந்து | மூங்கிற்சோலைகளாலே சூழப்பட்டு (அதனால்) |
| பரு வரை | பெரியதான (மந்தர) மலையை | விரி கதிர் இரிய நின்ற | ஸூர்யன் கண்ணுக்குத் தெரியாதபடி யிருக்கப் பெற்ற |
| திரித்து | சுழலச்செய்து [கடல் கடைந்து] | | |
| வானோர்க்கு ஆய் இருந்து | தேவர்களுக்குப் பக்ஷபாதியாயிருந்து | மாயிருஞ் சோலை | திருமாலிருஞ்சோலை மலையிலே |
| அமுதம் கொண்ட | அமுதமெடுத்துக் கொடுத்தருளின | மேய | நித்யவாஸம் செய்தருள்கிற |
| அப்பனை | உபகாரகனும் | மைந்தனை | மிடுக்கனுமான ஸர்வேச்வரனை |
| எம்பிரானை | எமக்கு ஸ்வாமியானவனும் | வணங்கினேன் | வணங்கப்பெற்றேன். |

***—தன்னை விரும்பாமல் ப்ரயோஜநாந்தரத்தையே விரும்பி அகன்று போக நினைப்பார்க்கும் திருமேனி நோவக் காரியஞ் செய்தருள்பவனாயிரா நின்றான் எம்பெருமான்; விபவாவதாரங்களிலே இழந்தார்க்கும் உதவுதற்காகத் திருமாலிருஞ்சோலை மலை முதலிய திருப்பதிகளிலே கோயில் கொண்டிரா நின்றான்; அன்னவனை வணங்கியுய்ந்தேனென்கிறார்.

கடல்கடையும்போது மந்தரமலையை மத்தாக நாட்டிக் கடைந்தனனாதலால் 'பருவரைதிரித்து' எனப்பட்டது. எம்பெருமான் அவாப்தஸமஸ்த காமனாகையாலே அவன் செய்தருளுங் காரியமெல்லாம் பிறர்க்காகவே யிருக்கும்; நிலா தென்றல் சந்தனம் முதலிய பொருள்கள் பிறர்க்கு உபயோகப்படுவதற்கென்றே யிருப்பது போலவே எம்பிரானுமிருப்பனென்பது விளங்க வானோர்க்காயிருந்து என்றது. "அமுதம் தந்த" என்னவேண்டியிருக்க கொண்ட என்றது—எம்பெருமானது நினைவாலென்க. கடல்கடைந்து அமுதமெடுத்தது அவர்களுக்காக வல்லாமல் தன்பேறாக நினைத்திருந்ததனால்.

விரிகதிர் இரியநின்ற=ஸூர்ய கிரணங்கள் உள்ளே புகவொண்ணாமல் நிழல் செய்திருக்கையைச் சொன்னபடி. ... ... ... 3

கேட்கயானுற்றதுண்டு கேழலாயுலகங்கொண்ட*
பூக்கெழுவண்ணனாரைப் போதரக்கனவிற்கண்டு*
வாக்கினாற்கருமந்தன்னால் மனத்தினாற்சிரத்தைதன்னால்*
வேட்கைமீதூரவாங்கி விழுங்கினேற்கினியவாறே.

| | | | |
|---|---|---|---|
| யான் கேட்க உற்றது உண்டு | அடியேன் (ஒரு விஷயம்) கேட்கவேண்டியதுண்டு; (மறுமாற்றமருளிச் செய்ய வேணும்,) | வாக்கினால் கருமம் தன்னால் மனத்தினால் | மனமொழி மெய்களாகிற மூன்று கரணங்களாலும் |
| | | சிரத்தை தன்னால் | சிரத்தையோடு |
| கேழல் ஆய் | வராஹரூபியாகி | | |
| உலகம் கொண்ட | பூமியைக் கோட்டில் எடுத்துக்கொண்டேறின | வேட்கை மீதூர | ஆசைமிக |
| பூ கெழு வண்ணனாரை | பூப்போன்ற மெல்லிய வடிவுடையரான பெருமானை | வாங்கி விழுங்கினேற்கு | பிடித்து அநுபவித்த வெனக்கு |
| கனவில் போதர கண்டு | கனவில் எழுந்தருளக் கண்டு | இனிய ஆறே | போக்யமாயிருக்கிறவிதம் என்னே! |

***—எம்பெருமானை ஒரு கேள்விகேட்கிறே னென்கிறார் சமத்காரமாக. மஹா வராஹமூர்த்தியாகத் திருவவதரித்துப் பூமியை எயிற்றிற்கொணர்ந்த எம்பெருமான் கனவிலெழுந்தருளிக் காட்சிதந்தவாறே அப்பெருமானை மனமொழி மெய்களால் அன்போடு பிடித்து விழுங்கிவிட்டேன்; விஷயாந்தரங்களை யநுபவித்து ரஸித்துப்போந்த எனக்கு இவ்விஷயம் பரமரஸ்யமாயிருந்தது; இப்படியிருந்ததற்குக் காரணமருளிச் செய்யவேணுமென்று கேட்கிறேனென்கிறார்.

கேட்க யானுற்றதுண்டு—நம்மாழ்வார் தம்முடைய திவ்யப்ரபந்தங்களிலே எம்பெருமானை நோக்கிச் சில கேள்விகள் கேட்டிருக்கிறார்; பெரிய திருவந்தாதியில் "அருந்தஞ்சுவடுந் தெரிவுணரோம், அன்பேபெருகும் மிக இதுவென் பேசீர்" என்றும், "புவியுமிருவிசும்பும் நின்னகத்த, நீயென் செவியின்வழி புகுந்தென்னுள்ளாய், அவிவின்றி யான் பெரியன் நீ பெரியை யென்பதனை யாரறிவார், ஊன்பருகு நேமியா யுள்ளு" என்றும், திருவாய்மொழியில் "இன்றென்னைப் பொருளாக்கித் தன்னை யென்னுள் வைத்தாய், அன்றென்னைப் புறம்போகப் புணர்த்ததென் செய்வான்?, குன்றென்னத் திகழ்மாடங்கள் சூழ் திருப்பேரான், ஒன்றெனக்கருள் செய்ய உணர்த்தலுற்றேனே" என்றும் இங்ஙனே சில கேள்விகள் கேட்டார்; அவற்றுக்கு எம்பெருமான் ஒரு மாற்றமும் அருளிச்செய்திலன்: அப்படிப்பட்டவன் இவ்வாழ்வாருடைய கேள்விக்குமாத்திரம் மறுமொழி கூறப்புகுகிறானோ? மாட்டானென்றே இவர் அறிந்துவைத்தும், நசையாலே கேட்கிறாராயிற்று. 'உன்னையநுபவித்த எனக்கு நீ பரமபோக்யனாயிருக்கின்றாயே, இதற்கு என்ன காரணம் சொல்லு' என்று கேட்கிற இவரது கேள்விக்கு ஸர்வஜ்ஞனான எம்பெருமான் றானும் என்ன மறுமாற்றம் அருளிச்செய்யக் கூடும்? இவர் கேட்கிற கேள்விக்குத்தான் அர்த்தமுண்டோ? "அண்ணிக்கு மமுதூறு மென்னாவுக்கே" என்று மதுரகவியாழ்வார் தம்முடைய ஆனந்தத்தை வெளியிட்டுக்கொண்டதுபோல இவர் தாமும் கேள்வியென்னும் வியாஜத்தினால் தமது பரமாநந்தத்தையே பிரகாசிப்பித்துக் கொள்ளுகிறாரத்தனை என்று உணரக்கடவது. 'சர்க்கரையை நாக்கில் போட்டவுடனே தித்திக்கின்றதே, அதற்கு என்னகாரணம்?' என்று ஒருவர் கேட்டால் அக்கேள்விக்குக் கருத்து யாது?

ச்ரத்தா என்னும் வடசொல் சிரத்தை யெனத் திரிந்தது.

"பூக்கொழுவண்ணனாரை......வேட்கைமீதூர வாங்கி விழுங்கினேற் கினிய வாறே! (இதுவென் என்று) கேட்கயானுற்றதுண்டு" என்று அந்வயிப்பது. ... 4

**இரும்பனன் றுண்டநீர்போல் எம்பெருமானுக்கு*என்றன்**
**அரும்பெறலன்புபுக்கிட்டு அடிமைபூண்டுய்ந்துபோனேன் ***
**வரும்புயல்வண்ணனாரை மருவியென்மனத்துவைத்து ***
**கரும்பினின்சாறுபோலப் பருகினேற்கினியவாறே.** 5

| | | | |
|---|---|---|---|
| இரும்பு | இரும்பானது | | (அன்றியும்) |
| அனன்று | பழுக்கக் காய்ந்து | வரும் | (அடியார் இருக்குமிடந்தேடி) வருகின்ற |
| உண்ட நீர் போல் | (அக்காய்ச்சலடங்கும்படி) உட்கொண்ட ஜலம்போலே | புயல் வண்ணனாரை | மேகவண்ணனான அப்பெருமானை |
| எம்பெருமானுக்கு | எம்பெருமான் திறத்திலே | மருவி | கிட்டி |
| என் தன் | என்னுடைய | என் மனத்து வைத்து | எ[illegible]ல பொருந்த வைத்து |
| அரு பெறல் அன்பு புக்கிட்டு | பெறுதற்கரிதான அன்பைச் செலுத்தி | கரும்பின் இன் சாறுபோல | கரும்பினுடைய இனியரஸம் போலே |
| அடிமை பூண்டு | கைங்கரியம் பண்ணி | பருகினேற்கு | அநுபவிக்கப்பெற்ற எனக்கு |
| உய்ந்து போனேன் | உஜ்ஜீவிக்கப்பெற்றேன்; | இனிய ஆறே | போக்யமாயிருக்கிறபடி என்னே! |

* * *—கீழ்ப்பாட்டிலுள்ள "கேட்கயானுற்றதுண்டு" என்ற வாக்கியத்தை இப்பாட்டிலும் இயைத்துக்கொள்ளலாம். "தீர இரும்புண்ட நீரதுபோல என் உருயிரையாரப்பருக, எனக்காராவமுதானாயே" என்ற திருவாய்மொழிப்பாசுரத்தையே பெரும்பாலும் அடியொற்றி அருளிச்செய்வது இப்பாசுரம் என்க.

இரும்பானது அக்னியாலே மிகவும் காய்ச்சப்பட்டு அக்காய்ச்சலடங்க நீரைப் பருகுமாபோலே நானும் என்னுடைய தாபமடங்க பகவத்விஷயத்தில் அன்பாகிற தண்ணீரைப் பருகி, ப்ராப்தமான அவ்விஷயத்திலே அடிமைசெய்யப்பெற்று உஜ்ஜீவித்தேனென்பன முன்னடிகள். தகாத விஷயங்களில் அன்பு உண்டாவதே ஸஹஜமாய், பகவத்விஷயத்தில் அன்பு உண்டாவது மேட்டுமடையாயிருத்தல் பற்றி அரும்பெறலன்பு எனப்பட்டது. நெருப்பிலே தாமரைபூத்தாலும் பூக்கும்; அஹங்காரப் பெரு நெருப்பிலே எம்பெருமான் விஷயமான அன்பு விளைவது மிகவுமரிது. 'அடிமைபூண்டு' என்றதனால் ஆத்மாவுக்கு அடிமையே ஆபரணமென்பது பெறப்படும்.

[வரும்புயல் வண்ணனாரை இத்யாதி.] இருந்தவிடத்தேயிருந்து வர்ஷித்து விடாய் கெடுக்கும் மேகம்போலன்றியே ஆங்காங்குச் சென்று வர்ஷித்து இன்பம் பயக்கும் மேகம்போலே அடியாருள்ளவிடங்களிலே சென்று ஈரக்கையாலே தடவி விடாய் தீர்க்குமவன் எம்பெருமான். அன்னவனை என் மனத்திலே பொருந்தவைத்துக் கருப்பஞ்சாறுபோலே பருகினேன்; பருகினமாத்திரத்திலே வாயார்சொல்லவொண்ணாத இனிமையாயிருக்கின்றதே!; இதற்கென்ன காரணம்? தெரியவேணுமென்றாராயிற்று. ... ... ... ... ... 5

மூவரில்முதல்வனாய வொருவனை*உலகங்கொண்ட
கோவினைக்குடந்தைமேய குருமணித்திரளை*இன்பப்
பாவினைப்பச்சைத்தேனைப் பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினை*புகழுந்தொண்டர் என்சொல்லிப்புகழ்வர்தாமே ? 6

| | | | |
|---|---|---|---|
| மூவரில் முதல்வன் ஆய ஒருவனை | த்ரிமூர்த்திகளுள் முதற் கடவுளாகிய அத்விதீயனும் | பச்சை தேனை | பசுந்தேன்போல நாவுக்கு இனியனும் |
| உலகம் கொண்ட கோவினை | (மாவலியிடத்தில்) உலகங்களை இரந்து பெற்ற ஸ்வாமியும் | பைம் பொன்னை | பசும்பொன்போல் விரும்பத்தக்கவனும் |
| குடந்தை மேய | திருக்குடந்தையில் நித்யவாஸம் செய்பவனும் | அமரர் சென்னி பூவினை | நித்யஸூரிகளுக்குத் தலைமேலணியும் பூவாயிருப்பவனுமான பெருமானை |
| குரு மணி திரளை | சிறந்த நீலரத்னக்குவியல் போன்றவனும் | புகழும் தொண்டர் தாம் | புகழ்கின்ற தொண்டர்கள் |
| இன்பம் பாவினை | இன்பந்தரும் பாட்டுக்களைப் போலே சுவைமிக்கவனும் | என் சொல்லி புகழ்வர் | எதைச்சொல்லிப் புகழ்வார்கள் ? |

* * *—பகவத்விஷயத்தை அநுபவிக்கப் புகுமவர்கள் வாயாலே ஏதோ சில பாசுரங்களைச் சொல்லிப் புகழ்கின்றார்களே. என்ன பாசுரஞ் சொல்லிப் புகழ்வது!; பெருவெள்ளத்திலே புகுந்து முழுகுமவர்கள் குமிழ்நீருண்டு கிடக்கு மத்தனைபோல, பகவத்விஷய ஸாகரத்திலும் அழுந்திக் கிடக்கலாமேயொழிய ஏதேனும் பாசுரமிட்டுச் சொல்லப்போமோ? என்கிறார்.

மூவரில் முதல்வனாயவொருவனை—ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களுக்குக் கடவர்களென்றும் த்ரிமூர்த்திகளென்றுஞ் சொல்லப்படுகிற அரி அயன் அரன் என்னுமிவர்தம்முள் முழுமுதற்கடவுளாயிருப்பவன். அன்றியே, இந்திரனுக்கு

மூவராகி அம்மூவர்களிற்காட்டிலும் முழுமுதற் கடவுளாயிருப்பவன் என்றும் பொருள் கூறுவர். "ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்ம" என்கிற ச்ருதிசாரமாயிலே ஒருவனென்றது.

மங்கொண்ட கோவிலை—மூவர்க்கும் முதற்கடவுளாயிருந்தால் அவர்களுக்காக வேண்டிய காரியத்தைத் தலைக்கட்டிக் கொடுக்கவேணுமே; அவர்களுள் ஒருவனான இந்திரனுக்குக் காரியஞ்செய்து கொடுத்தமை சொல்லுகிறது. மஹாபலி அபஹரித்த பூமியை மீட்டுக்கொடுத்தமை சொன்னபடி.

நடந்தையேய நருமணித்திரளை—இன்னும் ஸம்ஸாரிகள் இடர்ப்பட்டாருண்டாகிலும் அவனலாகாதென்று அவர்கட்குக் கதியாகத் திருக்குடந்தையிலே படுக்கை பொருந்திப் பள்ளிகொள்ளும் நிலைமையை நோக்குங்கால் சிறந்த நீல ரத்னங்களைக் குவித்திருக்குமாபோலே புகர்த்து விளங்கும்படி. 'ஸ்ரு' என்னும் வடசொல் நருவென்று கிடக்கின்றது. சிறந்தவென்று பொருள்.

இன்பப்பாவினை—"அந்தமிழினின்பப் பாவினை" என்றார் குலசேகரப் பெருமாளும். அருளிச்செயல்போலே செவிக்குத் தித்திப்பவன் எம்பெருமான் என்றவாறு. பச்சைத்தேனை—செவிக்குமாத்திரமன்றியே நாவுக்கும் இனியனுயிருப்பவன்; நாள்பட்ட தேன்போலல்லாமல் அப்போதுண்டான தேன்போலே பரம போக்யன். பைம்பொன்னை—உடம்புக்கு அணையலாம்படி விரும்பத்தக்கவனென்க. அமரர் சென்னிப்பூவினை—நித்யஸூரிகள் தலைமேற் புனைந்து கொண்டாடும் தத்துவம். "எம்மாவீட்டுத் திறமும் செப்பம், நின் செம்மா பாதபற்புத் தலைசேர்த்து......அம்மா வடியேன் வேண்டுவதீதே" என்று நாமெல்லாரும் பிரார்த்தித்துப் பெறவேண்டிய பேறு அவர்க்குக் கைவந்திருக்கிறதேயென்று தலைசியக்கிறார். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானைப் புகழ்கின்ற தொண்டர்கள் என்சொல்லிப் புகழ்வரென்கிறார். இத்தால், நாம் பாசுரம் பேசுவதும் எம்பெருமானுடைய பெருமையின் எல்லையைக் கண்டன்று: போதுபோக்க வேண்டியத்தனை என்றதாம். ... 6

இம்மையைமறுமைதன்னை யெமக்குவீடாகிநின்ற*
மெய்ம்மையைவிரிந்தசோலை வியன்திருவரங்கமேய*
செம்மையைக்கருமைதன்னைத் திருமலையொருமையானை*
தன்மையைநினைவாரென்றன் தலைமிசைமன்னுவாரே. 7

| | | | |
|---|---|---|---|
| எமக்கு | நமக்கு | செம்மையை கருமை | (யுகபேதத்தாலே) செந்நிறத்தையும் கருநிறத்தையும் கொண்டுள்ளவனும் |
| இம்மையை | இவ்வுலகத்து இன்பத்தைத் தருமவனும | | |
| மறுமை தன்னை | பரலோகத்து இன்பத்தைத் தருமவனும் | திருமலை | திருவேங்கடமலையிலே நின்றுகொண்டு |
| வீடு ஆகி நின்ற மெய்ம்மையை | உண்மையான மோக்ஷப்ரதனாயிருப்பவனும் | ஒருமையானை | மண்ணோர்க்கும் விண்ணோர்க்கும் ஒருமைப்பட்டிருப்பவனுமான எம்பெருமானுடைய |
| விரிந்த சோலை | பரந்தசோலைகளையுடையதாய் | தன்மையை | சீலத்தை |
| வியன் | ஆச்சரியமான | நினைவார் | நினைக்கவல்லவர்கள் |
| திருவரங்கம் | திருவரங்கத்திலே | என் தன் | என்னுடைய |
| மேய | நித்யவாஸம் பண்ணுமவனும் | தலை மிசை | தலையிலே |
| | | மன்னுவார் | பொருந்தத்தக்கவர்கள். |

***—கீழ்ப்பாட்டில் "அமரர் சென்னிப்பூவினை" என்ற ஆழ்வாரை நோக்கி எம்பெருமான் 'ஆழ்வீர்! ஏன் குறைப்படுகிறீர்? உம்முடைய தலைக்கும் நாம் அணியாக வீற்றிருப்போம், தலையைக்காட்டும்' என்ன; என் தலைக்கு நீ

வேண்டா; உன் சீலத்தைச் சிந்தைசெய்யுந் தொண்டர்களே என் தலைமிசை மன்னுதற்கு உரியார் என்கிறார்போலும்.

இம்மையை மறுமைதன்னை—இஹலோக ஸுகம், பரலோகஸுகம் என்ற இரு வகையின்பத்தையும் அளிப்பவனென்றபடி. எம்பெருமானுடைய ஸ்வரூப ரூபகுண விபூதிகளைப் பற்றின ஞானவிகாஸம் பெற்றுக் களிப்பதே ஆழ்வார் திருவுள்ளத்திலே இன்மையின்பமாகும்; திருவனந்தாழ்வானைப்போலே ஸர்வதேச ஸர்வகால ஸர்வாவஸ்தைகளிலும் அந்தரங்க கைங்கரியம் பண்ணப்பெற்றுக் களிப்பதே மறுமையின்பமாகும்; ஆக, இஹலோகத்திலே தன்னைப்பற்றின ஞான விகாஸத்தையுண்டாக்கி இன்பம் பயந்தும், பரலோகத்திலே நித்ய கைங்கரியத்திலே மூட்டி இன்பம்பயந்தும் அடியார்களை வாழ்விப்பவன் எம்பெருமான் என்றதாயிற்று.

எமக்குவீடாகிநின்ற மெய்ம்மையை—இங்கு வீடு என்றது இலக்கணையால் மோக்ஷோபாயத்தைச் சொன்னபடி. கீழ்ச்சொன்ன ப்ராப்யங்களுக்கு ப்ராபகனுமிருப்பவனென்கை. அவ்வுபாயம் ஸுலபமானவிடத்தைப் பேசுகிறார் வியன் நீர் வரங்கமேய என்று.

செம்மையைக் கருமைதன்னை—எம்பெருமான் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு நிறத்தைக்கொள்வன்; கிருதயுகத்திலுள்ளவர்கள் ஸத்வகுணம் நிறைந்தவர்களாய் சுத்தமான நிறத்தை உகக்குமவர்களாகையாலே அவர்கட்காகப் பால் போன்ற நிறத்தைக்கொள்வன்; த்ரேதாயுகத்திலே சிவந்த நிறத்தைக்கொள்வன்; த்வாபர யுகத்திலே பசுமை நிறத்தைக்கொள்வன்; கலியுகத்தில் எந்த நிறங்கொண்டாலும் ஈடுபடுவாரில்லாமையாலே இயற்கையான நீல நிறத்தோடிருப்பன். (இது "பாலினீர்மை செம்பொனீர்மை" என்ற திருச்சந்தவிருத்தப் பாசுரத்திலும் "திகழ்ந்தாய் பால் பொன் பசுப்புக்கார்வண்ணம் நான்கும்" என்ற நான்முகன் திருவந்தாதிப் பாசுரத்திலும் திருமழிசைப்பிரானால் அருளிச்செய்யப்பட்டுள்ளது.) இங்கு 'செம்மையைக் கருமைதன்னை" என்று இரண்டு யுகங்களின் நிறத்தைச் சொன்னது மற்றவற்றுக்கும் உபலக்ஷணமென்க.

திருமலையொருமையானை="தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" என்றும் "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்குத் தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே" என்றும் சொல்லுகிறபடியே திருமலையிலே நின்று நித்யஸூரிகளுக்கும் நித்ய ஸம்ஸாரிகளுக்கும் ஒக்க முகங்கொடுக்குமவனென்றவாறு. ஒருமையான்—ஒருமைப் பட்டிருப்பவன், பொதுவாயிருப்பவன். திருமலையானது நித்ய விபூதிக்கும் லீலா விபூதிக்கும் நடுநிலையென்பதாகத் திருவுள்ளம். இங்குள்ளார் சென்று பரத்வகுணத்தை அநுபவிப்பர்கள்; அங்குள்ளார் வந்து சீலகுணத்தை அநுபவிப்பர்கள்; ஆக இரு பாடர்க்கும் வைப்பாயிருப்பனென்க.

தன்மையை நினைவார்—கீழும் இரண்டாம் வேற்றுமையாய் இங்கும் இரண்டாம் வேற்றுமையாயிருந்தால் எங்ஙனே அந்வயிக்குமென்னில்; கீழவற்றை உருபுமயக்கமாகக் கொள்க; திருமலையொருமையானுடைய தன்மையை என்றவாறு. எம்பெருமானுடைய தன்மையாவது, அடியவர்களிட்ட வழக்காயிருக்குந் தன்மையென்க. அதனை அநுஸந்தித்து ஈடுபடுமவர்கள் என்தலை மேலார் என்றாராயிற்று. ... ... ... .. 7

வானிடைப்புயலைமாலை வரையிடைப்பிரசமீன்ற *
தேனிடைக்கரும்பின்சாற்றைத் திருவினை மருவிவாழார் *
மானிடப்பிறவியந்தோ! மதிக்கிலர்கொள்க*தந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக்கு உறுதியேவேண்டினாரே.

| | | | |
|---|---|---|---|
| வானிடை புயலை | ஆகாசத்திலே வாழ்கிற காள மேகம்போன்ற வடிவுடையவனும் | வாழார் | வாழமாட்டாதவர்கள் |
| மாலை | (அடியார் திறத்தில்) வியாமோஹமுடையவனும் | மானிடம் பிறவி | (தாங்கள் மிக அருமையான) மநுஷ்ய ஜன்மமெடுத்திருப்பதை |
| வரையிடை | மலையிலே | மதிக்கிலா | எண்ணுகிறார்களில்லை; |
| பிரசம் ஈன்ற | தேனீக்களாலே சேர்க்கப்பட்ட | அந்தோ | ஐயோ! |
| தேன் இடை | தேனிலே முளைத்த | தம் தம் | தங்கள் தங்களுடைய |
| கரும்பின் | கரும்பினுடைய | ஊன் இடை குரம்பை | மாம்ஸமயமான சரீரத்தில் |
| சாற்றை | சாறுபோலப் பரமபோக்யனும் | வாழ்க்கைக்கு ஆய | வாழ்வதற்கு |
| திருவினை | திருவுக்குந் திருவாகிய செல்வனுமான எம்பெருமானை | வேண்டினார் | விரும்பிநிற்கின்றார்கள்; |
| மருவி | ஆச்ரயித்து | கொள்க | (இதை நீங்கள்) அறிந்து வைப்பது. |

* * *... ஸம்ஸாரிகள் தேஹத்தைப் பூண்கட்டிக்கொள்ள விருக்கிறார்களே யன்றி எம்பெருமானை மருவி வாழ்வாரில்லையே; என வருந்திப் பேசுகிறார்.

வானிடைப்புயலை—ஆகாசத்தினிடையே நீர்கொண்டெழுந்து வந்து தோற்றுகிற காளமேகம்போன்ற வடிவழகையுடையவனை. வானிடை யென்று விசேஷித்ததற்குக் கருத்து என்னென்னில்; ஒரு ஆலம்பனமுமில்லாத ஆகாசத்தை மேகம் பற்றினாற்போலே புகலொன்றில்லாத தம்மை விஷயீகரித்தானென்றவாறு. அப்படி விஷயீகரிப்பதற்கு ஹேது ஏதென்ன 'மாலை' என்கிறார்; வியாமோஹமே வடிவெடுத்தவனாதலால் என்க.

[வரையிடைப் பிரசமீன்ற தேனிடைக் கரும்பின்சாற்றை] எம்பெருமானுடைய போக்யதை லோகவிலக்ஷணமென்று காட்டுதற்காக அபூர்வமானதொரு கரும்பை சிக்ஷிக்கிறார்; தண்ணீர் பாய்ச்சப்பெற்று வளர்கின்ற கரும்பின் சாறு போன்றவனென்றால் சிறிதும் த்ருப்தி பிறவாமையாலே 'வரையிடைப் பிரசமீன்ற தேனிடைக்கரும்பு' என்று புதிதாகவொரு வஸ்துவை உத்ப்ரேக்ஷிக்கிறார். மலையிலே தேனீக்களாலே உண்டுபண்ணப்பட்ட தேனே விளைநீராக வளர்ந்த கரும்பு இருக்குமாகில் அதன் சாறுபோன்றவனெம்பெருமான் என்னலாம் என்பது கருத்து. [திருவினை] 'திரு' என்னுஞ் சொல்லால் சொல்லப்படுகிறவள் பிராட்டியாகையாலே அவளைச் சொல்லுகிற சொல்லினால் இங்கு எம்பெருமானைச் சொன்னது திருவுக்குந் திருவாகிய செல்வனென்றபடி. எல்லார்க்கும் மேன்மையைத் தருமவளான பிராட்டிக்கும் தான் மேன்மை தருமவன் என்றவாறு.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை மருவி வாழ்ந்து போகலாமாயிருக்க, அந்தோ! அப்பெருமான்றானே வந்து மேல்விழச் செய்தேயும் விலக்கித் தள்ளுபவரான பாவிகளுண்டாவதே! என்று வெறுக்கிறார். [மானிடப்பிறவியந்தோ! மதிக்கிலர்.] உலகத்தில் பிரமஸ்ருஷ்டி பலவகைப்படும். பூச்சிகளும் புழுக்களும் பறவைகளும் மிருகங்களுமாகப் பிறத்தலே பெரும்பான்மையாகவுள்ளது; மானிடப் பிறவி பெறுதல் மிக அரிது. ஆனதுபற்றியே "துர்லபோ மாநுஷோ தேஹ:" என்றது. அதுவென்? கோடிக் கணக்கான மனிதர்களும் உலகிற் காணப்படாநிற்க, மானிடப்பிறவி அரிதென்று எங்ஙனே சொல்லலாமென்று பலர் கேட்கக்கூடும்; ரத்னவியாபாரி வீதிகளில் குவியல் குவியலாக ரத்னங்கள் காணக்கிடைக்கின்ற மாத்திரத்தினால் 'அவை அரியவையல்ல, எளியவைதான்' என்று யாரேனும் சொல்லக்கூடுமோ? உலகத்திலுள்ள மானிடர்களெல்லோருடையவும் தொகைக்குறிப்பைக் கண்டுபிடித்து விடலாம்; ஒரு சிறு கிராமத்திலுள்ள அஃறிணையுயிர்களின் தொகையைக் கண்டு பிடித்தல் சிறிதும் எளிதன்று என்பது குறிக்கொள்ளப்படுமேல்

'மானிடப்பிறவி அரிது' என்னுமிடம் தன்னடையே தெளிக்கதாகும். இப்படி அருமையான மானிடப்பிறவியைப் பெற்றவர்கள் அதற்குத் தக்கவாறு வர்த்திக்க வேண்டாவோ? உணவுகளையுண்டு வயிறு நிரப்புகை, விஷயபோகங்கள் செய்கை உறங்குகை முதலிய காரியங்களையே செய்வதற்கோ மானிடப்பிறவி படைத்தது? இக்காரியங்கள் பசுக்களுக்கும் மானிடர்க்கும் பொதுவாகையாலே இனி மானிடரென்கிற ஏற்றம் பெறவேண்டில் எம்பெருமானை மருவி வாழ்தலன்றோ உரியது; அந்தோ! உலகர் இவ்விஷயத்தில் கருத்தூன்றாதே தங்கள் தங்கள் தேஹத்தைப் பூண் கட்டிக்கொள்ளவே தேடுகிறார்களத்தனையன்றி வாழ்ச்சிக்கு வழி தேடுவாருமில்லையே யென்று உலகவியற்கைக்கு வயிறுபிடிக்கிறாராயிற்று.

"மானிடப் பிறவியந்தோ மதிக்கிலர்" என்பதற்கு வேறு வகையாகவும் பொருள்கூறுவர்; *தீண்டாவழும்பும் செந்நீரும் சீயுநரம்பும் செறிதசையும் வேண்டாநாற்றம் மிகுமுடலாகிய மநுஷ்ய சரீரத்தைப் பெற்று வைத்தும் அந்தோ! திவ்யசரீரம் பெற்றுவிட்டதாக மார்பு நெறித்திருக்கின்றார்களே! என்று.

'குரம்பை' என்று குடிசைக்குப் பெயர்; தேஹமானது ஆத்மாவுக்குக் குடிசையாதல் அறிக. இவ்வுலகத்துப் பாமரர்கள் அநித்யமான தேஹம் வாடாமல் வதங்காமல் தளிர்த்திருந்தால் போதுமென்று பார்க்கிறார்களேயன்றி நித்யமான ஆத்மவஸ்து உஜ்ஜீவிக்கும் வழியைச் சிறிதும் நாடுகின்றார்களில்லையே என்பதாம். ... ... ... ... ... ... 8

உள்ளமோவொன்றில்நில்லாது ஓசையினெரிநின்றுண்ணும் *
கொள்ளிமேலெறும்புபோலக் குழையுமாலென்றனுள்ளம் *
தெள்ளியீர்! தேவர்க்கெல்லாம் தேவராயுலகங்கொண்ட
ஒள்ளியீர்! * உம்மையல்லா லெழுமையும்துணையிலோமே.

| | | | |
|---|---|---|---|
| உள்ளமோ | மனமோவென்னில் | | (இப்படி யிருப்பதனால்) |
| ஒன்றில் நில்லாது | ஒரு விஷயத்திலும் பொருந்தி நிற்கிறதில்லை; | தெள்ளியீர் | தெளிந்த ஸ்வபாவத்தையுடையீராய் |
| ஓசையின் எரி | ஓசையோடு கூடின அக்னியானது | தேவர்க்கு எல்லாம் தேவர் ஆய் | தேவாதிதேவனா யிருந்து வைத்து |
| நின்று உண்ணும் | க[illegible]ப் பெற்ற | உலகம் கொண்ட | (மாவலிபக்கல் மண் இரந்து கொண்ட |
| கொள்ளி மேல் | கொள்ளியில் அகப்பட்ட | ஒள்ளியீர் | தேஜஸ்வியானவரே; |
| எறும்பு போல் | எறும்பு போலே | எழுமையும் | எந்த நிலைமையிலும் |
| என் தன் உள்ளம் | எனது நெஞ்சானது | உம்மை அல்லால் | தேவரீரைத் தவிர்த்து |
| குழையும் | [illegible]கின்றது; | துணை இலோம் | வேறு துணையற்றவர்களாயிருக்கின்றோம். |
| ஆல் | அந்தோ!; | | |

* * * — நாட்டார் எக்கேடு கெட்டாலும் கெட்டுப்போகட்டும்; நானும் அவர்களிலொருவனாய்க் கெட்டுப்போகாதே மருவி வாழப்பெற்றேனே யென்று மகிழ்ந்து எம்பெருமானையே துணையாகக் கொண்டிருக்கும் தமது அநந்யகதித்வத்தை வெளியிடுகிறார். என் உள்ளமானது ஜனனமரணங்களை நினைத்து உருகாநின்றது; இதற்கு நான் செய்துகொள்ளக்கூடிய பரிஹாரமொன்றுமில்லை; நீயே துணைநிற்கவேணும் என்று எம்பெருமானை நோக்கி விண்ணப்பஞ் செய்கிறார்.

உள்ளமோ ஒன்றில் நில்லாது—ஊர்வசீஸாலோக்யம் வேணுமென்று நாடடங்கலும் தவம்புரியாநிற்க, அந்த ஊர்வசிதானே அர்ஜுநனிடம் வந்து நின்று

'எனக்கு நீ நாயகனாகக் கடவை' என்ன; கையெடுத்துக்கும்பிட்டு 'மாதே! எனக்கு நீ தாய் முறையாகிறாய்; இந்த விருப்பம் உனக்குத் தகாது: கடக்கநில்' என்றான் அர்ஜுநன்; ஆகவே இவன் ஜிதேந்த்ரியரில் தலைவனாகக் கொள்ளப்படுகிறான்; இப்படிப்பட்ட அர்ஜுநன் தானே கீதையில் கண்ணபிரானை நோக்கி "சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண!" என்கிறான்; அவனே அவ்வார்த்தை சொல்லும்போது நாமெல்லாம் எந்த மூலைக்கு! என்கிறார்போலும். கெட்ட விஷயங்களையே பற்றினாலும அவற்றிலாவது நெஞ்சு நிலைத்து நிற்கிறதோ; அதிலும் தோள்மாறுகின்றது: ஒன்றிலும் நிலைத்து நிற்பதில்லை; இப்படிப்பட்ட நெஞ்சைப் படைத்திருக்கையாலே நிக்கதுவின கொள்ளிக்கட்டையி லகப்பட்டுக் கொண்ட எறும்புபோலே துடியாநின்றேனென்கிறார். "உருவார் பிறவிக்களின்னம் புகப்பெய்து, திரிவாயென்று சிந்தித்தியென்றதற்கஞ்சி, இருபாடெரிகொள்ளியினுள்ளெறும்பேபோல் உருகாநிற்கு மென்னுள்ள மூழி முதல்வா!" என்ற பாசுரம் இங்கே நினைக்கத்தக்கது.

எனக்குக் கலங்குகை இயற்கையானாப்போலே தேவரீர்க்குத் தெளிந்திருக்கை இயற்கையன்றோ வென்கிறார் தெள்ளியீர் என்ற விளியினால். ஒரு மேட்டைக்கொண்டு பள்ளத்தை நிரப்புமாபோலே தேவரீருடைய தெளிவைக்கொண்டு என்னுடைய கலக்கத்தைத் தொலைக்கவேணுமென்பது உட்கோள். [தேவர்க்கெல்லாம் தேவராய் உலகங்கொண்ட தெள்ளியீர்] அடியவர்கட்குக் காரியம் செய்வதென்று வந்துவிட்டால் தேவரீருடைய பெருமேன்மையைச் சிறிதும் பார்ப்பதில்லையன்றோ? 'தேவாதி தேவனாகிய நானோ யாசகனாய்ச் செல்வேன்?' என்று இராய்க்காதே, 'எவ்விதத்தாலும் அடியாருடைய அபேக்ஷிதம் தலைக்கட்டுவதே நன்று' என்று திருவுள்ளம்பற்றினவரன்றோ தேவரீர்! அப்படி யாசகத் தொழில் செய்ததனால் உம்முடைய தேஜஸ்ஸுக்கு ஏதேனும் குறையுண்டாயிற்றோ? அதனால் மேன்மேலும் தேசு பொலியப் பெற்றீரன்றோ, இப்படிப்பட்ட ஆச்ரித பக்ஷபாதத்தைத் தேவரீரிடத்திற் கண்டவர்கள் எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் வேறொருவரைத் துணையாகக் கொள்வரோ? என்றதாயிற்று. ... ... ... 9

சித்தமும்செவ்வைநில்லா தென்செய்கேன்? தீவினையேன்*
பத்திமைக்கன்புடையேனாவதே பணியாயெந்தாய்!
முத்தொளிமரதகமே! முழங்கொளிமுகில்வண்ணா!*என்
அத்த! நின்னடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே. 10

| | | | |
|---|---|---|---|
| சித்தமும் | நெஞ்சமும் | முத்து | முத்துப்போன்றவனே! |
| செவ்வை நில்லாது | நரித்து நிற்கமாட்டுகிறதில்லை; | ஒளி மரதகமே | ஒளிபொருந்திய மரதகப் பச்சைபோன்றவனே! |
| தீவினையேன் | மஹாபாபியான நான் | | |
| செய்கேன் | என்ன பண்ணுவேன்? | முழங்கு ஒளி முகில் வண்ணா | கர்ஜிப்பதும் ஒளி பொருந்தியதுமான காளமேகம் போன்றவனே! |
| எந்தாய் | எம்பெருமானே! | | |
| பத்திமைக்கு | (அளவிறந்து பெருகிச் செல்லுகின்ற) பக்தியின் ஸ்தானத்திலே | என் அத்த | என் நாயனே! |
| அன்பு உடையேன் ஆவதே பணியாய் | (கீழ்ப்படியான) அன்பை உடையேனாம்படி செய்தருளவேணும்; | நின் அடிமை அல்லால் | உன்பக்கல் கைங்கரியம் தவிர |
| | | யாது ஒன்றும் அறிகிலேன் | வேறொன்றும் (புருஷார்த்தமாக) அறியமாட்டேன். |

* * *- -ஸம்ஸாரத்தின் கொடுமைக்கு அஞ்சி தேவரீருடைய திருவடிகளைப் பற்றினவனேயோ? தாங்கவொண்ணாத பரமபக்தியுமுண்டாயிற்றே! என்கிறார்.

[சிந்தமும் செவ்வை நில்லாது] கடலிலே கீந்தவேணுமென்று புகுந்து நடுதலடியில் தானே தெப்பத்தை இழக்குமாபோலே, அநுஸந்திக்கப்புகுந்து தரித்து நிற்க மாட்டாதே நெஞ்சு பறியுண்டதென்கிறார். "உருகுமால் நெஞ்சம் உயிரின் பரமன்றிப், பெருகுமால் வேட்கையுமென்செய்கேன் தொண்டனேன்" என்ற நம்மாழ்வாரைப்போலே கதறுகிறார். பக்திபாரவச்யத்தாலே அநுபவிக்கப் போகாமல் நெஞ்சையிழக்கும்படியான பாபத்தைப் பண்ணின நான் என்ன செய்வேனென்கிறார்.

[பத்திமைக்கு அன்புடையேனாவதே பணியாய்] ஜக்மதரித்ரனுக்கு அளவு கடந்த பசியுண்டானால் பசிக்குத் தக்கபடி உணவு கிடைக்கப் பெறாதொழியில் 'பசி மந்தித்துப் போவதற்கு மருந்து கொடுப்பாருண்டோ?' என்று விசாரிக்குமாபோலே ஆழ்வாரும் தம்முடைய பேராசைக்குத் தக்கபடி அநுபவிக்கப் பெறாமையாலே ஆசையை அளவுபடுத்தினால் போதுமென்கிறார். அளவுகடந்த ஆசைநிலைமைக்குப் பத்திமை யென்று பெயர்; ஓரளவிலே நிற்கிற ஆசைநிலைமைக்கு அன்பு என்று பெயர் என்பதாகக்கொள்க. இப்போது ஆழ்வாருடைய ஆசையின் நிலைமை எல்லைகடந்த அவஸ்தையிலே நிற்பதால் 'இப்படிப்பட்ட பத்திமையைக்கொண்டு என்னால் பாடாற்றப்போகவில்லை, இந்த நிலைமையை மாற்றி வெறும் அன்பு நிலைமையையே தந்திடாய்' என்று வேண்டிக்கொள்ளுகிறார். "என்றனளவன்றால் யானுடையவன்பு" என்னுமாபோலே அளவு கடந்து செல்லுகின்ற ஆசைப் பெருக்கத்தைக் குறைத்து ஓரளவிலே அமைத்திடாய் என்கை. பசிக்குத்தக்க சோற்றையாவது இடு; அல்லது, பசியையாவது உள்ள சோற்றுக்குத் தகுதியாக அமைத்திடு என்பாரைப்போலே சொல்லுகிறார். "கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன்றன் பொன்னகலம் தோயாவேல், என்னிவைதான் வாளா வெனக்கே பொறையாகி, முன்னிருந்து மூக்கின்று மூவாமைக் காப்பதோர், மன்னு மருந்தறிவீரில்லையே" என்ற பெரிய திருமடலும் இக்கருத்துப்பட நின்றமை உணர்க.

இங்ஙனே தமக்கு அளவுகடந்த பக்திப் பெருங்காதல் விளைவதற்கு அடி இன்னதென்கிறார் முத்தொளி மரதகமே; முழங்கொளி முகில்வண்ணா! என்ற விளியினால். முத்துப்போலே குளிர்ந்ததாயும் மரதகம்போலே சாமநிறத்ததாயுமிருக்கின்ற திருமேனியழகில் ஈடுபட்டதனால் இப்படிப்பட்ட பக்தியுண்டாயிற்றென்றவாறு.

வடிவழகிலே யீடுபடுமவர்கள் "தோள்கண்டார் தோளேகண்டார் தொடுகழற் கமலமன்ன தாள்கண்டார் தாளேகண்டார் தடக்கை கண்டாருமஃதே" என்றாற்போல ஒவ்வொரு திவ்யாவயவத்திலும் நெஞ்சு நீர்ப்பண்டமாயுருகி ஈடுபட்டிருக்குமத்தனையொழிய, தரித்துநின்று கைங்கரியம் பண்ண முடியாதாதலாலும், தமக்குக் கைங்கரியம் பண்ணுவதிலேயே அதிகமான ஆவல் இருப்பதனாலும் "பத்திமைக்கு அன்புடையேனாவதே பணியாயெந்தாய்!" என்று வேண்டும்படியாயிற்றென்பதை ஈற்றடியினால் விளங்கக்காட்டினாராயிற்று. ... ... 10

தொண்டெல்லாம்பரவிநின்னைத் தொழுதடிபணியுமாறு
கண்டு*தான்கவலைதீர்ப்பா னாவதேபணியாயெந்தாய்!
அண்டமாயெண்டிசைக்கு மாதியாய்நீதியான*
பண்டமாம்பரமசோதி! நின்னையேபரவுவேனே. 11

எந்தாய் } எம்பெருமானே !
தொண்டு எல்லாம் } எல்லா வகையான அடிமைகளையும்
பரவி } (செய்யவேணும் செய்யவேணுமென்பதாக) வாயாரப்பேசி

| | | | |
|---|---|---|---|
| நின்னை தொழுது | உன்னை வணங்கி | அண்டம் ஆய் | அண்டங்களிலுள்ளா ரெல்லார்க்கும் தலைவனாய் |
| அடி பணியும் ஆறு கண்டு | திருவடிகளிலே பணிவிடை செய்யும்படிகளை மனோரதித்து | எண் திசைக்கும் ஆதி ஆய் | எட்டுத் திசைகளிலுமுள்ள தேவதைகட்கும் காரணபூதனாய் |
| தான் கவலை தீர்ப்பான ஆவதே | நான் மனக்கவலை தீர்த்துக் கொள்ள முடியுமோ? | நீதி ஆன பண்டம் ஆம் | முறைமையான செல்வமாயிருப்பவனான |
| | | பரம சோதி | பரஞ்சோதியே ! |
| | | நின்னையே | உன்னையே |
| பணியாய் | அருளிச்செய்யவேணும் ; | பரவுவேன் | ஸ்தோத்ரம் பண்ணுவேன். |

* * *—என்னுடைய மனத்துயரங்களை நானே க் கொள்ளப் போமோ? நீயே அருள்புரியவேணுமென்று எம்பெருமானை நோக்கிப் பிரார்த்திக்கின்றார்.

[தொண்டெல்லாம் பரவி.] "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலாவடிமை செய்யவேண்டும் நாம்" என்று நம்மாழ்வாரும், "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே—அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜாக்ரதஸ் ஸ்வபதச்ச தே" [இராமபிரானே! தேவரீர் பிராட்டியோடுகூட சித்ரகூடமலைச் சாரல்களிலே விஹாரம் செய்தருளுங் கால் கண்விழித்தபோதோடு கண்துயிலும் போதோடு வாசியற எக்கிலைமையிலும் அடியேன் எல்லாவகைப் பணிவிடைகளையும் செய்யப்போகிறேன்] என்று இளைய பெருமாளும் பாரித்துப் பேசினாற்போலே அடியேனும் எல்லாத் தொண்டுகளையும் செய்திடுவோமென்று பாரிப்புக்கொண்டு தேவரீரைத் திருவடி தொழவேணுமென்றும் மனோரதங்கொண்டிருக்குமளவால் என்னுடைய மனத் துன்பங்களை நான் போக்கிக்கொண்டேனாக வழியுண்டோ? தேவரீர் திறத்திலே கைங்கரியம் செய்வதோ, தேவரீர் திருவடிகளைத் தொழுது பணிந்து நிற்பதோ எல்லாம் தேவரீருடைய திவ்யஸங்கல்பத்தினால் நடைபெற வேண்டியவையேயன்றி எளியெனும்பனான நீசனேன் நினைத்தபடி எதுதான் ஆகும்? ஒன்றுமாகாது; என் கவலையை நானே தீர்த்துக்கொள்ளவல்லனோ? அல்லேன். தொண்டு செய்தலும் நின்னைத் தொழுதடிபணிதலும் தலைக்கட்டப் பெற்றால் கவலைதீரத் தட்டில்லை; அவை தலைக்கட்டுவது தேவரீருடைய ஸங்கல்பத்தாலாகுமத்தனையாதலால் அங்ஙனே தேவரீர் ஸங்கல்பித்தருளவேணுமென்று தேவரீரையே துதித்துப் பிரார்த்திக்கின்றேனென்கிறார். "பரந்த சிந்தையொன்றி நின்று நின்னபாதபங்கயம், நிரந்தரம் நினைப்பதாக நீ நினைக்கவேண்டுமே" என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தின் கருத்தை இங்குக் காண்க.

எண்டிசைக்கு மாதியாய்—அஷ்டதிக் பாலகர்களுக்கும் பாலகன் என்றபடி. நீதியானபண்டம்—பண்டமாவது தனம்; நீதியானபண்டமாவது, முறைமைப்படி ப்ராப்தமான தனம். "சேலேய் கண்ணியரும் பெருஞ்செல்வமும் நன்மக்களும் மேலாத் தாய் தந்தையு மவரே யினியாவாரே" என்கிறபடியே எமக்கு ப்ராப்தமான செல்வம் தேவரீரே யென்றவாறு.

நின்னையே பரவுவேன்—என்னுடைய கவலைகளை நானே தீர்த்துக்கொள்ள முடியாதாகையால் நீயே தீர்க்கவேணுமென்று நின்னையே பரவுகின்றேனென்கை.

ஆவியையரங்கமாலை அழுக்குடம்பெச்சில்வாயால்*
தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன்தொல்லைநாமம்*
பாவியேன்பிழைத்தவாறென் றஞ்சினேற்கஞ்சலென்று*
காவிபோல்வண்ணர்வந்து என்கண்ணுளேதோன்றினாரே. 12

| | | | |
|---|---|---|---|
| ஆவியை | உலகங்கட்கெல்லாம் ஒருயி ராயிருப்பவனும் | சொல்லினேன் | சொன்னேன்; |
| அரங்கம் மாலை | திருவரங்கத்திலுள்ளவனு மான திருமாலை | பாவியேன் பிழைத்த ஆறு என்று அஞ்சினேற்கு | 'பாவியான நான் பிழை செய்த விதம் என்னே!' என்று அநுதாபமுற்ற எனக்கு |
| அழுக்கு உடம்பு எச்சில் வாயால் | இவ்வழுக்குடம்பின் எச்சில் வாயினால் | அஞ்சல் என்று | அபயமளித்து |
| தூய்மை இல் தொண்டனேன் நான் | அபரிசுத்தனும் கண்டவிடங்களில் தொண்டுபட்டவனுமான நான் | காவி போல் வண்ணர் வந்து | கருங்குவளை நிறத்தரான பெருமாள் வந்து |
| தொல்லை நாமம் | அநாதியான திருநாமங்களை | என் கண் உள்ளே தோன்றினர் | என் கண்களினுள்ளே ஸேவைஸாதித்தார். |

* * *—பரமபுருஷனை எம்பெருமானை மிகவும் அபரிசுத்தனை நான் எனது எச்சில் வாயால் ஸங்கீர்த்தனம்பண்ணி 'ஐயோ! இப்படி அபசாரப்பட்டோமே!' என்று அஞ்சின என்னுடைய அச்சம் தீர அப்பெருமான் வந்து என் கண்ணுள்ளே தோன்றி அபயமளித்தானென்கிறார்.

ஆவியை—"ஒருயிரேயோ உலகங்கட்கெல்லாம்" என்கிறபடியே அனைத்துலகுக்கும் பிராணனாயிருப்பவன் எம்பெருமான். இப்படிப்பட்டவனை யன்றோ என்னுடைய எச்சில்வாயில் கொண்டு கெடுத்தேனென்கை. [அரங்கமாலை] கண்ணுக்குத் தோற்றாதபடி நிற்கிற உயிர்போலன்றியே எல்லாருங் காணலாம்படி திருவரங்கம் பெரியகோயிலிலே காட்சிதந்து ஆச்ரிதர் பக்கலில் வியாமோஹமே வடிவெடுத்தவன் போலிருக்கிற எம்பெருமானையன்றோ நான் தூஷித்தேனென்கை. தூஷிக்கையாவது எச்சில் வாயிற் கொள்ளுகை. அதனைச்சொல்லுகிறார் அழுக்குடம்பெச்சில் வாயால் என்று. கண்டவர்களின் காலிலும் விழுந்து உடம்பு அழுக்காயிற்று; கண்டவர்களையும் தோத்திரம்பண்ணி வாய் எச்சிலாயிற்று. 'ஐயோ! தப்பாக இவை செய்தோமே' என்கிற அநுதாபமு மில்லாமையாலே தூய்மையற்ற தொண்டனாயினேன். இப்படிப்பட்ட நான் இவ்வழுக்குடம்பிலமைந்த எச்சில வாயினால் [சொல்லினேன் தொல்லைநாமம்] 'தொல்லை நாமம்' என்றது—அநாதிகாலமாக நித்யஸூரிகள் முதலானார்க்கு ஜீவனமாயிருக்கின்ற திருநாமம் என்றபடி. பல பெரியோர்களுக்கு உதவும்படியான வஸ்துவை அநியாயமாக நான் வாய்வைத்துக் கெடுத்துவிட்டேனே! இனி அவர்கள் எங்ஙனே ஜீவிக்கப் போகிறார்கள்! என்று நைச்யாநுஸந்தானமாகப் பேசுகிறபடி.

தொல்லை நாமங்களை அழுக்குடம்பெச்சில் வாயால் நான் சொன்னது மாத்திரமன்றியே "நானுஞ் சொன்னேன் நமருமுரைமின்" என்று நமர்களையும் சொல்லுவித்தன்றோ கெடுத்தேன்; ஆ ஆ! என்ன அபசாரப்பட்டோம்!, என்ன அபசாரப்பட்டோம்!! இனி நமக்கு உய்யும் வழியுண்டோ? என்று நான் அஞ்சின வளவிலே 'ஆழ்வீர்! அஞ்சவேண்டா' என்று வடிவழகைக் காட்டி மருந்தை யிட்டுப் பொருந்தவிட்டான் எம்பெருமான் என்றாராயிற்று. ... ... 12

**இரும்பனன் றுண்டநீரும் போதரும்கொள்க*என்றன்**
**அரும்பிணிபாவமெல்லா மகன்றனவென்னைவிட்டு***
**சுரும்பமர்சோலைசூழ்ந்த அரங்கமாகோயில்கொண்ட***
**கரும்பினைக்கண்டுகொண்டு என்கண்ணிணைகளிக்குமாறே. 13**

| | |
|---|---|
| இரும்பு | இரும்பானது |
| அனன்று | பழுக்கக் காய்ச்சப்பெற்று |
| உண்ட | உட்கொண்ட |
| நீரும் | ஜலமும் |
| போதரும் | வெளியிலே வந்துவிடும் ; |
| கொள்க | (இதை) உறுதியாக நினையுங் கோள் ; (ஏனென்றால்) |
| என்தன | என்னுடையவையாய் |
| அரு | போக்கமுடியாதவையாய் |
| பிணி பாவம் எலலாம் | நோய்களுக்கு அடியான பாவங்களெல்லாம் |
| என்னை விட்டு அகன்றன | என்னை விட்டு நீங்கிப் போயின ; |
| சுரும்பு அமர் | வண்டுகள் பொருந்திய |
| சோலை சூழ்ந்த | சோலைகளாலே சூழப்பட்ட |
| மா அரங்கம் | மாட்சிமை தங்கிய ஸ்ரீரங் கத்தை |
| கோயில் கொண்ட | இருப்பிடமாகக் கொண்டு வாழ்கிற |
| கரும்பினை | பரமபோக்யனான எம்பெரு மானை |
| என் கண் இணை | எனது இரண்டு கண்களும் |
| கண்டு கொண்டு | பார்த்தவண்ணமாய் |
| களிக்கும் ஆறு ஏ | மகிழ்ச்சியடையும் விதம் என்னே! (என்று வியக் கிறார்.) |

* * *—தம்மைவிட்டு ஒருகாலும் பிரிக்கக்கூடாமலிருந்த அரும்பிணி பாவமெல்லாம் அகன்றுபோன ஆச்சரியத்தினால் இரும்பனன்றுண்ட நீருபோதரும் என்கிறார். இரும்பானது பழுக்கக் காய்ந்து நீரைக்குடித்தால் குடித்த நீரடங்கலும் இரும்பிலே சுவறிப்போமத்தனை யொழிய அந்த இரும்பில் நின்றும் வெளிப்படுத்தியெடுக்க முடியாதென்பது லோகாநுபவஸித்தமே யாகிலும், அந்த நீரும் அந்த இரும்பில் நின்று வெளிப்பட்டுவிடுமென்று நிச்சயிக்கலாம் ; ஏனென்றால், அனன்ற இரும்புபோன்ற என்னிடத்திலே தனித்துப் பிரித்துக் களைந்தொழிக்க வொண்ணாதபடி மங்கிக்கிடந்த அரும்பிணி பாவங்கள் வெளிப்பட்டனவன்றோ ; ஆதலால் இதுபோல் அதுவும் நேரலாம் என்கிறாராயிற்று.

அரும்பிணி பாவமெல்லாம் அகலவே, திருவரங்கம் பெரிய கோயிலிலே நித்யஸந்நிதிபண்ணி யிருக்கின்ற பரமபோக்யனான பெருமானைக் கண்ணாரக்கண்டு களிக்கப்பெற்றேனென்கிறார் பின்னடிகளில். தகாத விஷயங்களைக் கண்டு களித்த என் கண்கள் இன்று ஸ்வரூபாநுரூபமான விஷயத்தைக் கண்டு களிக்கப் பெற்றமை என்ன பாக்கியம் ! என்று அதிசயப்படுகிறார். ... .. 13

காவியைவென்றகண்ணார் கலவியேகருதி* நாளும்
பாவியேனாகவெண்ணி அதனுள்ளேபழுத்தொழிந்தேன்*
தூவிசேரன்னமன்னும் சூழ்புனற்குடந்தையானை*
பாவியேன்பாவியாது பாவியேனாயினேனே.

14

| | |
|---|---|
| காவியை | கருநெய்தல்மலரை |
| வென்ற | தோற்பித்த |
| கண்ணார் | கண்களையுடையரான மாதர் களினது |
| கலவியே | கலவியையே |
| கருதி | நினைத்துக்கொண்டு |
| நாளும் | அநாதிகாலமாக |
| பாவியேன் ஆக எண்ணி | மஹாபாபியாகும்படி மநோர தித்து |
| அதனுள்ளே | அந்தப் பாவப் படுகுழி யிலேயே |
| பழுத்தொழிந் தேன் | பரிபக்குவனாய் விட்டேன் ; |
| தூவி சேர் அன்னம் மன்னும் | (அழகிய) சிறகையுடைய அன்னப்பறவைகள் பொருந்திவாழ்கிற |
| சூழ் புனல் | சுற்றிலும் ஜலஸம்ருத்தியை யுடைத்தான |
| குடந்தையானை | திருக்குடந்தைக்குத் தலைவ னான எம்பெருமானை |
| பாவியேன் | பாவியான நான் |
| பாவியாது | சிந்தியாமல் |
| பாவியேன் ஆயினேன் | (மேலும்) மஹாபாபியா |

* * *—கீழ்ப்பாட்டில் "கரும்பினைக் கண்டுகொண்டு என் கண்ணிணை களிக்குமாறே" என்று ஆநந்த பரவசராய்ப் பேசினவர், ஐயோ! பழுதே பல பகலும் போயினவே யென்று கழிவிரக்கங்கொண்டு, கீழ் நாள்களெல்லாம் வாளாவிருந்தொழிந்து பாவியானேனே யென்று முடிமேல் மோதிக்கொள்ளுகிறார்.

"கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி, நீண்ட வெப் பரிய வாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே!" என்று ஈடுபடவேண்டிய திருக்கண்களை விட்டொழிந்து, பிளிச்சைக் கண்ணிகளையெல்லாம் காவியை வென்ற கண்ணாராக ப்ரமித்து அவர்களோடு கூடிவாழ்வதே பரம புருஷார்த்த மென்று கருதி, ஸாக்ஷாத் நாசம் பண்ணுகிற மஹா பாபியாவதற்கே வழிதேடி, (தசரதசக்ரவர்த்தி வெண்கொற்றக்குடை நிழலிலே பழுத்தாற்போலவும். நம்மாழ்வார் "உனதுபாதம் போற்சீரில் பழுத்தொழிந்தேன்" என்று பகவத்குணங்களிலேயே பழுத்தாற் போலவும்) அந்தப் பாவங்களிலேயே பழுத்தொழிந்தேன் நான். பரமபோக்யமான திருக்குடந்தைமா நகரிலே திருக்கண் வளர்ந்தருள்கின்ற ஆராவமுதாழ்வாரைச் சிறிதாகிலும் நெஞ்சில் நினைத்திருந்தேனாகில் பாவங்கள் தொலையப் பெற்றிருப்பேன் அது செய்யாமையன்றோ படுபாவியானே னென்றாராயிற்று.

காவி—கருங்குவளைமலர். விஷயாந்தரங்களில் விரக்தரான இவர் 'காவியை வென்ற கண்ணார்' என்ற சொல்லாலே மாதர்களைக் குறித்தது கூடுமோ என்ன வேண்டா; அவர்களின் காவியைக் கருதின காலத்திலிருந்த நினைவை அநுவாதம் செய்தபடி; எதிர்மறை யிலக்கணையாகவுமாம்; கவிமரபுக்கேற்ப, உலகில் வழங்குகிற சொல்லாலே குறித்தாராகவுமாம்.

தூவிசேரன்ன மன்னும் குடந்தை—ஞானம் அநுட்டானம் ஆகிய இரண்டு சிறகுகளமைந்த 'ஹம்ஸர்', 'பரம ஹம்ஸர்' என்னும்படியான மஹான்கள் வாழுமிட மென்று ஸ்வாபதேசார்த்தம் கூறுவர். ... ... ... 14

முன்பொலாவிராவணன்றன் முதுமதிளிலங்கைவேவித்து*
அன்பினனுமன்வந்து ஆங்கடியிணைபணியநின்றற்கு*
என்பெலாமுருகியுக்கிட்டு என்னுடைநெஞ்சமென்னும்*
அன்பினால்ஞானநீர்கொண்டாட்டுவ னடியனேனே. 15

| | | | |
|---|---|---|---|
| முன் | முன்பொருகால் | நின்றற்கு | நின்றபெருமானுக்கு |
| பொலா | பொல்லாதவனான | அடியனேன் | அடியேன் |
| இராவணன் தன் | இராவணனுடைய | என்பு எலாம் | எலும்பெல்லாம் |
| | | உருகி | உருகி |
| முது மதிள் இலங்கை | வலியமதிள்களையுடைத்தான இலங்காபுரியை | உக்கிட்டு | இற்றுப்போய் |
| | | | என்னுடைய |
| வேவித்து | சுடுவித்து | நெஞ்சம் என்னும் | நெஞ்சென்று சொல்லப்படுகிற |
| அனுமன் | சிறிய திருவடி | | |
| அன்பினால் வந்து | மகிழ்ச்சியுடனே வந்து | அன்பினால் | ஆர்வத்தினால் |
| ஆங்கு | கிஷ்கிந்தையிலே | ஞானம் நீர் கொண்டு ஆட்டு | ஞானமாகிற தீர்த்தத்தைக் கொண்டு திருமஞ்சனம் செய்வேன். |
| அடி பணிய | உபயபாதங்களையும் தொழும்படியாக | | |

* * *—எம்பெருமானை நீராட்டுதல் பூச்சூட்டுதல் முதலிய வழிபாடுகளால் நேராக உகப்பித்து உய்ந்தாள் யசோதைப்பிராட்டி; அவள் செய்தபடிகளை அநுகரித்துப்பேசி உய்ந்தார் பெரியாழ்வார்; இவ்வாழ்வார் தாமும் அங்ஙனே சில வழி

பாடுகள் செய்யப் பெறவேணுமென்று பாரித்து மாநஸிகமாகவே நீராட்டுதலும் பூச்சூட்டுதலுஞ் செய்து மகிழ்கிறார் இப்பாட்டிலும் மேற்பாட்டிலும்.

எம்பெருமான் பரம ஸந்தோஷமாக எழுந்தருளியிருந்த ஒரு ஸமய விசேஷத்தை யெடுத்துரைத்து அந்த நிலைமையிலே நீராட்டங்கொண்டருளச் செய்கிறேனென்கிறார். பிராட்டி யிருக்குமிடத்தைத் தேடித் தெரிந்துவருமாறு ஸ்ரீராமபிரானால் நியமித்து விடுக்கப்பட்ட வாநர முதலிகளிலே தலைவரான சிறிய திருவடி இலங்கையிலே வந்து கண்டு அப்பிராட்டி கையிலே "இத்தகையாலடையாளமீதவன் கை மோதிரமே" என்று ஸ்ரீராம நாமாங்கிதமான மோதிரத்தைக் கொடுத்து, சூடாமணியையும் பெற்று, 'எதிரிகளின் வலிமை எப்படிப்பட்டது? என்று பெருமாள் கேட்டால் அது தெரியாதென்று சொல்லவொண்ணுதாகையால் அதையும் தெரிந்துகொண்டு செல்வோமென்று கருதி அதற்காகச் சில சேஷ்டிதங்களைச் செய்து தன்வாலில் நெருப்பாலே இலங்கையைச் சுடுவித்து "கண்டேன் சீதையை" என்று மீண்டுவந்து விண்ணப்பஞ் செய்த ஸமயத்திலே ஆனந்தக்கடலிலே ஆழ்ந்துகிடந்த பெருமாளுக்கு, அந்நிலையை நினைத்து ஈடுபட்ட வளுகி, அப்படிப்பட்ட எம்பெருமான் விஷயமான ப்ரேமமே எனது நெஞ்சாக வடிவெடுத்திருப்பதனால் என்னுடைய நெஞ்சமென்னு மன்பினால் ஞானமாகிற திருமஞ்சனத்தால் நீராட்டுவேன் என்கிறார். தீர்த்தத்திற்குப் பரிமள த்ரவ்யம் ஸம்ஸ்காரமாவதுபோல் இங்கு ஞான நீருக்கு அன்பு ஸம்ஸ்காரமாகக் கொள்ளப்பட்டது. இதனால் மாநஸிகமான திருமஞ்சனத்தைச் சொன்னவாறு.

"நன்—அதுவுமொரு காலமே! என்று வயிறு பிடிக்கிறார்" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி உணரத்தக்கது.

பொலா—பொல்லா என்றபடி; தொகுத்தல். *சுரிகுழற் கனிவாய்த் திருவினைப் பிரித்த கொடுமையிற் கடுவிசை யரக்கனைகையாலே பொல்லாதவன் என்று பொதுவிலே சொல்லாமத்தனை யொழியப் பிரித்துப் பாசுரமிடப் போகாதென்க.

மாயமான்மாயச்செற்று மருதிறநடந்து*வையம்
தாயமாபரவைபொங்கத் தடவரைதிரித்து*வானோர்க்
கீயுமாலெம்பிரானுர்க் கென்னுடைச்சொற்களென்னும்*
தூயமாமாலைகொண்டு சூட்டுவன்தொண்டனேனே. 16

| | | | |
|---|---|---|---|
| மாயம் | மாயச்செய்கையையுடைய | | (அமுதமெடுத்து) |
| மான் | மாரீசனாகிற மான் | வானோர்க்கு | தேவர்களுக்கு |
| மாய | முடியும்படி | ஈயும் | கொடுத்தவனுயுமுள்ள |
| செற்று | கொன்றவனுயும் | மால் | ஆச்ரிதவ்யாமோஹசாலியான |
| மருது | (இரட்டை) மருதமரங்கள் | | |
| இற | முறிந்துவிழும்படி | எம் பிரானுர்க்கு | எம்பெருமானுக்கு |
| நடந்து | நடைகற்றவனுயும் | என்னுடை | என்னுடைய |
| வையம் தாய் | (த்ரிவிக்ரமனுகி) உலகங்களை யளந்துகொண்டவனுயும் | சொற்கள் என்னும் | வாய்மொழிகளாகிற |
| அ | அப்படிப்பட்ட | | |
| மா | பெரிதான | தூய | பரிசுத்தமான |
| பரவை | கடலானது | மா மாலை கொண்டு | சிறந்த மாலையைக் கொண்டு |
| பொங்க | பொங்கும்படியாக | | |
| தட வரை | பெரிதான மந்தர பர்வதத்தை | தொண்டனேன் | அடியேன் |
| திரித்து | சுழலச்செய்து | சூட்டுவன் | சூட்டுவேன். |

* * *—இப்பாட்டிலே திருமஞ்சனம் பண்ணினர்; இப்பாட்டிலே திருமாலை சூட்டுகிறார். முன்னடிகளிலே எம்பெருமானுடைய நான்கு அவதாரங்களைக் கூறுகிறார்; "மாயமான் மாயச்செற்று" என்றதனால் ஸ்ரீ ராமாவதாரம்; "மருதிற நடந்து" என்றதனால் ஸ்ரீ க்ருஷ்ணாவதாரம். "வையம்தாய்" என்றதனால் திரிவிக்ரமாவதாரம். "அம்மா பரவைபொங்கத் தடவரை திரித்து வானோர்க்கீயும்" என்றதனால் கூர்மாவதாரம்.

முன்பே விச்வாமித்ரருடைய யாகத்தில் மாரீசனை உயிர் மாய்த்திருக்க வேணும்; அப்போது விட்டிட்டதனாலன்றோ இப்போது இவ்வநர்த்தம் விளைக்க வந்தானென்று உயிர் மாயத் தொலைத்தாளாயிற்று.

[மருதிற நடந்து] கண்ணன் குழந்தையாயிருக்குங் காலத்தில் துன்பப் படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த யசோதை கண்ணனைத் திருவயிற்றில் கயிற்றினால் கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை மருதமரத்தின் நடுவே எழுந்தருளியபொழுது அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில் முன் நாரத சாபத்தால் அம்மரங்களாய்க் கிடந்த நளகூபரன் மணிக்ரீவனென்னுங் குபேர புத்திரர் இருவரும் சாபந்தீர்ந்து சென்றனர். இந்தக் குபேர புத்திரர்கள் முன்பு ஒரு காலத்தில் பல அப்ஸரஸ் ஸ்த்ரீகளுடனே ஆடையில்லாமல் ஜலக்ரீடை செய்து கொண்டிருக்கையில் நாரத முனிவர் அங்கு எழுந்தருள, மங்கையர் அனைவரும் நாணங்கொண்டு ஆடையெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர் மாத்திரம் மதுபான மயக்கத்தால், வஸ்திரமில்லாமலே யிருக்க, நாரதர் கண்டு கோபங்கொண்டு 'மரங்கள்போலிருக்கிற நீங்கள் மரங்களாவீர்' என்று சபிக்க, உடனே அவர்கள் வருந்தி வேண்டிக்கொண்டதற்கு இரங்கி நெடுங்காலஞ் சென்றபின்பு திருமால் உங்களருகு அணுகுஞ் சமயத்தில் இவ்வடிவொழிந்து முன்னையவடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப்போயினர். இப்படி சாபத்தினால் மரங்களான இவற்றில் கம்ஸனால் ஏவப்பட்ட இரண்டு அசுரர்களும் ஆவேசித்துக் கிடந்தனரென்றும் சில புராணங்கள் கூறும். "பொய்ம்மாய மருதான வசுரரை" என்று பெரியாழ்வாரும் அருளிச்செய்தார்.

வையம் தாய் -'தாய்' என்றது தாவி யென்றபடி. "பாயோரடிவைத்ததன் கீழ்ப் பரவை நிலமெல்லாந் தாய்" என்ற திருவாய்மொழியுங் காண்க. "அம்மா" என்பது அமா எனத் தொகுத்தலாயிற்று.

ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுக்கு எனது தமிழ்ப்பாசுரங்களாகிய தூயமாமாலையைக்கொண்டு சூட்டுவேனென்றாராயிற்று, ... ... 16

பேசினார்பிறவிநீத்தார் பேருளான்பெருமைபேசி*
ஏசினாருய்ந்துபோனாரென் பதிவ் வுலகின்வண்ணம்*
பேசினேனேசமாட்டேன் பேதையேன்பிறவிநீத்தற்கு*
ஆசையோபெரிதுகொள்க அலைகடல்வண்ணர்பாலே. 17

பேர் உளான் { திருப்பேர் நகரில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானுடைய
பெருமை — பெருமையை
பேசினார் — பேசினவர்கள்
பிறவி நீத்தார் { ஸம்ஸாரத்தைக் கடந்தார்கள்;
பேசி ஏசினார் { (அப்பெருமையைப்) பேசிப் பரிஹஸித்த சிசுபாலாதிகளும்
உய்ந்து போனார் } உஜ்ஜீவித்தார்கள்,
என்பது ...று சொல்லுவது

| | | | |
|---|---|---|---|
| உலகின் வண்ணம் | சாஸ்த்ரமர்யாதையாகும் ; | பிறவி நீத்தற்கு | இந்த ஸம்ஸாரத்தை விட்டு நீங்குதற்கு |
| பேதையேன் | அறிவுகெட்டவனான நானோ வென்னில், | அலை கடல் வண்ணர் பால் | அலையெறிகின்ற கடல் போன்ற நிறத்தனான எம்பெருமான் விஷயத்திலே |
| பேசினேன் | (அவன் பெருமையைப்) பேச வல்லவனோ ? | ஆசையோ பெரிது | ஆதரமோ அதிகமாயிருக்கின்றது ; |
| ஏச மாட்டேன் | (சிசுபாலாதிகளைப்போலே) ஏசவும்மாட்டேன் ; | கொள்க | இதனை உணர்க. |

* * *—எம்பெருமானுடைய பெருமையைப் பேசுகின்ற பக்தர்களும் நல்வீடு பெறுகிறார்கள் ; அப்பெருமானை ஏசுகின்ற சிசுபாலாதிகளும் நல்வீடு பெறுகிறார்களென்று சாஸ்த்ரங்களினால் தெரிகின்றது ; இவ்விரு வகுப்பிலும் எனக்கு அந்வயமில்லை ; எம்பெருமானுடைய பெருமையை அறிவிலியான நான் என்ன பேசப்போகிறேன் ; என்னால் பேசமுடியுமோ? முடியாததனால் * பேருளான் பெருமை பேசிப் பிறவி நீத்தாருடைய கோஷ்டியிலே அந்வயிக்கப் பெற்றிலேன் நான். இனி, சிசுபாலாதிகளைப்போலே ஏசி உய்ந்து போகலாமோ வென்னில், ஏசிப் பெறும் மோக்ஷம் எனக்கு வேண்டா ; மோக்ஷம் போகாமல் நரகம்போனாலும் போகிறேன், எம்பெருமானை ஏசாதிருந்தேனாகில் போதும் ; சிசுபாலாதிகளின் செயலும் எனக்கு வேண்டா ; அவர்கள் பெற்றபேறும் எனக்குவேண்டா ; ஆக இரண்டு வகையாலும் மோக்ஷம் பெறுவதற்கு ப்ராப்தியில்லையாயிற்று ; ஆயினும், மோக்ஷம் பெறவேணுமென்கிற ஆசையோ அபாரமாகவுள்ளது ; அவனுடைய வடிவழகு என்னைத் துவக்குகின்றது, என்செய்வேனென்கிறார்.

[பேருளான் பெருமைபேசிப் பிறவி நீத்தார்] 'அப்பக்குடத்தான் ஸந்நிதி' என்று ப்ரஸித்திபெற்ற திருப்பேர் நகர் ஒன்றைச் சொன்னது மற்றெல்லாத் திருப்பதிகட்கும் உபலக்ஷணம். திருப்பேர் முதலான திவ்யதேசங்களில் நித்ய ஸந்நிதிபண்ணியிருக்குமவனான எம்பெருமானுடைய பெருமையைப் பேசுமவர்கள் உஜ்ஜீவித்தமைக்கு உதாரணம் காட்டவேணுமோ ?

[ஏசினார் உய்ந்துபோனார்] 'ஏசினாரும்' என்று உம்மை தொக்கிருப்பதாகக் கொள்க. "கற்றினம் மேய்க்கலும் மேய்க்கப்பெற்றான் காடுவாழ் சாதியுமாகப் பெற்றான், பற்றியுரலிடையாப்புமுண்டான் பாவிகாள் உங்களுக்கேச்சுக்கொலோ" என்று ஆண்டாள் வயிறெரிந்து பேசும்படியாக தூஷித்தவர்களில் தலைவனான சிசுபாலன் முதலானவர்கள் 'ஏசினார்' என்பதாற் கொள்ளப்படுவர் ; வைகிறவனும் பேர் சொல்லி வையவேண்டியிருப்பதால் ஏதேனுமொரு படியாலே நம்முடைய திருநாமத்தைச் சொன்னானென்று கொண்டு எம்பெருமான் ஏசுகிறவர்களுக்கும் நற்கதி நல்குவதுண்டு. சிசுபாலனுக்கு மோக்ஷங்கிடைத்ததென்பதைப் பராசர மஹர்ஷி பகர்ந்துவைத்தார் ஸ்ரீவிஷ்ணு புராணத்தில். "கேட்பார் செவிசுடு கீழ்மை வசவுகளே வையும், சேட்பால் பழம் பகைவன் சிசுபாலன், திருவடிதாட்பாலடைந்த" என்றார் நம்மாழ்வாரும்.

என்பது இவ்வுலகின் வண்ணம்—லோகமென்கிற சொல்லால் சாஸ்த்ரத்தைச் சொல்லுகிற வழக்கமுமுண்டு ; " எல்லீரும் வீடுபெற்றால் உலகில்லையென்றே " என்ற திருவாய்மொழி வியாக்கியானங்களிலும், " ந நிந்திதம் கர்ம ததஸ்தி லோகே " என்ற ஆளவந்தார் ஸ்தோத்ர வியாக்கியானங்களிலுங் காணலாம். ஆகவே இங்கு உலகின் வண்ண மென்று சாஸ்த்ரமர்யாதையைச் சொன்னபடி. (சாஸ்த்ரமறிந்த) உலகத்தவர்கள் சொல்லுவர்கள் என்று பொருள் கொண்டாலுங் கொள்ளலாம்.

பேசினேன்—எம்பெருமானுடைய பெருமையை நான் பேசினேனென்பதாகப் பொருள்படுவதன்று ; 'ஆ! நாம் வெகு நன்றாகப் படித்துவிட்டோம்' என்றால், படிக்கவில்லையென்று பொருளாவது போல இங்கும் எதிர்மறையாகக் கொள்ளத்

ಚಾರ, ಶಾಸ್ತ್ರಾನುಗ್ರಹಶಕ್ತರಾದ ಮಹಾತ್ಮರ ಸೇವೆ, ಭಗವದ್ಭಕ್ತರನ್ನು ಸರ್ವಥಾ ನಿಂದಿಸದಿರುವದು, ಗ್ರಾಮ್ಯ ವಿಷಯಗಳಲ್ಲಿ ಮೋಹಿಸದಿರುವದು ಮನಸ್ಸಾದಿ ಸರ್ವೇಂದ್ರಿಯಗಳನ್ನು ಜೈಸುವದು, ಮತ್ತು ಅವುಗಳನ್ನು ಭಗವದ್ವಿಷಯಕವಾಗಿ ಸ್ಥಿರಪಡಿಸುವದು, ದುರ್ಜನ ಸಹವಾಸವಾಗದಂಥ ಪವಿತ್ರಕ್ಷೇತ್ರಗಳಲ್ಲಿ ವಾಸಿಸುವದು, ಶ್ರೀಹರಿಸೇವೆಯಲ್ಲಿ ಸರ್ವಾವಯವ, ಇಂದ್ರಿಯಗಳನ್ನು ಆಸಕ್ತಗೊಳಿಸುವದು, ಸರ್ವಬಗೆಗಳಿಂದ ಹಿಂಸಾತ್ಯಾಗಮಾಡುವದು, ನಿತ್ಯ ಆಚರಿಸಬೇಕಾದ ದ್ವಾದಶಯಮಗಳನ್ನು ಹಾಗೂ ಕಾಲವಿಶೇಷಗಳಲ್ಲಿ ಅರ್ಥಾತ್ ನೈಮಿತ್ತಿಕಾಚರಣೆಗಳಾದ ದ್ವಾದಶ ನಿಯಮಗಳನ್ನು ಪಾಲಿಸುವದು, ಭಗವದಿಚ್ಛೆಯಿಂದ ಪ್ರಾಪ್ತವಾದುದರಿಂದಲೇ ಪೂರ್ಣತೃಪ್ತವಾಗಿರುವದು, ಹರ್ಷಶೋಕಗಳಿಗೆ ಹೇತುಗಳಾದ ಶೀತೋಷ್ಣಾದಿ ಸರ್ವವಿಧದ ದ್ವಂದ್ವಗಳನ್ನು ಸಹಿಸುವದು, ಶ್ರೀಹರಿಚರಿತ್ರೆಗಳ ಶ್ರವಣ, ಆತನ ಉಪಾಸನ, ಮಾಹಾತ್ಮ್ಯಜ್ಞಾನಪೂರ್ವಕವಾಗಿ ಆತನ ಗುಣ, ಕರ್ಮನಾಮಗಳ ಸಂಕೀರ್ತನಗೈಯ್ಯುವದು, ಮತ್ತು ಪುರುಷಾರ್ಥ ಹೇತುಗಳಾದ ಇತರ ಭಾಗವತಧರ್ಮಗಳೂ ನಿತ್ಯದಲ್ಲೂ ಸದ್ಭಾವನೆಯಿಂದ ಆಚರಿಸಲ್ಪಡತಕ್ಕವು. ಹೀಗಿರಲು, ಪುರುಷಾರ್ಥಪ್ರಾಪ್ತಿಗೆ ಇವುಗಳೆಲ್ಲ ಸಾಕ್ಷಾದ್ಧೇತುಗಳಾಗಿರದೆ, ನಮ್ಮಿಂದ ಮೇಲೆ ನಿರೂಪಿಸಲ್ಪಟ್ಟ ಅಸಂಗ (ಐಹಿಕ ವಿಷಯಗಳಲ್ಲಿ ಪೂರ್ಣವಿರಕ್ತಿ) ಮತ್ತು ರತಿ (ಪರಮಾತ್ಮನಲ್ಲಿ ಅನ್ಯತ್ರಕಾಣದಂಥ ಅಸದೃಶವಾದ ಸ್ನೇಹಾಖ್ಯಭಕ್ತಿ) ಇವೆರಡೇ ಪರಮಪುರುಷಾರ್ಥ ಪ್ರಾಪ್ತಿಗೆ ಸಾಕ್ಷಾದ್ಧೇತುಗಳೆಂಬುದು ಹೇಗೆ ಕೂಡುವದು ? ಅಂದರೆ, ಪುರುಷಾರ್ಥಪ್ರಾಪ್ತಿಗೆ ಶ್ರೀಹರಿಯಲ್ಲಿ ಶ್ರದ್ಧಾ ಹಾಗೂ ಆತನ ಕಥಾಶ್ರವಣಾದಿಗಳು ಹೇತುಗಳೆಂದು ಹೇಳುವ ವಚನಕ್ಕೆ ಅವು ಪರಂಪರೆಯಿಂದ ಸಾಧನಗಳೆಂಬುದೇ ಅಭಿಪ್ರಾಯವು. ಆ ಮಾತನ್ನೇ ಇಲ್ಲಿ ಪ್ರತ್ಯೇಕವಾಗಿ ೪ ಪದ್ಯಗಳಿಂದ ತಿಳಿಸುತ್ತಾರೆ.—

**ಶ್ಲೋಕಗಳು:-ತಚ್ಛ್ರದ್ಧಯಾ ಭಗವದ್ಧರ್ಮಚರ್ಯಯಾ ಜಿಜ್ಞಾಸಯಾಽಽಧ್ಯಾತ್ಮಿಕ ಯೋಗನಿಷ್ಠಯಾ । ಯೋಗೇಶ್ವರೋಪಾಸನಯಾ ಚ ನಿತ್ಯಂ ಪುಣ್ಯಶ್ರವಃ ಕಥಯಾ ಪುಣ್ಯಯಾ ಚ ||೧೦||೫೨|| ೪. ೨೨. ೨೨. ಅರ್ಥೇಂದ್ರಿಯಾರಾಮಗೋಷ್ಠ್ಯತೃಷ್ಣಯಾ ತತ್ಸಮ್ಮತಾನಾಮಪರಿಗ್ರಹೇಣ ಚ । ವಿವಿಕ್ತರುಚ್ಯಾಽಪರಿತೋಷ ಆತ್ಮನ್ವಿನಾ ಹರೇರ್ಗುಣಪೀಯೂಷಪಾನಾತ್ ||೧೧||೫೩|| ೪. ೨೨. ೨೩.**

தோன்றும் இத்யாதி.] ஆகவிப்படிப்பட்ட முறையிலே ஜாஜ்வல்யமானமாய்க்கொண்டு தோன்றுகிற ஞானத்தாலே வேதவிளக்காகிய எம்பெருமானை சாஸ்திரங்களில் விதித்தபடியே உபாஸனைபண்ணி ஸாக்ஷாத்கரிக்கவேணுமென்று பெரு முயற்சி செய்பவர்கள் அவனை மெய்யாகக் காணமுடியுமோ? அப்பெருமான் தானே தனது நிர்ஹேதுக க்ருபையினால் தன்னைக் காட்டிக் கொடுத்தருளினால் காணலாமத்தனை யொழிய * ஊன் வாட வுண்ணாதுயிர்காவலிட்டு உடலிற்பிரியாப் புலனைந்தும் நொந்து தாம் வாட வாடத் தவஞ்செய்கையாகிற ஸ்வப்ரயத்நங்களாலே அவனை ஸாக்ஷாத்கரிக்கை எளிதோ? என்றாராயிற்று.

பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனுமுன்னைக் காண்பான், எண்ணிலா ஊழியூழி தவஞ்செய்தார் வெள்கிநிற்ப. விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்றருளை யீந்த" என்கிறபடியே பல்லூழியூழிகாலமாகத் தவம்புரிந்து வருந்தி நின்றவர்களெல்லாம் வெட்கப்பட்டு நிற்கும்படியாக ஸ்ரீ கஜேந்திராழ்வான் போல்வார் திறத்திலே பரம க்ருபைசெய்தருள்பவனான எம்பெருமானுடைய ஸ்வபாவத்திற்கு இணங்க இப்பாட்டுக்கு இங்ஙனே உரையிடுதல் மிகப்பொருந்தும். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் இங்ஙனே விரிவாக உரையிட்டருளின பின். "அதவா, இப்படி யோகசாஸ்த்ரத்தில் சொல்லுகிறபடியே உபாஸித்துக் காண்பார்க்குக் காணலாமென்றுமாம்" என்கிற மற்றொரு நிர்வாஹமும் அருளிச்செய்யப் பட்டுள்ளது காண்க. ... .... .... .... 18

பிண்டியார்மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணும்*
முண்டியான்சாபந்தீர்த்த வொருவனூர்*உலகமேத்தும்
கண்டியூரரங்கம்மெய்யம் கச்சிபேர்மல்லையென்று
மண்டினார்*உய்யலல்லால் மற்றையார்க்குய்யலாமே? 19

| | | | |
|---|---|---|---|
| பிண்டி ஆர் மண்டை ஏந்தி | உளுத்தபொடிகள் உதிருகிற தலையோட்டைக் கையிலேந்திக்கொண்டு | கண்டியூர் | திருக்கண்டியூரென்ன |
| பிறர் மனை | அயலாருடைய வீடுகளிலே | அரங்கம் | திருவரங்கமென்ன |
| திரிதந்து | திரிந்து (பிச்சையெடுத்து) | மெய்யம் | திருமெய்யமென்ன |
| உண்ணும் | ஜீவித்த | கச்சி | திருக்கச்சியென்ன |
| முண்டியான் | மொட்டையாண்டியான ருத்ரனுடைய | பேர் | திருப்பேர்நகரென்ன |
| சாபம் தீர்த்த | ப்ரஹ்மஹத்திசாபத்தை போக்கின | மல்லை | திருக்கடன்மல்லையென்ன |
| ஒருவன் | அத்விதீயனான எம்பெருமானுடைய | என்று | ஆகிய இத்திருப்பதிகளைப் பேசிக்கொண்டு |
| ஊர் | திருப்பதிகளாய் | மண்டினார் | அவகாஹிக்குமவர்கள் |
| உலகம் ஏத்தும் | உலகத்தவர்களால் கொண்டாடப்பட்டனவாயுமுள்ள | உய்யல் அல்லால் | உஜ்ஜீவிக்கலாமத்தனையொழிய |
| | | மற்றையார்க்கு | அல்லாதவர்களுக்கு |
| | | உய்யல் ஆமே | உஜ்ஜீவிக்கவழியுண்டோ? (இல்லை.) |

***- எம்பெருமானுகந்தருளின திவ்ய தேசங்களிலெங்கும் "பதியே பரவித் தொழுந்தொண்டர்" என்னும்படியாக அவகாஹித்திருக்குமவர்கள் உஜ்ஜீவிக்க வழியுண்டேயல்லது அல்லாதவர்களுக்கு ஒருநாளும் உஜ்ஜீவிக்க வழியில்லையென்கிறார். ஒருகாலத்திலே பரமசிவன் தன்னைப்போலவே பிரமனும் ஐந்து தலையுடையனாயிருப்பது பலரும் பார்த்து மயங்குதற்கு இடமாயிருக்கின்றதென்று கருதி அவனது சிரமொன்றைக் கிள்ளி யெடுத்துவிட, அக்கபாலம் அப்படியே சிவன்கையில் ஒட்டிக் கொள்ளுதலும், அவன் 'இதற்கு என் செய்வது' என்று கவலைப்பட, தேவர்களும் முனிவர்களும் 'இப்பாவந் தொலையப் பிச்சையெடுக்க

ದಯಾದ್ರಹೃದಯದಿಂದ, ಕಾಮ ಕ್ರೋಧಾದಿ ವಶದ ಇಂದ್ರಿಯವಿಕಾರಗಳನ್ನು ಜೈಸಿ, ಐಹಿಕವಿಷಯಗಳು ಅನಿತ್ಯವಾಗಿದ್ದು ಜನ್ಮ, ಜರಾ ಮರಣಾದಿ ದುಃಖಗಳಿಗೆ ನಿಜವಾದ ಕಾರಣಗಳಾದುದರಿಂದ ಅತಿಹೇಯವೆಂಬುದರ ಪರಿಜ್ಞಾನ ಹಾಗೂ ಭಗವದ್ಗುಣ ಶ್ರವಣಾದಿಗಳಲ್ಲಿ ಪೂರ್ಣವಾಗಿರಬೇಕಾದ ಆಸಕ್ತಿ, ಇವೆರಡೂ ವಿಧಿಗಳನ್ನು ಸ್ಮರಣೆಯಲ್ಲಿಟ್ಟುಕೊಂಡು ನಿತ್ಯಾನುಷ್ಠೇಯವಾದ ಅಹಿಂಸಾದಿ ದ್ವಾದಶಯಮಗಳನ್ನೂ ನೈಮಿತ್ತಿಕಾನುಷ್ಠಾನದ ಅಭಯಾದಿ ದ್ವಾದಶ ನಿಯಮಗಳನ್ನೂ ಆಚರಿಸುತ್ತ, ಭಗವದ್ಭಕ್ತಿ ವಿಶೇಷದ ಮಹಾತ್ಮರನ್ನು ಸರ್ವಥಾ ನಿಂದಿಸದೆ, (ಸ್ವಸ್ವರೂಪಯೋಗ್ಯತೆಯನ್ನತಿಕ್ರಮಿಸಿ) ಹೆಚ್ಚಿನ ಹವ್ಯಾಸವನ್ನು ಮಾಡದೆ ಭಗವತ್ಸಂಕಲ್ಪದಂತೆ ದೊರೆತಷ್ಟರಿಂದಲೇ ಪೂರ್ಣತೃಪ್ತನಾಗಿ, ಶೀತೋಷ್ಣಾದಿ ದ್ವಂದ್ವಗಳನ್ನೆಲ್ಲ ಸಹಿಸುತ್ತ || ಶ್ರೀಹರಿಯೇ ಸರ್ವೋತ್ತಮನೆಂದು ಆತನಲ್ಲೇ ಆಸಕ್ತರಾದ ಮಹಾತ್ಮರ ಕರ್ಣಗಳಿಗೆ ಭೂಷಣವಾದ ಭಗವಚ್ಚರಿತ್ರೆಗಳನ್ನು ಸರ್ವದಾ ಶ್ರವಣಗೈಯುತ್ತ ತನಗೆ ತಿಳಿದಮಟ್ಟಿಗೆ ಅವುಗಳನ್ನು ಶ್ರೀಹರಿಭಕ್ತರಿಗೆ ಹೇಳುತ್ತ, ಭಗವನ್ನಾಮಗಳನ್ನು ಯಾವಾಗಲೂ ಸಂಕೀರ್ತನಗೈಯುತ್ತ, ಇವುಗಳಲ್ಲದೆ ಅನ್ಯವಾದ ಹಾಗೂ ಶ್ರೀಮದ್ಭಾಗವತದಲ್ಲುಪದಿಷ್ಟವಾದ ಭಾಗವತ ಸುಧರ್ಮಗಳನ್ನು ನಿತ್ಯದಲ್ಲೂ ಆಚರಿಸುವ ನಿಮಿತ್ತಕವಾಗಿ ಅಭಿವೃದ್ಧಿಯಾಗುವ ಭಕ್ತಿಯಮೂಲಕ ( ಭಗವಂತನಲ್ಲದ) ಅನ್ಯತ್ರದಲ್ಲಿ ಪೂರ್ಣವೈರಾಗ್ಯ, ಮತ್ತೂ ಸದಸತ್( ಕಾರ್ಯ-ಕಾರಣ)ಪದವಾಚ್ಯ ದೇಹ ಹಾಗೂ ಇಂದ್ರಿಯಗಳಲ್ಲಿ ಅಂತರ್ಯಾಮಿಯಾಗಿದ್ದು ಮುಖ್ಯವಾಗಿ ಆದಾನಾದಿ [ಆಯ, ವ್ಯಯಗಳಿಗೆ] ಸ್ವತಂತ್ರಕರ್ತನಾದ ಮತ್ತು [ಸಾತ್ವಿಕಾದಿ ಜೀವರಲ್ಲಿ ಕಾಣತಕ್ಕ] ಪ್ರಾಕೃತ ಗುಣಗಳಿಂದ ಬದ್ಧನಾಗಿರದಿರುವಕಾರಣ ನಿರ್ಗುಣನೆನಿಸುವ ಪರಮಾತ್ಮನಲ್ಲಿ ಸುದೃಢಸ್ನೇಹಾತ್ಮಕ ಭಕ್ತಿ, ಇವೆರಡೂ ಸ್ಥಿರವಾಗುವವು. ಆದುದರಿಂದ ಶ್ರದ್ಧಾದಿ ಸರ್ವ ಭಾಗವತಧರ್ಮಗಳಿಗೆ ಪ್ರತಿಫಲವಾದವು ವಿರಕ್ತಿ ಹಾಗೂ ಭಕ್ತಿ ಇವೇ ಎಂಬ ಸಿದ್ಧಾಂತವು ಸರ್ವಶಾಸ್ತ್ರ ವಿಮರ್ಶೆಯಿಂದ ಸಂಸಿದ್ಧವಾಗುವದು.

**ಸಮಾಖ್ಯ:—೧೧. ೧೦.** **ಅರ್ಥ:—**ನನ್ನಲ್ಲೇ ಆಸಕ್ತರಾದ ಸುಜೀವರು ಯಮಗಳನ್ನು ನಿತ್ಯಶಃ ಆಚರಿಸುತ್ತ ನಿಯಮಗಳನ್ನು ಆಯಾ ಪ್ರಸಂಗ

ಗಳಲ್ಲಿ ಆಚರಿಸುವರು. ಯಮಗಳು.—ಅಹಿಂಸಾ, ಸತ್ಯ, ಅಸ್ತೇಯ, ಅಸಂಗ, ಲಜ್ಜಾ (ಹ್ರೀ), ಅಸಂಚಯ, ಆಸ್ತಿಕ್ಯ, ಬ್ರಹ್ಮಚರ್ಯ, ಮೌನ, ಸ್ಥೈರ್ಯ, ಕ್ಷಮಾ, ಅಭಯವೆಂಬ ಹನ್ನೆರಡು. ನಿಯಮಗಳು.—ಶೌಚ, ಜಪ, ತಪ, ಹೋಮ, ಶ್ರದ್ಧಾ, ಆತಿಥ್ಯ, ಅರ್ಚನ, ತೀರ್ಥಾಟನ, ಪರಾರ್ಥೇಹಾ, ತುಷ್ಟಿ, ಆಚಾರ್ಯಸೇವನ, ಅಭಯವೆಂಬ ಹನ್ನೆರಡು.

ವಿಶೇಷಾಂಶ:—ಯದೃಚ್ಛಾಲಾಭ ಸಂತುಷ್ಟಿಯು ಭಾಗವತರ ಜೀವನ ಲಕ್ಷಣವು. ಅವರು ಹೆಚ್ಚಿನ ಇಚ್ಛೆಯನ್ನು ಯಾವಾಗ್ಯೂ ಮಾಡುವದಿಲ್ಲ. ಯಾಕಂದರೆ—ಭಗವತ್ಸಂಕಲ್ಪಕ್ಕೆ ವಿನಾ ಯಾವದೂ, ಎಷ್ಟೂ ಲಭಿಸುವದಿಲ್ಲೆಂಬ ಸಮೀಚೀನ ಜ್ಞಾನವು ಅವರಿಗಿರುವದು. ಮತ್ತು ಹಾಗೆ ಅಪೇಕ್ಷಿಸುವದು ಪಾಪಸಾಧಕವೆಂದೂ ಬಗೆಯುವರು. ಅಂತೆಯೇ "ನಿನ್ನ ಚಿತ್ತಕೆ ಬಂದದ್ದೆನ್ನ ಚಿತ್ತಕೆ ಬರ | ಲ್ಯನ್ಯಥಾ ಬಯಕೆಯ ಕೊಡದಿರು ||" ಶ್ರೀನಿವಾಸದಯಾನಿಧೇ ||೧|| ನಿನ್ನ ಚಿತ್ತೆನ್ನ ಭಾಗ್ಯಾ ಇನ್ನೊಂದಾಸೆಯು ಇಲ್ಲ.... " ಎಂದು ಅವರು ಭಗವಂತನನ್ನು ಪ್ರಾರ್ಥಿಸುವರು. "ಹರಿಕೊಟ್ಟುಂಟು ಹಗ | ಲಿರುಳೂ ವಣಹಂಬಲೇಕೆ ||" ಮತ್ತು "ಹರಿಕೊಟ್ಟ ಮಾತ್ರವಲ್ಲದೆ ಅಧಿಕಬರದು ||" ಎಂದು ಅವರ ದೃಢನಂಬಿಕೆ. ತಮ್ಮ ವರ್ಣಾಶ್ರಮೋಚಿತವಾದ ನಿತ್ಯ, ನೈಮಿತ್ತಿಕ ಕರ್ಮಗಳನ್ನು ಎಷ್ಟೂ ವ್ಯತ್ಯಾಸವಾಗದಂತೆ ಆಚರಿಸುತ್ತ, ಭಗವತ್ಪರಿವಾರವೆಂದು ಸತಿ, ಸುತಾದಿ ಕುಟುಂಬದ ಸಂರಕ್ಷಣೆಯ ಪೂರ್ತಿಗಾಗಿ ಸೋಚಿತವಾದ ಲೌಕಿಕ ಕಾರ್ಯಗಳನ್ನು ಕೈಕೊಳ್ಳುವರು.

ಪುರುಷಾರ್ಥ (ಪರಮಾತ್ಮನ ಅನುಗ್ರಹ) ಪ್ರಾಪ್ತಿಗೆ ಯೋಗವೆಂಬ ಹೆಸರು. ಇದು ಅಸಾಧಾರಣ ತಪಸ್ಸು. ಚಿತ್ತ (ಮನೋ) ವೃತ್ತಿಯನ್ನು ನಿರೋಧಿಸಿ ಪರಮಾತ್ಮನ ಧ್ಯಾನಗೈಯಬೇಕಾದ್ದು. ಯೋಗದ ಸಾಧನ ಹಾಗೂ ರಕ್ಷಣಗಳ ಅಷ್ಟಾಂಗಗಳಲ್ಲಿ ಯಮ (ಇಂದ್ರಿಯ ನಿಗ್ರಹ) ನಿಯಮ (ಪ್ರತಿಬಂಧನ) ಗಳು ಅಂಗಗಳು. ಯಮಗಳು ಈ ದೇಹ ರಕ್ಷಣೆಗೆ ನಿತ್ಯದಲ್ಲೂ ಅವಶ್ಯ ಆಚರಿಸಬೇಕಾದ ಸತ್ಕರ್ಮಗಳು. ನಿಯಮಗಳು ಯಮಗಳಿಗೆ ಸಹಾಯಕವಾಗಿ ದೇಶ, ಕಾಲ ವಿಶೇಷಗಳಲ್ಲಿ ಆಚರಿಸಲ್ಪಡತಕ್ಕ ಫಲವಿಶೇಷವಾಗಿರುವ ಸತ್ಕ್ರಿಯಗಳು. ಇವೆರಡೂ ಹೆಚ್ಚಾಗಿ ಬಾಹ್ಯಾಚರಣೆಗಳಾಗಿದ್ದು

ಒಂದನ್ನು ಬಿಟ್ಟು ಮತ್ತೊಂದನ್ನು ಆಚರಿಸದೆ, ಯೋಗಪೂರ್ಣಸಾಧನೆಗೆ ಇವೆರಡನ್ನೂ ಅವಶ್ಯ ಆಚರಿಸಲೇಬೇಕು.. ಈ ಯಮ, ನಿಯಮಗಳು ಕೆಲವು ಗ್ರಂಥಗಳಲ್ಲಿ ಐದೇ ಎಂದೂ, ಕೆಲವು ಗ್ರಂಥಗಳಲ್ಲಿ ಹತ್ತೆಂದೂ, ಯೋಗಕಲ್ಪದ್ರುಮಾಖ್ಯಗ್ರಂಥದಲ್ಲಿ ಹನ್ನೆರಡೆಂದೂ ಹೇಳಲ್ಪಟ್ಟಿವೆ. ಇಲ್ಲಿಯೂ ಕೂಡ ಇವು ಹನ್ನೆರಡು ಸಂಖ್ಯಾಕ ಎಂದೇ ಗ್ರಹಿಸಲಾಗಿದೆ.

ಈ ಯಮ, ನಿಯಮಗಳು ತ್ರಿದಶಭಾಗವತಧರ್ಮಗಳಿಂದ ಬೇರೆಯಾದವಲ್ಲ. ಅವುಗಳಲ್ಲಿಯೇ ಸಮಾವೇಶವಾದವು. ಆದರೆ, ಯಮ, ನಿಯಮಗಳು ಮನೋವೃತ್ತಿಯ ನಿರೋಧದದ್ವಾರ ಕೇವಲ ಈ ಬಾಹ್ಯಶರೀರದ ಸಾಧನ [ಶುದ್ಧಿ, ರಕ್ಷಣ] ಕ್ಕೆ ಹೇತುವಾಗಿದ್ದರೆ, ಭಾಗವತ ಧರ್ಮಗಳು ಜೀವನಸಾಧನೆಗೆ [ಮೋಕ್ಷಪ್ರಾಪ್ತಿಗೆ] ಕಾರಣಗಳಾಗಿವೆ. ಇವುಗಳಾಚರಣೆಯಿಂದ ಸಕಲ ಪಾಪವಿನಾಶನಾಗಿ ಅಕ್ಷಯಫಲವು ಲಭಿಸುವದು. ಜೀವನ ಕರ್ತೃತ್ವ, ಭೋಕ್ತೃತ್ವ, ದೇಹೇಂದ್ರಿಯಗಳ ಸ್ವಾಮಿತ್ವಾದ್ಯಭಿಮಾನ ತ್ಯಾಗ ಪೂರ್ವಕವಾದ ಅನುಷ್ಠಾನವೇ ಭಾಗವತಧರ್ಮಗಳ ಲಕ್ಷಣವು. ಇವು ಸಾತ್ವಿಕಜೀವರ ಸ್ವರೂಪಲಕ್ಷಣಗಳಾಗಿದ್ದು ದೈವೀಸಂಪತ್ತೆಂದು ಗಣ್ಯವಾಗಿವೆ. [ಸಾರೊ. ೨೦ನೇ ಪ್ರ] ಈ ಧರ್ಮಗಳು ಕೇವಲ ಭಗವತ್ಪ್ರೀತ್ಯರ್ಥವಾಗಿಯೇ ಮಾಡಲ್ಪಡುವಂತೆ ಯಮ, ನಿಯಮಗಳೂ ಹಾಗೆಯೇ ಆಚರಣೀಯವಾಗಿರುತ್ತವೆ. ಯಾಕಂದರೆ, ಇವು ಭಾಗವತಧರ್ಮಗಳಿಗೆ ಪರಂಪರ ಸಾಧನಗಳಾಗಿವೆ. ಸ್ಥೂಲರೂಪದ ಕರ್ಮಗಳು ಕಾಲಾಂತರ [ಅಪರೋಕ್ಷಾನಂತರ] ದಲ್ಲಿ ವಿರಾಮಗೊಳ್ಳುವವು. ಆದರೆ, ಸೂಕ್ಷ್ಮರೂಪದ ಧರ್ಮಗಳು ಕಾಲಕ್ರಮೇಣ ಅಭಿವೃದ್ಧಿಯೈದುತ್ತ ಮೋಕ್ಷದಲ್ಲೂ ಆ ಭಾವನೆಗಳುಳಿಯುವವು. ಯಾಕಂದರೆ-ಮೇಲೆ ಹೇಳಿದಂತೆ ಯಮ, ನಿಯಮಗಳು ಅಶಾಶ್ವತಶರೀರಕ್ಕೂ ಭಾಗವತಧರ್ಮಗಳು ಶಾಶ್ವತಸ್ವರೂಪಕ್ಕೂ ಸಂಬಂಧಿಸಿದಂತಾಗಿವೆ. ಭಾಗವತಧರ್ಮಗಳು ವಿಜ್ಞಾನ, ಭಕ್ತಿ, ವೈರಾಗ್ಯಗಳನ್ನು ವೃದ್ಧಿಗೈಸಿ ಬಾಹ್ಯಕರ್ಮಕಲಾಪವನ್ನು ಬಿಡಿಸುವವು. ಇದಕ್ಕೆ ಕರ್ಮಸನ್ಯಾಸವೆಂದೆನಬಹುದು. ಹೊರತಾಗಿ ಸುತರಾಂ ಕರ್ಮಸನ್ಯಾಸ ಮಾಡುವದು ಕೇವಲ ಅಶಕ್ಯವೇ ಅಹುದು.

இக்கடல் படுகிற பாடு பாருங்கள்' என்றருளிச் செய்து ஸமுத்ர ராஜனை அழிக்க முயன்றாப் போலே, இவ்வாழ்வாரும் 'நமது அபேக்ஷிதத்தை நிறைவேற்றாத எம்பெருமான் ஏதுக்கு? அவனுடைய ஸ்வரூப குண விபூதிகளையும், அவன் உகந்து எழுந்தருளியிருக்கு மிடங்களையும் அழித்துவிடுவோம்' என்று அவற்றை அழிக்கப் பார்த்தார் சிறிய திருமடலிலும் பெரிய திருமடலிலும். அதுகண்ட எம்பெருமான் 'இனி இவர்க்கு நாம் முகங்காட்டா தொழியில் ஜகத்து ஈச்வரனற்றதாய்விடும்' என்று நிச்சயித்து ப்ரஹ்லாதாதிகளுக்கு முகங் காட்டினாப்போலே இவர்க்கு முகங்காட்டித் தானும் இவரும் ஜகத்தும் உண்டாம்படி பண்ணியருள, அதனாலுண்டான ஸந்தோஷாதிசயத்தைப் பேசித் தலைக்கட்டுகிறார் இத் திருநெடுந்தாண்டகத்தில்.

இப்பிரபந்தம் முப்பது பாசுரங்கள் கொண்டது. இது, விஷய வைலக்ஷண்யத்தாலே, முதற்பத்து இரண்டாம்பத்து மூன்றாம்பத்து என மூன்றுபகுதியாக வ்யவஹரிக்கப்படும். முதற்பத்து, தாமான தன்மையிலே அருளிச்செய்தது; இரண்டாம்பத்து திருத்தாயார் வார்த்தையாக அருளிச்செய்தது; மூன்றாம் பத்து, தோழியோடே வ்ருத்த கீர்த்தநம் பண்ணுகிற தலைமகள் வார்த்தையாக அருளிச் செய்தது. கூரத்தாழ்வான் திருக்குமாரரான பட்டர் இத் திருநெடுந்தாண்டகத்திலே மிகவுங் கருத்து ஊன்றி இதன் ஆழ்பொருளில் ஈடுபட்டு 'திருநெடுந்தாண்டக சாஸ்திரம் வல்லவர்' என்று ஒரு பெயர் பெற்றவராய் இப்பிரபந்தத்தின் அர்த்தத்தைத் தமது திருவோலக்கத்திலே பலகாலும் பரக்க உபந்யஸிப்பராம். அதிலும் "மைவண்ண நறுங்குஞ்சிக் குழல்பின்தாழ" என்ற இருபத்தோராம்பாசுரத்திற்கு அதிவிஸ்தாரமாக உபந்யாஸம் அருளிச்செய்வர். அதுகேட்டு எம்பெருமானுடைய பஞ்சாசாரியர்களுள் ஒருவரான திருவரங்கப் பெருமாளரையர் மிக வியந்து 'முன்பு ஓர் ஆசாரியரிடத்திலும் இப்படி பொருள்கேட்கப் பெற்றதில்லை இப்பொழுது இவரிடத்திலே இது கேட்கப் பெற்றோம்' என்று கொண்டாடிப் பட்டரை மிகவும் நன்கு மதிக்கலானார் என்று பிரஸித்தம். ஸம்ப்ரதாயத்திலே நஞ்சீயர் என 'வழங்கப்பட்டு வருகின்ற ஆசாரியர் பூர்வா வஸ்தையிலே மேல் நாட்டில் வேதாந்தியாக [ப் புறமதஸ்தராய்] வாழ்ந்த காலத்திலே, ஸ்தல யாத்திரை செய்யுமியல்பினரான ஒரு பிராமணர் மூலமாக 'பட்டர் திருநெடுந்தாண்டக சாஸ்திரம் வல்லவர்' என்று கேட்டு, அவர் அந்த நூற்பெயரைக் கேட்டுமறியாதவராதலால் 'அப்படியும் ஒரு சாஸ்த்ரமுண்டோ? அதனையும் வல்ல அவர் எப்படிப்பட்ட வித்வானோ!' என்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்து, பட்டருடைய வேதாந்தோபந்யாஸங்களுக்குத் தோற்றதுந் தவிர, திருநெடுந்தாண்டகத்தின் அரும் பொருளுபந்யாஸத் திறமையில் மிக ஈடுபட்டாரென்பதும் ஸுப்ரஸித்தம்.

தாண்டகம் என்பது ஓர்வகைப் பிரபந்தம். இது அறுசீராலாவது எண்சீராலாவது இஷ்டதேவதையைப் புகழ்ந்துபாடுவது. அறுசீர்கொண்டது குறுந்தாண்டகம்; எண்சீர்கொண்டது நெடுந்தாண்டகம். நெடுந்தாண்டகத்தில் அடிதோறும் (மெய்யெழுத்துட்பட) இருபத்தாறெழுத்துக்கள் குறைவின்றி யிருக்க வேணுமென்கிற நிர்ப்பந்தமு முண்டு. ...

ಸಾಮೋಕ್ತ ಲಕ್ಷ್ಮೀನರಸಿಂಹ ಕ್ಷುದ್ರೋಪದ್ರವಪರಿಹಾರಾರ್ಥವಾಗಿಯೇ ನಿತ್ಯದ
ಸ್ನಾನ ಆ ಅಷ್ಟ ಭೋಜ್ಯಾದಿ ಪಾತ್ರಗಳನ್ನು ಪ್ರಥಮತಃ (ಪರಮಾತ್ಮಗೆ ಮಹಾ)
ನೈವೇದ್ಯವೆಂದೂ, ಆಮೇಲೆ ಅಗ್ನಿದ್ವಾರ (ಪಂಚರೂಪಾತ್ಮ ಸಂಕರ್ಷಣಗೆ)
ವೈಶ್ವದೇವವೆಂದೂ, ಆ ಬಳಿಕ ಬ್ರಾಹ್ಮಣ, ಸುವಾಸಿನಿಯರ ಭೋಜನ
ದ್ವಾರ (ಶ್ರೀಕೃಷ್ಣಗೆ) ಬ್ರಹ್ಮಾರ್ಪಣವೆಂದೂ, ಆಮೇಲೆ ಸ್ವಪರಿವಾರಸಹ
ಸ್ವಭೋಜನಕಾಲದಲ್ಲಿ [ಸ್ವಬಿಂಬಾಖ್ಯ ಹರಿಗೆ] ನಿವೇದನವೆಂದೂ, ಆಬಳಿಕ
ಕೊನೆದಾಗಿ ಪ್ರತಿಕವಳ ಭುಕ್ತದಲ್ಲಿ [ಗೋವಿಂದಗೆ] ಆಹುತಿಗಳೆಂದೂ- ಹೀಗೆ
ಒಟ್ಟು ಪಂಚ ಆವರ್ತಿ ಭಗವತ್ಸಮರ್ಪಣೆಯನ್ನು ಜ್ಞಾನಿಗಳು ಮಾಡುವರು)

೨. ಸತ್ಯ.—“ಸರ್ವತ್ರಾತ್ಮೇಶ್ವರಾನ್ವೀಕ್ಷಾ” — ಯಥಾವಸ್ತು
ಜ್ಞಾನ, ಧ್ಯಾನ, ಸಮರ್ಪಣ, ಇವು ತ್ರಿವಿಧ ಸಮಾಧಾನಗಳು. ಪ್ರಾಣಿಸ
ಮೂಹಕ್ಕೆ ಹಿತವಾಗಿಯೂ, ವಸ್ತುತಃ ನಿಜವಾಗಿಯೂ ಇರುವದನ್ನೇ ನುಡಿ
ಯುವದು. ಹಾಗೆಯೇ ಆಚರಿಸುವದು. “ಸತ್ಯಕ್ಕೆ ಸಾವಿಲ್ಲ. ಮಿಥ್ಯಾಕ್ಕೆ
ಉಳಿವಿಲ್ಲ” “ಸತ್ಯಮೇವಜಯತಿ” ಎಂಬ ವಚನಗಳು ಆಕಾಲಾಬಾಧಿ
ತವಾದವು. ಸತ್ಯವು ಸಕಲ ಪುಣ್ಯಕರ್ಮಗಳ ಮಾತೃಸ್ಥಾನವು. ಅಸ
ತ್ಯವು ಸರ್ವಪಾಪಗಳ ಮಾತೃಸ್ಥಾನವು. ಯಾಕೆಂದರೆ-ಮನುಷ್ಯನು ಚೌ
ರ್ಯಾದಿಕುಕೃತ್ಯಗಳನ್ನು ಮಾಡಿದ್ದರೂ ಕೇಳಿದಾಗ್ಗೆ “ಇಲ್ಲ” ಎಂಬ ಅಸತ್ಯ
ನುಡಿಯು ಅವನ ರಕ್ಷಣೆಗೆ ಧಾವಿಸಿಬರುವದು. ಅಂತೆಯೇ ಪಾಪಗಳ
ಮಾತೆಯೆಂದದ್ದು. ಇನ್ನು ಸಕಲಪುಣ್ಯ ಕರ್ಮಗಳನ್ನು ಮಾಡಿದ್ದು “ನಿಜ”
ವೆಂದು ನುಡಿಯುವದರಿಂದ ಸತ್ಯವು ಹಾಗೆ ಹೇಳಲ್ಪಡುವದು. ಆದುದರಿಂದ
ಸುಜೀವನು ಮುಂದಿನ ಕಷ್ಟ ತಪ್ಪಿಸಿಕೊಳ್ಳಲು ಯಾವಾಗ್ಯೂ ಸತ್ಯವನ್ನೇ
ನುಡಿಯುವನು. ಸತ್ಯದಂಥ ಪುಣ್ಯವಿಲ್ಲ. ಅಸತ್ಯದಂಥ ಪಾಪವಿಲ್ಲ.
ಅಂತೆಯೇ ಉಪನಿಷತ್ತುಗಳು “ಸತ್ಯಂವದ” ಎಂದು ಎಲ್ಲಕ್ಕೂ ಮೊದ
ಲು ವಿಧಿಸುತ್ತವೆ. ಸತ್ಯದಿಂದ ವಾಕ್ಸಿದ್ಧಿ(ವಾಙ್ಮಯಶುದ್ಧಿ) ಯಾಗುವದು.
ಸತ್ಯವು ಅಹಿಂಸಾತ್ಮಕವಾದದ್ದು. ಅಸತ್ಯವು ಹಿಂಸಾತ್ಮಕವಾದದ್ದು. ಶ್ರೀ
ಹರಿ ಸರ್ವೋತ್ತಮ, ಜೀವೇಶ್ವರಭೇದ, ಜಗತ್ಸತ್ಯವೆಂಬ ಯಥಾವಸ್ತು
ಗಳ ಜ್ಞಾನ ಹಾಗೂ ಧ್ಯಾನವೇ ಸತ್ಯದ ಸಾರವು.

ப்ராக்ருதப் பொருள்களெல்லாம் நிலை நிற்கமாட்டாதவை யென்று அறிவித்தா னென்றவாறு.

ஜீவாத்மாவுக்கு தேஹ ஸம்பந்தம் இரண்டுவகையான காரணங்களினுலுண் டாகின்றது; புண்யபாப ரூபகருமங்கள் காரணமாகவும் எம்பெருமானது அருள் அடியாகவும். கருமமடியாக ப்ரக்ருதிபந்தமுண்டாமளவில், ஜீவாத்ம பரமாத் மாக்களுடைய ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ள வொண்ணுமற் செய்கையும் தன்பக்கலில் அஸ்தைர்யத்தையும் அபோக்யதையையும் மறைத்து ஸ்தைர்ய புத்தியையும் போக்யதாபுத்தியையும் ப்ரக்ருதியானது பிறப்பிக்கும்; இனி எம் பெருமானருளடியாக ஸம்ஸாரபந்தமுண்டாமளவில், ஸ்வவிஷயத்திலும் ஸ்வகீய விஷயத்திலும் கிடக்கிற அஸ்தைர்யத்தையும் அபோக்யதையையும் பிரகாசிப் பிக்கக் கடவதுமாய் ஆத்மபரமாத்மஸ்வரூபத்தை ப்ரகாசிப்பிக்கக் கடவதுமாயிருக் கும். ஆழ்வார் இவ்விபூதியிலே பிறந்தது கருமமடியாகவல்லாமல் எம்பெருமா னருளடியாகவாதலால் ப்ரக்ருதி ப்ராக்ருதங்களில் அஸ்தைர்யம் பிரகாசித்து த்யாஜ்யதாபுத்தி யுண்டாயிற்றென்க.

வேதம் நான்காய்—தேஹமே ஆத்மாவென்றும், இந்த்ரியமே ஆத்மாவென்றும், மநஸ்ஸே ஆத்மாவென்றும், ப்ராணனே ஆத்மாவென்றும், புத்தியே ஆத்மா வென்றும் கொள்வாருடைய கொள்கைகளைத் தள்ளி 'அஹம்' [நான்] என்று வியவஹரிப்பதற்கு இலக்கான வஸ்துவே ஆத்மாவென்றும் அவன நித்யனென் றும் தெரிந்து கொள்வதற்கு சாஸ்த்ரம் அபேக்ஷிதமாகையாலே, சாஸ்த்ரங்களில் தலையான வேதங்களை அருளினபடி சொல்லுகிறது. இங்கு 'வேத நான்காய்' என்றது, நால்வேதங்களாலும் பிரதிபாதிக்கப்படுபவன் என்ற கருத்திலன்று; நான்கு வேதங்களையும் உபகரித்தருளினவன் என்ற கருத்திலென்க.

ஆக, "மின்னுருவாய் மூன்னுருவில் வேத நான்காய்" என்றவளவுக்குத் தேறின கருத்தாவது—ஆத்மாவிற் காட்டிலும் வேறுபட்ட அசேதனப் பொருள் களில் க்ஷணிகத்வ புத்தியைப் பிறப்பித்தவனும், அங்ஙனல்லாத ஆத்ம வஸ்துவின் உண்மை நிலையைத் தெரிந்துகொள்வதற் குறுப்பாக சாஸ்த்ரங்களைத் தந்தருளின வனும் எம்பெருமான் என்றதாயிற்று.

விளக்கொளியாய்—சாஸ்திரங்களைக் கொடுத்தருளின மாத்திரத்தால் என் னும்; அவற்றால் மருள் நீங்கித் தெருள் பிறந்தாலன்றே பயனுண்டாவது: அங்ஙனம் அஜ்ஞானத்தையகற்றி நல்ல ஞானத்தை யுண்டாக்கி ஸ்வரூபத்தைப் பிரகாசிக்கச் செய்தருளினவன் என்கிறது விளக்கொளியாய் என்று. விளக்கொளி யின் ஸ்வபாவம்போன்ற ஸ்வபாவத்தை யுடைத்தாகையாலே சாஸ்த்ர ஞானத்தை விளக்கொளி யென்கிறது. விளக்கானது இருளைப்போக்கிப் பொருளகளை விளங்கச் செய்யுமாபோலே அகவிருளைப்போக்கி ஸ்வரூபத்தைப் பிரகாசிப்பிக்கக் கடவதா யிருக்குமன்றே சாஸ்த்ர ஜ்ஞானம். இப்படிப்பட்ட சாஸ்த்ர ஜ்ஞானத்தை யுண்டாக்கியருளினவன் எம்பெருமான் என்க. எம்பெருமானருள் இல்லாவிடில் உண்மையான சாஸ்த்ரார்த்த ஜ்ஞானம் உண்டாகமாட்டாதென்று உணர்க.

முளைத்தெழுந்த திங்கள்தானுய்—மலை நுனியில் தோன்றி ஆகாசத்திலே கிளம் பின சந்திரனைப்போலே ஸந்தோஷகரமான ஞானத்தைக் கொடுத்தருளினவன் என்றபடி. கீழ் 'விளக்கொளியாய்' என்றவிடத்திலும் இவ் வர்த்தந்தானே சொல் லிற்று; மீண்டும் இங்குச் சொல்லுகிறது என்னென்னில்; கேண்மின்; எம்பெரு மானைப்பற்றின ஜ்ஞானங்கள் பலவகைப்படும்; எம்பெருமானைக் காதால் கேட்டுணர் வது, நெஞ்சில் ஊன்ற மநநஞ்செய்துணர்வது, உபாஸநம் செய்துணர்வது, கண் ணுரக் கண்டுணர்வது என்றிப்படிப்பட்ட ஜ்ஞானங்களுள் ச்ராவண ஜ்ஞானம்

[காதால் கேட்டுணர்தல்] பெற்றமை மாத்திரம் 'விளங்கொளியாய்' என்றதனால் சொல்லிற்று; நிதித்யாஸந—தர்சந ஜ்ஞானங்களைப் பிறப்பித்தமை இங்குச் சொல்லப்படுகிறது என வாசி காண்க. விளக்கினாலுண்டாகிற வெளிச்சத்திற் காட்டிலும் முளைத்தெழுந்த திங்களினாலுண்டாகும் வெளிச்சம் அதிக ஆநந்தரூபமாக இருப்பது போல, ச்ராவண ஜ்ஞானத்திற் காட்டிலும் மநந நிதித்யாஸந தர்சநங்களாலுண்டாகும் ஞானம் மிக்க ஆஹ்லாத ரூபமாக இருக்குமாதலால், விளங்கொளியா யென்றதனால் ச்ராவண ஜ்ஞானத்தைச் சொல்லிற்றென்றும் முளைத்தெழுந்த திங்கள் தானாயென்றதனால் மற்ற ஞானங்களைச் சொல்லிற்றென்றும் பகுத்துரைத்தல் மிகப் பொருந்தும். இது தன்னிலும் முளைத்து என்றதனால் மநந தசையும் எழுந்த என்றதனால் நிதித்யாஸந தசையும், திங்கள்தானாய் என்றதனால் ஸாக்ஷாத்கார தசையும் சொல்லப்பட்டன வென்றுணர்க.

பின்னுருவாய் முன்னுருவிற்பிணி மூப்பில்லாப் பிறப்பிலியாய்—இவ்வளவும் ஜீவாத்மாவைச் சொல்லுகிறதாய் (ஸாமாநாதிகரண்யத்தாலே) இப்படிப்பட்ட ஜீவாத்மாவுக்கு நியாமகன் எம்பெருமான் என்றதாகிறது. "பொங்கைம்புலனும் பொறியைந்துங் கருமேந்திரிய மைம்பூதம், இங்கிவ்வுயிரேய் பிரகிருதி மானாங்கார மனங்களே" என்கிறபடியே இருபத்துநான்காகிய தத்துவங்களுக்குப் பிற்பட்டவனாய் என்று இருபத்தைந்தாம் தத்துவமாகச் சொல்லப்பட்டவனான ஜீவாத்மாவைப் பின்னுருவாய் என்றதனாற் சொல்லுகிறது; முன்னுருவிற்பிணி மூப்பில்லாப் பிறப்பிலி யென்பதும் அந்த ஜீவாத்மாவையே; ப்ரத்யக்ஷத்திற் காணப்படுகின்ற ப்ராக்ருத பதார்த்தங்களை முன்னுரு வென்கிறது. அந்தப் பொருள்களுக்கு ஸம்பாவிதமான பிணியும் மூப்பும் பிறப்பும் ஜீவாத்மாவை ஸ்பர்சிக்கமாட்டாவாகையால் "முன்னுருவிற் பிணிமூப்பில்லாப் பிறப்பிலி" யென்று ஜீவாத்மாவைச் சொல்லிற்றாயிற்று. ஆக, பின்னுருவாயும், முன்னுருவிற் பிணிமூப்பில்லாப் பிறப்பிலியாயுமிராநின்ற ஜீவாத்மாவைச் சொல்லி, ஆய் என்ற ஸாமாநாதிகரண்யத்தாலே அப்படிப்பட்ட ஜீவாத்மாவை நிர்வஹிப்பவன் எம்பெருமான் என்றதாயிற்று.

இறப்பதற்கே யெண்ணாது—இறப்பாவது மரணம்; ஆத்மஸ்வரூபாநுபந்தியான மரணம் இங்கு விவக்ஷிதம்; அதாவது கைவல்யமோக்ஷம். தேஹாநுபந்தியான மரணம் ஆத்மாவுக்கு இல்லையாயினும் ஸ்வரூபாநுபந்தியான மரணம் உண்டாதலால், அப்படிப்பட்ட மரணமாகிய கைவல்ய மோக்ஷத்தை அந்தரங்கமான அடியார்க்குக் கொடுக்க நெஞ்சிலும் நினையாதவனெம்பெருமான் என்றவாறு. ஸ்வத: ஸுகியான ஆத்மாவினுடைய அநுபவ ஸ்வரூபமாய்த் தனியே ஒரு புருஷார்த்தமாய் மீட்சியில்லாததான கைவல்யத்தை இறப்பு என்னலாமோவென்னில்; சரீரமானது ஆத்மாவின் வியோகத்தை யடைந்தால் அது மரணமாக ப்ரத்யக்ஷத்தில் வியவஹரிக்கப்படுகிறது; இதுவும் அப்படியே ஸாக்ஷாத் ஆத்மாவாகிய பரமாத்மாவின் வியோகத்தாலே மரணமாகக் குறையில்லை. ப்ரத்யக்ஷத்தில் மரணமடைந்த சரீரம் நஷ்டமாகிறாப்போலே ஆத்மா நசிப்பதில்லையே; அப்படியிருக்க மரணமென்னலாமோ வென்னில், ஸ்வரூபாநுரூபமான போகமில்லாமையாலே ஆத்மாவை நஷ்டனாகவே கொண்டு மரணமென்னலாம். "ம்ருதோ தரித்ர: புருஷ:" [ஏழையான மனிதன் செத்தவனே] என்கிறாப்போலே இதனைக் கொள்க. "அஸந்நேவ ஸ பவதி" என்று சொல்லைத் தக்கவர்களின் ஹ்ருதயத்தாலே இது மரணமேயாகும். இதனைத் திருவாய்மொழியில் இறுகலிறப்பு என்றது முணர்க. ஆக இறப்பதற்கேயெண்ணாது என்றதனால் சொல்லிற்றாவது—கைவல்ய மோக்ஷத்தைப் புருஷார்த்தமாக அபேக்ஷிப்பவர்களுக்குக் கொடுக்கவல்லவனான எம்பெருமான் இப்போது என்னை இப்படுகுழியிலே வீழ்த்த நினையானென்பதாம்.

இப்படிப்பட்ட உபகாரத்திற்குமேலே தன்னுடைய ஸ்வரூபரூபகுணங்களை ப்ரகாசிப்பித்தருளுகையாகிற மஹோபகாரமுஞ் செய்தருளினு னென்கிறார் என்னும் பொன்னுருவாய் என்று. போக்யதையின் மிகுதியாலே ஒருநொடிப் பொழுதும் விடமுடியாமல் எப்போதும் சிந்திக்கவுரியதும் பொன்போல் விரும்பத்தக்கதுமான திவ்ய ஸ்வரூபத்தை யுடையவன் என்றபடி.

மணியுருவிற் பூதமைந்தாய்—இங்குப் 'பூதமைந்து' என்கிறது பஞ்சோப நிஷத்துக்களை ; "பரமேஷ்டீ புமாந் விச்வோ நிவ்ருத்தஸ் ஸர்வ ஏவ ஹி" என்கிறபடியே பஞ்சோப நிஷத்தை வடிவாயுடைத்தாயிருக்கும் எம்பெருமானுடைய திவ்யமங்கள விக்ரஹம். அஸ்மதாதிகளின் தேஹங்களுக்குப் பஞ்சபூதங்கள் உபாதானமாயிருக்குமாபோலே எம்பெருமானுடைய திருமேனிக்குப் பஞ்சோபநிஷத்துக்கள் உபாதானமாயிருக்குமென்று பாஞ்சராத்ர சாஸ்த்ரம் கூறும். இனி, 'மணியுருவிற்பூதமைந்தாய்' என்பதற்கு மற்றொருவகையாகவும் பொருள் கூறுவர் ; தனக்கு அஸாதாரணமான மணியுருவிலும் எழுந்தருளி யிருப்பவனாய், ப்ராக்ருதமான பஞ்சபூதங்களிலும் எழுந்தருளியுள்ளவன் என்று.

இப்படிப்பட்ட எம்பெருமானுடைய ஸௌலப்யத்தைச் சொல்லுகிறது புனலுருவாய் என்று. வஸிஷ்டனென்றும் சண்டாளனென்றும் வாசியில்லாமல் ஒரு துறையிலே படிந்தாடுதற்குரிய தண்ணீர்போலே அனைவர்க்கும் ஒரு தன்மைப்பட எளியனாயிருக்குமவ னென்றவாறு. இப்படி அனைவர்க்கும் எளியனானால் எந்த சத்ருவினால் எந்த வேளையில் என்னகேடு விளைகிறதோவென்று அஞ்சியிருக்க வேண்டாதபடி பிரதிகூலர்க்கு நெருப்புப்போலே கிட்டவொண்ணாதிருக்குமவ னென்கிறார் அனலுருவில் திகழும் என்று. அநுகூலர்க்குப் புனலுருவினன் ; பிரதிகூலர்க்கு அனலுருவினன் என்க. சோதி தன்னுருவாய்—நாட்டில் சோதிப்பொருள்களென்று விளங்குகின்ற அக்நி சந்திரன் ஸூர்யன் முதலியவர்கட்கும் தன்னுடைய ஸம்பந்தத்தாலே ஜ்யோதிஸ் உண்டாம்படி பரஞ்சோதியாயிருப்பவனென்கை. என்னுருவில் நின்ற—மிகவும் ஹேயமான என்னுடைய சரீரத்திலே வந்து நின்றானென்கிறார். கீழே இவ்வாழ்வார் மடலெடுக்கையாலே எம்பெருமான் தன்னுடைய ஸத்தைக்கு ஹாநிவிளைந்திடு மென்றஞ்சி ஓடிவந்து இவருடைய சரீரத்திலே பொருந்தித் தரிப்புப் பெற்றான்போலும். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானுடைய தளிர்போன்ற திருவடிகள் என்தலைக்கு அலங்காரமாய்க் கிடக்கிறபடி பாரீர் என்றாராயிற்று. .... ... .... .... .... 1

பாருருவி நீரெரிகால்விசும்புமாகிப்பல்வேறுசமயமுமாய்ப்பரந்துநின்ற*
ஏருருவில்மூவருமேயென்னநின்ற இமையவர்தம்திருவுருவேறெண்ணும்போது*
ஓருருவம்பொன்னுருவமொன்றுசெந்தீ ஒன்றுமாகடலுருவமொத்துநின்ற*
மூவுருவும்கண்டபோதொன்றாம்சோதி முகிலுருவமெம்மடிகளுருவந்தானே. 2

| | | | |
|---|---|---|---|
| ஏர் உருவில் | அழகிய ஜகத்தில் | பொன் உருவம் | பொன்னின் வடிவாகவுள்ளது ; (பரமசிவனாகிற) ஒரு மூர்த்தியானது |
| மூவருமே நின்ற | 'மூன்று தெய்வங்களே முக்கியம்' என்று சொல்லலாம்படி யமைந்த | செம் தீ | சிவந்த நெருப்பின் வடிவாகவுள்ளது ; |
| தம் திரு உரு | தேவதைகளினுடைய ரூபங்களை | ஒன்று | (ஸ்ரீமந் நாராயணனாகிற) ஒரு மூர்த்தியானது |
| வேறு என்னும்போது | தனித்தனியாகப் பிரித்து ஆராயுமிடத்தில் | மா கடல் உருவம் | கருங்கடல்போன்ற வடிவமாகவுள்ளது ; |
| ஓர் உருவம் | (நான்முகக் கடவுளாகிற) ஒரு மூர்த்தியானது | | |

மயனுமாய்" என்று வ்யஷ்டி ஸ்ருஷ்டியைச் சொல்லுகிறது. தேவமநுஷ்யாதி பேதத்தாலே பலவகைப்பட்ட பதார்த்தங்களையுடைய ஜகத்தையுண்டாக்கினவனுய் என்றபடி. மயன் என்றது வடசொல் திரிபு; ஏற்பாடு என்று பொருள். உலகத்துப் பொருள்களுக்கெல்லாம் ஒவ்வொரு ஏற்பாடு உண்டு; தேவதைகள் ஆராதிக்கவுரியராயும் அமுதமுண்பவராயு மிருத்தல் அவர்களுக்கான ஏற்பாடு; மனிதர் ஆராதனை செய்பவர்களாயும் அன்னமுண்பவர்களாயு மிருத்தல் அவர்களுக்கான ஏற்பாடு: திர்யக்குக்களும் ஸ்தாவரங்களும் ஆராதனைக்குக் கருவியாயிருத்தல் அவற்றுக்கான ஏற்பாடு: இங்ஙனே கண்டுகொள்க

பரந்து நின்ற—பரக்கையாவது—ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஸகலபதார்த்தங்களிலும் அநுப்ரவேசத்தாலே ஆத்மாவாய் வியாபித்து நிற்கையாம். ஸூக்ஷ்மசேதநாசேதநவிசிஷ்டனாகிறபடியைச் சொன்னவாறு. இதற்கு ஈற்றடியிலே அந்வயம்.

[ஏருருவில்] ஜகத்திலே என்றபடி. ஜகத்துமுழுவதும் எம்பெருமானுடைய உடல் [சரீரம்] ஆகையாலே அந்தச் சொல்லையிட்டுச் சொல்லிற்று. * இருள்தருமா ஞாலம் என்று வெறுக்கத்தக்க இதனை ஏருரு என்பானென்? என்னில்; இந்த ஜகத்தானது முமுக்ஷுக்களுக்கு ஒருபடியாலே ஹேயமாயும் ஒருபடியாலே உத்தேச்யமாயுமிருக்கும்; ஸம்ஸாரஸ்தானம் என்று வெறுக்கத்தக்கதாயிருக்கும்; எம்பெருமானுடைய விபூதியென்கிற காரணத்தாலே உத்தேச்யமாயிருக்கும் இங்கு உத்தேச்யத்வம் தோன்ற ஏருரு என்றதாகக் கொள்க.

மூவுருவும் நின்ற இமையவர்—ஸ்ருஷ்டி, ரக்ஷணம், ஸம்ஹாரம் என்பன மூன்று தொழில்கள். இவை மூன்றையும் ஸ்ரீமந் நாராயணனொருவனே நிர்வஹித்தாலும் அவனே நான்முகனை அநுப்ரவேசித்து ஸ்ருஷ்டியையும், ருத்ரனை அநுப்ரவேசித்து ஸம்ஹாரத்தையும், தானான தன்மையிலே ரக்ஷணத்தையும் நடத்திப் போருகையாலே மூன்றுக்கும் ஒருவனே கடவன் என்று தெளியகில்லாத ஸாமாந்ய ப்ராணிகள் ஒவ்வொரு தொழிலுக்கு ஒவ்வொரு தெய்வத்தை ஸ்வதந்த்ர நிர்வாஹகனாகக்கொண்டு மூன்று மூர்த்திகள் ஆச்ரயணீயர்கள் என்று சொல்லுவர்கள்; அதை அநுவதிப்பதாம் 'மூவுருமேயென்ன நின்ற இமையவர்' என்று "ஸ ஆத்மா; அங்காந் யந்யா தேவதா:" என்ற சுருதியின்படி ப்ரஹ்மருத்ரர்களும் எம்பெருமானுடைய திருமேனியேயென்று தெளியக்கண்டவ ராகையாலே அவர்களையும் திருவுரு என்ற கௌரவச் சொல்லாலே சொல்லுகிறார் என்ப.

வேறென்னும்போது—"நன்றெழில் நாரணன் நான்முகனரனென்னு மிவரை, ஒன்ற நும்மனத்து வைத்து உள்ளிநும்மிருபசை யறுத்து நன்றென நலஞ்செய்வது அவனிடை நம்முடை நாளே" என்ற திருவாய்மொழிப்படியே ஏக தத்துவமாக மனத்து வைக்கிற பட்சத்தில் மூன்றுருவமொன்றே தோன்றும்; அங்ஙனன்றியே பிரித்து ப்ரதிபத்தி பண்ணுகிற பட்சத்தில் ப்ரமஹேதுவான அஸாதாரண வடிவங்களைச் சொல்லுகிறது ஓருருவம் பொன்னுருவமென்று தொடங்கி. பிரமனது உருவம் பொன்னுருவாயிருக்கும். பொன்னனது எல்லா ஆபரணங்களும் பண்ணுகைக்கு உரித்தாயிருப்பதுபோல, பதினான்கு லோகங்களையும் ஸ்ருஷ்டிப்பதற்கு உரியவுருவமென்று தோற்றியிருக்குமென்க. [ஒன்று செந்தீ] ருத்ரனது உருவம் செந்தீயுருவாயிருக்கும்; அக்நிக்கு ஸ்வபாவம் அனைத்தையும் கொளுத்துகையாகையாலே, ருத்ரனுடைய ஸ்வபாவத்தைப் பார்த்தால் ஜகத்தையெல்லாம் உபஸம்ஹரிப்பதற்கு உரித்தாயிருக்குமென்று தோற்றவிருக்கும். [ஒன்று மாகடலுருவம்] கண்டார்க்கு விடாயைத் தீர்க்குமதாயிருக்கையும், துஷ்ட ஜந்துக்களோடு நல்ல ஜந்துக்களோடு ரத்னம் முதலியவற்றோடு வாசியற ஸகல பதார்த்தங்களையும் தன்னுள்ளே யிட்டு வைத்து ரக்ஷிக்கையும் கடலின் ஸ்வபாவமாகக் காணுகின்றது; அப்படியே எம்பெருமானுடைய ஸ்வபாவத்தைப் பார்த்தால், ஆச்ரிதர்

களுக்கு தாபத்ரயஹரமாயும், ஆச்ரயித்தாரைத் தன் னபிமானத்திலே யிட்டு வைத்து ரக்ஷிக்குமதாயுமிருக்கை தோற்றவிருக்கும்.

ஒன்றுநின்ற ஒருவுருவுங்கண்டபோது—மூவுருவும் ஒத்திருக்கையாவதென்? என்னில் அவரவர்களுடைய தொழிலுக்கு அவரவருடைய உருவம் பொருத்தமாயிருக்கும் படியைச் சொன்னவாறு. ஸ்ருஷ்டிக்குப் பொருத்தமாயிருக்கும் பொன்னுருவம்; ஸம்ஹாரத்துக்குச் சேர்ந்திருக்கும் செந்தீயுருவம்; ரக்ஷணத்திற்குத் தகுந்திருக்கும் மாகடலுருவம் என்று காண்க. ஆக இப்படிப்பட்ட மூவுருவையும் பிரமாணகதி கொண்டு ஆராயுமிடத்தில், பாருருவி நீரெரிகால் விசும்புமாகிப் பல்வேறு சமயமு மாய்ப் பரந்துநின்ற ஒன்றே ஆம் சோதியாகும்.

எம்படிகளுருவம் முகிலுருவம்—கீழ், 'மாகடலுருவம்' என்றதையே இங்கு முகிலுருவமென்று அநுபாஷிக்கிறார். முகிலுருவ முடையவரே எம்மடிகள் என்றாரென்க. ... ... .. ... .. 2

திருவடிவிற்கருநெடுமால்சேயனென்றும் திரேதைக்கண் வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும்*
பெருவடிவிற்கடலமுதம்கொண்டகாலம் பெருமானைக்கருநீலவண்ணன்றன்னை*
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகா தூழிதோறூழிநின்றேத்தலல்லால்*
கருவடிவிற்செங்கண்ணவண்ணன்றன்னைக் கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே. 3

| | | | |
|---|---|---|---|
| திரு வடிவில் | விலக்ஷணமான வடிவுகளில், | ஊழி தோறு ஊழி நின்று ஏத்தல் அல்லால் | எப்போதும் நின்று துதிப்ப தல்லாமல் |
| கரு நெடு மால் | காளமேகச்யாமமான வடிவை யுடைய ஸர்வேச்வரன | | |
| பெரு வடிவின் | பெரிய கூர்மரூபத்தோடே | | |
| கடல் | கடலினின்றும | ஒரு வடிவம் என்று ஓர் உரு என்று உணரல் ஆகா | வடிவும நிறமும் இன்னதென் றும் இவ்வளவென்றும் அறியப்போகாமலிருக்கிற |
| அமுதம் கொண்ட காலம | (தேவர்களுக்கு) அமுத மெடுத்துக்கொடுத்த கால மாகிய க்ருதயுகத்திலே | | |
| வளை உரு ஆய் திகழ்ந்தான என்றும் | சங்குபோலே வெளுத்த நிறத்தையுடையவனாக விளங்கினனென்றும் | கரு வடிவின செம வண்ணம கண்ணன் தன்னை பெருமானை | கறுத்த திருமேனியையும் செந்நிறமான திருக்கண் களையுமுடையனான எம பெருமானை |
| திரேதைக் கண் | சிவந்தநிறத்தையுடையவனாக விளங்கினனென்றும் | | |
| | (கலியுகத்தில்) | யார் ஒருவர் | ஆரேனுமொருவர் |
| கரு நீலம் வண்ணன் என்றும் | (இயற்கையான) நீலநிறத்தை யுடையனாய் விளங்குகிற னென்றும் | காண்கிற்பாரே | (ஸ்வப்ரயத்நத்தால்) காணக் கூடியவரோ? |
| | | கட்டுரை | (நெஞ்சே!) சொல்லு. |

***—த்ரிமூர்த்தி ஸாம்ய ப்ரமத்தை எம்பெருமான் நயந்துப் போக்கித் தந்தருளினபடியை அருளிச்செய்தார் கீழ்ப்பாட்டில். எம்பெருமான் தனது நிர்ஹேதுக க்ருபையினால் தமக்குக் காட்டித் தந்தருளின திருமேனியின் வைலக்ஷண்யத்தை அநுபவித்துப் பேசுகிறார் இப்பாட்டில்.

எம்பெருமான் ஒவ்வொரு யுகத்திலும் ஒவ்வொரு நிறத்தைக் கொள்வான்; க்ருதயுகத்திலுள்ளவர்கள் ஸத்வகுணம் நிறைந்தவர்களாய் சுத்தமான நிறத்தை உகக்குமவர்களாகையாலே அவர்கட்காகக் க்ருதயுகத்தில் பால்போல வெளுத்த நிறத்தைக்கொள்வன்; த்ரேதாயுகத்திலே சிவந்த நிறத்தைக் கொள்வன்; த்வாபர யுகத்தில் பசுமைநிறத்தைக் கொள்வன்; கலியுகத்தில் இயற்கையான நீல நிறத் தைக் கொள்வன்—என்பது நூற்கொள்கை. ஸ்ரீபாகவதத்தில் பதினொன்றாவது ஸ்கந்தத்தில் ஐந்தாவது அத்யாயத்தில் இருபதாவது ச்லோகம் முதலாக இவ் விஷயம் விரியக் காணத்தக்கது. இப்பாட்டில் த்வாபர யுகத்திற் கொள்ளும்

பசுமை நிறம் சொல்லப்படாதொழியினும் அதுவும் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. பொருட்சேர்த்திக்குத்தகுதியாக "பெருவடிவிற் கடலமுதங்கொண்ட காலம் வண்ணம் நன்னீர் நிறத்தாய்" என்பது முந்துற அந்வயித்துக்கொள்ள வுரியது.

"திரேதைக்கண்" என்று யுகத்தின் பெயரை வாய்விட்டுச் சொன்னது போலக் கிருதயுகத்தின் பெயரையும் வாய்விட்டுச் சொல்லலாமாயிருக்க அப்படி சொல்லாதே 'பெருவடிவிற் கடலமுதங்கொண்ட காலம்' என்று சொல்லுவானென் னென்னில், பிரயோஜநாந்தரபரர்கட்காக எம்பெருமான் தன் திருமேனி நோவக் காரியஞ்செய்து உபகரித்த பெருங்குணத்தை வாய்விட்டுச்சொல்லி யநுபவிக்க விரும்பினவராகையாலே அந்த பகவச்சேஷ்டிதத்தை யிட்டு யுகத்தை ரூபிக்கிறாரென்க. இங்கே வியாக்கியான வாக்கியமுங் காண்மின் :— "பெரிய திருநாளிலே ஆதரமுடையார் 'பங்குனி மாஸத்துக்குப் பின்பு காரியஞ் செய்கிறோம்' என்ன ப்ராப்தமாயிருக்க 'பெரிய திருநாளுக்குப் பின்பு காரியஞ் செய்கிறோம்' என்னுமாபோலே." என்று. அதாவது, முற்காலத்தில் திருவரங்கம் பெரிய கோயிலில் வாழ்பவர்கள் பங்குனிமாதத்திற்கு முந்திய மாசி, தை முதலிய மாதங்களில் வ்யவஹரிக்கும்போது பங்குனிமாதத்திற்குப் பிறகு நடத்த உத்தேசிக்கும் காரியங்களைப்பற்றிக் காலங் குறிப்பிடும்போது 'பங்குனிமாசத்திற்குப் பிறகு செய்வோம்' என்றாவது 'சித்திரைமாதத்தில் செய்வோம்' என்றாவது குறிப்பிடாமல் 'பெரிய திருநாளுக்குப் பின்பு செய்வோம்' என்று குறிப்பிடுவர்களாம். இதனால், பங்குனிமாதத்தில் நடைபெறுகின்ற பெரிய திருநாள் அவ்வளவு உத்தேச்யமாயிருக்குமென்பது விளங்கும். அதுபோலவே இங்கு ஆழ்வார்க்குக் கடலமுதங் கொண்ட வரலாறு இனிதாயிருக்கையாலே அதையிட்டு யுகத்தை நிரூபிக்கிறாரென்றபடி.

ஆழ்வார்க்கு இவ்வரலாறு உத்தேச்யமாகில் 'கடலமுதங்கொண்ட காலம்' என்றால் போராதோ? 'பெருவடிவின்' என்பானென்னென்னில், பதினாறுயிரக் காதமளவு பரப்பையுடைத்தான திருப்பாற்கடலிலே அப்பரப்பு முழுவதும் விம்மும்படி "தன் தாளுந்தோளும் முடிகளுஞ் சமனிலாத பல பரப்பி" என்கிற படியே பெருவடிவோடே திருக்கண் வளர்ந்தருள்வதும், அவ்வடிவோடே யெழுந்திருந்து கடைகிறபோது ஒருகடல் செவ்வே நின்று ஒருகடலைக் கடைந்தாற் போலே யிருக்கையுமாகிற பரமபோக்யதை நெஞ்சை விட்டு அகலாமையாலே சொல்லிற்றென்க.

பெருவடிவு என்பதற்கு, பல வடிவுகள் என்றும் பொருள் கூறுவர், மந்தர மலை நீரில் அழுந்தாமைக்கு ஆமையாக வடிவெடுத்தும், மேலே கொந்தளியாமைக்கு ப்ருஹத்ரூபியாயும், தேவதைகளோடுகூடி நின்று காரியஞ்செய்யும் வடிவு கொண்டும் வாஸுகி நாகத்திற்கு வலிமையாய்ப் புகுந்து நின்றும் ஆகவிப்படி பல வடிவுகள் கொண்டபடி.

'கடலமுதங்கொண்ட காலம்' என்றதில், தேவர்கள் எம்பெருமான் ஆழ்வார்கள் ஆகிய அனைவர்க்கும் அமுதங்கிடைத்தமை அநுஸந்திக்கத்தகுந்தது. எங்ஙனே யென்னில், "அமுதமமரர்கட்கீந்த" என்கிறபடியே உப்புச்சாறான அமுதம் தேவர்கட்குக் கிடைத்தது; "விண்ணவரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட வெம்பெருமானே!" என்கிறபடியே பெரிய பிராட்டியாராகிற அமிருதம் எம்பெருமானுக்குக் கிடைத்தது. "செந்தாமரைக்கட் செங்கனிவாய் நாற்றோளமுதே! என துயிரே" என்கிறபடியே கையுந்திருவாழியுமாய்க் கொண்டு கடல்கடைந்த எம்பெருமானாகிய அமுதம் ஆழ்வார்கட்குக் கிடைத்தது. (தோளுந் தோள்மாலையுமாக எம்பெருமான் கடல் கடைந்த வரலாற்றை ஆழ்வார்கள் நேரிற் கண்டதுபோலப் பரமபோக்யமாகப்பேசியநுபவித்துக் களிப்பர்கள் என்றவாறு.) ஆகக் கடலமுதங் கொண்டகாலமாகிய க்ருதயுகத்திலே வளையுருவாய்த்திகழ்ந்தமைசொல்லிற்றாயிற்று.

திரேதைக்கண் சேயனென்றும்—இவ்வாக்கியம் முன்னேயிருந்தாலும் அர்த்தச் சேர்த்திக்கு ஏற்றதாகப் பின்னே அந்வயிக்கவுரியது. க்ருதயுகத்திற்குப் பிறகு தானே திரேதாயுகம், ஆழ்வாரும் யுகக்ரமமாகவே அருளிச்செய்யலாமே; மாறுபட அருளிச்செய்வானேன்? என்னில்; ஸத்வரஜஸ்தமோமயமான ப்ரக்ருதிக்கு நிறங்கள் சொல்லப்புகுந்த வேதவாக்கியத்தில் "அஜாமேகாம் லோஹித சுக்ல க்ருஷ்ணாம்" என்று சிவப்பு வெளுப்பு கறுப்பு என்கிற அடைவிலே ஓதியிருக்கையாலே அந்தச்சாயையாலே அருளிச்செய்கிறபடி என்னலாம்.

"கருநீலவண்ணன்" என்றது கலியுகத்தின் நிறத்தைச் சொன்னபடி. [ஒரு வடிவும் ஒருநிறமென்றுணரலாகா] "மீனயாமையுமாய் நரசிங்கமுமாய்க் குறளாய்க் காலாரேனமுமாய்க் கற்கியாம்" இத்யாதிப்படியே தேவமநுஷ்ய திர்யக்ஸ்தாவரயோநிகளிலே பலவகைப்பட்ட வடிவுகளையும் சிவப்பு வெளுப்பு கறுப்பு என்றாற்போலே பலவகைப்பட்ட நிறங்களையும் எம்பெருமான் ஏன்றுகொண்டாலும் இவையெல்லாம் இச்சையினால் பரிக்ரஹிக்கப்பட்டவையத்தனையே யாதலால், அப்படி ஸங்கல்பத்தினால் கொள்ளும் வடிவுகளும் நிறங்களும் ஒருவராலும் எல்லைகாண வொண்ணாதபடி யிருக்கிறானாயிற்று எம்பெருமான். சில வடிவுகளையும் சில நிறங்களையும் ஒருவாறு அவரவர்கள் பாசுரமிட்டுப் பேசித்துதிக்கலாமத்தனையல்லது உள்ளபடி அறியககூடாதவனான எம்பெருமானை யார்தாம் அறியவல்லார்?—நிர்ஹேதுக பகவத்ப்ரஸாதத்தாலே நான் கண்டு பேசினப்போலே எவர் தாம் கண்டு பேசவல்லர்: நான் கண்டாப்போலே காணவல்லாருண்டோ? நான் பேசினப்போலே பேசவல்லாருண்டோ? என்றாராயிற்று.

கட்டுரை—ஏவலொருமை வினைமுற்று; தம்முடைய திருவுள்ளத்தை விளிக்கின்றமை கொள்க. இனி, 'கட்டுரை' என்பதை வினைமுற்றாகக் கொள்ளாமல் பெயர்ச்சொல்லாகக் கொண்டு உரைப்பினுமாம்; அவரவர்கள் ஏதோபேசுவது வெறுங்கட்டுரையே யன்றி உள்ளபடி கண்டு பேசினதன்று என்க. ... 3

இந்திரற்கும்பிரமற்கும்முதல்வன்றன்னை இருநிலங்கால்தீநீர்விண்பூதமைந்தாய்*
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித் திசைநான்குமாய்த்திங்கள்ஞாயிறாகி*
அந்தரத்தில்தேவர்கட்குமறியலாகா அந்தணனை அந்தணர்மாட்டந்திவைத்த
மந்திரத்தை*மந்திரத்தால்மறவாதென்றும் வாழுதியேல்வாழலாம்மடநெஞ்சமே. 4

| | | | |
|---|---|---|---|
| இந்திரற்கும் | இந்திரனுக்கும் | ...ல் | இப்படி ஸகலபதார்த்தங்களிலும் வியாபித்து நிற்குமிடத்தில் |
| பிரமற்கும் | ப்ரஹ்மாவுக்கும் | தவர்க்கும் அறியல் ஆகா | தேவர்களுக்கும் அறியக் கூடாத சுத்த ஸ்வபாவனை |
| முதல்வன் தன்னை | காரணபூதனை | அந்தணர் மாடு | ப்ராமணர்கட்குச் செல்வமான வேதத்தினுடைய முடிவிலே |
| இருநிலம் கால் தீ நீர் விண் பூதம் ஐந்து | பெரிதான பூமி, காற்று அக்நி, ஜலம், ஆகாசம் பஞ்ச பூதங்களுக்கும் நியாமகனாய் | அந்தி வைத்த | விளங்குகிற |
| செம் திறத்த தமிழ் ஓசை ஆகி | செவ்விய தமிழ்ப் பிரபந்தங்களைப் பிரகாசிப்பித்தவனாய் | மந்திரத்தை | பரமமந்த்ரமான ஸர்வேச்வரனை |
| வடசொல் ஆகி | ஸமஸ்க்ருத வேதத்தையும் பிரகாசிப்பித்தவனாய் | மந்திரத்தால் | திருமந்த்ரத்தாலே |
| திசை நான்கும் ஆய் | நான்கு திசைகளிலுமுள்ள எல்லாப்பொருள்களுக்கும் அந்தராத்மாவாய் | மறவாது வாழுதி ஏல் | இடை விடாது அநுபவிப்பாயாகில் |
| திங்கள் ஞாயிறு | சந்திர ஸூரியர்கட்கும் நியாமகனாய் | மட நெஞ்சமே | விதேயமான நெஞ்சே! |
| | | என்றும் வாழலாம் | இவ்வாத்மா உள்ளளவும் உஜ்ஜீவிக்கப்பெறலாம். |

* * *—எம்பெருமானைத் தாம் ஒருவராக அநுபவிப்பதில் த்ருப்தி பிறவாமையாலே உசாத்துணை கூட்டிக்கொள்ள விருப்பமுண்டாயிற்று ஆழ்வார்க்கு; முக்தர்களும் நித்யர்களும் இந்நிலத்தவ ரல்லாமையாலே அவர்கள் துணையாகப் பெற்றதில்லை; இந்நிலத்தவரான ஸம்ஸாரிகள் உண்டியே உடையே உகந்தோடுமவர்களாகையாலே துணையாகமாட்டார்கள்; இனி ஒருபோதும் தம்மை விட்டுப் பிரியாதிருக்கிற தமது திருவுள்ளமொன்றே தமக்குத் துணையாகவற்றுதலால் 'நெஞ்சே! இவ்விஷயத்தை நாம் அநுபவிக்கும்படி பாராய்' என்கிறார்.

இந்திரற்கும் பிரமற்கும் முதல்வன்தன்னை—உலகத்தில், நான்முகக் கடவுளாகிய பிரமனுக்குப் பரத்வம் சங்கிப்பவர்கள் உளரேயன்றி இந்திரனுக்குப் பரத்வம் சங்கிப்பார் ஆருமில்லையே; அப்படியிருக்க 'இந்திரற்கும் முதல்வன்' என்று இங்குச் சொல்லுவானேன்? அப்படிச் சொன்னாலும் பிரமனை முந்துறச் சொல்லிப் பின்னை இந்திரனைச் சொல்லியிருக்கலாமே; முற்படச் சொல்லுவானேன்? என்னில்; ஸாதாரண ஜீவராசிகளில் பரிகணிதனான இந்திரனுக்கு எப்படி எம்பெருமான் காரணபூதனோ, அப்படியே நான்முகனுக்கும் காரணபூதன் என்று தெளிவித்தவாறு. இந்திரன் எப்படி கார்யபூதனோ அப்படியே பிரமனும் கார்யபூதன் என்று காட்டுதற்கே இந்திரனை முற்படச் சொல்லிற்றென்க. ருத்ரனுக்குத் தந்தையான பிரமனை யெடுத்துச்சொன்னபோதே ருத்ரனுக்கும் எம்பெருமானே முதல்வனென்பது வெளிப்படையேயாம். தாழ்ந்தவர்களில் கடையான இந்திரனையும் உயர்ந்தவர்களில் முதல்வனான பிரமனையும் எடுத்துரைத்தபோதே ப்ரத்யாஹாரந்யாயத்தாலே நடுவுள்ள தேவர்களும் சொல்லப்பட்டனராகக் குறையில்லை யென்க.

இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்திலே (அச்சுப் பதிப்பில்)—"இந்திரனுக்கும் பிரமனுக்கும் என்னாதே ரேபாந்தமாக சொல்லிற்று பூஜ்யதாபுத்தியாலன்று; க்ஷேபிக்கிறார்" என்று காணப்படுகிற வாக்யம் ஓலை ஸ்ரீகோசங்களில் காணப்படவில்லை; பொருந்தவும் மாட்டாது; முற்காலத்தில் ஏட்டுப்பிரதிகளை வைத்துக்கொண்டு காலக்ஷேபங்கேட்கும்போது உபதேசிக்கின்ற ஆசார்யர்கள் அருளிச்செய்யும் அர்த்தங்கள் சில ஆவசயகமென்று தோன்றினால் சிஷ்யர்கள் அதை ஏட்டில் அவ்விடத்தில் ஒருமூலையில் குறித்துவைத்துக் கொள்வார்கள்; இவ்வர்த்தங்களிற் பொருத்தமானவையுஞ் சிலவுண்டு, பொருந்தாதவையுஞ் சிலவுண்டு. பிறகு அந்த ஏட்டுப் பிரதிகளைக்கொண்டு அச்சிடப் புகுந்தவர்கள் அவற்றில் மேற் சென்னவிதமாகப் புகுந்த டிப்பணிகளையும் வியாக்கியான கர்த்தாக்களான பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீஸூக்திகளாகவே மயங்கி அச்சிட்டு விடுகிறார்கள். நம்முடைய ஸம்ப்ரதாய க்ரந்தங்கள் பலவற்றிலும் இப்படிம்பட்ட ப்ரக்ஷேபங்கள் பல புகுந்துள்ளன வென்பதை ஏற்கனவே யாம் நிரூபித்துள்ளோம். அவ்வண்ணமாகவே இப்பாட்டின் வியாக்கியானத்திலும் மேற்குறித்த வாக்கியம் கவிகர்களின் கைச்சரக்காக நுழையப்பெற்றதென்றே நினைக்க வேண்டும். அவன் + கு, என்றிருந்தால் இடையில் உகரச்சாரியைவந்தால் 'அவனுக்கு' என்றாம். அதுவராவிடில் 'அவற்கு' என்றாகும்; அதுபோலவே, இந்திரன் + கு, பிரமன் + கு—என்றிருந்தால் (இந்திரனுக்கு) (பிரமனுக்கு) என்றும் புணர்ச்சியாகலாம்; (இந்திரற்கு) (பிரமற்கு) என்றுமாகலாம். இரண்டும் ஏகவசநமேயாகும். "கண்டும் தெளிந்துங் கற்றார் கண்ணற்கு ஆளன்றி யாவரோ" என்றாற்போன்றவிடங்களில் 'கண்ணற்கு' என்றது 'கண்ணனுக்கு' என்றபடியே யன்றி, (கண்ணர் + கு)என்று பிரிவதன்று. அப்படியே இங்கும் "இந்திரற்கு, பிரமற்கு" என்றது (இந்திரனுக்கு) (பிரமனுக்கு) என்று சொன்னபடியேயன்றி இந்திரர், பிரமர் என்று பன்மையாகப்பிரிவதல்ல. ஆகவே 'இந்திரனுக்கும் பிரமனுக்கு மென்னாதே ரேபாந்தமாகச்சொல்லிற்று" என்ப

நற்த இங்கு ப்ரஸக்தியே யில்லை. புணர்ச்சியிலக்கண மறியாத சிலர் சேர்த்திட்ட வாக்கியமாகவேயிருக்கத்தக்கது. இவ்வாக்கியம் சில ஓலைஸ்ரீகோசங்களிலும் காணப்படுமாகில் அப்போது சிரமப்பட்டு ஒருவாறு பொருந்தவிடலாம்; எங்ஙனே என்னில்; பாட்டின் முதலிலுள்ள இரண்டு பதங்களிலும் புணர்ச்சி யிடத்து வல்லின றகரமல்லாமல் இடையின ரகரமே யுள்ளதாகக் கொண்டு, (இந்திரர் + கு) (பிரமர் + கு) என்றுக்கி பஹுவசநபாடம் இருக்கிறதாகக் கருதி முற் குறித்த வாக்கியம் பிறந்ததென்னவேணும். இது ஸ்வரஸமான நிர்வாஹ மன்று.

இருநிலங்கால் தீநீர்விண் பூதமைந்தாய்—எம்பெருமான் பஞ்சபூதங்களாகவே யிருக்கிறானென்றது பஞ்சபூதங்களையும் படைத்தவனென்றபடி.

செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி—தமிழ் வேதத்தையும் ஸமஸ்க்ருத வேதத்தையும் வெளிப்படுத்தினவன் என்றவது, தமிழ் வேதத்தாலும் ஸம்ஸ்க்ருத வேதத்தாலும் பிரதிபாதிக்கப்படுகிறவன் என்றவது பொருள் கொள்க. ஆர்ய பாஷையாகிய ஸமஸ்க்ருத பாஷையை முன்னேசொல்லி ஆரியச்சிதைவான தமிழ்ப் பாஷையைப் பின்னே சொல்ல ப்ராப்தமாயிருக்க, முன்னே சொல்லிற்று என்னென்னில்; தமிழ்வேதமானது வடமொழி வேதம்போலல்லாமல் ஸர்வாதிகாரமாயிருத்தலாலும், "செய்ய தமிழ்மாலைகள் நாம் தெளியவோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றோமே" என்ற வேதாந்த தேசிகன் பாசுரப்படியே தெளிவாகப் பொருள்களை விளக்குதலாலும், ஸ்வரூபத்திற்குச் சேர்ந்தவையும் சேராதவையுமாகிய கண்ட பொருள்களையும் பேசுகிற வடமொழி வேதம் போலல்லாமல் ஸ்வரூபத்திற்குச் சேர்ந்தவற்றையே பேசுதலாலும் இன்னமும் இப்படிப்பட்ட பலவகையான வைலக்ஷண்யத்தை உட்கொண்டு ஸம்ஸ்க்ருத வேதத்தினும் தமிழ்வேதம் மிகச் சிறந்ததென்பது விளங்க முந்துறச் சொல்லிற்றென்க. வடமொழியானது 'முரட்டு ஸம்ஸ்க்ருதம்' என்று பேர்பெற்றிருக்கும்; இஃது அங்ஙனல்லாமல் 'ஈரத்தமிழ்' என்றும் 'செவிக்கினிய செஞ்சொல்' என்றும் சிறப்புறுதல் பற்றிச் 'செந்திறத்த' என விசேஷிக்கப்பட்டது.

திருவாய்மொழியில் (5—7—3) "வந்தருளியென்னெஞ்சிடங் கொண்ட வானவர் கொழுந்தே" என்ற பாசுரத்தின் ஈடுமுப்பத்தாறாயிரத்தில்—

"பட்டர் ஸ்ரீபுஷ்பயாக மணித்தானவாறே நஞ்சீயரைப் பலகாலுமியல் கேட்டருளுவர்; ஒரு கோடையிலே திருவீதியிலே நீரைவிட்டு எழுந்தருளியிருந்து இப்பாட்டை இயல் சொல்லும் என்று ஜீயரை யருளிச்செய்து தாம் இத்தை அநுஸந்தித்திருந்து அநந்தரத்தே தாமும் இப்பாட்டை இயல் சொல்லி 'யம நியமாதிக்ரமத்தாலே த்யேய வஸ்துவை மநநம்பண்ணிப் புறம்புள்ள பராக்கை யறுத்து அநுஸந்திக்கப்புக்காலும் சுக்கான் பரல் போலே யிருக்கக் கடவ நெஞ்சுகள்பதஞ்செய்யும்படி தார்மிகராயிருப்பார் இவை சில ஈரச்சொற்களைப் பொகட்டுப்போவதே!' என்றருளிச் செய்தார்"

என்றுள்ள வாக்கியங்கள் இங்குக் காணத்தக்கன.

இன்னமும், (9—2—8) "எங்கள் கண்முகப்பே" என்ற பாசுரத்தில் "தங்க ளன்பாரத் தமது சொல் வலைத்தால்" என்றவிடத்து ஈட்டின் அரும்பத வுரையில்,

'வங்கிப் புரத்து நம்பி, பெருமாளை ஸேவிக்க வெழுந்தருளினவளவிலே இடைச்சிகளண்டையிலே ஸேவித்தாராய் அதை ஆண்டான் கண்டருளி "ப்ராப்யமான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸமுதாயமிருக்க அவர்களண்டைக்கு எழுந்தருளுவானென்?' என்ன; 'நாம் சற்று விரகராயிருப்போம்; இவர்கள் ஒன்றுமறியாத கொச்சைகளாகையாலே எம்பெருமானுடைய கடாக்ஷம் இவர்களிடத்திலே பள்ளமடையா யிருக்கும் என்று அங்கே யிருந்தேன்

என்ன; 'அவர்கள் சொன்னது எது? தேவர் அருளிச்செய்தது எது?' என்று ஆண்டான் கேட்க; 'பொன்னாலே பூணுநூலிடுவீர்; நூறு பிராயம் புகுவீர்; அழுத்தவிரட்டை யுடுப்பீர் என்கிற விவை அவர்கள் சொன்ன வார்த்தை; 'விஜயஸ்வ, விஜயீபவ' என்று நான் சொன்ன வார்த்தை என்று வங்கிப் புரத்து நம்பி அருளிச்செய்ய, 'அங்குப் போயும்முரட்டு ஸம்ஸ்க்ருதம் விட்டி ரில்லையே; எங்கே யிருந்தாலும் நாம் நாங்களாணும், இங்கே யெழுந்தருளீர்' என்று ஆண்டானருளிச் செய்த வார்த்தை."

என்றதுங் காண்க.

திசைநான்குமாய்—நான்கு திசைகளிலுமுண்டான ஸகல பதார்த்தங்களையும் படைத்தவனாய் என்றபடி. திங்கள் ஞாயிறுமாகி யென்று சந்திர ஸூரியர்களுக்கு அந்தராத்மாவா யிருக்கும்படியைச் சொல்லுகிறது.

[அந்தரத்தில் தேவர்க்குமறியலாகாவந்தணனை] 'அந்தரம்' என்று மேலுலகத்திற்குப் பெயருண்டாகையாலே 'மேலுலகத்திலுள்ள தேவர்கட்கும் அறியலாகா' என்று பொருளுரைக்கலாமாயினும் அப்பொருள் இங்கு விவக்ஷிதமன்று: ப்ருஹதாரண்யக உபநிஷத்தில் "ப்ருதிவ்யாம் திஷ்டந் ப்ருதிவ்யா அந்தர:" என்று தொடங்கிப் பல பர்யாயங்களில் பிரயோகிக்கப்பட்டுள்ள அந்தர சப்தம் வியாபகன் என்னும் பொருளதாகையாலே இவ்விடத்திற்கும் அப்பொருள் ஏற்கும்; அந்தரத்தில்—அந்தரனுமிடத்தில் (அதாவது) ஸ்ருஷ்டிக்கப்பட்ட ஸகல பதார்த்தங்களிலும் வியாபகனாய் உறைந்து நிற்குமிடத்தில் என்றவாறு ஞான சக்திகளால் நிரம்பின தேவர்களுங்கூட எம்பெருமானுடைய ஸர்வவ்யாப்தியை அறியமாட்டார்களென்றதாயிற்று. எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷ விஷயபூதனான ப்ரஹ்லாதாழ்வான் போல்வார் அறியலாமத்தனை யன்றி மற்றையோர் அறியகில்லார் என்க.

[அந்தணனை] அந்தணனென்பது பிராமணனுக்குப்பெயர்; அதைக்கொண்டு 'பரிசுத்தன்' என்கிற பொருளை ஆசாரியர்கள் விவக்ஷிப்பர்கள். திருவாய்மொழியில் "அறனை ஆழிப்படை யந்தணனை" என்றவிடத்தும் இப்படியே. பிரக்ருதத்தில் விவக்ஷிதமான பரிசுத்தியாவது, எம்பெருமான் ஸகல பதார்த்தங்களிலும் வியாபித்திருக்கின்றானென்றால் அவற்றிலுள்ள தோஷங்களாலே ஸ்பர்சிக்கப்பட்டு அபரிசுத்தனாக ஆகிறானோ என்று ஒரு சங்கை தோன்றக்கூடுமாதலால் அதற்கு இடமறச் சொல்லுகிறபடி.

[அந்தணர் மாட்டந்திவைத்த மந்திரத்தை] "மாடு பொன் பக்கஞ் செல்வம்" என்ற நிகண்டின்படி மாடு—செல்வம்; பிராமணர்கட்குச் செல்வம் வேதமென்று நூல்கள் கூறும். "தநம் மதீயம் தவபாதபங்கஜம்" என்கிறபடியே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு எம்பெருமானுடைய திருவடிகளே தனமாயிருப்பதுபோல, ப்ராஹ்மணர்கட்கு வேதமே தனமாயிருக்கும். ஆகவே 'அந்தணர்மாடு' என்று வேதத்தைச் சொல்லிற்றாயிற்று. அதனுடைய அந்தியாவது வேதாந்தம்; வேதாந்தத்திலே புதைத்துவைக்கப்பட்ட மந்திரமாயிருப்பன் எம்பெருமான். ஸஹஸ்ரநாமத்தில் எம்பெருமானுக்கு 'மந்த்ர:' என்றொரு திருநாமமுண்டு; மந்த்ர—வேதமந்திர ரூபமாயிருப்பவர்; மந்திரங்களினால் தெரிவிக்கப்படுகிறவர்" என்றுரைத்தார் சங்கராசாரியர்; தியானம்செய்கிறவர்களைக் காப்பாற்றுகிறவர் என்றுரைத்தருளினர் பட்டர்.

இங்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானவாக்கியம்;—'மந்த்ரம் என்றும் ஸர்வஸ்மாத் பரனென்றும் பர்யாயம் போலே காணும். ஈச்வரனை ரஹஸ்யமென்கிறது—தலைக்கடையையும் புழைக்கடையையு மடைத்துக் கிழிச் சீரையை அவிழ்த்துப் பார்ப்பாரைப்போலே அஷட்கர்ணமாக உத்தேசிக்கவும் அநுஸந்

நிக்கவும் வேண்டி. இப்படி சீரிய சரக்காயிருக்கையாலே.” என்பதாம். ஆக இப்படிப்பட்ட எம்பெருமானை [மடநெஞ்சமே! மந்திரத்தால் வாழுதியேல்] பகவத் விஷயத்தை அநுபவிக்குமிடத்தில் வேதாந்தமுகத்தாலேயாவது இதிஹாஸ புராண முகத்தாலேயாவது அநுபவிக்கப் பாராமல் திருவஷ்டாக்ஷரமாகிற பெரிய திருமந்திரத்தினால் அநுபவிக்கப் பார்த்தாயாகில் என்றபடி.

இடையிடையே விஷயாந்தரங்களிலும் நெஞ்சுசெல்லக்கூடா தென்பதற்காக “மறவாது வாழுதியேல்” என்கிறார் என்று சிலர் சொல்லுவர்; இந்த அந்த நிஷேதத்திற்கு ப்ரஸக்தியில்லை. கேவலம் உபேயமாகவே நினைக்கவேண்டிய எம்பெருமானை உபாயமாகவும் நினைத்தல் அவனை மறந்ததாகவே கருதக்கூடிய தாதலால் அந்த நினைவுவேண்டாவென்கிற தென்க.

‘சிந்தித்தியேல்’ என்றோ ‘நினைத்தியேல்’ என்றோ சொல்லவேண்டுமிடத்தில் ‘வாழுதியேல்’ என்றது. அதுதானே வாழ்ச்சியாயிருக்கவேணு மென்கைக்காக. எம்பெருமானுடைய பரத்வத்திலும் உபாயத்வத்திலும் இழியாதே போக்யதையில் இழிந்து அநுபவித்தால் அதுதானே வாழ்ச்சியாயிருக்குமிறே.

[என்றும் வாழலாம்] ஆத்மா உள்ளவரையிலும் நித்யஸூரிகள் நடுவேயிருந்து வாழலாமென்றதாயிற்று. ... ... ... ... ... 4

ஒண்மிதியிற்புனலுருவியொருகால்நிற்ப ஒருகாலுங்காமருசீரவுணனுள்ளத்து*
எண்மதியுங்கடந்தண்டமீதுபோகி இருவிசும்பினூடுபோயெழுந்து*மேலைத்
தண்மதியும்கதிரவனும்தவிரவோடித் தாரகையின்புறந்தடவியப்பால்மிக்கு*
மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை மலர்புரையும்திருவடியேவணங்கினேனே. 5

ஒருகால் — ஒருதிருவடியானது
ஒண் மிதியில் — அழகாக ஓரடியிட்ட மாத்திரத்தில்
புனல் உருவி நிற்ப — ஆவரண ஜலத்தளவும் ஊடுருவிச்சென்று (அப்புறம் போக இடம் பெறுமையாலே) நிற்க,
ஒரு காலும் — மற்றொரு திருவடி
காமரு சீர் அவுணன் — நல்லபாக்யசாலியான மஹாபலியானவன்
உள்ளத்து எண் மதியும் கடந்து — தன்னெஞ்சிலே நினைத்திருந்த நினைவைக்கடந்து
அண்டம் மீது போகி — அண்டபித்திக்கு மப்பால் செல்லக் கிளம்பி
எழுந்து
இரு விசும்பின் ஊடுபோய் — பெரிய ஆகாசத்தையும் ஊடுருவிச்சென்று
கதிரவனும் — ஸூரியமண்டலத்தையும்
மேலை தண் மதியும் — அதற்கும் மேற்பட்ட குளிர்ந்த சந்திரமண்டலத்தையும்
தவிர ஓடி — கடந்து சென்று
தாரகையின் புறம் தடவி — (அதற்கும் மேற்பட்ட) நக்ஷத்ரமண்டலத்தையும் கடந்து
அப்பால் மிக்கு — அவ்வருகே பிரமலோகத்தளவும் வியாபித்து நிற்க,
மண் முழுதும் — பூலோகம் முதலான பதினான்கு லோகங்களையும்
அகப்படுத்து நின்ற — ஸ்வாதீனப்படுத்திக் கொண்ட
எந்தை — எம்பெருமானுடைய
மலர் புரையும் திரு அடியே — தாமரைமலரையொத்த திருவடிகளையே
வணங்கினேன் — வணங்கப்பெற்றேன்.

* * *—கீழ்ப்பாட்டில் “மந்திரத்தால் வாழுதியேல்” என்று திருவஷ்டாக்ஷர மஹாமந்த்ரத்தை ஸ்மரித்தார்; அதில் நாராயண நாமத்தின் பொருளான வ்யாபகத்வத்தை த்ரிவிக்ரமாவதாரத்திலே யிட்டு அநுபவிக்கிற பாசுரம் இது.

[ஒருகால் ஒண்மிதியில் புனலுருவிநிற்ப] ஒரு திருவடியானது பூமியளவாதல் ஸப்த ஸாகரங்களளவாதல் ஸப்தத்வீபங்களளவாதல் சக்ரவாள கிரியளவாதல் மஹா

ஜலத்தளவாதல் அண்ட கடாஹத்தளவாதல் செல்லுகையன்றியே ஆவரண ஜலத்தளவுஞ் சென்று நின்றதாம். ரக்ஷ்யவர்க்கமெல்லாம் அண்டகடாஹத்தினுள்ளே யன்றோ வுள்ளது, அதற்குமப்பால் செல்லவேண்டுவானென் என்னில்; ரக்ஷகனுடைய ரக்ஷணப் பாரிப்பு ரக்ஷ்யவஸ்துவினளவன்று, அதனிலும் விஞ்சியது என்று காட்டுகிறபடி. "சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிற் பெரும் பாழேயோ" என்று தொடங்கித் தத்வத்ரயத்தையுஞ் சொல்லி "சூழ்ந்ததனிற் பெரிய என்னவா" என்று அதினிலும் விஞ்சினதாகவன்றோ ஆழ்வாருடைய ஆசையளவு சொல்லப்பட்டது; எம்பெருமானுடைய வாத்ஸல்யம் இதனிலுங் குறைந்துவிடுமோ? உலகமுள்ள வளவையும் மீறிச் செல்லுகின்றது ரக்ஷகனை எம்பெருமானுடைய பாரிப்பு. ஆகவே அண்ட கடாஹத்துக்குமப்பால் ஆவரண ஜலத்தளவும் ஒரு திருவடி ஊடுருவிச் சென்றதென்க. ஆக, பூமியை யளந்த திருவடியை அநுபவித்துப் பேசினராய், இனி மேலுலகங்களை யளந்த மற்றொரு திருவடியின் செயலைப் பேசுகிறார் ஒருகாலும் என்று தொடங்கி. 'திருவடி' என்று கௌரவித்துச் சொல்லவேண்டியிருக்க 'கால்' என்கிறாரே, இதுவென்? என்னில்; முதற்பாட்டில் "தளிர்புரையுந் திருவடி என்தலைமேலவே" என்றும், இப்பாட்டிலும் "மலர்புரையுந் திருவடியே வணங்கினேனே" என்றும் அருளிச்செய்கிற ஆழ்வார் இங்குக் கால் என்றது வெறுமனன்று; ஒரு கருத்துத்தோன்றவே இப்படியருளிச்செய்தது; அதாவது, ஸம்ஸாரிகளின் அபிப்பிராயத்தாலே சொல்லுகிறபடி; உலகளந்தகாலத்தில் திருவடி எல்லார்தலையிலும் பட்டபோது ஸம்ஸாரிகள் 'ஒருவனுடைய கால் நம்தலையிலே பட்டதே!' என்று வெறுத்திருந்ததத்தனையொழிய "கோலமாமென் சென்னிக்கு உன்கமலமன்ன குரைகழலே" என்றாற்போலே உகந்து கொண்டார்களில்லையே; அன்னவரது கருத்தாலே கால் என்றது.

[காமருசீரவுணனுள்ளத் தெண்மதியுங் கடந்து] வாமனன் 'மூவடி நிலம்தா' என்று கேட்டவாறே 'மூவடிநிலந்தானே இவன் கேட்பது, அதைக்கொடுப்போம்; அது தவிர மற்ற நிலமெல்லாம் நம்மதுதானே' என்றிருந்தான் மாவலி; மூவடிமண் இரந்துபெற்ற வாமனன் பூமியையடங்கலும் அளந்தவாறே 'பூமி போனாலும் மேலுலகமெல்லாம் நம்மதுதானே' என்றிருந்தான்; மேலுலகத்தையுமளந்தவாறே, எண்டிசையுங் கீழும்மேலும் முற்றவுமிழந்தோமே! என்று வருந்தினையிற்று. இதுவே 'அவுணனுள்ளத் தெண்மதியுங்கடந்து' என்றதன் கருத்து. மஹாபலியை ஜ்ஞாதாக்களெல்லாரும் அஹங்காரியென்றும் பகவத் விபூதியைக் கொள்ளை கொண்டவனென்றும் நிந்தியாநிற்க, இவர் "காமருசீரவுணன்" என்று புகழ்ந்து பேசுவானென்னென்னில்; அவ்வவதாரத்திற்குப் பிற்பட்டுப்போன நம்மைப்போலன்றியே ஸ்ரீவாமநனுடைய வடிவழகையும் சீலத்தையும் கண்ணாலே காணப்பெற்றவனன்றோ மாவலி; இவனைப்போலே பாக்யசாலியுண்டோ? என்னுங்கருத்தாலே அருளிச்செய்கிறபடி. இங்கே வியாக்கியான வாக்கியங்காண்மின்;—"நானும் அடியேனென்றிருக்கிறதை விட்டு பகவத் விபூதியை அபஹரித்து ஔதார்யத்தை யேறிட்டுக்கொண்டு யஜ்ஞத்திலே இழியப்பெற்றிலேனே' என்கிறார்" என்பதாம். ஐயோ! நான் காளியநாகமாகப் பிறவாதொழிந்தேனே; பிறந்திருந்தேனாகில் கண்ணபிரானுடைய திருவடியைச் சென்னிமேற் கொண்டிருப்பேனே என்று ஸுந்தரபாஹுஸ்தவத்தில் ஆழ்வான் அருளிச்செய்ததை நினைப்பது.

[அண்டமீதுபோகி இருவிசும்பினூடுபோயெழுந்து] 'போகி' என்றதை 'போக' என்னும் எச்சத்திரிபாகக் கொண்டு 'எழுந்து' என்றதை அதனோடு அந்வயித்துக் கொள்ளவேணும். அண்டத்திற்கு அப்பால்போவதாகக் கிளம்பி ஆகாசத்தின் மேலேபோய் என்றவாறு. இவ்விடத்தில் "இருவிசும்பினூடுபோய்" என்றவளவே போதுமே, "அண்டமீதுபோகி யெழுந்து" என்பது வேணுமோ? என்

னில்; "ஸ்ரீவாமனனுடைய விஜயத்தில் தமக்குண்டான ஆதராதிசயத்தாலே அளக்கும் ப்ரதேசத்துக்குக் கொண்டைக்கோல் நாட்டுகிருர்" என்பர் பெரிய வாச்சான் பிள்ளை.

மேலே அதிக்ரமித்துச்சென்ற விடங்களைச் சொல்லுகிறது மேலைத்தண்மதியும் என்று தொடங்கி. அந்தரிக்ஷத்துக்கு மேலெல்லையாய் ஸ்வர்க்கத்துக்குக் கீழெல்லையாயிருக்கும் ஆதித்யபதம்; அதற்குமேலே நூறாயிரக்காதவழியுண்டு சந்திரபதம்; அதுக்குமேலே நூறாயிரக் காதவழியுண்டு நக்ஷத்ரபதம். அதற்கு மேலும் ஓங்கிச்சென்றதாயிற்று திருவடி.

ஸூர்யமண்டலங் கடந்தபின் சந்திரமண்டலமாயிருக்க, இங்குத் "தண்மதியுங் கதிரவனும்" என்று சந்திரமண்டலத்தை முந்துறச் சொல்லுவானென்? எனில்; அஹங்காரிகளாய் மிகவும் விமுகராயிருக்கும் ஸம்ஸாரிகளின் தலையிலே ஸுகுமாரமான திருவடியை வைக்கையாலே அத்திருவடிக்குண்டான வெப்பந்தீர சைத்யோபசாரம் பண்ணவேணுமென்று திருவுள்ளம்பற்றி முந்துறச் சந்திர மண்டலத்தைப் பேசுகிருரென்று ரஸோக்தியாக அருளிச் செய்வர் பெரியவாச்சான் பிள்ளை. ... ... ... ... ... ... 5

அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்தன் அஞ்சிறைப்புள்தனிப்பாகன்அவுணர்க்கென்றும்*
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன் தானுகந்தவூரெல்லாம்தன்தாள்பாடி*
நிலம்பரந்துவருங்கலுழிப்பெண்ணையீர்த்த நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்தி*
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப் பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே! 6

| | | | |
|---|---|---|---|
| அலம் புரிந்த | போதும் போதும் என்று சொல்லும்படி கொடுக்க வல்ல | நிலம் பரந்து வரும் கலுழி | பூமிமுழுதும் வியாபித்து வருகின்ற பெரு வெள்ளத்தையுடைய |
| நெடுந்தடக்கை | நீண்ட பெரிய திருக்கைகளையுடையனும் | பெண்ணை | பெண்ணையாருனது |
| அமரர் வேந்தன் | நித்யஸூரிகளுக்குத் [illegible] வனும் | ஈர்த்த | (வெள்ளத்தில்) இழுத்துக் கொண்டு வருகிற |
| அம் சிறை புள் தனிப்பாகன் | அழகிய சிறகையுடைய பெரிய திருவடிக்குத் தனிப் பாகனும் | நெடு வேய்கள் படு | பெரிய மூங்கில்களினின்றும் [illegible]ண்டாகிற |
| அவுணர்க்கு | | முத்தம் | மு[illegible] |
| என்றும் | எக்காலத்தும் | உந்த | வயல்களிலே கொண்டுதள்ள |
| சலம் புரிந்து | சீற்றங்கொண்டிருந்து | உந்தி | (உழவர்களாலும் தங்கள் பயிர்க்குக் களையென்று) தள்ளப்பட்டு |
| அங்கு | அவர்கள் விஷயத்திலே | புலம் பரந்து | கழனிகளெங்கும் பரவி |
| அருள் இல்லா தன்மையாளன் தான் | [illegible]ரக்கமற்றிருக்கையாகிற தன்மையை யுடையனை எம்பெருமான் | பொன் விளைக்கும் | பொன்னை விளைக்குமிடமாயும் |
| உகந்த | திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கிற | பொய்கை வேலி | நீர்நிலைகளைச் சூழவுமுடையதாயுமுள்ள |
| எல்லாம் | திருப்பதிகளிலெல்லாம் | பூ கோவலூர் | திருக்கோவலூரை |
| தன் தாள் பாடி | அவனுடைய திருவடிகளைப் பாடி, | தொழுதும் | ஸேவிப்போம்; |
| | | நெஞ்சே போது | நெஞ்சே! வா. |

*** -கீழ்ப்பாட்டில் த்ரிவிக்ரமாவதார வரலாற்றைப் பேசியநுபவித்தார்; அது என்றைக்கோ கழிந்த அவதாரமிறே; அதற்குத் தாம் பிற்பாடுகையாலே கண்[illegible]பெற்றிலோமே! என்று வருந்தியிருக்க, இவருடைய வருத்தத்தைக் கண்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! அவதாரத்துக்குப் பிற்பட்டவர்

களையும் அநுபவிப்பிக்கைக்காகவன்றோ நாம் அந்தச் செவ்வியோடே திருக்கோவலூர் ஸந்நிதிபண்ணி யிருப்பது; அங்கே வந்து குறையற அநுபவிக்கலாமே' என்று, உலகளந்த திருக்கோலமாக ஸேவைஸாதிக்கு மிடமான திருக்கோவலூரைக் காட்டிக்கொடுக்க, 'நெஞ்சே! நமக்கு வாய்த்தது; அநுபவிக்கப் போகலாம், வா' என்றழைக்கிறார். வழிபோவார்க்கு வாய்ப்பாடல் வேண்டுமாகையாலே எம்பெருமானுகந்தருளின நிலங்களாகிய திருப்பதிகளை யெல்லாம் பாடிக்கொண்டே போகவேணுமென்கிறார் முன்னடிகளில்.

திவ்யதேசங்கள் எப்படிப்பட்டவை? எம்பெருமான் திருவுள்ள முவந்து எழுந்தருளியிருக்கப் பெற்றவை. அவ்வெம்பெருமானுக்கு நான்கு விசேஷணங்கள் இடப்பட்டிருக்கின்றன. [அலம்புரிந்த நெடுந்தடக்கை] 'அலம்' என்பது வடசொல்; போதும் என்னும்பொருளதான இடைச்சொல். யாசகர்கள் 'போதும் போதும்' என்று சொல்லும்படியாக அவர்கட்கு அபாரமாகக் கொடுக்கவல்ல பெரிய கையையுடையவன் எம்பெருமான். தன்னிடத்தில் தானம்பெற்றபின் வேறொருவாசலிலே சென்று துவளவேண்டாதபடி பர்யாப்தமாகக் கொடுப்பவனென்க. புரிதல்— கொடுத்தல். இனி, 'புரிதல்' என்று மீளுகைக்கும் பேராதலால் அப்பொருளும் இங்குக் கொள்ளக்கூடியதே; பெறுமவர்கள் 'போதும்' என்றவாறே கொடுப்பதினின்று மீண்டாலும் * நெடுந்தடக்கையாகவே யிருக்கும்; உழக்கிலே பதக்கை யடக்க வொண்ணாமையாலே மீளுமித்தனை; இவன்றன்னுடைய ஔதார்யத்தைப் பார்த்தால் யாசர்களின் மனோரதம் சிறிதாய் இவனுடைய பாரிப்பே விஞ்சியிருக்குமென்பது கருத்து. [நெடுந் தடக்கை.] நெடு, தட என்ற இரண்டு விசேஷணங்களுக்குக் கருத்து என்னென்னில்; யாசகர்களிருந்த விடத்தளவுஞ் செல்ல நீண்ட கை என்பது நெடு என்றதன் கருத்து; திருக்கையின் நிழலிலே உலகமெல்லாம் ஒதுங்கினாலும் அவகாசங்கொள்ளும்படியான பெருமை 'தட' என்றதனாற் சொல்லிற்றாமென்க.

அலம்புரிந்த என்பதற்கு வேறொருவகையாகவும் பொருள் கொள்ளலாம்; ஹலம் என்ற வடசொல் கலப்பையென்று பொருள்படும்; அஃது அலமெனத் திரியும்; கலப்பையைத் தரித்த திருக்கையையுடையவன் என்னலாம். இதனால் பலராமாவதாரத்தைப் பேசினபடி. பலராமனுக்குக் கலப்பையும் உலக்கையும் முக்கிய ஆயுதங்கள். அதனால் அவ்விராமனுக்கு 'ஹலாயுதன், ஹலீ, முஸலீ, என்ற திருநாமங்கள் வழங்கும். ஒருகாலத்தில் பலராமர், பக்கத்தில் ஓடுகின்ற யமுநாநதியை நோக்கி 'ஓ யமுனாய்! நீ இங்கே வா. நான் நீராடவேண்டும்' என்றருளிச்செய்ய, அவ்யமுனை அவர் மதுபானமயக்கத்தினால் இப்படிச்சொல்லுகின்றாரென்று அவரது வார்த்தையை அவமதித்து அங்கே வரவில்லையாக, அது கண்டு அவர் வெகுண்டு தமது கலப்பையைக் கையிலெடுத்து அதன் நுனியாலே அந்நதியை இழுக்க, அந்நதி தான் போகும்வழியைவிட்டு அவரெழுந்தருளி யிருக்கும் வனத்தில் வந்து பெருகியதன்றியும், தன்னுடைய சரீரத்தோடு அவர்க்கெதிரில் வந்து பயத்தினாலே மிக நடுநடுங்கி விசேஷமாக வேண்டிக் கொள்ள, பின்பு அந்நதியை க்ஷமித்து அதில் நீராடினரென்றும்;—ஒருகால் ஹஸ்திநா பட்டணத்தில் துரியோதனன் தன் மகளான லக்ஷணைக்கு ஸ்வயம்வரங் கோடிக்க, அக்கன்னிகையை ஸ்ரீக்ருஷ்ணனது மஹிஷிகளுளொருத்தியாகிய ஜாம்பவதியின் குமாரனான ஸாம்பனென்பவன் பலாத்காரத்தால் தூக்கிக்கொண்டு போக, துரியோதனாதியர் எதிர்த்து யுத்தஞ்செய்து அவனைப்பிடித்துக் காவலிலிட்டு வைக்க, அச்செய்திகேட்ட பலராமர் தான் அவனைவிடுவித்துவருவதாய்ச் சொல்லிப் புறப்பட்டு ஹஸ்திநாபுரத்திற் கெழுந்தருளி 'நம்முடைய ஸாம்பனை விடவேண்டும்' என்றருளிச்செய்ய, அக்கௌரவர் யாவரும் 'துஷ்டகாரியஞ் செய்த அவனை நாங்கள் விடமாட்டோம்' என்று ஒரேகட்டுப்பாடுடையவர்களாய் இகழ்ந்துபேச,

பலராமர் அளவுகடந்த கோபங்கொண்டு எழுந்திருந்து 'குரு குலத்தார்வாஸஞ் செய்து கொண்டிருக்கின்ற இந்நகரத்தைக் கங்கையிற் கவிழ்த்து விட்டுப் பூமியிற் கௌரவப் பூண்டில்லாமற் செய்து விடுகிறேன் பாருங்கள்' என்று சொல்லி, தமது கலப்பையை மதிலின்மேலுள்ள நாஞ்சிலென்னும் உறுப்பில்மாட்டியிழுக்க அதனால் அப்பட்டணம் முழுவதும் அசைந்துசாயவே, அது கண்ட கௌரவரெல்லாரும் மனங்கலங்கி ஸாம்பனை லக்ஷணையோடும் பல சிறப்புக்களோடுங் கொண்டுவந்து ஸமர்ப்பித்து வணங்கிவேண்ட, இராமபிரான் அவ்வளவோடு கலப்பையை வாங்கியருளினன் என்றும் உள்ள பல கதைகளினால் ஸ்ரீ ராமனது கலப்பையின் ஆற்றல் அறியத்தக்கது. பலராமாவதாரமும் ஸ்ரீ தசரத ராமாவதாரம் போல் ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் முக்ய ப்ராதுர்ப்பாவமாதல் உணரத் தக்கது.

அமரர்வேந்தன்—கீழ் 'அலம்புரிந்த நெடுந் தடக்கை' என்ற அடைமொழியினாற் சொல்லப்பட்ட ஔதார்யத்திற்கு இலக்கானவர்களிலே சிலரான நித்ய ஸூரிகளை இங்கு அமரர் என்கிறது. நித்யஸூரிகளை அடிமைகொள்வதாக முடி கவித்திருப்பவன் என்றவாறு.

[அஞ்சிறைப்புள்தனிப்பாகன்.] கீழ் 'அமரர் வேந்தன்' என்று நித்யஸூரிகளை அடிமைகொள்பவனென்று பொதுவாகச் சொல்லிற்று; அவர்களை அடிமை கொள்ளும்படிக்கு த்ருஷ்டாந்தமாக ஒரு வ்யக்தியைச் சிறப்பாக எடுத்துப்பேசுகிறார். அழகிய சிறகையுடையனான பெரிய திருவடிக்கு அத்விதீயனான பாகன்; கருடவாஹனன் என்றபடி. எம்பெருமான் தன்மீதேறி உலாவும்போது உண்டாகும் ஆயாஸத்திற்குத் திருவாலவட்டம் பணிமாறினாற் போலே இரண்டு சிறகாலும் ஆச்வாஸம் செய்கிறபடியைத் திருவுள்ளம் பற்றி 'அஞ்சிறை' என்று புள்ளுக்கு அடைமொழி கொடுக்கப்பட்டது. அடியார்கள் இருக்குமிடங்களிலே எம்பெருமானைக் கொண்டு சேர்ப்பதற்குச் சிறகுகளே கருவியாதலால் அவற்றைச் சிறப்பித்துக் கூறுகிறபடியுமாம்.

[அவுணர்க்கென்றும் சலம்புரிந்து அங்கருளில்லாத் தன்மையாளன்] ஸ்ரீ ராம க்ருஷ்ணாதி ரூபேண திருவவதரித்து விரோதிகளைக் களைந்தமை சொல்லுகிறது. 'அவுணர்' என்றது அசுரர் என்றபடி. இது அஸுரஜாதியைச் சொல்லுகிறதன்று. அஹங்கார மமகாரங்களோடு கூடினவர்களாய் பகவத்பக்தியிலே பகை யுள்ளவர்கள் ஆஸுரப்ரக்ருதிகளென்று சொல்லப்படுவார்களாதலால் அவர்களையே இங்கு அவுணரென்கிறது. ப்ரஹ்லாதாழ்வான் அஸுரயோனியிற் பிறந்தவனாயிருக்கச் செய்தேயும் "உபமாந மசேஷாணாம் ஸாதூநாம் யஸ் ஸதாபவத்" என்னும்படி ஸாதுக்களுக்கு உபமாநமா யிருந்தான். விபீஷணாழ்வான் ராக்ஷஸயோநியிற் பிறந்திருக்கச் செய்தேயும் "விபீஷணஸ் து தர்மாத்மா" என்னும்படியாயிருந்தான். ஜயந்தன் [காகாஸுரன்] தேவயோநியாயிருக்கச் செய்தேயும் ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்கானான். ஆக இப்படிகளை ஆராயுமிடத்து அஸுரத்வமும் தேவத்வமும் ஜாதிபரமன்று; ஸ்வபாவபரம். அதாவது, "விஷ்ணுபக்திபரோ தேவோ விபரீதஸ் ததாஸுர" என்று ஸ்ரீவிஷ்ணு தர்மத்திலே சொல்லிற்று. "த்வௌ பூதஸர்க்கௌ லோகேஸ்மிந் தைவ ஆஸுர ஏவ ச—தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா." என்று பகவத்கீதையிலே சொல்லிற்று. எம்பெருமானுடைய ஸ்வரூபரூப குணவிபூதிகளில் அன்புள்ளவர்கள் தேவரெனப்படுவர்கள்; அவற்றில் பொறாமையுள்ளவர்கள் அசுரரெனப்படுவர்கள். "நண்ணாவசுரர் நலிவெய்த நல்லவமரர் பொலிவெய்த" என்பன போன்றவிடங்களிலும் இவ்வகைப் பொருள் அநுஸந்திக்கப்பட்டமை காண்க. ஆக இப்படிப்பட்ட ஆஸுரப்ரக்ருதிகள் விஷயத்திலே ஒருநாளும் அநுக்ரஹமின்றி நிக்ரஹமே செய்து போருமியல்வினன் என்றதாயிற்று.

'ச்சலம்' என்ற வடசொல் சலமெனத் திரிந்தது.

இப்படிப்பட்ட எம்பெருமான் திருவுள்ளமுவந்து எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளையெல்லாம் பாடிக்கொண்டே திருக்கோவலூர் தொழப் போவோமென்கிறார். மேல் ஒன்றரையடிகளால் திருக்கோவலூரை விசேஷிக்கிறார். [நிலப்பரந்து கடுங்கலும் இத்யாதி.] பெண்ணையாறு கிற ஒரு பெண்மணி திருக் கோவலூராயனுராகிற புருஷோத்தமனை அநுபவிக்கப் போகிறாளாகையாலே அளவற்ற ஆதரந்தோற்றப் பேராரவாரத்தோடே பெருகுகிறபடி. ஸந்தோஷ மிகுதியாலே கரைமீதே வழிந்து குடியிருப்புக்களை யழித்து, கரையில் நிற்கிற வேய்களை வேர்ப்பற்றிலே குத்தியெடுத்து இழுத்துக்கொண்டுவர, அந்த வேய்கள் உடைந்து முத்துக்களை ப்ரஸவிக்க, அவற்றைப் பெண்ணையாறு வயல்களிலே கொண்டுதள்ள, பயிரிடுமவர்கள் அவை தங்கள் பயிர்க்குக் களைகளென்று தள்ள, அவர்களாலும் தடைசெய்ய வொண்ணாதபடி வயல்களிலெங்கும் பரந்தனவாம் முத்துக்கள்; இப்படிப்பட்ட வயல்களிலே பொன்போன்ற நெற்கள் விளையப் பெற்ற பூங்கோவலூரைத் தொழுவோம், நெஞ்சே! புறப்படு என்றாராயிற்று. .... 6

வற்புடைய வரைநெடுந்தோள்மன்னர்மாள வடிவாயமழுவேந்தியுலகமாண்டு*
வெற்புடையநெடுங்கடலுள்தனிவேலுய்த்த வேள்முதலாவென்றானூர்*விந்தைமேய
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட கடிபொழில்சூழ்நெடுமறுகிற்கமலவேலி*
பொற்புடையமலையரையன்பணியநின்ற பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே! 7

| | | | |
|---|---|---|---|
| வற்பு உடைய | மிடுக்குடைய | ஊர் | எழுந்தருளியிருக்கு மிடமாய், |
| வரை நெடு தோள் | மலைபோன்று உயர்ந்த தோள்களையுடையரான | விந்தை மேய | (தவம்புரிவதற்காக) விந்திய மலையில் வாழ்ந்தவளாய் |
| மன்னர் | (கார்த்த வீரியார்ஜுனன் முதலான) அரசர்கள் | கற்பு உடைய | அறிவிற்சிறந்தவளாய் |
| மாள | முடியும்படி | மடம் | பற்றினது விடாமையாகிற குணமுடையளான |
| வடிவு ஆய | அழகியதான | கன்னி | துர்க்கையானவள் |
| மழு | கோடாலிப்படையை | காவல் பூண்ட | காவல்செய்யப்பெற்றதாய் |
| ஏந்தி | தரித்து (பரசுராமனாய்த் திருவவதரித்தும்), | கடி பொழில் சூழ் | பரிமளத்தையுடைய சோலைகளாலே சூழப்பட்டதாய் |
| உலகம் ஆண்டு | (ஸ்ரீராமபிரானாய்) உலகங் திருக்குணங்களா லீடுபடுத்தியும | நெடு மறுகில் | விசாலமான திருவீதிகளையுடைத்தாய் |
| வெற்பு உடைய | மலையை உள்ளேயுடைய | கமலம் வேலி | தாமரைத் தடாகங்களைச் சுற்றிலுமுடைத்தாய் |
| நெடு கடலுள் | பெரிய கடலினுள்ளே | பொற்பு உடைய அரையன் பணிய நின்ற | பராக்ரமசாலிகளான மலயமானவர்களாலே ஆச்ரயிக்கப் பட்டதான |
| தனி வேல் | ஒப்பற்ற வேற்படையை | | |
| உய்த்த | செலுத்தின | | |
| வேள் முதலா | ஸுப்ரஹ்மண்யன் முதலான தேவதைகளை | பூங் கோவலூர் | திருக்கோவலூரை |
| வென்றான் | (பாணாஸுரயுத்தத்தில்) தோல்வியடையச் செய்தும் போந்த எம்பெருமான் | நெஞ்சே தொழுதும் | மனமே! தொழுவோம்; |
| | | போது | வா. |

* * *—கீழ்ப்பாட்டில் "பூங்கோவலூர் தொழுதும் போதுநெஞ்சே!" என்று திருக்கோவலூரைத் தொழுகைக்காகத் திருவுள்ளத்தை யழைத்தார்; அவ்விடத்து எம்பெருமான் வஸிஷ்டசண்டாள விபாகமின்றி எல்லார் தலைகளிலும் திருவடியை வைத்த ஸர்வஸ்வதானத்தோடே வந்து நிற்கையாலே அதை அநுஸந்தித்து அநுபவத்தை மறந்து அஞ்சத்தொடங்கினார். அஸ்தானத்திலும் பய சங்கை பண்ணுகையன்றோ ஆழ்வார்களின் பணி. எம்பெருமானுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதி குணங்களை அநுஸந்தித்தவாறே இவ்விலக்ஷண வஸ்துவுக்கு

ரன்ன அவத்யம் வருகிறதோவென்று வயிறுபிடிக்க வேண்டும்படியாயிற்று. ஸ்ரீவிபீஷணாழ்வான் லங்கையை வந்து சரணம்புகாநிற்கச் செய்தேயும் ஸுக்ரீவ மஹாராஜர் தம்முடைய கனத்த ப்ரேமத்தினாலே கலங்கி அபாயசங்கை பண்ணின போது பெருமாள் தம் தோள்வலியைக் காட்டி அச்சம் தவிர்த்தாப்போலே பிர க்ருதத்திலும் திருக்கோவலூராயனார் தம் மிடுக்கையும் காவலுறைப்பையும் தேசத்தி னுடைய அரணுடைமையையும் ஆழ்வார்க்குக் காட்டிக்கொடுக்க, அவற்றையெல் லாங்கண்டு தெளிந்த ஆழ்வார் அச்சங்கெட்டு "பூங்கோவலூர் தொழுதும்போது நெஞ்சே!" என்று திருவுள்ளத்தைத் தட்டி யெழுப்புகிறார்.

"வற்புடைய வரை நெடுந்தோள் மன்னர்மாள வடிவாய மழுவேந்தி" என்ற வளவும் பரசுராமாவதார பரம். "உலகமாண்டு" என்றது ஸ்ரீ ராமாவதார பரம். "வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த வேள்முதலா வென்றான்" என்றது ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் பாணாஸுர விஜயபரம். இவை ஆழ்வாருடைய அச்சங் கெடுகைக்கு எம்பெருமான் காட்டித் தந்த மிடுக்குக்களாம்.

வடிவாய மழு—'வடிவு ஆய மழு' என்று பிரித்தால் அழகியதான மழு என்று பொருள்படும். 'வடி வாய மழு' என்று பிரித்தால் கூர்மையான வாயையுடைய மழு என்று பொருள்படும்.

உலகமாண்டு—ஸ்ரீ ராமபிரானாய்த் திருவவதரித்துத் திருக்குணங்களாலே உலக முழுவதையும் ஈடுபடுத்தி ஆண்டபடியைச் சொல்லுகிறது இது.

வெற்புடைய நெடுங்கடலுள் தனிவேலுய்த்த வேள்முதலா வென்றானூர்—முற்காலத்தில் மலைகளெல்லாம் இறகுகளுடன் கூடிப்பறந்து ஆங்காங்கு வீழ்ந்து நகரங்களையும் கிராமங்களையும் அழித்துக்கொண்டு திரியுங்கால் தேவேந்திரன் தனது வஜ்ராயுதத் தினால் அவற்றின் இறகுகளை அறுத்தொழிக்க, மைநாகமலை அவனுக்குத் தப்பித் தெரியாதபடி கடலினுள்ளே கிடக்க, தேவஸேநாபதியான ஸுப்ரஹ்மண்யன் அதனையறிந்து தனது வேற்படையைச்செலுத்தி அம்மலையை நலிந்த வரலாறு இங்கு அறியத்தக்கது. அப்படிப்பட்ட மஹாவீரனை ஸுப்ரஹ்மண்யன் முதலா னோரைப் பாணாஸுரயுத்தத்தினன்று பங்கப்படுத்தினமை சொல்லிற்றாயிற்று.

'வேள்' என்று காமனுக்குப் பேராயிருக்க, ஸுப்ரஹ்மண்யனை வேள் என் றது உவமையாகு பெயர். மன்மதனைப்போல் அழகிற் சிறந்தவனென்க. நம்மாழ் வார் 'ஆழியெழ' என்னும் திருவாய்மொழியிலே பாணாஸுர விஜயவ்ருத்தாந் தத்தைப் பேசும்போது "நேர்சரிந்தான் கொடிக் கோழி கொண்டான்" என்று ஸுப்ரஹ்மண்யன் தோற்றுப் போனதை முந்துற அருளிச்செய்கையாலே இவ் வாழ்வாரும் அதனைப் பின்பற்றி "வேள்முதலாவென்றான்" என்றாரென்க. "கார்த்திகை யானுங் கரிமுகத்தானுங் கனலும் முக்கண்மூர்த்தியும் மோடியும் வெப்பும் முதுகிட்டு" என்ற இராமாநுச நூற்றந்தாதியுங் காண்க.

இனி, திருக்கோவலூர்த் திருப்பதியின் காவலுறைப்பை அருளிச்செய்கிறார் விந்தைமேய வென்று தொடங்கி. துர்க்கையானவள் இந்த க்ஷேத்திரத்தைக் காவல் செய்து வர்த்திக்கிறாளென்பது இதிஹாஸம். பெரிய திருமொழியிலும் இவ்வூர்த் திருப்பதிகத்தில் "வியன்கலை யெண்டோளினாள் விளங்கு செல்வச் செறியார்ந்த மணிமாடந் திகழ்ந்து தோன்றுந் திருக்கோவலூரதனுட் கண்டேனே" என்றரு ளிச்செய்தது முணர்க. இந்தத் துர்க்கையானவள் இவ்விடத்துக் காவல்பூண்கைக் குறுப்பாக விந்த்யாடவியிலே யிருந்து தவம் புரிந்தாளென்பதுபற்றி 'விந்தைமேய' எனப்பட்டது. 'விந்தியம்' என்பது விந்தையென மருவிற்று.

கடிபொழில்சூழ் நெடுமறுகில் கமலவேலி—எங்குப் பார்த்தாலும் நறுமணம் மிக்க சோலையாயிருக்கும்; திருவீதிகளோ அகலநீளங்களிற் குறையற்றிருக்கும்; தாமரைத்தடங்களும் ஊர்க்கு வேலியாயிருக்கும்.

பொற்புடைய மலையரையன் பணிய நின்ற—திருவல்லிக்கேணியில் தொண்டையர் கோன் போலவும், அட்டபுயகரத்தில் வயிரமேகன் போலவும், நந்திபுர விண்ண கரத்தில் நந்திவருமன் போலவும், திருநறையூரில் செம்பியன் கோச் செங்கணான் போலவும் திருக்கோவலூரில் 'மலயமாநவர்' என்னும் பிரபுக்கள் தொண்டு பூண்டு உபந்நரராக இதிஹாஸம் வழங்குமென்ப. "மலையரையன்" என்றது ஜாத்யேக வசநமாய்ப் பரம்பரையான அரசர்களைச் சொல்லுகிறதென்பது பெரியவாச்சான் பிள்ளை திருவுள்ளம். அவ்வரசர்களின் கைங்கரியங்களுக்கு இலக்காயிருக்கும் திருக்கோவலூர். ஆக இப்படிப்பட்ட திருப்பதியைச்சென்று தொழுவோம், புறப் படாய் நெஞ்சமே! என்றாராயிற்று. .... .... ... ... 7

நீரகத்தாய்!நெடுவரையினுச்சிமேலாய்! நிலாத்திங்கள்துண்டத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய்! *ஒண்துறைநீர்வெஃகாவுள்ளாய்! உள்ளுவாருள்ளத்தாய்!*உலகமேத்தும்
காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்கள்வா! காமருபூங்காவிரியின்தென்பால்மன்னு
பேரகத்தாய்!*பேராதென்னெஞ்சிலுள்ளாய்! பெருமான்! உன்திருவடியேபேணினேனே. 8

| | |
|---|---|
| நீரகத்தாய் | நீரகமென்னும் திருப்பதியிலுள்ளவனே! |
| நெடு வரையின் உச்சி மேலாய் | திருவேங்கட மலையினுச்சியில் நின்றருளினவனே! |
| நிலாத் திங்கள் துண்டத்தாய் | [நிலாத் தி]ங்கள் துண்டமென்[னு]ம் திருப்பதியிலுள்ளவனே! |
| நிறைந்த கச்சி ஊரகத்தாய் | செழிப்புநிறைந்த காஞ்சிபுரத்தில் திருவூரகமென்னும் திருப்பதியிலுள்ளவனே! |
| ஒண் துறை நீர் வெஃகா உள்ளாய் | அழகிய நீர்த்துறையின் கரையிலே திருவெஃகாவில் திருக்கண் வளர்ந்தருளுமவனே! |
| உள்ளுவார் உள்ளத்தாய் | சிந்திப்பாருடைய நெஞ்சிலுறைபவனே! |
| உலகம் ஏத்தும் காரகத்தாய் | உலகமெல்லாம் [துதிக்கும்] படியான [காரகத்தி]லுள்ளவனே! |
| காரவானத்து உள்ளாய் | திருககாரவான திருப்பதியிலுறைபவனே! |
| கள்வா | கள்வனே! |
| காமரு | விரும்பத்தக்கதாய் |
| பூ | அழகியதான |
| காவிரியின் | திருக்காவேரியினது |
| தென் பால் | தென்புறத்திலே |
| மன்னு | |
| பேரகத்தாய் | திருப்பேர்நகரில் உறைபவனே! |
| என் நெஞ்சில் பேராது உள்ளாய் | எனது ஹ்ருதயத்தில் பேராமலிருப்பவனே! |
| பெருமான் | ஸர்வஸ்வாமியானவனே! |
| உன் திரு அடியே | உனது திருவடிகளையே |
| பேணினேன் | ஆசைப்படா நின்றேன். |

* * *—பல திருப்பதிகளையும் வாயாரச் சொல்லிக் கதறுகிறார்.

**நீரகத்தாய்**—திருக்கச்சிமாநகரில் திருவூரகமென்று ப்ரஸித்தமான ஸ்ரீ உலகளந்த பெருமாள் ஸந்நிதியிலுள்ளது திருநீரகமென்கிற திவ்யதேசம்; அவ்விடத்தெம்பெருமானை விளித்தபடி. நீரின் ஸ்வபாவத்தையுடையனான எம்பெருமான் எழுந்தருளியிருக்கும் தலமாதல்பற்றி இத்தலத்திற்கு நீரக மென்று திருநாமமாயிற் றென்பர்.

**நீர்க்கும்** எம்பெருமானுக்கும் ஸ்வபாவ ஸாம்யம் பலபடிகளாலுண்டு.

1. **நீர்.** பள்ளத்தில்தானே பாயும், மேட்டில் ஏறுவது அருமை. எம்பெருமானும் ஜாதி முதலியவற்றால் குறைந்தாரிடத்தே எளிதாகச் செல்லுவன்; உயர்ந்தோமென்று மார்பு நெறித்திருப்பாரிடத்தே செல்ல விரும்பான். பாண்டவர்கட்காகத் தூது எழுந்தருளும்போது, ஞானத்தால் சிறந்தோமென்றிருக்கும் பீஷ்மா

சாரியரையும் குலத்தால் சிறந்தோமென்றிருக்கும் துரோணாசாரியரையும் செல்வத்தால் சிறந்தோமென்றிருக்கும் துரியோதனனையும் ஒரு பொருளாக மதியாதே இவையெல்லாவற்றாலும் தாழ்ந்தவராகத் தம்மை நினைத்திருந்த ஸ்ரீ விதுரருடைய திருமாளிகையிலே தானாகவே சென்று அமுது செய்தருளினானிறே கண்ணபிரான். ஆகவே, பள்ளத்தேயோடிப் பெருங்குழியே தங்குமியல்வு ஒக்கும்.

2. நீர் இல்லாமல் ஒரு காரியமும் ஆகாது; அப்படியே எம்பெருமானின்றி ஒரு காரியமுமாகாது. "லோகோ பிந்நருசி:" என்கிறபடியே ஒருவன் விரும்பினதை மற்றொருவன் விரும்பாதபடி உலகம் வெவ்வேறு விருப்பத்தையுடையதாயினும் எல்லாரும் நீரைவிரும்பியேயாகவேண்டும்; அது போலவே எம்பெருமானையும்.

3. நீர்க்குக் குளிர்ச்சி இயற்கை; சூடு வந்தேறி. எம்பெருமானுக்கும் தண்ணளி இயற்கையாய்ச் சீற்றம் வந்தேறியாயிருக்கும். "நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம் பிறந்தால்" என்ற முமுக்ஷுப்படி திவ்ய ஸூக்தி காண்க.

4. நீர் சுட்டாலும் அதை ஆற்றுவதற்கு நீரே வேணும்; எம்பெருமான் சீறினாலும் அவன்றனே தெளிவு பெறவேணும். "தருதுயரந்தடாயேல் உன் சரணல்லால் சரணில்லை" என்றார் குலசேகரப் பெருமாள்.

5. நீர் நம் இஷ்டப்படி தேக்கிவைக்கவும் ஓடவிடவும் உரியதாயிருக்கும். எம்பெருமான்படியு மப்படியே: ஆண்டாள் தான் சூடிக்களைந்த மாலையிலே விலங்கிட்டு வைத்துப் புஜிக்க நின்றானெம்பெருமான். பாண்டவர்கட்காகக் கழுத்திலே ஓலை கட்டித் தூது நடந்தான்.

6. நீரானது மற்ற பண்டங்களைச் சமைப்பதற்குக் கருவியுமாயிருக்கும்; தனிப்படத்தானே குடிக்கத்தக்கதுமாயிருக்கும். எம்பெருமானுக்கும் உபாயத்வம் உபேயத்வம் என்ற இரண்டு ஆகாரங்களுண்டிறே. எம்பெருமானைக்கொண்டு வேறு பலன்களைப் பெற விரும்புவாரும் எம்பெருமான்றன்னையே ஸ்வயம் புருஷார்த்தமாகக் கொள்வாருமுள்ளமை காண்க.

7. அன்னம் முதலானவை தமக்குப் பிரதிநிதிகளை ஸஹிக்கும்; அதாவது, காய் கனி கிழங்கு வேர் பால் முதலியவற்றால் தேஹதாரணம் பண்ணலாம்; நீரானது அப்படி பிரதிநிதி யொன்றையும் ஸஹிக்கமாட்டாது; நீர்க்கு நீரே வேணும் அப்படியே எம்பெருமானுக்கும் பிரதிநிதி கிடையாது; குணாநுஸந்தாநத்தாலும் போது போக்கவரிது; "ஒரு நாள் காண வாராயே" "அப்படியே எம்பெருமானுக்கும் பிரதிநிதி கிடையாது; குணாநுஸந்தாநத்தாலும் போது போக்கவரிது; "ஒரு நாள் காண வாராயே" "அடியேன் தொழ வந்தருளே" என்று பிரார்த்தித்துப் பெற்றே தீரவேண்டும்.

8. சோறு உண்ணும்போது நீர் இல்லாமல் முடியாது; அப்படி நீர் வேறொன்றை அபேக்ஷிப்பதன்று. எம்பெருமான்படியுமப்படியே; உபாயாந்தரங்களுக்கு எம்பெருமான் வேணும்; எம்பெருமான் இதர நிரபேக்ஷன். "உன்னையல்லால் யாவராலுமொன்றுங்குறை வேண்டேன்."

9. கொள்ளும் பாத்திரங்களின் தாரதம்மியமேயன்றி நீர் தான் குறையவில்லாது; எங்கும் நிரம்பவற்று. எம்பெருமானும் 'கொள்ளக் குறைவிலன் வேண்டிற்றெல்லாந் தருங்கோதில் வள்ளல். கொள்வார் குறையேயத்தனை ஐச்வரியமே போதுமென்பாரும் கைவல்யமே போதுமென்பாருமாகக் குறையக் கொள்வார் குற்றமே.

10. நீர் ஐவகைப்பட்டிருத்தல்போல எம்பெருமானும் ஐவகைப்பட்டிருப்பன்; எங்ஙனே யென்னில்; (1) பூமிக்குள்ளே பதிந்துகிடக்கும் நீர், (2) ஆவரண ஜலம், (3) பாற்கடல் நீர், (4) பெருக்காற்று நீர், (5) தடாகங்களில் தேங்கும் நீர்—

என ஜலம் ஐவகைப்படும்; பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென எம்பெருமானுடைய நிலைமைகளும் ஐவகைப்படும். விடாய்த்தவனுக்கு வேறோரிடம் தேடிப்போகவேண்டாதபடி நிற்கிற விடத்திலேயே உண்டாயிருக்கச் செய்தேயும் கொட்டும் குந்தாலியுங் கொண்டு கல்லினாலல்லது குடிக்கக்கிடையாத பூமிக்குள் பதிக்த நீர்போலேயாய்த்து அந்தர்யாமித்வம்; கண்டு பற்றவேணுமென்று ஆசைப்பட்டவனுக்கு ஹ்ருதயத்திலேயிருக்கச் செய்தேயும் கண்ணுக்கு விஷய மன்றிகே அஷ்டாங்கயோகமாகிற யத்நத்தாலே காணவேண்டும்படியானதிறே இது (2) விடாய்த்தவனுக்கு, அண்டத்துக்கு வெளியே பெருகிக் கிடக்கிற ஆவரண ஜலம்போலேயாயிற்று—கண்டு பற்றவேணுமென்றிருக்கிறவனுக்கு லீலா விபூதிக்கு அப்பாற் பட்டிருக்கிற பரத்வம். (3) அப்படி அதிதூரஸ்தமன்றியே அண்டத்துக்கு உட்பட்டிருக்கச் செய்தேயும் விடாய்த்தவனுக்குக் கிட்டவரிதான பாற்கடல்போலேயாயிற்று—சென்று காணவரிதாம்படியிருக்கிற வ்யூஹம். 4. (ஸமீபஸ்த மாயிருந்தும் தத்காலத்திலிருந்தவர்களுக்கு மாத்திரம் உபயோக யோக்ய மாய்ப் பிற்பட்டவனுக்கு அரிதான பெருக்காறுபோலேயாயிற்று—ராமக்ருஷ்ணாதி அவதாரங்களான விபவம். பூமியிலே அவதரித்து ஸஞ்சரித்தும் தத்காலத்திலிருந்தவர்களுக்கே ஆச்ரயணீயமாய்ப் பிற்காலத்திலுள்ளவர்களுக்குக் கிட்டாதபடியாயிருப்பதிறே இது. (5) விடாய்த்தவனுக்கு விடாய்தீரப்பருகலாம்படி பெருக்காற்றிலே தேங்கின மடுக்கள் போலேயாயிற்று—கோயில்களிலும் க்ருஹங்களிலும் எங்குமொக்க எல்லார்க்கும் கண்ணுக்கு இலக்காம்படி நிற்கிற அர்ச்சாவதாரம்.

11. நீரானது ஸ்வத: பரிசுத்தமாயினும் ஆச்ரயவசத்தாலே த்யாஜ்யமும் உபாதேயமுமாகிறது; அப்படியே தேவதாந்தரங்களில் அந்தர்யாமியான எம்பெருமான் த்யாஜ்யனாகவும் கூராராழி வெண்சங்கேந்தின எம்பெருமான் உபாதேயனாகவும் உள்ளமை காண்க.

12. தோண்டத் தோண்டச் சுரக்குந்நீர்; எம்பெருமானும் * கொள்ள மாளா வின்பவெள்ளங் கோதில தந்திடும்.

13. நீர் தனக்கொரு ப்ரயோஜனமின்றியே பரார்த்தமாகவே யிருக்கும்; எம்பெருமானுடைய ஆத்மாத்மீயங்களெல்லாம் ஆச்ரிதர்க்காகவே யிருக்கும்.

14. நீர் தானே பெய்யவேணுமேயன்றி ஒருவரால் வடிம்பிட்டுப் பெய்விக்க முடியாதது; எம்பெருமான் படியுமிப்படியே; "கேவலம் ஸ்வேச்சயை வாஹம் ப்ரேக்ஷே கஞ்சித் கதாசந".

15. நீர் கடலிலிருந்து காளமேகம் வழியாக வந்தாலன்றி உபஜீவிக்கவுரியதாகாது; எம்பெருமானும் சாஸ்திரங்களிலிருந்து ஆசாரியர் முகமாக வந்தே உபஜீவ்யனாகிறான். "மேகம் பருகின ஸமுத்ராம்பு போலே நூற்கடற்சொல் இவர் வாயனவாய்த் திருந்தினவாறே ஸர்வதா ஸர்வோபஜீவ்யமாமே" என்ற ஆசார்ய ஹ்ருதய ஸூக்தியுங்காண்க.

16. வஸிஷ்ட சண்டாள விபாகமின்றே அனைவரும் ஓர் துறையிலே படிந்து குடைந்தாடலாம்படி யிருக்கும் நீர்; எம்பெருமானும் "நிகரிலமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங்கடத்தானே!" என்றும் "கானமும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்றும் சொல்லுகிறபடியே பெரியார் சிறியார் என்றும் வாசியற ஒக்க ஆச்ரயிக்கலாம்படி [illegible]ருப்பன்.

17. நீர் சிறிது த்வாரம் கிடைத்தாலும் உட்புகுந்துவிடும்;—எம்பெருமானுக்கும் சிறிது வியாஜமே போரும் "திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்னத் திருமால்வந்தென்னெஞ்சு நிறையப்புகுந்தான்."

18. தீர்த்த விசேஷங்களிலே நீருக்கு மாஹாத்மியம் அதிகம்; எம்பெருமானுக்கும் கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான திருப்பதிகளிலே சிறப்புப் பொலியும்.

19. தாபம்மிக்கவர்கள் நீரை முகத்திலே எறட்டுவது, முதுகில் கொட்டுவது உள்ளில் இழிச்சுவது, படிந்து குடைந்தாடுவது போல் "வாக்கினால் கருமந் தன்னால் மனத்தினால் சிரத்தை தன்னால், வேட்கைமீதூரவாங்கி" விழுங்குவர்கள் எம்பெருமானையும்.

20. நீர் வேண்டியவன் துளி நாக்குநனைக்கக் கிடைத்தால் போது மென்பன்;—"கூராராழி வெண்சங்கேந்தி கொடியேன்பால் வாராய் ஒருநாள் மண்ணும் மங்ழவே" என்பர.

21. நீரில் சிறியகல்லும் அமிழும்; பெரிய தெப்பமரமும் மிதக்கும்; எம்பெருமான் பக்கலிலும் ப்ரஹ்மாவாய் இழந்துபோதல் இடைச்சியாய்ப் பெற்று விடுதல் செய்யக் காணுகின்றோம். "நேரே கடிக்கமலத்துள்ளிருந்துங் காண்கிலான், கண்ணனடிக் கமலந்தன்னையயன்,"—"மருவுநின் திருநெற்றியில் சுட்டியசைதர மணிவாயிடை முத்தந்தருதலும், உன்றன் தாதையைப்போலும் வடிவுகண்டுகொண்டுள்ள முள் குளிர, விரலைச் செஞ்சிறுவாயிடைச் சேர்த்து வெகுளியாய் நின்றுரைக்கு மவ்வுரையும், திருவிலேன்ஒன்றும் பெற்றிலேன் எல்லாம் தெய்வ நங்கை யசோதை பெற்றாளே." என்பன அடைவே ப்ரமாணம் - பகவத்குணங்களில் சிறுமா மனிசர் அமிழ்தலும் ஊன்மல்கிமோடு பருப்பார் வாய்க்கரையில் நிற்றலுங்கொள்க.

இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்கள் காண்க.

நெடுவரையினுச்சிமேலாய்—பூமண்டலத்திலுள்ளார் அநுபவிப்பது மாத்திர மன்றியே மேலுலகங்களிலுள்ளாரும் வந்து அநுபவிக்கலாம்படி ஓங்கியுள்ள திருமலையிலே நின்றருள்பவனே!. "வானவர் வானவர் கோனொடும் சிந்து பூ மகிழுந் திருவேங்கடம்" "வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு" "மந்திபாய் வடவேங்கட மாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான்." என்ற அருளிச் செயல்களறிக.

நிலாத்திங்கள் துண்டத்தாய்—தொண்டை நாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டினுள் 'நிலாத் திங்கள் துண்டம்' என்பது ஒரு திருப்பதி; இது பெரிய காஞ்சீபுரத்தில் தேவதாந்தர ஆலயத்தினுள் உள்ளது.

நிறைந்தகச்சியூரகத்தாய்—ஊரகமென்பது உலகளந்த பெருமான் ஸந்நிதி. எம்பெருமான் உரகரூபியாக இத்தலத்தில் ஸேவை ஸாதிப்பதனால் ஊரகமென்று திருநாமமாயிற்றென்ப.

(உரகம்—ஆதிசேஷன்). நிறைந்த கச்சி யென்றது திவ்ய தேசங்களால் நிறைந்த காஞ்சி க்ஷேத்ரமென்றபடி. திருவூரகத்தெம்பெருமான் தன் திருமேனியொளியாலே திருக்கச்சிமாநகர் முழுவதையும் நிரப்பியிருக்கும்படியைச் சொல்லிற்றாகவுமாம்.

ஒண்துறை நீர் வெஃகாவுள்ளாய்—இவ்விடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான வாக்கியங்களின் பரம போக்யதை காண்மின்;—"திருவெஃகாவில் அழகிய துறையைப் பற்றிக் கண்வளர்ந்தருளினவனே!. அல்லாத துறைகளைப் போலன்றியே ஆழ்வார் திருமழிசைப்பிரான் இழிந்து தீர்த்தமாடின துறையாகையாலே அழகிய துறை யென்கிறது. தத்ஸம்பந்தத்தாலேயிறே அத்துறையைப் பற்றிக் கிடக்கிறது. ("கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா! நீ கிடக்கவேண்டா—துணிவுடைய செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன், பைந்நாகப்பாய் சுருட்டிக் கொள்."—"கணிகண்ணன் போக்கொழிந்தான் காமருபூங் கச்சி, மணிவண்ணா! நீ கிடக்கவேண்டும்—துணிவுடைய செந்நாப் புலவனும் போக்கொழிந்தேன் நீயுமுன்றன், பைந்நாகப் பாய்படுத்துக்கொள்."

என்ற விடுதிப் பாசுரங்களைத் திருமழிசைப்பிரான் வைபவத்திற் காண்க.) ஆச்ரிதன் போனபோது அவன் பின்னே போயும் அவன் வந்தவாறே வந்து கால்கடை தலைமாடாகக் கிடந்தும் இப்படியிறே அங்குத்தை ஆச்ரித பாரதந்திரிய மிருப்பது. 'இருந்த வூரிலிருக்கும் மானிடர் எத்தவங்கள் செய்தார்கொலோ' என்று வைஷ்ணவனிருந்த தேசம் வைஷ்ணவனுக்கு உத்தேச்யமாயிருக்குமாபோலே ஆச்ரித ஸ்பர்சமுள்ளதொரு துறையும் ஈச்வரனுக்கு உத்தேச்யமாயிருக்கிறபடி.'

திருவெஃகாவிலெம்பெருமான் பிரமதேவன் செய்த வேள்வியை யழிக்க வந்த வேகவதி நதியைத் தடுத்தற்பொருட்டு அதற்கு அணையாகக் குறுக்கிற் பள்ளி கொண்டருளினவனுதலால் அப்பிரானுக்கு வடமொழியில் 'வேகாஸேது' என்று பெயர்; அது தமிழில் 'வேகவணை' என்று மொழிபெயர்ந்து, அது பின்பு (நாகவணை யென்பது நாகணையென்று விகாரப்படுதல்போல) 'வேகணை' என விகாரப்பட்டு அது பின்னர் 'வெஃகணை' எனத்திரிந்து தானியாகுபெயராய்த் தலத்தைக் குறித்தது. அது, பின்பு வெஃகா என மருவி வழங்கிற்றென நுண்ணிதின் உணர்க.

உள்ளுவாருள்ளத்தாய்!—காஞ்சீக்ஷேத்ரத்தில் 'உள்ளுவாருள்ளம்' என்று ஒரு திவ்யதேசம் கிலாத்திங்கள் துண்டம்போலே தேவதாந்தர ஆலயத்தினுள்ளிருப்பதாகவும், அத்தலத்து எம்பெருமானையே இங்கு 'உள்ளுவாருள்ளத்தாய்!' என விளித்திருப்பதாகவும் பலர் சொல்லிப் போருவதுண்டு; இஃது ஆதாரமற்ற வார்த்தையாகும். பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானம் இங்ஙனே காணவில்லை யென்பதுந்தவிர, பிள்ளைப்பெருமாளையங்கார் இயற்றிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் உள்ளுவாருள்ள மென்றொரு திருப்பதி பாடல் பெற்றிராமையும் நோக்கத்தக்கது. தன்னைச் சிந்திப்பவர்களின் சிந்தையிலே கோயில் கொண்டிருக்குமவனே! என்றபடி. எம்பெருமானுக்கு, பரமபதத்திலும் திருப்பாற்கடலிலும் கோயில் திருமலை பெருமாள்கோயில் முதலான உகந்தருளினவிடங்களிலும் இருப்பதிற் காட்டிலும் மெய்யடியாருடைய ஹ்ருதய கமலத்திலே வாழ்வதே பரமோத்தேச்ய மென்றும், ஸமயம்பார்த்து அன்பருடைய நெஞ்சிலே வந்து சேர்வதற்காகவே மற்றவிடங்களில் எம்பெருமான் தங்குகிறனென்றும் நம் ஆசார்யர்கள் நிர்வஹித்தருள்வது இங்கு உணரத்தக்கது.

உலகமேத்துங் காரகத்தாய்—காரகமென்கிற திவ்யதேசமும் திருக்கச்சிமா நகரில் உலகளந்தபெருமாள் ஸந்நிதியினுள்ளடங்கியது. மேகத்தின் ஸ்வபாவம் போன்ற ஸ்வபாவமுடைய எம்பெருமான் வாழுமிடமாதல் பற்றி இத்தலத்திற்குக் காரக மென்று திருநாமமாயிற்றென்பர். எம்பெருமானுக்கு மேகத்தோடு ஸாம்யம் பல படிகளால் உய்த்துணரத்தக்கது.

1. பெய்யவேண்டு மிடமளவுஞ் சென்று பெய்யும் மேகம்; எம்பெருமான் "வந்தருளி யென்னெஞ்சிடங்கொண்ட வானவர் கொழுந்து" என்று ஆங்காங்குச் சென்றருளி அநுக்ரஹிப்பன்.

2. மின்னலுள்ளகாலம் ஜலம் நிரம்பியிருக்கும் மேகம்; எம்பெருமானுக்கும் பிராட்டியோடு கூடியிருக்குங் காலத்திலே க்ருபாரஸம் விஞ்சியிருக்கும். "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது; அது இல்லாமையால் ராவணன் முடிந்தான்" என்ற முமுக்ஷுப்படி திவ்யஸூக்தியுங் காண்க.

3. மொண்ட இடத்திலும் பெய்யும் மேகம்; தனக்கு உபதேசித்தவர்களுக்கும் உபதேசிக்குமவன் எம்பெருமான். வஸிஷ்டாதிகளுக்கும் ஜ்ஞாநப்ரதாநம் பண்ணினனிறே ஸ்ரீராமபிரான். சித்ரகூடத்திலே வஸிஷ்டன் பெருமாள்பாடே சிலதர்மஸூக்ஷ்மங்கள் கேட்கப் பெற்றனையிற்று.

4. பெய்யப்பெறாத காலத்திலே வறக்கும் மேகம்; நெஞ்சுலர்ந்து பேசினானிறே எம்பெருமானும், த்ரௌபதிக்கு ஆபத்திலே அருகேயிருந்து உதவப் பெறாத குறைக்காக.

5. இன்னகாலத்திலே மேகம் பெய்யுமென்று அறுதியிட வல்லார் ஆருமில்லை; பெய்ய வேண்டிய காலத்தில் பெய்யாதொழியவும் பெய்வதற்கு ஸம்பாவனையில்லாத காலத்தில் அசிந்திதமாக வந்து பெய்யவுங் கடவது மேகம்; எம்பெருமான் படியுமப்படியே; "வந்தாய்போலே வாராதாய் வாராதாய்போல் வருவானே." த்ரௌபதிக்கு ஆபத்திலே வந்து முகங்காட்டாதொழிந்தான்; அபேக்ஷாநிரபேக்ஷமாகத்* தாவியன்றுலக மெல்லாந் தலைவிளாக் கொண்டான்.

6. 'வனத்திடரை ஏரியாக வெட்டியாயிற்று, நீ மழை பெய்தாக வேணும்; என்று வளைப்பிட வொண்ணாது மேகம்: எம்பெருமான்படியு மிங்ஙனேயிறே' *பெண்ணுலாஞ் சடையினானும் பிரமனும் (உன்னைக்) காண்பானெண்ணிலா வூழியூழித் தவஞ் செய்தார் வெள்கிநிற்ப விண்ணுளார் வியப்பவந்து ஆனைக்கன்றருளை யீந்தவனிறே.

7. ஜலஸ்தல விபாகமின்றியே பெய்யும் மேகம்;- "வேடன் வேடுவிச்சி பக்ஷி குரங்கு சராசரம் இடையர் தயிர்த்தாழி கூனி மாலாகாரர் பிணவிருந்து வேண்டடிசிலிட்டவர் அவன் மகன் அவன் தம்பி ஆனை அரவம் மறையாளன் பெற்றமைந்தன்" (ஆசார்யஹ்ருதயம்) என்னும்படியிறே பகவத் விஷயீகாரம் பெற்றவர்களிருப்பது.

8. மேகம் சரத்காலத்தில் கர்ஜித்துப் போய்விடும், மழைபெய்யாது; பெய்யுங் காலத்திலே ஆடம்பரமறப் பெய்யும். எம்பெருமான் குசேலனுக்கு அருள் செய்தபடி இங்ஙனேயிறே.

9. விராடபர்வ காலக்ஷேபத்துக்கு வரும் மேகம்; பகவத்விஷயகாலக்ஷேபங்களிலே வந்து நிற்கும் எம்பெருமான். ஶ்ரீஶைலேஶதயாபாத்ர மென்று வந்தானிறே ஸ்ரீரங்கநாதன் பெரிய ஜீயர் கோஷ்டியிலே.

10. சுக்திகளிற் பெய்து முத்தாக்கும் மேகம்;—அடியார்க்கு இன்பமாரியாகிய எம்பெருமானுடைய கடாக்ஷதாரையும் ஆழ்வாராசார்யர்களிடத்தே ப்ரவஹித்து மிக்க பயன்விளைக்குமிறே.

11. "விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்கள்!" இத்யாதிப்படியே தூதுவிடப்படும் மேகம்; எம்பெருமான்றானும்* இன்னார் தூதனென நின்றான்; *கோதைவேலைவர்க்காய் மண்ணகலங் கூறிடுவான் தூதனாய் மன்னவனால் சொல்லுண்டானிறே.

12. மழைபெய்ய எல்லாமரங்களும் தளிர்க்கும்; எருக்கிலை போல்வன வீழ்ந்தொழியும்; ஆகவே, மழை சிலர்க்குத் தீங்கு, சிலர்க்கு நன்மை. எம்பெருமான்படியுமப்படியே; "கஞ்சன் நாள் கவர் கருமுகில்; எந்தாய்" "தாயர்மகிழ ஒன்னார் தளர" இத்யாதி.

13. "எத்தனையும் வான் மறந்த காலத்தும் பைங்கூழ்கள், மைத்தெழுந்த மாமுகிலே பார்த்திருக்கும்" என்கிறபடியே பயிர்கள் வேறுபுகலற்று எதிர்பார்க்கப் பெற்றிருக்கும் மேகம்; "களைவாய் துன்பங்களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்று அநந்யகதிகளால் ப்ரதீக்ஷிக்கப் படுகை ஒக்குமிறே.

14. "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கித் துப்பார்க்குத், துப்பாயதூஉம் மழை" (திருக்குறள்) என்கிறபடியே அன்னத்தின் அபிவிருத்திக்கு ஹேதுவாகையாலே போகஸாதனமாயும் விடாய் தீரப் பருகுகையாலே ஸ்வயம் போக்யமாயுமிருக்கும் மேகம்; ப்ராபகனும் ப்ராப்யனுமிறே எம்பெருமானிருப்பது.

15. எத்தனை கண்ணநீர் விழவிட்டாலும் விருப்பமில்லாதவன்று வாளா கிடக்கும் மேகம்; பரதாழ்வான் பலருடனே சித்ரகூட பரிஸரத்திலே போந்து கண்ணநீரை விழவிட்டு வேண்டினவிடத்தும் "ஸ காமமநவாப்யைவ" என்று மநோரதம் பெறாமலே மீண்டானிறே.

இங்ஙனே மற்றும் பல உவமைப் பொருத்தங்களுங் கண்டு கொள்க.

காா்வானத்துள்ளாய்!=கார்வானமென்பதும் தொண்டை நாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று; இதுவும் உலகளந்த பெருமாள் ஸந்நிதியினுள்ளடங்கிய திவ்ய தேசங்கள் நான்கிலொன்று. மேகத்தின் ஸ்வபாவ விசேஷங்கள் இத்தலத்தெம் பெருமானிடத்தும் அநுஸந்திக்க வுரியன.

கள்வா!='திருக்கள்வனூர்' என்கிற திவ்ய தேசத்திலுறைபவனே: பிறர் அறியாதபடி காரியஞ் செய்பவனைக் கள்வனென்பது; எம்பெருமானும் 'இராமடமூட்டுவாரைப்போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டு போரு' மவனுகையாலே கள்வனெனப்படுகிறான். ஐயங்கார் நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் இத்திருப்பதிக்குப் பேசும் பாசுரங்காண்மின்;—(85) "பண்டேயுன் தொண்டாம் பழவுயிரை யென்னதென்று, கொண்டேனைக் கள்வனென்று கூறாதே—மண்டலத்தோர், புள்வாய் பிளந்த புயலே! உனைக் கச்சிக், கள்வா வென்றோதுவதென் கண்டு?" என்றும். (அதாவது) ஒருவர்க்கு உரிய பொருளைத் தன்னதாகக் கொள்வது கள்ளமெனப்படும்; ஆகவே அநாதியாக உனக்கே உரியதாய்க் கிடந்த உயிரை நான் என்னுடையதென்று கொண்டிருக்கிறேனாதலால் என்னைக் கள்வனென்று சொல்லத்தகும்; உலகத்திலுள்ள பொருள்கள் யாவும் நின்னுடையனவே யாதலால் வெண்ணெய் கொள்ளுதல் முதலிய தொழில்களைச் செய்யினும் உன்னைக் கள்வனென்று கூறுதல் தகாது; இவ்வாறு இருக்க, உலகத்தார் இத்தன்மையை ஆய்ந்து அறியாமலே என்னை யானே திருடிக் கொண்ட பெருந்திருடனாகிய என்னைக் கள்வனென்னமல் ஸர்வ ஸ்வாமியான உன்னைக் கள்வனென்கின்றனரே, இஃது என்ன பேதைமை! என்று சமத்காரந் தோன்றக் கூறியவாறு.

காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு பேரகத்தாய்!='திருப்பேர் நகர்' என்கிற அப்பக்குடத்தான் ஸந்நிதியில் பள்ளிகொண்டருள்பவனை விளிக்கிறபடி. சிறிய திருமடலில் "மதிட்கச்சி யூரகமே பேரகமே" என்ற விடத்தில் பேரகமென்பது திருவூரகத்தில் பெரிய திருமேனியாக ஸேவை ஸாதிக்கின்ற உலகளந்தபெருமானைக் குறிப்பதாகப் பலரும் சொல்லுவார்கள்; இப்பாசுரத்தில் 'பேரகத்தாய்!' என்றதும் அப்பெருமானையே யென்றும் பலர் மயங்குவர்; 'காவிரியின் தென்பால் மன்னு' என்று விசேஷணமிட்டிருப்பதையும் நோக்காமல் மயங்கிக் கூறுவார்க்கு என் சொல்லவல்லோம்? திருக்கச்சி உலகளந்த பெருமாள் ஸந்நிதியில் நான்கு திவ்யதேசங்களே உள்ளன; (ஊரகம் நீரகம் காரகம் கார்வானம்.) பேரகமென்பது இங்கில்லை; அது சோழநாட்டுத் திருப்பதியேயாம். .... .... 8

வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர் மல்லையாய்! மதிட்கச்சியூராய்! பேராய்*
கொங்கத்தார்வளங்கொன்றையலங்கல்மார்வன் குலவரையன்மடப்பாவையிடப்பாற்கொண்டான்
பங்கத்தாய்!*பாற்கடலாய்! பாரின்மேலாய்! பனிவரையினுச்சியாய்! பவளவண்ணா!
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னைநாடி யேழையேனிங்ஙனமேயுழிதருகேனே. 9

| | | | |
|---|---|---|---|
| வங்கத்தால் | கப்பல்களினால் | பங்கத்தாய் | (வலது) பக்கத்திலுடையவனே ! |
| மா மணி | சிறந்த ரத்னங்களை | பால் கடலாய் | திருப்பாற்கடலில் கண் வளர்ந்தருள்பவனே ! |
| வந்து | கொண்டுவந்து | பாரின் மேலாய் | (ராமக் [illegible] பண அவதரித்து) பூமியில் ஸஞ்சரித்தவ[illegible] ! |
| உந்து | தள்ளுமிடமான | பனி வரையின் உச்சியாய் | குளிர்ச்சியே வடிவான திருமலையினுச்சியில் நிற்பவனே !, |
| முந்நீர் | கடற்கரையிலுள்ள | எங்கு உற்றாய் | எங்[illegible] ? |
| மல்லையாய் | திருக்கடன்மல்லையில் வாழ்பவனே ! | பவளவண்ணா | திருப்பவளவண்ணனே ! |
| மதிள் [illegible]ஊராய் | மதிள்களையுடைய [illegible]சிப் பதியில் (திருவெஃகாவில்) உறைபவனே ! | எம்பெருமான் | எம்பிரானே ! |
| பேராய் | திருப்பேர்நகராளனே ! | ஏழையேன் | மிகவும் சபலனாகிய அடியேன் |
| கொங்கு ஆர் | தேன்நிறைந்ததும் | உன்னை நாடி | உன்னைத்தேடிக்கொண்டு |
| வளம் | செவ்வி பெற்றதுமான | இங்ஙனமே | இவ்வண்ணமாகவே |
| கொன்றை அலங்கல் | கொன்றைமாலையை | உழிதருகேன் | அலைச்சல்படாநின்றேன். |
| மார்வன் | மார்விலே யுடையனும் | | |
| குலம் வரையின் மடப்பாவை இடப்பால் கொண்டான் | பர்வதராஜபுத்ரியான பார்வதியை இடதுபக்கமாகக் கொண்டவனுமான சிவபிரானை | | |

* * *—எம்பெருமானே! நீ திருப்பதிகளில் கோயில் கொண்டிருக்குமழகையும் அஹங்காரிகளுக்கும் திருமேனியிலே இடங்கொடுத்திருக்கும் சீலத்தையும் வாய்வெருவிக்கொண்டு திரிவேன் நான் என்கிறார்.

[வங்கத்தால் மாமணிவந்துந்து முந்நீர் மல்லையாய் மதிட்கச்சியூராய்] பரவாஸுதேவனாகிய ஒரு சிறந்த விலையுயர்ந்த ரத்னத்தை அவனது வாத்ஸல்யமென்கிற ஒரு கப்பலானது [த்வீபாந்தரத்தில் நின்றும் த்வீபாந்தரத்திற்குச் சரக்குகளைக் கொண்டு தள்ளுவது போல] திருக்கடல்மல்லை யென்கிற ஒரு தீவிலே கொணர்ந்து தள்ளிற்றாம்; "கானத்தின் கடல்மல்லை" என்றபடி காட்டுநிலமாகிய அவ்விடத்திலே அந்த ரத்னத்தைப் பேணுவாரில்லாமையாலும் ரத்னம் விலை போவது மஹாநகரங்களிலாகையாலும் அந்தக்கப்பலானது அந்த ரத்னத்தை அங்கிருந்து கொணர்ந்து காஞ்சீபுரத்திலே திருவெஃகாத்துறையிலே தள்ளிற்றாம்—என்றிப்படி சமத்காரமாகச் சொல்லும் விசேஷார்த்தம் உணரத்தக்கது. ஆழ்வார் தாமும் இவ்வர்த்தத்தைத் திருவுள்ளம்பற்றியே பெரியதிருமொழியில் திருக்கடல்மல்லைப் பதிகத்திலும் "கச்சிக்கிடந்தவனூர் கடன்மல்லைத் தலசயனம்" என்றருளிச் செய்தது.

புண்டரீகர் என்கிற ஒரு பரமபக்தர் கடலின் இக்கரையிலே ஒரு பெரிய தோட்டம் ஏற்படுத்தி அதில் சிறந்த புஷ்பங்களையுண்டாக்கி அவற்றைத் தொடுத்தெடுத்துக் கொண்டுபோய் எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்க வேணுமென்று பாரித்தார்; கடலைக்கடந்து செல்லவேண்டியிருந்தமையால் இக்கடலைக் கையாலிறைத்துவிட்டு வெறுந்தரையாக்கி நடந்தே செல்லுவோமென்று துணிந்து கடலை இறைக்கத் தொடங்கவே, எம்பெருமான் அவருடைய ஆதராதிசயத்தைக் கண்டு வியந்துவந்து, தானே கடற்கடையிலே ஓடிவந்து அவரது தோப்பிலே தரைக்கிடைகிடந்து அவருடைய வழிபாடுகளை ஸ்வீகரித்தருளினன் என்பது திருக்கடல்மல்லைத் தலசாயிப் பெருமாளைப் பற்றின புராண வரலாறு.

பேராய்! = பேரில் உள்ளவன் பேரான்; பேராய் என்பது விளி; திருப்பேர்நகரிலுள்ளவனே! என்றபடி.

[கொங்கத்தார் இத்யாதி.] கொன்றை மாலை யணிந்த மார்வையுடையவனும் பார்வதியைத் தனக்கு மனைவியாகக் கொண்டவனுமான ருத்ரனைத் தனது திருமேனியின் ஒரு புறத்திலே இடங்கொடுத்து இருத்தியிருக்குமவனே! என்றபடி. திருவாய்மொழியில் "வலத்தனன் திரிபுரமெரித்தவன்" (1—3—9) என்ற பாசுரத்தின் வியாக்யானத்தில் "பச்யைகாதச மே ருத்ராந் தக்ஷிணம் பார்ச்வமாச்ரிதாந்" என்ற மோக்ஷதர்மவசநத்தை எடுத்துக் காட்டியிருப்பது இங்கே அநுஸந்தேயம். "தபஸா தோஷிதஸ் தேந விஷ்ணுநா ப்ரபவிஷ்ணுநா, ஸ்வபார்ச்வே தக்ஷிணே சம்போர் நிவாஸ பரிகல்பித:" என்றொரு வசநமும் இருபத்திநாலாயிரத்திற் காண்பதுண்டு. [சிவன் பண்ணின தவத்தினால் திருவுள்ளமுவந்த திருமால் அவனுக்குத் தனது வலவருகிலே வாஸஸ்தானம் அமைத்துக் கொடுத்தருளினன் என்பது இதன் பொருள்.] "ஏறாளுமிறையோனுந் திசைமுகனுந் திருமகளுங், கூறாளுந் தனியுடம்பன்" என்றும் "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து" என்றும் ஆழ்வார்கள் அடிக்கடி அருளிச்செய்கிறார்களே, சிவன் முதலானோர் எப்போதும் எம்பெருமானுடைய திருமேனியைப் பற்றியிருக்கிறார்களோ என்றொரு சங்கை பிறக்கக்கூடும். இந்த சங்கையும் இதற்குப் பரிஹாரமும் பூருவர்களின் வியாக்கியானங்களிலேயே உள்ளன; கீழ் உதாஹரித்த திருவாய்மொழிப் பாசுரத்தின் (4—8—1) வியாக்கியானங்களிலே "ஸர்வகாலமும் இவர்கள் எம்பெருமானுடைய திருமேனியிலே இருப்பர்களோ வென்னில்; ஆபத்துக்களிலே திருமேனியிலே இடங்கொடுத்தருளும்; அது மஹாகுணமாகையாலே ஆழ்வார்கள் எப்போதும் மொக்க அருளிச்செய்து கொண்டு போருவர்கள்; ஸாமந்தர்க்குப் புறம்பே நாடுகள் கணக்கவுண்டாகிலும் மாளிகைக்குள்ளே செம்பாலே நாழியரிசியைத் தங்களுக்கு வரிசையாக நினைத்திருப்பர்களிறே; அப்படியே இவர்களும் திருமேனியில் பண்ணிவைக்கும் ப்ராப்தி விடார்களிறே. ஓரோ கலஹங்களிலே அடையவளைந்தானுக்குள்ளே குடிவாங்கியிருந்து கலஹந் தெளிந்தவாறே புறம்பே புறப்பட்டாலும் 'இவ்விடம் இன்னார் பற்று, இவ்விடம் இன்னார் பற்று' என்று பின்னும் ப்ராப்தி சொல்லிவைக்குமா போலே" என்றருளிச்செய்துள்ள ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத் தக்கன.

"கொங்கத்தார்" என்ற பாடத்தில் 'கொங்கு அத்து ஆர்' என்று பிரித்து 'அத்து' என்பதைச் சாரியையாகக் கொள்ளவேணும். 'கொங்குத்தார்' என்ற பாடத்தில், கொங்கு—தேனையும், தார்—பூக்களையும், வளம்—அழகையுமுடைத்தான, கொன்றையலங்கல் என்றுரைத்துக் கொள்க. பங்கத்தாய்='பங்கு' என்று பார்ச்வத்திற்குப் பெயர்; திருமேனியின் கூறு. பங்கில் உடையவன்—பங்கத்தான்; அதன் விளி.

பாற்கடலாய்=அஹங்காரியான ருத்ரனுக்குத் திருமேனியில் இடங்கொடுத்தவளவேயோ? பிரமன் முதலானோர்க்கு ஓர் ஆபத்து வந்தபோது ரக்ஷகரான நாம் நெடுந்தூரத்திலிருக்க வொண்ணாதென்று பரமபதத்தில் நின்றும் திருப்பாற்கடலிலே வந்து திருக்கண் வளர்ந்தருளுகிறவனே!

பாரின் மேலாய்=அஸுரர்களாலும் ராக்ஷஸர்களாலும் குடியிருப்பிழந்து ஸகல தேவதைகளும் வந்து சரணம்புக, ராமக்ருஷ்ணாதி ரூபத்தாலே தன்னை அழியமாறி அவதரித்து இப்பூமண்டலத்தின்கண் உலாவினவனே! என்கை.

பனிவரையினுச்சியாய்!=ஸம்ஸாரதாபத்தை ஆற்றும்படியான குளிர்ச்சி பொருந்திய திருவேங்கட மலையினுச்சியிலே வாழ்பவனே!

பவளவண்ணா!=பவளம்போல் விரும்பத்தகுந்ததான வடிவுபடைத்தவனே! என்பது மாத்திரம் இதற்குப் பொருளன்று; கச்சிமாநகரில் 'திருப் பவள வண்ணம்' என்னும் திருப்பதியிலுறைபவனே! என்கிறவரையில் பொருளாகக் கொள்

ளத்தக்கது. இது பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தில் விளங்கக்கிடக்கின்றதில்லையேயென்று சிலர் நினைக்கக்கூடுமேலும் இங்ஙனே பொருள்கொள்ள வேண்டிய அவசியத்தை விளக்குவோம்;—பிள்ளைப் பெருமாளையங்கார் இயற்றியருளிய நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் (86) "கண்டறிந்துங் கேட்டறிந்துந் தொட்டறிந்துங் காதலால், உண்டறிந்து மோந்தறிந்து முய்யேனே—பண்டைத் தவளவண்ணா கார்வண்ணா சாமவண்ணா! கச்சிப், பவளவண்ணா! நின்பொற்பதம்' என்ற செய்யுளினால் கச்சிமாநகரிலுள்ள திருப்பதிகளுள் திருப்பவளவண்ணம் ஒன்றாகப் பாடப்பட்டுள்ளது; பெரியவாச்சான்பிள்ளைக்கு முற்பட்டவரும் பட்டர் திருவடிகளிற் பணிந்துய்ந்தவரும் ஆப்ததமருமான அத்திவ்யகவியின் திருவுள்ளத்தைத் தழுவிச்செல்ல வேண்டுவது நமக்கு இன்றியமையாததாம். திருமங்கையாழ்வாருடைய இப்பாசுரத்திலுள்ள 'பவளவண்ணா!' என்கிற விளியைக்கொண்டே ஐயங்கார் அச்செய்யுள் இயற்றியருளினரென்பது மறுக்கத்தகாதது.

[எங்குற்றாய் இத்யாதி.] அடியார்களுக்காகவே திருப்பதிகளில் ஸந்நிதி பண்ணியிருந்தும் பாவியேனுக்குத் தோற்றா தொழிவது என்னோ; 'வருந்தி நான் வாசகமாலை கொண்டு, உன்னையே யிருந்திருந்து எத்தனைகாலம் புலம்புவனே" என்றாற்போலே உன்னைக்கூவிக்கூவிக் கதறுவதே எனக்குப் பணியாயிற்றே! என்படியைக் கண்டாயோ; இன்னமும் இரங்கியருளத் திருவுள்ளமில்லையோ? என்றாராயிற்று. .... ... ... ... ... 9

பொன்னானாய்! பொழிலேழுங்காவல்பூண்ட புகழானாய்இகழ்வாயதொண்டனேன்நான்*
என்னானாய்! என்னானாய்! என்னலல்லால் என்னறிவன்?ஏழையேன்*உலகமேத்தும்
தென்னானாய்! வடவானாய்! குடபாலானாய்! குணபாலமதயானாய்! இமையோர்க்கென்றும்
முன்னானாய்!*பின்னானார்வணங்குஞ்சோதி! திருமூழிக் களத்தானாய்! முதலானாயே. 10

உலகம் ஏத்தும் — உலகமடங்கலும் தக்க
தென் ஆனாய் — தென்திருமாலிருஞ் சாலை மலையில் நின்ற யானை போன்றவனே!
வட ஆனாய் — வட திருவேங்கடத்தில் நின்ற யானைபோன்றவனே!
குடபால் ஆனாய் — மேற்றிசையில் (கோயிலில் கண்வளராநதருளுகிற) யானை போன்றவனே!
குணபால மதம் யா(னாய்) — கீழ்த்திசையில் (திருக்கண்ணபுரத்தில்) மதயானை போன்றவனே!
என்றும — எக்காலத்திலும்
இமையோர்க்கு முன்னானாய் — நித்யஸூரிகளுக்குக் கண்ணாற்கண்டநுபவிக்கலாம்படி முன்னிற்பவனே!
பின்னானார் வணங்கும் சோதி — அவதாரத்திற்குப் பிற்பட்டவர்கள் ஆச்ரயிக்கத்தக்க சோதியாக
களத்து ஆனாய் — திருமூழிக்களம் முதலிய திருப்பதிகளிலுறைபவனே!
முதல் ஆனாய் — முழுமுதற் கடவுளே!,
பொன் ஆனாய் — பொன்போன்றவனே!
பொழில் ஏழும் காவல் பூண்ட புகழ் ஆனாய் — ஸப்தலோகங்களையுங் காத்தருள்வதால் வந்த புகழுடையவனே!
இகழ்வு ஆய தொண்டனேன் ஏழையேன் நான் — இகழ்வையே வடிவாகவுடைய தொண்டனாய் ...ான நான்
என ஆன என ஆன என்னல் அல்லால் — 'என்னுடைய யானையே! என்னுடைய யானையே!' என்று சொல்லுமித்தனையல்லது
என் அறிவன் ஏ. — வேறு என்னவென்று சொல்ல அறிவேன்?

*** எம்பெருமானே! பலபடிகளாலும் உன்னைச் சொல்லிக் கதறுவதொழியப் பிறிதொன்றுமறியேனென்கிறார்.

பொன்னானாய்!=பொன்போன்றவனே! எம்பெருமானைப் பொன்னாகக்கூறுவதற்கு ஒரு பொருத்தஞ் சொல்லலாம்; அதாவது—"ஹேமாப: கேதோ ந

தாதோஹநச் சேதேந கஷணேந வா, ஏததேவ மஹத்துःக்கம் யத் குஞ்ஜாஸமதோலநம்" என்றார் ஒரு மஹாகவி: பொன்னைத் தீயிலிட்டுச் சுடுகிறோம், உளியையிட்டு வெட்டுகிறோம், உரைகல்லிலே யிட்டுக் கனக்க வுரைக்கிறோம், இன்னமெத்தனை ஹிம்ஸைகள் செய்யினும் அவற்றால் பொன்னானது சிறிதும் வருந்தமாட்டாது; வருத்தமில்லையென்பது மாத்திரமே யன்று; அந்த ஹிம்ஸைகளெல்லாம் தனக்குப் பரமபோகயமே யென்பது தோன்ற ஒளியை மிகுத்துக்காட்டும்; பொன்னைத் தீயிலிட்டுச் சுடும்போதும் உளியிட்டு வெட்டும் போதும் உரைகல்லி லுரைக்கும் போதும் அதற்கு ஒளிமிகுதலைக் காண்கிறோமன்றோ; ஆனால் அந்தப்பொன்னுக்கு ஒரு வருத்தம் மாத்திரம் சாலவுண்டு. அஃது என்னென்னில்; மிக அற்பமான தொரு குன்றுமணியோடொக்க நம்மை நிறுப்பதே!' என்பதே அதற்கு மிக்க வருத்தமாம்; ஒரு திராசில் குன்றுமணியையும் மற்றொரு திராசில் பொன்னையும் வைத்து நிறுக்கக் காண்கிறோமன்றோ. 'பொன் என்று போற்றப்படுகின்ற நமக்குக் கடைகெட்ட குன்றுமணிதானோ ஈடாகவேணும்' என வருந்தி மிகவுங் குன்றிப்போகாநின்றதாம். அதுபோல எம்பெருமானும், தூதனுப்பப் பெறுகை, தாம்பால் கட்டுண்கை முதலானவற்றால் சிறிதும் வருந்தான்; வருந்தாமை மாத்திரமேயன்று; அவற்றால் மிகக முகமலர்ச்சியும் பெற்றிடுவான்; [இன்னார் தூதனென நின்றான்] என்றது கண்டீரே; 'வெண்ணெய்க்கன்றாய்ச்சி வன்தாம்பு களால் புடைக்க அலந்தானை' என்றதும் காண்க.

பொழிலேழுங் காவல்பூண்ட புகழ்வாய்—ஏழுலகங்களையும் ஆளிட்டு ரக்ஷிக்கை யன்றியே தானே முன்னின்று ரக்ஷிப்பதனால் வந்த புகழ்படைத்தவனே!. 'காவல் பூண்ட' என்றதனால் காத்தல் தொழிலைத் தனக்கு ஒரு அணிகலனாகப் பூண்டிருப்ப னென்கிறது. ஸ்ரீவிபீஷணாழ்வான் கடற்கரையிலே வந்து சரணம்புகுந்தபோது ஸுக்ரீவமஹாராஜர் முதலானோர் இவனை ரக்ஷித்தருளலாகாதென்று தடைசெய்த விடத்தும் ஒருதலை நின்று ரக்ஷித்தே தீரும்படியான விரதம்பூண்டவனிறே எம்பெருமான்.

[இகழ்வாய தொண்டனேன் நான் என்னைப் என்னாய் என்னலல்லால் என்னறிவனேழையேன் ?] 'இகழ்வாய' என்பதை 'இகழ்வு ஆய' என்றும் பிரிக்கலாம்; இகழ், வாய என்றும் பிரிக்கலாம். அடைவே, நீசனாகிய என்றும், இகழத்தக்க வாய்மொழியை யுடையேனான என்றும் பொருள் காண்க. தண்ணீர்க் குடமெடுக்கும் தாஸியொருத்தி ஸார்வபௌமனை ஆசைப்படுதல்போலவும், பிச்சை யாண்டி பட்டாபிஷேகத்தை விரும்புதல்போலவு மன்றோ நித்யஸம்ஸாரியான நான் உன்னை ஆசைப்படுகிறது என்கிறார். [என் ஆனாய்! என் ஆனாய்!] ஆனை என்பது ஈறுதிரிந்த விளியாய் 'ஆனாய்' என்றாயிற்று; 'என்னுடைய மத்த கஜமே! என்னுடைய மத்தகஜமே!' என்று ஏதோ வாய் வெருவுகின்றேனத்தனையொழிய ஸாத நாநுஷ்டானமாகச் சொல்லும் முறைமை யொன்றுமறியே னென்றவாறு.

யானைக்கும் எம்பெருமானுக்கும் பலபடிகளாலே ஸாம்யமுண்டு;— அது நமது ஸ்வாபதேசார்த்த ஸாகரத்தில் விரியும்.

[உலகமேத்தும் தென்னானாய் இத்யாதி.] "திருமங்கைமன்னன் கட்டின திக்கஜங்க ளிருக்கிறபடி" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தியின் போக்யதை காண்க தென் திசைக்காகத் திருமாலிருஞ்சோலைமலையிலும், வடதிசைக்காகத் திருவேங்கடமலை யிலும், மேற்றிசைக்காகத் திருவரங்கம் பெரியகோயிலிலும், கீழ்த்திசைக்காகத் திருக்கண்ணபுரத்திலும் மதயானைபோலே விளங்குகிறபடியை அநுஸந்தித்தாரா யிற்று. தென்னானை, வடவானை, குடபாலானை, குணபால மதயானை என்ற பதங்கள் விளியுருபு ஏற்றுக் கிடக்கின்றன.

"குணபாலமதயானாய்" என்றவிடத்திற்கு காட்டுமன்னார்ஸந்நிதியிலுள்ள மன்னனார்பரமான வியாக்கியானமுமுண்டு. 'உலகமேத்தும்' என்கிற அடை

மொழி நான்கு யானைகளுக்கும் அந்வயிக்கும்.
ஸூரிகளுக்கு என்றும் கண்முன்னே
பூதனானவனே !.

ர்க்கு என்றும் முன்னாய்] நித்ய
அவர்களுக்கு நித்யதர்சந

பின்னானார் வணங்குஞ்சோதி திருமூழிக்களத்தானாய் !—திருமூழிக்களமென்றது உப லக்ஷணமாய் அர்ச்சாவதார ஸாமாந்ய வாசகமாய் நிற்கும். பரத்வத்திலும் வ்யூஹத் திலும் விபவங்களிலும் அந்தர்யாமித்வத்திலும் அந்வயிக்கப்பெறாதவர்கள் இங்குப் பின்னானார் எனப்படுகின்றனர்; அன்னவர்கட்காகத் திருமூழிக்களம் முதலான அர்ச்சாவதார நிலங்களிலே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்குமவனே !. திருமூழிக்களமென்பது மலைநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்றில் ஒன்று. இத் திருப்பதியைப் பாடினோர் இவ்வாழ்வாரும் நம்மாழ்வாருமே. இருவரும் இப்பதியைப் பற்றிப் பேசுமிடங்களில் 'திருமூழிக் களத்துறையுமொண்சுடர்'' என்றும் ''மூனியே திருமூழிக்களத்து விளக்கே'' என்றும் ''மூழிக்களத்து விளக்கினை'' என்றும் சுடர்ப் பொருளாக அருளிச் செய்தல் குறிக்கொள்ளத்தக்கது: அவ்வாறே இங்கும் ''பின்னானார் வணங்குஞ் சோதி திருமூழிக்களம்'' எனப்பட்டது. எம்பெருமானுடைய திருக்கல்யாண குணங்களுள் ஸௌலப்யம் சிறந்தது; அத்திருக்குணம் இருட் டறையில் விளக்குப்போலே பிரகாசிப்பது அர்ச்சாவதாரத்திலே; அதுதன்னிலும் கேவலம் அறிவிலிகளானவர்கட்கே காட்சிதருமிடமாகிய திருமூழிக்களத்தில் அக் குணம் மிகமிக வொளிபெற்று விளங்குதலால் 'ஒண்சுடர்' என்றும் 'விளக்கு' என்றும் 'சோதி' என்றும் இத்திருப்பதிக்குச் சிறப்பாகச் சொல்லுதல் ஏற்கு மென்ப. ஸகல ஜாதிகளிலும் பிற்பட்டவர்களைப் பின்னானார் என்கிற சொல்லாற் கொள்ளவுமாம். அர்ச்சாவதாரங்களில் புறப்பாடு வியாஜத்தினால் மிகத் தண்ணியர் களுக்கும் காட்சிதருவதுண்டே. ... ... ... ... 10

பட்டுடுக்குமயர்த்திரங்கும்பாவைபேணாள் பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள்*
எட்டுணைப்போதென்குடங்காலிருக்ககில்லாள் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்*
மட்டுவிக்கிமணிவண்டுமுரலுங்கூந்தல் மடமானையிதுசெய்தார்தம்மை*மெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னாள்நங்காய் கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாரார்! 11

(என் பெண்பிள்ளையான பரகால நாயகியானவள்)
பட்டு உடுக்கும் — பட்டுச்சேலையை அரையில் உடுத்துக்கொள்ளுகின்றாள்;
அயர்த்து இரங்கும் — மோஹித்து வருந்தா நின்றாள்;
பாவை பேணாள் — மரப்பாச்சியை விரும்புகின்றிலள்;
பனி நெடு கண் நீர் ததும்ப — குளிர்ந்து நீண்ட நீர் நிரம்பநின்று
பள்ளிகொள்ளாள் — உறங்கலள்
எட்டுணை போது — ஒரு நொடிப்பொழுதும்
என் குடங்கால் இருக்ககில்லாள் — என்மடியிலே பொருந்த மாட்டுகின்றிலள்;
எம்பெருமான் திரு அரங்கம் — எம்பெருமானுடைய ஸ்ரீரங்கக்ஷேத்ரம்
எங்கே என்னும் — எங்கிருக்கின்றது? என்கின்றாள்;
மணி வண்டு — அழகிய வண்டுகள்
மட்டு விக்கி முரலும் கூந்தல் — (உட்கொண்ட) தேன் விக்கி ரீங்காரஞ்செய்யப்பெற்ற கூந்தலையுடையளான
மட மானை — அழகிய மான்போன்ற இப் பெண்பிள்ளையை
இது செய்தார் தம்மை — இப்படிப்பட்ட நிலைமையடைவித்தவர் இன்னாரென்பதை
கட்டுவிச்சி மெய்யே சொல் என்ன — குறி சொல்லுகிறவளே ! உண்மையாகச் சொல்லுவாயாக, என்று நான் கேட்க. (அவள்)
கடல் வண்ணர் இது செய்தார் (என்று) சொன்னாள் — 'கடல்போன்ற நிறத்தையுடையரான பெருமான் இந்நிலைமையை உண்டு பண்ணினார்' என்று சொன்னாள்;
நங்காய் — நங்கைமீர்களே !
(ரக்ஷகனான எம்பெருமானே இது செய்தானான பின்பு)
காப்பார் ஆர் — இவ்வாபத்தைப் பரிஹரிக்க வல்லார் வேறுயாருளர்?

* * *—எம்பெருமானை யநுபவித்தல் பலவகைப் பட்டிருக்கும்; அவனுடைய திருநாமங்களைச் சொல்லி யநுபவித்தல், திருக்கல்யாண குணங்களைச் சொல்லியநுபவித்தல், வடிவழகை வருணித்து அநுபவித்தல், அவனுகந்தருளின திவ்யதேசங்களின் வளங்களைப் பேசியநுபவித்தல், அங்கே அபிமாநமுள்ள ஸ்ரீவைஷ்ணவர்களின் பெருமையைப் பேசியநுபவித்தல்—என்றிப்படி பலவகைப்பட்டிருக்கும் பகவதநுபவம். இவ்வகைகளில் பரம விலக்ஷணமான மற்றொரு வகையுமுண்டு; அதாவது—ஆழ்வார் தாமான தன்மையை விட்டுப் பிராட்டிமாருடைய தன்மையை ஏறிட்டுக்கொண்டு வேற்றுவாயாலே பேசியநுபவித்தல். இப்படியநுபவிக்குந் திறத்தில், தாய்பாசுரம் தோழிபாசுரம் தலைமகள் பாசுரம் என்று மூன்று வகுப்புகளுண்டு. அப்போது ஆழ்வார்க்குப் பரகாலர் என்ற ஆண்மைப்பெயர் நீங்கி, 'பரகாலநாயகி' என்று பெண்மைப்பெயர் வழங்கப்பட்டுவரும். தாய் சொல்வது போலவும் தோழி சொல்வது போலவும் தலைமகள் சொல்வது போலவும் பாசுரங்கள் வெளிவந்தாலும் பாசுரம் பேசுகிறவர் ஆழ்வாரேயாவர். ஒரு ஆறானது பல வாய்க்கால்களாகப் பெருகி அவற்றுக்கு வெவ்வேறு பெயர்களுண்டானாலும் அவற்றுக்குப் பிரதானமான பெயர் ஒன்றேயாயிருக்குமாபோலே, இம் மூன்று நிலைமைகளாகச் சொல்மாலை வழிந்து புறப்பட்டாலும் 'மன்னுமாமணி மாடமங்கைவேந்தன் மானவேற் பரகாலன் கலியன் சொன்ன" என்று ஆழ்வார் பாசுரமாகவே தலைக்கட்டும்.

ஆழ்வார் தாமான தன்மையை விட்டிட்டு ஸ்த்ரீபாவனையை ஏறிட்டுக் கொள்ளுதல் ஏதுக்காக வென்னில்; ஆழ்வார் தாமாக ஏறிட்டுக் கொள்ளுகிறரல்லர், அந்த அவஸ்தை தானே பரவசமாக வந்து சேருகின்றது. புருஷோத்தமனாகிய எம்பெருமானது பேராண்மைக்குமுன் உலகமடங்கப் பெண்தன்மையதாயிருக்கையாலும், ஜீவாத்மாவுக்கு ஸ்வாதந்திரிய நாற்றமேயின்றிப் பாரதந்திரியமே வடிவாயிருக்கையாலும் இவ்வகைகளுக்கேற்ப ஸ்த்ரீபாவனை வந்தேறியன்று என்றே கொள்ளலாம். தண்டகாரண்ய வாஸிகளான முனிவர் இராமபிரானது ஸௌந்தர்யத்திலீடுபட்டுப் பெண்மை விரும்பி மற்றொரு பிறப்பில் ஆயர் மங்கையராய்க் கண்ணனைக் கூடினர் என்ற ஐதிஹ்யமுமுண்டு. ஆழ்வார் அப்படியன்றியே அப்போதே பெண்மையை யடைந்து புருஷோத்தமனை அநுபவிக்கக் காதலிக்கின்றனர்.

ஆண் பெண் என்ற வியவஹாரங்கள் சிற்றின்பநுகர்ச்சிக்கன்றோ ஏற்பட்டவை; பேரின்பவநுபவத்திலே ஊன்றின ஆழ்வார்கள் பெண்மை யெய்துவதாகவும் கொங்கை முதலிய சொற்களையிட்டுப் பாசுரங்கள் கூறுவதாகவும் நிகழ்கிறவிது என்னே? எனின்; விஷயாந்தரகாமம் என்றும் பகவத் விஷயகாமம் என்றும் காமம் இருவகைப்படும்; வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பக்தியே ஆழ்வார்களுக்கு ச்ருங்காரமுறைமையில் பரிணமித்து நிற்கும். சிற்றின்பவநுபவத்திற்குக் கொங்கை முதலியன ஸாதநமாயிருப்பது போல, பகவத்விஷயாநுபவத்திற்குப் பரபக்திபரஜ்ஞாந பரமபக்திகள் இன்றியமையாதனவா யிருப்பதால் அவையே கொங்கைமுதலிய சொற்களால் அருளிச் செயல்களிற் கூறப்படுகின்றன வென்றுகொள்க.

ச்ருங்காரரஸத்தின் ஸம்பந்தம் சிறிதுமின்றியே கேவலம் சுத்த பக்திரஸமாகவே பாசுரங்கள் அருளிச்செய்யக் கூடுமாயினும் ஆழ்வார்கள் ச்ருங்கார ரஸத்தையுங் கலந்து பாசுரங்கள் பேசுவதற்குக் காரணம் யாதெனில்; ஆரோக்யத்திற்குக் காரணமாகிய வேப்பிலை யுருண்டையை உட்கொள்ள இசையக்குமவர்களுக்கு வெல்லத்தை வெளியிற் பூசிக் கொடுத்துத் தின்பிப்பதுபோலச் சிற்றின்பம் கூறும்வகையாற் பேரின்பத்தைக் காட்டி நாட்டுகின்றனரென்ப.

பகவத்விஷயத்தில் அபிநிவேசம் மீதூர்ந்த காலத்தில் தன்நிலைமாறிப் பெண் நிலைபெற்றுப் பேசுமிடத்தில், தாய்பாசுரமென்றும் தலைவிபாசுரமென்றும் தோழி பாசுரமென்றும் இப்படி வகுத்துக் கூறுவதற்கும் உட்கருத்து உண்டு;—தோழியாகப் பேசுவதற்குக் கருத்து:—நாயகனையும் நாயகியையும் இணக்கிச் சேர்க்குமவள் தோழியாவள். திருமந்திரத்தில் பிரணவத்தினால் எம்பெருமானோடு இவ்வாத் மாவுக்குச் சொல்லப்பட்ட அநந்யார்ஹசேஷத்வம் முதலிய ஸம்பந்தங்களை உணருகையே அப்பெருமானோடு இவ்வாத்மா சேருகைக்கு ஹேதுவாகையாலே அந்த ஸம்பந்தஞானமாகிற ப்ரஜ்ஞாவஸ்த்தையைத் தோழியென்பதாகக்கொள்க.

பெற்றுவளர்த்துப் பெண்பிள்ளை யௌவனபருவத்தில் நாயகனிடத்துள்ள அன்புமிகுதியால் அவனிருப்பிடத்துக்குச் செல்லவேணுமென்று பதறுமளவில் படிகடந்து புறப்படுகை குலமரியாதைக்குப் பொருந்தாதென்று தடுப்பவள் உலகில் தாய் எனப்படுவள்; ஸித்தோபாயமான எம்பெருமானைப் பற்றினவர்கள் பேற்றை விளம்பித்துப் பெறுதலில் காரணமில்லாமையாலே அதனை விரைவில் பெறவேணு மென்கிற ஆவல் அதிகரிக்கப்பெற்று அதனால் படிகடந்து நடக்கவேண்டிவந்த வளவில் இது ப்ரபந்நர்குடிக் கட்டுபாட்டுக்குச் சேராதகென்று விலக்கி 'எம்பெரு மான் தானே வந்து விஷயீகரிக்கக் கண்டிருக்கவேணும்' என்று சொல்லித் துடிப்பை அடக்கப்பார்க்கிற நம: பதத்திற் கூறப்பட்ட உபாய அத்யவஸாயமாகிற ப்ரஜ்ஞாவஸ்த்தையைத் தாய் என்பதாகக் கொள்க.

உறவினர் கூட்டக் கூடுகையன்றியே தானாகவே புணர்ந்து நாயகனுடைய மேம்பாட்டிலே ஈடுபட்டுக் குடியின் கட்டுப்பாட்டையும் பாராமல் 'அவனைக் கிட்டி யல்லது நான் உயிர்வாழ்ந்திருக்கமாட்டேன்' என்னும் பதற்றத்தை யுடையவளா யிருப்பவள் உலகில் மகள்; பிரணவத்தினாலும் நமஸ்ஸாலும் சேஷியென்றும் சரண்யனென்றும் உணரப்பட்ட எம்பெருமானுக்கு நாராயண பதத்தினாற் கூறப் பட்ட ஸ்வரூபம் ரூபம் குணம் விபூதி முதலியவற்றின் சேர்க்கையாலுள்ள பெருமையை அநுஸந்தித்து அதனாலே அவனைத் தாமதித்து அநுபவிக்க நிற்க மாட்டாமல் 'அவனே உபாயம்' என்ற கோட்பாட்டை அதிக்கிரமித்து, கிட்டியநுப வித்தாலொழியத் தரிப்புற்றிருக்க வொண்ணாதபடி நடக்கிற ப்ரஜ்ஞாவஸ்த்தையை மகள் என்பதாகக் கொள்க.

இம்மூன்று அவஸ்தைகளுள் முதல் அவஸ்தை நடக்கும்படியைத் தோழி பாசுரத்தாலும், இரண்டாவது அவஸ்தை நடக்கும்படியைத் தாய் பாசுரத்தாலும், மூன்றாவது அவஸ்தை நடக்கும்படியை மகள் பாசுரத்தாலும் வெளியிடுவரென்ற தாயிற்று.

இப்பாசுரந் தொடங்கிப் பத்துப் பாசுரங்கள் தாய்வார்த்தையாகச் செல்லு கின்றன. இவற்றில், ஆழ்வார்க்கு நாயகியவஸ்தை ஒருபுறத்திலும் தாயின் அவஸ்தை மற்றொரு புறத்திலும் நடக்கிறபடியாலே, எம்பெருமானை அநுப விப்பதில் ஆழ்வார்க்கு விரைவு உண்டானமையும் 'நாம் பதறக்கூடாது' என்கிற அத்யவஸாயமும் மற்றொருபுறத்திலுண்டானமையும்விளங்கும். தன்ஸ்வரூபத்தை நோக்குமளவில் அத்யவஸாயம் உண்டாகும்; அவனுடைய வைலக்ஷண்யத்தை நோக்குமளவில் பதற்றம் உண்டாகும்.

[பட்டுடுக்குமித்யாதி.] பரகால திருத்தாயார் தன்மகளின் நிலைமைகளைக்கண்டு கலங்கி 'இவளுக்கு இப்படிப்பட்ட அவஸ்தை உண்டானமைக்கு என்னகாரணம்?' என்று குறிசொல்லுங் குறத்தியாகிய கட்டுவிச்சி யொருத்தியைவினவ, அவள் 'எம்பெருமான் படுத்துகிறபாடு இது' என்று சொல்ல, அதை வினவவந்த உற வினர்பாடே சொலலுகிறாளாய்ச் செல்லுகிறது இப்பாட்டு.

பட்டு உடுக்கும்—இப் பெண்பிள்ளையானவள் புடவையை உடுக்கத் தொடங்கினள்; ஏதுக்காக வென்னில், நல்லவுடையை உடுத்தோமாகில் இவ்வுடையழகை இழக்கலாகாதென்று நாயகன் பதறி ஓடிவருவானென்று கருதி உடுக்கத் தொடங்கினள்; உடை வாய்த்தவாறே அவன் வருவானென்று மகிழ்ந்திருந்தவள் அவ்வளவிலும் அவன் வரக் காணாமையாலே [அயர்த்து இரங்கும்] மோஹிக்கலானள். அயர்த்தல்—மோஹித்தல்; இரங்குதல்—வாய்பிதற்றுதல். இரங்குதல் முன்னரும் அயர்த்தல் அதற்குப்பின்பும் நிகழவேண்டியிருக்க முறைமாறும்படியாயிற்று விஷய வைலக்ஷண்யம்.

"பட்டுடுக்குமயர்த்திரங்கும்" என்பதற்கு வேறொருவகையாகவும் பொருள் கூறுவர்; அதாவது பட்டு உடுக்கும்—இப்போதுதான் அரையில் துணியுடுக்கும் பருவமாயிருக்கச் செய்தேயும், அயர்த்து இரங்கும்—நாயகனைப் பிரிந்த நிலைமையில் மூச்சு அடங்கும்படியாக வுள்ளதாயிற்று இவளுக்கு நிகழ்கிற அவஸ்தை. மோஹித்திருக்கும் நிலைமையில் ஞானம் நடையாடாமையாலே வருத்தமில்லை; அதில் ஞானம் குடிபுகுந்து அரற்றுதலாய்ச் செல்லும் நிலைமையில் வருத்தம் மிகுகையாலே அயர்வுக்குப் பின்பு இரக்கம் கூறப்பட்டது.

வாய்பிதற்றி வருந்திக்கிடந்த பெண்பிள்ளையை ஏதேனுமொருவிதத்தாலே தரிப்பிக்க வேண்டித் திருத்தாயார், பண்டு ஊணுமுறக்கமுமின்றியே இவள் பாவையோடே போது போக்கிக் கிடந்தாளாகையாலே அதைக்கொணர்ந்து தந்தோமாகில் ஒருவாறு ஆறியிருப்பளோவென்று பார்த்துப் பாவையை [மரப்பாச்சியை]க் கொண்டுவந்து காட்டினள்; அது கண்ணுக்கு விஷம்போலே தோற்றினபடியாலே சீறியுதைத்துத்தள்ளினள். பாவையை யொழியப் போது போக்காதிருந்தவளன்றோ இப்போது பாவையை அநாதரிக்கிறாள். பகவத் விஷயத்திலுண்டான ஸங்கம் இதரவிஷயங்களிற் பற்றறுத்தபடி.

பனிநெடுங்கண்ணீர் ததும்பப் பள்ளிகொள்ளாள்—இவளுடைய கண்களின் பரப்பு உள்ளவளவும் நீர் வெள்ளங் கோத்ததாயிற்று. குளிர்ந்த ஆனந்தக் கண்ணீர் பெருக வேண்டுங் கண்களிலே அந்தோ! சோகக் கண்ணீர் பெருகும்படியாயிற்றே!. 'நெடுங்கண்' என்றது மஹானான எம்பெருமானையும் ஒரு மூலையிலே அடக்கவல்லதான கண் என்றவாறு. ஸ்வாபதேசத்தில் கண் என்று ஞானத்தைச் சொன்னபடி. எம்பெருமானைச் சேரப்பெறாத வருத்தத்தினால் ஞானக்கலக்கமுண்டானமை கூறியவாறு.

'படுக்கையிலே சாய்ந்து உறங்கப் புகுந்தால் கண்ணீர்த்ததும்புதல் மாறும்' என்று சொன்னாலும் பள்ளிகொள்கின்றாளில்லை; "தொல்லைமாலைக் கண்ணாரக் கண்டுகழிவதோர் காதலுற்றார்க்குமுண்டோ கண்கள்துஞ்சுதல்" என்கிறபடியே கண்ணுறங்க ப்ரஸக்தி யுண்டோ? கூடிக் களிக்குங்கால் ஆனந்தக்கண்ணீர் பெருகப்பெற்று உறங்கப் பெறாள். பிரிந்து படுங்கால் சோகக் கண்ணீராலே உறங்கப்பெறாள் ஸம்ச்லேஷதசையில் அவன் உறங்கவொட்டான்; விச்லேஷதசையில் விரஹவேதனை உறங்க வொட்டாது.

தன்வயிற்றிற் பிறந்தவளைப்பற்றிச் சொல்லுமிவ்விடத்து 'உறங்காள்' என்று சொல்லலாமாயிருக்க, "பள்ளிகொள்ளாள்" என்று கௌரவச் சொல்லாலே சொன்னது, வயிற்றிற் பிறந்தவரேயாகிலும் பகவத்ஸம்பந்தம் பெற்றவர்கள் உத்தேச்யதைதோற்றக் கௌரவித்துச் சொல்லக்கடவர்களென்கிற சாஸ்த்ரார்த்தத்தை வெளிப்படுத்தும். "கள்ளவிழ்சோலைக் கணபுரம் கைதொழும் பிள்ளையைப் பிள்ளையென் றெண்ணப் பெறுவரே" "விளக்கொளியை மரதகத்தைத் திருத்தண்காவில் வெஃகாவில்திருமாலைப் பாடக்கேட்டு, வளர்த்ததனுல்

பயன்பெற்றேன் வருகவென்று மடக்கிளியைக் கைகூப்பி வணங்கினளே." என்ற பாசுரங்களுங் குறிக்கொள்ளத்தக்கன.

எட்டுணைப்போது என் குடங்காலிருக்ககில்லாள்—பெண்பிள்ளை உறங்கக் காணாமையாலே, முன்பு தன்குடங்காலிலே உறங்கிப் போகக் கண்ட அநுபவத்தாலே இப்போதும் அதில் உறங்கக் கூடுமோ வென்றுபார்த்துத் தனகுடங்காலிலே இருத்தப்பார்த்தாள்; அது நெருப்போடே அணைந்தாற்போல இருக்கையாலே துணுக்கென்றெழுந்தாள்.

இடைவிடாமல் என் குடங்காலிலேயே இருந்து உறங்கிப் போதுபோக்கிக் கொண்டிருந்தவிவளுக்கு இப்போது ஒரு நொடிப்பொழுதும் அதிற் பொருந்தாத படியாவதே! என வருந்திக் கூறுகிறபடி. 'எட்டுணை' 'எட்டனை' என்பன பாட பேதங்கள். (எள் × துணை = எட்டுணை) (எள் × தனை, எட்டனை) எள் எவ்வளவு சிறிதோ அவ்வளவு சிறுபொழுதும்—க்ஷணகாலமும் என்றபடி.

இனி இவள் வாய்வெருவும் பாசுரமேதென்னில், எம்பெருமான் திருவரங்க மெங்கே யென்னும்=என்னை இங்ஙனே துடிக்கவிட்டு ஒரு விசாரமின்றியே கண்ணுறங்குமிடம் எங்கேயென்று பிதற்றுகின்றாள். பாவையைப் பேண வொண்ணாதபடியும் தாய்மடியிலே பொருந்த வொண்ணாதபடியும் என்னைத் தன் பக்கலிலே ஈடுபடுத்திக் கொண்டவனுறையுமிடம் எங்கேயென்கிறாள்.

காதலனுடைய திருநாமத்தைச் சொல்லாமல் 'எம்பெருமான்' என்றது ஏனென்னில்; உற்றாருறவினர் கூட்டக் கூடினதன்றியே இயற்கைப் புணர்ச்சியாகையாலே ஆண்மை பெண்மைகளே ஹேதுவாகக் கலந்த கலவியாமத்தனை; கூட்டுவாருண்டாகிக் கூடிலன்றோ திருநாமமறியலாவது; ஆகையாலே எம்பெருமான் என்கிறாள். ஆனால், அவனூர் திருவரங்க மென்பது மாத்திரம் எங்ஙனே அறியப்பட்டதென்னில்; ஸம்ச்லேஷ காலத்தில் நாயகன் விச்லேஷத்தை நினைத்து 'பிரியேன், பிரியில் தரியேன்' என்று பிரிவை ப்ரஸங்கிக்கிறவளவிலே இவள் நம் ஊரைச் சொல்லிக் கொண்டாவது தரித்திருக்கவேணு மென்று 'நம்மூர் திருவரங்கம் பெரியகோயில்' என்று சொல்லுகையாலே ஊரின்பெயர் தெரியலாயிற்றென்ப.

தன் மகளுக்கு நேர்ந்த நிலைமை பகவத் விஷயத்தில் அவகாஹித்ததனாலுண்டாயதென்று தனக்குத் தெரிந்திருந்தாலும் இதனை உற்றாருறவினர்க்குத் தானே வெளியிடுதலிற் காட்டிலும் கட்டுவிச்சி முகமாக வெளியிடுதல் நன்றென்று கருதிய திருத்தாய் ஒரு கட்டுவிச்சியைத் தேடிநின்றாள்; அவ்வளவிலே,

"கொங்குங் குடந்தையுங் கோட்டியூரும் பேரும்
எங்குந் திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ,
கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று
மண்டியே திரிவேனை யாரிங்கழைத்ததூஉ,
விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடமும்
மண்ணகரம் மாமாட வேளுக்கை தென்குடந்தை
எங்குந்திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ,
நாகத்தணைக் குடந்தை வெஃகாத் திருவெவ்வுள்
நாகத்தணை யரங்கம் பேரன்பில் நாவாயும்
எங்குந்திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ,
வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவு மஃகாத
பூங்கிடங்கின் நீள்கோவல் பொன்னகரும் பூதூரும்
எங்குந்திரிந்து இன்றே மீள்வேனை யாரிங்கழைத்ததூஉ!!!"

என்று தெருவேறக் கூவிக்கொண்டு தானாகவேவந்து சேர்ந்தாள்; அவளை நோக்கித் தாயானவள் "மட்டுவிக்கி மணிவண்டு முரலுங்கூந்தல் மடமானை யிதுசெய்தார் தம்மை மெய்யே கட்டுவிச்சி! சொல்" என்றாள்.

குறிசொல்லுகிற குறத்திக்குக் கட்டுவிச்சி யென்று பெயர்; திருவாய்மொழியில் 'இது காண்மின் அன்னைமீர் இக்கட்டுவிச்சி சொற்கொண்டு" என்றும், சிறிய திருமடலில் "அது கேட்டுக் காரார் குழற்கொண்டைக் கட்டுவிச்சிகட்டேறி" என்றும் வருவன காண்க. ஐயங்கார் திருவரங்கக் கலம்பகத்தில்—'காலமுணர்ந்த குறத்திநான் கருதினை யொன்றது சொல்லுவேன், பாலகனுச்சியி லெண்ணெய் வார் பழகியதோர் கலை கொண்டுவா, கோலமலர்க்குழல் மங்கை! நின்கொங்கை முகக்குறி நன்றுகாண், ஞாலமுவந்திட நாளையே நண்ணுவை நம்பெருமாளையே' என்று கட்டுவிச்சியின பாசுரமாகப் பாடியுள்ள செய்யுளும் குறிக்கொள்ளத்தகும்.

[மட்டுவிக்கி இத்யாதி] மதுவைக் கழுத்தளவும் பருகி ரீங்காரஞ் செய்கின்ற வண்டுகள் படிந்த கூந்தலையுடையளான இப்பெண்பிள்ளையை, இதுசெய்தார் தம்மை—குழலிலணிந்த பூவைச்சருகாக்கி வண்டுகளைப் பட்டினியடிக்கையாகிற இத்தொழில் செய்த பெரியவரை, கட்டுவிச்சி! மெய்யே சொல் என்ன—'வாராய் குறத்தியே; நெஞ்சில் தோன்றின தொன்றைச் சொல்லிவிடக்கூடாது; உள்ளபடியே சொல்ல வேணும்' என்று நான் கேட்க, [கடல்வண்ணர் இது செய்தார் என்று சொன்னாள்] கடலின் நிறம்போன்ற நிறமுடையரான பெரிய பெருமாள் செய்த தெய்வ நன்னோய்காண் இது! என்றாள். கடல் கொண்டு போன வஸ்துவை நம்மால் மீட்கப்போமோ? என்றாள்.

காப்பார் ஆரே?—வேலியே பயிரையழித்தால் நோக்குவாருண்டோ? ஆக இப்பாசுரத்தால், எம்பெருமானுடைய நிர்ஹேதுக விஷயீகாரம் ஆழ்வார்க்கு வாய்த்தபடியும், இது நித்யகைங்கரியத்திற்கு உறுப்பாகாமல்*ஆற்றங்கரை வாழ் மரம்போல் அஞ்சும்படியாக இவ்விபூதியிலே இருக்க வைக்கையாலே நோயாகச் சொல்லப்படுகிற தென்பதும், இது தான் ஆத்மஸ்வரூபாநுபந்தியாகையாலே ஆத்மாவுள்ளவரைக்கும் நிலைத்திருக்கக் கூடியதாய் அபரிஹார்யமான தென்றும், இவ்வுண்மையை ஜ்ஞாநாதிகரான பாகவதர்கள் அறிவார்களென்றும் சொல்லிற்றாயிற்று.

நங்காய்!—தாய் தனது தோழியை நோக்கிச் சொல்லுகிறபடி. ... 11

நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்கும்சோரும் நெடிதுயிர்க்குமுண்டறியாளுறக்கம்பேணாள்*
நஞ்சரவில்துயிலமர்ந்தநம்பீ! யென்னும் வம்பார்பூவயலாலிமைந்தாவென்னும்*
அஞ்சிறையபுட்கொடியேயாடும்பாடும் அணியரங்கமாடுதுமோ? தோழீ! யென்னும்*
எஞ்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன் இருநிலத்தோர்பழிபடைத்தேன் ஏ! பாவமே. 12

| | |
|---|---|
| (இப் பெண்பிள்ளை) | |
| நெஞ்சு | மனமானது |
| உருகி | நீர்ப்பண்டமாயுருகி |
| கண் பனிப்ப நிற்கும் | கண்ணீர் பெருக நின்றாள்; |
| சோரும் | |
| நெடிது உயிர்க்கும் | பெருமூச்சு |
| உண்டு அறியாள் | போஜனம் செய்தறியாள்; |
| உறக்கம் | உறங்க விரும்புகின்றிலள்; |
| நஞ்சு அரவில் துயில் அமர்ந்த நம்பீ என்னும் | விஷத்தை உமிழ்கின்ற திருவனந்தாழ்வான் மீது யோக நித்திரை புரிகின்ற நம்பீ! என்கின்றாள்; |
| வம்பு ஆர் பூ வயல் ஆலி மைந்தா என்னும் | பரிமளம் மிக்க பூக்களையுடைய கழனிகள் சூழ்ந்த திருவாலியிலுள்ள நித்ய யுவாவே! என்கிறாள்; |

| | | | |
|---|---|---|---|
| அம் சிறைய புள் கொடியே நம் | அழகிய சிறகையுடையகொடியாகிய பெரிய திருவடியை வ நகரிக்க அடுகின்றாள்; | என் சிறகின் கீழ் அடங்கா | என் கைக்கடங்காத |
| பாடும் | பாடு | பெண்ணை பெற்றேன் | பெண்மகளைப்பெற்ற நான் |
| | | இரு நிலத்து | விசாலமான இப்பூமண்டலத்திலே |
| தோழீ அணி அரங்கம் ஆடுதுமோ என்னும் | 'தோழீ! (நாம்) திருவரங்கத் துறையிலே படிந்தாடப் பெறுவோமோ?' என்கின்றாள்; | ஓர் பழி படைத்தேன் | ஒப்பற்ற பழியை ஸம்பாதித்துக் கொண்டேன்; |
| | | ஏபாவம் | அந்தோ! |

* * *—கீழ்ப்பாட்டில் 'கடல்வண்ணர்' என்று கட்டுவிச்சி சொன்ன திருநாமத்
தைத் திருத்தாயார் வினவவந்தார்க்குச் சொல்லி அநுவதிக்கையாலும், எம்பெருமான்
திருவரங்கமேங்கே' என்று தானும் வாய் வெருவுகையாலும் முந்திய அவஸ்தையிற்
காட்டிலும் சிறிது உணர்த்தி பிறந்தது; அவ்வளவிலும் காதலன் வந்து முகங்
காட்டப் பெருமையாலே ஆற்றாமை மீதூர்ந்து இடைவிடாமல் கூப்பிடத் தொடங்கி
னாள்; அதனை வினவவந்தார்க்குச் சொல்லி க்லேசப்படுகிறாள் திருத்தாய். இப்
பெண்பிள்ளை நின்றநிலை இது; இவளுடைய ஸ்வரூபஹாநி இது; எனக்கு இவள்
அடங்காதபடியானது இது; இத்தனைக்கும் நான் செய்த பாபமே காரணமாயிற்
றென்று சொல்லி யிரங்குகிறாளாயிற்று.

கீழ்ப்பாட்டில் "அயர்த்து இரங்கும்" என்று சொன்ன இரக்கத்தின் வகை
களை "நெஞ்சுருகிக் கண்பனிப்ப நிற்கும் சோரும்" இத்யாதியாலே விவரிக்கிறபடி.
நெஞ்சு உருகி—நெருப்பினருகே மெழுகுபோலே விரஹாக்நியாலே நெஞ்சு பதஞ்
செய்யா நின்றது. கண்பனிப்ப—உருகின வெள்ளம் உள்ளடங்காமையாலே, நீர்
நிரம்பின ஏரிக்குக் கலுங்கலெடுத்துவிடுங் கணக்கிலே கண்வழியே புறவெள்ள
மிடுகிறபடி.

நிற்கும்—க்ருத்யாக்ருத்ய விவேகம் பண்ணக்கடவதான நெஞ்சு அழிந்து
போகையாலே ஒரு வியாபாரமும் செய்யமாட்டாதே நிற்கின்றாள். சோரும்—துவட்சி
யடைகின்றாள்; நெடிது உயிர்க்கும்—உள்ளுண்டான சோகாவேசத்தாலே நெடுமூச்
செறியா நின்றாள். உண்டறியாள்—உணவு இப்படியிருக்குமென்பதே இவளுக்குத்
தெரியாது; கூடியிருக்குங் காலத்திலே "உண்ணுஞ்சோறு பருகுநீர் தின்னும்
வெற்றிலையு மெல்லாங்கண்ணன்" என்றிருக்கையாலே ஊண் இல்லை; ஆக உண
வில் வ்யுத்பத்தியேயில்லை யென்றதாயிற்று.

உறக்கம் பேணாள்—'நங்காய்! காதலனுக்கு உன் உடம்பன்றோ தாரகம்;
உறங்காவிடில் தேஹம் கெட்டுப்போகுமே; காதலன் பிறகு வருந்துவானே; அவ
னுடைய போகம் குன்றாமைக்காகவாவது சிறிது உறங்கவேணும்' என்று சொன்
னாலும் உறங்கப் பார்க்கின்றிலள்: இவை எல்லாம் எங்ஙனேயாயினுமாயிடுக;
ஸ்வரூபஹாநியாம்படி வாய்விட்டுக் கதறுகின்றாளே!, அவன் பெயரைச் சொல்லிக்
கூப்பிடுகின்றாளே!, இதனைப் பாருங்கோளென்கிறாள் நஞ்சரவில் என்று தொடங்கி.

நஞ்சரவில் துயிலமர்ந்த நம்பியென்னும்—திருவனந்தாழ்வானுடைய பரிவுக்கு
உகந்து 'நஞ்சரவு' என்கிறாள். "ஆங்காரவாரமது கேட்டு அழலுமிழும்
பூங்காரரவு" என்ற திருமழிசைப்பிரான் பாசுரத்தை இங்கு அநுஸந்திப்பது.
பரிவின் மிகுதியினால் அச்சத்திற்கு நிலமல்லாத ஸ்தானத்திலும் அஞ்சிக் காப்பிடு
கின்ற திருவனந்தாழ்வானுடைய தன்மைக்குத் தான் உகந்தமை தோற்ற
'நஞ்சரவு' என்றாளாயிற்று. மென்மை, குளிர்த்தி, பரிமளம் என்று படுக்
கைக்கு உரியனவாகச் சொல்லப்படுகிற லக்ஷணங்கள் சாதியியல்வாகவே
அமையப்பெற்ற ஆதிசேஷன் நம் தலைவனுக்குப் படுக்கையாகப் பெற்ற பாக்கியம்

என்னே! என்று உகக்கிறாள் போலும். இப்படிப்பட்ட படுக்கையிலே படுத்து, வீசிவில்விட் டெழுப்பினாலும் எழுந்திராதபடி கண்வளர்ந்தருளும்போது தகட்டி லழுத்தின மாணிக்கம்போலே அழகால் குறையற்று விளங்குபவனே! என்று வாய்விட்டுக் கூப்பிடாநின்றாள்.

இப்படி உகந்து சொல்லுகிறா ளென்கை யன்றியே ப்ரணய ரோஷந் தோற்றச் சொல்லுகிறாளென்றுங் கொள்ளலாம்: எங்ஙனே யென்னில்; [நஞ்சரவு] பிரதிகூலர் கிட்டாமைக்கு நஞ்சை உமிழ்கிறா னென்றிருந்தோம்; அது ஒரு வியாஜ மாத்திரமாய் என்னைப் போன்ற அநுகூலர்களும் கிட்டவொண்ணாதபடி விஷத்தை உமிழ்கின்றானே!' இருவர் படுக்கவேண்டிய படுக்கையிலே ஒருவராய் எங்ஙனே துயி லமர்ந்திருக்கிறார்! எனக்குத் தாயின் மடியும் பொருந்தாதிருக்க அவர்க்கு எங்ஙனே படுக்கை பொருந்திற்று என்றவாறு.

வம்பார்பூ வயலாலிமைந்தா வென்னும்—தன்னைப் பாணிக்ரஹணம் பண்ணின விடத்தைச் சொல்லி வாய்வெருவுகின்றாள். எப்போதும் வஸந்தருதுவே விளங்கும் படியாகவுள்ள வயல்களாற் சூழப்பட்ட திருவாலியிலே தன்னுடைய இளம்பரு வத்தைக் காட்டி என்னைக் கொள்ளை கொண்டவனே! என்கின்றாள். நானிருக்கு மிடம் நீரும் பூவும் பரிமளமுமின்றி வறண்டுகிடக்க, தானிருக்குமிடம் தளிரும் முறியு மாய் விளங்குவதே! என்று ஊடல் தோற்றச் சொல்லுகிறபடியுமாம். தான் வாடிக் கிடக்கையாலே தானிருக்குமிடமும் வாடிக்கிடக்குமென்க.

"மைந்தா வென்னும்" என்கிறவிடத்திலே வியாக்கியான வாக்கியம் காண்மின்— "என்னையுபேக்ஷிக்கப் பார்த்தால் தன் பருவத்தைக் காட்டி என்னை அநர்ஹ மாக்குவானேன்? அடியிலே நான் விஷய ப்ரவணனாய்த் திரிய 'வாடினேன்' என்று சொல்லும்படி உன் போக்யதையைக் காட்டிப் புறம்புள்ள துவக்கை யறுத்து உன்னையொழியச் செல்லாதபடி பண்ணிற்று இன்று கைவிடுகைக்கோ?"

அஞ்சிறைய புட்கொடியே ஆடும்பாடும்—பிராட்டிக்குத் திருமணம் நடத்திவைக்க வந்த விச்வாமித்திர முனிவனைப் போன்று தனக்குப் பாணிக்ரஹணம் பண்ணி வைக்கக் கொண்டுவந்த பெரியதிருவடியே நெஞ்சில் உறைத்திருக்கையாலே அவனை அநுகரிக்கின்றாளாயிற்று. பெரிய திருவடி நெடுந்தூரத்திலே தோற்றித் தேற்று விக்கும்படியை நினைத்துக்கொண்டு அவன் வரும் வழியைநோக்கிக் கிடந்தாள்; அவன் வரக் காணாமையாலே அவனை அநுகரிக்கத் தொடங்கினாள் போலும். விடாய்த்தவர்கள் ஹஸ்தமுத்ரையாலே தண்ணீர் வேண்டுமாபோலே பெரிய திரு வடியின் வரவில் தனக்குண்டான விருப்பம் தோன்ற அவன் வருகிற ரீதியை அபிநயிக்கத் தொடங்கினாளென்க. அநுகாரத்தாலே ஒருதேறுதல் பிறப் பதுண்டே; அதனாலே வாய்திறக்கவல்லளாய் ஆர்த்தி தோற்றக் கூப்பிடும்படியைச் சொல்லுகிறது பாடும் என்று. கேட்டவர்கள் கண்ணுங் கண்ணீருமாய்க் கொண்டு கால் தாழ்ந்திருக்கும்படியான த்வனி விசேஷமே பாட்டாவது.

அவ்வளவிலே இவளைத் தேற்றவேண்டித் தோழியானவள் காய்ந்த தலையும் மெலிந்த வடிவும் உலர்ந்த முகமுமாய்க்கொண்டு தன் ஆர்த்தியெல்லாம் வடிவிலே தோற்றும்படி முன்னேவந்து நின்றாள்; அவள் முகத்தைப் பார்த்து, தோழீ! நாம் கோயிலிலே போய்ப் பெரிய பெருமாளை அநுபவிக்கக்கூடுமோ?' என்கின் றாள். 'ஆடும்' என்றது கலவிசெய்ய விருப்பத்தைக் கூறியவாறு. தமிழர் கலவி யைச் 'சுனையாடல்' 'புனலாடல்' என்னுமாற்றாற் கூறுவர். "பொற்றாமரைக் கயம் நீராடப்போனாள் பொருவற்றாளென்மகள்" என்பர் மேலும்; "தயரதன் பெற்ற மரதகமணித்தடம்" என்கிறபடியே எம்பெருமான் தடாகமாகச் சொல்லப் பட்டிருத்தலுங்காண்க.

இங்ஙனம் தன்மகளின் தன்மைகளை எடுத்துரையாநின்ற தாயைநோக்கி "உன் வயிற்றிற் பிறந்தவள் ஸ்வரூபஹாநியிலே இழியப்புகுந்தால் அடக்கிக் காக்கவேண்டாவோ?" என்று சில மூதறிவாட்டிகள் சொல்ல, அந்தோ! நான் என்செய்வேன்? என்சிறகின் கீழடங்காப் பெண்ணைப் பெற்றேனே! என்கிறாள். ஆச்ரயணதசையில் அவன் தானே மேல்விழுந்து ஆச்ரயிப்பித்துக் கொள்ள ஆச்ரயித்ததுபோலவே போகதசையிலும் அவன் செய்தபடி கண்டிருக்கைகாண் ஸ்வரூபம்; நீ மேல்விழுகை பெண்மைக்குப் போராதுகாண்' என்று எனக்குத் தெரிந்தமட்டில் நான் சொன்னாலும் அதைச் செவியிலுங் கொள்ளாமல் உதறித் தள்ளாநின்றாள். 'என்சிறகு' என்றது 'என் பக்ஷத்திலே' என்றபடி. எம்பெருமானுடைய பக்ஷத்திலே ஒதுங்கினவள் என் பக்ஷத்திலே ஒதுங்கி என் வார்த்தையை எங்ஙனே கேட்பள். [அடங்காப்பெண்ணைப் பெற்றேன்.] 'என்னநோன்பு நோற்றாள் கொலோ இவளைப் பெற்ற வயிறுடையாள்' என்றாற்போலே பிறர் சொல்லும்படியாகவும் 'ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர் நானேமற்றாருமில்லை' என்றாற்போலே தானே சொல்லிக் கொள்ளும்படியாகவும் மகளிடத்தில் வைலக்ஷண்யமிருப்பதை நோக்கி, பெற்றேன் என்று உள்ளூற ஆனந்தம் பொலியச் சொல்லிக்கொள்ளுகிறாள். தன்னை, நொந்து பேசிக்கொள்வதாகப் புறம்புள்ளார்க்குத் தோற்றும். மகளுடைய குற்றமொன்றுமில்லை, இவளைப்பெற்றெடுத்த என்னுடையகுற்றமேகாண்மின் இத்தனையும் - என்பது தோன்றச்சொல்லுகிறபடி.

[இருநிலத்து ஓர்பழிபடைத்தேன் ஏ பாவமே] பரந்த இப்பூமண்டலத்திலே என்னைப் போல் பெண் பெற்றவர்களுமில்லை, என்னைப்போல் பழிபடைத்தவர்களுமில்லையென்கிறாள். இப்பழி உத்தேச்யமென்பது விளங்க ஓர்பழி என்கிறாள். பகவத் விஷயத்தில் உண்டாகிற பதற்றமெல்லாம் ஞானவிபாககார்யமான ப்ரேமத்தின் பரீவாஹமென்று உகப்பார்க்கு இதுவே புகழாமிறே. ... ... 12

**கல்லெடுத்துக்கல்மாரிகாத்தாயென்றும் காமருபூங்கச்சியூரகத்தாயென்றும்***
**வில்லிறுத்துமெல்லியல்தோள்தோய்ந்தாயென்றும் வெஃகாவில்துயிலமர்ந்தவேந்தேயென்றும்***
**மல்லடர்த்துமல்லரையன்றட்டாயென்றும் மாகீண்டகைத்தலத்தென்மைந்தாவென்றும்***
**சொல்லெடுத்துத்தன்கிளியைச்சொல்லேயென்று துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. 13**

(இப் பெண்பிள்ளை)

| | |
|---|---|
| கல் மாரி | (இந்திரன் பெய்வித்த) கல் மழையை |
| கல் எடுத்து | ஒருமலையை யெடுத்துப் பிடித்து |
| காத்தாய் | தடுத்தவனே! என்றும், |
| காமரு பூ கச்சி ஊரகத்தாய் என்றும் | விரும்பத்தக்கதாய் அழகியதான காஞ்சிபுரத்தில் திருவூரகத்தில் நின்றருளினவனே! என்றும், |
| வில் இறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய் என்றும் | வில்லைமுறித்துப் பிராட்டியைக் கைப்பிடித்தவனே! என்றும், |
| வெஃகாவில் துயில் அமர்ந்த வேந்தே என்றும் | திருவெஃகாவில் பள்ளி கொண்டருளும் பிரபுவே! என்றும், |
| அன்று | முன்பொருகாலத்தில் |
| மல்லரை | மல்லர்களை |
| மல் அடர்த்து | வலிமையடக்கி |
| அட்டாய் என்றும் | ஒழித்தவனே! என்றும் |
| மாகீண்ட | குதிரை வடிவங்கொண்டு வந்த கேசியைக் கீண்டொழித்த |
| கைத்தலத்து | திருக்கைகளையுடைய |
| என் மைந்தா என்றும் | எனது மைந்தனே! என்றும் |
| தன் கிளியை | தன்னுடைய கிளியை நோக்கி |
| சொல் எடுத்து | திருநாமத்தின் முதற் சொல்லை யெடுத்துக் கொடுத்து |
| சொல் என்று | (மேலுள்ளதை நீயே) சொல் என்று சொல்லி |

(அது சொல்லத் தொடங்கினவாறே)

| | |
|---|---|
| துணை முலை மேல் | உபயஸ்தனங்களிலும் |
| துளி சோர | கண்ணீர் பெருகப்பெற்று |
| சோர்கின்றாள் | துவளாநின்றாள். |

* * *—உலகிற் பெண்மணிகளெல்லாம் ஒரு பைங்கிளியை வளர்த்துப் போதுபோக்குதல் இயல்வு. அப்படியே இப்பரகால நாயகியும் ஒரு கிளியை வளர்த்திருந்தாள்; அதற்கு எம்பெருமானது திருநாமங்களைக் கற்பித்திருந்தாள். இவள் உல்லாஸமாயிருக்குங் காலங்களிலே அக்கிளி அருகிருந்து இன்சொல் மிழற்றும்; இப்போது இவள் தளர்ந்திருப்பது கண்டு கிளி தானும் தளர்ந்திருந்தமையால் ஒரு மூலையிலே பதுங்கிக்கிடந்தது. தாயானவள் அக்கிளியை மகளின் முன்னே கொணர்ந்து விட்டு இவள் உகக்கும்படியான சில திருநாமங்களைச் சொல்லி மகிழ்விக்குமாறு ஏவினள்; ஏவினவிடத்தும் அது பரகாலநாயகியின் முகத்திலே பயிர்ப்பைக்கண்டு ஒன்றும் வாய்திறக்க மாட்டிற்றில்லை; அவள்தானே கிளியை நோக்கி 'நான் கற்பித்த திருநாமங்களைச் சொல்லாய், சொல்லாய்' என்ற விடத்தும் அது வாய்திறவாதிருக்க, முன்புதான் கற்பித்த திருநாமங்களின் தலைப்பை எடுத்தெடுத்துக் கொடுத்து 'இதைச்சொல், இதைச்சொல்' என்ன அதுவும் அப்படியே சொல்ல. அதுசொன்ன திருநாமங்களைக் கேட்டுக் கண்ணுங் கண்ணீருமாய் நின்றபடியை எடுத்துரைக்கிறாள் திருத்தாய்.

கண்ணபிரான் சோலைசூழ்ந்த பெரியகுன்றை யெடுத்து ரக்ஷித்திருக்க இவள் "கல் எடுத்து" என்று ஒரு சிறிய கல்லையெடுத்தானாகச் சொல்லுவது எங்ஙனேயெனின்; அவ்வளவு அநாயாஸமாக எடுத்தமை சொன்னபடி. "கொடியேறு செந்தாமரைக் கைவிரல்கள் கோலமுமழிந்தில வாடிற்றில, வடிவேறு திருவுகிர் நொந்துமில மணிவண்ணன் மலையுமோர் சம்பிரதம்" என்ற பெரியாழ்வார் திருமொழியுங் காண்க. வீரபத்நியாகையாலே "பொல்லாவரக்கனைக் கிள்ளிக்களைந்தானை" என்றாற்போலே சொல்லுகிறாளென்க.

"கல்லெடுத்துக் கல்மாரி காத்தாய்" என்ற சொல்நயத்தை நோக்கி பட்டர் அருளிச்செய்வராம்—"கல்மழையாகையாலே கல்லையெடுத்து ரக்ஷித்தான், நீர் மழையாகில் கடலை யெடுத்து ரக்ஷிக் தங்காணும்" என்று, இதனால், இன்னதைக் கொண்டு இன்னகாரியஞ் செய்வதென்கிற நியதி எம்பெருமானுக்கில்லை யென்பதும் ஸர்வசக்தனென்பதும் விளக்கப்பட்டதாம். "பிறரால் வந்த ஆபத்திலோ ரக்ஷிக்கலாவது? உன்னால்வந்த ஆபத்தில் ரக்ஷிக்கலாகாதோ? கல்வர்ஷத்திலகப்பட்டாரையோ ரக்ஷிக்கலாவது? துக்கவர்ஷத்திலகப்பட்டாரை ரக்ஷிக்கலாகாதோ? ஒரு ஊராக நோவுபட்டாலோ ரக்ஷிக்கலாவது? அவ்வூராகப் பட்ட நோவை ஒருத்தி பட்டால் ரக்ஷிக்கலாகாதோ? என்னுடைய ரக்ஷணத்துக்கும் ஏதேனும் மலையை யெடுக்கவேணுமோ? மலையை யெடுத்த தோளைக் காட்டவமையாதோ?" என்ற பரமபோக்யமான வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

காமரு பூங்கச்சியூரகத்தாயென்றும்—கல்லெடுத்துக் கல்மாரிகாத்த காலத்தை இழந்து பிற்பட்டவர்களுக்கும் ஸர்வஸ்வதானம் பண்ணுகைக்காகவன்றோ திருவூரகத்திலேவந்து அந்த க்ருஷ்ணவதாரத்திற்குத் தோள்தீண்டியான த்ரிவிக்ரம வேஷத்தோடே நின்றருளிற்று; இதுவும் பாவியேனுக்குப் பயன்படாதொழிவதே! என வருத்தந் தோற்றக் கூறுகிறபடி.

இப்பாட்டில், விபவாவதார சேஷ்டிதங்களைக் கூறுவன சில அடிகளும் அர்ச்சாவதார நிலையைக் கூறுவன சில அடிகளுமுள்ளன; இவை மாறி மாறிக் கோக்கப்பட்டிருக்கின்றன: அவதாரங்களை ஒரு கோர்வையாகவும் திருப்பதிகளை ஒரு கோர்வையாகவும் அநுபவிக்கலாமே, அப்படி அநுபவியாமல் கலசிக்கலசி அநுபவிக்கிறார்; ஏனென்னில்; பிடிதோறும் நெய் வார்த்து உண்பாரைப்போலே திருப்பதிகளையொழியத் தமக்குச் செல்லாதபடியாலே திருப்பதிகளைப் பேசுகிறார். திருப்பதிகளின் அடிப்பாடு சொல்லவேண்டுகையாலே அவதாரத்திலிழிகிறார். மற்றையாழ்வார்களுக்கும் இவர்க்குமுண்டான வாசி இது காண்மின்: அவர்கள், மேன்மையை அநுபவிக்கவேண்டில் பரவாஸுதேவ நிலையைப் பேசுவர்கள்;

நீர்மையை அநுபவிக்கவேண்டில் அவதாரங்களைப் பேசுவர்கள்; அந்த நீர்மையை ஸாக்ஷாத்கரிக்கைக்காகத் திருப்பதிகளிலே இழிவர்கள். இவ்வாழ்வார், மேன்மையை யநுபவிப்பதும் திருப்பதிகளிலே, நீர்மையை யநுபவிப்பதும் திருப்பதிகளிலே, அதை ஸாக்ஷாத்கரிப்பதும் திருப்பதிகளிலே.

வில்லிறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாயென்றும்—'இவ்வில்லை முறித்தார்க்கு இவளை விவாஹம்பண்ணிக் கொடுக்கக்கடவேன்' என்று ஜநகன் சொல்லிவைத் திருக்கையாலே இராமபிரான் வில்லை யெடுத்து நாணேற்றி வளைக்கப் புக்கவளவிலே வில் முறிந்தது; அவ்வளவிலே நெடுநாளைய குறைதீரப் பெற்ற ஜநகமஹாராஜன் பொற்கிண்டியைக் கொணர்ந்து தாரை வார்த்துத் தத்தம் பண்ணப்புக, அதுகண்ட இராமபிரான் 'நான் ஏதேனும் நெடுநாளைய ப்ரஹ்மசாரியாயிருந்து பெண் கொடுப்பாராருமில்லையே யென்று தடுமாறிப் பெண்தேடி வந்தேனோ; ராஜகுமார னுகையாலே வீரவாசி கொண்டாடவந்தேனத்தனை; உமக்குப் பெண் விவாஹஞ் செய்ய வேண்டியிருந்தால் அதுவிஷயம் நமக்குத் தெரியாது; வஸிஷ்டாதிகளையும் நமது ஐயரையும் கேட்டுக்கொள்வது' என்று கம்பீரமாகச் சில வார்த்தைகள் சொல்ல, வில்லைமுறித்த ஆண்பிள்ளைத் தனத்தையும் வார்த்தை சொன்ன சீர்மையையுங் கண்டு பிராட்டி நீராயுருகினாள்; வில் முறித்த ஆயாஸந்தீர அவளது தோளிலே தோய்ந்தானிராமபிரான்: அதைப் பேசுகிறாள் வில்லிறுத்து மெல்லியல் தோள் தோய்ந்தாய்! என்று. இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத் தில் "...........வில்லைமுறித்த ஆண்பிள்ளைத் தனத்தையும் வார்த்தை சொன்ன சீர்மையையுங் கண்டு நீராடினாள் பிராட்டி" என்று சில அச்சுப்பிரதிகளிலும், "இனியளானாள் பிராட்டி" என்று சில அச்சுப்பிரதிகளிலும் பதிப்பித்திருக்கக் காண்கிறது; இரண்டு பாடமும் பிழை; "நீரானாள்" எனத் திருத்திக்கொள்க. தோய்தல் நீரிலேயாகையாலே இங்குத் 'தோய்ந்தாய்' என்ற சொல்நயத்துக்கு ஏற்ப 'நீரானாள்' என்றது.

வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே! என்றும்—பிராட்டியைப் பாணிக்ரஹணம் பண்ணிவந்து அந்த இளைப்புத்தீரவும் அந்தமணக்கோலம் விளங்கவும் துயிலமர்ந்த விடம் திருவெஃகாவென்கிறாள். ஒரு ராஜகுமாரன்வந்து கிடக்கிறான் என்ன லாம்படி யிருக்கிறதாயிற்று,

[மல்லடர்த்து இத்யாதி.] மஹாபாபிகளான மல்லர்கள் ஏதேனுமொரு வியா ஜத்தாலே உன்னுடைய தோளோடே அணையப்பெற்றார்கள், அவ்வளவு பாக்கிய மும் எனக்குக் கிடைக்கவில்லையே; என்கிற கிலாய்ப்புத்தோற்றச் சொல்லுகிறபடி. நானும் இத்தன்மை நீங்கிப் பிரதிகூலர் வடிவெடுத்து வந்தேனாகில் உன் தோளோடே அணையப்பெறலாம் போலும் என்கிறாளென்றுங் கொள்க.

மாகீண்ட கைத்தலத்து என்மைந்தா! என்றும்—திருவாய்ப்பாடியில் ஆய்ச்சிகளுக்கு முற்றூட்டான திருமேனியைப் பாதுகாத்துக் கொண்டாய்; அதை எனக்கு ஒரு நாள் காட்டினால் போதுமே, இதுவும் அரிதாயிற்றே! என்று நொந்து பேசுகிறபடி.

சொல்லெடுத்து—ஆக இப்படிப்பட்ட திருநாமங்களின் ஆதியை யெடுத்துக் கொடுத்துக் கிளியைச் சொல்லுவிக்க, அவற்றின் பொருள் நெஞ்சில் உறைக்கவே இப்படி ஆபத்துக்களுக்கு உதவுமவனாகப் புகழ்பெற்றவன் இன்று நம்மளவிலே உதவாதொழிவதே! என்று கண்ணுங் கண்ணீருமாயிருந்து கரைகிறபடியைத் திருத்தாயார் கூறினாளாயிற்று. ... ... ... ... 13

முளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலை மூவாமூவுலகுங்கடந்தப்பால்முதலாய்நின்ற*
அளப்பரியவாரமுதையரங்கமேயவந்தணனை அந்தணர்தம்சிந்தையானை*
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில் வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு*
வளர்த்ததனால்பயன்பெற்றேன்வருகவென்று மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. 14

| | | | |
|---|---|---|---|
| முளை கதிரை | இளங்கதிரவனைப் போன்றவனும் | திருத்தண் காவில் விளக்கு ஒளியை | திருத்தண்காவில் விளக்கொளி யெம்பெருமானாய் ஸேவை ஸாதிப்பவனும் |
| குறுங்குடியுள் முகிலை | திருக்குறுங்குடியில் காளமேகம்போல் விளங்குபவனும் | மரதகத்தை | மரதகப்பச்சைபோல் விரும்பத்தக்க வடிவுபடைத்தவனும் |
| மூவா மூ உலகும் கடந்து அப்பால் | நித்யமாய் மூவகைப்பட்டதான ஆத்ம வர்க்கத்துக்கும் அவ்வருகாய் பரமபதத்திலே | வெஃகாவில் திருமாலை | திருவெஃகாவில் கண்வளர்ந்தருளுகிற திருமகள் கொழுநனுமானவனை |
| முதல் ஆய் நின்ற | (உபயவிபூதிக்கும்) முதல்வனாய்க்கொண்டு எழுந்தருளியிருப்பவனும் | பாட கேட்டு | (கிளி) பாட (அப்பாசுரங்களை)க் கேட்டு |
| அளப்பு அரிய | (ஸ்வரூபரூபகுணங்களில்) அளவிடக்கூடாதவனும் | மட கிளியை | அழகிய அக்கிளியை நோக்கி |
| ஆர் அமுதை | அருமையான அம்ருதம் போன்றவனும் | வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக | ‘உன்னை வளர்த்ததனால் ப்ரயோஜனம் பெற்றேன் இங்கேவா’ என்றழைத்து |
| அரங்கம் மேய அந்தணனை | திருவரங்கமாநகரில் பொருந்திய பரமபரிசுத்தனும் | | |
| அந்தணர் தம் சிந்தையானை | வைதிகர்களின உள்ளத்தை இருப்பிடமாக வுடையவனும் | கை கூப்பி வணங்கினாள் | அதற்கு ஒரு அஞ்சலியும் செய்து நமஸ்கரித்தாள். |

* * *—“சொல்லெடுத்துத் தன் கிளியைச் சொல்லே யென்று துணைமேல் துளிசோரச் சோர்கின்றாளே” என்றது கீழ்ப்பாட்டில். ‘இவள் தானே சில திருநாமங்களை முதலெடுத்துக் கொடுத்துச் சொல்லச் சொல்லுகையாலே சொன்னோம்; நாம் சொன்னதுவே இவளுக்கு மோஹஹேதுவாயிற்றே!’ என்று கவலைகொண்ட கிளியானது, முன்பு இவள் தெளிந்திருந்த காலங்களில் தனக்கு உஜ்ஜீவநமாகக் கொண்டிருந்த திருநாமங்களைச் சொல்லுவோமென்றெண்ணி அவற்றை அடைவே சொல்ல, அதுகேட்டு உகந்த பரகாலநாயகி “வளர்த்ததனால் பயன் பெற்றேன் வருக” என்று சொல்லி அக்கிளியைக் கைகூப்பி வணங்கினமையைத் திருத்தாயார் சொல்லுகிற பாசுரமாயிருக்கிறது.

முளைக்கதிர் என்றும் குறுங்குடியுள் முகில் என்றும் மூவாமூவுலகுங்கடந்தப்பால் முதலாய் நின்ற அளப்பரியவாரமுது என்றும் அரங்கமேய வந்தணன் என்றும் அந்தணர் தம் சிந்தையான் என்றும் விளக்கொளி என்றும் திருத்தண்காவில் மரதகமென்றும் வெஃகாவில் திருமாலென்றும் இவையாயிற்று இவள் கற்பித்து வைத்த திருநாமங்கள். இவற்றை அடைவே சொல்லத் தொடங்கிற்று மடக்கிளி.

முளைக்கதிர்—சிற்றஞ் சிறுகாலை உதிக்கின்ற ஸூர்யனைப்போலே கண்ணாலே முகந்து அநுபவிக்கலாம்படி யிருக்கிற திவ்யமங்கள விக்ரஹத்தை யுடையவன் என்றபடி. “ப்ரஸந்நாதித்யவர்ச்சஸம்” என்றதுங் காண்க. தன்னை அடியிலே அவன் விஷயாந்தரங்களில் நின்று மீட்டதும் தன் பக்கலில் ருசியைப் பிறப்பித்ததும் வடிவைக்காட்டியாதலால் அதனையே கிளிக்கு முந்துற உபதேசித்து வைத்தாள் போலும். ‘முளைக்கதிர்’ என்பதை வினைத்தொகையாகக் கொண்டால் ‘முளைகதிர்’ என்று இயல்பாக வேண்டும்; ககரவொற்று இருப்பதனால் ‘முளைத்தலையுடைய கதிர்’ என்று பொருள் கொள்ளவேணும்; அப்போது. முளை—முதனிலைத் தொழிற்பெயர்.

குறுங்குடியுள் முகில்—கீழ்ச்சொன்ன வடிவைப் பிரகாசிப்பித்தது சாஸ்திரமுகத்தாலுமன்று, ஆசார்யோபதேசத்தாலுமன்று. திருக்குறுங்குடியிலேயாயிற்றுப் பிரகாசிப்பித்தது. இன்னமலையிலே மேகம் படிந்ததென்றால் மழைதப்பா

தென்றிருக்குமாபோலே, திருக்குறுங்குடியிலே நின்றானென்றால் உலகமெல்லாம் க்ருதார்த்தமாம்படி யிருக்குமென்க. ஒருகால் தோன்றி வர்ஷித்துவிட்டு ஒழிந்து போம் மேகம்போலன்றியே சாச்வதமாய் நிற்கும் மேகமென்பதுதோன்ற 'உன் ' எனப்பட்டது

திருக்குறுங்குடியில் வந்து நின்றருளின சீலாதிகனுடைய அடிப்பாடு சொல்லுகிறது மூவா மூவுலகுமென்று தொடங்கி. பரமபதத்தில் நின்றும் திருக்குறுங்குடியிலே போந்தருளினபடியிற்று. 'மூவா மூவுலகுங் கடந்து' என்றது—பத்தாத்மாக்களென்றும் முக்தாத்மாக்களென்றும் நித்யாத்மாக்களென்றும் மூவகையாகச் சொல்லப்படுகின்ற ஆத்ம வர்க்கங்களுக்கு எம்பெருமான் அவ்வருகுபட்டிருக்கின்றமையைச் சொன்னவாறு. மூவா என்றது ஒருகாலும் அழிவில்லாமையைச் சொன்னபடி. நித்ய முக்தர்களுக்குத் தான் அழிவு இல்லை; பத்தர்களெனப்படுகிற ஸம்ஸாரிகளுக்கு அழிவு உண்டேயென்று சிலர் சங்கிப்பர்கள்; ஆத்மாக்கள் கரும வசத்தால் பரிக்ரஹித்துக் கொள்ளுகிற சரீரங்களுக்கு அழிவுண்டேயன்றி ஆத்மாக்களுக்கு ஒரு போழ்தும் அழிவில்லை யென்றுணர்க. முதலாய் நின்ற என்றது—உபயவிபூதிக்கும் ஸத்தாஹேதுவாய் நின்ற என்றபடி. நித்யஸூரிகளுக்கு போக்யதையாலே ஸத்தாஹேதுவாய், ஸம்ஸாரிகளுக்குக் காணகளேபர ப்ரதானத்தாலே ஸத்தாஹேதுவா யிருக்குமென்க. அளப்பரிய ஆரமுது—ஸ்வரூபரூப குணங்களால் எல்லைகாண வொண்ணாதவனாய் அமுதக்கடல்போலே இனியனா யிருக்குமவன்.

அரங்கம் மேய அந்தணன்—அந்த அமுதக்கடலில் நின்றும் ஒரு குமிழ் புறப்பட்டு ஒரு தடாகத்திலே வந்து தேங்கினாற்போலேயாயிற்று திருவரங்கம் பெரிய கோயிலிலே வந்து திருக்கண் வளர்ந்தருளுகிறபடி. அந்தணனென்றது பரிசுத்தனென்றபடி; தன் வடிவழகைக் காட்டி அஹங்காரமும் விஷயாந்தர ப்ராவண்யமுமாகிற அசுத்தியைப் போக்கவல்ல சுத்தியை யுடையவனென்றவாறு.

அந்தணர்தம் சிந்தையான்—"நின்ற தெந்தை யூரகத்து இருந்த தெந்தை பாடகத்து, அன்று வெஃகணைக் கிடந்தது என்னிலாத முன்னெலாம், அன்று நான் பிறந்திலேன் பிறந்தபின் மறந்திலேன். நின்றது மிருந்ததும் கிடந்தது மென்னெஞ்சுளே' என்கிறபடியே பரிசுத்தருடைய ஹ்ருதயத்திலே நித்யவாஸம் பண்ணுமவன். எம்பெருமானுக்கு, பரமபதத்திலும் திருப்பாற்கடலிலும் கோயில் திருமலை பெருமாள் கோயில் முதலான உகந்தருளின விடங்களிலும் இருப்பதிற் காட்டிலும் மெய்யடியாருடைய ஹ்ருதய கமலத்திலே வாழ்வதே பரமோத்தேச்யமென்றும், ஸமயம்பார்த்து அன்பருடைய நெஞ்சிலே வந்து சேர்வதற்காகவே மற்றவிடங்களில் எம்பெருமான் தங்குகிறானென்றும், ஆகவே பரமபதம் முதலியவற்றில் வாஸம் உபாயமாய், பக்தருடைய ஹ்ருதயத்தில் வாஸமே புருஷார்த்தமா யிருக்குமென்றும், இது ஸித்தித்து விட்டால் பரமபதம் முதலியவற்றில் வாஸம் செய்வதில் ஆதரம் மட்டமாய் விடுமென்றும் உணர்க.

விளக்கொளியை—விளக்கின் ஒளியானது எப்படி வெளிச்சத்தை யுண்டாக்கிப் பதார்த்தங்களை விளங்கச்செய்யுமோ அப்படி ஸ்வஸ்வரூபம் ஜீவாத்மஸ்வரூபம் உபாயஸ்வரூபம் விரோதி ஸ்வரூபம் புருஷார்த்த ஸ்வரூபம் ஆகிற அர்த்த பஞ்சகத்தையும் தனக்கு விளங்கச் செய்தருளினவன் என்றவாறு. மேலே 'திருத்தண்கா' என வருகையாலே இங்கு விளக்கொளியென்றது அத்தலத்து எம்பெருமானாகிய தீபப்ரகாசனை என்றுங் கொள்ளலாம்: திருத்தண்கா 'விளக்கொளி கோயில்' என்றே வழங்கப்பெறும். இத்தலத்துப் பெருமான் பண்டைக்காலத்தில் சயன திருக்கோலமாக எழுந்தருளி யிருந்ததாகப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தினாலும் அரும்பதவுரையினாலும் மற்றும் சில சாதனங்களாலும் விளங்குகின்றது.

திருத்தண்காவில் மரதகத்தை—இவ்விடத்துப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் காண்மின் :—“ அருமணவனை என்னுமாபோலே திருத்தண்காவில் மரகதம் என்கிறார். இன்ன தீவிலேபட்ட ஆனையென்றால் விலக்ஷணமாயிருக்குமாபோலே திருத்தண்காவில் கண்வளர்ந்தருளுகிறவனுடைய வடிவென்றால் விலக்ஷணமாயிருக்கிறபடி. *பச்சைமா மலைபோல் மேனி என்கிற வடிவையுடையவன். வடதேசத்தினின்றும் பெருமாளை யநுபவிக்க வருமவர்கள் இளைத்து விழுந்தவிடத்திலே அவர்களை எதிர்கொண்டு அநுபவிப்பிக்கக் கிடக்கிற கிடை.”

வெஃகாவில் திருமாலை—“ வில்லிறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாயென்றும் வெஃகாவில் துயிலமர்ந்த வேந்தே யென்றும்” என்று பிராட்டியைத் திருமணம் புணர்ந்த மணக்கோலத்தோடே கூட இருவரும் வந்து கிடக்கிற கிடையாகக் கீழே அருளிச் செய்தாரிறே; திருவெஃகாவிலே வந்து திருக்கண் வளர்ந்தருளின பின்பு ச்ரிய:பதித்வம் நிறம் பெற்றபடி :

ஆக இப்படிப்பட்ட திருநாமங்களை மடக்கிளி எடுத்துப் பாடினவளவிலே ஆனந்தமாகக் கேட்கலுற்ற என்மகளானவள் ‘கிளிப்பிள்ளாய்! உன்னை வளர்த்தப்ரயோஜனம் பெற்றேன்; ஆபத்துக்கு உதவுபவனென்று பேர்பெற்ற அவன் ஆபத்தை விளைத்துப்போனான், அந்த நிலைமையில் நீ உதவப்பெற்றாயே!, அருகே வந்திடாய்’ என்று சொல்லி உபகாரஸ்மிருதி தோற்றக் கையெடுத்துக் கும்பிட்டாளென்றதாயிற்று.

புத்திரனாகவுமாம், சிஷ்யனாகவுமாம், பகவத் விஷயத்திற்கு உசாத்துணையாகப் பெற்றால் கௌரவிக்க வேணுமென்னுமிடம் ஈற்றடியால் அறிவிக்கப்பட்டதாயிற்று. “கணபுரங்கைதொழும் பிள்ளையைப் பிள்ளையென்றெண்ணப் பெறுவரே” என்றதும் நோக்குக. ... ... .... ... 14

கல்லுயர்ந்தநெடுமதில்சூழ்கச்சிமேயகளிறென்றும் கடற்கிடந்தகனியேயென்றும்*
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி அணியழுந்தூர்நின்றுகந்தவம்மானென்றும்*
சொல்லுயர்ந்தநெடுவீணை முலைமேல்தாங்கித் தூமுறுவல்நகையிறையேதோன்றநக்கு*
மெல்விரல்கள்சிவப்பெய்ததடவியாங்கே மென்கிளிபோல்மிகமிழற்றுமென்பேதையே. 15

| | |
|---|---|
| கல் உயர்ந்த நெடு மதிள் சூழ் | கல்லாலே செய்யப்பட்டு ஓங்கின பெரிய திருமதிள்களாலே சூழப்பட்ட |
| கச்சி | காஞ்சீபுரத்திலே |
| மேய | எழுந்தருளியிருக்கிற |
| களிறு என்றும் | மதயானை போன்றவனே! என்றும் |
| கடல் கிடந்த கனியே என்றும் | திருப்பாற்கடலில் கண் வளர்ந் தருளுகிற கனி போன்றவனே! என்றும். |
| அல்லி அம் பூ மலர் பொய்கை | தாதுகள் மிக்குப் பரிமளமுடையனவாய் அழகியவான புஷ்பங்களையுடைய தடாகங்களையும் |
| பழனம் | நீர்நிலங்களையும் |
| வேலி | சுற்றும் வேலியாகவுடைய |
| அணி அழுந்தூர் | அழகிய திருவழுந்தூரிலே |
| நின்று | நின்றருளி |
| உகந்த | திருவுள்ளமுவந்திருக்கின்ற |

| | |
|---|---|
| அம்மான் என்றும் | ஸ்வாமியே! என்று (சொல்லி) |
| சொல் உயர்ந்த | நாதம் மிக்கிருப்பதாய் |
| நெடு | இசைநீண்டிருப்பதான |
| வீணை | வீணையை |
| முலைமேல் | தனது தனங்களின்மீது |
| தாங்கி | தாங்கிக்கொண்டு |
| தூ முறுவல் | பரிசுத்தமான மந்தஹாஸத்தாலே |
| நகை | பல்வரிசை |
| இறையே தோன்ற | சிறிதே விளங்கும்படியாக |
| நக்கு | சிரித்து |
| மெல் விரல்கள் | (தனது) மெல்லியவிரல்கள் |
| சிவப்பு எய்த | சிவக்கும்படியாக |
| தடவி | (அந்தவீணையைத்) தடவி |
| ஆங்கே | அதற்குமேலே |
| என் பேதை | என் பெண்ணானவன் |
| மென் கிளி போல் | கிளிப்பிள்ளைபோலே |
| மிக மிழற்றும் | பலபடியாகப்பாடாநின்றுள் |

* * *- -கீழ்ப்பாட்டில், கிளிப்பிள்ளை திருநாமங்களைச் சொல்லக்கேட்டு ஆச்வாஸமடைந்து அதனையும் கௌரவித்தபடியைச் சொல்லி நின்றது. அந்த நிலைமை போய்த் தன்வாயாலே திருநாமத்தைச் சொல்லி அதுதன்னை வீணையிலே ஏறிட்டு ஆலாபித்தாள்; அந்த வீணையானது ஸம்ச்லேஷதசையிலே தன் படிகளையும் அவன் படிகளையும் இட்டு வாசிக்கப்பெறுவதாகையாலே அந்த வீணைமுகத்தாலே அவன் வடிவை ஸாக்ஷாத்கரித்து அந்த வீணையை அவனாகவே கொண்டு அவனோடு ஸம்ச்லேஷிக்குமிடத்திற் பண்ணும் வியாபார விசேஷங்களை இவ்வீணையிலே பண்ணாநின்றாள்; இவள் உணர்ந்தால் என்னவாய்த் தலைக்கட்டப் புகுகிறதோவென்று திருத்தாய் இன்னாப்போடே பேசும் பாசுரம் இது.

கல்லுயர்ந்த நெடுமதிள்சூழ் கச்சிமேய களிறென்றும்—கல்லாலே செய்யப்பட்டுப் பிரதிகூலர்க்கு அணுகவொண்ணாதபடி ஓக்கத்தையுடைத்தாய், உள்ளுக்கிடக்கிற யானைக்கு யதேச்ச விஹாரம் பண்ணுதற்குப் பாங்கான விஸ்தாரத்தையுமுடைத்தான திருமதிளாலே சூழப்பட்ட திருக்கச்சிமாநகரில் நித்யவாஸஞ் செய்கின்ற மத்தகஜமே! என்றும்.

இங்குக் கச்சிமேயகளிறு என்கிறது திருப்பாடகத்து நாயனாரை என்பர் பெரியவாச்சான்பிள்ளை. திருவத்திமாமலையில் நின்றருளாநின்ற பேரருளாளப் பெருமாளை என்று அருளிச்செய்திருக்கலாம்; அவருடைய திருவுள்ளமங்ஙனே நெகிழ்ந்தபடி. திருப்பாடகத்து நாயனாராக அருளிச்செய்தற்கு ஒரு பொருத்தமுண்டு; "நின்ற தெந்தை யூரகத்து இருந்ததெந்தை பாடகத்து, அன்று வெஃகணைக் கிடந்தது—என்று திருமழிசைப்பிரான் அநுபவித்தபடியை இம்மூன்று ஸ்தலத்திலும் அநுபவிக்கிறாள் இவள்" என்று மேலே நிர்வஹித்தருளுகையாலே அதற்குப் பொருந்தும். திருவழுந்தூரில் நின்ற திருக்கோலமும் திருப்பாடகத்திலே வீற்றிருந்த திருக்கோலமும் திருப்பாற்கடலில் பள்ளிகொண்ட திருக்கோலமுமாக அநுபவிக்கிறாரென்று நிர்வஹிப்பதில் ஒரு சமத்கார அதிசயமுண்டு காணும்.

கடல்கிடந்த கனியே யென்றும்—கச்சிமேய களிறு தோன்றினவிடம் திருப்பாற்கடல் போலும். அதிலே பழுத்த பழம்போலே கண்வளர்ந்தருளுகிற பரமபோக்யனே! கனியானது கண்டபோதே நுகரத்தக்கதும் புஜிப்பாரைப் பெறாதபோது அழிந்து போவதுமாயிருக்கும்; அப்படியே தன்னை யநுபவிப்பார் தேட்டமாய் அவர்களைப் பெறாதபோது தான் அழியும்படியாயிருப்பன் எம்பெருமான். போக்தாக்களைக் குறித்து அவஸரமெதிர்பார்த்திருப்பவன் எனக்கு முகங்காட்டாதொழிவதே! என்றும், போக்தாக்களைப் பெறாதபோது அழியும்படியாயிருக்கிறவன் தன்னைப் பெறாதபோது முடியும்படியாயிருக்கிற வெனக்கு முகங்காட்டாதொழிவதே! என்றும் வருந்துவதுதோன்றச் சொல்லுகிறபடி.

அல்லியம்பூ மலர்ப்பொய்கைப் பழனவேலியணியழுந்தூர் நின்றுகந்த வம்மானேன்றும்—தாதுமிக்கு நறுமணங் கமழ்ந்து அழகியவாயிருந்துள்ள புஷ்பங்களையுடைத்தான தடாகங்களையும் நீர்நிலங்களையும் வேலியாகவுடையதாய், பிரதிகூலர்க்கு அணுகவொண்ணாததாய் அநுகூலர்க்குத் தாபஹரமாய்ப் பரமபோக்யமாயிருந்துள்ள திவ்யதேசத்திலே ஸம்ஸாரிகள் ஆச்ரயிக்கலாம்படி நின்று, அவர்கள் தன் நிலையழகையும் அதுக்கடியான திருக்குணங்களையு மநுஸந்தித்துத் திருவடிகளைக் கிட்டினால் உகப்பானும் தானேயாயிருக்கும் பெருமானே!—என்றிங்ஙனே அர்த்த விசேஷங் கொண்ட சில திருநாமங்களை யிட்டுப்பாடி.

சொல்லுயர்ந்த நெடுவீணைமுலைமேல்தாங்கி—'கல்லுயர்ந்த நெடுமதிள் சூழ்கச்சிமேய களிறு' இத்யாதிகளை வீணையிலேயிட்டுப் பாடினாள்; வீணையை ஸ்பர்சித்தவாறே நாயகன் ஸம்ச்லேஷதசையில் தன்னுடைய போக்யதையையும் இவனுடைய போக்யதையையும் வீணையிலேறிட்டு வாசிக்கும்படியை ஸாக்ஷாத்கரித்து, அதைத்

தடவும் திருக்கையை ஸாக்ஷாத்கரித்து, அதுக்கு ஆச்ரயமான திருத்தோளை ஸாக்ஷாத்கரித்து, அதுக்கு ஆச்ரயமான வடிவையும் ஸாக்ஷாத்கரித்து அவனை ஸம்ச்லேஷதசையிலே தன்மார்பில் ஏறிட்டுக் கொள்ளுமாபோலே வீணையை மார்பிலே ஏறிட்டுக் கொண்டாள்; "க்ருஹீத்வா ப்ரேக்ஷமாணா ஸா பர்த்து: கரவிபூஷணம் —பர்த்தாரமிவ ஸம்ப்ராப்தா ஜாநகீ முதிதாபவத்" [ஸ்ரீராமாயணம், ஸுந்தரகாண்டம் 3—4] என்னுங் கணக்கிலேயாயிற்று இதுவும். திருவடி தந்த திருவாழி மோதிரத் தைகாட்டி வாங்கிக்கண்ட ஸீதாபிராட்டி ஸ்ரீராமபிரானையே கண்டதாக மகிழ்ந்ததுபோல.

தூமுறுவல் நகை இறையே தோன்ற நக்கு—வீணையை முலைமேல் தாங்கினவாறே அவனையே ஸ்பர்சித்ததாக நினைக்கையாலுண்டான மகிழ்ச்சியால் பல்வரிசைகள் சிறிதே பிரகாசிக்கும்படி புன்முறுவல் செய்து, ஸுகுமாரமாய் இயற்கையாகவே சிவந்துள்ள விரல்கள் இன்னமும் சிவப்புமல்கும்படி தந்திக்கம்பிகளை வெருடி அதுக்குமேலே கிளிபோலவும் மிக மிழற்றத் தொடங்கினாள் என்றாளாயிற்று.

என்பேதையே—என் வயிற்றிற் பிறந்த சிறுபெண் இவையெல்லாம் எங்கே கற்றாள்! என்றவாறு. ... ... ... ... ... 15

கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும் கடிபொழில்சூழ்கணபுரத்தென்கனியேயென்றும்*
மன்றமரக்கூத்தாடி மகிழ்ந்தாயென்றும் வடதிருவேங்கடம்மேயமைந்தா!வென்றும்*
வென்றசுரர்குலங்களைந்தவேந்தேயென்றும் விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாயென்றும்*
துன்றுகுழற்கருநிறத்தென்துணையேயென்றும் துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. 16

(என்பெண்ணானவள்)

| | |
|---|---|
| கன்று மேய்த்து | கன்றுகளை ரக்ஷித்து |
| இனிது உகந்த | மிகவும் மகிழ்ச்சிகொண்ட |
| காளாய் என்றும் | இளையோனே! என்றும், |
| கடி பொழில் சூழ் | வாஸனைமிக்க சோலைகளாலே சூழப்பட்ட |
| கணபுரத்து | திருக்கண்ணபுரத்திலே |
| | (பழுத்த) |
| என் கனியே என்றும் | எனபழமே! என்றும |
| மன்று அமர கூத்து ஆடி | வீதியாரக் குடக்கூத்தாடி |
| மகிழ்ந்தாய் என்றும் | மகிழ்ந்தவனே! என்றும் |
| வட திரு வேங்கடம் மேய மைந்தா என்றும் | வடதிருவேங்கடமலையிலே பொருந்தி வாழ்கின்ற யுவாவே! என்றும் |
| அசுரர் குலம் | |
| வென்று | |
| களைந்த | வேரோடொழித்த |
| வேந்தே என்றும் | வேந்தனே! என்றும, |
| விரி பொழில் சூழ் | விரிந்த சோலைகளாலே சூழப்பட்ட |
| திருநறையூர் | திருநறையூரிலே |
| நின்றாய் என்றும் | நின்றருளுமவனே! என்றும் |
| துன்று குழல் கருநிறத்து என் துணையே என்றும் | அடர்ந்த திருக்குழற் கற்றையையும் கறுத்த திருமேனியையுமுடையனாய் எனக்குத் துணையானவனே! என்றும் சொல்லி |
| முலை மேல் | ஒன்றோடொன்றொத்த தனங்களிலே |
| துளி சோர | கண்ணீர்த்துளிகள் பெருகும்படியாக |
| ர்ள | தளர்கின்றாள். |

* * * "மென்கிளிபோல் மிகமிழற்று மென்பேதையே" என்றது கீழ்ப் பாட்டில்; நாயகன் எதிரே நிற்கிறானாக நினைத்து மென்கிளிபோல் வார்த்தை சொன்னவிடத்தில் அவனும் அப்படியே மேலிட்டு வார்த்தை சொல்லக்கேட்டிலள்; அதனால் நின்றநிலைகுலைந்து கூப்பாடுபோடத் தொடங்கினாளென்மகளென்கிறாள் திருத்தாய். அவனுடைய ரக்ஷகத்வமும் ஸௌலப்ய ஸௌசீல்யாதிகளும் பாவியேனிடத்தில் பலிக்கப் பெற்றிலவே! என்று கண்ணுங் கண்ணீருமாய்க் கதறுகிற படியைப் பேசுகிறாளாய்ச் செல்லுகிறது.

கன்றுமேய்த்து இனிதுகந்தகாளாய் என்றும்—ஸர்வரக்ஷகனை நீ ரக்ஷணத் தொழிலில் நின்றும் கைவாங்கினையோ என்கிறாள். நித்யஸூரிகளை ரக்ஷிக்குமளவோடே நின்றால் ஆறியிருப்பேன்; ராமகிருஷ்ணாதிரூபத்தாலே வந்தவதரித்து இடக்கையும் வலக்கையுமறியாத இடையரை ரக்ஷித்தவளவோடே நின்றாலும் ஆறியிருப்பேன்; அறிவுகேட்டுக்கு மேலெல்லையான கன்றுகளையுமுட்பட மேய்த்த உன்னைவிட்டு எங்ஙனே ஆறியிருப்பேனென்கிறாள். அறிவில்லாமையில் கடைநின்ற கன்றுகளையும் ரக்ஷித்த நீ, உன்வாசியையறிந்து உன்னையொழியச் செல்லாத வென்னை ரக்ஷியாதொழிவதே!, நானும் கன்றாகப் பிறக்கப்பெற்றிலேனே! என்கிறாள் போலும்.

கண்ணபிரானுக்குப் பசுக்களை மேய்ப்பதில் ஸாதாரணமான உவப்பும் கன்றுகளை மேய்ப்பதில் இனிது உவப்பும் ஆம் என்பது சொற்போக்கில் தெரியக் கிடக்கிறது; "திவத்திலும் பசுநிரைமேய்ப்பு உவத்தி" என்றார் நம்மாழ்வார்; "கன்றுமேய்த்து இனிது உகந்த" என்கிறாரிவ்வாழ்வார்.

காளாய்!—இளம்பருவத்தைச் சொன்னபடி: "காளையே எருது பாலைக்கதிபன் நல்லிளையோர் பேராம்" என்பது திவாகரம்.

கடிபொழில்சூழ் கணபுரத் தென்கனியே யென்றும்—அவ்வக்காலங்களில் பிற்பட்டாரையும் ரக்ஷிக்கைக்காகவன்றோ திருக்கண்ணபுரத்திலே வந்து இனியகனிபோல் நின்றருளிற்று.

"கன்றுமேய்த்தினிதுகந்த காளாய்" என்றவுடனே "கடிபொழில் சூழ் கணபுரத்தென்கனியே" என்று சொன்ன அமைதியை நோக்கி இவ்விடத்திற்கு பட்டர் ரஸோக்தியாக அருளிச் செய்வதொன்றுண்டு;—"கண்ணபிரான் பசுக்களை மேய்த்துக் கொண்டிருக்கும்போது அவை கைதவறிப் போகையாலே அவற்றை மடக்கிப் பிடிக்கப்போனவிடத்திலே விடாய்தீரவிருப்பதொரு சோலையைக் கண்டு திருவாய்ப்பாடியாக நினைத்துப்புகுந்தான்; அப்பொழில் *மயல்மிகு பொழிலாகையாலே கால்வாங்கமாட்டிற்றிலன்; அதுவாயிற்றுத் திருக்கண்ணபுரம்" என்பராம்.

கடிபொழில்சூழ் கணபுரம்—"ஸர்வகந்த:" என்கிற சுருதியின்படியே பரிமளமயனாயிருக்கிற எம்பெருமானையும் கால்தாழப் பண்ணுவித்துக் கொள்ளவல்ல பரிமளமுள்ள பொழில்களென்க. [கணபுரத்தென் கனியே!] அச்சோலைபழுத்த பழம் போலும் சௌரிராஜன். "என்கனியே" என்கையாலே உபாயாந்தர நிஷ்டர்களுக்குக் காயாகவேயிருப்பனென்பதுபோதரும். அவர்களுக்கு ஸாதநாநுஷ்டானம் தலைக்கட்டின பின்பு அனுபவமாகையாலே அதுவரையில் காயாயிருப்பன்; ப்ரபந்நர்க்கு அத்யவஸாயமுண்டான ஸமயமே பிடித்துப் பரமபோக்யனாயிருக்கையாலே பக்குவ பலமாயிருப்பன்.

மன்றமரக் கூத்தாடி மகிழ்ந்தாய் என்றும்—அம்பலத்திலே அவல்பொதி அவிழ்ப்பாரைப்போலே ஸமுதாய ஸ்தலத்திலே ஸர்வஸ்வதானம் பண்ணினையல்லையோ என்கிறாள். மன்று—நாற்சந்தி; அஃது அமரக் கூத்தாடுகையாவது கூத்தாடி முடிந்தபின்பும் அவ்விடம் கூத்தாடுவதுபோலவே காணப்படுகையாம். "பெருமாள் எழுந்தருளிப்புக்க திருவீதிபோலேகாண் திருவாய்ப்பாடியில் அம்பலமிருப்பது" என்று பட்டர் பணிக்கும்படி. மன்று என்று இடையரெல்லாரும் திரளுமிடத்திற்கும் பெயராதால், இச்சொல் ஆகு பெயரால் இடையர்களை உணர்த்தி இடையரெல்லாரும் ஈடுபடும்படியாகக் கூத்தாடினமை சொல்லுகிறதென்றும் உரைப்ப. மகிழ்ந்தாய் என்றவிடத்திற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்யானம் காண்மின்;—"கூத்துக் கண்டவர்கள் உகக்கையன்றியே உகப்பானும் தானாயிருக்கை; அவர்களைத் தன் கூத்தாலே எழுதிக்கொள்வானும் தானாய் உகப்

பானும் தானுமிருக்கிறபடி"—ஸஜாதீயர்களை ஈடுபடுத்திக்கொள்ளப் பெற்றோம் என்று உகந்தானாயிற்று. அந்தணர்க்குச் செல்வம் மிக்கால் பலயாகங்கள் நிகழ்த்து மாபோலவும் விஷயப்ரவணர்க்கு ஐச்வரியம் விஞ்சினால் அடுத்தடுத்து விவாஹம் பண்ணிக் கொள்ளுமாபோலவும் இடையர்க்குச் செல்வம் மிகுந்தால் அதற்குப் போக்குவீடாக ஆடுவதொருகூத்து குடக்கூத்து; சாதி மெய்ப்பாட்டுக்காகக் கண்ண பிரான் குடக்கூத்தாடினபடி. ஊர்ப்பொதுவான பண்டம் எனக்கு அரிதா யிற்றே! என்று பரிதாபந் தோற்றச் சொல்லும் வார்த்தை மன்றமரக்கூத்தாடி மகிழ்ந் தாய்! என்பது.

வடதிருவேங்கடம்மேய மைந்தா வென்றும்—ஒரு ஊரிலே மன்றிலே நின்று கொள்ளை கொடுத்தது மாத்திரமன்றியே உபயவிபூதிக்கும் நடுவானதொருமன்றிலே நின்று தன்னைக் கொள்ளை கொடுத்தபடியைச் சொல்லுகிறது; "கண்ணாவானென்றும் மண்ணோர் விண்ணோர்க்குத், தண்ணார் வேங்கட விண்ணோர் வெற்பனே"— "வானவர் வானவர்கோனொடும் நமன்றெழுந் திருவேங்கடம்" என்றும் "கான மும் வானரமும் வேடுமுடை வேங்கடம்" என்றுஞ் சொல்லுகிறபடியே உயர்ந்தா ரோடு தாழ்ந்தாரோடு வாசியற அனைவரும் கொள்ளை கொள்ளும் வடிவு எனக்கு அரிதாயிற்றே! என்று பரிதபித்துச் சொல்லுகிறபடி.

வென்றசுரர்குலங்களைந்த வேந்தே யென்றும்—அவன்றான் விரோதி நிவ்ருத்தியைச் செய்வதற்கு அசக்தனென்றும் அது பிறரால் ஆகவேண்டியதென்றும் இருந்தால் ஒருவாறு ஆறியிருக்கலாம்; அசுர ராக்ஷஸர்களின் கூட்டங்களைக் கிழங்கெடுத்து வெற்றிபெற்ற பெருவீரனாய் அவன் விளங்கும்போதும் நான் இழக்கிறேனே! என்று வருந்திச் சொல்லுகிறபடி.

விரிபொழில்சூழ் திருநறையூர் நின்றாயென்றும்—வென்று அசுரர் குலங்களைந்த அவதாரத்திலும் இழந்தவர்களுக்கும் முகங் கொடுப்பதற்காகத் திருநறையூரிலே வந்து நின்றருளுமவனே! என்கிறாள். நறையூர், நம்பியும் நாச்சியாரும் கடா க்ஷிக்க அக்கடாக்ஷமே விளைநீராக வளருகிற பொழிலாகையாலே விரிபொழிலா யிருக்கும். அசேதநங்களைக் கடாக்ஷித்து வளரச்செய்பவன் என்னைக் கடாக்ஷியா தொழிவதே! என்கிறாள்: பிராட்டி பக்கலிலே பிச்சேறித் தன்னூரை அவள் பெயராலே ப்ரஸித்தப்படுத்தி *நாச்சியார் கோவிலாக்கி இப்படி ஒருத்திக்குக் கைவழிமண்ணாயிருப்பவன் என்னொருத்தியை விஷமாக நினைப்பதே! என்பதும் உள்ளுறை.

துன்றுகுழல் கருநிறத்து என்துணையே யென்றும்—மிகவும் நெருங்கி இருண்டிருக்கின்ற திருக்குழற் கற்றையையும் காளமேகம்போன்ற வடிவையுமுடைய என் துணை வனே! என்கிறாள். ஆக இப்படியெல்லாம் சொல்லாநின்று கொண்டு தன் ஆற்றாமைக்கு ஒரு போக்கடி காணாமையாலே *கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோர்ந்தாளாயிற்று. கன்றுமேய்த்தினிதுகந்த காளாயென்று சொல்லித் துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாள், கடிபொழில் சூழ்கண புரத்தென்கனியேயென்று சொல்லித் துணைமுலைமேல் துளிசோரச்சோர்கின்றாள் என்று தனித்தனியே கூட்டியுரைத்துக் கொள்க. ... ... ... 16

பொங்கார்மெல்லிளங்கொங்கைபொன்னே பூப்பப் பொருகயற்கண் நீரரும்பப்போந்துநின்று*
செங்காலமடப்புறவம்பெடைக்குப்பேசும் சிறுகுரலுக்குடலுருகிச்சிந்தித்து*ஆங்கே
தண்காலும்தண்குடந்தைநகரும்பாடித் தண்கோவலூர்பாடியாடக்கேட்டு*
நங்காய்!நங்குடிக்கிதுவோநன்மையென்ன நறையூரும்பாடுவாள் நவில்கின்றாளே.

| | |
|---|---|
| பொங்கு மெல் இள கொங்கை | வளர்த்திமிக்கதாய் மிருதுவாய் இளையதான தனம் |
| பொன்னே பூப்ப | வைவர்ணியமடையவும் |
| பொரு கயல் கண் | சண்டையிடுமிரண்டு கெண்டைகள் போன்ற கண்கள் |
| நீர் அரும்ப | நீர்த்துளிகள் அரும்பவும |
| போந்து நின்று | (வெளியேவந்து) நின்று |
| செம்கால மடம் புறவம் பெடைக்கு பேசும் குரலுக்கு | சிவந்த கால்களையுடைய இளம் புருக்கள் தம் பேடைகளோடு சிறுகுரலாகப் பேசுகிறபடிக்கு |
| உடல் உருகி | மெய்கரைந்து |
| | (அவன் முறைகெடப்பரிமாறும்படியை) நினைத்து, அவ்வளவில் |
| தண்காலும் | திருத்தண்காலையும் |
| தண் குடந்தை நகரும் | திருக்குடந்தைப்பதியையும |
| பாடி | (வாயாரப்) பாடி |
| தண் கோவலூர் | குளிர்ந்த திருக்கோவலூரையும் |
| பாடி | பாடி |
| | கூத்தாட |
| கேட்டு | அவ்வொலியை நான்கேட்டு, |
| நங்காய் | ‘ பெண்ணே ! |
| நம் குடிக்கு | நமது குலத்திற்கு |
| இது நன்மையோ என்ன | வாய்விட்டுக் கூப்பிடுகிறவிது நலந்தானோ?’ என்று சொல்ல, |
| நறையூரும் | திருநறையூரையும் |
| பாடுவாள் நவில்கின்றாள் | பாடுவாளாகப் பேசத் தொடங்கினாள். |

* * *- -கீழ்ப்பாட்டில் “துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாளே” என்றபடியே தன் பெண்பிள்ளை சோர்வுற்றபடியைக் கண்ட திருத்தாயார் ‘இவளுக்கு நாம் ஏதேனும் ஹிதமான வார்த்தை சொல்லிப் பார்ப்போம், அதனாலாகிலும் வழிப்படக்கூடுமோ’ என்றெண்ணி ‘நங்காய்! நீ இங்ஙனே வாய்விட்டுக் கூப்பிடுகையும் மோஹிக்கையுமாகிற இவை உன்னுடைய பெண்மைக்குத் தகாது, இக்குடிக்கும் இழுக்கு’ என்று சொல்ல; அப்படி அவள் ஹிதஞ் சொன்னதுவே ஹேதுவாக மேன்மேலும் அதிப்ரவ்ருத்தியிலே பணைத்தபடியைச் சொல்லுகிற பாசுரம் இது.

பொங்கார் மெல்லிளங்கொங்கை பொன்னே பூப்ப—விரஹ வேதனையால் உடலில் தோன்றும் நிறவேறுபாடு பொன்பூத்தலாகச் சொல்லப்படும்; பசலை நிறம் என்பதும் அதுவே. இதைப்பற்றிக் குறுந்தொகையில் ஒரு செய்யுளுண்டு; அதாவது —“ஊருண் கேணியுண்டுறைத் தொக்க பாசியற்றே பசலை, காதலர் தொடுவுழித் தொடுவுழி நீங்கி விடுவுழி விடுவுழிப் பரத்தலானே” (399) என்பதாம். ஊரிலுள்ள ஜனங்களாலே நீருண்ணப் பெறுகிற கேணியினுள்ளே படர்ந்து கிடக்கும் பாசி போன்றது பசலை நிறம்; தண்ணீரில் நாம் கைவைத்தோமாகில் கைபட்டவிடங்களில் பாசி நீங்கும்; கையை எடுத்து விட்டோமாகில் மறுபடி அவ்விடமெல்லாம் பாசி மூடிக்கொள்ளும்: அதுபோல, கலவியில் கணவனுடைய கைபடுமிடங்களில் பசலை நிறம் நீங்கும்; அணைத்த கை நெகிழ்த்தவாறே அப்பசலைநிறம் படரும்; ஆதலால் பாசிபோன்றது பசலைநிறம் என்றபடி. (தொடுவுழித் தொடுவுழி—தொட்ட விடங்கள் தோறும். விடுவுழி விடுவுழி—விட்ட விடங்கள் தோறும். பரத்தலான்—பரவுகிறபடியினாலே.)

பொருகயல் கண்ணீரரும்ப—சண்டையிடுமிரண்டு கெண்டைகள் போன்றனவாகக் கண்கள் வருணிக்கப்படும். அப்படிப்பட்ட கண்கள் நீர்பெருக நின்றபடி. காதலிகளின் கண்களில் நீர்பெருகுதல் எப்போதுமுள்ளதொன்று; கலவி நிகழுங் காலத்தில் ஆனந்தக்கண்ணீர் பெருகும்; பிரிந்து வருந்துங் காலங்களில் சோகக் கண்ணீர் பெருகும். அதுவாயிற்று இங்குச் சொல்லுகிறது. முலையிலே பசலை நிறம் குடியிருந்தாற்போலே கண்ணிலே சோக பாஷ்பம் குடியிருந்தது. கீழ்ப் பாட்டில் “துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின்றாள்” என்றது; இங்கு “கண்ணீர் அரும்ப” என்கிறது; விரஹத்தீயாலே உள்ளுலர்ந்து நீர்ப்பசையற்றுக்

கிடக்கையாலே 'அரும்ப' என்ன வேண்டிற்று ; பதக்குப் பானையிலே உழக்குப் பாலைக்காய்ச்சினால் வாயாலே பொங்கி வழியாநிற்கச்செய்தேயும் கீழே நீர் அற்றிருக்குமாபோலே கொள்க.

போந்து நின்று—'நாயகன்தானே வந்து மேல்விழ வேண்டும்படியான முலையழகையும் கண்ணழகையுமுடைய நீ மேல்விழுகை பெண்மைக்குப் போராது காண்' என்று தாய்சொன்ன ஹிதம் தனக்குச் செவிசுட விருக்கையாலே, நெருப்புப்பட்ட வீட்டில் நின்றும் பதறிப் புறப்படுமாபோலே அத்தாய் இருந்த அகத்தில் நின்றும் சடக்கெனப் புறப்பட்டாள். ஸ்ரீவிபீஷணாழ்வான் தன் உபதேசத்திற்குடன்படாத ராவணன் சொன்ன திரஸ்கார வார்த்தையைக் கேட்ட பின் ஒரு கணப்பொழுதும் அங்குத் தங்கியிருக்கமாட்டாமல் விரைந்து புறப்பட்டாற்போல.

நின்று—தரிப்புப்பெற்று நின்று என்றபடி. ஹிதஞ்சொன்ன தாயினிருப்பிடத்தை விட்டு அப்புறப்பட்டவாறே கால்பாவி நின்றாளாயிற்று. நாயகன் பக்கலில் முகம் பெறாதவளவில் ஓரிடத்தில் கால்பாவிநிற்கக் கூடுமோவென்னில்; தன்னுடைய பதற்றத்திற்குத் தடையாகத் தாய் சொல்லும் வன்சொல் செவிப்படாதவிடத்திற்குத் தான்வந்ததே காரணமாகத் தரிப்புப்பெற்று நின்றாளென்க. இலங்கையைவிட்டு ஆகாசத்திற்கிளம்பின விபீஷணாழ்வான் ஸ்ரீராமகோஷ்டியில் முகம் பெறாதிருக்கச் செய்தேயும் ராவண பவனத்தைவிட்டு நீங்கினவளவையே கொண்டு ஆகாசத்திலே கால்பாவி நின்றாற்போல. "உத்தரம் தீரமாஸாத்ய கஸ்த ஏவ வ்யதிஷ்டத" என்றார் வால்மீகி பகவான். [வ்யதிஷ்டத—நன்றாகத் தரித்து நின்றார் என்றபடி.]

செங்காலமடப்புறவம் பெடைக்குப் பேசுஞ் சிறுகுரலுக் குடலுருகிச் சிந்தித்தாங்கே—பாம்புக்கு அஞ்சியோடினவன் புலியின் வாயிலே விழுந்தாற்போலேயாயிற்று. தாயின் வாய்ச்சொல் பாதகமாயிருக்கிறதென்று வெளியிலே வந்தவளுக்கு அதனிலுங் கொடியசொல் செவியிலே விழுந்தது ; அதாவது, புறா ஆணும் பெண்ணுங் கூடிக் கொஞ்சும் பேச்சுக்கள் செவிப்பட்டன ! அந்தோ ! இவையுங்கூடத் தம் தம் அபிமதம் பெற்றுக் களித்து வாழாநிற்க நம் நிலைமை இங்ஙனேயாயிற்றே! என்று உடலுருகினாள் ; பண்டு அவனும் தானும் இங்ஙனே கலந்து பரிமாறின படிகளை நினைத்துக் கொண்டாள் ; பின்னையும் உடலுருகினாள். [செங்காலமடப்புறவம்] ஆண் புறாவின் சிவந்த கால்கள் நாயகனுடைய செந்தாமரையடிகளை நினைப்பூட்டி வருத்தினபோலும். இது கண்ணுக்கு விஷமானபடி. [பெடைக்குப் பேசும் சிறுகுரல்] இது காதுக்கு விஷமானபடி. இங்ஙனே அவன் ரஹஸ்யமாக நம் காதிலே பேசும் பேச்சுக்கள் கேட்கப்பெறுவது என்றோ வென்று உடலுருகினாளென்க.

[ஆங்கே தண்காலும் இத்யாதி] இவற்றாலே ஆற்றாமை மீதூர்ந்தவாறே நாயகனோடு பரிமாறுதற்கான ஸங்கேத ஸ்தலங்களைப்பற்றி வாய்விட்டுக் கூப்பிடத் தொடங்கினாள். திருத்தண்கால், திருக்குடந்தை, திருக்கோவலூர் முதலான திருப்பதிகளைச் சொல்லிப் பாடத் தொடங்கினாள். தண்கால்—குளிர்ந்த காற்று என்றபடி. அங்குள்ள எம்பெருமான் குளிர்ந்த தென்றல்போலவே ச்ரமஹரமான வடிவையுடையனா யிருக்கையாலே அத்தலத்திற்கே தண்காலென்று திருநாமமாயிற்றென்ப. பண்டு அப்பெருமான் தன்னை அணைக்கிறபோது சிரமமெல்லாந் தீர்ந்து மிக இனிமையா யிருக்கையாலே மீண்டும் அங்ஙனேயாக வேணுமென்று தண்காலைப் பாடினாள். [தண்குடந்தை நகரும்பாடி] 'எம்பெருமான் அமுதுசெய்த போனகம் சேஷபூதர்க்கு ஸ்வீகரிக்கவுரியது' என்று முறையிருக்க, திருக்குடந்தையாராவமுதாழ்வார், தமக்கு ஆக்கின திருப்போனகத்தை முற்படத் திருமழிசைப்பிரானை அமுதுசெய்யப் பண்ணுவித்துப் பின்னைத் தாம் அமுது செய்தாரென்று ஒரு ப்ரஸித்தியுண்டு. இப்படியாக அன்பரோடு புரையறக்கலந்து பரிமாறுகிறவ

னென்று ஸாபிப்ராயமாகத் திருக்குடந்தையைப் பாடினாள். [தண்கோவலூர்பாடி] "பாவருந்தமிழாற் பேர்பெறு பனுவற் பாவலர் பாதிநாளிரவின், மூவரு நெருக்கி மொழிவிளக்கேற்றி முகுந்தனைத் தொழுத நன்னாடு" என்று புகழ்ந்து கூறும்படி முதலாழ்வார் [பொய்கையார், பூதத்தார், பேயார்] மூவரும் பகவத் ஸ்வரூபத்தை நன்கறிந்து அநுபவித்து ஆனந்தப் பெருவெள்ளமெய்தின வரலாற்றை நெஞ்சிற் கொண்டு திருக்கோவலூரைப் பாடினாளென்க. இவ்விடத்து வியாக்கியான வாக்கியங் காண்மின்; "ஆச்ரிதர் வந்து கிட்டினால் பின்னை அவர்களோடு முறை யழியப் பரிமாறுகையன்றியே தானே மேல்விழுந்து ஸம்ச்லேஷித்த விடமாயிற்று திருக்கோவலூராகிறது. அவர்கள் மழைகண்டு ஒதுங்க அவர்களிருந்தவிடத்திலே தானே சென்று தன்னை அவர்கள் நெருக்கத் தான் அவர்களை நெருக்க இப்படி பரிமாறி, அவர்கள் போனவிடத்திலும் அவ்விடத்திலே நிற்கிறானிறே *வாசல் கடைகழியாவுள் புகா என்று."

ஆட்—திருத்தண்காலையும் திருக்குடந்தையையும் திருக்கோவலூரையும் வாயாரப்பாடினவிடத்திலும் த்ருப்தி பிறவாமையாலே ஆடவும் தொடங்கினாள்; இப்படி இவள் ஆடுகிறபடியைக் கண்டும் பாடுகிறபடியைக் கேட்டும் தாயானவள் "நங்காய்! நம் குடிக்கு இதுவோ நன்மை?" என்றாள்; (அதாவது) சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமேயன்றி ஈச்வரலாபம் சேதநனுக்குப் புருஷார்த்த மன்றே: அவன்றன்னுடைய பேற்றுக்கு அவன்றானேயன்றோ பதறவேணும்; நீ இங்ஙனே பதறக்கடவையோ? என்றாள். இவள் இது சொன்னதுவே ஹேது வாகப் பரகாலநாயகி நறையூரும் பாடுவாள் நவில்கின்றாள். *பெடையடர்த்த மடவன்னம் பிரியாது மலர்க்கமலமடலெடுத்துமதுநுகரும் வயலுடுத்த திருநறை யூரிலே சென்று சேரப்பெறுவது எந்நாளோ! என்னாநின்றாளென்க.

'பாடுவான்' என்ற பாடமுமுண்டு; வான் விகுதிபெற்ற வினையெச்சம். 17

**கார்வண்ணம் திருமேனிகண்ணும்வாயும் கைத்தலமுமடியிணையுங்கமலவண்ணம்***
**பார்வண்ணமடமங்கைபத்தர், பித்தர்பனிமலர்மேற்பாவைக்குப்பாவம்செய்தேன்***
**ஏர்வண்ணவென்பேதையென்சொல்கேளாள் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும்***
**நீர்வண்ணன்நீர்மலைக்கேபோவேனென்னும் இதுவன்றேநிறைவழிந்தார்நிற்குமாறே.** 18

பாவம் செய்தேன் என் — பாவியான என்னுடைய
ஏர்வண்ணம் பேதை — அழகியவடிவையுடைய பெண்ணானவள்
என்சொல் கேளாள் — என் வார்த்தையைக் கேட்கிறாளில்லை;
திருமேனி கார் வண்ணம் என்னும் — (எம்பெருமானது) திருமேனி காளமேக நிறத்தது என்கிறாள்;
கண்ணும் — (அவனது) திருக்கண்களும்
வாயும் — திருவாயும்
கைத் தலமும் — திருக்கைகளும்
அடி இணையும் — திருவடியிரண்டும்
கமலம் வண்ணம என்னும் — தாமரைப்பூப்போன்ற முடையன
பார் வண்ணம் மடமங்கை பத்தர் என்னும் — (அவர்) பூமிப்பிராட்டி இட்ட வழக்காயிருப்பர் என்கின்றாள்
பனி மலர் மேல் பாவைக்கு பித்தர் என்னும் — குளிர்ந்தசெந்தாமரைப் பூவிற் பிறந்த பெரிய பிராட்டியார் விஷயத்தில் வியாமோஹங் கொண்டவர் என்கின்றாள்;
எம்பெருமான் திரு அரங்கம் எங்கே என்னும் — என்னை அடிமைப்படுத்திக் கொண்ட பெருமானுடைய திருவரங்கம் எங்குள்ளது? ன்;
நீர் வண்ணன் நீர் மலைக்கே போவேன் என்னும் — நீர்வண்ணப் பெருமாள் எழுந்தருளியிருக்கிற திருநீர் மலைக்கே போவேன் என்கின்றாள்;
நிறைவு அழிந்தார் நிற்கும் ஆறு இது அன்றோ — அடக்கமழியப் பெற்றவர்களின் நிலைமை இங்ஙனே போலும்!.

* * *—பெண்பிள்ளையின் வாய்வெருவுதல்களை வரிசையாகச் சொல்லுகிறாள் திருத்தாய். கீழ்ப்பாட்டில் "நங்காய் நங்குடிக்கிதுவோ நன்மையென்ன நறையூரும் பாடுவாள் நவில்கின்றாளே" என்று நின்றது. 'நாம் சொன்ன ஹிதத்தை இவள் கடந்தபடியாலே இனி இவளை ஹிதஞ்சொல்லி மீட்க ஆசையில்லை; இவளுடைய கருத்துக்கு நாம் உடன்பட்ட படியாகவே தோற்றவிருந்து இவளுடைய பாசுரங்களைக் கேட்போம்' என்றெண்ணிய திருத்தாயார் 'நங்காய்! உன் எண்ணங்களைச் சொல்லிக் காணாய்' என்று சொல்ல, மகளும் எம்பெருமானுடைய திருமேனியழகை வருணிப்பது, திருமடந்தை மண்மடந்தையர் பக்கலிலே அப்பெருமான் இருக்கு மிருப்பைப் பேசுவது, அவனூர் எங்கேயென்று வினவுவது, நானிங்கேயிருந்து கதறி என்ன பயன்? அவனூருக்கே போய்ச்சேருவேன் என்பது, ஆகவிப்படி நிகழும் மகளது பாசுரங்களைத் தன் உகப்புத் தோன்றத் தான் அநுவதித்துச் சொல்லி, 'இதுவன்றோ நிறைவழிந்தார் நிற்குமாறே' என்று தலைக்கட்டுகிறாள் திருத்தாய். 'கார்வண்ணம் திருமேனி கண்ணும் வாயுங் கைத்தலமு மடியிணையுங் கமலவண்ணம்' என்பதும், 'பார்வண்ண மடமங்கை பத்தர்' என்பதும் 'பனிமலர் மேல் பாவைக்குப் பித்தர்' என்பதும் 'எம்பெருமான் திருவரங்கமெங்கே' என்பதும் 'நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேன்' என்பதும் மகளுடைய வார்த்தைகளின் அநுவாதங்கள்; மற்றவை தாய்சொல். 'என்னும்' என்கிற வினைமுற்று மகளுடைய ஒவ்வொரு வார்த்தையோடும் அந்வயிக்கத்தக்கது. 'என்மகள் இப்படிசொல்லுகிறாள், இப்படி சொல்லுகிறாள்' என்று ஒவ்வொரு வாக்கியமாக எடுத்துத் தாய் சொல்லுகிறாளாயிற்று.

முந்துற முன்னம் இவள் எம்பெருமானுடைய வடிவழகிலே வாய்வைக்கத் தொடங்கினாளே! என்கிறாள். 'திருமேனியானது காளமேக நிறத்தது, திருக்கண்களும் திருவாயும் திருக்கைத்தலமும் திருவடியிணையும் செந்தாமரை மலர் நிறத்தன' என்று திருமேனியையும் திவ்யாவயவங்களையும் பற்றிப் பேசுகின்றாளாம். அடியிலே எம்பெருமான் இவளுக்குத் தன்வடிவை முற்றூட்டாக அநுபவிக்கக் கொடுக்கையாலே அதுவே வாய்வெருவுதலா யிருக்கிறாள் காணுமிவள். எம்பெருமான் தானுகந்தார்க்கு ஸர்வஸ்வதானமாகக் கொடுத்தருள்வது தன் திருமேனியையே. பரதாழ்வான், சிறியதிருவடி. அக்ரூரர் முதலானோரிடத்தே இது காணலாம். "தம் ஸமுத்தாப்ய காகுத்ஸ்த: சிரஸ்யாக்ஷிபதம் கதம்—அங்கே பரதமாரோப்ய முதித: ப்ரிஷஸ்வஜே" என்று பரதாழ்வான் விஷயத்திலே சொல்லப்பட்டது. [நெடுநாள் கடந்தபின் கண்ணுக்கு இலக்காகித் திருவடிவாரத்தில் வீழ்ந்த பரதாழ்வானை வாரி யெடுத்து மடிமீதிருத்தி மகிழ்ந்து சேரத்தழுவினான் ஸ்ரீராமபிரான்—என்பது இதன் பொருள்.] "ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:, மயா காலமிமம் ப்ராப்ய தத்தஸ் தஸ்ய மஹாத்மந:" என்று சிறிய திருவடி விஷயத்தில் சொல்லிற்று. "ஸோப்யேநம் த்வஜ வஜ்ராப்ஜக்ருதசிஹ்நேந பாணிநா, ஸம்ஸ்ப்ருச்யாக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" என்று அக்ரூரர் விஷயத்திலே சொல்லப்பட்டது. மூவர்க்கும் தன் திருமேனியை அணைக்கக் கொடுத்ததே பெரும் பரிசு.

**கார்வண்ணந் திருமேனி**—தாபத்ரயத்தினால் தகர்ப்புண்டிருப்பார்க்கு நினைத்த மாத்திரத்தில் அதனை ஆற்றக்கடவதும் விரஹதாபத்தாலே வருந்துவார்க்கு அதனைத் தணிக்க வல்லதுமான திருமேனியைப் பேசினபடி.

**கண்ணும்வாயுங் கைத்தலமுமடியிணையுங் கமலவண்ணம்**—மேகத்திலே தாமரைக் காடு மலர்ந்தாற்போலே யாயிற்று அவயவங்களிருக்கிறபடி.

**பார்வண்ணமடமங்கை பத்தர்**—இங்கும் 'என்னும்' என்கிற வினைமுற்றைக் கூட்டிக் கொள்ளவேணும்; மகள் பாசுரத்தைத் திருத்தாய் அநுவதிக்கிறபடி. கடலிலே உழன்று காலங்கழிக்குமவர்கள் மூழ்கி மண்ணெடுக்குமாபோலே, கீழ்ச்சொன்ன ஸௌந்தர்யஸாகரத்திலே அவலீலையாக ஆழங்காற்பட்டிருப்பவள் பூமிப்பிராட்டி;

அவளிடத்தில் பக்தியுக்தனுயிருப்பன் எம்பெருமான் என்கிறது. பூமிப்பிராட்டியாலே எம்பெருமான்றான் ஸேவிக்கப்பட வேண்டியதுபோய் எம்பெருமான்றான் அவளை ஸேவித்திருக்கிறானும் ப்ரணயதாரையில் முதிர்ச்சியாலே. அவளுடைய போக்யதையிலே துவக்குண்டு அத்தலை இத்தலையானபடி. இப்படி ஒருத்தி பக்கலிலே பக்தியைப்பண்ணி நிற்கும் பெருமான், நான் பக்தி பண்ணுகிறேனென்றால் எனது பக்தியைப் பெற்றுக்கொள்வதும் செய்கிறானில்லையே! என்ற வருத்தந் தோற்றப் பார்வண்ண மடமங்கை பத்தர் என்கிறாள் பரகாலநாயகி.

பித்தர் பனிமலர்மேல்பாவைக்கு—இவ்விடத்திலும் 'என்னும்' என்கிற வினைமுற்றைக் கூட்டிக்கொள்வது. இதுவும் மகள் வார்த்தையைத் திருத்தாய் அநுவதிக்கிறபடி. குளிர்ந்த தாமரைப்பூவின் பரிமளந்தானே ஒருவடிவுகொண்ட தென்னலாம்படியான பெரியபிராட்டியார் திறத்திலே பித்துக்கொண்டவன் என்கிறது. "அல்லிமலர்மகள் போகமயக்குக் களாகியும் நிற்குமம்மான்" என்கிறபடியே அவளுடைய போகங்களிலேயே மயங்கி என்னை மறந்தான் கிடீர்! என்றாள் போலும்.

பாவஞ் செய்தேன்—வினவவந்தவர்கட்கு அழுதுகாட்டுகிறாள் திருத்தாய். இப் பெண் பிள்ளையைப் பெறும்படியான பாவஞ்செய்தேன் நான் என்று கண்ணீர் சொரிகின்றாளென்க. இவள் ஈடுபட்ட விஷயத்தின் வைலக்ஷண்யத்தை நம்மால் மாற்றப்போகாது; இவளுடைய ஆற்றாமையும் நம்மால் அடக்கவொண்ணாது; அவனோ உபேக்ஷியா நின்றான்; இவளோ பதறுகின்றாள்; இந்நிலைமையைக் கண்டு கொண்டிருக்கவேண்டுவது என்பாபமேயன்றோ என்கிறாள். பகவத் விஷயத் [illegible] பெண்பிள்ளைக்குண்டான அவகாஹநம் தனக்கு [illegible] நாட்டாருக்காக மறைத்து "பாவஞ்செய்தேன்" என்கிறாள். காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர், ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை" என்ற யசோதைப்பிராட்டியைப்போலே "ஞாலத்துப் புத்திரியைப் பெற்றாள் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை" என்று சொல்லிக்கொள்ளவே இத்திருத்தாய்க்கு விருப்பம்; ஆயினும் கட்டுப்பாட்டுக்காக [illegible]

ஏர்வண்ணவென்பேதை—ஐயோ! இப்பெண்பிள்ளை தன்வடிவழகைத் தான் நன்கறிந்தாளாகில் 'அவன்றானே நமக்காக மடலெத்துப் புறப்படட்டும் என்று கிடக்கலாமே; தன்படியைத் தான் அறியாமலன்றோ இவள் இப்படி படுகிறாள் என்கிறாள். அவனுடைய கார் வண்ணம் இவளுடைய ஏர்வண்ணத்துக்கு ஏற்குமோ? ஒரு உவமையையிட்டுச் சொல்லும்படியா யிருக்கிறது அவன் வடிவு; இவள்வடிவுக்கு உவமை இல்லையே; அழகியவடிவு படைத்தவள்' என்று சொல்லலாமத்தனையொழிய த்ருஷ்டாந்தமிட்டுச் சொல்ல வழியில்லையே! என்கிறாள்.

என்சொல்கேளாள்—நான் இவளை அடக்கி யாண்டுகொண்டிருந்த காலமுண்டு; அது கடந்துபோயிற்று; "அவனுடைய திருவருள் தன்னடையே பரிபக்குவமாகும்போது கிடைக்குமேயல்லது நாம் பதறிப்பயனில்லைகாண்" என்று நான் சொல்லப்புறப்பட்டால் நான் வாய்திறப்பதைக் கண்டவுடனே இவள் காதை அழுந்த மூடிக்கொள்ளுகிறாளே! என்செய்வேனென்கிறாள். [என்சொல் கேளாள் "மாமேகம் சரணம் வ்ரஜ" என்றும் அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம" என்றும் அவன் சொல்லிவைத்த வார்த்தைகளைக் கேட்டிருக்குமவள் என் சொல்லைக் கேட்பளோ?

**எம்பெருமான் திருவரங்கமெங்கே யென்னும்**—என்வார்த்தை கேளாத மாத்திர மேயோ? அவனிருக்கும் தேசத்திற்குச் செல்ல வழியும் தேடுகின்றாள். என்னைத் தனக்கே யாக்கிக் கொண்டவனுடைய கோயிலுக்கு எங்ஙனே வழி யென்கிறாள்.

**நீர்வண்ணன் நீர்மலைக்கே போவேனென்னும்**—எம்பெருமான் திருவரங்கமெங்கே யென்று கேட்டவளுக்கு வழிசொல்வாரார்? ஒருவரும் வாய்திறந்திலர்; அதற்கு மேல் தானே சொல்லுகின்றாள்—நீர்வண்ணன் நீர்மலைக்கேபோவேன் என்கிறாள். திருக்குறையலூரில் நின்றும் புறப்பட்டுத் திருநீர்மலைக்குப் போய் அங்கு நின்றும் திருவரங்கம் பெரியகோயிலுக்குப் போகவேணும் என்று இங்ஙனே இவள் வழி கண்டிருக்கிறாள் போலும். கோவிலிலே கெட்டுப்போன பொருளைக் குளத்திலே தேடுமாபோலே யிருக்கிறது இவள்படி. திருப்பதிகளிலே தங்கித் தங்கிப்போகப் பார்க்கிறாளாயிற்று.

**இதுவன்றே நிறைவழிந்தார் நிற்குமாறே**—தன் தலையில் ஸ்வரூபத்தைப் பாராதே எதிர்த்தலையின் வைலக்ஷண்யத்தையே பார்த்துப் ப்தருவாருடையபடி இதுவன்றோ. இப்படியும் அடக்கங்கெட்டாளே என்மகள்! என்றாளாயிற்று. ... ... 18

**முற்றாரவனமுலையாள்பாவை,மாயன் மொய்யகலத்துள்ளிருப்பாளஃதும்கண்டும்**
**அற்றாள்*தன்நிறைவழிந்தாளாவிக்கின்றாள் அணியரங்கமாடுதுமோ? தோழீ! யென்னும்***
**பெற்றேன்வாய்ச்சொல்லிறையும்பேசக்கேளாள் பேர்பாடித்தண்குடந்தைநகரும்பாடி***
**பொற்றாமரைக்கயம்நீராட்டப்போனாள் பொருவற்றாளென்மகள்உம்பொன்னுமஃதே.** 19

| | |
|---|---|
| பொருவு அற்றாள் என் மகள் | ஒப்பில்லாதவளான என பெண்ணானவள், |
| முற்று ஆராவனம் முலையாள் | முழுமுற்றும போந்திலாத அழகிய முலைகளை யுடையவளும் |
| பாவை | சதுரப்பதுமைய போன்ற வளுமான ஸ்ரீமஹாலக்ஷ்மி |
| மாயன் | அற்புதனான எம்பெருமானுடைய |
| மொய் அகலத்துள் இருப்பாள் அஃது கண்டும் | அழகிய திருமார்பினுள் வாழும்படியைக் கண்டு வைத்தும் |
| அற்றாள் | அவனுக்கே அற்றுத்தீர்ந்தாள்; |
| தன் நிறைவு அழிந்தாள் | தன்னுடைய அடக்க மொழிந்தாளை; |
| ...ராள் | கெடுமூச்செறியா நின்றாள்; |
| அணி அரங்கம் ஆடுதுமோ என்னும் | 'தோழீ! திருவரங்கநகர் படிந்தாடுவோமா?' என்கிறாள்; |
| பெற்றேன் | பெற்றெடுத்ததாயாகிய நான், |
| வாய சொல் பேச | (ஹிதமாகச் சில) வார்த்தைகள் சொல்ல, |
| இறையும் | சிறிதேனும் |
| கேளாள | காதுகொடுத்துங் கேட்பதில்லை; |
| பேர் பாடி | திருப்பேர்நகரைப் பாடியும் |
| தண் குடந்தை நகர் பாடியும் | குளிர்ந்த திருக்குடந்தையைப் பாடியும் |
| பொன் தாமரை கயம் | திருப்பொற்றாமரைத் தடாகத்திலே |
| நீர் ஆட | குடைந்தாடுவதற்கு |
| போனாள் | எழுந்து சென்றாள்; |
| உம பொன்னும் அஃதே | (தோழியர்காள்!) உங்கள் பெண்ணின்படியும் இவ்வண்ணமேயோ? |

* * *_ நிறைவழிந்தார் நிற்குமாறே" என்றாள் கீழ்ப்பாட்டில் அதுகேட்ட பெண்டுகள் 'இப்படியும் சொல்லிக் கைவிடலாமோ நீ? 'நீ விரும்புகிற புருஷன் வேற்றுப் பெண்பிள்ளைகள் பக்கலிலே சாலவும் ஆழ்ந்து கிடப்பவனாகை யாலே அவன் உனக்கு முகந்தரமாட்டான்; வீணாக ஏன் அவனிடத்து நசை வைத்துக் கதறுகின்றாய்?' என்று சொல்லியாவது மகளை மீட்கப் பார்க்க லாகாதோ? என்று சொல்ல; 'அம்மனைமீர்! அதுவுஞ் சொன்னேன்; நான்

சொல்வதில் ஒரு குறையுமில்லை; என் உபதேசமெல்லாம் விபரீத பலமாய்விட்டது காணீர்' என்கிறாளிதில்.

முற்றாரா வனமுலையாள்பாவை என்கிறது பெரியபிராட்டியாரை. பிராட்டியின் பருவத்தைப்பற்றிச் சொல்லுமிடங்களில் யுவதிச்ச குமாரிணீ' என்று சொல்லப்பட்டது; அதாவது—குமாரியா யிருக்கும் நிலைமையிலே நிற்பவளாய் அத்தோடு யௌவனமும் வந்து முகங்காட்டுமளவாயிருக்கும் இவள் பருவம் என்றபடி. அதற்கு இணங்க 'முற்றாரா வன முலையாள்பாவை' என்கிறது. முழுமுற்றும் போந்திலாத அழகிய முலையையுடையளான ஸ்ரீ மஹாலக்ஷ்மி—உபயவிபூதிநிர்வாஹகனாய் எல்லையில் ஞானத்தனாய் நிருபாதிக ஸ்வதந்த்ரனாய் அவாப்தஸமஸ்த காமனாயிருக்கு மெம்பெருமானையும் தன்னுடைய ஒரு அவயவ விசேஷத்திலே அடக்கியாளப் பிறந்தவளென்கிறது.

மாயன்மொய்யகலத்துள்ளிருப்பாள் அஃதுங்கண்டும் அற்றாள்—எம்பெருமான் பிராட்டியின் திருமுலைத் தடத்தைவிட்டுப் பேராதாப்போலே அவள் இவனுடைய திருமார்பைவிட்டுப் பேராதிருக்கிறபடி. இவன் அவளுடைய திருமுலையைப்பற்றி 'அகலகில்லேனிறையும்' என்பன்; இவள் அவனுடைய திருமார்வைப்பற்றி 'அகலகில்லேனிறையும்' என்பள். முலையை யணைந்து அவன் பிதற்றிக்கிடக்க, மார்வையணைந்து இவள் பிதற்றிக்கிடக்க. இங்ஙனே ஒரு திவ்யதம்பதிகள் பைத்தியம்பிடித்துப் படுகிறபாடு என்! என்னலாம்படி யிருக்கும். [அஃதுங்கண்டும் அற்றாள்] "திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை செழுங்கடலமுதினிற் பிறந்தவளும், நின் ஆகத்திருப்பது மறிந்துமாகிலுமாசை விடாளால்" என்றவாறு. உலகத்தில் ஒரு புருஷன் ஒரு ஸ்திரீயினிடத்தில் அளவற்ற அன்பு வைத்திருப்பதாகக் கண்டால் அவனிடத்தில் மற்றையோர் ஆசைவைப்பது கூடாது; ஏனெனில்: அவனுடைய ஆசைப்பெருக்கம் முழுதும் ஒருவ்யக்திவழியிற் பாய்ந்துவிட்டதனால் அது மற்றொரு வ்யக்தியிற் பாயமாட்டாது; அலக்ஷியஞ்செய்யவே நேரிடும். ஆகவே, ஏற்கனவே ஒரு வ்யக்தியினிடத்தில் காதல் கொண்டிராநின்ற புருஷனை மற்றையோர் காதலிப்பது விவேகிக்ருத்யமன்று. இஃது உலகில் ஏற்பட்ட விஷயம். இந்த நியாயத்தைக்கொண்டு பார்க்குமளவில், என்மகள்*அல்லிமலர் மகள் போக மயக்குக்களாகியும் நிற்குமம்மானிடத்தில் ஆசைவைப்பது கூடாது. அழகிற் சிறந்த திருமகள் ஒரு நொடிப்பொழுதும் விடாது திருமார்பிலேயே அந்தரங்கமாக வாழ்வதைக் கண்டுவைத்தும் இவள் அவ்விடத்திற்கே அற்றுத்தீர்ந்தாள் காண்மின் என்றாள் திருத்தாய். "நீரிலே நெருப்புக் கிளருமாபோலே குளிர்ந்த திருவுள்ளத்திலே அபராதத்தாலே சீற்றம்பிறந்தால் பொறுப்பது இவளுக்காக" என்கிறபடியே குற்றங்களைப் பொறுப்பிக்கவல்ல பெரியபிராட்டியாரும், "தன்னடியார் திறத்தகத்துத் தாமரையாளாகிலுஞ் சிதகுரைக்குமேல், என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்றுசெய்தாரென்பர்" என்கிறபடியே*செய்தகுற்றம் நற்றமாகவே கொள்ளவல்ல எம்பெருமானும் கூடியிருக்கிற இவ்விருப்புத்தானே நமக்குப் பரம உத்தேச்யமென்று கொண்டு அந்த மிதுனத்திலே ஈடுபடா நின்றாளாயிற்று.

தன்நிறைவழிந்தாள்—அந்த மிதுனத்தில் ஈடுபட்டமாத்திரமேயோ? தன் பெண்மைக்குரிய அடக்கமும் அழியப்பெற்றாள். 'கடல்வற்றிற்று' என்பாரைப்போலே சொல்லுகிறபடி காண்மின். நிறைவழிந்தாளென்பதை நீ அறிந்தமை எங்ஙனே? என்று கேட்க ஆவிக்கின்றாள் என்கிறாள், கீழ் 'எம்பெருமான் திருவரங்கமெங்கே?' என்று திருவரங்கம் பெரியகோயிலுக்குப்போக வழிதேடினவள் அது தெரியப்பெறாமையாலே நெடுமூச்செறியா நின்றாள். இதுவே நிறைவழிந்தமைக்கு அடையாளம்.

அணியரங்கமாடுதுமோ தோழீயென்னும்—பரகாலநாயகியின் நிலைமையைக் கண்டு 'எம்பெருமானோ இவளுக்கு முகங்காட்டிற்றிலன்; ஹிதபரையான தாயார் சொல்லும் வார்த்தைகளில் ஒன்றும் இவளுக்கு ப்ரியமல்லாமையாலே தாயைக்கொண்டு இவள் ஆச்வஸிக்கவழியில்லை. இத்தருணத்தில் இவளுக்கு நாம் அருகே நின்று முகங்காட்டுவோம்' என்று நினைத்துத் தோழிவந்து பக்கத்தில் நின்றாள்; நின்றவாறே 'அணியரங்கமாடுதுமோ தோழீ!' எனத் தொடங்கினாள். ஸ்ரீ ரங்கநாதனென்கிற பொய்கையிலே படிந்து குடைந்தாடி நம்முடைய விரஹதாபமெல்லாம் தணியப் பெறுவோமா? என்றாளென்க.

பெற்றேன்வாய்ச்சொல் இறையும் பேசக்கேளாள்—'இனி நாம் இவள் வருந்தும்படியான ஹிதவார்த்தைகளைச் சொல்லக்கடவோமல்லோம்; இவளுக்கு ப்ரியமான வார்த்தைகளையே சொல்லுவோம்' என்று நினைத்து இவளுடைய காரியங்களுக்கு உடன்பாடான வார்த்தைகளைச் சொல்லுவதாக நான் வாய்திறந்தாலும் 'என் வாயில் வருகிற வார்த்தை' என்பதுவே காரணமாக அந்த அனுகூலவார்த்தைகளையும் செவிதாழ்த்துக் கேட்கிறாளில்லை. 'அணியரங்கமாடுவோம், நீர்வண்ணன் நீர்மலைக்கே போவோம்' என்று நான் சொன்னாலும் 'இவளுடைய பேச்சு எதுவாயிருந்தாலும் நம்காதில் விழத்தகா' என்று காதை மூடிக்கொள்ளுகிறாளென்றபடி. அவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்பள், தோழி சொன்ன வார்த்தைகளைக் கேட்பள்; பெற்றதே குற்றமாக என்வார்த்தைகளைக் கேளாள். பிரதிகூலமே சொல்லிப் போருவார் வாயிலே அநுகூல வார்த்தைகள் வந்தாலுங் கேட்பாரில்லையிறே.

உன்வார்த்தை கேளாத அவளுடைய வார்த்தை இருந்தபடி என்? என்று கேட்க, பேர்பாடித் தண்குடந்தை நகரும்பாடி என்கிறாள். கோவிலுக்குப்போம் வழியிலுள்ள பாதேயங்களைப் பேசா நின்றாளென்கிறாள். திருக்குறையலூரிலிருந்து திருவரங்கம் போகவேண்டுவார் முந்துறத் திருக்குடந்தையைப் பாடிப் பின்னைத் தென்திருப்பேர்நகரைப் பாடவேண்டுவது ப்ராப்தமாயிருக்க க்ரம ப்ராப்தி பற்று... கனம். (பாதேயம்—வழிப்போக்கில் உணவுச்சாதம்.)

பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்—கீழே திருக்குடந்தை ப்ரஸ்துதமாகையாலே அத் தலத்தில் புண்ணிய தீர்த்தமாக வழங்கிவருகின்ற பொற்றாமரை என்னும் புஷ்கரிணியிலே நீராடப்போனாள் என்று பொருள்கொள்ளப்பொருந்துமாயினும் எம்பெருமான் றன்னையே பொற்றாமரைக்கயமாகப் பேசுகிறாரென்றலும் பொருந்தும். தமிழர், ஸம்ச்லேஷத்தைச் சுனையாடலென்றும் நீராட்டமென்றும் சொல்லுவர்கள். எம்பெருமானோடு கலவிசெய்ய விரும்புவதையே இங்குப் பொற்றாமரைக்கயம் நீராடப்போவதாகச் சொல்லிற்றென்க. இவ்விடத்துப் பெரியவாச்சான் பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்;—

> "மகள் 'அணியரங்கமாடுதுமோ' என்று ஊரைச் சொன்னாள்; தான் பொற்றாமரைக் கயமென்று பெரிய பெருமாளைச் சொல்லுகிறாள்: 'தயரதன் பெற்ற மரதக மணித்தடம்' என்றும் 'வாசத்தடம்போல் வருவானே!' என்றும் தடாகமாகச் சொல்லக்கடவதிறே"—என்பதாம்.

அவள் பொற்றாமரைக்கயம் நீராடப் புறப்பட்டால் நீ தடை செய்யலாகாதோ? என்ன, பொருவற்றாள் என்மகள் என்கிறாள். பொருவு—பொருத்தம்; என்னோடு சேர்த்தியற்றாள் என்றபடி. என் உறவை அறுத்துக்கொண்டவளை நான் எங்ஙனே நியமிப்பேன்? என்கிறாள். இனி, 'பொருவற்றாள்' என்பதற்கு 'ஒப்பில்லாதவள்' என்றும் பொருளாகும்.

உம்பொன்னுமஃதே—இரண்டு வகையான பொருளைக் கருதி இச்சொல் சொல்லுகிறாள்; உங்கள் வயிற்றிற் பிறந்த பெண்ணும் இவளைப்போலே அடங்காப்

பிடாரிதானோ? அன்றி விதேயையா யிருப்பவளோ? என்று கேட்பது வெளிப்படை. உங்கள் பெண்ணுக்கு இத்தனை வைலக்ஷண்யம் இல்லையே!, *நங்கைமீர்! நீரு மோர்பெண்பெற்று நல்கினீர், எங்ஙனே சொல்லுகேன் யான் பெற்ற வேழையை! என்றாற்போலே கொண்டாட்டம் உள்ளுறை.

“உம்பொன் என்கிறது அல்லாத ஆழ்வார்களை; ‘மத்துறுகடைவெண்ணெய் களவினிலுரவிடையாப்புண்டு, எத்திறம்! உரலினோடிணைந்திருந் தேங்கிய எளிவே!’ என்று அவதாரத்தை அநுஸந்தித்திறே அவர்கள் மோஹித்தது; அர்ச்சாவதாரத்திலேயிறே இவள் மோஹிப்பது” என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் இங்கு அநுஸந்திக்கத்தக்கன.

பொன் என்ற சொல் உவமையாகு பெயரால் பெண்ணையுணர்த்தும். .... 19

**தேராளும்வாளரக்கன்செல்வம்மாளத் தென்னிலங்கைமுன்மலங்கச்செந்தீயொல்கி***
**போராளனாயிரந்தோள்வாணன்மாளப் பொருகடலையரண்கடந்துபுக்குமிக்க**
**பாராளன்*பாரிடந்துபாரையுண்டுபா ருமிழ்ந்துபாரளந்து பாரையாண்ட**
**பேராளன்* பேரோதும்பெண்ணைமண்மேல் பெருந்தவத்தளென்றல்லாற்பேசலாமே?** 20

| | |
|---|---|
| முன் | முன்பொருகால் |
| தேர் ஆளும் வாள் அரக்கன் | தேர் வீரனும் வாட்படை வல்லவனுமான இராவணனுடைய |
| செல்வம் மாள | ஐச்வரியம் அழியவும் |
| தென் இலங்கை மலங்க | (அவனது) தென்னிலங்கா புரி கலங்கவும் |
| | (அனுமானையிட்டு) |
| செம் தீ ஒல்கி | வந்த நெருப்பாலே கொளுத்தி |
| | (அதுவன்றியும்) |
| போர் ஆளன் | போர்புரியுந் தன்மையனாய் |
| ஆயிரம் தோள் | ஆயிரந்தோள்களை யுடையனை |
| வாணன் | பாணாஸுரன் |
| மாள | பங்கமடையும்படி செய்தற்கு |
| பொரு கடல் அரணை கடந்து | அலையெறிகின்ற கடலாகிற கோட்டையைக் கடந்து |
| புக்கு | பாணபுரத்திற்புகுந்து |
| மிக்க | வீரலக்ஷ்மி மிகப்பெற்றவனும், |

| | |
|---|---|
| பார் | பூமிக்கு நிர்வாஹகனும், |
| பார் இடந்து | (வராஹாவதாரத்தில்) பூமியைக் குத்தியெடுத்தும் |
| பாரை உண்டு | (பிரளயத்தில்) பூமியைத்திருவயிற்றிலே வைத்தும் |
| பார் உமிழ்ந்து | அப்பூமியை பிறகு வெளிப்படுத்தியும் |
| பார் அளந்து | (த்ரிவிக்ரமாவதாரத்தில்) அப்பூமியை அளந்தும் |
| | (ஆக இப்படியெல்லாம்) |
| பாரை ஆண்ட | இவ்வுலகத்தை ரக்ஷித்தருளினவனான |
| பேர் ஆளன் | பெருமை பொருந்தின எம்பெருமானுடைய |
| பேர் | திருநாமங்களை |
| ஓதும் | விடாமற் சொல்லுகிற |
| | இப்பெண்பிள்ளையை |
| மண் மேல | இந்நிலவுலகத்தில் |
| பெருந் தவத்தள் என்று அல்லால் பேசலாமே | பெரும்பாக்கிய முடையவள் என்று சொல்லலாமத்தனையொழிய வேறு சொல்லப் போமோ? |

* * *—பண்டு ஸ்ரீராமாவதாரத்தில் பிராட்டிக்கு உதவினபடியையும், ஸ்ரீக்ருஷ்ணாவதாரத்தில் பேரனுக்கு உதவினபடியையும், வராஹாவதாரத்தில் பூமிப்பிராட்டிக்கு உதவினபடியையும், பிரளயகாலத்தில் உலகங்கட்கெல்லா முதவினபடியையும், த்ரிவிக்ரமாவதாரத்தில் ஸர்வஸ்வதானம் பண்ணினபடியையும் எடுத்தெடுத்துப் பரகாலநாயகி வாய்விட்டுக் கதறுகின்றபடியைத் திருத்தாயார் சொல்லாநின்றுகொண்டு, இப்படிப்பட்ட என் மகளை இந்நிலவுலகத்தில் பெரும் பாக்கியம் படைத்தவளென்று சொல்லலாமத்தனையன்றி வேறெதுவும் சொல்லப் போகாதென்று தலைக்கட்டுகிற பாசுரம் இது.

தேராளும் வாளரக்கன் செல்வம்மாள—இத்தனை தேர்களை ஆண்டானென்று ஒரு கணக்கிட்டுச் சொல்லாதே பொதுவிலே 'தேராளும்' என்றது, தேரென்று பேர் பெற்றவை யெல்லாவற்றையும் ஆண்டவனென்றபடி. இது சொன்னது ரத கஜ துரக பதாதிகள் என்கிற சதுரங்க பலத்தையும் ஆண்டமை சொன்னவாறு. பெருவீரர்களைப் பேசும்போது 'அதிரதர்' 'மஹாரதர்' என்று தேரையிட்டு நிரூபித்துப் பேசுவது மரபாதலால் இங்கும் தேராளும் என்றது. [வாளரக்கன்.] கீழ்ச் சொன்ன சதுரங்கபலங்களையும் அழகுக்காகக் கட்டிவைத்தானத்தனையே யென்ன வேண்டும்படியான தனிவீரன். கையிலே வாட்படையைக்கொண்டு எழுந்திருந்தால் இந்திரன் முதலானவர்களும் முதுகுகாட்டி யோடி யொளிக்கவேண்டும்படியான தனிவீரன். ஆக இப்படிப்பட்ட அரக்கனுடைய செல்வம் மாள—ஒன்றுக்கும் விகாரப் படகில்லாத அனுமானும் கண்டு போரப்பொலியக் கொண்டாடின செல்வமன்றோ இராவணனது. "யத்யதர்மோ ந பலவாந் ஸ்யாதயம் ராக்ஷஸேச்வர:, ஸ்யாதயம் ஸுர லோகஸ்ய ஸசக்ரஸ்யாபி ரக்ஷிதா" [இவ்விராவணனிடத்தில் அதர்மம் ஒன்றுமாத்திரம் இல்லாதிருந்தால் இவனே தேவாதி தேவனாக விளங்கவல்லவன்] என்றாயிற்று அனுமான் பேசினது. அங்ஙனம் வியக்கத்தக்க ஐச்வரியமெல்லாம் தொலையும் படியாக.

தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீயொல்கி—தென் என்று கட்டளைப்பட்டிருக்கு மொழுங்குபாட்டைச் சொன்னபடி. சுற்றுங்கடலாய் அப்புறம் காடாய் அங்கே மலையாய் அதன்மேலே மதிளும் அட்டாலையுமாயிருக்கிற கட்டழகையுடைய இலங்காபுரி என்றபடி. அப்படிப்பட்ட நகரம் நிலை கலங்கும்படியாக நெருப்பையிட்டுக் கொளுத்திச் சுடுகாடாக்கினபடி. இதற்கு முன்னே அக்னிபகவான் இராவணனிடம் அஞ்சி நடுங்கி அவனுக்குக் குற்றேவல் செய்துகொண்டு போதுமான இரை பெறாதே உடம்பு வெளுத்துக்கிடந்தான்; அனுமான் இலங்கை புக்க பின்பு அவனுடைய வாலை அண்டைகொண்டு வயிறுநிரம்பப் பெற்றுத் தன்னிறம் பெற்றுத் தேக்கமிட்டானென்க. ஆக இவ்வளவும் பிராட்டிக்காகச் செய்த காரியத்தைச் சொன்னாளாயிற்று.

இனி இரண்டாமடியால் பேரனுக்குச்செய்த காரியஞ் சொல்லுகிறது. வாணனை உயிரோடு விட்டிருக்கச் செய்தேயும் 'வாணன் மாள' என்றது எங்ஙனே யென்னில்; பின்பு அவன் உயிரோடிருந்த இருப்பு பிணமாயிருக்குந் தன்மையிற் காட்டில் வாசியற்றதென்பது விளங்க மாள என்றது.

பொருகடலை அரண்கடந்துபுக்கு மிக்க பாராளன்—எதிரிகட்கு அணுகவொண்ணாதபடி திரைக்கிளர்த்தியை யுடைத்தான கடலாகிற அரணைக் கடந்து பாணபுரத்திலே சென்று புகுந்து வீரலக்ஷ்மியாலே மிக்கவனாய், பூமிக்குச் சுமையான வாணன் தோள்களை அறுத்தொழிக்கையாலே பூமிக்கு நிர்வாஹகனானவன்.

பாரிடந்து—பிரளயத்தைச் சார்ந்திருந்த பூமியை மஹாவராஹரூபியாகச் சென்று உத்தரித்து வந்தபடி சொல்லுகிறது. *பாசிதூர்த்துக் கிடந்த பார்மகட்குப் பண்டொருநாள், மாசுடம்பில் நீர்வாரா மானமிலாப் பன்றியாந் தேசுடைய தேவர் என்னை மாத்திரம் இப்படி உபேக்ஷித்திருப்பதே! என்பது கருத்து.

பாரையுண்டு—பூமியை யடங்கலும் பிரளயப் பெருவெள்ளம் கொள்ளப் புகுகையில் எல்லாவற்றையும் வாரித்திருவயிற்றிலே வைத்துக்காத்தபடி சொல்லுகிறது. நானும் அக்காலத்தில் இருந்திருந்தேனாகில் திருமேனியோடே ஸம்பந்தம் பெற்றிருப்பேனே என்றவாறு.

பாருமிழ்ந்து—பிரளயகாலத்தில் திருவயிற்றினுள்ளே அடக்கின பூமியை மறுபடியும் வெளிப்படுத்திக் கரணகளேபரங்களைக் கொடுத்தருளி உருப்படுத்தினது இங்ஙனம் உபேக்ஷிக்கைக்காகவோ? என்றவாறு.

பாரளந்து—உலகளக்கிற வியாஜத்தாலே விரும்பாதார் தலையிலும் திருவடியை வைத்து ஸத்தை பெறுவித்தருளினவன், விரும்புகின்ற எனக்குத் திருமார்பைத் தாராவிடினும் ஊர்ப்பொதுவான திருவடியையும் தாரா தொழிவதே! என்ற கருத்துப்படச் சொல்லுகிறபடி.

பாரையாண்ட—ஆகக் கீழ்ச் சொன்னவற்றையெல்லாம் திரளப்பிடித்துச் நிகமனஞ் செய்கிறபடி. *தேராளும் வாளரக்கன் செல்வம்மாளத் தென்னிலங்கை முன்மலங்கச் செந்தீயொல்கிப் பாரையாண்ட பேராளன்; பாரிடந்து பாரையாண்ட பேராளன்; பாரையுண்டு பாரையாண்ட பேராளன்; பாருமிழ்ந்து பாரையாண்ட பேராளன்; பாரளந்து பாரையாண்ட பேராளன்—என்றிங்ஙனே அந்வயித்துக் கொள்ளலாம். இவை பரகாலநாயகி ஓதின திருநாமங்களாம். ஆக இப்படிப் பட்டவையும் இவை போல்வனவுமான திருநாமங்களை இடைவிடாமல் காலக்ஷேபார்த்தமாகப் பேசவல்லவிவளை, மண்மேற் பெருந்தவத்தளென்றல்லால்பேசலாமே?—நித்யஸூரிகளின் திரளில்நின்று பிறிகதிர்ப்பட்டு வந்தவள் என்னலாமத்தனை யொழிய வேறுபேசப்போமோ? பூமியிலேயிருக்கச் செய்தே நித்யஸூரிகள் பரிமாற்றத்தையுடையவளென்றே சொல்லவேணும்.

ஆகத் திருத்தாயார் பரசுரமாகச் சென்ற இடைப்பத்து முற்றிற்று. ... **20**

மைவண்ண நறுங்குஞ்சிக்குழல்பின்தாழ மகரம்சேர்குழையிருபாடிலங்கியாட*
எய்வண்ணவெஞ்சிலையேதுணையா இங்கேஇருவராய்வந்தாரென்முன்னேநின்றார்*
கைவண்ணம்தாமரைவாய்கமலம்போலும் கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே*
அவ்வண்ணத்தவர்நிலைமைகண்டும்தோழீ! அவரைநாம்தேவரென்றஞ்சினோமே. **21**

| | | | |
|---|---|---|---|
| மை வண்ணம் நறு குஞ்சி குழல் பின் தாழ | கறுத்த நிறமுடைத்தாய் நறுமணம் மிக்கதாய் அலகலகாயிருந்துள்ள திருக்குழற் கற்றையானது பின்னே அலையவும் | கை | கைகள் |
| | | தாமரை வண்ணம் | செந்தாமரைப் பூப்போலும் அழகுடையன; |
| | | வாய் | திருப்பவளமும் |
| | | கமலம் போலும் | தாமரையொக்கும்; |
| இரு பாடு | இருபுறத்திலும் | கண் இணையும் | திருக்கண்களும் |
| மகரம் சேர் குழை | மகரகுண்டலங்கள் | அரவிந்தம் | அத்தாமரையே; |
| | | அடியும் | |
| இலங்கி ஆட | அசைந்து விளங்கவும் | அஃதே | அந்தத் தாமரையே; |
| எய் வண்ணம் வெம் சிலையே துணை ஆ | பிரயோகித்தலை இயல்வாகவுடைய வெவ்விய வில்லையே துணையாகக் கொண்டு | அவ்வண்ணத்தவர் | அப்படிப்பட்ட அழகுவாய்ந்த அவருடைய |
| | | நிலைமை | நிலைமையை |
| இங்கே | இந்தத் திருமணங்கொல்லையிலே | கண்டும் | கண்டுவைத்தும் |
| | | தோழீ | தோழியே! |
| இருவர் ஆய் வந்தார் | (தாமும் இளையபெருமாளுமாக) இருவராய் வந்து | அவரை | அவரைக்குறித்து |
| | | நாம் | நாம் |
| என் முன்னே நின்றார் | என்னெதிரே நின்றார்; | [illegible] என்று அஞ்சினோம் | பரதேவதையென்கிற பிரதிபத்தியாலே பயப்பட்டோமே! |
| | (அவருடைய) | | |

* * *—இத்திருத்தாண்டகம் மூன்று பத்தாக வகுக்கப்பட்டுள்ளது. முதற் பத்துப் பாசுரங்கள் ஆழ்வார் தாமான தன்மையிலே யிருந்து பேசினவை. அதற்கு மேல் பத்துப் பாசுரங்களாகிய நடுவிற்பத்து, தாய்பாசுரமாகச் சென்றது. இனி, இதுமுதலான பாசுரங்கள் தலைமகள் பாசுரமாகச் செல்கின்றன.

பகவத்கீதையில் (10—9.) "மச்சித்தா மத்கதப்ராணா: போதயந்த: பரஸ்பரம், கதயந்தச்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்திச" [அதாவது, சித்தத்தை நமக்கென்றே பறி

கொடுத்து அப்படியே நம்மைப்பிரிந்தால் தரிக்கமாட்டாமல் பிராணனையும் நம் அதீனமாக்கி, தாம்தாம் அனுபவித்த நற்குணங்களை யெடுத்து ஒருவர்க்கொருவர் சொல்லிக்கொண்டு அப்படியே நாம்செய்த திவ்யசேஷ்டிதங்களையும் எடுத்துப் பேசிக்கொண்டு ஆனந்திக்கிறார்கள்] என்றுள்ள ச்லோகத்தை இத்திருத்தாண்டகத்தின் மூன்றுபதிகங்கட்கும் வாக்கியார்த்தமாக நிர்வஹிப்பர் பட்டர். *மச்சித்தா:* என்றதற்குப் பொருந்தியிருக்கும் முதற்பதிகம்; *மத்கதப்ராணா:* என்றதற்குப் பொருந்தியிருக்கும் நடுவிற் பதிகம்; *போதயந்த: பரஸ்பரம்* என்றதற்குப் பொருந்தியிருக்கும் கடைப்பதிகம். தம்முடைய ஞானத்திற்கு எம்பெருமானையே இலக்காக்கி ஜ்ஞாநப்ரதாநரான வ்யாஸபராசராதி மஹர்ஷிகளின் ரீதியிலே பேசுகையாலே முதற்பத்து [மச்சித்தா:] என்றபடியாகிறது; தன்மூச்சடங்கி வேற்று வாயாலே பேசினதாகையாலே நடுவிற்பத்து [மத்கதப்ராணா:] என்றபடியாகிறது. தோழிமார்களுக்குச் செய்தியறிவித்தும் தோழிமார்களின் வார்த்தைகளைக்கேட்டும தரித்துப் பேசினதாகையாலே இப்பத்து [போதயந்த: பரஸ்பரம்] என்றபடியாகிறது.

"அதர்சநே தர்சநமாத்ரகாமா. த்ருஷ்ட்வா பரிஷ்வங்கரஸைகலோலா:, ஆலிங்கிதாயாம் புநராயதாக்ஷ்யாம் ஆசாஸதே விக்ரஹயோரபேதம்" [கண்ணுற் காணாதவளவில் ஒருதடவை கண்ணுற் காணப்பெற்றால் அமையும் என்று காதலிப்பர்கள்; அப்படியே காணப்பெற்று விட்டால் ஒருகால் அணைத்துக் கொள்ளவேணும் என்று காமுறுவர்; அப்படியே அணைத்துக்கொள்ளவும் பெற்றால் 'இரண்டு சரீரமாக இருப்பதேன்? இரண்டுடலும் ஒருடலாக ஒற்றுமைப்பட்டாலாகாதோ?' என்று அபேதத்தை விரும்பிப் போருவர்கள்] என்றொரு ஸுபாஷிதமுண்டு. இதுவும் அடைவே மூன்று பத்துக்கும் வாக்கியார்த்தமாக அமையும். எங்ஙனேயென்னில், முதற்பத்தில் "எங்குற்றா யெம்பெருமானுன்னை நாடி ஏழையேனிங்ஙனமே யுழிதருகேனே" என்று அவனைக் காணவேணுமென்னுமாசை கிளர்ந்திருக்கின்றமை தோற்றச் சொல்லுகையாலே *அதர்சநே தர்சநமாத்ர காமா:* என்றபடியாகிறது. இரண்டாம்பத்தில் "முற்றாராவனமுலையாள்பாவை, மாயன் மொய்யகலத் துள்ளிருப்பாளஃதுங்கண்டு மற்றாள்" என்று நாச்சியாரைப்போலே தானுந் திருமார்பிலே அணைய வாசைப்பட்டமை தோற்றச் சொல்லுகையாலே *த்ருஷ்ட்வா பரிஷ்வங்கரஸைகலோலா:* என்றபடியாகிறது. இனி, இப்பத்தில் "கள்ளூரும் பைந்துழாய் மாலையானைக் கனவிடத்தில் யான் காண்பன் கண்டபோது, புள்ளூரும்கள்வா! நீ போகேலென்பன்" என்றும் "என்றன்பொன்னிலங்கு முலைக்குவட்டிற் பூட்டிக் கொண்டு போகாமைவல்லேனாய்ப் புலவியெய்தி என்னில் அங்கமெல்லாம் வந்தின்ப மெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப்பன் நானே" என்றும் சொல்லுகையாலே *ஆசாஸதே விக்ரஹயோரபேதம்* என்றபடியாகிறது.

'காந்தர்வவிவாஹ மென்னப்படுகிற இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தாள் பெண்பிள்ளை' என்று கேள்விப்பட்ட திருத்தாயார் 'நங்காய்! நங்குடிக்கிதுவோ நன்மை' என்று சீற, மகளானவள் 'அன்னை என்னைக்குமென் றஞ்சுகின்றேன்' என்கிறபடியே பயப்பட்டுத் தலைமகன் பக்கலில் செல்லாதிருக்க, அவனும் என்னோ வென்று சங்கைகொண்டவனாய் இவள்பக்கலிலே நேரேவரக்கூசி இவளது அபிப்ராயமறியவேணுமென்று பார்த்து. பிறரைத் தூதுவிடுவதிற்காட்டில் தானே ஒரு வியாஜமாகவந்து கருத்தறிதல் நன்றென்று நினைத்து, 'தலைவியானவள் ஊரைச் சூழ்ந்ததொரு பூந்தோப்பிலே பூக்கொய்யப் புறப்பட்டுப் போகிறா'ளென்று கேள்விப்பட்டு, தான் வேட்டையாடிவருவானாக எடுத்துக்கட்டின குழற்கற்றையும் பிடரியிலே தழைத்தலைகிற மயிரும் இறுக்கின சாணமும் கட்டின கச்சும் வலத்தோளிலிட்ட மெத்தையும பெருவிரலிலேபூட்டின சரடும் இடக்கையிலே நடுக்கோத்துப் பிடித்த வில்லும் வலக்கையிலே இறுக்கின அம்பும் முதுகிலேகட்டின அம்பறாத்தூணியுமாய்க் கொண்டு அந்தப் பூந்தோப்பில்தானே சென்றுசேர,

தலைமகளுடன்கூட இருந்த தோழி தானும் ஒருவியாஜத்தாலே பேரநிற்க, தைவ யோகத்தாலே நாயக நாயகிகளுக்குக் கலவி கூடிற்றாய், நாயகனும் "புனலரங்க மூரென்று போயினாரே" என்கிறபடியே வெளிப்பட்டுச்செல்ல அவ்வளவிலே உயிர்த்தோழியானவள் வந்தணுகி 'நங்காய்! தலைவன் வந்தபடியென்? செய்த படியென்?' என்று கேட்க, தலைவி தோழிக்கு வ்ருத்தகீர்த்தநம்பண்ணுகிற பாசுர மாய்ச் செல்லுகிறது இப்பாட்டு.

கீழ்ப்பாட்டில், தாயானவள் தான்சொன்ன ஹிதத்தை மகள் கேளாதவ ளானபடியாலே இனி இவளை அடக்கியாளுகை முடியாத காரியமென்று நிச்சயித் துப் "பேராளன் பேரோதும் பெண்ணைமண்மேற் பெருந்தவத்தளென்றல்லாற் பேசலாமே" என்று கொண்டாடி உதாஸீநையானாள்; 'தலைவிக்கு இங்ஙனம் ஆற்றாமை மீதூர்ந்தது நம் க்ருஷி பலித்தபடியன்றோ' என்று நினைத்து மகிழ்ந்து எம்பெருமானும் உதாஸீநனாய் நின்றான்; இந்த நிலைமையிலே நாமும் உதாஸீநித் திருந்தால் இவளை இழந்தோமாகவேணு மத்தனையென்று எண்ணின உயிர்த் தோழி, கீழ் நடந்தகலவியை நினைப்பூட்டினால் அது கண்டு இவள் ஒருவாறு தரித் திருக்கக்கூடுமென்று பார்த்து 'அவன் வந்தபடி என்? உன்னோடு கலந்தபடி என்? பின்பு பிரிகிறபோது உனக்குத் தேறுதலாகச் சொல்லிப்போன வார்த்தை ஏதே னுமுண்டோ? சொல்லிக்காணாய்' என்ன, அவற்றைத் தோழிக்குச் சொல்லு கிறாள்.

அவனுடைய அழகையும் சீலத்தையும் கண்டுவைத்து, கைப்பட்ட பொரு ளைக் கடலிலே வீசியெறிந்தாற்போலே, ஏதோவேறாக நினைத்து அஞ்சி இழந் தோமே தோழீ! என்கிறாள்.

"இப்பாட்டு, சக்ரவர்த்தி திருமகன் தலைமகனாய் ஸ்ரீஜநகராஜன் திருமகள் தலைமகளாக ப்ரவ்ருத்தமாகிறது" என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி அறியத் தக்கது. ஆழ்வார்தாம் ஸ்ரீஜநகராஜன் திருமகளான நிலைமையிலே நின்று பேசு கின்றவாறு.

மைவண்ண நறுங்குஞ்சிக்குழல் பின்தாழ—திருக்குழலுக்குக் கருநிறம் இயற்கையா யிருக்க மைவண்ணம் என்று எடுத்துச் சொல்லுவானேன்? என்னில்; *கொள்கின்ற கோளிருளைச் சுகிர்ந்திட்ட கொழுஞ்சுருளின், உட்கொண்ட நீலநன்னூல் தழை கொல்;* என்று சங்கித்து "அன்றுமாயன்குழல்" என்னவேண்டும்படி விலக்ஷணமான கருநிறங்கொண்டதாதல்பற்றி மைவண்ணமென்று சிறப்பித்துக் கூறப் பட்டது. திருக்குழலைக்கண்ட கண்ணுக்கு அவனுடைய திருமேனி நிறம் ஸ்படிக வர்ண மென்னத்தக்கதாயிருக்கும் போலும். வண்ணத்தின் சிறப்பு மாத்திர மேயோ? பரிமளமும் விலக்ஷணமாயிருக்கிறபடி காண். தாபத்ரயத்தினால் தபிக் கப்பட்டவரோடு விரஹதாபத்தினால் தபிக்கப்பட்டவரோடு வாசியற அனைவர்க்கும் சிரமம் தீர்க்கவல்லதான திருக்குழற் பரிமளத்தை என் சொல்லுவேன்! நிறமும் மணமுமேயோ ஆகர்ஷகமாயிருக்கின்றன; திரள்திரளாகக் குழன்றிருக்கை யன்றியே அலகலகாகப்பிரிந்து சுருண்டிருக்கும்பரிசுதான் சொல்லத்தரமோ? ஆக இப்படிப்பட்ட திருக்குழற்கற்றை பின்பிடரியிலே அசைந்தலையவும்.

இவள் பின்புறத்தே காண ப்ரஸக்தி என்னென்னில்; பெருக்காறு பெரு வெள்ளமாக ப்ரவஹிக்கப் புக்கால் அதனை எதிர்நோக்க முடியாதாப்போலே இவளுடைய ஸௌந்தர்ய ஸாகரதரங்கங்களைக் கண்டு நேர்முகம் பார்க்கமாட்டா மையாலே முகத்தைத் திருப்பினார், அச்சமயத்தில் கண்டாளென்ப.

மகரஞ்சேர்குழை யிருபாடிலங்கியாட—*மைவண்ண நறுங்குஞ்சிக் குழற்கற்றையின் இருட்சியாலே கண்கள் இருண்டு திருமுகம் தோற்றாதிருக்க, அவ்வளவிலே இரண்டு சந்திரர்கள் உதித்தாற்போலேகாண் திருமகரக் குழைகளிருந்தபடி. இலங்கையில்

திருவடி பிராட்டியைத் தேடுகிற ஸமயத்திலே சந்திரோதயமுதவினைப்போலே, திருக்குழலாலே இருண்ட திருமுகத்திற்கு இம் மகரக்குழைகள் பிரகாசமாக வாய்த்தன வென்க. ‘திருமகரக்குழைகள் திருக்குழலுக்கு ஆபரணமாயிருக்கிறதோ, திருக்குழல்தான் திருமகரக்குழைகட்கு ஆபரணமாயிருக்கிறதோ’ வென்று விகல்பிக்கலாம்படியாக விளங்குகை இலங்கி என்பதன் பொருள்.

‘ஆட’ என்றதற்கு மூன்றுவகையாக அருளிச்செய்வர்; ‘ஆட இருவராய் வந்தார்’ என்று அந்வயித்தால், ஒரு கடல் அசைந்து வந்தாற்போலேகாண் வருகிற போது இரண்டருகும் திருமகரக்குழைகள் அசைய வந்தபடி என்கிறாளென்க. ‘ஆட என்முன்னே நின்றார்’ என்று அந்வயித்தால் அபிமதவிஷயத்தைக் கண்டால் முகத்திலே சில அசைவுகளுண்டாகுமே; அதைச் சொன்னபடி யென்க. நஞ்சீயர் அருளிச்செய்வதாவது—‘ முன்பைக் காட்டுவது பின்பைக்காட்டுவதாக எத்தனை ஆடல்கள் செய்தான் இவளுடைய பெண்மையை அழிக்கைக்காக!’ என்றும்.

கூட வந்த பேர் ஆரேனுமுண்டோ?’ என்ன. எய்வண்ணவெஞ்சிலையே துணையா என்கிறாள். கையில் வில்லே துணையாக வந்தாரென்க. *வில்லிறுத்து மெல்லியள் தோள் தோய்ந்தவராகையாலே முன்பு நம்மைச் சேரவிட்டது இந்த வில்லேயன்றோ வென்று நன்றி பாராட்டி அதனைத் துணைகொண்டு வந்தார்போலும். ‘வெஞ்சிலையே துணையா’ என்றதனால் ஸம்ச்லேஷிக்கைக்கு ஏகாந்தமாம்படி வந்தார் என்பது தோன்றும். யாரேனுங் கண்டு ‘இங்கு வந்ததென்?’ என்றால் ‘வேட்டையாட வந்தோம்’ என்று மறுமொழி சொல்லப் பாங்காக வில்லெடுத்து வந்தபடி.

இங்கே வந்தார்’ என்று திருமணங்கொல்லையைக் காட்டுகிறாள். நான் நிதிகண்டெடுத்தவிடம் இது காண்! என்கிறாள். “கலந்து பிரிந்த பின்பும் மண்ணை மோந்து கொண்டு கிடக்கலாம்படிகாண் இலச்சினைபட நடந்த அடிச்சுவடிருந்தபடி” என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்.

“எய்வண்ண வெஞ்சிலையே துணையா” என்று சொல்லிவைத்து ‘இருவராய் வந்தார்’ என்கை அஸங்கதமன்றோ வென்னில்; வில்போலவே இளையபெருமாளும் விசேஷண பூதராகையாலே ஒருவரென்னவுங் குறையில்லை. இதுவொரு விசிஷ்டாத்வைதம். இளையபெருமாளைச் சொல்லுமிடத்து “ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:” [இராமபிரானது வலக்கை லக்ஷ்மணன்] என்றது காண்க. கையும் வில்லுமாய் வந்தாரென்றவாறு அப்படியாகில் இருவராய்வந்தார் என்ன வேணுமோ? வேற்றுமை தோற்றச் சொல்லுவானென்? என்னில்; ‘[illegible] வந்தார்’ என்று சொன்னால் வேற்றுமை தோற்றச் சொன்னதாகமாட்டாதாப் போலே இதனையுங் கொள்க. ஸம்ச்லேஷிக்கைக்கு வருகிறவன் படுக்கையோடே வருகை மிகையன்றே. (இளையபெருமாள் படுக்கையோ வென்னில்; *சென்றால் குடையா மெனப்பட்ட ஆதிசேஷனேயிறே லக்ஷ்மணனாக வந்து பிறந்தது.)

இனி, “இருவராய்வந்தார்” என்பதற்கு தெய்வத்தன்மையும் மானிடத் தன்மையும் கலசிவந்தார் என்றும் பொருளுரைப்பர். சேஷத்வமும் சேஷித்வமுமாகிற இரண்டுபடியுங் கலசிவந்தார் என்று முரைப்பர்—“தம்முடைய காலை என் தலையிலே வைக்கக்கடவதாக வந்து என்காலைத் தம் தலையிலே வைத்துக்கொண்டாரென்கிறாள். பாணிக்ரஹணம் பண்ணும்போது சேஷியாயிருக்கையும் படுக்கையிலே முறைகெடப் பரிமாறுகையுமாயிறே யிருப்பது. வகுத்த ஸ்வாமியாகவும் வேணும்; *ந சாஸ்த்ரம் நைவ ச க்ரம: ஆகவும் வேணுமிறே” என்ற வியாக்கியான ஸ்ரீஸூக்திகள் போக்யமாக அநுஸந்திக்கத் தக்கன.

இருவராய் வந்தார்—இருவராம்படியாக வந்தார்; (தாமும் நாமுமேயாம்படியாக வந்தார் என்றவாறு) என்றும் உரைத்தருளினர். ஆய் என்பதற்கு ‘ஆம்படி’

என்று பொருள்படுவது சிரமமாயினும், அர்த்தத்தின் சீர்மையைப்பற்ற இங்ஙனே உரைக்கக் குறையில்லை யென்ப. 'இருவராவந்தார்' எனப் பாடமிருந்தால் மூந்தின பொருள்களும் இப்பொருளும் செவ்வனே கொள்ளக் கிடக்குமென்று கூறுவாருமுளர். "சப்தத்தை நியமித்து" என்று வியாக்கியான மிருக்கும்போது வேறு பாடங் கற்பிக்க அதிகாரமுடையோமல்லோம்.

தாமிருக்குமிடத்திலே நாம் மடலெடுத்துச் சென்று கிட்டவேண்டும்படியாயிருக்க, நாமிருந்தவிடத்தேற அவர் வந்தார் காண்! என்ற அற்புதந்தோன்ற, வந்தார் என்கிறாள். அவர் வரும்போது நடந்த நடையழகை நீகாணப் பெற்றிலையே தோழீ! என்பதும் இச்சொல்லில் உள்ளுறை.

வந்தார் என்முன்னே நின்றார்—மிக்க பரபரப்போடே வந்தவர் கடல்கண்டு தியங்கிறாற்போலே என்னைக்கண்டு மேல் அடியிடமாட்டாதே தியங்கி முன்னே நின்றார். மேல் போக்கிட மில்லாமையாலே நின்றார். 'வந்தார்' என்றது முற்றெச்சம்; வந்து என்றபடி.

இனிமேல், அவருடைய ஸௌந்தர்ய ஸாகரத்தில் தான் அகப்பட்ட சுழிகளைச் சொல்லுகிறாள் கைவண்ணந்தாமரை யென்று தொடங்கி திருவடி தொடங்கித் திருமுடியீறாகச் சொல்லுதல், திருமுடி தொடங்கித் திருவடியீறாகச் சொல்லுதலாகிற முறைமைகளை விட்டு, கை வாய் கண் அடி என்கிற முறையிலே சொல்லுகிறது, இவள்தான் அநுபவித்த அடைவு இதுவாகையாலே. முதலிலே, தன்னை மேல் விழுந்து பாணிக்ரஹணம் பண்ணின கையைச் சொல்லுகிறாள்; கையைப் பிடித்த பின் 'இதுவொரு வடிவழகிருந்தபடி என்!, இது வொரு முலையழகிருந்தபடி என்!, இது வொரு கண்ணழகிருந்தபடி என்!' என்று இன்சொல்லுச் சொன்ன திருவாயை அதற்குப்பின்னே சொல்லுகிறாள். இன் சொல்லுச் சொல்லத்தொடங்கி முற்றமுடியச்சொல்லித் தலைக்கட்டமாட்டாமல் *உள்ளெலாமுருகிக் குரல்தழுத்தொழிந்து வக்தவ்யசேஷத்தைக் கண்ணாலே சொல்லித் தலைக்கட்டுகையாலே அதற்குப்பின் கண்ணைச் சொல்லுகிறாள். அக்கண்ணழகுக்குத் தோற்றுத் தான் திருவடியிலே விழுந்தமைதோற்ற அதற்குப்பின்னே அடியைச் சொல்லுகிறாள்.

கீழ்ப்பதினெட்டாம்பாட்டில் "கண்ணும் வாயுங் கைத்தலமு மடியிணையுங் கமலவண்ணம்" என்று உபமேயமான அவயவங்களையெல்லாம் ஒருசேரச் சொல்லி முடிவில் உபமாநவஸ்துவைச் சொன்னதுபோல இங்கும் சொல்லலாமாயிருக்க, 'கைவண்ணம் தாமரை, வாய் கமலம் போலும், கண்ணிணையும் அரவிந்தம்' என்றிப்படி ஒரு உபமாநவஸ்துவையிட்டே பலவாக்கியங்களாகப் பேசுவானேன்? என்னில்; இதில் ஒரு விலக்ஷணமான போக்யதையுண்டு என்று சொல்லலாமத்தனை. கூரத்தாழ்வான் தாமும் வரதராஜஸ்தவத்தில் "அப்ஜபாணிபதாம் அம்புஜநேத்ரம்" என்றும் ஸுந்தரபாஹுஸ்தவத்தில் "அப்ஜபாத மரவிந்தலோசநம் பத்மபாணிதலம்" என்றும் இங்ஙனே பேசி யநுபவிக்கிறார். பட்டர் ஸ்ரீரங்கராஜஸ்தவத்தில் "கமலபதகராக்ஷம்" என்று சேரப் பேசியநுபவித்ததுமுண்டு. உபமாநவ்யக்தி ஒன்றேயாயிருக்கச்செய்தேயும் தத்பர்யாயமான பல சொற்களையிட்டு [தாமரை, கமலம், அரவிந்தம் என்றாற்போல]ச் சொல்லுதலும் வாக்யபேதம் பண்ணுதலும் அநுஸந்தாத போக்யதா ப்ரகர்ஷ ஸூசகமத்தனை.

"அடியும் அஃதே" என்றதில் உபேக்ஷை தோற்றும்; 'எம்பெருமானது திவ்யாவயவங்களுக்கு இத்தாமரை ஏற்ற உவமையன்று; ஆயினும் ஏதேனுமொரு உவமையை யிட்டுப்பேசி அநுபவிக்கவேண்டியிருப்பதால் அதற்காகச் சொன்னபடி' என்பது இதில் தொனிக்கும்.

இங்ஙனே தலைமகள் சொல்லக்கேட்ட தோழியானவள் 'நங்காய்! அவர் வந்த வரவை நீ சொல்ல நான் கேட்டாற்போ லிருக்கையன்றியே நானே நேரில்

ஸாக்ஷாத்கரிப்பது போலிராநின்றதே நீ பேசுகிற பேச்சின் வாய்ப்பு! என்று சொல்ல; தோழீ! அவர் வந்த வரவின் வீறுபாட்டையும் அவரது அவயவங்கள் பொலிந்த பொலிவையும் நான் என்னென்று சொல்லுவேன்? அவ்வண்ணத்தவர் என்று சொல்லலாமத்தனை யென்கிறாள். நீ கேட்கையாலே உனக்கொரு உவமையை யிட்டுச் சொன்னேனித்தனையொழிய, உண்மையில் ஒரு த்ருஷ்டாந்தமிட்டுச் சொல்லலாம்படி யன்றுகாண் அவர் வடிவிருந்தபடி; 'அப்படிப்பட்ட வடிவுடையவர்' என்று இரண்டுகையையுந் தூக்கிச் சொல்லவேணும் காண் என்கிறாள்.

அவ்வண்ணத்தவர்நிலைமை கண்டுந்தோழீ! அவரைநாம் தேவரென்று அஞ்சினோமே— அவருடைய வடிவழகிருந்தபடியையும் அவருடைய சீலமிருந்தபடியையும் கண்டு வைத்தும் "அம்மானாழிப்பிரா னவனெவ்விடத்தான் யானார்" என்றாற்போலே மயங்கி அஞ்சி இழந்தேனே யென்கிறாள். அவருடைய ஸௌசீல்ய ஸௌலப்யங்களைக் கண்டு அஞ்சாதே கூசாதே கலந்து பரிமாறலாயிருக்க, அந்தோ!* ஒன்றுந் தேவு முலகும் உயிரும் மற்றும் யாதுமில்லாவன்று நான்முகன் றன்னொடு தேவருலகோ டுயிர்படைத்த பெருமானன்றோ இவர்!* நரநாரணனா யுலகத் தறநூல் சிங்காமை விரித்த பெருமானன்றோ இவர்! என்றாற்போலே பரத்வத்தையே நினைத்துப் பாவியேன் இறாய்த்து இழந்தொழிந்தேனே என்கிறாள். ஸம்ச்லேஷம் ப்ரவ்ருத்தமாகிப் பின்பு விச்லேஷம் நிகழ்ந்தபடியைத் தெரிவிக்கிற புடை இது என்க.

"*ஆத்மாநம் மாநுஷம் மந்யே என்னுமவர்நினைவைவிட்டு *பவாந் நாராயணோதேவ: என்னும் வழிப்போக்கர் வார்த்தையைப் பற்றிக் கெட்டோமே! என்கிறாள். தன்னோடு ஸுகதுக்கங்கள் ஒத்தவளான தோழியையுங் கூட்டி நாம் என்கிறாள்."

இப்பாசுரத்தின் ஈற்றடியின் விசேஷார்த்தங்களைப் பன்னியுரைக்குங்கால் பாரதமாம். பூருவர்களின் வியாக்கியானங்களிற் கண்டு அநுபவித்துக் களிக்க. 21

நைவளமொன்றாராயாநம்மைநோக்கா நாணினார்போலிறையேநயங்கள்பின்னும்*
செய்வளவிலென்மனமும்கண்ணுமோடி எம்பெருமான்திருவடிக்கீழணைய*இப்பால்
கைவளையும்மேகலையும்காணேன் கண்டேன்கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும்
எவ்வளவுண்டெம்பெருமான்கோயிலென்றேற்கு இதுவன்றோவெழிலாலியென்றார்தாமே. 22

| | |
|---|---|
| ஒன்று | மிகச்சிறந்ததான |
| நைவளம் | நைவளமென்கிற பண்ணை |
| ஆராயா | ஆராய்ந்துபாடி |
| நம்மை நோக்கா | நம்மைப்பார்த்து |
| இறையே போல் | சிறிது வெட்கப்பட்டவர் போல நின்று |
| பின்னும் | அதற்குப்பிறகும் |
| நயங்கள் செய்வளவில் | நயமான வார்த்தைகளையிட்டுப் பண்ணிலே பாடின வளவில் |
| என் மனமும் கண்ணும் | எனது நெஞ்சும் கண்களும் |
| ஓடி | பதறிச் சென்று |
| எம்பெருமான் திருஅடிக் கீழ் அணைய | அப் பெருமானது திருவடி வாரத்திற்பதிய |
| இப்பால் | பின் |

| | |
|---|---|
| கைவளையும் | என்கையில் தரித்திருந்த வளைகளையும் |
| மேகலையும் | அரையில்மேவிய கலையையும் |
| காணேன் | காணமாட்டாமல் இழந்தேன்; |
| கனம் மகரக் குழை இரண்டும் | கனமான மகரகுண்டலங்களிரண்டையும் |
| நான்கு தோளும் கண்டேன் | நான்கு திருத்தோள்களையும் காணப்பெற்றேன்; (அதன்பிறகு) |
| எம்பெருமான் கோயில் எவ்வளவு உண்டு என்றேற்கு | 'தேவரீருடைய இருப்பிடம் (இவ்விடத்திலிருந்து) எவ்வளவு தூரமுண்டு?' என்று கேட்ட எனக்கு |
| எழில் ஆலி இது அன்றோ என்றார் | அழகிய திருவாலிப்பதி இதோ காண்! என்று சுட்டிக் காட்டினார். |

* * *- ம்ப்பாட்டில் 'அவரை நாம் தேவரென்றஞ்சினேமே' என்று ப்ர மத்தாலே தான் இருய்த்தமை சொன்னாள்; அதைக் கேட்ட தோழியானவள் 'நங்காய்! நீ இருய்த்து அகன்றுயாகில் அவர் உன்னோடு கலந்தபடி என்?' என்று கேட்க, 'அவர் என்னை வசப்படுத்திக் கொண்டபடியும் என்னோடு கலந்தபடியும் இது காண்' என்கிருளிப்பாட்டில். அவர் தம்முடைய விலக்ஷணமான வடிவழகையும் சீலத்தையும் காட்டினவிடத்திலும், *அவரைத் தேவரென்றஞ்சி இருய்த்த படியாலே 'இனி நாம் வந்தவழியே திரும்பிப்போகவேண்டு மத்தனையன்றோ' என்று நினைத்தார்; கால் பெயர மாட்டிற்றில்லை; விஷயீகரிக்கத் திருவுள்ளம் பற்றி வந்த விஷயம் கைபுகவில்லையென்றால் இது தமக்கு நஷ்டமேயன்றோ. சேஷவஸ்து கைப்படுவது சேஷியானவனுக்குப் பரம லாபமன்றோ. வடிவழகைக் காட்டுவதும் சீலத்தைக் காட்டுவதும் எதற்காக? கைப்படாத வஸ்துவைக் கைப் படுத்துகைக்காக வன்றோ? தாம் உத்தேசித்துவந்த விஷயம் இங்குக் கைபுகுந்த தில்லை யென்றால் மற்று எங்கே என்ன கைபுகுமென்று அதிசங்கையுண்டாயிற்று. இவளை எவ்வகையினாலேனும் வசீகரித்தாகவேணுமே, அதற்கு வழியென்ன? என்று பார்த்தார்; முன்பு திருவாய்ப்பாடியிற் பெண்கள் தம்முடைய திருக்குழ லோசையிலே வசப்படக்கண்ட வாஸநையாலே இங்கு நம்முடைய மிடற்றோசை யாலே வசீகரிப்போமென்று பார்த்து ஒரு பண்ணை நுணுங்கத் தொடங்கினர்; நாம் வேட்டையாடுகிற வியாஜமாக வந்தோமாகையாலே 'பாடுகிறது ஏதுக்கு?' என்று கேட்பாரில்லை; ஆகவே தாராளமாகப் பாடலாமென்று துணிந்து ஒரு பண்ணை நுணுங்கினர்; அதிலே யீடுபட்டு மேல்விழுந்து கலந்தேன் என்று வரலாறு சொல்லுகிருள் பரகாலநாயகி.

நைவளம் ஒன்று ஆராயா='நைவளம்' என்று ஒரு பண்ணுக்குப் பெயர். பாட் டுப் பாடுகிறவர்களையும் பாட்டுக் கேட்கிறவர்களையும் நைவிக்கும்படியான வளத்தை யுடையதாதல் பற்றி நைவளமென்று பெயரிடப்பட்டதென்று யோகார்த்தமும் அருளிச்செய்வர். மற்ற இசைகளிற்காட்டில் இந்தஇசை பிறரை வசீகரிக்கும் விஷ யத்தில் இன்றியமையாததாதலாலும் இதற்கு வசப்படாவிட்டால் வேறுகதியில்லா மையாலும் 'நைவளம் ஒன்று' எனப்பட்டது. கருமயோக ஜ்ஞாநயோகங்களால் அஸாத்யமானதை பக்தியோகத்தாலே ஸாதிக்கலாம்; அதனாலும் அஸாத்யமானதை ப்ரபத்தியாலே ஸாதிக்கலாம்; அதுவும்'பலித்ததில்லை யென்றால் வேறு கதியில்லை என்றிருப்பதுபோல, காதலன் தானும் இப்பரகால நாயகியைப் பெறுகைக்குச் சரமோபாயமான பண்ணைக் கைகண்டபடி. ஆராய்தல்—நன்றாக நுணுங்குதல். 'ஆராயா' என்றது செய்யா என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம்; ஆராய்ந்து என்றபடி. மேலே "நோக்கா" என்றதையும் இங்ஙனமே கொள்க. நைவளம் என்கிற பண்ணைத் தாம் நுணுங்கினவாறே தாம் உருகினர்; 'முரட்டு ஆணுகிய நாமே உருகுகிறபோது மெல்லியலான இவள் உருகக் கேட்க வேணுமோ? வயிரத்தை யுருக்குமது அரக்கையுருக்கச் சொல்லவேணுமோ? இது இவளையும் அழித்தே தீரும்' என்றறுதியிட்டு என்முகத்தைப் பார்த்தார்; உண்மையில் அவ்விசையினால் நான் உள்ளெலாமுருகிக் குழைந்திருக்கச் செய்தே யும் அந்த உருக்கத்தையும் ஈடுபாட்டையும் எப்படியோ மறைத்து, சிறிதும் விகாரப் படாதவள்போல முகத்திற் காட்டிக்கொண்டேன்; அப்படிப்பட்ட நிலைமையைக் கண்டு அவர்க்கு வெட்கமுண்டாயிற்று. ஏன்? நம்முடைய எண்ணம் பழுதா யிற்றேயென்று லஜ்ஜித்தார்; அவர் தம்முடைய காம்பீர்யத்தாலே நாணினமை தோற்றாதபடி யிருக்கப்பார்த்தும் நாணினர் போலவே காணப்பட்டார்; 'நம் முடைய சரமோபாயமும் நிஷ்பலமாயிற்றே' என்று அவரால் வெட்கப்படாம லிருக்க எங்ஙனே முடியும். அந்த வெட்கத்தாலே நேர்முகம் பார்க்கமாட்டாதே சோலையைப்பார்ப்பதும் பக்கங்களைப் பார்ப்பதுமாக ஆனர்.

பின்னும் நயங்கள் செய்வளவில்—'பின்னும்' என்றது, கைவளமென்கிற பண்ணைப் பாடினவளவோடு நில்லாமல் என்றபடி. அது பலிக்கவில்லையென்று வாளா கிடந்திலர்; 'அடியேன், குடியேன்' என்றாப்போலே சில கைச்யபாஷணங்களைப் பண்ணிலே ஏறிட்டுப் பாடத்தொடங்கினர்; அவ்வளவிலே.

என்மனமுங் கண்ணுமோடி எம்பெருமான் திருவடிக்கீழ் அணைய—விகாரத்தை வெளிக்காட்டாதிருக்க வேணுமென்று நான் எவ்வளவோ முயற்சி செய்தும் பலிக்கப் பெற்றதில்லை; அடக்கிக் கொண்டிருந்தும் என்னால் அடக்க முடியவில்லை; கடலுடைந்தாற்போலே உடைந்தது. நெஞ்சும் கண்ணும் ஆச்ரயத்தை விட்டுப் பதறியோடிற்று; தம் மிடற்றோசையாலே என்னை மீடுபடுத்தினவருடைய திருவடி வாரத்தின்கீழே சென்றணைந்தன.—வியாக்கியான வாக்கியங்காண்மின்;—"அவர் நினைத்தவளவன்றுகாண் நான் அழிந்தபடி யென்கிறாள். என்முலையைத் தம் மார்விலே நெருக்கித் தழுவிக் கொள்ளவாயிற்று அவர் நினைத்திருந்தது; நான் அவர்காலைத் தலையிலே வைத்துக்கொண்டே னென்கிறாள்."

இப்பால் கைவளையும் மேகலையுங் காணேன்—இதனால் விரஹவ்ருத்தாந்தம் சொல்லுகிறதன்று; உந்மஸ்தகமான ஸம்ச்லேஷரஸம் சொல்லுகிறது. கைவளையையும் மேகலையையுங் காணாமை விச்லேஷத்திலன்றோ வென்னில், அங்ஙனே ஸம்ச்லே

ஸம்ச்லேஷரஸம் மீதூர்ந்து உண்டான தேஹப்பூரிப்பினால் வளைகள் வெடித்தொழிந்தமையாலுண்டான இழவைச் சொன்னபடி. கலவியிலும் வளையிழப்பது பிரிவிலும் வளையிழப்பது என்றால், பின்னை வளை தங்கியிருக்கும் நிலைமை எது வென்னில்; ஸம்ச்லேஷரஸம் உந்மஸ்தகமாகாமல் ஸாத்மிக்கு மளவாகும் தசையிலே வளை தங்கியிருக்கு மென்க. [மேகலையுங்காணேன்] மே—அரையில் மேவுகின்ற, கலை—வஸ்திரம் என்று கொள்க. "பரியட்டமாறாட்டத்தாலே என்பரியட்டப்பட்டுங் கண்டிலே னென்கை. அவன் பரியட்டம் தன்னரையிலேயிருக்கக் கண்டாளித்தனையிறே" என்ற வியாக்கியான வாக்கியமுங் காணத்தக்கது. இதுவும் ஸம்ச்லேஷரஸத்தின் உந்மஸ்தகத்வத்தை வெளியிடவற்று. "கைவளையும் மேகலையுங் காணேன்" என்றதற்கு 'அஹங்காரமமகாரங்கள் ஒழிந்தன' என்று கூறுதல் ஸ்வாபதேசப்பொருள் என்றருளிச்செய்வர். உபாயவிரோதி, ப்ராப்யவிரோதி, புருஷார்த்தவிரோதி என மூன்று வகையான இடையூறுகளும் தொலைந்து "உன்றன்னோடுற்றோமே யாவோ முனக்கே நாமாட்செய்வோம், மற்றைநங்காமங்கள் மாற்று" என்கிற பிரார்த்தனை பலித்தமை சொன்னவாறு. 'நான் போக்தாவன்று, எனக்குப்போகமன்று; போக்தாவும் அவனே, போகமும் அவனுடையதே' என்ற ஸ்வரூபதத்துவத்தின் அநுஸந்தானம் முதிர்ந்தமை சொல்லிற்றாயிற்று.

கண்டேன் கனமகரக்குழையிரண்டும் நான்கு தோளும்—அணைத்தபோது உறுத்தின திருமகரக் குழைகளையும், அணைத்த திருக்கைகளையும் கண்டேனென்கிறாள். கலந்தவன் சக்ரவர்த்தி திருமகனாயிருக்க, நான்குதோள் என்கிறதென்னென்னில்; தன்னைத் தழுவுகையாலே தோள்கள் பணைத்தபடி. அன்றி, உண்மையான சதுர்ப்புஜ ஸ்வரூபத்தை வெளியிட்டபடியாகவுமாம்.

எவ்வளவுண் டெம்பெருமான்கோயில்? என்றேற்கு—வந்தவிடத்திலே கலந்து பிரிந்து போகையன்றியே அவருடைய இருப்பிடத்தே உடன் சென்று நித்ய ஸம்ச்லேஷம் பண்ணிக் களிக்க வேணுமென்னும் விருப்பாலும், சிறிது தூரமாகிலும் கூடவே தோள்மேல் தோளிட்டுக்கொண்டு போகவேணுமென்னும் விருப்பாலும், தகுதியான பரிஜனங்களோடே அநுபவிக்கவேணுமென்னும் விருப்பாலும் 'தேவீருடைய வாழ்விடம் இங்குத்தைக்கு எத்தனை தூரமுண்டு?' என்று கேட்டேன்;

இதோ காண்கிற திருவாலித் திருநகரிகாண் என்று சொல்லி அந்தர்த்தானமாய் விட்டார். அந்தோ! 'எவ்வளவுண்டெம்பெருமான் கோயில்' என்று பாவியேன் நானேயன்றோ பிரிவை ப்ரஸ்தாவித்தேன்; அது கேளாதிருந்தேனாகில் இன்னமும் சற்றுப்போது அநுபவிக்கலாமாயிருந்ததே! நானே கெடுத்துக்கொண்டேனே யென்கிறாள் போலும். ... ... ... ... 22

உள்ளூருஞ்சிந்தைநோயெனக்கேதந்து என்னொளிவளையும்மாநிறமுங்கொண்டாரிங்கே*
தெள்ளூருமிளந்தெங்கின்தேறல்மாந்திச் சேலுகளுந்திருவரங்கம்நம்மூரென்ன*
கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக் கனவிடத்தில்யான்காண்பன்கண்டபோது*
புள்ளூருங்கள்வா! நீபோகேலென்பன் என்றாலுமிதுநமக்கோர்புலவிதானே? 23

| | |
|---|---|
| உள் ஊரும் | உள்ளுக்குள்ளேயே படரும்படியான |
| சிந்தை நோய் | மனோவியாதியை |
| எனக்கே தந்து | என்னொருத்திக்கே உண்டாக்கி |
| என் ஒளி வளையும் | எனது அழகிய வளைகளையும் |
| மா நிறமும் | சிறந்த மேனிநிறத்தையும் |
| இங்கே | இந்தத் திருமணங் கொல்லையிலே |
| கொண்டார் | கொள்ளை கொண்டு போனார்; (அப்படி அவர் போகிறபோது) |
| சேல் | மீன்களானவை |
| தெள் ஊரும் இளந் தெங்கின் தேறல் மாந்தி | தெளிவாகப் பெருகுகின்ற இளந்தென்னங் கள்ளைப் பானம்பண்ணி |
| உகளும் | தடித்து உலாவா நிற்கப்பெற்ற |
| திரு அரங்கம் | ஸ்ரீரங்கம் |
| நம ஊர் என | நமது இருப்பிடம் என்று சொல்லிப்போக, |
| கள் ஊரும் பைந்துழாய் மாலையானை | தேன் வெள்ளமிடாநின்ற பசுமைதங்கிய திருத்துழாய் மாலையையுடைய அப்பெருமானை |
| கனவு இடத்தில் யான் காண்பன் | கனவிலே நான் காணப்பெறுகிறேன் |
| கண்டபோது | அப்படி காணும்போது |
| புள் ஊரும் கள்வா | கருடப்பறவையை ஏறி நடத்துகிற கள்வனே! |
| நீ போகேல் என்பன் | இனி நீ என்னை விட்டுப் பிரிந்து போகலாகாது என்பேன்; |
| என்றாலும் | அங்ஙனஞ் சொன்னாலும் |
| நமக்கு | நமக்கு |
| இது | அப்பெருமானது கலவியானது |
| ஓர் புலவி தானே | வருத்தமேயாய்த் தலைக்கட்டுமது. |

* * *—தன் பேறாகத் தானேவந்து கலந்தவன் பிரிகிறபோது 'போகவேண்டா' என்று ஒருவார்த்தை சொல்லமாட்டிற்றிலையோ? என்று தோழி கேட்க, அது சொல்லாமலிருப்பேனோ? அதுவுஞ்சொன்னேன், பலிக்கப்பெற்றதில்லை யென்கிறாள். கலவியிலே உன்கைக்கு அடங்கின சரக்காயிருந்தவர் உன் வார்த்தையை அலக்ஷியஞ் செய்து போவரோ?' என்ன, 'நிலமல்லாத நிலத்திலே இப்படி நெடும்போது நிற்கலாகுமோ' என்று பெரிய திருவடி தூக்கிக்கொண்டு போகப் போயினாரென்கிறாள்.

உபயவிபூதி நாதராய்ப் பரம உதாரராயிருக்குமவர்க்கு நீ வாழ்க்கைப்பட்டிருந்தாயாகில் அவர் போம்போது உனக்குத் தந்துபோன செல்வம் ஏதேனுமுண்டோவென்று கேட்க, உள்ளூருஞ் சிந்தைநோய் எனக்கேதந்து என்கிறாள். தோழீ! இதுகாண் அவர் எனக்குத் தந்துபோனது என்கிறாள். கண்ணாலே பார்த்துச் சிகித்ஸை பண்ணத்தக்க நோயையன்று கொடுத்தது; ஸர்ப்பம் ஊர்ந்தாற்போலே உள்ளுக்குள்ளே ஸஞ்சாரியாயிருக்கின்ற ப்ரேமவியாதியைத் தந்துபோனார். "தக்கார் பலர் தேவிமார் சாலவுடையீர்" என்கிறபடியே அவர்க்குத் தேவிமார் மற்றும் பலருண்டாகிலும் அவர்களை அவர் பொருள் படுத்தவேயில்லை; என்னொருத்திக்கே ஸர்வஸ்வதானமாகக் கொடுத்தாராயிற்று.

அவர் கொடுத்ததற்கு நீ ஏதேனும் பிரதிஸம்பாவனை செய்ததுண்டோ? என்று தோழி கேட்க, "என்னெளி வளையும் மாநிறமுங் கொண்டாரிங்கே" என்கிறாள். நான் கொடுக்கவேண்டிற்றுண்டோ? அவர்தாம் *கொள்ளை கொள்ளிக்குறும்ப ராயிற்றே; தாமே கொள்ளை கொண்டு போனார். கீழ்ப்பாட்டில் 'கைவளையும் மேகலையுங் காணேன்" என்ற விடத்திற்கொண்ட அர்த்தத்திற்கு எதிரான அர்த்தம் இங்குக் கொள்ளவேண்டும்: அங்கு ஸம்ச்லேஷத்தாலுண்டான பூரிப்பு; இங்கு விச்லேஷத்தாலுண்டான இளைப்பு.

ஏற்கெனவே பூரிப்பினால் வளைகள் வெடித்துப்போயிருக்க, என்னெளி வளையைக் கொண்டார் என்று இங்குச் சொல்வதற்கில்லையே; கையில் வளையிருந்தாலன்றோ கொண்டாரென்னலாம் என்று சிலர் சங்கிக்கக்கூடும்; வளைகொண்டாரென்றதில் தாற்பரியமாகிய உடலிளைப்பு மாத்திரமே இங்கு விவக்ஷிதமென்று கொள்க: உடல் ஈர்க்குப்போல இளைக்கும்படி செய்து விட்டாரென்றவாறு.

அஹங்காரமமகாரங்கள் நன்கு ஒழியப்பெற்றவர் தம்வாயாலே 'என்னெளி வளை' என்னலாமோ? என்னில்; ஸம்ச்லேஷகாலத்தில் இந்த வளையும் நிறமும் காதலனுடைய கொண்டாட்டத்திற்கு மிகவும் உறுப்பாயிருந்ததனால் அவனுக்கு ஆதரணீயமானது என்னும் வழியாலே தமக்கு ஆதரணீயமாகக் குறையில்லை என்க. கூடியிருக்குங்காலத்தில் நாயகன் 'இதுவொரு வளையிருக்கு மழகு என்னே!; சேர்த்தியால் வந்த ஒளியிருக்கும்படி என்னே; வடிவில் நிறமிருக்கும் படி என்னே!' என்று பலகாலும் வாய்வெருவுவது வழக்கமாகையாலே அதனை அநுவாதம் செய்கிறவத்தனை. இங்கே யென்று தான் வழிபறியுண்ட விடத்தைக் காட்டுகிறாள். *மைவண்ணநறுங்குஞ்சியில் 'இங்கே' என்று தான் நிதியெடுத்த விடத்தைக்காட்டினாள்; இப்பாட்டில் 'இங்கே' யென்று நிதியிழந்தவிடத்தைக் காட்டுகிறாள். நான் வழிபறிக்க வந்து வழிபறியுண்டேனென்கிறாள்.

நங்காய்! உன் ஒளிவளையும் மாநிறமுங்கொண்டு அவர் போகிறபோது உம்முடைய ஊர் ஏதென்று கேளாவிட்டதென்? என்று தோழி கேட்க; அது நான் கேட்கவேண்டிற்றில்லை; பிரிவில் தரித்திருக்கைக்காகத் தாமேசொல்லிப் போனாரென்கிறாள் தெள்ளருவி யித்யாதியால். தெளிந்து தெங்கினின்றும் பெருகி வாராநின்றுள்ள தேனை நுகர்ந்து சேல்மீன்கள் உகளும்படியான திருவரங்கம் நம்மூர் என்று சொல்லிப்போனார். 'என்னூர்' என்றாவது, 'உன்னூர்' என்றாவது சொல்லாமல் 'நம்மூர்' என்றதில் இவளுக்கு ஒரு ஆநந்தம். என்னூர் என்றால் அவனுடைய ஆச்ரித பாரதந்திரியம் குலையும்; உன்னூர் என்றால் இவளுக்கு ஸ்வரூபஹாநியாகும். இரண்டு தலைக்கும் பாங்காக நம்மூர் என்று சொல்லிப் போனார். "திருமந்த்ரம்போலே இருவர்க்கும் பொதுவானவூர்" என்ற வியாக்கியான ஸ்வாரஸ்யம் நோக்குக.

அப்படி அவர் கருணையற்றுப் பிரிந்துபோகச் செய்தேயும் அவருடைய வடிவின் போக்யதை இவளைக் கனக்க ஈடுபடுத்தியிருக்கையாலே கள்ளரும்பைந் துழாய்மாலையானையென்று வாய்வெருவுகின்றாள். தோளிவிட்ட தனிமாலையுந் தாமுமாய் அவர் இருந்த இருப்பை நீ காணப்பெற்றிலையே தோழீ! என்கிறாள். அவரூர் படுமதெல்லாம் அவருடம்பும் படுகிறதுகாண். *தெள்ளருமிளந்தெங்கின் தேறல் அவரூர்த் திருவீதிகளிலே வெள்ளமிடுமாபோலவே அவருடம்பும் பைந்துழாய்மாலையின் மதுவெள்ள மொழுகப்பெற்றிருந்தது.

**கனவிடத்தில் யான்காண்பன்**—கனவு என்றது ஸ்வப்நத்தையாகவுமாம்; இவ் விபூதியின் வாழ்க்கையை ஸ்வப்நபர்யாயமாக ஞானிகள் அத்யவஸிப்பராகையாலே கனவிடமென்று இவ்விபூதியைச் சொல்லிற்றாகவுமாம். அவர் கூடவேகலந்து வாழ்கிற பாவனையைக் காட்டிக் கொண்டிருக்குமளவிலே, மறைந்திருந்த பெரிய திருவடி வந்து "வந்தகாரியம் தலைக்கட்டிற்றே, இனி யெழுந்தருளலாகாதோ"

என்று நிற்க, அவன்மேலேறிப் போகப் புறப்பட்டார்; இத்தனை காலமும் நம் கைச்சரக்காயிருந்தவர் நாம் ஒருவார்த்தை சொன்னால் கேளாதொழிவரோ வென்று நினைத்து "புள்ளூருங்கள்வா! நீபோகேல்" என்று சொல்லியும் இங்ஙனே வருத்தப்படவேண்டிய நிலைமைதானேயாயிற்று. ஸம்ச்லேஷத்துக் கடுத்தபடி விச்லேஷம் விளைந்தாலல்லது ஸாத்மியாது என்பது அவருடைய கருத்துப்போலும். அதனை நினைந்து ஆறியிருக்கப்போமோ நமக்கு? துடிப்பதேதொழிலாயிற்று ... ... ... .... .... ... 23

**இருகையிற்சங்கிவைநில்லாவெல்லேபாவம் இலங்கொலிநீர்ப்பெரும்பௌவம்மண்டியுண்ட***
**பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம் பெருந்தவத்தரருந்தவத்துமுனிவர்சூழ***
**ஒருகையிற்சங்கொருகைமற்றாழியேந்தி உலகுண்டபெருவாயரிங்கேவந்து*என்**
**பொருகயற்கண்நீரரும்பப்புலவிதந்து புனலரங்கமூரென்றுபோயினாரே.** 24

| | | | |
|---|---|---|---|
| உலகு உண்ட பெரு வாயர் | (பிரளயகாலத்தில் உலகங்களையெல்லாம் அமுது செய்த பெரிய திருவாயையுடையவரும், | பெருந் தவத்தர் அருந்தவத்து முனிவர் சூழ | பரமபக்தியுக்தரான ஸ்ரீவைஷ்ணவர்களும மஹாதபஸ்களான ரிஷிகளும் சூழ்ந்து நிற்க |
| இங்கே வந்து | இவ்விடத்தே வந்து | ஒரு கையில் | ஒரு திருக்கையாலே |
| பொரு கயல் | ஒன்றோடொன்று போர்செய்கின்ற கயல் மீன்களைப் போன்ற | சங்கு | திருச்சங்கையும் |
| | | மற்றொரு கை | மற்றொரு திருக்கையிலே திருவாழியையும் |
| என் கண் | எனது கண்களிலிருந்து | ஏந்தி | தரித்துக்கொண்டு |
| நீர் அரும்ப | நீர்த்துளிகள துளிக்கும்படி | புனல் அரங்கம் ஊர் என்று | நீர்வளம் பொருந்திய திருவரங்கம தம்மூர் என்று சொல்லிவிட்டு |
| புலவி தந்து | விரஹவேதனையையுண்டாக்கி, | | |
| ஒலி பெரு பௌவம் மண்டி உண்ட பெரு வயிற்ற கரு மூகில் வண்ணன் ஒப்பர் | விளங்குகின்ற ஓசையையுடைய நீர்நிறைந்த பெருங்கடலில் ஆழ்ந்து நீரைப் பருகின பெருவயிற்றையுடைய காளமேகத்தின் நிறத்தை ஒத்தவருமான பெருமாள் | போயினர் | அகன்றுபோனார்; (அதுவேகாரணமாக) |
| | | இரு கையில் | (எனது) இரண்டு கைகளிலும |
| | | சங்கு இவை நில்லா | இந்தச் சங்குவளைகள் கழன்றொழிந்தன |
| | | எல்லே பாவம் | என்ன மஹாபாபமோ !. |

***—"புள்ளூருங்கள்வா! நீபோகேலென்பன் என்றாலுமிது நமக்கோர் புலவிதானே" என்றாள் கீழ்ப்பாட்டில்; அதுகேட்ட தோழியானவள், 'நங்காய்! பெரியதிருவடி வந்து தூக்கிக்கொண்டு போய்விட்டானென்கிறாயே; அந்தப் பெரிய திருவடிதானும் உனக்கு அடங்கினவனல்லனோ? "ஒருவன் அடிமைகொள்ளும் போது க்ருஹிணிக்கென்றன்றே ஆவணையோலை எழுதுவது; ஆகிலும் பணி செய்வது க்ருஹிணிக்கிறே" என்ற நியாயத்தாலே கணவனுக்கு அடிமைப் பட்டாரெல்லாரும் மனைவியர்க்கும் அடிமைப்பட்டிருத்தல் முறைமையன்றோ; பகவானுக்கு அடிமைப்பட்டபோதே உனக்கும் அடிமைப்பட்டவனாயன்றோ அக்கருடனிருப்பது; அப்படி விதேயனான அவனை நீ போகேலென்று நியமிக்கக்கூடாதோ?' என்று கேட்க; ஆமாம் தோழீ!, அவன் ஒருவனுமேயாகிலன்றோ நியமிக்கலாம்; நித்ய விபூதியிலுள்ளாரடங்கலும் வந்து சூழ்ந்துகொண்டார்கள்: அவர் தாமும் முன்பு போலின்றியே இப்போதுண்டான விலக்ஷணமான மேன்மையினாலே எதிர்த்துப் பேசவொண்ணாதபடியாயிருந்தார்; அதனாலே சென்று கிட்டவும் வார்த்தை சொல்லவும் அருமையாயிருந்தது!, என் செய்வேனென்கிறாள்.

இருகையிற் சங்கு இவை நில்லா—போகிறவர் தாம் மாத்திரம் போகையன்றியே என்கையில் வளைகளையுங் கொண்டுபோனார். அவர் போய்விட்டாலும் அவர் உகந்த வளைகளாவது கையிலிருந்தால் அவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தாகிலும் ஒருவாறு போதைப்போக்கலாமென்று நினைத்துக் கையில் வளையைப்பார்த்தாள்; வளை அவர்க்கு முன்னே போய் நின்றது. இன்னொரு கையிலாவது வளை தங்கியிருக்கிறதோவென்று பார்த்தாள்; அதுவும் அதுக்கு முன்னே போய் கிடந்தது; அந்தோ! என்செய்வேன்!, இருகையிற் சங்கிவை நில்லா வென்கிறாள். 'சங்கு நில்லா' என்னாமல் 'சங்கு இவை நில்லா' என்றதற்குக் கருத்தென்னென்னில்; அவர் நில்லாதொழிந்தால் இவையும் நில்லாதொழிய வேணுமோ? அவர் சேஷியாகையாலே போகிறார்; எனக்கு சேஷமான இவையும் நில்லாதே போகவேணுமோ? அவர் சேதநராகையாலே என்னிடத்தில் ஏதேனுங் குறைகண்டு போகலாம்; அசேதனமான இவையும் போகவேணுமோ? வந்து கலந்தவராகையாலே போகிறார் அவர்; ஸஹஜமான இவையும் போகவேணுமோ? நம் கைக்கு அடங்காதவராகையாலே அவர் போனார்; நம் கைக்கு அடங்கின இவையும் போகவேணுமோ? அவர் நிற்கிலும் இவை நிற்கின்றனவில்லையே யென்கிறாள். போகேலென்னச் செய்தேயும் அவர் போனாப்போலே இவையும் பலகால் எடுத்தெடுத்துக் கையிலேயிடச் செய்தேயும் கழலுகின்றமை தோற்றும் நில்லா என்றதில்.

எல்லே பாவம்!—ஈதென்ன கஷ்டகாலம்!? சேதனப்பொருளோடு அசேதனப் பொருளோடு வாசியற எல்லாம் என்னைக் கைவிடும்படியாக என்ன பாபம் பண்ணினேனோ வென்கிறாள். கைப்பட்டதும் போகும்படியான பாபத்தையன்றோ பண்ணினேனென்கிறாள்.

தன்னோடு கலந்து பிரிந்துபோகிறபோது அவருடைய வடிவிற்பிறந்த புதுக்கணிப்பைச் சொல்லுகிறாள் இலங்கொலி நீர்ப் பெரும் பௌவம் மண்டியுண்ட பெருவயிற்ற கருமுகிலேயொப்பர் வண்ணம் என்று. தன்னை வெறுந்தரையாக்கினபடிக்கு ஒரு த்ருஷ்டாந்த மிட்டுச் சொல்லுகிறாள் போலும். இயற்கையான வொளிமிக்க கம்பீரமான மஹாஸமுத்ரத்தை வெறுந்தரையாகப் பருகி நீர் கொண்டெழுந்த காளமேகம் போலேகாண் போகிறபோது அவரது வடிவு இருந்தபடி. கீழ்ப்பாட்டில் "என்னொளிவளையும் மாநிறமுங் கொண்டார்" என்றாளே; இங்கு நின்றுங் கொண்டதெல்லாம் அங்கே குடிகொண்டதாக வேணுமே, அது தோன்றச் சொல்லுகிறபடி. பரகாலநாயகி, தன்னைப் பெருங்கடலாகவும் அவரைக் காளமேகமாகவுங் கருதி இது சொல்லுகிறாளென்க. மேகமானது பெரிய அபிநிவேசத்தோடே வந்து கடலின் ஸாரத்தைக் கவர்ந்து செல்வதுபோல அவரும் இத்தலையில் ஸௌந்தர்ய ஸாகரத்தைக் கவர்ந்து சென்றமை சொன்னபடி. அதுதானும் அவரது வடிவிலே நன்கு தோன்றியிருக்கையாலே ஸ்பஷ்டமாயிற்று. பெருவயிற்ற கருமுகிலே யொப்பர் வண்ண மென்று பெருமாளுடைய இயற்கையான அழகு சொல்லுகிறதன்று; தற்காலத்திலுண்டான அழகைச் சொல்லுகிறாள். ஐயோ! மேகம் முகக்குமிடமாகப் பெற்றேனே. மேகம் முகந்து பெய்யுமிடமாகப் பெற்றிலேனே! என்கிற வருத்தம் 'மண்டி யுண்ட' என்றதில் தொனிக்கும். அன்றியும், இத்தலையிலுள்ளதெல்லாவற்றையும் கொள்ளை கொண்டும் இன்னமும் அவருடைய வயிறு நிரம்பவில்லையே, அவருக்கு த்ருப்தி பிறக்க வில்லையே! என்பது 'பெருவயிற்ற' என்பதில் தொனிக்கும்.

அவர் பிரிந்து போகிறபோது வடிவில் புகர் இருந்தபடியும் சுற்றும் புடை சூழ நின்றார் பெருவெள்ளமிருந்தபடியும் மேன்மையிருந்தபடியும் தோழீ! நீ காணப்பெற்றிலையே!, அவற்றை என்சொல்லவல்லே னென்வாய்கொண்டு? [பெருந்தவத்த ருந்தவத்து முனிவர் சூழ ஒரு கையிற் சங்கொருகை மற்றுழியேந்தி உலகுண்ட பெருவாயர் போயினார்.] ஒருவ ரிருவராய் வந்து கிட்டினார்களோ? கடலில் அமுதங்

தோன்றினவன்று அதனை அமரர் சுற்றிலும் சூழ்ந்துகொண்டாப்போலேகாண் என்னைப்பிரிந்து போகிறபோது அவரைப் பரிகரம் வந்து சூழ்ந்துகொண்டது. *வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணு ரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ * என்று சொல்லப்பட்ட பக்தர்களும் பாகவதர்களும் வந்து சுற்றிலும் சூழ்ந்துகொண்டார்கள். அந்தப்பெருங் கூட்டத்தை விலக்கிக்கொண்டு நான் கிட்டிச்சென்று அவரைப் போகேலென்று சொல்வது எங்ஙனே ?

அந்தப் பெருவெள்ளத்தை ஒருபடி நீஞ்சிக்கொண்டு சென்றேமேயாகிலும், "குழுமித் தேவர்குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு" என்னப்பட்ட அவருடைய திருவுரு கண்ணால் முகக்கலாயிருந்ததோ?, கையுந் திருவாழியு மாய்நின்ற மேன்மை கிட்டலாம்படியிருந்ததோ? [ஒருகையிற் சங்கு ஒருகை மற்றாழி யேந்தி] அவர்தாம் வந்த போதிலே என்கையைப் பிடித்த கையும் என்காலைப் பிடித்த கையும் இப்போது சங்கும் சக்கரமும் பொலிய நின்றனவே!. கலந்தபோது அவர்க்கு இருந்த நீர்மைக்கு எல்லையில்லாதாப்போலே காண் போகிற போதிருந்த மேன்மைக்கு எல்லை யில்லாதிருந்தபடியும். "வடிவார்சோதி வலத்துறையும் சுடராழியும் பல்லாண்டு, படை போர்புக்கு முழங்கும் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே" என்று நெடுந்தூரத்திலே நின்று அந்த மேன்மைக்குப் பல்லாண்டு பாடும்படியா யிருந்ததத்தனையன்றி அணுகிச் சென்று வாய்திறக்க வழியுண்டாயிருந்ததோ வென்கிறாள்.

[உலகுண்ட பெருவாய ரிங்கேவந்து] இத்தால் பிரளயமாகிற பெரிய ஆபத்துக்கு உதவினவர் என்று சொல்லுகிறதன்று, அவர் தன்னோடு கலக்க வருகிறபோது இருந்த ரீதியைப்பற்றிச் சொல்லுகிறாள். பிரளயகாலத்திலே உலகங்கட்கெல்லாம் தம்மையொழியச் செல்லாமையிருந்தாப்போலே என்னையொழியச் செல்லாதவராயன்றோ அவர் ஸம்ச்லேஷிக்கவந்தபோதில் இருந்தபடி என்கை.

பொருகயற்கண் ணீரரும்பப் புலவிதந்து = அவர் வந்து கலந்ததனால் நான்பெற்ற பேறு இதுகாணென்கிறாள். "கண்ணீர் பெருக" என்னாமல் 'அரும்ப' என்றதனால் விரஹ சோகாக்நியாலே உள்ளுலர்ந்து கிடக்கின்றமை தோன்றும். உள்ளே உலர்ந்து கிடக்கும் போது கண்ணீர்பெருகுவதெங்ஙனே? [புலவி தந்து] தன்னைக் கிட்டினாரை "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன்" என்கிறபடியே ஆனந்தத்தின் எல்லையிலே நிறுத்தவல்லவரான அவர்காண் எனக்கு இப்போது துயரத்தை விளைத்தது. [தந்து] உபயவிபூதிநாதரான அவர் தம்முடைய பணப்பையில் நின்றும் அவிழ்த்துத் தந்த செல்வம் இதுகாணென்கிறாள் போலும்.

அவர்தமக்கு நெஞ்சில் இரக்கமில்லாமை வந்தேறியானாலும் இயற்கையிலே கருணை யுண்டாகையாலே அதனால் தூண்டப்பெற்று ஒருவார்த்தை சொல்லிப் போனார்காண்; பிரிவில் நான் தரித்திருக்கவேணுமென்று பார்த்து 'நம்மூர் திருவரங்கம் பெரியகோயில்' என்று ஒரு தருமவார்த்தை சொல்லிக்கொண்டே எழுந்தருளினார்; வார்த்தை சொன்ன அழகும் போனபோதை யழகும் தோழீ! நீ காணப்பெற்றிலையே! என்றாளாயிற்று. ... ... ... 24

மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளும் கரிமுனிந்தகைத்தலமும்கண்ணும்வாயும்*
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே தாழ்ந்திலங்குமகரஞ்சேர்குழையும்காட்டி*
என்னலனுமென்னிறைவுமென்சிந்தையும் என்வளையுங்கொண்டென்னையாளுங்கொண்டு*
பொன்னலர்ந்தநறுஞ்செருந்திப்பொழிலினூடே புனலரங்கமூரென்றுபோயினாரே. 25

| | | | |
|---|---|---|---|
| மின் இலங்கு திரு உருவும் | மின்னல்போலப் பளபளவென்று விளங்குகின்ற திருமேனியும் | காட்டி | ஸேவை ஸாதிப்பித்து |
| | | என் நாணும் | என்னுடைய அழகையும் |
| | | என் நிறைவும் | என் அடக்கத்தையும் |
| பெரியதோளும் | பெரிய திருத்தோள்களும் | என சிந்தையும் | என நெஞ்சையும் |
| கரி முனிந்த கைத்தலமும் | குவலயாபீடமென்கிற யானையைச் சிறிப்புடைத்த திருக்கைகளும் | என் வளையும் | என் கைவளைகளையும் |
| | | கொண்டு | அபஹரித்துக் கொண்டதுமன்றி |
| கண்ணும் | திருக்கண்களும் | என்னை ஆளும் கொண்டு | என்னை அடிமையாக்கிக் கொண்டு |
| வாயும் | திரு அதரமும் | | |
| தன் அலர்ந்த நறு துழாய் மலரின் கீழே | தன்னிலத்திற்காட்டில் செவ்வி பெற்றதாய்ப் பரிமளம மிக்கதான துழாய்மாலையின கீழே | பொன் அலர்ந்த நறு | பொன்போல் மலர்ந்த பரிமளம் மிக்க |
| | | செருந்தி பொழிலின ஊடே | ஸுரபுன்னைச் சோலையினிடத்தே யிருந்து |
| தாழ்ந்து இலங்கு | தாழ்ந்து விளங்குகின்ற | புனல் அரங்கம் ஊர் என்று போயினார் | நீர்வளபமிக்க திருவரங்கம் தம்மூரென்று சொல்லிப் போய்விட்டார்!. |
| மகரம் சேர் குழையும | மகர குண்டலங்களுமாகிற இவற்றை | | |

* * *—தலைமகன் தன்பக்கலிலுள்ளவை அனைத்தையுங் காட்டி என் பக்கலிலுள்ளவை யெல்லாவற்றையுங் கொள்ளைகொண்டு போயினனென்கிறாள்.

**மின்னிலங்கு திருவுருவும்**—மின்போலே விளங்காநின்றுள்ள திருமேனியை முதலிலே காட்டினரென்கிறாள். "கார்வண்ணந்திருமேனி" என்றும் "கருமுகிலே யொப்பர்வண்ணம்" என்றும் "முகிலுருவமெம்மடிகளுருவந்தானே" என்றுங் கீழே சொல்லியிருக்க, இங்கே 'மின்னிலங்கு திருவுரு' என்றது என்னெனில்; ஔதார்யத்திற்கும் விடாய்தீர்க்குந் தன்மைக்கும் மேகததை ஒப்புச் சொல்லிற்றுக்கீழ்; எதிர்விழி விழிக்கவொண்ணாதபடியான தன்மையை நோக்கி இங்கு 'மின்னிலங்கு திருவுரு' என்றது. ஆனாலும் காளமேகத்தின் நிறமேயன்றோ வடிவின்நிறமென்னில்; திருவாழியாழ்வானுடைய புகர் திருமேனியெங்கும் பரவியிருக்கையாலே இங்ஙனே சொல்லக்குறையில்லை யென்க. அருணகிரணத்தாலே மறைபட்ட காளமேகமெனக் கொள்க. "வடிவார்சோதி வலத்துறையுஞ்சுடராழி" என்ற திருப்பல்லாண்டும் நோக்குக. "ஒருகையிற்சங்கொருகை மற்றாழியேந்தி உலகுண்ட பெருவாயரிங்கேவந்து' என்று கீழே சொல்லிற்றும் இங்கேநினைக்கத் தக்கது. பெரிய மேன்மையைக் காட்டினமை சொல்லிற்றாயிற்று.

**பெரியதோளும்**—காலமுள்ளதனையும் அனுபவித்தாலும் வேறொரு அவயவத்தில் போகவொட்டாதபடி துவக்கவல்ல அளவிறந்த போக்யதை வாய்ந்த திருத்தோள்கள். "தோள்கண்டார்தோளேகண்டார்" என்னும்படியானவை. ஆகவே பெரிய என்று போக்யதையிலுள்ள பெருமையைச் சொன்னபடி. இனி "பாஹுச்சாயாமவஷ்டப்தோ யஸ்ய லோகோ மஹாத்மந:" என்கிறபடியே தோள் நிழலிலே உலகமெல்லாம் ஒதுங்கினாலும் ஒதுங்கினவர்கள் சுருங்கி நிழலே மிக்கிருக்கும்படியான பெருமையைச் சொல்லிற்றாகவுங் கொள்ளலாம்.

**கரிமுனிந்த கைத்தலமும்**—கம்ஸனால் மதமூட்டி நிறுத்தப்பட்டிருந்த குவலயாபீடமென்கிற யானையைத்தொலைத்த மிடுக்கு விளங்குகின்ற திருக்கைகள். ஒரு விசேஷணமிட வேண்டாதே இயற்கையாகவே பரமபோக்யமா யிருந்துள்ள கண்ணும் வாயும்.

[**தன்னலர்ந்த நறுந்துழாய் இத்யாதி**] தன்னிலத்திற் காட்டிலும் செவ்விபெற்று நறுமணம்மிக்க திருத்துழாய் வளையத்தினருகே திருத்தோளளவுந் தாழ்ந்து விளங்குகின்ற மகரகுண்டலங்களும், ஆக இவற்றையெல்லாம் ஸேவைஸாதிப்பித்து,

[என்னலனு மென்னிறைவு மென்சிந்தையும் என்வளையுங் கொண்டு என்னை யாளுங் கொண்டு] ஸர்வஸ்வதானம் பண்ணுவாரைப்போலே வந்து ஸர்வஸ்வத்தையுங் கொள்ளை கொண்டாரென்கிறாள். நலன்—நலம்; மகரனகரப்போலி. குணம் என்றபடி. நாண் மடம் அச்சம் பயிர்ப்பு என்கிற ஆத்ம குணங்களையும், அழகு மென்மை முதலிய தேஹ குணங்களையும் சொன்னபடி. [நாணமாவது, தகாத காரியத்தில் மனமொடுங்கியிருப்பது. மடமாவது, எல்லாமறிந்தும் அறியாது போலிருத்தல். அச்சமாவது, மிகச் சிறிய காரணத்திலும் மனம் நடுங்குதல். பயிர்ப்பாவது, பரபுருஷர்களின் ஆடை முதலியன தம்மேற்பட்டால் அருவருப்புக் கொள்வது] ஆக இக்குணங்களையும் அழகு முதலியவற்றையுங் கொள்ளை கொண்டாரென்றது, வைவர்ணியப்படுத்தி வாய் சிதற்றச் செய்தாரென்றபடி.

“என்னலனும் நிறைவும் சிந்தையும் வளையுங் கொண்டு” என்று சொல்லாதே ‘என்’ என்பதை ஒவ்வொன்றிலுஞ் சேர்த்து ‘என்னிறைவும் என் சிந்தையும் என்வளையும்’ என்று சொல்லுவானேன? என்னில்; இதில் ஒரு ஸ்வாரஸ்யமுண்டு: அவருடைய குணங்களையும் அவருடைய பும்ஸ்த்வத்தையும் அவருடைய நெஞ்சையும் அவருடைய ஆபரணங்களையுங் கொள்ளை கொள்ளப் பிறந்தவள் நானயிருக்க, என்னுடையவற்றை அவர் கொள்ளைகொண்டது என்ன அற்புதம்! காண்மின்! என்று எடுத்தெடுத்துக் காட்டுகிறபடி.

என்னையாளுங்கொண்டு—என் ஸர்வஸ்வத்தையும் அபஹரித்துக்கொண்டு போன மாத்திரமேயோ? அவற்றைச் சுமந்துகொண்டு போவதற்கு ஆளாகவும் என்னையே அமைத்துக் கொண்டபடி என்னே! என்கிறாள்: ஒருவனுடைய வீட்டிலே கொள்ளை கொள்ளப் புகுந்து ஸர்வஸ்வத்தையும் பறித்து அவற்றை அந்த வீட்டுக்குடையவனது தலையிலேயேவைத்துச் சுமக்கச்செய்து கொண்டுபோமாபோலே யிருந்ததீ! என்கிறாள். அன்றியே, “கொம்மை முலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர் குற்றேவல்” என்கிறபடியே அவனோடு கலந்து பரிமாறின பரிமாற்றத்தையே அடிமையாக நினைத்திருக்கையாலே அதனைச் சொன்னபடியுமாம்.

இங்ஙனே மறுபடியும் ஒருகால் கொள்ளை கொள்வதற்கு ஆச்ரயம் இருக்க வேணுமே; முதலே போய்விட்டால் பின்னையுங் கொள்ளைகொள்வதற்கு இடமில்லையாகுமே. ‘உள்ளம் புகுந்தென்னைநைவித்து நாளுமுயிர்ப்பெய்து கூத்தாட்டுக் காணும்” என்று—போகிற உயிரையும் போகவொட்டாமல் நிறுத்திவைப்பது மேன்மேலும் ஹிம்ஸைகளைச் செய்வதற்கு ஆச்ரயம் வேணுமென்றயிற்று. அப்படியே, பின்னையும் கொள்ளைகொள்வதற்கு ஆச்ரயம் நிறுத்த வேண்டி—[நான் ஸத்தை பெற்றிருப்பதற்காக] ஊரைச்சொல்லிப் போனரென்கிறாள்: பொன்போலே யலர்ந்து பரிமளம் மிக்கிருந்துள்ள பூவையுடைய ஸுரபுன்னைப் பொழிலினூடே உபயகாவேரீ மத்தியத்திலுள்ள திருவரங்கம் பெரிய கோயில் நம்மூர் என்று சொல்லிக்கொண்டே போயினர் என்கிறாள்.

இங்கே வியாக்கியான ஸ்ரீஸூக்தி காண்மின்;—“திருநகரியில் நின்றும் கோயிலளவுஞ் செல்லப் பொழிலாய்க்கிடந்ததோ வென்னில்; ஒரு காளமேகம் வர்ஷித்துக்கொண்டு போகாநின்றால் கண்டவிடமெங்கும் தளிரும் முறியுமாகாதோ? என்று பட்டருளிச் செய்வர்.” என்று.

முற்காலத்தில், விக்ரமசோழதேவன் என்பானொரு அரசன் தமிழ் ரஸிகனாயிருந்தான்; அவனது ஸபையில் வைஷ்ணவ பண்டிதர்களும் சைவபண்டிதர்களும் அடிக்கடி செல்லுவதுண்டு; ஒருகால் இருசமயத்து வித்வான்களும் கூடியிருந்த போது அவ்வரசன் “தலைமகன் பிரிந்தபோது தலைவி இன்னாப்போடே சொல்லும் பாசுரம் எங்ஙனே யிருக்கிறது? சொல்லுங்கள், கேட்போம்” என்று இரு வகுப்பினரையுங் கேட்க, ஸ்ரீவைஷ்ணவ வித்வான் “மின்னிலங்கு திருவுருவும் பெரிய

என்று தொடங்கி இப்பாசுரத்தை யெடுத்துச் சொன்னார்; சைவ——ரான "எலும்புஞ்சாம்பலு முடையவனிறைவன்" என்று தொடங்கி ஒரு செய்யுளைச் சொன்னான்; இரண்டையுங்கேட்டு அரசன் 'நெஞ்சில் கிலாய்ப்போடே சொல்லைச் செய்தேயும மிவனிலவகு திருவுருவும் என்று நெஞ்சு பிணிப்புண்ணுமாறு சொன்னவளே உண்மையில் தலைமையுடையவள்; மற்றொருத்தி பிணங்கின்னி' என்றானும். ... ... .... ... ... 25

தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதைத் தேனதனைவாய்மடுத்துன்பெடையும்நீயும்*
பூமருவியினிதமர்ந்துபொறியிலார்ந்த அறுகாலசிறுவண்டே! தொழுதேனுன்னை*
ஆமருவிநிரைமேய்த்தவமரர்கோமான் அணியழுந்தூர்நின்றானுக்கின்றேசென்று*
நீமருவியஞ்சாதேநின்றோர்மாது நின்னயந்தா ளென்றிறையேயியம்பிக்காணே. 26

| | | | |
|---|---|---|---|
| தேன் மருவு | தேன் வெள்ளம் நிறைந்திருக்கப்பெற்ற | ஆநிரை | பசுக்கூட்டங்களை |
| பொழில் இடத்து | சோலைப்புறத்திலே | மருவிமேய்த்த | விரும்பி மேய்த்தவனும் |
| மலர்ந்தபோது | மலர்ந்த புஷ்பங்களிலுண்டான | அமரர் கோமான் | நித்யஸூரிகளுக்குத் தலைவனும் |
| தேன் அதனை | தேனை | அழுந்தூர் நின்று | அழகிய ...லே நிற்பவனுமான எம்பெருமான் பக்கலிலே |
| வாய் மடுத்து | பானம்பண்ணி | | |
| உன் பெடையும் நீயும் | உனது பேடையும் நீயும் | இன்றே நீ சென்று | இப்போதே நீ போய் |
| பூ மருவி | புஷ்பத்திலே பொருந்தி | அஞ்சாதே | பயப்படாமல் |
| இனிது அமர்ந்து | இனிமையாகப் புணர்ந்து | மருவி நின்று | பொருந்தி நின்று |
| பொறியின் ஆர்ந்த | மேனியிற் புகர் அதிகரிக்கப் பெற்ற | ஓர் மாது | 'ஒரு பெண்பிள்ளை |
| அறு கால சிறு வண்டே | ஆறு கால்களையுடைய சிறிய வண்டே! | நின் நயந்தாள் என்று | உன்னை ஆசைப்பட்டிருக்கின்றாள்' என்று |
| உன்னை தொழுதேன் | உனனை வணங்கி யாசிக்கின்றேன்; | இறையே | சிறியதொருவார்த்தையை |
| | | இயம்பிக்காண் | சொல்லிப்பார். |

***—தலைவியை ஒருமுகத்தாலே ஆற்றுவிக்க வேணுமென்று நினைத்த தோழியானவள் சில கேள்விகள் கேட்க, அவற்றுக்கு மறுமாற்ற முரைக்கும் வகையாக * மைவண்ண நறுங்குஞ்சி தொடங்கி ஐந்துபாசுரங்கள் சென்றன. தோழி தான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் விடைவந்துவிட்டபடியால் அவள் வாளா கிடந்தாள்; தலைவிக்கோ ஆற்றாமை மீதூர்ந்தது. கண்ணிற்கண்டதொரு வண்டைத் தூதுவிடுகிறாள் இப்பாசுரத்தில். ஸ்ரீராமாவதாரத்தில் திர்யக்குக்கள் தூதுசென்று காரியம் தலைக்கட்டிவைக்கக் காண்கையாலே வண்டுவிடுதூதிலே முயல்கிறாள் இப்பரகாலநாயகி.

முன்னடிகளில் வண்டைவிளித்துத் தொழுது, பின்னடிகளில், அது செய்ய வேண்டிய காரியத்தை விதிக்கின்றாள். திருவழுந்தூர் ஆமருவியப்பன் திருவடி வாரத்திலே சென்று தனது நிலைமையைச்சொல்லுமாறு வேண்டுகின்றாள்: அந்த வண்டு தன் பேடையோடே கலந்து மலரிலே மதுபானம் பண்ணிக் கொண்டிருந்தமையால் 'நான் துணைவனைப் பிரிந்து உணவும் உறக்கமுமற்று வருந்திக்கிடக்கும் போது நீ இப்படி உன்காரியமே கண்ணாக இருப்பது தகுதியோ? என்னுங் கருத்து முன்னடிகளில் வெளிவரும்.

நாம் வருந்தி யொடுங்கி * மென்மலர்ப்பள்ளி வெம்பள்ளியாலோ என்று கிடக்கும் போது இந்த வண்டு மாத்திரம் மலர்களிலே ஏறிக்கிடப்பதற்கு யாது

காரணமென்று பார்த்தாள்; அது நம்மைப்போலே விரஹ வேதனைப்படாமல் துணை பிரியாதிருப்பதனால் மலரிலே கால் பாவவும் மதுவைப் பருகவும் மேனி பெற்றிருக்கவும் பெறுகின்றதென்றுணர்ந்து அங்ஙனமே விளிக்கின்றாள். பூவைக் கண்டால் அருவருத்தும் போக்யவஸ்துக்களில் வெறுப்புற்றும் மேனி நிறமழிந்தும் இராநின்ற என்னையும் உன்னைப்போலே யாக்க வேண்டாவோ? நானும் துணைவனோடு கலந்து வாழும்படி நீ காரியஞ் செய்யவேண்டாவோ? என்பது உள்ளுறை.

"உளங்கனிந்திருக்குமடியவர் தங்களுள்ளத்துளூறிய தேன்" என்னப்பட்ட பகவத் விஷயமாகிற மதுவை விரும்பியும், "போந்த தென்னெஞ்சென்னும் பொன்வண்டு உனதடிப்போதிலொண்சீராந் தெளிதேனுண்டமர்ந்திட வேண்டி" என்கிறபடியே ஆசார்ய பாதாரவிந்த ஸேவையாகிற மதுவைப் பருகுதலையே விரதமாகவுடைத்தாகியும், உயர்கதிக்கு ஸாதனமாகிய இரண்டு சிறகுகள் போன்ற கர்ம ஜ்ஞானங்களையுடையராகியும் ஸாரக்ராஹிகளாயுமிருக்கின்ற ஸ்ரீ வைஷ்ணவர்களை வண்டாகச்சொல்லுவது வழக்கம் அப்படிப்பட்ட ஸ்ரீவைஷ்ணவர்களை நோக்கி 'நீர் எம்பெருமான் திருவடிகளிலே புருஷகாரஞ்செய்து அடியேனையும் உம்மைப்போலே பகவதநுபவமே நித்தியமாய்ச் செல்லுமாறு ஆட்படுத்திக் கொள்ளவேணும்' என்று பிரார்த்தித்தல் இதற்கு உள்ளுறை பொருள். *வேதம் வல்லார்களைக்கொண்டு விண்ணோர் பெருமான் திருப்பாதம் பணிவது ஸம்ப்ரதாயமென்க.

போது + தேன், போதைத்தேன்; பூவிலுள்ள தேன் என்றபடி.

[அறுகால சிறுவண்டே தொழுதேனுன்னை.] வண்டுக்கு ஆறுகால்கள் உள்ளமை இயல்வாதலால் இவ்விசேஷணம் இங்கு ஏதுக்கு? என்று கேட்கக்கூடும்; இரண்டு காலாகவும் நான்கு காலாகவுமின்றியே விரைந்து செல்லுகைக் குறுப்பாக ஆறு கால்கள் இருக்கப்பெற்ற பாக்கியம் என்னே! என்று வியந்து கூறுவதாகச் சில ஆசார்யர்கள் நிர்வஹித்தார்களாம். இந்த நிர்வாஹத்தில் ஸ்வாரஸ்யமில்லை; வண்டு செல்லுதற்குச் சாதனம் சிறகேயன்றிக் கால்கள் அல்லவே; ஆதலால் அறுகால' என்னு மடைமொழிக்கு அங்ஙனே கருத்துரைத்தல் பொருந்தாதென்று, பட்டர் அருளிச்செய்ததாவது—"தொழுதேனுன்னை" என்று மேலே இருக்கையாலே என்தலையிலே வைப்பதற்கு ஆறுகால்களுண்டாகப் பெற்றதே! என்று வியந்து, சொல்லுகிறபடி என்பதாம்.

மீண்டுவந்தால் வண்டின் கால்களைத் தன் தலையிலே வைத்துக்கொண்டு கூத்தாடக் குதூஹலித்திருப்பதனால் அதற்குச் சேர இங்ஙனே கருத்துரைத்தல் மிகப் பொருந்தும் "எங்கானலகங்கழிவாயிரை தேர்ந்து இங்கினிதமருஞ், செங்காலமட நாராய்! திருமூழிக்களத்துறையுஞ், கொங்கார் பூந்துழாய் முடியென்குடக்கூத்தற்கென் தூதாய், நுங்கால்களென் தலைமேல் கெழுமீரோ நுமரோடே." (9—7—1.) என்ற திருவாய்மொழிப்பாசுரத்தின் ஈற்றடி இங்குக் குறிக்கொள்ளத் தக்கது.

சிறுவண்டே!—ஏற்கனவே நீசிறியையாயிருப்பதும் ஒரு பாக்கியம்; அனுமான் இலங்கைக்குத் தூது சென்றபோது சிலவிடங்களில் தன்வடிவைச் சிறுக்கடித்துக் கொள்ளவேண்டியிருந்தது; அங்ஙனே உனக்குத் தேவையில்லை; உருவமே சிறியையாயிராநின்றாய்காண் என்று விசேஷார்த்தங்காண்க. ஹநுமானாகில் 'இந்தக் குரங்கு இங்கே ஏதுக்கு வந்தது?' என்று ஆராய்ச்சிப்படவேண்டியிருக்கும்; நீ வண்டாகையாலே *தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையில் இஷ்டமான தோரிடத்திலேயிருந்துகொண்டு வார்த்தை சொல்லலாம்படியான ஜன்மமன்றோ உன்னது என்பதும் விவக்ஷிதம்.

பரஸ்பரஸம்ச்லேஷ ஸுகத்தாலே மயங்கி மதிகெட்டுக்கிடக்கிற வண்டின் செவியிலே உறுத்தும்படி 'பூமருவியினிதமர்ந்து பொறியிலார்ந்த அறுகாலசிறு வண்டே!' என்று உரக்கக் கூவினவாறே வண்டு துணுக்கென்று எட்டிப்பார்க்க, தொழுதேனுன்னை என்கிறாள். கலமகனுடைய திருவடிகள் எனக்கு ஏதுக்கு? உன்னைத் துதிப்பதும் உன்காலிலே விழுவதுமன்றோ எனக்குப்பணி என்றவாறு. எம்பெருமானைக் காட்டிலும் புருஷகாரபூதரான ஆசார்யர்கள் மிகவும் உத்தேச்யர் என்ற சாஸ்த்ரார்த்த முணர்க.

என்னைத் தொழுவதேன்? வேண்டின காரியத்தைச் சொல்லலாகாதோ வென்று வண்டு கேட்க; காரியத்தைக் கூறத் தொடங்குகிறாள் பின்னடிகளில். அமரர்கோமான் பக்கலிலே சென்று தூது சொல்லுங்கோள் என்றாள்; அந்தோ! அயர்வறுமமரர்களதிபதியன்றோ? அந்த மேன்மையிலே எங்களால் கிட்டப் போமோ? என்ன; ஆமருவிநிரைமேய்த்த அமரர் கோமான் என்றாள்; பரத்வம் ஒரு புறத்தே கிடக்கச் செய்தேயும் பசுக்களோடே பொருந்தி அவற்றோடே போது போக்குமவன் காண்; நித்யஸூரிகளுக்குத் தன்னையொழியச் செல்லாதாப்போலே பசுக்களையொழியத் தனக்குச் செல்லாதபடியான குடிப்பிறப்புடையவன்காண்; மேன்மையைககண்டு தியங்காதே செல்லலாமென்றாள்; ஆமாம்; அது ஒரு காலத்திலன்றோ? க்ருஷ்ணாவதாரங் கடந்து நெடுநாளாயிற்றே! என்ன; அணியழுந்தூர் நின்றுகந்த என்கிறாள். அக்காலத்தில் பசுக்களை ரக்ஷித்தாற்போலே அக்காலத்திற்குப் பிற்பட்டவர்களாய்ப் பசு ப்ராயராயிருப்பாரையும் ரக்ஷிக்கைக்காகப் * பின்னானார் வணங்குஞ் சோதியாகத் திருவழுந்தூரிலே நிற்கிறான் காண்; அங்கே போய் அறிவிக்கவேணுமென்றாளாயிற்று.

எம்பெருமான் பிரிந்துபோகிறபோது * சேலுகளுந் திருவரங்கம் நம்மூர் என்றும் * புனலரங்கமூர் என்றும் சொல்லிச் சென்று திருவரங்கத்திலே போயிருக்க, திருவழுந்தூரிலே தூதுவிடுகை பொருந்துமோ? என்னில்; கேண்மின்; 'புனலரங்கமூரென்று போயினாரே' என்றது உண்மைதான்; ஆயினும் பிரிந்து போனவர் முழுதும் போயிருக்க மாட்டார்; திருவழுந்தூரிலே பின்தங்கி நின்றிருக்கக்கூடும்; அங்கே சென்று அறிவிக்கலாமென்கிறாள் போலும். அன்றியே; புனலரங்கமூரென்று போயினார்; திருவரங்கத்தே போய்ப் பார்த்தார்; நீர்வாய்ப்பும் நிழல்வாய்ப்பும் கண்டவாறே தனக்கிடை கிடப்பதற்குப் பொருந்தியிராது; என்னைப் பிரிந்து அங்குத் தரித்திருக்கமாட்டார்; எதிர்கொண்டு வரப் புறப்பட்டிருப்பார்; இப்போது திருவழுந்தூரளவிலே எழுந்தருளியிருக்கக்கூடும்; அங்கே சென்று அறிவிக்கவமையும் என்கிறாள் என்றுங் கொள்ளலாம்.

அணியழுந்தூர் நின்றுகந்த—இத்தலத்தைக் கடந்து அப்பால் போகமாட்டாமையாலே அங்கே ஸ்தாவர ப்ரதிஷ்டையாக நிற்கிறானென்கிறாள். திருவாலி திருநகரியிற் பரகால நாயகி பக்கலில் நின்றும் ஆள்வருவது எப்போதோவென்று எதிர்பார்த்தபடியே நிற்கிறானென்கிறாள் என்னவுமாம்.

இன்றே சென்று -நாளைச் செய்கிறேனென்ன வொண்ணாது; நாளைக்கு நான் இருக்கப்போகிறேனோ நானில்லையானால் அவன்தான் இருக்கப்போகிறானோ? இரண்டு தலையும் அழிந்தபின்பு நீ எங்குச் சென்று யார்பக்கலிலே என்னசொல்லப் போகிறாய்? இரண்டு தலையும் அழிந்ததென்றால் பின்னை உலகந்தானுண்டோ? நீயும் அழிந்தாயாவாய்; ஆக, நாங்களும் பிழைத்து நீயும் வாழ வேண்டியிருந்தாயாகில் இன்றே சென்று அறிவியாய் என்றாளாயிற்று.

ஆமருவி—அவன் ஆமருவி நிரைமேய்த்தவனாகையாலே திர்யக்ஜாதியான உனக்கும் முகந்தரும்; நீ சென்று கிட்டலாம். அவனுடைய சீலகுணத்தைக் கண்டுவைத்தும் "அவரை நாம தேவரென்றஞ்சினோமே" என்று மருண்டு பின்வாங்கின என்னைப்போலல்லாமல் அருகே பொருந்தி நிற்கலாம் நீ. [அஞ்சாதே

நின்று.] வார்த்தை சொல்லும் விஷயத்தில் சிறிதும் அஞ்சவேண்டா: 'நம்முடைய அந்த:புரத்தில்நின்றும் வந்தவர்கள்' என்று தோற்றும்படி செருக்கி வார்த்தை சொல்லவேணும்.

அவர்க்கு அறிவிக்கவேண்டும் வார்த்தை ஏதென்ன; ஓர் மாது நின் நயந்தாளென்று—என்பெயரைச் சொல்லவேண்டா; 'ஒருத்தி' என்னும்போதே அவர்தாமே தெரிந்துகொள்வர்: 'ஒருகாட்டிலே ஒருமான் அம்புபட்டுக்கிடந்து துடிக்கின்றது' என்றால் உடனே எய்தவனுக்குத் தெரியுமன்றே. [நின்நயந்தாள்.] 'ஓர்மாது' என்றாலே போதுமானது; அதற்கு மேலும் ஒருவார்த்தை சொல்லவேணுமென்றிருந்தாயாகில் "நின்நயந்தாள்" [உன்னை ஆசைப்பட்டிருக்கின்றாள்] என்று சொல்லு. படுகொலைப்பட்டாளென்று சொல்லு என்றபடி. ஒரு க்ஷுத்ரபுருஷனை ஆசைப்பட்டாளல்லள், பரமபுருஷனான உன்னை ஆசைபட்டாளென்று சொல்லு. பரத்வத்திலே ஆசைப்பட்டிலள், வியூஹத்திலே ஆசைப்பட்டிலள், விபவாவதாரங்களிலே ஆசைப்பட்டிலள், அந்தர்யாமித்வத்திலே ஆசைப்பட்டிலள்; ஆசைப்படுதற்குரிய அர்ச்சாவதாரத்திலே ஆசைப்பட்டாளென்று சொல்லு.

இறையே இயம்பிக் காண்—முற்றமுடிய வார்த்தை சொல்லவேண்டுமோ நீ; சிறிது வாயைத் திறக்கும்போதே உன்னை அவர் எங்ஙனம் கொண்டாடப்போகிறார் பார்; "ஏஷ ஸர்வஸ்வபூதஸ்து பரிஷ்வங்கோ ஹநூமத:" என்கிறபடியே அனுமான்பெற்ற பரிசும் ஏகதேசமென்னும்படியன்றே நீ பஹுமாநம் பெறப்போகிறாய்; இது நான் சொல்ல வேணுமோ? அநுபவத்தில் பார்த்துக்கொள்ளாய் என்றருளாயிற்று. ... ... ... ... ... 26

செங்காலமட நாராயின்றேசென்று திருக்கண்ணபுரம்புக்கென்செங்கண்மாலுக்கு*
என்காதலென்துணைவர்க்குரைத்தியாகில் இதுவொப்பதெமக்கின்பமில்லை*நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப் பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன்*தந்தால்
இங்கேவந்தினிதிருந்துன்பெடையும்நீயும் இருநிலத்திலினிதின்பமெய்தலாமே. 27

| | |
|---|---|
| செம் கால | சிவந்த கால்களையுடைய |
| மட நாராய் | அழகிய நாரைப்பறவையே! |
| இன்றே சென்று | இன்றைக்கே புறப்பட்டுப் போய் |
| திருக் கண்ணபுரம் புக்கு | திருக்கண்ணபுரத்தில் புகுந்து |
| என செங்கண் மாலுக்கு | செந்தாமரைக் கண்ணராய் என்மீது வியாமோஹங் கொண்டவரும் |
| என வர்க்கு | எனக்குத் துணைவருமான சௌரிப் பெருமான் பக்கலிலே |
| என் காதல் | எனது விருப்பத்தை |
| உரைத்தி ஆல் | சொல்லுவாயாகில் |
| எமக்கு | (அவரைப் பிரிந்து வருந்திக் கிடக்கின்ற) நமக்கு |
| இது ஒப்பது இன்பம் இல்லை | இதுபோன்ற ஆனந்தம் வேறொன்றுமில்லை; |
| (இதற்காக உனக்கு நான் செய்யக்கூடிய உதவி யாதெனில்;) | |
| நாளும் ஈது | நீ யுள்ளகாலமெல்லாம் |
| கானம் எல்லாம் | சோலைப்பரப்பு முழுவதும் |
| உனதே ஆக | உனக்கே உரியதாம்படியாக(ச் செய்து) |
| பழனம் | நீர் நிலங்களிலுள்ள |
| மீன் | மீன்களை |
| கவர்ந்து | நீ கவர்ந்து உண்ணும்படியாக கொடுப்பேன்; |
| தந்தால் | அங்ஙனம் நான் தந்தபின் |
| ன் பெ யும் நீயும் | உனது மனையாட்டியும் நீயும் |
| இங்கே வந்து | இவ்விடத்தே வந்து |
| இனிது இருந்து | மகிழ்வுடனிருந்து |
| நிலத்தில் | (இப்) பெரிய பூமண்டலத்திலே |
| இனிது இன்பம் எய்தலாம் | மஹாநந்தத்தை யடைந்து வாழலாம். |

* * *—கீழ்ப்பாட்டில் ஒரு வண்டைத் தூதுவிட்டாள்; அது போய்த் தூதுரைத்துத் திரும்பிவருமளவும் தரித்திருக்கமாட்டாமையாலே பின்னையும் ஒரு நாரையைத் தூது விடுகிறாள்.

"திக்ஷு ஸர்வாஸு மார்க்கந்தே" என்கிறபடியே பிராட்டியைத் தேடுதற்கு எல்லாத் திசைகளிலும் வாநரமுதலிகளை ஏவினாற்போலே இவளும் கண்ணுற் கண்டவற்றை எல்லாம் ஏவுகிறாள். ராமாவதாரத்திலே வாநரஜாதி வீறுபெற்றது போலே ஆழ்வார்களவதரித்துப் பக்ஷிஜாதி வீறு பெற்றது என்பர்.

செங்காலமடநாராய்—பரகாலநாயகி தான் எம்பெருமானோடு ஸம்ச்லேஷித்திருந்த காலத்திலே அவன் தனது காலை நோக்கி 'இதொரு காலும் சிவப்பும் இருந்தபடி என்!' என்று கொண்டாடக் கண்டவளாதலால் நாரையின் மற்ற அவயவங்களை விட்டுக் காலைக் கொண்டாடத் தொடங்குகிறாள். இனிதாகச் சூட வேண்டிய ஸுகுமாரமான கருமுகை மாலையைச் சும்மாடு கொள்வதுபோல, கண் கொண்டு காணவேண்டிய உனதுகாலைக்கொண்டு தூதுபோகவிடுகை மிகையாயிருக்கின்றதே! என்செய்வேன்? உன்காலைப்பற்றியே என்காரியம் தலைக்கட்ட வேண்டியிருக்கின்றதே என்கிறாள் 'நாராய்!' என்னும் விளி அம்மே! என்னுமா போலேயிருக்கின்றது. வழிபறியுண்கிறவளவிலே தாய்முகத்திலே விழித்தாற் போலே யாயிற்று தலைவனைப்பிரிந்து நோவுபடுகிறவளவிலே இந்த நாரையின் காட்சியுண்டாயிற்று. பிராட்டியைப் பிரிந்து நோவுபட்டுத் தடுமாறி நின்றவளவிலே பம்பைக்கரையில் அனுமான் வந்து தோன்றினபோது பெருமாளுக்குண்டான அத்தனை ஹர்ஷம் இப்போது பரகாலநாயகிக்கு உண்டாயிற்றுப்போலும்.

"செங்காலமடநாராய்!" என்று மிக்க இரக்கந்தோற்றக் கூவினவாறே நாரை 'என்னை இவ்வளவு போற்றிப்புகழ்ந்து அழைக்கவேணுமோ? திருவுள்ளம் பற்றின காரியத்தைச் சொல்லலாகாதோ? என்று கேட்கிறாப்போலே இசைவு தோற்ற அருகேவந்து நிற்க இன்றேசென்று என்று தொடங்கிச் சொல்லுகிறாள். நாளை பார்த்துக் கொள்ளுவோமென்று இருந்துவிடலாகாது; இப்போதே செய்ய வேண்டிய காரியங் காண். "ந ஜீவேயம் க்ஷணமபி விநா தாம் அஸிதேக்ஷணாம்" [அந்த ஸீதையைப் பிரிந்து ஒரு நொடிப் பொழுதும் நான் பிழைத்திருக்கமாட்டேன்] என்ற அவர்படியைப் பார்த்தாலும் கால தாமதம் செய்யலாகாது; "ந ச ஸீதா த்வயா ஹீநா ந சாஹமபி ராகவ—முஹூர்த்த மபி ஜீவாவோ ஜலாந்மத்ஸ்யாவிவோத்த்ருதௌ". என்னத்தக்க என்படியைப் பார்த்தாலும் காலதாமதம் செய்யலாகாது. இப்போதே புறப்படவேணும்.

எவ்விடத்திற்கு? என்ன; திருக்கண்ணபுரம் புக்கு என்கிறாள்.

கீழ்ப்பாட்டில் "அணியழுந்தூர் நின்றானுக்கின்றே சென்று" என்று திருவழுந்தூரேற வண்டைத் தூதுவிட்ட இத்தலைமகள் இப்பாட்டில் இத்திருப்பதியை விட்டுத் திருக்கண்ணபுரத்திலே தூது விடுவானேன்? என்னில்: முற்பாட்டில் தூதுவிட்ட வண்டை அவன் திருவழுந்தூரிலே கண்டிருப்பன்; அங்குத் தரித்திருக்கமாட்டாமல் அந்த வண்டோடு கூடவே அரைகுலையத் தலைகுலைய எதிரேவந்து ஒரு பயணம் புகுந்து திருக்கண்ணபுரத்தேற வந்திருக்கிற ஸமயமாயிருக்கும் இப்போது; அங்குச் செல்லலாம் என்கிறாள் போலும். பொதுவாக எம்பெருமானை நோக்கித் தூது விடுகிறாளத்தனையாதலால் எந்தத்திருப்பதியை நோக்கித் தூதுவிடினுங் குறையொன்றுமில்லையென்க.

திருக்கண்ணபுரத்தில் அவரைக் கண்டுபிடிக்கும் வகை ஏதென்ன; என்செங்கண்மாலுக்கு என்கிறாள். அவர் என்னிடத்தில் கொண்டிருக்கிற வியாமோஹமெல்லாம் திருக்கண்களிலே காணலாம்படியிருக்குங் காண்; "கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள் என்னைப்பேதைமை செய்

தனவே" என்கிறபடியே என்னைப் பிச்சேற்றின கண்களே அவரைக் கோட் சொல்லித் தருமே; என்னைப் பிரிந்திருக்கையாலே அவர்க்கு உறக்கம் இராது; அதனாலும் கண்கள் குதறிச் சிவந்திருக்கும்; அந்த அடையாளங்கொண்டே அவரைக் கண்டுபிடித்துக்கொள்ளலாமென்கிறாளாயிற்று.

[என் துணைவர்க்கு] எந்த நிலைமையிலும் எனக்குத் துணையாயிருப்பவர் அவர்; கலந்து பிரிந்தபோதும் ஸத்தை குலையாதபடி குணாநுபவத்தாலே தரிப்பிக்கவல்ல துணைவர் என்றபடி. இப்போதுண்டான ஆற்றாமையைப் பரிஹரிப்பதற்கு அவரே துணைவர்; "எருத்துக் கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் மற்று, மொருத்தரு மிப்பிறவியென்னும் நோய்க்கு மருந்தறிவாருமில்லை."

அவரைக்கண்டு கூறவேண்டியவார்த்தை என்னென்ன; என்காதல் உரைத்தியாகில் என்கிறாள் நீ அவர்க்கு வேறொன்றுஞ் சொல்லவேண்டா, 'இங்ஙனே ஆசைப்பட்டுக் கிடக்கிறாளொருத்தி' என்று இவ்வளவு சொன்னால் போதும். மற்றையோருடைய காதலைக் காட்டிலும் தன்னுடைய காதல் பரமவிலக்ஷணம் என்பது தோன்ற 'என் காதல்' என்கிறாள். "சொல்லாதொழிய கில்லேன் அறிந்த சொல்லில், நும்மடியாரெல்லாரோடுமொக்க எண்ணி யிருந்தீரடியேனை, நல்லாரறிவீர் தீயாரறிவீர் நமக்கிவ்வுலகத்து, எல்லாமறிவீர் ஈதேயறியீரிந்தனைநீரே." [4–9–6] என்ற பாசுரம் இங்கு அநுஸந்திக்கத்தக்கது. [என் காதல்] என்னுடைய காதல் மற்றுமுள்ள முமுக்ஷுக்களின் காதல்போலன்று, அயர்வறுமமரர்களின் காதல் போலன்று அயர்வறுமமரர்களதிபதியின் காதல்போலுமன்று; 'என்னுடைய காதல்' என்றே சொல்லுமித்தனை. 'பரதாழ்வானுடையநோய்' என்றால் விலக்ஷணமென்று ப்ரஸித்தமன்றோ, அதுபோலே.

உரைத்தியாகில்—அங்குச் சென்றவாறே அவருடைய வடிவழகிலே கால் தாழ்ந்து போனகாரியத்தை மறக்கவுங்கூடுமே; தன்னையும் மறக்கும்படியாயன்றோ அவ்விடத்து இனிமைதானிருப்பது. அப்படிப்பட்டவதில் கால்தாழாமல் தரித்து நின்று என் காதலை அவர் பக்கலில் உரைக்கவல்லையாகில் என்கிறாள். நீ வாய் படைத்ததற்கு இதுவன்றோ பிரயோஜனம்; பலவார்த்தைகளையும் சொல்லிப்போரு கிற உன்வாயிலே என்விஷயமாக இந்த ஒருவார்த்தை வந்தாலாகாதோ?

நான் சொன்னமாத்திரத்தால் அவர் வந்திடுவரோவென்ன; உரைத்தியாகில் இது வொப்பதெமக்கின்பமில்லை யென்கிறாள். அவர் வரட்டும், வராமற்போகட்டும்; நீ அவரிடம் சென்று என்காதலைச் சொல்லுமதுவே எனக்குப் பரமாநந்தமென்கிறாள். அவர் பரமசேதநரன்றோ; தூதுரை செவிப்பட்டால் வராதொழிவரோ? வந்தே தீருவர் என்றிருக்கிறாள்.

எனக்காகச் சென்று தூதுரைத்தல்மாத்திரம் போராது; அவ்வுபகார ஸ்மிருதியாலே நான் உனக்குப் பண்ணும் கிஞ்சித்காரத்தையும் அங்கீகரிக்கவேணு மென்கிறாள். [நாளும் பைங்கானமீதெல்லாமுனதேயாகப் பழனமீன் கவர்ந்துண்ணத்தருவன்] பிரித் தாரிரங்குமிடம் நெய்தலாகையாலே கடற்கரையிலே தானிருக்கிறாளாய், 'பரப்புடைத் தான கடற்கரைச்சோலை யெல்லாம் எந்நாளும் உன் அதீனமாம்படி பண்ணிவைப் பேன்; ஆனைக் கன்றுபோலேயிருக்கிற மீன்களை நீ மேல்விழுந்து புஜிக்கும்படியாக சேகரித்துத் தருவேன்' என்கிறாள். இத்தால் புருஷகாரக்ருத்யம் பண்ணி பகவத் விஷயத்திலே சேர்ப்பிக்கும் ஆசார்யனுக்கு "பொன்னுலகாளீரோ" என்னுமா போலே 'உபயவிபூதியுமளித்தாலும் தகும் என்றதாயிற்று. ஆசார்யன் ஒருகால் உப கரித்துவிடுமித்தனை; சிஷ்யன் வாழ்நாளுள்ளவளவும் அநுவர்த்திக்கக் கடவன் என்கிற சாஸ்த்ரார்த்தமும் இதில் விளங்கக் காண்க. "பழனமீன் கவர்ந்து உண்ணத்தருவன்" என்றதன் உள்ளுறை பொருளாவது—நாரைக்கு மீன் எப்படி இனிதோ அப்படி ஆசாரியனுக்கு உகப்பான பொருளைத் தந்து கிஞ்சித்கரிக்க வேணுமென்பதாம்.

தந்தால் இங்கேவந்து இனிதிருந்து உன்பெடையும் நீயும் இருநிலத்திலினிதின்பமெய்த லாம்—நான் பண்ணின கிஞ்சித்காரத்தை ஸ்வீகரித்து நானிருந்தவிடத்தே வந்து புஜிக்கவேணும்; ஏகாகியாய் வந்திருக்கவொண்ணாது. அபிமத விஷயத்தோடே கூட வந்திருக்கவேணும். நான் தனியிருந்து படுகிற வருத்தந்தீர உன்னையாவது கூடியிருக்குமிருப்பிலே காணப்பெறவேணும். இங்ஙனே நானும் வாழ்ந்து நீயும் இனிது வாழ்ந்து நோக்கவேணு மென்றாளாயிற்று. .... ... 27

தென்னிலங்கையரண்சிதறியவுணன்மாளச் சென்றுலகமூன்றினையும்திரிந்தோர்தேரால்*
மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த வரையுருவின்மாகளிற்றைத்தோழீ !*என்றன்
பொன்னிலங்குமுலைக்குவட்டில்பூட்டிக்கொண்டு போகாமைவல்லேனாய்ப்புலவியெய்தி*
என்னிலங்கமெல்லாம்வந்தின்பமெய்த எப்பொழுதும் நினைந்துருகியிருப்பன்நானே. 28

| | | | |
|---|---|---|---|
| தோழீ | வாராய் தோழியே! | பொன் இலங்கு முலை குவட்டில் | பசலைநிறம் படர்ந்த முலைகளாகிற கம்பத்திலே |
| தென் இலங்கை | தென்னிலங்கையிலுள்ள | பூட்டிக் கொண்டு | |
| அரண் | கோட்டைகள் | போகாமை வல்லேன் ஆய் | அப்பால் போகவொண்ணாதபடி தடுத்து வளைக்க வல்லவளாகி |
| சிதறி | அழிந்து | புலவி எய்தி | அவரைப் பிரிந்துபட்ட வருத்தமெல்லாம் அவரெதிரே பட்டு |
| அவுணன் மாள | இராவணனும் முடியும்படியாக | என்னில் அங்கம் எல்லாம் வந்து இன்பம் எய்த | என்னுடைய எல்லா அவயவங்களும் என்னிடத்தே வந்து சேர்ந்து மடையும்படியாக |
| சென்று | [illegible] பெற்றவரும்) | எப்பொழுதும் | எல்லாக்காலத்திலும் |
| உலகம் மூன்றினையும் திரிந்து | (த்ரிவிக்கிரமாவதார காலத்தில்) மூவுலகங்களையும் வியாபித்தவரும் | நான் | நான் |
| மன் இலங்கு | அரசர்கள் விளங்காநின்ற | நினைந்து | அவரையே சிந்தித்து |
| பாரதத்தை மாள | பாரதயுத்தம் முடியும்படியாக | உருகி இருப்பன் | முடிந்து பிழைப்பேன். |
| ஓர் தேரால் ஊர்ந்த | ஒரு தேரைக்கொண்டு நடத்தின | | |
| வரை உருவின் மா களிற்றை | மலைபோன்ற உருவங்கொண்ட பெரிய யானைபோன்ற பெருமானை, | | |
| என் தன் | என்னுடைய | | |

* * *—திருவாய்மொழியில் நம்மாழ்வார் *வைகல் பூங்கழிவாயென்னும் திருப்பதிகத்தில் எம்பெருமான் பக்கல் தூதுவிட்டு, அநந்தரம் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே ப்ரணயரோஷம் தலையெடுத்து ஊடல் செய்தாப்போலே இப்பரகால நாயகியும் கீழே தூதுவிட்டவள் இதிலே ஊடுகின்றாள். 'இப்போது நம்முடைய ஆற்றாமை கனத்திருக்கையாலும் தூது அனுப்பியிருக்கிறோமாகையாலும் சில சுபநிமித்தங்கள் தோன்றியிருக்கிறபடியாலும் கடுகவே அவன் வந்து நிற்கப்போகிறான்; அப்படி அவன் வந்தால் முகங்கொடுத்து வார்த்தை சொல்லுவோமல்லோம்; ஏனென்றால், அவனுடைய ஸம்ச்லேஷம் உடனே விச்லேஷத்தை விளைவித்தல்லது நிற்கமாட்டாமையாலே இன்னமொரு விச்லேஷத்துக்கு இலக்காயிருந்து மீண்டுமீண்டும் வருத்தப்படுவதிலுங்காட்டில் அவனுக்கு முகங்கொடாதே அவன் கண்வட்டத்திலே முடிந்து பிழைப்பது நன்று' என்று நிச்சயித்துக்கொண்டாள். தம்மை முடித்துக்கொள்ள நினைப்பவர்கள் வெற்றிலை தின்னுதல் பூச்சூடுதல் சாந்தணிதல் சிரித்தல் முதலியன செய்யுமாபோலே இவளும் முடிவுக்குப் பூர்வாங்கமாகத் தெளிவுபெற்றிருந்தாள். உள்ளே யுருகி நையாநிற்கச் செய்தேயும் மேலுக்குத் தெளிந்திருந்தாள்: அதைக் கண்ட தோழியானவள் 'இந்த நிலைமையிலே இவள் தெளிந்திருக்கைக்குக் காரணமில்லையே' எனச்சிந்தித்து அவளையே வாய்

விட்டுக் கேட்டுத் தெரிந்து கொள்வோமென்றெண்ணி 'நங்காய் இப்போது உன் னெஞ்சிலே கிடக்கிறதென்' என்று கேட்க; 'அப்பெரியவர் வந்தால் பண்டுபோலே முகங்கொடுக்கக் கடவேனல்லேன்; அவர் கண்ணெதிரே உயிரைவிட்டு முடிந்து போவதாகத் துணிந்திருக்கின்றேன்' என்று தலைவிசொல்ல; அதுகேட்ட தோழி யானவள் 'கெடுவாய், மலையோடேமல்பொருத மல்லருண்டோ? உபயவிபூதிநாத ராய் ஸர்வசக்தராயிருக்கிறவரோடே அபலையான நீ எதிரிடுவதென்று ஒரு காரிய முண்டோ? "நல்லவென்தோழி! நாகணைமிசை நம்பரர் செல்வர் பெரியர் சிறு மானிடவர் நாம் செய்வதென்?" என்று சொன்னவர்களைக்கேட்டதில்லையோ? ப்ரணயிகளிடத்துச் செய்யத்தக்கதை ப்ரபுக்களிடத்துச் செய்யலாகுமோ?' என்று சொல்ல அவருடைய ப்ரபுத்வம் என்கையிலே படுகிறபடி பாராய்' என்று தலைவி சொல்ல; 'இவளுடைய உறுதியைப் பார்த்தால் முடிந்தேதீருவள் போலேயிருக் கிறது; ப்ரணய ரோஷத்தோடேநின்று, உயிர்துறக்குமளவு ஆகாதபடி இவளை நோக்கவேணும்' என்று பார்த்ததோழியானவள் 'நங்காய்! அவர்க்குள்ள ஆச்ரித பக்ஷபாதம் உனக்குத் தெரியாதுபோலும்; ஒரு பிராட்டிக்காகத் தென்னிலங்கை செற்றவர்காண்; இந்திரனுக்காக மாவலியை வலிதொலைத்து மூவுலகளந்தவர் காண்; பாண்டவர்கட்குப் பக்ஷபாதியாயிருந்து தேரைநடத்தினவர்காண்' என்று சில சேஷ்டிதங்களை யெடுத்துக் கூற, 'ஆமாம் தோழீ! எல்லாம் நானு மறிவேன்; அவை யெல்லாம் வஞ்சகச் செயலத்தனையேகாண்; நான் முடியாமலிருக்கமாட் டேன்' என்று தன் உறுதியை வெளியிடுகிறாளிதில் பரகாலநாயகி.

**தென்னிலங்கை யரண்சிதறி**—மேலே "வரையுருவின் மாகளிற்றை" என்கையாலே மதயானையின் வியாபாரமாகச் சில சேஷ்டிதங்களைப் பேசுகிறாள். (தோழி சொன்ன சேஷ்டிதங்களை அநுவதித்துப் பேசுகிறபடி.) ஒரு மதயானை வழிபோகா நின்றால் எதிரே கண்டவற்றையெல்லாம் கையாலும் காலாலும் அழித்துக்கொண்டு போமாபோலே கரதூஷணாதிகளைக் கொன்றும் வாலியை வதைத்தும் கடற்கரை யிலே சென்று கடலை அணை செய்து இலங்கையை அடைமதிப்படுத்தின படியைக் கண்டபோதே இராவணன் செத்துப் போனவனாக ஆயினான் என்பது தோன்றப் பாசுரம் தொடுத்திருக்குமழகு காண்மின். [தென்னிலங்கை யரண்சிதறி அவுணன் மாளச் சென்று] பெருமாள் போன போக்கிலேயே இராவணன் முடிந்தானென்கை. ஒருபிராட்டிக்காக அவர் பண்ணின யானைத்தொழில் இதுவன்றோ என்று தோழி சொல்ல; 'ஆமாம், அவர் பரம ப்ரணயிதான்; அபலைகளாயிருப்பாரை அகப் படுத்திக் கொள்வதற்காகச் செய்த செயலாகையாலே பகட்டுக்காண்' என்று கழித்துப் பேசுகிறபடி இது.

**உலகமுன்றினையுந்திரிந்து**—உலகளந்தபடியை நினைக்கிறது இங்கு. ஒரு மத யானை யதேஷ்டமாகத் திரியுமாபோலே எல்லார்தலைகளிலும் திருவடியை யிட்டுத் திரிந்தவாறு. 'அநந்யசேஷத்வத்தாலும் ஸ்வாதந்த்ரிய ப்ரதிபத்தியாலும் விமுகரா யிருப்பவர்களின் தலைகளிலும் திருவடியை வைத்து உய்வு பெறுத்தி மவர்காண்' என்று தோழிசொல்ல! ஆமாம், அவர் விமுகர்தலைகளிலே திருவடியை வைப்ப வரேயன்றி "அடிச்சியோம் தலைமிசை நீயணியாய் ஆழியங்கண்ணாவுன் கோலப் பாதம்" என்று பல்பன்னிரண்டும் காட்டி இரப்பவர்கட்கு முகங்கொடுக்கும் தயாளு அல்லர்காண் என்று சொல்லிக்காட்டுகிறபடி.

**ஓர் தேரால் மன்னிலங்கு பாரதத்தை மாளவூர்ந்த**—எதிரிகளான துரியோதனாதியர் 'கிருஷ்ணன் ஆயுத மெடுக்கவேண்டா' என்றார்களேயல்லது 'ஸாரதியாய் நிற்க வேண்டா' என்றும் சொல்லவில்லையே; ஆகையாலே ஸாரதியாய் நின்று ஒரு தேராலே ப்ரதிபக்ஷங்களை அழியச் செய்தானாயிற்று. "பந்தார்விரலாள் பாஞ்சாலி கூந்தல்முடிக்கப் பாரதத்துக், கந்தார்களிற்றுக் கழன்மன்னர் கலங்கச் சங்கம்

வாய்வைத்தான்" என்கிறபடியே த்ரௌபதியின் குழலை முடிப்பிக்கைக்காக அவர் பண்ணின வியாபாரமன்றோ வென்று தோழி சொல்ல; ஒருத்திக்காக இப்படி காரியஞ் செய்கிறவனென்று நாட்டாரைப் பகட்டுகைக்காகச் செய்தாரித்தனை; தம்மையே புகலாக நம்பியிருப்பாருடைய கூந்தலைவிரிப்பிக்கு மவர்காண் என்று சொல்லுதல் இங்கு உள்ளுறை. ஆக இப்படிப்பட்ட வரையுருவின் மாகளிற்றை—திண்மையில் மலைபோன்று செருக்கில் ஆனைபோன்றிருக்கின்ற அவரை [தோழி !] அன்னவரை நான் என்ன பாடுபடுத்தப்போகிறேன் காணாய் தோழீ !; நீ விலக்காமலிருக்க வேணும்; விலக்காதிருந்தாயாகில் அவர் படும்பாடுகளை யெல்லாம் காணலா மென்கை.

ஏஙறன் பொன்விலங்கு முலைக் குவட்டில் பூட்டிக்கொண்டு—என்கையில் ப்ரஹ்மாஸ்த்ரமிருக்க எனக்கு வெல்ல வொண்ணாத நிலமுண்டோ? எம்பெருமானாகிற அந்த மதயானையை என்னுடைய முலையாகிற ஸ்தம்பத்தோடே சேர்த்துக்கொண்டு இறுக்கிக் கட்டிவிடுவேன்; முகங்கொடுத்துப் பேசமாட்டேன், வெண்ணெய் திருடின கண்ணபிரானை யசோதை உரலிலே கட்டிப் போட்டு வைத்தாப்போலே, என்னைப் படுகொலையடித்த பெருமானை முலைக்குவட்டிலே கட்டிப் போட்டு வைப்பேன்; இதுவாயிற்று அவனுக்கு நான் செய்யும் பெரிய சிக்ஷை. என்னிடத்திலே முகம் பெறாமையாலே அவன் ஓடிப்போகத் தேடுவன்; [போகாமை முலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு] "குற்றமற்ற முலைதன்னைக் குமரன் கோலப்பணைத்தோளோடு, அற்றகுற்ற மவைதீர அணையவமுக்கிக் கட்டீரே" என்கிறபடியே அவனும் நெகிழவொண்ணாதபடி கட்டிப் போட்டு வைப்பேன்.

அவன் வந்து முகங்காட்டினால் நெஞ்சு மேல்விழாதிருக்க வேணும்: அவனை ஒரு சரக்காகவே நினையாமல் துரும்பாக நினைப்பேனாக வேணும்; நீ அவனுக்குப் புருஷகாரமாக நிற்காம லிருக்கவேணும்; இவ்வளவும் பெற்றேனாகில் என் எண்ணம் ஈடேறும் என்ற கருத்துப்பட, 'வல்லேனாய்' என்கிறாள். [புலவி யெய்தி.] அவனைப்பிரிந்துபட்ட வருத்தமெல்லாம் அவன் கண்முன்னே படக்கடவேனென்கிறாள். அன்றியே, அவனைப் பிரிந்து நாம் பட்டபாடெல்லாம் அவன்றான் என் முன்னே படும்படி பண்ணக்கடவே னென்கிறாள் என்னவுமாம். இப்பொருளில், எய்தி என்றது 'எய்த' என்றபடி: எச்சத்திரிபு.

என்னில் அங்கமெல்லாம் வந்து இன்பமெய்த—இப்போது ஸம்ச்லேஷிப்பதும் மறுபடியும் விச்லேஷிப்பதும் மீண்டும் ஸம்ச்லேஷிப்பதும் மீண்டும் விச்லேஷிப்பதுமாகி மேன்மேலும் வருத்தங்கட்கு இலக்காயிராதபடி அவன் கண் வட்டத்திலே முடிந்து பிழைக்கக்கடவே னென்கை. கண் கை கால் முலை முதலிய ஸகல அவயவங்களும் முடியக் கடவன. முடிந்துபோவதே பேரின்ப மெய்துதலாம் இங்கு. ஏழையாய்ப் பெரிய குடும்பியாயிருக்குமவன் க்ஷாமகாலத்தில் குடும்பத்தினுடைய பசியும் தன்பசியும் பொறுக்கமாட்டாமையாலே குடும்பத்தோடே ஆற்றிலே விழுந்து முடிந்து மகிழக்கடவேனென்று நினைக்குமாபோலே இவளும் நினைக்கிறாளாயிற்று. அவன் வந்தவாறே இந்த எண்ணத்தை மாற்றிக்கொண்டு ஸம்ச்லேஷிக்க வொருப்படுவே னென்று நினைக்க வேண்டா; எப்போதைக்கும் இதுவேதுணிவு. நினைத்த மாத்திரத்திலே உருகிப்போவதே என் பிரக்ருதி காண்மின் என்கிறாள்.

இப்பாட்டில் எல்லை கடந்த ப்ரணயரோஷத்தை வெளியிடும் முகத்தால் தன்னுடைய ஆற்றாமையின் கனத்தை வெளியிட்டவாறு. இனிப்பெற்றல்லது தரிக்க வொண்ணாத படியான 'முடிந்தவவா' என்கிற பரமபக்தி முதிர்ந்தமை சொன்னபடி. ... ... .... ... ... 28

அன்றாயர்குலமகளுக்கரையன்றன்னை அலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்றன்னை*
குன்றாதவலியரக்கர்கோனைமாளக் கொடுஞ்சிலைவாய்ச்சரந்துரந்து குலங்களைந்து
வென்றானை*குன்றெடுத்ததோளினானை விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானை*தண்குடந்தைக்கிடந்தமாலை நெடியானையடிநாயேன்நினைந்திட்டேனே. 29

| | | | |
|---|---|---|---|
| அன்று | முன்பொருகாலத்தில் | குலம | அரக்கர் குலங்களை நிர்மூல |
| ஆயர் குலம் மகளுக்கு | இடைக்குலத்துச் சிறந்த மகளாக அவதரித்த நப்பின்னைப் பிராட்டிக்கு | வென்றானை | மாக்கி வெற்றி பெற்றவரும் |
| அரையன் தன்னை | நாயகரானவரும் | குன்று எடுத்த | கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த |
| அலை கடலை கடைந்து | அலையெறிகின்ற கடலைக் கடைந்தவரும் | தோளினானை | புஜத்தையுடையவரும் |
| அடைத்த அம்மான் தனனை | (அதில்) அணை கட்டின ஸ்வாமி யானவரும் | விரி திரை நீர் விண்ணகரம் மருவி | பரந்த அலைகளையுடைய பொய்கைகள் நிரம்பிய திருவிண்ணகரிலே பொருந்தி |
| குன்றாத வலி | குறைதலில்லாத மிடுக்கையுடைய | நாளும் நின்றானை | எப்போதும் ஸந்நிதிபண்ணியிருப்பவரும் |
| அரக்கர் கோனை மாள | இராவணன் முடியும்படியாக | தண் குடந்தை | குளிர்ந்த திருக்குடந்தையிலே |
| கொடும சிலை வாய் | கொடிய வில்லிலே | கிடந்த மாலை | பள்ளிகொண்டிருக்கும் ஆச்ரிதவத்ஸலரும |
| சரம் துரந்து | அம்புகளைத் தொடுத்துப் பிரயோகித்து | நெடியானை | ஸர்வோத்தமருமான பெருமானை |
| | | நாய் அடியேன் நினைந்திட்டேன் | நாய்போல் நீசனான அடியேன் நினைத்தேன். |

***--கீழ்ப்பாட்டில் ப்ரணயரோஷந் தலையெடுத்து ஒரு நிலை நின்றார்; அதாவது 'எம்பெருமான் வந்தவாறே அவனுக்கு ஏதோ வொரு சிக்ஷை செய்து தாம் முடிந்துபிழைப்பதாகப் பேசினார். அவன் வந்தாலன்றோ அது செய்யலாவது; வரக்காணாமையாலே கதறிக் கூப்பிடுகிறார். விபவாவதாரங்களையும் அர்ச்சாவதாரங்களையும் பேசிக் கதறுகிறார். நம்மாழ்வார்க்கு*முனியேநான் முகனே யென்கிற திருவாய்மொழி போலே யிருக்கிறதாயிற்று இவர்க்கு இப்பாசுரம்.

அன்று ஆயர்குலமகளுக்கு அரையன்றன்னை—தம்மோடொத்த திவ்ய மஹிஷிகளுக்கு உதவினபடியைப் பேசத்தொடங்கி முந்துறமுன்னம் நப்பின்னைப் பிராட்டிக்கு உதவினபடியைப் பேசுகிறார். 'அரையன்' என்பது 'அரசன்' என்ற பதத்தின் போலி. நப்பின்னையின் துயரத்தைத் தொலைத்த பிரபு என்றபடி.

அலைகடலைக் கடைந்தடைத்த அம்மான் தன்னை—கடலைக் கடைந்ததும் கடலில் அணை கட்டினதும் பிராட்டிக்காக. பிராட்டியைப் பெறுதற்காகக் கடலைக்கடைந்தது; அவளுடைய தனிமையைத் தீர்க்கைக்காகக் கடலையடைத்தது. தேவர்கட்கு அமுதங்கொடுப்பதற்காகவன்றோ கடல் கடைந்த தென்னில்; அன்று; பிராட்டியைப் பெறுதலே முக்கியமான பலன்; மற்றது ஆநுஷங்கிகம் என்க. "——வரமுதுண அமுதில்வரும் பெண்ணமுதுண்ட எம்பெருமானே!" என்றாரே இவர்தாமே.

[குன்றாத வலியரக்கர் இத்யாதி.] வரபலத்தையும் புஜபலத்தையும் பற்றாசாகக் கொண்டு பரஹிம்ஸையே போதுபோக்காயிருக்கும் ராக்ஷஸஜாதிக்கெல்லாம் தலைவனாயிருந்த இராவணன் தொலையும்படியாக ஸ்ரீசார்ங்கவில்லிலே அம்புகளைத் தொடுத்து நடத்தி வெற்றிபெற்ற வீரப்பாடுடைமை சொல்லுகிறது. ராக்ஷஸகுலத்தவரான விபீஷணாழ்வான் வாழ்ந்து போயிருக்க, 'குலம் களைந்து' என்னலாமோ வென்னில்! அவர், தம்முடைய நினைவாலும் இராவணனுடைய நினைவாலும் சக்ரவர்த்தித் திருமகனுடைய நினைவாலும் ராக்ஷஸ குலத்தில் நின்றும் பிறிகதிர்ப்பட்டு இக்ஷ

வாகு குலத்திற் புகுந்து விட்டாரென்பது வான்மீகி முதலிய முன்னோர்களின் ஸித்தாந்தம். இது ஸ்ரீவசநபூஷணாதிகளில் விரியும்

இராவணனொருவனே குற்றமியற்றினவனாயினும் அவனுடைய ஸம்ஸர்க்கமே ஹேதுவாகக் குலங்குலமாக நசித்தொழிந்தது. "கேசவன் தமர் கீழ்மேலெமரேழெழுபிறப்பும், மாசதிரிது பெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்கிறபடியே, ஒருவன் அநுகூலனானால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் உஜ்ஜீவிக்குமாபோலே ஒருவன் பிரதிகூலனானால் அவனுடைய ஸம்பந்தி ஸம்பந்திகளும் அழிந்துபோகக் கடவர்கள். பிரதிகூலனான இராவணனுடைய ஸம்பந்தத்தாலே ராக்ஷஸகுலமடங்கலும் பாழ்பட்டன; அநுகூலனான ஸுக்ரீவனுடைய ஸம்பந்தத்தாலே வாநரஜாதியடங்கலும் வாழ்ச்சி பெற்றன.

நுன்றெறிந்த நோவிலனை—ஆயர்க்கு நேர்ந்த ஆபத்தைப் போக்கினது ஒரு பெருமையோ? என்னுடைய ஆபத்தைப் போக்கவேண்டாவோ வென்பது இங்கு உள்ளுறை.

விரிதிரை நீர் விண்ணகரம் மருவி நாளும் நின்றானை—கீழ்ச்சொன்ன விபவாவதாரங்களுக்குப் பிற்பட்டவர்களையும் அநுக்ரஹிக்கைக்காகவன்றோ திருவிண்ணகரிலே நித்ய வாஸம் பண்ணுகிறது. திருவிண்ணகர்—ஒப்பிலியப்பன் ஸந்நிதி என்றும், உப்பிலியப்பன் ஸந்நிதி என்றும் வழங்கப்பெறும். சோழநாட்டுத் திருப்பதிகளுள் ஒன்று.

திருவிண்ணகரிலே நின்றான்; திருக்குடந்தையிலே கிடந்தான்; நின்றால் எங்கேனும் புறப்பட்டுப் போக நினைவுண்டு போலும் என்று நினைக்கும்படியாயிருக்கும்: பள்ளிகொண்டிருந்தால் அங்ஙனே நினைப்பாரில்லையே: 'ஸம்ஸாரம் கிழங்கெடுத்தாலல்லது போகோம்' என்றுகிடக்கிற கிடையாயிற்று. [மாலை] "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்கிறபடியே தானும் வ்யாமோஹசாலியாய் அடியார்களையும் வ்யாமோஹசாலிகளாக ஆக்குமவன் என்க [நெடியானை] இப்படிப்பட்டவன் இப்போது எனக்கு எட்டாதவனாயினானென்று காட்டுகிறபடி.

அடிநாயேன் நினைந்திட்டேனே—அவனுடைய மேன்மைக்கு எல்லையில்லாதாப்போலே என்னுடைய தாழ்வுக்கும் எல்லையில்லை; திறந்த வாசலெல்லாம் நுழைந்து திரியும் ஜந்துபோலே மிகத் தண்ணியன். இப்படிப்பட்ட நான் அப்படிப்பட்ட பரமபுருஷனை நினைந்திட்டேன்—'அம்மானாழிப் பிரானவன் எவ்விடத்தான் யானார், எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்று வாய்க்குங்கண்டீர்' என்றாப்போலே, மிக நீசனான அடியேனுக்கும் விதி வசத்தாலே நேர்ந்த இக்கலவி நித்யமாய்ச் செல்ல வேணுமென்று நினைந்திட்டேனென்றவாறு. ... .... .... 29

மின்னுமாமழைதவழும்மேகவண்ணா! விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று*
அன்னமாய்முனிவரோடமரரேத்த அருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை*
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன் மானவேற்பரகாலன்கலியன்சொன்ன*
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார் தொல்லைப்பழவினையைமுதலரியவல்லார்தாமே. 30

| | | | |
|---|---|---|---|
| முனிவரோடு அமரர் ஏத்த | முனிவர்களும் தேவர்களும் ஸ்தோத்ரம்பண்ண | மன்னு மாமணி மாடம் மங்கை வேந்தன் | சாச்வதமான சிறந்த மணி மாடங்களையுடைய திருமங்கைநாட்டுக்குத் தலைவரும் |
| அன்னம் ஆய் | ஹம்ஸரூபியாய் அவதரித்து | மானம் வேல் | பெருமை தங்கிய வேற்படையை யுடையவரும் |
| அரு மறையை வெளிப்படுத்த | அருமையான வேதங்களை ப்ரகாசிப்பித்த | | |
| அம்மான் தன்னை | ஸர்வேச்வரன் விஷயமாக, | | |

| | | | |
|---|---|---|---|
| பரகாலன் | பிறமதத்தவர்கட்கு யமன் போன்றவருமான | என்று சொன்ன | என்று பிரார்த்தித்து அருளிச் செய்த |
| கலியன் | திருமங்கையாழ்வார், | பன்னிய | மிகவும் பரம்பின |
| மின்னுமா மழை தவழும் மேகம் வண்ணா | 'மின்னலோடு கூடியும் மிகவும் குளிர்ந்தும் தவழ்ந்து வருகின்ற மேகம்போன்ற வடிவையுடையவனே! | தமிழ் நூல் | தமிழ் சாஸ்த்ரமாயிராநின்ற |
| | | மாலை | இச்சொல் மாலையை |
| | | வல்லார் தாம் | ஓதவல்லவர்கள் |
| விண்ணவர் தம் பெருமானே | தேவாதி தேவனே! | தொல்லை | அநாதியான |
| | | பழ வினையை | முன்னை வினைகளை |
| | | முதல் | வேரோடே |
| அருளாய் | அருள்புரியவேணும் | அரிய வல்லார் | களைந்தொழிக்கவல்லவராவர் |

***—இத்திவ்வியப் பிரபந்தம் கற்பார்க்குப் பயனுரைத்துத் தலைக்கட்டும் பாசுரம் இது. "பன்னிய நூல் தமிழ் மாலைவல்லார் தொல்லைப் பழவினையை முதலரிய வல்லார் தாமே" என்று பயனுரைக்கும் முகத்தால் அப்படிப்பட்ட பேற்றைத் தாம் பெற்று மகிழ்ந்தமை தொனிப்பிக்கப்பட்டதாகும்.

**மின்னுமா மழைதவழும் மேகவண்ணா**—மின்னி முழங்கி வில்லிட்டு அழகியதாய் வர்ஷிப்பதொரு காளமேகம் போன்ற வடிவுபடைத்த பெருமானே! இங்கே வியாக்கியான வாக்கியம் காண்மின்;—"*அடிநாயேன் நினைந்திட்டேனே என்ற இவருடைய ஆர்த்த நாதத்தைக் கேட்டு இவருடைய தாபமெல்லாம் நீங்கும்படியாகக் குளிரநோக்கிக்கொண்டு காளமேக நிபச்யாமமான வடிவோடே வந்து முகங் காட்டின படியைச் சொல்லுகிறது."

**விண்ணவர்தம் பெருமானே! அருளாய் என்று**—கீழ்ச்சொன்ன மின்னுமா மழை தவழும் மேகவண்ண வடிவை ஓவாத ஊணாக உண்டு களிக்கப்பெற்ற அயர்வறும மரர்களுக்கு அதிபதியே!. கடலிலே வர்ஷிப்பது போலவும் மீனுக்குத் தண்ணீர் வார்ப்பதுபோலவும் அவர்களுக்கு உன்னைக் கொடுப்பது ஓரேற்றமோ? [அருளாய்] அவர்கள் உன்னை நித்யாநுபவம் பண்ணுமாபோலே நானும் உன்னை நித்யாநுபவம் பண்ணும்படி கிருபை பண்ணவேணும் [என்று மன்னுமாமணி மாடமங்கை வேந்தன் மானவேற் பரகாலன் கலியன் சொன்ன பன்னிய நூல் தமிழ் மாலை] மங்கை நாட்டுக்கு அரசராய், வேல் பிடித்துப் பகைவெல்லுந் தொழிலிலே ஊன்றிக் கிடந்தவர் "அரசமர்ந்தானடி சூடுமரசையல்லால் அரசாக வெண்ணேன் மற்றரசு தானே" என்றாற்போன்ற அத்யவஸாயத்தின் கனத்தாலே இங்ஙனே பேசினாராயிற்று. எம்பெருமானும் அவனடியார்களும் உவந்து முடிமேற் கொள்ளும் பிரபந்தமாதலால் மாலை எனப்பட்டது. ஆக இப்படிப்பட்ட திவ்ய ப்ரபந்தத்தை ஓதவல்லவர்கள் அநாதியான ஸம்ஸாரத்தை யடியறுத்து நித்ய கைங்கரியம் பெற்று வாழப் பெறுவரென்று பயனுரைத்துத் தலைக்கட்டினாராயிற்று. ... ... 30

அடிவரவு:—மின், பார், திருவடி. இந்திரன். ஒண்மிதி, அலம்புவற்பு, நீர், வங்கம் பொன், பட்டு, நெஞ்சு, கல், முளை, கல்லுயர்ந்த, கன்று, பொங்கு, கார், முற்று, தோராளும், மை, மைவளம் உள்ளூர், இருகை, மின், தேமருவு, செங்கால, தென்னிலங்கை, அன்றாயர், மின்னுமா, வையம்.

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

எம்பெருமானார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீகாஞ்சீ பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் இயற்றிய

நாலாயிர திவ்யப்ரபந்த திவ்யார்த்ததீபிகையில்

## திருநெடுந்தாண்டக வுரை முற்றுப்பெற்றது.

